# மூலிகைக் கலைக்களஞ்சியம்

# Dictionary of Medicinal Plants

டாக்டர் என். கே. சண்முகம்.

வைத்திய ரத்தினம்
பண்டிட் என். கண்ணப்ப முதலியார்
மருத்துவ அறநிலை சார்பாக
நக்கீரன் பதிப்பகம் வெளியீடு
சென்னை - 600 004.



# சமர்ப்பணம்

எனது தந்தை வடஆற்காடு மாவட்டம் வாழைப்பந்தல் கிராமம் அமரர் வைத்திய ரத்தினம் பண்டிட் என். கண்ணப்ப முதலியார் அவர்களுக்கு இந்நூலை காணிக்கையாக்குகிறேன்.

டாக்டர் என். கே. சண்முகம்
ஆக்கியோன்

க. அன்பழகன், எம்.ஏ
கல்வி அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை - 600 009.
நாள் 20.6.1989.

# சிறப்புரை

டாக்டர் என். கே. சண்முகம் அவர்கள் இயற்றிய "மூலிகைக் கலைக்களஞ்சியம்" என்னும் - நூலினை, எனது அன்புக்குரிய தோழர் க. திருநாவுக்கரசு, நக்கீரன் பதிப்பகம் மூலம் வெளியிட்டுள்ள அரிய செயலைப் பாராட்டுகிறேன்.

தமிழர் தம் தனிச்சிறப்புக்குரிய நாகரிகத்தில் முகிழ்த்த கலை சித்தமருத்துவம். தமிழ்மொழியில் இடங்கொண்டு வளர்ந்த மருத்துவமும் அது. பிற மொழிகளில் - தமிழிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டிருந்தாலன்றி அது இடம்பெறவே வாய்ப்பில்லை. தென்னகத்தின் சித்த மருத்துவம் மூலிகையையே மூலமாகக் கொண்டது. பிறவகையில் தயாரிக்கப்படும் மருந்துகள் பல உளவெனினும் - காய், கனி, வேர், தழை, பட்டை முதலான - தாவர மூலிகைகளையே பேரளவில் - மருந்துகளாகப் பயன் படுத்துவதே - சித்த மருத்துவத்தின் சிறப்பு எனலாம்.

தாவரங்களின் வகையும் பயனும் அறிந்து - உண்ணும் உணவிலேயே இடம் பெறச் செய்து - மருந்தென வேண்டாவாம் என்று சொல்லுமாறு உணவை அமைத்துக் கொண்டவர் தமிழர்.

எனவே அந்த மூலிகைகளான - செடி, கொடி முதலானவை பற்றி பலப்பல ஏடுகள் வெளிவந்துள்ளன; ஏடுகளில் கட்டுரைகளாக வருகின்றன. எனினும் - அவற்றைப்பற்றி விரிவாக அறிந்து கொள்ளுதற்கு ஏதுவாக இந்தக் களஞ்சியம் வெளிவந்துள்ளது.

மூலிகையின் பெயர் - வழக்குப் பெயர் - அறிவியல் வழியில் வழங்கும் பெயர், அதன் தன்மை, மருத்துவப் பயன் முதலான பல விவரங்களை - ஆங்கிலத்திலும் தமிழிலும் விளக்குகின்றது. இந்த

ஏட்டில் மூலிகை ஒவ்வொன்றின் சிறப்பும் மிகவும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது என்பது பெரிதும் பாராட்டுக்குரியது.

சித்தமருத்துவம் பயில விரும்புவார்க்கும் மூலிகைகள் பற்றி அறிந்து பயன்கொள்ள விரும்புவார்க்கும் பயன்படக்கூடிய இந்த மூலிகைக் கலைக்களஞ்சியம், சித்தமருத்துவர்கட்கெல்லாம் - உறு துணையாக விளங்கும் என்பது என் எண்ணம்.

வட ஆற்காடு மாவட்டம் வாழைப்பந்தல் அமரர் பண்டிட் என். கண்ணப்பன், அவர்களின் மகன் டாக்டர் என். கே. சண்முகம் ஆதலின் தனது முன்னோர் வழியாக வாய்த்த பட்டறிவையும் நூலறிவையும் அனைவரும் பயன்கொள்ளுமாறு வெளியிட்டது பாராட்டத்தகும். அவர் மேலும் இத்துறையில் சிறக்க விரும்பி வாழ்த்துகிறேன்.



கல்வி அமைச்சர்

பொன்முடி (எ)
டாக்டர் க. தெய்வசிகாமணி
எம். ஏ. (வரலாறு), எம். ஏ. (அரசியல்)
எம். ஏ. (பொது நிர்வாகம்), பி.எட்., பிஎச்.டி.,
மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை-600 009

நாள் 2. 7. 89

# அணிந்துரை

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம். இச்செல்வத்தைப் பெறுவதற்கான பல மூலிகைகளைத் தன்னகத்தே கொண்டதுதான் மருத்துவர் என். கே. சண்முகம் அவர்கள் இயற்றிய மூலிகைக் கலைக்களஞ்சியம் என்னும் இந்நூல்.

நோய்வந்தபின் தடுப்பதைவிட நோய் வராமல் தடுப்பதே சிறந்த மருத்துவ சிகிச்சையாகும். நோய் வராமல் தடுப்பதற்குரிய அரிய மூலிகைகளின் தனித்தன்மையை இம்மூலிகைக் கலைக் களஞ்சியத்தைப் படித்தால் நாம் எல்லோரும் உணரலாம்.

நாம் அன்றாட வாழ்வில் ஒரு சில மூலிகைகளான கீரை, அவரை, இஞ்சி, மாங்காய், பூண்டு, இலவங்கம், பட்டை, உளுந்து, எலுமிச்சை, எள்ளு, ஏலக்காய், கடுகு, கடாரங்காய், கறிவேப்பிலை, கருணைக்கிழங்கு, கரும்பு இவற்றில் சிலவற்றை உணவாகக் கொண்டாலும் இவற்றின் நோய் தீர்க்கும் தன்மையை எல்லோராலும் அறிய இயலாது. இம்மூலிகைகள் நமக்கு எவ்வாறு மருந்தாகப் பயன்படுகிறது என்பதை மிகச் சிறப்பாக விளக்குகிறது இந்நூல்.

அகில், அகரு, அகத்தி, அக்ரகாரம் என்ற மூலிகைகளில் தொடங்கி, சீமை அக்ரோட்டு, அசமதா, அன்னாசிப்பூ, அனிச்சம்

என்று பல மூலிகைகளாக விரிந்து, நன்னாரி, நாகம், நாகப்பூ என்ற மூலிகைகளாக முடிந்து, எண்ணற்ற பல மூலிகைகளின் மருத்துவத் தனித்தன்மையை விளக்கும் இம்மூலிகைக் கலைக்களஞ்சியம் மருத்துவர் என். கே. சண்முகம் அவர்களின் அரிய தொகுப்பாகும்.

நோயற்ற வாழ்வான கிடைத்தற்கரிய செல்வத்தைப் பெறுவதற்குண்டான பல மூலிகைகளைக் கொண்ட இம் மூலிகைக் கலைக்களஞ்சியம் என்னும் நூலை எல்லோரும் பெறுவதற்கு நண்பர் க. திருநாவுக்கரசு, நக்கீரன் பதிப்பகம் மூலம் வெளியிட்டுள்ள செயலை பாராட்டுவது எனது கடமையெனக் கருதுகின்றேன். இந்நூலை இயற்றிய மருத்துவர் என். கே. சண்முகம் மற்றும் வெளியிட்ட திரு. க. திருநாவுக்கரசு ஆகியோர் இத்துறையில் மேலும் வளர்ச்சியடைய வாழ்த்துகின்றேன்.



மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்.

**Dr. J. R. Sankaran, M. D.**

"RAJAYOGAM" New Avadi Road, Alagappa Nagar,
Madras - 600 001.

F.C.C.P. (USA), F.I.C.A. F.A.C.G. (USA), F.R.S.H. (LOND), Ph.D (Hon) C'hagen
F.R.S.T.M. (LOND), F.I.S.E., F.T.N.A.Sc F.M.A..D.Sc (Hon) C'hagen F.M.M.C.
PROFESSOR AND HEAD, DEPT. OF MEDICINE, MADRAS MEDICAL COLLEGE
PROFESSOR OF HIST. OF MEDICINE, MADRAS MEDICAL COLLEGE
ADDL. HONY DIRECTOR, ACCERT, MADRAS MEDICAL COLLEGE
PHYSICIAN, GOVT. GENERAL HOSPITAL, MADRAS
PHYSICIAN, LIVER CLINIC AND HYPERTENSION CLINIC, G.G.H., MADRAS
I.C.M.R. PROJECT OFFICER, 'TRADITIONAL REMEDIES IN VIRAL HEPATITIS' - TAMILNADU
CARDIOLOGIST, L.I.C. OF INDIA,
Hony. Secy INDIAN ASSN. OF HISTORY OF MEDICINE
W.H.O. FELLOW IN AIDS, U.S.A

ஓம் சக்தி

# நூன்முகம்

தமிழ்நாட்டில் சித்த மருத்துவம் சீரிய முறையில் செய்து வரும் குடும்பத்தைச் சேர்ந்தவர் டாக்டர் என். கே சண்முகம் அவர்கள். வாழையடி வாழையாக வாயால் சொல்லிக் காதால் கேட்டறிந்து மட்டுமே செயல்படாமல், மருத்துவமுறைகளை விரிவாக ஓலைச்சுவடிகளில் பொறித்திருப்பது இவர்தம் குடும்ப சித்த மருத்துவத்தின் தனிச்சிறப்பு.

டாக்டர் சண்முகம் அவர்கள் தம் இளவயதிலிருந்தே சித்த மருத்துவமுறைகளில் ஆராய்ச்சி செய்து பற்பல நோய்களுக்கு தக்க மருந்துகளைக் கண்டறிந்துள்ளார். இதனால் இவரிடம் மருத்துவம் பெற மற்ற மாநிலங்களிலிருந்தும் பல நோயாளிகள் வருவதை நாம் கண்டிருக்கிறோம். மேலும், கடந்த சில ஆண்டுகளாக இவர் மேல் நாடுகளுக்குச் சென்று அங்கும் தம் சித்த மருத்துவத்தைப் பிரபலப் படுத்தியுள்ளார்.

ஆங்கிலமொழியில் ஒருசில இந்திய நாட்டு மூலிகைத் தொகுப்புகள் அச்சிடப்பட்டுள்ளன. ஆனால் நம்நாட்டு மூலிகைக் கலைக்களஞ்சியத்தை மக்கள் எளிதில் படித்தறியும் வகையில் தமிழில் ஒரு புத்தகம் சமீப காலத்தில் வெளியிடப்படவில்லை. இக்குறையைத் தீர்க்கும் வகையில் ஆழ்ந்து ஆராய்ச்சியுடன்

அழகாக எழுதி தமிழ்நாட்டு அறிவுக் களஞ்சியங்களிலொன்றாக இப்புத்தகத்தை டாக்டர் சண்முகம் வெளியிடுகிறார்.

நம்நாட்டு மருந்துகளிலுள்ள சிறப்புத் தன்மையை மேல்நாட்டு விஞ்ஞானம் அங்கீகரிக்கும் வகையில் 'அலோபதி' மருத்துவ முறைக்குக் கொண்டு வர முயற்சிக்கும் மருத்துவர்களில் ஒருவன் என்ற முறையில், இந்த நல்லதொரு தொகுப்பு நூலுக்கு அணிந்துரை எழுத நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

இந்நூல் தமிழ்மருத்துவம் ஆராய்ச்சியாளர் மட்டுமின்றி தமிழர் யாவரும் படித்தறிய வேண்டியதொன்றாகும். தமிழ் நாட்டுக்கு டாக்டர் சண்முகம் செய்துள்ள அரிய தொண்டின் வடிவமே இப்புத்தகம்.

வாழ்க தமிழ் மூலிகைக்கலை!

ராஜயோகம்<br>சென்னை<br>*19-4-89*

**டாக்டர் ஜெ. ஆர். சங்கரன்**

# வாழ்த்துரை

Dr. K. A. Narendranath,
M.sc., M.D., Ph. D.,
Manager R&D
R&D Co-ordinator
TTK Pharma Limited.
Madras-600 043.
India

டாக்டர் என். கே. சண்முகம் அவர்கள் எழுதிய "மூலிகைக் கலைக்களஞ்சியம்" என்கிற இந்நூலை வாசிக்கும் வாய்ப்பை பெற்றதில் பெருமகிழ்ச்சி அடைகின்றேன். தமிழில் மூலிகை வளத்தை அறிவியல் போக்கில் ஆங்கில நூல்களுக்கு இணையாக உருவாக்கியுள்ளார்.

அலோபதி மருத்துவத்துறையில் பணியாற்றி முதிர்ந்த அனுபவம் பெற்ற மருத்துவ பேராசிரியர்கள்கூட, பெரிதும் விரும்புகிற அளவுக்கு, இந்நூல் ஆக்கப்பட்டிருப்பதுடன், பழம் பெரும் சித்தர்கள் எழுதிய பல பரிபாஷைகளை அணுகிக் கற்றுத் தேர்ந்து கற்போருக்கு ஐயம் எழாவண்ணம் திறம்பட பொருத்தமான அறிவியற் சொற்களை தமிழில் உருவாக்கி சிக்கலான மருத்துவப் பொருள் பண்புகளை எளிதாக்கி எழுதியுள்ளதும் பாராட்டுக்குரியது.

தவிர இந்நூல் தமிழ்மக்களுக்கும், சித்த மருத்துவத் துறையிலிருப்பவர்களுக்கும், சித்த வைத்தியமுறை மேற்படிப்பு ஆராய்ச்சிக்கும் குறிப்பாக மூலிகைகளை வைத்து மருந்து செய்யும் ஆராய்ச்சிக்கும் பயன்படுமென உறுதியாகச் சொல்லலாம். எனது தொழிற்சாலையிலேயே பல மருந்துகள் மூலிகை அடிப்படையிலேயே செய்யப்படுபவைதாம். அவ்வகையிலேயும் இந்நூலின் அவசியத்தை டாக்டர் என்கிற முறையிலே நான் உறுதியிட்டு சொல்லமுடியும்.

தமிழில் இதுபோன்ற நூல் வேண்டும் என்கிற எனது நீண்ட நாளைய எண்ணத்தையும் டாக்டர் என். கே. சண்முகம் அவர்கள் நிறைவேற்றி வைத்துள்ளார்கள். அவர்தம் வாழ்வும், பணியும் சிறக்க வாழ்த்துகிறேன்.

ஆலந்தூர்
17-7-89

**டாக்டர் கே. எ. நரேந்திரநாத்**

# பாராட்டுரை

G. RAJARETNAM,
M.A., C.A.I.I.B.F.C.I. (LOND)
Consultant
Exportor
Managing Director,
Shri Ram Transport Finance Co. Ltd.
Madras-600 004.

எனது நண்பர் டாக்டர் என். கே. சண்முகம் அவர்கள் எழுதிய 'மூலிகைக்கலைக்களஞ்சியம்' என்கிற இந்நூல் மருத்துவர்கள், ஆராய்ச்சியாளர்கள், தாவர இயல் அறிஞர்கள் போன்றோர்க்கு எந்த அளவுக்குப் பயன்படுகிறதோ, அதைப் போலவே மூலிகைகளை விற்பவர்களுக்கும், பயிர் செய்வோர்க்கும், மூலிகை ஏற்றுமதியாளர்களுக்கும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

இத்துறையில் ஆங்கில நூல்களுக்கு இணையானது இந்நூல் என்பதால் காலப்போக்கில் இதனை மேலும் சிறப்பிக்கச் செய்வதற்கு வாய்ப்புகள் ஏற்படலாம்.

அம்மாதிரி வாய்ப்புகளுக்குத் தம்முடைய நூல் தூண்டுகோலாக அமைந்து இருக்கிறது என்பது பற்றி இந்நூல் ஆசிரியர் நியாயமாகப் பெருமைப் படமுடியும்.

மிக்க சிரமத்துடனும், கவனத்துடனும் இந்நூல் ஆக்கப்பட்டிருப்பது குறித்து ஆசிரியரை மனம் உவந்து பாராட்டுகிறேன். இவரது முயற்சிகள் மேலும் சிறக்க, இறைவன் திருவருள் புரிய இந்த அரிய நூல் படைத்தமைக்கு வாழ்த்தி மகிழ்ச்சி அடைகிறேன்.

சங்கராலயா
சென்னை-17
15.7.89

ஜி. ராஜரத்தினம்
தொழிலதிபர்

# பதிப்புரை

எங்களது சிறிய பாட்டனாரிடமிருந்து எங்களது தந்தை வாழைப்பந்தல் என். கண்ணப்பர் சித்த மருத்துவத்தை பயின்றார். அவர் அதில் திறமையானவராகவும் விளங்கினார். அவருக்கு ஆண் மக்கள் ஐவர் பெண் ஒருவர் என நாங்கள் அறுவர் பிறந்தோம்.

எங்கள் தந்தையார் ஒரு சைவ சித்தாந்தவாதி. சம்பந்தன், சுந்தரன், மாணிக்கவாசகி, திருநாவுக்கரசு, சண்முகம், திருப்புகழ் ஈடுபாடு காரணமாக அருணாசலம் என எங்களுக்கு பெயர்களைச் சூட்டி அதற்கான காரணங்களை சொல்லிக் கொண்டு இருப்பார். புராணங்களிலிருந்து வைத்திய முறைக்கான சூத்திரங்களை உருவாக்குவார்.

இராமன் - $\frac{1}{8}$

அகலிகை - $\frac{1}{4}$

இராவணன் - $\frac{3}{4}$

என்று எழுதுவார். உருது கவிதைகளிலும், தெலுங்கு கவிதைகளி லும் அவர்க்கு ஈடுபாடு அதிகம். அவரவரின் தாய் மொழியின் ஏற்ற இறக்கங்களோடு பேசுவதில் வல்லவர். மொழிக்குரியோர் மகிழ்ந்து அவர்க்கு உற்ற நண்பராகி விடுவர்.

என் தந்தையாரின் இறுதிக்காலத்தில் அவர் சொல்ல சொல்ல சில சித்த வைத்திய செய்முறைகளை எழுதி வந்தேன். அவரின் நினைவாக அவற்றை ஒழுங்குபடச் செய்து வைத்ததுடன், அவரது நூல்கள், சுவடிகள், பலதரப்பட்ட செய்முறைக்குறிப்புகள் ஆகியவை எல்லாம் என்னிடமிருந்தன. வேண்டிய சில நண்பர்கள் அதிலிருந்த இரசவாத குறிப்புகளை மட்டும் பொன்செய்யும் பொருட்டு எடுத்துச் சென்றனர். பொன் செய்திருக்க மாட்டார்கள். எங்கள் தந்தை யாரும் பொன் செய்தாரில்லை. இதற்காக செய்யப்பட்ட செலவு

களால் குடும்பத்தில் பலத்த பொருளாதாரச் சீரழிவுக்கூட ஏற்பட்டது.

இம்மூலிகைக் கலைக்களஞ்சியத்தினை ஆக்கியோன்— என்னில் இளையோன் — கண்ணப்பருக்கு ஐந்தாவது பிள்ளை — எங்கள் தாய் வழிப்பாட்டனார் சக்கரமல்லூர் துபாஷ் (துவிபாஷி) சண்முகனாரின் பெயரைக் கொண்டோனான டாக்டர் என். கே. சண்முகம் என்னிடமிருந்த தந்தையாரின் நூல்கள் - சுவடிகள் - எழுத்துப் பிரதிகள் ஆகிய எல்லாவற்றையும் எடுத்துச் சென்று ஆய்வைத் தொடங்கினார். அவரும் சித்த மருத்துவரானார், டாக்டரானார். உலகளாவிய புகழுக்குரியவரானார் . கடும் மூளை உழைப்பு வெற்றியைத் தந்தது.

டாக்டர் என். கே. சண்முகம் அவர்களின் ஆய்வில் பகுத்தறிவுப் பயிலப்படுவதும் காலத்திற்கு காலம் மாறும் சிந்தனைகளுக்கு ஏற்ப வளரும் அறிவுலக மேம்பாடுகள் மூலமாக சித்த மருத்துவத்தை அவர் பார்ப்பதும்— அதன் அடிப்படையில் அளந்து பல ஆய்வுக் கட்டுரைகள், பேட்டிகள், (குறிப்பாக பி. பி. சி. லண்டன் வானொலியின் சிறப்புப்பேட்டி) ஆலோசனைகள் என்று தமிழ், ஆங்கில ஏடுகளிலும் வெளிவந்து சித்த மருத்துவத்திற்குச் சிறப்பைச் சேர்த்ததும் என்னை வெகுவாகக் கவர்ந்தன; மகிழ்ந்தேன்.

நான் வெளியிடுகிற நூல்கள் பெரும்பாலும் அரசியல் தொடர்புடையவையானாலும் இம்மூலிகைக் கலைக்களஞ்சியம் எங்கள் குடும்ப மரபு சித்த மருத்துவத்தின் பெருமையை ஒருவாறு உணர்த்த வல்லதாதலால் நக்கீரன் பதிப்பகத்தின் சார்பில் பெருமகிழ்ச்சியோடு வெளியிட முன் வந்தேன் .

இம்மூலிகைக் கலைக்களஞ்சியம் தொடர்புடையோரிடையே, ஒரு சிந்தனை கிளர்ச்சியூட்டும் என்ற நம்பிக்கையும் உள்ளதால் இவ்வெளியீட்டில் ஒரு பெரும் பயன் உண்டு. தமிழ்க்கூறும் நல்லுலகமும் சித்த மருத்துவம் பயில்வோரும் இதனை வரவேற்று படித்துப் பயன் பெறுவார்களாக.

பலரை தமது ஆழமான சிந்தனைத் தரமுடைய பேச்சு வன்மையால் என்றோ என்னைப் போன்றவர்களை ஆட்கொண்டுவிட்ட தமிழ்நாடு அரசின் கல்வி அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் **க. அன்பழகனார்** அவர்கள் சித்த மருத்துவத்திற்கு தொடர்ந்து ஆக்கமும் ஊக்கமும் அளிப்பார்கள். அவர்களை அணுகி, இம்மூலிகைக் கலைக்களஞ்சியத்திற்கு ஒரு அணிந்துரை வழங்குமாறு கேட்டுக்

கொண்டேன்; உவந்தளித்து உதவினார்கள். அவ்வண்ணமே முன்னுரை வழங்கிய மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு **பொன்முடி** அவர்களுக்கும், துறைசார்ந்த அறிமுக உரை வழங்கிய டாக்டர் ஜே. ஆர். சங்கரன் எம். டி. அவர்களுக்கும், தாவரஇயல் ஆராய்ச்சியாளர் டி. டி. கே மருந்து செய்வாலையின் ஆய்வுப்பிரிவு டாக்டர் கே. எ. நரேந்திர நாத் அவர்களுக்கும், தொழிலதிபர் திரு. ஜி. ராஜரத்தினம் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூலை நல்ல முறையில் அச்சிட்டு தந்த அலைகள் அச்சக உரிமையாளர் திரு. பெ. நா.சிவம் அவர்களுக்கும், முகப்போவியம் வரைந்த ஜின்னா, அச்சிட்ட ஆப்செட் அச்சகத்தாருக்கும், நக்கீரன் பதிப்பகத்தாரின் சார்பில் நன்றியை உரித்தாக்குகிறேன்.

மயிலை
25 - 7 - 89

**க. திருநாவுக்கரசு**
நக்கீரன் பதிப்பகம்

# ஆக்கியோன் முன்னுரை

இயற்கையோடு இணைந்து வாழ்வு நடத்திய சித்தர்களின் பட்டறிவிலிருந்து தோன்றியதுதான் இந்த சித்தவைத்தியம். உலக மொழிகளில் தொன்மையானதும் மிகப் பழமையானதும் ஆன தமிழ் மொழியைப் போல வைத்திய முறைகளிலேயே பழமையானதும் சிறப்பு வாய்ந்ததும் சித்தவைத்திய முறை ஒன்றுதான்.

சித்தர்கள் என்போர் தமது அனுபவ வாயிலாக அறிந்த மூலிகைகளையும் மருந்து சரக்குகளையும் அவற்றை கையாளும் முறைகளையும் மக்களுக்குப் போதித்து வந்ததுடன் பற்பல ஓலைச் சுவடிகளில் பதிவு செய்தும் வைத்தனர் காலப்போக்கில் பல சுவடி ஏடுகள் சிறிது சிறிதாய் அழிந்தொழிந்தன. அழிந்தவை போக மிகுதியுள்ளவைகளைக் கொண்டே மரபுவழி மருத்துவர்கள் சித்த மருத்துவத்தைக் கையாண்டு மக்களுக்கு நோய்தீர்க்கும் ஆசானாக இருந்து வந்தனர்.

இந்த முறையிலேயே எனது பாட்டன், முப்பாட்டன் காலம் முதல் எனது தந்தையார் காலம் வரை மரபு வழி மருத்துவம் எங்களது குடும்பத்தாரால் நடத்தப்பட்டு வந்தது—வருகிறது. அவர்கள் வைத்துவிட்டுப் போன உடலறி விளக்கம், மருந்தகராதி, பதார்த்த சிந்தாமணி. பெண் விளையாட்டு, பதினோராம் நிகண்டு, நால்வர் நான்மணிமாலை, அஞ்ஞவதைப் பரணி, காரிகை உறுப்பியல் போன்ற ஓலைச்சுவடிகளே இந்நூலை நான் செய்ய காரணமாய் இருந்தது,

முனை முறிந்தும், பூர்த்தியாகாமலும், சிதிலமடைந்தும் போன இச்சுவடிகளில் அரிய பல விஷயங்கள் புதையலாய் இருக்கின்றன. இன்றைய விஞ்ஞானம் தெள்ளத் தெளிவாக சொல்லும் ஹார்மோன்களின் கட்டுப்பாடு, இயக்கம், அவை உடலில் தோற்றுவிக்கும் ஆயிரக்கணக்கான மாற்றங்கள், கிரியைகள் முதலானவற்றைக்கூட அன்றைக்கே சித்தர்கள் தாதுக்களின் இயக்கம் எப்படி உடலுக்குத்தேவை, இது குறைந்தால் என்ன ஆகும், மிகுந்தால் என்ன ஆகும் என்று விளக்கியதுடன் இதன் சமன்பாட்டை நிலை நிறுத்தியே மருந்துகளை உண்டாக்கி மருத்துவம் பார்க்க முடியும் என்றும் எழுதி வைத்துள்ளார்கள்.

இவ்வாறு பெரிய பொக்கிஷமாக கிடைத்திருக்கும் எனது முன்னோர்களின் இயற்கை மருத்துவ அறிவை இன்றைய புதிய தலைமுறையினருக்கு புரிகிற வகையில் கூடுமானவரை எல்லா மூலிகைகளைப்பற்றியும் ஆய்ந்து தொகுத்து இருக்கிறேன். இந்நூல் தெரிந்தும் தெரியாத பச்சிலை, மரம், பட்டை, பூ, பிஞ்சு, காய், பழம், விதை முதலிய எல்லா வகை தாவரங்களைப் பற்றியும் எல்லோரும் தெரிந்து பயனடைய வழி செய்யும் என நம்புவதுடன் மேலும் இத்துறை சார்ந்த வல்லுனர்களின் ஆலோசனைகளையும் கருத்துக்களையும் அறிய ஆவலாய் இருக்கிறேன். இது அடுத்த பதிப்பிற்கு உதவியாக இருக்கும்.

இந்நூலைச் செய்ய என்னுடன் உதவி புரிந்த நண்பர்கள் கே. வி. கிருஷ்ணன் நாயர் மற்றும் செல்வி எஸ். ராஜேஸ்வரி, திருமதி எஸ். லதா, திரு எஸ். அனந்தராமன், திரு சி. தாமோதரன் ஆகியோருக்கும், பிழையின்றியும், அழகாகவும், சுத்தமாகவும் அச்சிட்டு உதவிய அலைகள் அச்சகம் உரிமையாளர் திருபெ.நா.சிவம் அவர்களுக்கும், வாழைப்பந்தல் என். கண்ணப்ப முதலியார் மருத்துவ அறநிலை சார்பாக இந்நூலை வெளியிடும் நக்கீரன் பதிப்பகத்தாருக்கும் எனது நன்றியினை தெரிவிக்கின்றேன்.

6,53 வது தெரு<br>
அசோக் நகர்<br>
சென்னை-600 083<br>
5-5-1989

டாக்டர் என்.கே. சண்முகம்

# INDEX — பொருளடக்கம்

★ ★ ★

## அகில் அகரு

## Aquilaria agallocha

### (N. O. Thymelaeaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, Stem, Root, Wood.*

*Constituent* : *A Volatile oil*

*Action* : *Stimulant, Carminative, Cholagogue Deobstruent, Aphrodisiac.*

Uses : The decoction made out of 'its' bark is used in the treatment of headache, heaviness in the head and as nerve stimulant tonic. It is also used as an analgesic, antirheumatic medicine. It is used as an ideal medicine for hyperemisis. (Severe Vomiting).

இதன் கட்டையிலிருந்து எடுக்கப்படும் கஷாயத்தினால் தலைவலி, தலைபாரம் நீங்கும். தளர்ந்த தேகத்தையும் நரம்புத் தளர்ச்சியையும் குணப்படுத்தும். இக்கட்டையின் சூரணம் உட்கொள்ள தாது விருத்தியாகும் உடலில் உள்ள ஆயாசம் ஒழியும். பசி உண்டாகும். உணவில் ருசி தரும். மேலும் இதை உட்கொள்வதால், காயம், புண் ஆகியவைகளினால் ஏற்படும் வலிக்கு நிவாரணம் கிடைக்கும். மூட்டுவலி நீங்கும். இடைவிடாத வாந்தியை நிறுத்தும். அகில் கட்டையை நீரிலிட்டு சந்தனம் போல் அரைத்து உடலில் பூசிக்கொண்டு வர தளர்ந்த தேகம் இறுகும். அகிற்கட்டை தைலத்தை முடித்தைலமாக உபயோகப்படுத்த நீர்க்கோவை, மேகம், பீநிசம் முதலிய நோய்கள் நீங்கும்.

* * *

## அகத்தி

## Agati grandiflora

### (N. O. Leguminosae)

*Habit* : *Shrub, Branchlets, Pubescent.*

*Parts used* : *Leaves, Flowers, Bark.*

***Constituent*** : *Vitamin A, C & D, Leaves are rich in Calcium.*

***Action*** : *Astringent, Laxative, Refrigerent, Digestive, Cooling & Antidote.*

Uses. Agati leaves are bitter, but full of Vitamin A, C & D along with calcium. Apart from cooling, the leaves are used in medicinal preparations. It is used in intestinal colic, Pellagra and also as laxative. It is also known for its refrigerent and antidote effect. This is normally not consumed if the patient is on other medical therapy, as it may reduce the effect of the other medicine, because of its antitoxic property.

அகத்தி இலை கைப்பு சுவை உடையது. விட்டமின் A, D, C சத்துக்களையும் கால்சிய சத்தையும் கொண்டது. சமையலைத் தவிர கீரையும் பூவும் மருந்துகளுக்குப் பயனாகிறது. வயிற்றுப்புண், வாய் புண் முதலியவற்றிற்கு சுகம் தரும் கீரை இது. குளிர்ச்சியை உண்டாக்குவதால் இக்கீரை சீதளக்காரி (Refrigerent) என்றும், விஷத்தை முறிக்குமாதலால் - Antidote - என்றும், உடல் வெப்பத்தை அகற்றுவதால் வெப்பமகற்றி (Febrifuge) என்றும் இதனைக் கூறுவர்.

முற்றின கீரை மலமிளக்கியாகும். அச்சம், முனி, கரீரம் என்ற பெயர்களும் அகத்திக்கு உண்டு. இடுமருந்தின் குணத்தை அகத்திக் கீரை முறித்து விடுவது போல மற்ற மருந்துகளின் செயல்பாட்டினையும் கெடுத்து விடுவதால் மருந்துண்ணும் காலங்களில் இக்கீரையை பயன்படுத்தக் கூடாது. தவிர தினமும் சாப்பிட்டால் வாயுவையும் சோகையையும், கரப்பான் நோயையும் உண்டாக்கும். அகத்திப் பூவின் இதழ்களைக் கொய்து அத்துடன் பாசிப்பயிறு சேர்த்துக் கூட்டாக செய்து இரண்டு வாரங்கள் சாப்பிட்டு வந்தால் இருதயம் தொடர்பான நோய்கள் அகன்று இருதயம் பலப்படும்.

மேகதாகத்திற்கு அகத்தி மரத்தின் பட்டை, வேர்ப்பட்டை இரண்டையும் எடுத்து வந்து இடித்து தண்ணீரில் கொதிக்க வைத்துப் பருகவேண்டும்.

* * *

# அக்ரகாரம்

## Anacyclus pyrethrum

### (N. O. Compositae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Root*

*Constituent* : *It contains "an essential volatile oil" and "an alkaloid Pellitorin" or "Pyrethrin".*

*Action* : *Cordial, Stimulant, Astringent, Rubefacient and Sialogogue. Root is valuable sialogogue and is regarded as a tonic to the nervous system.*

Uses : It is a commonly available root. The extract and the juice of Akkaru Rasam is used as an antirheumatic. The decoction is used to treat the dryness of the mouth and throat. This has got a property of increasing the heart beat. It is a good nervant stimulator when given along with ginseng. Because of its saliva secretion property, it is generally used along with the apitizer medicines.

அக்ரகாரம் ஒரு கடைச்சரக்கு. இதன் சாரமும் சாறும் வாத நோய்க்கு உதவும். இதனை கஷாயம் வைத்து அருந்தினால் தொண்டை நாவறட்சியை அடக்கும். இதயத் துடிப்பை தூண்டும். பல்நோய், நரம்புத் தளர்ச்சி முதலியவற்றில் அமுக்கிராக்கிழங்கின் சூரணத்துடன் இதனை நாட்டு மருத்துவர்கள் பயன்படுத்துவர். உமிழ்நீரை சுரக்கச் செய்கின்ற தன்மை அக்ரகாரத்திற்கு உண்டாதலால் இதனைப் பசி தீபனம் எடுக்கும் மருந்துகளில் சேர்ப்பது வழக்கிலிருக்கிறது. மேலும் இதனால் பல்வலி, உள்நாக்கு வளர்ச்சி, தொண்டைக் கம்மல், நா அசைவற்றுப் போதல், தொண்டை வறட்சி நீங்கும். இதன் தனிச் சூரணத்தை மூக்கிலிட காக்கை வலிப்பு சாந்தமாகும்.

* * *

## சீமை அக்ரோட்டு

### Jugulans regia

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, Fruit or nut, Husks of the fruit, Bark of the tree.*

*Constituent* : *Seeds yield a fixed oil, juglandic acid and resin; Fruits contain oxalic acid and an alkolloid 'barium'.*

*Action* : *Anthelmintic, Antiseptic, Leaves are Alterative and Astringent. Unripe fruit is a vermifuge. Kernel possesses aphrodisiac properties. Husks of fruit possess vermifuge and antisyphilitic properties.*

Uses : Though it is imported plant, it is now plenty available in India. The sweet kernel of its is a Refrigerent. The oil is used as a body coolant. It is also used as a laxative. The ash of it's husk is used in making various medicines.

இது இறக்குமதி செய்யப்பட்ட தாவர வகை என்றாலும் இந்தியாவில் தற்போது விளைவிக்கப்படுகிறது. இனிப்புச் சுவையுடைய இதன் பருப்பு உடலுக்கு குளிர்ச்சி தரவல்லது. அழற்சியை போக்குவதில் முதல் தரமானது. இதன் எண்ணெய் தேக அனலை நீக்கும். மலச்சிக்கலைப் போக்கும். இதன் ஓடுகளை எரித்து கரியாக்கி சரும மருந்து செய்முறையில் பயன்படுத்துவார்கள்.

* * *

## நாட்டு அக்ரோட்டு

### Aleuritis Moluccana

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Nuts, Kernel and oil of Seeds.*

*Constituent* : *Kernel contains cellulose, fat, organic matter inorganic matter and ash containing lime,*

*magnesium phosphoric unhydride etc. seeds yield fixed oil.*

*Action* : *The oil contains an acridresin in which reside the purgative principle. The kernl is an astringent alternative cholagogue and laxative, pungent, cathartic, cooling and ansibllions.*

Uses : This has got a similar properties of "Seemai Acrot" (Jugulans regia). But this is mainly used to regain the vitality by consuming it along with Karuvelam gum mixed with milk at night.

சீமை அக்ரோட்டின் குணங்களே இதற்கும் பொருந்தும் என்றாலும் தாது பலம் குறைந்தவர்கள் இத்துடன் கருவேலம்பிசின் சிறிது சேர்த்தரைத்து பாலில் கலந்து இரவில் பருகிவர தாது வலிமை அடைந்து குழந்தைப் பெற வாய்ப்பு ஏற்படும்.

* * *

## அசமதா
### (ஓமம்)

## Carum roxburghianum
### (N. O. Umbelliferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituent* : *An aromatic volatile essentialoil.*

*Action* : *Stimulant, Stomachic, Carminative and Aphrodisiac.*

Uses : The aromatic seeds are used as a flavouring ingredient in curries; and medicinally as carminative, stimulant and stomachic. This has the similar properties of celery- or Omum. (Ptychotis ajowan).

இது ஓமத்தில் ஒருவகை. சாதாரண ஓமத்தைப் பார்க்கிலும் காரம் அதிகமாய் இருக்கும். இது பசியைத் தூண்டுகிறது. ஓமத்தின் அத்தனைக் குணங்களும் உடையது.

இது சிறப்பாய், ஊழிபேதி, அசீரணபேதி, வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, குன்மம் இவைகளைப் போக்குவதுடன் வறட்டிருமல்,

மேல் மூச்சுடன் கூடிய இருமல், உள் அவயத்தின் குளிர்ச்சி ஆகியவை கட்கு உபயோகமாகும். ஈரல், மண்ணீரல்களின் பந்தங்களை நீக்கும். நீரைப் பிரிக்கும். கல்லடைப்பை நீக்கும். மேலும் பசி தீபனத்தையும் போக சக்தியையுமுண்டாக்கும்.

* * *

## அசோக மரம்

## Saraca indica

### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, flowers*

*Constituent* : *Bark contains a fair amount of tannin which is rich in iron and catachin.*

*Action* : *Bark is strongly astringent and uterine, sedative. It has a stimulating effect on the endometrium and the ovarian tissue.*

Uses : Bark is used in medicinal preparations. It is mainly used in gynacological disorders. The powdered bark along with same quantity of Poonaikali seeds. (Mucuna-pruriens) powder is used as an ideal medicine for Leucorrhea. The decoction is used as a uterine tonic. This corrects the menstural cycie and releives dysmennorrhea. The flower is used to check dysentry. Asoka Arishta and Asoka Ghrithams are prepared from the flower.

மாதவிடாயை ஒழுங்குபடுத்துவதில் இதன் பட்டை ஒரு முக்கிய பொருளாகும். இப்பட்டையை சன்னமாக தூளாக்கி இதனுடன் சமபங்கு பூனைக்காலி வித்தின் இடித்த தூளையும் சேர்த்து வெள்ளை ஒழுக்குக்கு மருந்தாக கொடுக்கலாம். சூர்பாசய நோய்களில் இதனை கஷாயமாக்கி அருந்த குணம் கிடைக்கும்.

இதன் பூ ரத்தபேதி, பெரும்பாடு முதலியவற்றுக்கான மருந்துகளில் பயன்படுகிறது. இதனின்று 'அசோகாரிஷ்டம்', 'அசோக க்ருதம்' போன்ற மருந்துகள் தயாரிக்கப்படுகின்றன. அசோக மரப்பட்டை, மாதுளம்பழ ஒடு, மாதுள வேர்ப்பட்டை, இவை மூன்றையும் சமமமாக எடுத்து உலர்த்தி தூள் செய்து தினம்

ஒன்றுக்கு இரண்டு வேளை ஒரு சிட்டிகை வாயிலிட்டு வெந்நீர் குடித்துவர எல்லாவித கருப்பை கோளாறும் நீங்கும். மேலும், இதையே தொண்ணூறு அல்லது நூற்றி இருபது நாட்கள் சாப்பிட்டால் பெண் மலட்டுத்தன்மை நீங்கி பிள்ளைப்பேறு உண்டாகும் தன்மையை ஏற்படுத்தும்.

* * *

## அன்னாசி

## Ananas sativus

### (N. O. Bromeliaceae)

***Habit*** : *Short stemmed terrestrial.*

***Parts used*** : *Ripe and unripe fruits and leaves.*

***Constituent*** : *Juice contains a protein digestive ferment which acts equally well in acid or alkalline intestinal secrtions. Ash contains acids of sulphur and phosphorus, lime, magnesium, silica, iron, chlorides of potassium and sodium.*

***Action*** : *Fresh juice of the leaves are purgative anthelmintic and germicide. Juice of the ripe fruit is anti-scorbutic, diuretic, diaphoretic, refrigerent and helps in the digestion of albuminous substances. Unripe fruit in large quantities is abhortifacient.*

Uses : The juice of the unripe fruit is an abortifacient in large quantities. It is used in the preparation of Jams, Jellies etc. It is used in the treatment of Jaundies, head ache giddiness and vomiting. The ash of the leaves with oil is applied for the skin ailments.

இதன் செங்காய் கர்ப்பத்தை கலைக்குமென்பர். இதன் பழத்தைக் கொண்டு ஜாம், ஜெல்லி, குளிர்பானம் முதலியவைகள் தயாரிக்கப்படுகின்றன. பித்தம், வாந்தி மயக்கம், வெட்டை, தலைவலி நீக்கும். அழகு தரும். அதிகம் உண்டால் தொண்டைக்

கட்டும். இதன் தழையை சுட்டெரித்து சாம்பலை எண்ணெயில் குழப்பி சொறி சிரங்குக்கு மேற்பூச்சாக தடவலாம்:

* * *

## அன்னாசிப் பூ

## Illicium verum

### (N. O. Magnoliaceae)

*Habit* : *Shrubs.*

*Parts used* : *Fruits.*

*Constituent* : *Fruit contains volatile essential oil.*

*Action* : *Aromatic, Carminatiue, Stomachic, Stimulant, Diuretic and Excpectorant.*

Uses : The fruit is imported from China. It is given in the treatment of indigestion, loss of appetite, etc. Oil of the fruit, if applied to the abdomen of the children, relieve colicy pain. The dried flowers is used to check vomiting.

இது இறக்குமதி செய்யப்படும் கடைச்சரக்காகும். மாந்தம், அஜீரணம், புளியேப்பம் நிவர்த்திக்கும். உணவிற்கு வாசனை தரும். காய்ந்த இப்பூவை பொடி செய்து ½ கிராம் முதல் 1 கிராம் எடை வீதம் நாள் ஒன்றுக்கு மூன்று முறை உட்கொள்ள நல்ல பசியை உண்டாக்கும். வாந்தியை நிறுத்தவும் இதைப் பயன்படுத்தலாம். இதன் கஷாயம் உடல் வனப்பிற்கு உகந்தது.

* * *

## அணாஷ்வடி

### (யானைச்சுவடி)

## Elepantopus scaber

### (N.O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Roots and leaves*

*Action* : *Mucilaginous, Cardiac tonic Astringent, Alterative Febrifuge, Anti-pyretic, and antibiotic*

Uses : Decoction of the root and leaves with cumin and buttermilk is given in dysuria and other urethral discharges or complaints; also in diarrhoea and dysentery. The drug is used in snake-bite also.

பூச்சிக்கடி, பாம்புக்கடிக்கு மேற்பூச்சாக இதை நாட்டு மருத்துவர் பயன்படுத்துவர். சீதபேதி – பேதி இவைகளுக்கு உள்ளுக்குக் கொடுக்க குணம் கிடைக்கும். இதனை பல மருந்துகளில் துணை மூலிகையாகச் சேர்த்துக் கொள்வர்.

* * *

## அனிச்சம்

## Anagallis arvensis

### (N. O. Primulaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, herb (whole plant)*

*Constituent* : *Saponin, enzyme.*

*Action* : *Diuretic, Diaphoretic and Expectorant.*

Uses : It is mainly used in the treatment of diseases of the brain. It is also used in the treatment of mental disorders and leprosy. The juice of the leaves is used in obstructions of the liver and spleen, also in the treatment of the stones in the liver.

சங்க காலத்தில் அனிச்சம் ஒரு சிறந்த மலராக அன்றாட வழக்கிலிருந்தது என்பதற்கு பல சான்றுகள் (திருக்குறளில் ''மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து...'', பெருங்கதையில் ''அனிச்ச மதிப்பினும் பனித்தலான ஒளிச் சீரடி...'', சீவக சிந்தாமணியில் ''அம்மெல்லனிச்ச மலரும் அன்னத்தூவியும் வெம்மையாமென்றஞ்சி...'') பல நூல்களில் பரவிக் கிடக்கின்றன.

அனிச்சத்தைப் பொறுத்த அளவில் அதனுடைய சிறப்பு திருக்குறளில் ஒரு சில தாவரங்கட்கு நடுவே நான்குமுறை சொல்லப் படுகின்றது.

அனிச்சம் பலவகை பைத்தியங்கள், வெறி நாய்கடி, காக்கை வலிப்பு, குஷ்டம் ஆகியவற்றிற்கு சிறந்த மலராகப் பயன் படுகிறது. பின்னாளில் ஈரல்கள், நச்சுக்கடிகள் போன்றவற்றிற்கும் பயனாயிற்று. இப்பயனால், சங்கத் தமிழகம் எங்கும் தங்கு தடையின்றி பரந்து வளர்ந்து வந்த அனிச்சம் படிப்படியாக அழிந்து ஒழிந்தது.

இதன் அடிப்படையான மற்றொரு தாவரம் ஆனகாலிஸ் (Anagallis) ஆகும். இதனுடைய மருந்தியல்புகள் அனிச்சத்தின் மருந்தியல்புகளை ஒத்திருக்கும்,

* * *

## அண்டகன் சிகாரி

## Loranthus elasticus

**(N. O. Loranthaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves*

*Action* : *It acts as a solvent for the stones.*

Uses : Juice of the leaves is used for abortions. It is also used for treating against the stones in bladder and in kidney infections.

இச்செடியின் இலைச்சாறு கர்ப்பச்சிதைவு ஏற்படாவண்ணம் காக்கும் இயல்புடையது. கிட்னியில் உண்டாகும் கல்லை கரைப்பதில் இம்மூலிகை தன்னிகரற்றது. இது ஒரு சில பருவங்களில் மட்டுமே கிடைக்கக்கூடியதாகையால் இதன் முழுப்பயனையும் அடைய அரிதாய் இருக்கிறது.

* * *

## அதளங்காய்

## Mimordica tuberosa

*Parts used* : *Roots*

*Constituent* : *Glucoside*

*Action* : *Abortifacient, Glucoside, Bitter.*

Uses : Its roots are used in the treatment of mental disorders.

புத்திக்கோளாறு, வயிற்று மந்தம் ஆகியவற்றிற்கான மருந்துகளில் இதன் வேர் சேர்க்கப்படுகிறது. அதிகமாக உட்கொள்ளவதால் வாதநோய் வரும்.

* * *

## அதிமதுரம்

## Glycyrrhiza glabra

### (N. O. Papilionaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Peeled root, leaves.*

*Constituent* : *Root contains glycyrrhizin, phosphoric, sulphuric and malic acids and mineral salts.*

*Action* : *Tonic, cooling Demulcent, Diuretic, Emollient and Laxative, In unani medicines it is used in disease of liver bladder and lungs.*

Uses : Root infusion, decoction, or its extract useful as a demulcent, in inflammatory Infections, emollient and expectorant. Root mixed with lime juice and linseed makes a homely valuable remedy for cough and cold. The decoction made from equal quantity of Atimaddhuram and cumin seeds is used in the treatment of pregnant ladies to check bleeding. It is also used to treat the ulcers, thirstyness, eye defects, mental disorders, jaundice and cough.

இதற்கு அதிங்கம், அஷ்டி, மதூரகம், குன்றிவேர், இரட்டிப்பு மதுரம் என்ற பெயர்களும் உண்டு.

முப்பிணியால் வரும் புண்கள், தாகம், கண் நோய்கள், பைத்தியம், விக்கல், வெண்புள்ளி, சிறுநீர் எரிச்சல், எலும்பு நோய்கள், காமாலை முதலியன போக்கும். மேலும் குத்திருமல்,

சிரநோய் முதலியன போம். இதன் சத்து மூசாம்பழம், நிலவாகை இவைகளைக் கொண்டு செய்கின்ற மருந்துகளின் அருவருப்பை நீக்க உபயோகிக்கப்படுகிறது. சூட்டினால் உண்டாகும் இருமலுக்கு அதிமதுரம், கடுக்காய், மிளகு சமனெடை எடுத்து இளவறுப்பாய் வறுத்து சூரணஞ் செய்து தேனில் சாப்பிட குணமாகும். இது முடியை வளர்க்கக் கூடியது.

மஞ்சள்காமாலைக்கு, அதிமதுரம், முச்சங்கன் வேர்ப்பட்டை இவ்விரண்டையும் சமனெடை எடுத்து எலுமிச்சம்பழச்சாற்றால் அரைத்து மாத்திரை செய்துலர்த்தி பாலில் ஒரு நாளைக்கு இருமுறை வீதம் 3 நாள் கொடுக்க வேண்டும்.

கர்ப்பவதிகளுக்குக் காணும் உதிரம் நிற்க அதிமதுரம், சீரகம் இரண்டையும் இடித்துப் போட்டு நீரிலிட்டு பாதியாகக் காய்ச்சி காலை மாலை 3 அல்லது 4 நாட்கள் கொடுக்க வேண்டும்.

கண்கள் ஒளிபெற அதிமதுரத்தை முலைப்பால் விட்டரைத்து கண்ணில்விடவேண்டும். சிற்றாமணக்கு நெய்தடவி, குன்றியிலையை ஒட்டவைக்க பிடிப்பும் சுளுக்கும் குணமாகும்.

இளமையில் போக சக்தியை இழந்துவிட்ட வாலிபர்களுக்கு அதிமதுரம் ஒரு புத்துயிரளிக்கும் அருமருந்தாகப் பழங்காலத் திலிருந்தே கருதப்பட்டு வருகிறது.

காக்கைவலிப்பு குணப்படும். நாசிரத்தம் வருவதை நிறுத்தும். ஆயுள் நீடிக்கச் செய்யும். படர்தாமரையை குணப்படுத்தும் குணமுண்டு.

* * *

## அதிவிடயம்

### Aconitum heterophyllum

**(N. O. Ranunculaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Dried tuberous root*

*Constituent* : *The non-chrystalline, bitter alkaloid, and non toxic.*

*Action* : *Roots are Bitter, Tonic, Astringent, Stomachic, Antiperiodic, Aphrodisiac, Antipyretic, Febrifuge and Diaphoretic.*

Uses: It is used in ayurveda, siddha and unani medicines. It is used as aphrodisiac and stomachic medicines The churnam is used in bilious fever. The plain powder of the tuberous root mixed with honey is given in cough, coryza fever and vomiting in children.

இது நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும். விட்டுவிட்டு வருகிற சுரம், வாந்தி முதலிய நோய்களைப் போக்கும். இதைச் சூரணஞ்செய்து ஒரு தேக்கரண்டி அளவு எடுத்து தேனில் குழைத்து சாப்பிட முறைச் சுரம் குணமாகும். மேலும் அரைத்தேக்கரண்டி அளவு சூரணத்துடன் 6 மிளகை வைத்து அரைத்து சுரம் நீங்கியபின் சாப்பிட அதனால் ஏற்படும் அசதியைப் போக்கும்.

அசீரணபேதி, சீதபேதி, வாதம், மூலம், மூலக்கடுப்பு, ஆகியவற்றிற்கு உடல் எடைக்கேற்றாற்போல் சாப்பிட உடனடி நிவாரணம் கிடைக்கும். இதே சூரணத்துடன் சமஅளவு கடுக்காய்த் தூள், சுக்குத்தூள் கலந்து காலையில் வெறும் வயிற்றில் மோரில் கலக்கிக் குடிக்க மூலக்கடுப்பு நீங்கும். பேதி கட்டுப்படும்.

டைபாயிட் காய்ச்சலின்போது வரக்கூடிய பேதி, உடல் அசதி, சோர்வு ஆகியன விலக சுக்கு, குடசப்பாலை பட்டை, முத்தக்காசு, சீந்தில்கொடி, பற்பாடகம், கண்டங்கத்திரி (ஒவ்வொன்றும் 10 கிராம்) ஆகியவற்றுடன் அதிவிடையம் 10 கிராம் சேர்த்து 2 குவளை நீர் விட்டு ஒரு குவளையாகச் சுருக்கி வடிகட்டி, காலை மாலை இருவேவள ½ குவளை வீதம் மூன்று நாட்களுக்குப் புதிதாக குடிநீர் செய்து குடித்து வரவேண்டும்.

கோழையுடன் கூடிய இருமல் விலகிட அதிவிடையத்துடன் அதிமதுரம், சிற்றாமுட்டி, திப்பிலி ஆகியவற்றை சேர்த்து பொடி செய்து காலை மாலை இருவேளை தேனில் குழைத்துண்ண கோழை இருமல் குறையும்.

* * *

## அத்தி

## Ficus glomerata

### (N. O. Urticaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Root, root-bark, Leaves, Fruit, milky-juice and galls.*

*Constituent* : *Wood possesses tannin and wax. The ash containing silica and phosphoric acid.*

*Action* : *Bark, leaves and unripe fruit are used in Dysentry. The tonic of the fruit is a laxative and used in the treatment of Piles, Paralysis, and cough also it improves blood (cordial).*

Uses : The latex is used in the treatment of dysentry, dysmenorrhea leucorrhea and diabetese, Latex with butter or sugar is given for the above said complaints. The fruit extract increases the haemoglobin content in the blood. The bark extract taken with cow's milkcurd acts as remedy for dysmenorrhea. The dossage recommanded is 100 ml twice daily.

தென் இந்தியாவில் இதன் காயையும், பிஞ்சையும் சமைத்துண்பது வழக்கம். மருந்துண்ணும் காலங்களில் இதைப் பத்தியப் பதார்த்தமாக உபயோகிக்கலாம்.

துவர்ப்புடைய அத்திப் பிஞ்சை சமைத்துண்ண மூலவாயு, மூலக்கிராணி, இரத்தமூலம், வயிற்றுக்கடுப்பு ஆகியவைகளைப் போக்கும். அத்திப்பிஞ்சு, கோவைப்பிஞ்சு, மாமரத்தின் பட்டை, சிறு செருப்படை ஆகியவற்றை சம அளவு வாழைப்பழச்சாற்றால் அரைத்துக் கொடுக்க வயிற்றுக் கடுப்பு போகும்.

அகத்திக்காயை சமைத்து சாப்பிட்டால் பிரமேகம், வாத நோய், சூலை, சரீரவெப்பு, புண், ஆகியவை தணியும். மேலும் சுலபமாக மலங்கழியும்.

பழத்தை மணப்பாகு செய்து உட்கொள்ள, மலச்சிக்கல், நாவரட்சி, உடல் வெதும்பல் ஆகியவை நீங்குவதுடன் இரத்தம் விருத்தியாகும்.

இம்மரத்தின் பாலை வெண்ணெய் அல்லது சீனியுடன் கொடுக்க இரத்தபேதி, பெரும்பாடு, வெள்ளைபடுதல் ஆகியவை தணியும். மேலும் நீரிழிவு, சூலை, ரத்தமூத்திர கிரிச்சரம் ஆகியவைகளைப் போக்கும். அத்திப்பட்டையை பசுவின் மோர் விட்டு இடித்துப் பிழிந்த ரசத்தில் தினம் இரண்டு முறை 100 மில்லி அளவு வீதம் சாப்பிட்டு வர பெரும்பாடு நிற்கும்.

* * *

## அத்தி

**(சீமை அத்தி)**

## Ficus palmata

**(N. O. Urticaceae)**

*Habit* : *Tree*

*Parts Used* : *Fruit and bark*

*Constituent* : *Silica and Phosphoric acid*

*Action* : *Astringent, Cordial, Alternative Emollient Demulcent, Nutrient, Laxative and Tonic.*

Uses : Fruit is demulcent and laxative, and is used in diseases of the lungs and bladder. The dried (preserve) fruits are used in the preparation of lehyams. These fruit when taken improves haemoglobin content in the blood and also improves general health. The preserved fruits with honey are laxative and febrifuge.

சீமை அத்திப்பழம் பக்குவப்படுத்தக்கூடியது. இதை தேனுடன் தினமும் சாப்பிட்டால் இரத்த விருத்தியாகும். உடல் பருக்கும். மலச்சிக்கலை நீக்கும். உடல் வெப்பத்தை தணிக்கும். இந்தப் பழம் லேகியங்களில் உபசரக்காகப் பயன்படுகிறது.

* * *

## அத்தி
### (காட்டு அத்தி)

## Ficus oppositifolia
### (N. O. Urticaceae)

*Habit* : *Tree*

*Parts Uned* : *Bark Latex of the wood, fruit.*

*Constituent* : *Poisinous Latex which is used in medicines.*

*Action* : *Bark is anti-periodic and tonic Fruits, seeds and bark are emetics.*

Uses : The extract of the bark is used as an anti periodic and tonic. It is also used in preperation to correct the irregular menstural cycle. Fruits seeds and bark are used as emetics. Milky juice is poisinous, so it should be used cautiously in medicine. This herb is very useful in anti-Leprosy and anti-diabetese preparations.

இதன் பட்டை மாதவிடாயை ஒழுங்குபடுத்தும் மருந்துகளில் சேர்க்கப்படுகிறது. இதன் பால் நீரிழிவுக்குச் சிறந்தது. இச்செடி ஒரு குஷ்ட நிவாரணியாகும்.

* * *

## அத்தி
### (கொடி அத்தி)

## Ficus hispida
### (N. O. Urticaceae)

*Habit* : *Climbers*

*Parts Used* : *Bark and Fruit*

*Constituent* : *Tanin wax a Caoutchouc - Like substance and a glucosidal principle having the properties of Saponin.*

*Action* : *Emetic, Germicide, Anti-periodic.*

Uses : Bark is emetic and laxative. Fruit is used as refrigerent and astringent. The decoction is used in the t reatment of hepatic obstructions. Fruits and seeds in a dose of 15 to 30 grains, 3 to 4 times a day, act as antiperiodic. It is also used in the treatment of leprosy. It improves the lactation mother. It is also a uterine tonic.

இது பேய் அத்தி என்று கூறப்படுகிறது.

பட்டை முறைக்காய்ச்சலை நிவர்த்திக்கும். இதன் பால் குஷ்டப்புண், கிரந்தி, தடிப்பு, புண் ஆகியவற்றிற்கு குணம் தரும். இளந்தாய்மார்களுக்கு பால் சுரக்கச்செய்யும். கரு வளர்க்கும்.

* * *

## அத்தி

### (சிறிய பேய் அத்தி)

## Ficus ribes

### (N. O. Urticaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Unripe fruit, Latex & Bark.*

*Constituents* : *Tannin, wax and a glucocidal principle having the properties of Saponin.*

*Action* : *Emetic and Germicide.*

Uses : Bark is emetic and laxative. It's uses are similar to Ficus hispida (கொடி அத்தி). It is useful in all types of skin ailments including sexually transmitted disease.

இதன் பால், தோல் பற்றிய நோய்களுக்கும் கிரந்தி, குஷ்டத்திற்கும் குணமளிக்கும்.

* * *

## அந்தரத் தாமரை (அ) ஆகாசத் தாமரை

### Pisti Statoites

### (N. O. Araceae)

*Habit* : *Offset*

*Parts used* : *Leaves and Petiole*

*Constituents* : *Plant contains mineral salts and silicic acid Ash contains Potassium Chloride and Sulphate.*

*Action* : *Refrigerent, Demulcent, Laxative, and Emollient*

Uses : Plant is used as on effectual bug destroyer Leaves and roots are used in dysuria. Leaves mixed with rice and cocoanut milk are given in dysentry. When mixed with rose water and sugar it gives relief from cough and asthma. Ash of the plant known as panasalt, which is used as an external application for ring worm. It is also used in anti-leprosy preparations.

குளங்குட்டைகளிலும், வேகமாக ஓடாத ஆறுகளிலும் ஆகாசத்தாமரை அபரிதமாக வளரக்கூடியது. இதன் பூக்கள் வசீகரமாக இருக்கும். இலையும் வேரும் எரிந்து சாம்பலாகிய பின்னரே பயன்படும்.

இச்சாம்பலும் சிறிதளவு தேங்காய் எண்ணெயும் கலந்து சிரங்கிற்கு மேற்பூச்சாக பாவிக்கலாம். ஆகாச தாமரையை பெரிய குழிகளில் வைத்து கட்டுப்படுத்தப்பட்ட சிதைவு முறையில் தழை உரம் தயாரிக்கலாம். இதன் மக்கிய தழை உரம் மண் வளத்திற்கு ஏற்றதாகையால் பயிர்களுக்கு மிகவும் நல்லது. இத்தழை உரத்தில் நகர்ப்புற கம்போஸ்ட் உரத்தைவிட இருமடங்கு அதிக பொட்டாஷ் சத்தும் கழிவு உரத்தைவிட நான்கு மடங்கு அதிக பொட்டாஷ் சத்தும் இருக்கிறது.

ஆகாசத் தாமரையை எரிவாயு தயாரிக்கவும் பயன்படுத்தலாம். ஒரு கிலோ கிராம் உலர்ந்த இச்செடியில் இருந்து 33 லிட்டர் எரிவாயு தயாரிக்கலாம். அதிலும் நிக்கல் போன்ற உலோகங்கள் வினை ஊக்கியாக செயல்பட்டு மீதேன் வாயுவை 90 சதவீதமாக உயர்த்துகிறது. நீரில் மிதக்கும் களைத்தாவரமான இதை களைப்பயிரின் தாய்வீடு எனலாம்.

* * *

# அந்தி மல்லி

## Mirabilis Jalapa

**(N. O. Nyctaginaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and tubers*

*Constituents* : *Roots contain a small quantity of alkaloid trigonelline Leaves are De-obstrient.*

*Action* : *Tuber posses purgative properties.*

Uses : Dried root is nutrient. Root is powdered and fried in ghee with spices and it is given in milk as a nourishing and strengthening medicine. Leaves cure wounds and bruises. Seeds are used to adulterate black pepper.

காயவைக்கப்பட்ட வேர்ப்பகுதி உணவுப் பொருளாகப் பயன்படுகிறது. வேரை நெய்யில் வறுத்து பாலுடன் சாப்பிட உடல் வலிமை பெறும். இதன் விதையை மிளகுடன் கலப்படப் பொருளாக சேர்ப்பர்.

* * *

# அப்பகோவை

## Rhynchocarpa foetida

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome*

*Action* : *Demulcent*

Uses : The infusion of the rhizome is used in the treatment of swelling, skin, diseases, diabetes, flatulance.

இதனைக் கஷாயம் செய்து சாப்பிட வீக்கம், இரத்த பித்தம், வயிற்றுப் பொருமல், சருமவியாதிகள், மதுமேகம், கோழை போன்ற பலவகைத் தோஷங்கள் அகன்று உடல் நல்ல குணம் பெறும்.

* * *

## அபினி
(கசகசா)

## Papaver Somniferum
**(N. O. Papavercpae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruits and seeds*

*Constituents* : *The purple varviety gives the highest yield of opium. The opium alkaloids are divided into two groups.*

*(1) Phenanthrene - pyridene group comprising morphine Codeine Pseudomovphine neopine and the baine. These are strong bases and very poisonous whist.*

*(2) The benzyl - iso - quinoline group as a whole have little physiological action.*

*Action* : *Poppy seeds (Kasa-Kasa) are demulcent and nutritive also mild astringent. Poppy Capsule are Astringent, Somniferous Sedative and Narcotic. In over doses it is a powerful narcotic poison. It weakens the will power. As astringent opium checks haemorrhages, lessens bodely secutions and restrains tissue changes.*

*The physiological action of opium depends upon the various alkaloids and other principles obtained from it. Opium in medicinal doses stimulates the brain, heart and respiration. This is followed by general depression. Generally opium is Anodyne, Hypnotic, Antispasmodic Myotic Narcotic, Intoxicant and Cerebral Depressant. Its Chief action is on the cerebro-spinal system and through the nerves it acts upon all the organs of the body; It stimulates the generative organs. It affects all the secretions except milk and sweet which it increases by stimulating the glands. It causes dryness of the mouth and lessens the secretion of the stomach and thus impairs*

*appetite; also diminishes bile. Thus it causes constipation, decrease the quantity of urine secreted, increases the heart action and arterial tension, large doses produce depression of lhe heart.*

Uses : Secreted milk of this herb issued in medicine The milk is collected with caution in the following way. The herb secerts the milk after the petals of the flower falls off,but before ripening of the fruit, the milky secretion causes only at night and the condensed milky secretion is collected early morning by scraping.

The newly secreted milk will be purplein colour with a peculiar smell which is highly viscous. This is generally used as sedative antispasmodic and analgesic. This is a narcotic drug and extra caution should be taken while administering any medicine which contains opium.

காய் பழுக்காததற்கு முன்பும், புட்ப இதழ்கள் உதிர்ந்து 7 நாட்கள் சென்ற பின்பும், மாலைப் பொழுதில் இக்காயை கீத இரா முழுதும் பால் வடிந்து உறைந்திருக்கும். காலையில் இதை சுரண்டி பயன்படுத்துவார்கள். இவ்விதம் இக்காயை இரண்டு மூன்று முறை கீறிப் பால் எடுக்கலாம்.

எடுத்தபின் காற்று வெய்யில் இவற்றால் பழுதாகாவண்ணம் பாதுகாத்து மருந்துக்கு பயன்படுத்தலாம். புது சரக்கு பிசுபிசுப் பாயும், ஊதா நிறமாய் ஓர்வித வாசனையோடுமிருக்கும்.

குன்மம் (அல்சர்) வாதப்பிணிகள், காது நோய், பல்வலி, பேதி, மந்தம், எலும்பைப் பற்றிய நோய்கள், நாசி ரோகங்கள் ஆகிய இவை அபினி கலந்த மருந்துகளால் தீரும் நோய்களாகும்.

அபினி போதைப் பொருளாகவும், மருந்தாகவும் பயன்படக் கூடிய ஒன்றாகையால் வெகு ஜாக்கிரதையாக இதை பயன்படுத்த வேண்டும். முதிர்ந்த வயதுடையவர்களுக்கு கொடுக்க வேண்டிய அளவுக்குமேல் கொடுத்தால் இது தீங்கு செய்யும். தவிர அபினியினால் தீங்கு உண்டாகுமென்று கணிக்கப்பட்ட நோய்களுக்கு இதை அறவே நீக்கி வேறு மருந்துகளை கொடுக்க வேண்டும்.

* * *

## அமரக்காய்

See (Solanum torvum)

சுண்டைக்காய் வகைகளைப் பார்க்கவும்

## அமிர்தக்கொடி

See Tinospora Cardifolia

சீந்தில் கொடி பார்க்கவும்

## அமுக்கிரான் கிழங்கு

## Withania Somnifera

**(N. O. Solanaceae)**

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Shrub* |
| *Parts used* | : | *Root and Leaves* |
| *Constituents* | : | *Plant contains a bitter alkaloid "Somniferin" having hypnotic property.* |
| *Action* | : | *Febrifuge, Diuretic, Alternative, Deobstriuent, Hypnotic sedative, Nutritive, Aphordisiac and Nervine tonic.* |

Uses : It is a very important tuber used in siddha as well as in ayurvedic system of medicine. This is widely used in research in many foreign countires and it is found that many alkaloids and cartisone is present, which is useful in asthama.

The extract of thistuber however consumed acts as a nervant tonic. it improves the vigour and vitality. It is a strong aphrodisac. It is also used for asthma,arthritis, and in premature ageing process. This is very commonly available in herbal shops.

250 gms of dried and pulvarised tuber is mixed with 75 m of pure honey and 75 ml of pure glove oil made a thick paste. If this thick paste is consumed every day, one teaspoon improves sexual vitality in men and develops the breast line in female. This takes care of tiredness and fatigue.

அமுக்கிரான் கிழங்கு. சித்தவைத்தியத்திலும், ஆயுர்வேத வைத்தியத்திலும் மிகுதியாக பயன்படும் ஒரு கிழங்காகும். இக்கிழங்கை தற்போது மேலை நாட்டு ஆய்வகங்களிலும் ஆய்வு செய்து இதில் 40க்கும் மேலான மருந்து சாரங்களும் (Alkaloids) ஆஸ்துமா, மூட்டு வாதத்திற்குப் பயன்படும் ஸ்டிராய்டுகளில் ஒன்றான கார்டிசோனும் இதில் உள்ளன, என்று கண்டுபிடித்துள்ளனர்.

இதன் சாரம் எவ்வகையில் உடலில் சேர்ந்தாலும், நரம்புகளுக்கு வலுவூட்டும். இந்திரியத்தின் தரத்தையும், அளவையும் முக சாந்தியையும் உடல் எடையையும் மிகச்செய்யும். இதன் சூரணம் உடல் உறவில் போக சக்தியை போதிய அளவில் உண்டுபண்ணும் தன்மை வாய்ந்தது. காசநோய், முடக்குவாத நோய்கள், அக்காலத்தில் வரும் கிழட்டுத்தனம் ஆகியவற்றை நீக்கும்.

நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும் இதை வாங்கி நன்றாக உரலில் பொடித்து மெல்லிய துணியால் சலித்து சன்னமான பவுடராக 250 கிராம் சேகரித்துக் கொண்டு 75 மில்லி நல்லத் தேனுடன் 75 மில்லி நல்ல பசு நெய்யுடனும் இரண்டற கலந்து சிறிது சூடாக்கி லேகியம் போலாக்கி பாட்டிலில் வைத்துக் கொண்டு 1 டீஸ்பூன் சாப்பிடுவதால் இன ஹார்மோன்களின் வளர்ச்சியை அதிகப்படுத்துவதுடன் (பெண்களின் மார்பக வளர்ச்சியை அதிகப் படுத்தும்) உடல் பலவீனம் நரம்புத் தளர்ச்சி போன்ற உடற்குறை பாடுகளையும் அறவே களையலாம்.

* * *

## அம்மான் பச்சரிசி

**(சித்திரப் பாலாடை)**

## Euphorbia pilurifera

**(N. O. Eurphobiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Herb (whole plant)*

*Constituents* : *A gum resin which is the active principle*

*Aciion* : *Demulcent Antispasmodic, Anthelmintic, Astringent, Refrigerent Laxative and Local Parasiticide.*

Uses : This is a popular remedy for, cough, coryza, hyasthma' bronchial infectious and diseases of the respiratory passages also given for worms, bowel-complaints. It is used as-paste with sugar in gonorrhoea and other venereal diseases. In spasmodic dyspnoea due to asthma. bronchitis of the old people, emphysema and pulmonary cardiac disease, angina pectoris, for the above complaints, fluid extract or the tincture is most suitable.

இது ஒரு சிறிய செடி. இதை சித்திரபாலாடை என்றும் கூறுவர் மழைக்காலங்களில் மிகுந்து வயற்புறங்களில் காணப்படும். இதில் சிறிய பெரிய என இருவகைகளுடன் சிவப்பு வெள்ளையென பிரிவுகளும் உண்டு. ஆனால் அனைத்து வகைகளுக்கும் மருத்துவ பயன் ஒன்றே. இதன் சாரத்தால் சித்தவைத்தியர்கள் வெள்ளியை பற்பமாக்குவார்கள். ஆஸ்துமா, கபநோய், வாய்ப்புண் போன்ற நோய்களுக்கு மருந்துகள் தயாரிக்கும்போது இதனை துணை மருந்தாக சேர்த்துக் கொள்வர்.

இச்செடியை ஒடித்தால் இதனின்று பால் கசியும். இப்பாலை முகப்பரு, கால் ஆணி போன்றவற்றிற்கு நேரிடையாக பயன் படுத்தலாம். கீழாநெல்லி இலையையும் அம்மான் பச்சரிசி இலையையும் மைபோல அரைத்து எருமைத்தயிருடன் சாப்பிட்டால் இந்திரிய ஒழுக்கு நிற்கும்.

* * *

## அம்மையார் கூந்தல்

(முதியாக் கூந்தல் குதிரைவாற்புல்)

## Ipomea tridentata

**(N. O. Convolvulaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Whole plant*

*Action* : *Astringent, Alteraticre and Stomachic.*

Uses : whole plant is used in medicinal preparation. The extract of the plant cures dryness of the mouth' piles and all rhumatic problems. This herb contains "kerotene" which helps the hair growth, so this could be used as a hair tonic also.

சிவதை செடியைப் போல இதுவும் ஒரு காட்டுக் கொடியாகும். இது நாவரட்சி, மூலகடுப்பு, சகல வாத நோய்களுக்கான மருந்துகளாய் பயனாகிறது. முடிவருவதற்குரிய கரோட்டின் சத்து இதன் வேரில் இருப்பதால் இதனைக் கொண்டு தைலம் காய்ச்சி தலைக்குத் தடவி முடியை வளர்க்கலாம்.

தற்போதைய ஆய்வின்படி செடியின் சாரங்கள் மூட்டுவலி ரோகங்களிலும் பயனளிக்கிறது.

* * *

## அரசமரம்

## Ficus religiosa

**(N. O. Urticaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, bark, and seeds*

*Constituents* : *Root bark contains tannin, cochtone and wax.*

*Action* : *Seeds are cooling, Laxative, Refrigerant and Alterative, young leaves and shoots are Purgative; bark is cooling, Astrvingent, Laxative, Aphrodisiac and Tonic.*

Uses : This is a very important herb in the system of siddha. In siddha system the extract of tender leaves are used to solidify the mercury and make "Bhasma" (ashes) out of white lead which is a very stenan process, but very widely used in many medicinal preparations. the extract of the bark is used as anthelmentic. The seed is used as aphrodisac. It is used in antileprosy medicine by soaking the bark in coconut tody for one week and dried in sun. This dried powder of its applied on the ulcers of the effected area, gives relief. This herb is used as"mouth wash" which gives relief in stomatitis.

அரச இலைக் கொழுந்தின் சாற்றைவிட்டு சித்த வைத்தியர்கள் பாதரசத்தை கட்டுவார்கள். வெள்ளீயத்தை பற்பமாக்குவார்கள். இதன் பட்டையினின்று வடித்தெடுக்கப்படும் சாற்றில், வயிற்றில் இருக்கும் புழு—பூச்சிகளை ஒழிக்கும் மருந்துகளை தயாரிக்கலாம். இதன் பழவிதை இந்திரியத்தை பலப்படுத்தும். இதன் பட்டையை இடித்து தென்னங்கள்ளில் போட்டு, ஒரு வாரம்

வெய்யிலில் வைத்தெடுத்து புற்றுநோய் புண்களில் போட புழுக்கள் செத்து குணமாகும். அரசன் பட்டைச்சாற்றில் வாய் கொப்பளித்தால் வாயினுள் தோன்றக்கூடிய எவ்வகைப் புண்களையும் குணப்படுத்தும். விக்கல் அடங்கும். கபத்தையும், பித்தத்தையும் குணப்படுத்தும்.

* * *

## அரரூட்

**(கூகைக்கிழங்கு, கூவைகிழங்கு)**

## Curcuma angustifolia

**(N. O. Scitaminaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Tubers*

*Constituents* : *Starch, sugar, gum and fat*

*Action* : *Cooling, Demulcent, Refrigerent and Nutritious.*

Uses : Tubers are dried and powdered a flour is prepared. It contains 81. 5 % of starch and 10. 5%of sugar and fat. For children it is best administered in the form of thin conjee with milk and sugar.

மாவுக் கிழங்குகளில் இது ஒரு வகை. இந்தக் கிழங்கில் 10.5 சதவீதம் சர்க்கரைப் பொருளும். 81.5 சதவீதம் ஸ்டார்ச்சும் இருக்கிறது. இதனால் இதை குழந்தைகளுக்கு உணவாக கொடுக்கிறார்கள். தேக புஷ்டியை உண்டாக்கும். சமையல் செய்து சாப்பிடக் கூடாத கிழங்கு இது.

* * *

## அரத்தை

**(பேரரத்தை, தும்ரஷ்டகம், சிற்றரத்தை)**

## Alplnia galanga

**(N. O. Scitaminaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome and fruit*

*Constituents :* *Root contains three compounds:-campheride, galangin and alpinin. Greeen rhizomes contain a volatile essential oil.*

*Action :* *Aromatic, stimulant bitter, stomachic, carminative De-oderant and Disinfectant. Intravenous injections of small doses of infusion produce a sharp fall in blood pressure in experimental animals.*

Uses : It is a very important medicinal herb used in siddha as well as in ayurvedic system of medicine. The rhizomes are useful in rheumatism and catarhal affections. The drug is a popular remedy for many respiratory ailments. The powder of the root is mixed with tooth powder and is used against pyorrhea.

It is a good remedy for impotence and nervous debility. The powder of Alpinia galanga in honey lessened the paroxysms of cough in children suffering from whooping cough. This drug releives the distressing symptoms and also it reduces the body temperature.

It has a pleasant odour and used in cough preparations and digestive mixtures.

நெடுங்காலமாக குடும்ப வைத்தியத்தில் பயன்படும் இம்மூலிகையின் வேர் மருத்துவக் குணமுடையது.

அரத்தையில் சிற்றரத்தை (Alpinia Chinensis) பேரரத்தை (Alpinia galanga) என இருவகை இருப்பினும் பலன் ஏறத்தாழ ஒன்றுதான். இவ்வேர் பலவித சித்த மருத்துவ முறைகளில் சேர்ந்து நீடித்த நோய்களை வேரோடு நீக்கும் தன்மை பெற்றது. இதற்கு உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் நிறைய தேவை இருக்கிறது.

துவரங்கொட்டை அளவு அரத்தையை வாயிலிட்டு சுவைக்க ஒருவித விறுவிறுப்பும் காரமும் உண்டாகும். இந்த உமிழ்நீரை உள்ளுக்கு விழுங்க, தீராத வறட்சியான இருமல், சீதள சம்பந்த நோய்கள், வாந்தி குமட்டல் யாவும் குணப்படும்.

இவ்வேரின் பொடியை பற்பொடியில் கலந்து பல் தேய்ப்பின் பற்களில் காணும் நோய் ஆறும்.

ஆய்வாளர்களும் மருத்துவர்களும் நுரையீரல் சளிச்சவ்வு பாதிப்பு, வாதநோய், குடல்வாய்வு முதலான நோய்களுக்கு

அரத்தை சிறந்த மருந்தென்று கருதுகிறார்கள். மேலும் பல நூல்களில் அரத்தையை ஆண் தன்மையற்றவர்களுக்கும், நரம்பு தளர்ச்சியுள்ளவர்களுக்கும் சிறந்த ஔடதமென அறுதியிட்டு சொல்லப்பட்டுள்ளது.

* * *

## அரிவாள்மனை பூண்டு

### (குறுந்தோட்டி-சிரமுட்டி)

## Sida rhomboideg

### (N. O. Malvaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Root & Leaves*

*Constituents* : *An essential oil*

*Action* : *Leaves and root are used in Piles, Gonorrhoea, Anti-soud, Diuretic Aphrodisiac. It is also styptic Resolvent and Analgesic.*

Uses : Root of these weeds held in great reputine treatment of rheumatism. The mucilage of the stems are employed as demulcents and emollients both for external and internal used. With pepper it acts as a febrifuge. It is also used in scorpionsting.

இது ஒரு சிறிய செடி, மஞ்சள் பூக்கள் இலைக்கொன்றாக பூக்கும். கிணற்று ஓரங்களிலும், நீர்ப்பகுதிகளிலும் விளையும்.

வெட்டுக் காயத்திற்கு கட்ட ரணம் சீழ் பிடிக்காமல் ஆறும். இதன் சாற்றுக்கு இரத்தத்தை உறையச் செய்யும் பண்பு உண்டு. இதன் பூக்களை கஷாயம் வைத்து வாயில் இரத்தம் வடிதலுக்கு கொப்பளிக்க பயன்படுத்தலாம். இதன் இலைகளை அரைத்து மூட்டு வலிக்குப் பற்றிடலாம்.

* * *

# அருநெல்லி

## Averrhoa acida

### (N. O. Oxalidaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit, seeds and leaves*

*Constituents* : *Fruit contains vitamin 'C'*

*Action* : *Diaphoretic, Antibilious, Laxative. Leaves are Mucilaginous and Demulcent seeds are cathartic.*

Uses : Decoction of the leaves is a good diaphoretic. Leaves are mucilaginous and demulcent and given in gonorrhoea. Ripe fruits are edible and used as adjunct to cough mixtures.

இயற்கை தந்துள்ள இனிய கனிகளில் நெல்லிக் கனியும் ஒன்றாகும். உடல் நலத்திற்கும், வளர்ச்சிக்கும் இன்றியமையாத சத்துக்களான மாவுச்சத்து, புரதம், கொழுப்பு, கால்சியம், பாஸ்பரஸ், இரும்புச் சத்து, செல்லுலோஸ் ஆகிய அனைத்தும் நெல்லியில் அடங்கியுள்ளன. நெல்லிக்காயை எப்படி பதப்படுத்தினாலும் அதிலிருக்கின்ற விட்டமின் 'C' என்கிற உயிர்ச்சத்து அழியாதது இக்கனியின் சிறப்பு.

நெல்லிக்கனி, இரத்தவிருத்திக்கும், இரத்த சுத்திக்கும். துணைபுரிகிறது. இதன் சாறு கண் கட்டிகளை குணமாக்கும் நெல்லிக்காயை உலரவைத்து இடித்து அதனை சோப்புக்குப் பதில் தேய்த்துக் குளித்தால் தோல் மிருது ஆவதுடன் தோல் நோய்களும் அண்டாது.

நாள்தோறும் நெல்லிக்கனிச் சாற்றை பருகி வந்தால் சீதபேதி, இரத்தபேதி, நீர்சோர்வை, சம்பந்தமான தும்மல். சளி முதலானவை 10 நாளில் நீங்கும்

குடற்பூச்சிகளை அகற்ற சமஅளவு நெல்லி சாற்றுடன் எலுமிச்சம்பழ சாற்றையும் சாப்பிட்டால் போதுமானது. நெல்லி இலைகளை கஷாயமாக்கி பருகினால் தொண்டைப் புண் ஆகியவை குணமாகும். பட்டை கஷாயத்துடன் தேன், மஞ்சள் கலந்து பருகினால் மேக வெட்டை குணமாகும்.

ஆஸ்த்துமா, மூச்சுக் குழல் சார்ந்த நோய்கள் ஆகிய வற்றிலும், பெண்களின் வெள்ளை ஒழுக்கிற்கும், வாந்திக்கும், வாதத்திற்கும் கூட நெல்லிக்கனி பயனாகிறது.

* * *

## அலரி

## Nerium odorum

### (N. O. Apocynaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Root, root bark, and flower*

*Constituents* : *Tuber contains two bitter non-crystallizable principles which are powerful heart poisons.*

*Action* : *All parts of the plant are poisonous. Root and the root-bark are powerful diuretic and cardiac tonic like strophanthus and digitaline It is an emetic. Anthelmintic & Purgative. The drug is a powerfu resolvent and attenuant, but only for external use.*

Uses : These are small evergreen shrubs. There are many varieties but the properties are similar . Bark is not used internally in any form. Root is used externally, made into paste with water or as an oil and applied to haemorrhoids in cancers and ulcerations and also in leprosy decoction of leaves is applied externally to reduce swellings. Root beaten into a paste with water is recommended to be applied to cancers and ulcers on the penis. other species are polygonum barbatum, plumeria acuminata palla & thevetia nerifolia.

இது ஆண்டு முழுவதும் வளரக்கூடிய செடியாகும். வெண்மை, செம்மை, மஞ்சள் ஆகிய மூன்று வண்ணங்களில் இப்பூக்கள் மலரும். ஆழ்ந்த பச்சை நிற நீட்டோலை போல இலைகளை யுடையது. இதை வெள்ளலரி, மஞ்சளலரி, செவ்வலரி என அழைப்பது வழக்கில் இருக்கிறது. ஓரடுக்கு முதல் பல அடுக்குள்ள இதழ்களையுடைய இம்மலர்கள், வாசனை அற்றதாயினும் அழகுடையதாகும்.

அலரிச் செடியின் பூ, வேர், பட்டை, இலை முதலியன மருத்துவ குணமுடையன. நஞ்சுத் தன்மை கொண்டதால் உள்ளுக்குப் பயன் படுத்தமாட்டார்கள். மேற்பூச்சாக தைலம் போன்ற முறைகளில் பயன்படுத்துவர். வேர்ப்பட்டை மிகவும் நஞ்சுத் தன்மையுடையது. உயிரைக் கொல்லும் கொடிய சத்துக்கள் வேரிலுள்ளன. ஆனால் அத்துடன் கிருமிகளையும் ரணங்களையும் ஆற்றும் மருத்துவ குணங்களும் உண்டு என்பதால் இதன் சாரத்தைக் கொண்டு ஆக்கிய எண்ணெயை மேற்பூச்சாகப் பயன்படுத்துவார்கள்.

அலரிப்பூ ஆறாத ரணங்கள், புடைத்துள்ள கட்டிகள், கிரந்திப் புண்களை நீக்கும். இதனை இடித்தரைத்து நல்லெண் ணெய்க் கலந்துக் காய்ச்சி தைலப் பதத்தில் இறக்கி பூசிவர அவை ஆறும். நாட்டு மருத்துவத்தில் பூக்களை அப்படியே அரைத்து மேற்படி பிணிகளுக்கு கட்டுவது வழக்கில் இருந்தது.

பொதுவாக அலரிசெடியின் பூ, இலை, தண்டு, வேர், பட்டை முதலியவைகளிலிருந்து மருந்துகள் தயாரிக்கப்படுகின்றன. அவை மூலம், காமாலை, வயிற்றுவலி, கபநோய், குஷ்டம், சரும நோய்கள், வாதநோய்கள், புரை, புற்று முதலானவைகளில் பயனாகிறது.

இதன் பால் புண், ரணம், அழுகல் சதை முதலியவற்றிற்குப் பயனாகும்.

* * *

## அலிசி விதை

## Linum ustitiatissimum

### (N. O. Linaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Seeds, oil and flowers*

*Constituents* : *Seeds contain 37 to 44 percent fixed oil. Ash contains mineral salts.*

*Action* : *Demulcent, Expectorant, Diuretic, Emolliente Astringent and the seeds are Aphrodisiac. Flowers are cordia.*

Uses : The infusion of the seeds is sweetened with sugar is given internally as a demulcent and expectorant drink in cold cough, bronchiam infections and irritations of the

urinary organs, gonorrhoea strangury, diarrhoea, dysentery and also used as injections to the vagina, bladder and rectum. The oil contains glycerine and linolic acid. Flower gives strength to the heart. The mixture of linseed oil cake and pungam oil is used as an external application in skin diseases.

இந்த விதையில் 37விருந்து 40 சதவீதம் நிலைத்த எண்ணெய் இருக்கிறது. இந்த எண்ணெய் கிளிசரைல் என்கிற மூலக்கூறுடன் லினோலைக் ஆஸிடையும் கொண்டது. இதன் பூ இருதயத்திற்கு வலிமை தரும். சீதபேதி, இருமல், நீர்சுருக்கு, ஜலதோஷம், கல்லடைப்பு போன்ற வியாதிகளுக்கு இதன் விதைத் தூளையும், அதிமதுரத் தூளையும் சம எடைக் கலந்துகஷாயம் ஆக்கி அருந்துவது ஆயுர்வேத மருத்துவர் வழக்கம். எண்ணெய் எடுத்த பின்பு கிடைக்கும் விதை சக்கையை எரித்த சாம்பலை புங்கம் எண்ணெய் யுடன் கலந்து சொறி சிரங்குகளுக்கு மேற்பூச்சாகப் பயன்படுத்துவர்.

* * *

## அல்லி

### (நெய்தற் கிழங்கு)

## Nymphae Pubescens

### (N. O. Nymphaeceae)

*Habit* : *Herbaceous*

*Parts used* : *Root, tubers, seeds and flowers*

*Conotituents* : *Root contains gallic and tannic acids stouch, gumetc*

*Action* : *Demulcent, Astringent, Diuretic, Sedative, Emollient, Refrigerant Expectorant and Spasmolytic in action.*

Uses : Leaves contain Nymphation and mymphacine. Its tuberous roots are taken with sugar after boiling it. It not only cools the system but also cures urinary diseases and dysentry. Powdered roots mixed with milk and taken internally is a remedy in dyspepsia, diarrhoea and piles. It proves an efficacious remedy in stopping the menstural discharge found in pregnant women. It is advantageously used in herpes and for cooling the eyes.

இக்கிழங்கு ஆம்பற்கிழங்கு என்று இலக்கியங்களில் கூறப் பட்டுள்ளது. இக்கிழங்கின் சாரத்தைக் கொண்டு சித்தர்கள் செம்பை செந்தூரம் ஆக்கினார்கள். இக்கிழங்கை அவித்து சர்க்கரையிட்டுச் சாப்பிட உடம்பிற்குக் குளிர்ச்சி தரும். மேலும் பித்த எரிச்சல், பிரமேகம், இரத்த பேதி இவைகள் போகும். உலர்த்தி மாவாக்கி பாலிலிட்டு உட்கொள்ள குன்மம், பேதி, மூலம் போகும். பெண்கள் கர்ப்பிணியாயிருக்கும்போது ,மாதாந்திர ருது காணில் தடுக்கும். அன்றியும் இதனால் அக்கிப் புண் போகும். இதன் பூவையும், ஆவாரம் பூவையும் சம அளவு எடுத்து சர்க்கரை சேர்த்து நீருடன் பாகு செய்து தினம் காலையும் மாலையும் பசும் பாலுடன் 40 நாட்கள் சாப்பிட நீரிழிவு நோய் அற்புதமாக குண மாகும்.

* * *

## அல்லி

### (நீலோத்பவம், கருநெய்தற்பூ)

## Nymphaea stellata

### (N. O. Nymphaeceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Tubers*

*Constituents* : *An alkaloid nupharine*

*Action* : *Alterative, Tonic, Diuretic, Haemostatic Restorative*

Uses : It cures menorrhagia, diseases due to phlegm humours and petty poisons. It is a tonic for delievered woman.

இதன் பயன்கள் நெய்தல் கிழங்கின் பயன்களை ஒத்திருந் தாலும் சிறப்பாக கருங்குவளை, பெரும்பாடு, கபநோய், விஷபாகம் போகும். பிரசவித்த பெண்களைத் தேற்றும்.

* * *

# அல்லி

**(செவ்வல்லி, மஞ்சிட்டி)**

## Nymphaea edulls

**(N. O. Nuphaeaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Tubers, seeds and flowers*

*Constituents* : *Rhizome and seeds contain glucose, and an alkaloid "nelumbine."*

*Action* : *Diuretic, Analgesic, and Demulcent*

Uses : It is an aquatic flower plant flowering all the year, flowers deep red found commonly grown in tanks. Flowers are medicinally cardiac tonic, refrigerant, and diuretic, the seeds, demulcent and nutrient, the roots stomachics, demulcent and astringent. The best preparation of the flower, is the syrup. Root, stalk, leaf and flower are eaten as vegetables. A kind of flour is made from the under ground stem and roots.

The flowers are substituted for degitalis, the seeds for iceland moss tragacanth and pepsin, the roots for subnitrate of bismuth pepsin and galic acid.

இது தண்ணீரில் விளையும் ஒரு பூஞ்செடி. வருடந்தோறும் பூக்கும். இந்தப்பூ மருந்தில் பயன்படக்கூடியது இருதயத்திற்கு வலிவைத் தரும். உஷ்ணத்தைத் தணிக்கக்கூடியது. நீரைப் பிரிப்பதில் நெருஞ்சிலுக்கு இணையானது. இதனால் மூத்திரரோகம், சங்க வாதம், உஷ்ணத்தால் பிறந்த கண் நோய்கள், சிரநோய், இரத்த பித்தம், தாது நஷ்டம் போகும். இதன் விதைகள் அழற்சியைப் போக்கி உடம்பைப் போஷிக்கும். வேர் குடலுக்கு வலிவை உண்டாக்கி வேர்க்கட்டைப் போக்கும். துவர்ப்பாகையால் பேதியை நிறுத்தும்.

இப்பூவினின்று சர்பத் காய்ச்சுவதுண்டு. இதன் கிழங்கு, தண்டு, இலை, பூ இவைகளை சமைத்துச் சாப்பிடலாம். இக்கிழங்கு பித்த பிரமேகத்தை விலக்கும். செம்பின் களிம்பைப் போக்கி அதை செந்தூரமாக்கும்.

* * *

# அவரை

(சீனி அவரை, சீமை அவரை)

## Dolichos fabaeformis

### (N. O. Papilionaceae)

*Habit* : *Twiner*

*Parts used* : *Leaves and pods*

*Constituents* : *Seeds are rich in proteins*

*Aciton* : *Seeds and leaves are Diuretic, Bilions and an Antidote.*

Uses : Green pods with their skin when tender are used as a vegetable. It is useful in phlegmatic disorders. This is a twiner herb. The plants after removal of seeds are fed to cattle. For the patients who takes medication for skin ailments, catract, phlegm, etc the tender pod of this is useful as food, which will enhance the action of therapy, in turn the patients will get quick releif. The ripened seed if cooked and consumed will give relief in arosagam.

அவரை ஒரு சுற்றுக் கொடி. அது இரண்டு வகைப்படும். ஒன்று புன்செய் பயிர் மொச்சை மற்றொன்று வீட்டுத் தோட்டப் பயிர்.

வீட்டுத் தோட்டங்களில் பயிராகும் அவரையில் அநேக வகைகள் உண்டு. காயின் நீளம், அகலம், நிறம், மணம், சுவை, செடியின் நிறம் இவற்றில் எல்லாம் வேறுபாடுகளைக் காணலாம். சிலவகை அவரைகள் அழகுக்காக வளர்க்கும் செடிகளாக இருக்கின்றன.

சீனி அவரை, செவ்வவரை, நகரவரை, வெள்ளவரை என்று அவரை வகைப் பிரிக்கப்பட்டுள்ளது. அவரைக்கு சிம்பை, சிக்கிடி, நிட்பாலம், நகுலி, நிஷ்பவம் எனும் பெயர்களும் உண்டு.

அவரைப் பிஞ்சு இனிப்பு சுவையுள்ளது. விதை முதிராத வெள்ளவரைப் பிஞ்சு திரிதோஷம், புண், ஜுரம், கண் விழிக்குள் சிலோத்துமை முதிர்ச்சியால் உண்டாகும் பில்லம் (Phlegm) என்கிற ரோகிகளுக்கும், மருந்துண்போருக்கும் இது ஒரு உணவாகும்.

கொட்டை முதிர்ந்த அவரைக்காயை சமைத்துண்டால் அஜீரணம் தீரும். ஆனால் மந்தம், பேதி, வாதநோய், கபநோய், ஆகியவை உண்டாகும்.

* * *

## அவரை

(வெள்ளை அவரை, சிகப்பு அவரை)

## Dolichos lablab

### (N. O. Papilionaceae)

*Habit* : *Twiner*

*Parts used* : *Pod, leaves and seeds*

*Constituents* : *Seeds are rich in protiens. Tender pod contains many vitamins*

*Action* : *Seeds are Aphrodisiac and stops Nasal bleeding; Roots are poisonous. Leaves are Carminative; Resolvent and Vermifuge. Tender pod is Sedative and Astringent.*

Uses : White variety of avarakkai is useful in gastric disorders and could be used as a general tonic. It is also known for its anti inflammatory property.

Patients who are, suffering from frequent head ache, diarrhoea, diabetese, indigestion, dysentry, avarakai could be effectively used to get relief from the above said ailments if taken regulary as cooked food.

Tender "avarai" is used as good dietic food for all. The extract of the leaf is very effective in permanent wounds and ulcer of the skin. This extract also is very usefull in treating boils and feruncles by applying this extract on the affected part with cotton and moisturing it regularly with the extract.

Avarakkai, if regularly taken, gives strength and vitality. For above weight people it could be used to reduce the weight. The tender avarakkai extract mixed with caster oil is a good applicant to relieve the stomachache in children.

வெண்நிற அவரைக்காய் வாயு, பித்தம் இவற்றை விலக்கும். உடலுக்கு டானிக் போன்று வலிமை தரும். உள்ளுறுப்புகளில் அழற்சியைப் போக்கும். எரிச்சலை அடக்கும். தலைநோய் அடிக்கடி வருதல், கிராணி, பேதித் தொல்லை, நீரிழியு நோய், ஜீரணக் கோளாறு, சீதபேதி தொல்லை ஆகியவற்றால் அவதியுறுவோர் அவரைக்காயினை அன்றாடம் உண்டுவர இவற்றிலிருந்து விடுபடலாம். பிஞ்சு அவரை பத்திய உணவாக பயன்படுத்தப்படுகிறது.

இலை சாறு நெடுநாள் ரணத்தை குறைக்கும். ஆயுர்வேதத்தில் நெய்யுடன் வயிற்றுப் போக்கிற்கான மருந்துகளில் பயன்படுத்து கின்றனர்.

எந்தக் கட்டியானாலும் அதற்கு அவரை இலை சாற்றை பஞ்சில் நனைத்து அதன் மேல் ஒட்டவைத்து, காய, காய சாற்றைவிட்டு நனைத்துக்கொண்டேயிருந்தால் இரண்டு நாட்களில் கட்டி உடைந்து புண் ஆறிவிடும்.

வயதானவர்களுக்கு மிகவும் ஏற்றது இது. நீரிழிவுக்காரர்கள் பிஞ்சை தினமும் கூட்டுக்கறி செய்து உணவோடு சேர்த்துக் கொண்டால் நீரிழிவு விரைவிற் குறையும். அவரைக்காய் உடல் கனத்தைக் குறைக்கும். நீர்க்கோவையை நீக்கும். வாய்துர்நாற்றத்தை நீக்கும். அவரைக்காயினை அன்றாடம் உண்டுவந்தால், ஆண்மையைப் பெருக்கும். எலும்புகளையும் வலுப்படுத்தும்.

குழந்தைகளுக்கு வயிற்றுவலி நீங்க அவரைப் பிஞ்சை மைபோல் அரைத்து விளக்கெண்ணையில் இழைத்து தொப்புளைச் சுற்றி தடவவேண்டும்.

* * *

## அவரை

**(கோழி அவரை)**

## Dolichos gladiatis

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Twiner*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Proteins*

*Action* : *Restorative, Diuretic, Antidote and Anti-rheumatic.*

Uses : This contains good quality of copper. This is very effective in venerial diseases. If taken regularly; it gives relief to stomachache and paralysis.

தாமிரசத்து நிறைந்தது. மேகநோய் தணிக்கும். தொடர்ந்து உட்கொள்வதால் வயிற்றுவலி, வயிற்றுக்கட்டி, பக்கவாதம் ஆகியவற்றைப் போக்கும்.

* * *

## அவரை

### (கொத்தவரை)

## Cyamopsis tetragonaloba

### (N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Pods, seeds and foliage*

*Constituents* : *Rich in proteins*

*Action* : *Bilious, Rheumatic, Antidote and Cholagogue.*

Uses : This is an ideal natural diuretic. Cooked kothavarai if taken regularly, causes rheumatism and chest congestion. This should not be taken if the patient is already on any other medicinal therapy, as it has got a very powerful antitoxic property.

கைப்பு, துவர்ப்புச் சுவையுடையது. சிறுநீர்ப் பெருக்கியான இதை சமைத்து சாப்பிட்டால் பித்தம், கபம், வாதக்கடுப்பு, ஆகியவை உண்டாகும். பித்தத்தால் சீதமகற்றுவதால் மருந்தை முறிக்கும்.

* * *

## அவுரி

### (நீலி அவுரி)

## Indigofera tinctoria

### (N. O. Papilionaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Plant and expressed juice (Indigo)*

*Constituents :* *The oxidized product of the juice contains chiefly indigotin or Indigo-blue*

*Action :* *Stimulant, Antiperiodic, Analgesic, Germicide Alexipharmic and Antidote.*

Uses : It is the ideal drug for the intestinal disorders. It has got anti-venan property and it is also used in Leucorrhoea.

The seeds are herbal contraceptive, anti-rabis, anti-epileptic. This could be given for stomachache also.

The leaves are used to treat arthritis, gout, snake bite. This darkens the hair and improves the night blindness.

The extract root is used in Dracunculous medinesis. It has got a strong anti-toxic property. It is also given to relieve venerial heat and ulcer.

Tablets made out of Avry leaf with equal quantity of root bark, pepper and asafotida, if consumed twice a day for three to five days, it cures Dracunculous medinesis.

Indigo is made out of Avri leaves and it is been exported to foreign countries.

வயிற்றில் தோன்றும் எந்த பிணிக்கும் இது நல்ல மருந்து. விஷக்கடி, மூர்ச்சை, வெள்ளை விழுதல் போன்றவற்றை நல்ல முறையில் குணமாக்கும். விதை கர்ப்பத்தடை செய்யும். நாய்க் கடியை குணப்படுத்தும். காக்கை வலிப்பு, வயிற்றுவலி குணமாகும்.

இலை கீல்வாதம், ஜன்னி, சர்பவிஷம் நீக்கும். தலை முடியைக் கருக்கச் செய்யும். மாலைக்கண் குணப்படும்.

வேர் நரம்புச் சிலந்தியைக் குணப்படுத்தும். வேர் எல்லா விஷங்களையும் முறிக்கும். இதை குடிநீர் வைத்துக் குடிக்க சுரமூச்சை, குன்மநோய் முதலிய நோய்களைப் போக்கும்.

அவுரி இலை, வேர்ப்பட்டை மிளகு, பெருங்காயம் ஆகியவை களை சமஎடை எடுத்து நன்றாக அரைத்து சிறு மாத்திரைகளாக செய்து நாள் ஒன்றுக்கு காலை ஒன்று மாலை ஒன்றாக 3 முதல் 5 நாள் கொடுத்து, உப்பில்லா பத்தியம் வைக்க நரம்புச் சிலந்தி குணமாகும்.

இதையே ஈரமாயிருக்கையில் நரம்புச் சிலந்தி தோன்றிய விடத்து வைத்துக் கட்டலாம்.

அவுரியிலிருந்து நீலச்சாயம் தயாரிக்கிறார்கள். இது கட்டிகளாக்கப்பட்டு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றது.

* * *

## அழவணம்
### (மருதோன்றி)

## Lawsonia alba
### (N. O. Lythraceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves, bark, flowers and seeds*

*Constituents* : *Leaves yield a colouring matter. Seeds yield a fragrant otto or oil. The whole plant contains glucoside.*

*Action* : *Bark is Alterative, Sedative and Astringen.- Leaves are Astringent, Detergent and Deodot rant. Flowers are Refrigerant and Soporific. Root bark is Astringent.*

Uses : Juice of the plant with sweet oil is an application to the head in headaches and "Siddha physicians prepare a specific thailam (oil) for grey hair." Fresh leaves beaten into a paste with vinegar or lime-juice are applied as a poultice to the soles of the feet to cure the troublesome affection "burning of the feet." Leaves or the herb ground into a soft paste wlth water are also similarly applied with benefit in cases of rheumatism. Leaves and seeds are useful in menorrhagia, vaginal discharges and leucorrhoea.

Infusion of the flowers or of seeds cure headache and is a good application to bruises.

This paste also give colour to the nails and prevents from being affected by the diseases. It is used in treatment of skin diseases, and herpes flower is mixed with cocoanut oil is used as hair oil.

மருதோன்றிப் பூ வாசனை மிக்கது. இதன் சாரத்தால் இரும்பை செம்பாக்கலாம். உடல் உஷ்ணம் குறையும். நல்ல

உறக்கம் வரும். தலைவலி உற்ற இடத்தில் நன்றாகப் பூசி ஒத்தடம் கொடுத்தால் குணம் தெரியும்.

அம்மை போட்டக் காலத்தில் கண்களுக்கு அம்மையால் யாதொரு தீங்கும் நேரிடாமல் பாதுகாக்க இலையை அரைத்து இரு பாதங்கள் அடியில் வைத்துக் கட்டலாம்.

இலையை அரைத்து நகங்களுக்குத் தடவ நகம் சிவப்பதுடன் யாதொரு நோய்க்கும் உட்படாமல் பாதுகாக்கப்படும். இலையை நீராகாரத்தில் ஒரு இரவு ஊறவைத்து மறுநாட் காலையில் இறுத்து 20 நாள் வரையில் உட்கொள்ள மேகச் சொறி, படைகள் நீங்கும்.

மருதோன்றிப் பூவை தேங்காய் எண்ணெயில் கலந்து காய்ச்சி தைலமாக்கி தலைக்குப் பயன்படுத்தலாம்.

* * *

## அழவணம்
### (சீமை அழவணம்)

## Peganum harmala
### (N. O. Rutaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Seeds and Leaves*

*Constituents* : *Seeds yields. Leaf juice contains vitamin 'C' Seeds yield a red dye which contains a narcotic odour resembling that of Cannabis Indica; also it contains harmalol, harmoline, harmine and harmol.*

*Action* : *Leaf juice is Sudorific, Emmenagogue, Anthelmintic and the seed are Narcotic, Alterative, Lactogogue, Anodyne and Hypnotic.*

Uses : Powdered seeds are used as anthelmintic against tapeworms. The red dye is extracted from the seeds. This is used in the leather industry and also used in cosmetics The decoction of the seeds is given in amenorrhoea. It increases the flow of milk and menses.

இதனை பெரும்பாலும் சாயம் வடிக்கவே பயன்படுத்துவர். இதன் சாயம் தோல் பதனிடுதலிலும், பட்டுத் தொழிலிலும், அழகு சாதனப் பொருட்களிலும் பயனாகிறது.

மருத்துவத்தில் முதுகுத் தண்டு விலிக்கும், ஆஸ்துமாவுக்கும், ஹிஸ்டிரியாவுக்கும், கல்லடைப்புக்கும் இது பயனாகிறது. இதன் எண்ணெய் வலி நீக்கியாகும். இதன் விதையின் குடிநீர் அருந்துவதால் பால் சுரப்பதுடன் மாதவிடாயின் பொழுது இரத்தப் போக்கை அதிகப்படுத்துகிறது.

* * *

## அழிஞ்சில்

**(அங்குகாலம், அங்கோலம்)**

## Alangium decapetalum

**(N. O. Cornaceae)**

*Habit* : *Tree*
*Parts used* : *Leaves, Root-bark*

*Constituents* : *It contains alangine, lamarkine, Alkoline and Alanginine.*

*Action* : *Alterative, Diuretic, Anthelmentic, Emetic, Laxative, Nauseant, Nutritive and Diaphoretic.*

Uses : Root bark is an anti-dote for several poisons. Rubbed in rice water it is given with a little honey in diarrhoea. It has a reputation in leprosy, syphilitic and other skin diseases. Root in infusion is given with ghee for dog bites and snake bites. It increases the bile secretion and decreases the blood-pressure.

அழிஞ்சில் பட்டை சாரத்தினால் இலிங்கம் சுத்தியாகும். சீழ் வரும் குஷ்டம், வாத கோபம், கபதோஷம் தீரும். பித்தம் அதிகரிக்கும். இரத்த கொழுப்புத் தணியும். பாம்புக் கடி, நாட்பட்ட விஷம் நீக்கும். பெருங்குடலில் உள்ள புழு பூச்சியை வெளியாக்கும். கண் பார்வை சரியாக இதனின்று மை தயாரிக்கலாம்.

* * *

## அழிஞ்சில்
### (ஏறழிஞ்சில்)

## Alangium Hexapetalum
### (N. O. Cornaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Root, root-bark, seeds and leaves*

*Constituents* : *Alangine, Alkoline and Alnginin*

*Action* : *Alterative, Diuretic, Laxative, Anthelmintic, and Nutritive.*

Uses: Fruit is useful in burning of the body consumption and haemorrhages. Sterile plants are known as "Thalapul." Medicinal uses are similar to Alangium lamarckii.

அழிஞ்சிலின் வகைகளில் இது ஒரு வகை. இக்கனிச் சுவரிலுள்ள இனிப்பும் புளித்துவர்ப்பும் கொண்ட கோழைப் பொருளால் கால் வலிகளுக்கு பற்றிட வலி குறையும்.

அக்காலத்தில் இம்மரத்தின் இலைத் தண்டுகளைப் பயன் படுத்தி மனோர் வசியம், இந்திர ஜாலம் போன்ற சித்துகளுக்குப் பயன்படுத்தினார்கள்.

காய்க்காத இம்மரத்தை ''தாலப்புல்'' என்றும் இளங்கோவடிகள் சொல்கிறார். இம்மரத்தின் மருத்துவ குணம் பெரும்பாலும் அங்கோல மரத்தின் குணத்தைப் போன்றதேயாகும்.

* * *

## அருகம்புல்

## Cynodon dactylon
### (N. O. Gramineae)

*Habit* : *Perennial grass*

*Parts used* : *Herb, root-stalk and Leaves*

*Action* : *Astringent, Alterative, Styptic, Diuretic, Emollient, Stomachic and Referigent*

Uses : The root or tuber is given in torpid lever. The paste made from the root and turmeric is used as an external application for skin ailments.

Juice is a valuable styptic and stops bleeding. Infusion of the grass with pepper is an antidote.

அருகம்புல்லினை இடித்து, பிழிந்த சாற்றை கண்ணுக்கு பிழிய கண்ணோய் நீங்கும். காயம் பட்ட இடத்தில் பூச இரத்தம் விழுதல் நிற்கும்.

அருகம்புல்லுடன் சிறிது மஞ்சள் சேர்த்தரைத்துத் தடவி வர, சொறி சிரங்கு, படர்தாமரை, கிருமி, ரோகம் நீங்கும். இதன் வேரைக் கொண்டு செய்யும் தைலம் தூர்வைத் தைலம் எனப்படும். இது தலைக்கு குளிர்ச்சியைத் தரவல்லது.

அருகம்புல்லுடன் மிளகு கூட்டி கஷாயம் செய்துண்ண பாஷாணங்களால் உண்டான வேக்காடு தணியும்.

மாதம் ஒரு முறையாவது இக்கஷாயத்தை சாப்பிட பல நோய்களைத் தவிர்க்கலாம்.

அருகல்புல்லின் வேரையும், இலையையும் நன்கு அரைத்து பசும் பாலில் கலந்து அருந்தி வந்தால் இரத்த மூலநோய் நிச்சயமாக அகலும். வேருடன் மிளகு, ஜீரகம், அதிமதுரம், சித்தரத்தை, மாதுளம்பூ சேர்த்து கஷாயமாக்கி சாப்பிட வெட்டை நோய், விஷக்கடி போன்றவை விலகும்.

* * *

## அறுவதா

Ruta graveolens

**See : Sadhappu**

**பார்க்க : சதாப்பு**

* * *

## அங்காரவல்லி

Strobilanthes auriculatus

**See : Kurinji**

**பார்க்க ; குறிஞ்சி**

* * *

## அங்கனி

Aloe perfoliate

**See : Kathazhai**

பார்க்க : கத்தாழை

* * *

## அட்டசரம்

Adathoda vasika

**See : Adathoda**

பார்க்க : ஆடாதொடா

* * *

## அதிதாரம்

Zizyphus jujuba

**See : Illandhai**

பார்க்க : இலந்தை

* * *

## அதிபதிசங்

Celestrus paniculatus

**See : Valuzhuvai**

பார்க்க : வாலுழுவை

* * *

## அடாசனி

Oxalis corniculata

**See : Puliyarai**

பார்க்க : புளியாரை

* * *

## அச்சுமரம்

Indigofera enncaphylla

**See : Nerunjil**

பார்க்க : நெருஞ்சில்

* * *

## அடுகானம்

## Musa sapientum

**See : Vazhai**

**பார்க்க : வாழை**

* * *

## ஆகாய கக்கரிக்காய்

## Cucumis utilissimus

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Fruit*

*Action* : *Stimulent, Aphrodisiac, Vermifuge, Anti-bilious and Anti-dote*

Uses : Seeds are diuretic and useful in promoting the passage of sand and gravel (ie) seperation of urine.

The fruit is sweet, referigerant and beneficial in strangury and hematesis.

பந்தலில் காய்க்கின்ற கக்கரிக்காயை ஆகாயக் கக்கரிக்காய் என்று சொல்லுவது வழக்கம். இதனால் தேகச்சூடு, கரப்பான், பித்ததோடம், மருந்தின் வீரியம், பித்தவாந்தி ஆகியவை நீங்கும். ஆனால் கபாதிக்கமும் புணர்ச்சியில் இச்சையும் உண்டாகும்.

வெயிலினால் உண்டாகும் தலைவலிக்கு இந்தக் காயை வெட்டித் தலையில் வைத்துக் கட்டினால் தலைவலி குறைந்து விடும்.

* * *

## ஆகாய கருடன்

## Bryonia epigoea

**See : Karudankizhangu**

**பார்க்க : கருடன் கிழங்கு**

* * *

## ஆகாய வல்லி

## Cassytha filiformis

**See : Kothan**

**பார்க்க : கொத்தான்**

* * *

# ஆடாதொடை

## Adhatoda vasika

### (N. O. Acanthaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves, Roots, Flowers and barks.*

*Constituents* : *A Volatile essential oil, fat resin, a bitter non-Volatile, alkaloid called Vasicine, an organic acid "Adathodic acid." The antiseptic properties of the leaves is due to the Volatile Principle·*

*Action* : *Expectorant, Diuretic, Anti-spasmodic and Alterative.*

Uses : Fresh juice of leaves with honey or with ginger juice or a decoction of the leaves and root with pepper in doses of half to one ounce, is an excellent cough mixture useful in chronic bronchitis, asthma and phthisis. In consumption it reliefs the irritable cough by its soothing action on the nerves and by liquifying the sputum.

This is one of the ingredients in anti-cough preperations. The equal quantity of cleaned root and leaf extract can be used in asthma. One of the ingredients in anti–cough preparations the vasicine alkaloid can be taken from root and leaf of adhatoda. Some people will inhale the smoke of leaf of adhatoda for the relief of asthma.

இத்தாவரத்தை ஆடுகள் தீண்டாததால் ஆடுதொடா இலை எனப்பெயர் வந்து ஆடாதோடை என மருவியதாக சொல்லப் படுகிறது. இது இருமல் மருந்துகளில் பெரிதும் பயனாகும் ஒரு செடியாகும். மார்பில் இருக்கும் கபத்தை வெளிக் கொண்டு வருவதில் தென் அமெரிக்க காட்டுத்தாவரமான இபிகாகுவானாவுக்கு ஈடானது ஆடுதொடா இலைச்செடி. இலையையும் வேரையும் சமபங்குகள் எடுத்து சுத்தம் பார்த்து இடித்து கஷாயமாக்கி அருந்தினால் மார்புச்சளி வெளியாகி விடும். கபமிளக்கும் மருந்துகளை ஆக்கத் தேவையான Vasicine போன்ற ஆல்கலா யிடுகள் ஆடுதொடா இலையிலிருந்தும் வேரிலிருந்துமே பெறப் படுகின்றன.

வெகுசிலர் இவ்விலைத்தூளை சிகரெட் போல சுருட்டி புகைக்கவும் செய்கின்றனர். இப்படி செய்வது ஆஸ்த்துமாவை கட்டுப்படுத்துகிறது. பொதுவாக சளியை இளக்கி வெளியேற்ற மாற்று பின்விளைவுகளை ஏற்படுத்தாத தாவரம் ஆடுதொடா இலைச் செடியாகும் தொண்டைக்கும், குரலுக்கும் இனிமையைக் கொடுக்கும். இதைப்பற்றி சித்தவைத்திய நூலில் ''ஆடா தொடைக்கு பாடாத நாவும் பாடும்'' என்று சொல்லியிருக்கிறார்கள்.

* * *

## ஆடுதீண்ட பாளை

### Aristalochia bracteata

**(N. O. Aristolochiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Herb, seeds and leaves and "Almost every part of the plant"*

*Constituents* : *A volatile substance, an alkaloid and salts*

*Action* : *Anthelmintic, Purgative, Emmenogogue, Stimu-lant, Alterative, Anti-periodic and Tonic.*

Uses : This is a stimulant for the secretions of semen The boiled solutions of the equal quantity of gingelly oil and extract of full plant, if taken in empty stomach in the morning gives relief from psoriasis. This is very effective in diabetes and snake bite.

தாது புஷ்டியும், சுக்கில விருத்தியும் உண்டாக்கும். இதன் முழுச் செடியையும் இடித்துச் சாறு பிழிந்து சம அளவு நல்லெண்ணெய் கூட்டி காய்ச்சி காலையில் வெறும் வயிற்றில் ஒரு தேக்கரண்டியளவு சாப்பிட கருமேகம், கரப்பான் ஒழியும். பாம்புக் கடியையும், நீரிழிவு நோய் போன்றவையும் கட்டுப்படும்.

* * *

# ஆடையொட்டிப் பூண்டு

## Triumfeta rhomboidea

### (N. O. Tiliaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Fruits, bark, flowers and Leaves*

*Action* : *Astringent, Diuretic, Mucilagenous and Demulcent*

Uses : Bark and fresh leaves are used for diarrhoea, also flowers rubbed with sugar and water are given ingonorrhoea to stop the burning caused by urine.

This can be used in Rhuematism. The extract of its seed will solidify Mercury.

இப்பூண்டினத்தில் இரு வகையுண்டு. ஒன்றில் சுனை இருக்கும். ஆடையில் ஒட்டும் தன்மை உடையதால் ஆடையொட்டிப் பூண்டு எனப்பட்டது. இது தென்னிந்தியாவுக்கே உரிய மூலிகை இனம் ஆகும். மாந்திரீயத்தில் இதனை வசிய மூலிகையாகப் பயன்படுத்துவார்கள். இதன் காயிலிருந்து கிடைக்கும் சாற்றால் பாதரசத்தைக் கட்டலாம்.

* * *

# ஆணைக் கற்றாழை

### (N. O. Amarylli daceae)

**See : Agave americana**

**கற்றாழை வகைகளைப் பார்க்கவும்**

* * *

## ஆனைக் குன்றிமணி

## Adenanthera pavonia

**(N. O. Leguminosae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, Leaves, Root and bark*

*Action* : *Antirheumatic, Aphrodisiac, Diuretic & Har mostatic Seeds are Deobstinant. Roots are Emetic.*

Uses : Powdered seeds externally applied for boils, inflammations etc.

The leaf of this herb is very effective in the treatment of Arthritis, gout haematuria. Its root is used as emetic.

இது ஓர் மரம். இதன் இலை வாதநோய், கீல்பிடிப்பு, சிறுநீரில் இரத்தம் வருதல் போன்ற நோய்களை குணமாக்கும். விதைகளை அரைத்து கட்டினால் கட்டி, வீக்கம் கரையும். இதன் வேர் வாந்தியாக்கும்.

* * *

## ஆனை புளியமரம்

## Adansonia digitata

**(N. O. Malvaceaece)**

*Habit* : *Tree*

*Parts used* : *Pulp of the fruit, bark and leaves.*

*Constituents* : *Pulp contains phlobaphenes, mucilage and gum. Pericarp contains phlobaphene, albuminoids and carbonate of potash and soda. Leaves contain wax, gum and albuminoids.*

*Action* : *Fruit is refrigerant and diuretic. Seed and its pulp are Astringent, Demulcent, Stomachic and Antiscorbutic. Pulp is Aperient and Demulcent. Bark is used as Antiperiodic.*

Uses . Pulp of the fruit is useful in bilious dyspepsia. The decoction of root bark will control dysentry and

this can be used as an antipyretic. The unripe fruit of this tree can be useful in keeping the dead bodies for a long period.

இம்மரத்தின் வேர்பட்டையினின்று இறக்கப்படும் கஷாயம், சீதபேதியையும் உடற்சூட்டையும் தணிக்கும். உடல்நலங் கெடுங்காலத்தில் வாய் கசந்து பித்தம் அதிகரித்த நிலையில் உண்டாகும் புளியேப்பத்தைத் தடுக்கும்.

பண்டைக் காலத்தில்இறந்தவர்களை அழுகிப் போகாமல் நெடுநாள் வைத்திருக்க இதன் காயை பயன்படுத்தினார்கள். காடுகளில் விளையும் இம்மரத்தின் பட்டை கொய்னாவுக்கு சமமாகும்.

* * *

## ஆணை வணங்கி

**See : Heliotropium indicum**

**பார்க்க: தேள் கொடுக்கி**

* * *

## ஆதளை

**See : Jatropha glandulifera**

**பார்க்க : ஆமணக்கு**

* * *

## ஆதண்டை

**(ஆதண்டம் — ஆதொண்டை)**

## Capparis zeylanica

**(N. O. Capparidaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Fruit*

*Constituents* : *Fruit contains Vitamins.*

*Action* : *Sedative, Stomachic, Astringent and Antihydriatic.*

Uses : The unripe fruit of Adhandai is very effective in the treatment of Rheumatalgia, Cyshalgia and also in throat infection.

கொடியோடும் மூலிகையினம். ஆதண்டை என்று வழக்குப் பெயராகக் கூறுவர். இது காய்கறியாகவும் பயனாகிறது. மண்டைக் குடைச்சலும் வாதத்தின் பீனிசமும் போகும். தொண்டைச் சளி, பீனிசம் முதலியவைகள் போகும்.

இதன் சாறும் நல்லெண்ணெயும் கலந்து தைலம் காய்ச்சி வாரத்துக்கிருமுறை ஸ்நானஞ் செய்ய மேற்படி நோய்கள் போகும்.

இதன் மலரை அருகம்புல் வேருடன் சேர்த்து இடித்து சூரணம் செய்து தினம் ஒரு சிட்டிகை அளவு எடுத்து பசுவின் நெய்யோடு சாப்பிட மிகக் கடுமையான மூலநோயும் அகன்றுவிடும்.

* * *

## ஆமணக்கு

## Ricinus communis

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Middle sized tree*

*Parts used* : *Oil, leaves, roots and seeds.*

*Constituents* : *Seeds contain fixed oil.*

*Action* : *Oil is Non-purgative; when it reaches the duodenum it is decomposed by the pancreatic juice.*

Uses : Castor oil is used as refrigerant. This oil is laxative. This is very effective in colic pains, ulcer and also in the treatment of irritation of eye, nose, ear and mouth.

The cooked mixture of leaves and red gram (Cajanus indicus) is an effective galactogogue. The mixture of equal quantities of sugar and root is very effective in veneral inflammation. It cures muscular rheumatism, paralysis, asthms and cough.

Leaves warmed over a fire and applied to the breasts of woman acts as a galactagogue. Leaves applied to the abdomen promote menstrual discharge.

ஆமணக்கு இந்தியாவின் எல்லா பாகங்களிலும் எண்ணெய்க் காகப் பயிர்ச் செய்யப்படுகின்றது. விதையும், எண்ணையும் ஏற்றுமதி பொருளாக உள்ளன. இதில் சிறிய இனமும் (சிற்றா மணக்கு—Ricinus inermis) பெரிய இனமுமாகப் (பேராமணக்கு—Ricinus inermis) பல வகையுண்டு. இவற்றில் செவ்வாமணக்கு (Ricinus-tanarius) என்ற ஒரு வகையுமுண்டு.

பழங்காலத்தில் இதன் எண்ணெய் விளக்கெரிப்பதற்காக பயன்பட்டதால் விளக்கெண்ணெய் என்றும் இதற்குப் பெயர் உண்டு. இந்த எண்ணெய் உடம்பிற்கு குளிர்ச்சியைக் கொடுக்கக் கூடியது.

விளக்கெண்ணெய்யோடு ஆளிவிதை மாவை கலந்து சிறிது சூடு செய்து உடம்பில் தோன்றும் கட்டிகளுக்குப் போட அவை உடைந்து ஆறும்.

ஆமணக்கெண்ணைய் மலமிளக்குவதால் இதை மலமிளக்கி யாகவும் பயன்படுத்துவர். தவிர கோரவாதம், குன்மம், குடலேற்றம், உடல், கண், மூக்கு, காது, வாய், ஆகியவற்றில் உண்டாகும் எரிச்சலையும் குணமாக்கும்.

ஆமணக்கின் இலையை சிறிதாக அரிந்து துவரம் பருப்பு சேர்த்து கீரையாக உபயோகிப்பதாலும் இலையை வதக்கி மார்பில் கட்டுவதாலும் தாய்ப்பால் சுரக்கும்.

இதன் வேரைத் தூள் செய்து சம எடை சர்க்கரைக் கலந்து பதினைந்து முதல் முப்பது க்ரெயின் அளவு காலை மாலை வேளை களில் சாப்பிட்டு வருவதால் உடலிலுள்ள மேகவலிகள் குறைந்து மூளை பலப்படும்.

* * *

## ஆமணக்கு
### (காட்டாமணக்கு)

## Jatropha curcas
### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, juice, leaves and oil.*

*Constituents* : *Seeds contain fixed oil. Oil contains jatrophic acid.*

*Action* : *Seeds are Acro-narcotic. Oil from the seeds is Purgative, internally and externally it is Depurative and Antiseptic. Leaves are Lactogogue locally.*

Uses : Seeds yield a pale yellow oil which is used as purgative and refrigerant. Externally it is an ideal remedy for itch, herpes and eczema; also it is a cleansing application for wounds sores and ulcers.

ஆமணக்கின் எண்ணெய், இலை, வேர், முதலானவற்றின் குணங்களே இதற்கும் பொருந்தும். விசேஷமாக இதன் இலை, பால், விதை, எண்ணெய் முதலானவைகள் வாதவலி, பல்வலி, வெள்ளை வெட்டை, கொருக்கு, கட்டி முதலான வியாதிகளில் பயனாகும்.

* * *

## ஆமணக்கு

### (எலி ஆமணக்கு)

## Jatropha mulsifida

### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds and Leaves*

*Constituents* : *Fatty oil and bitter substance*

*Action* : *Purgative and Anti-herpetic*

Uses : Its seeds are too powerful purgative and emetic. Lime juice and stimulants are the best antidotes in cases of poisoning by the seeds.

ஆமணக்கின் எல்லா குணங்களும் இதற்குப் பொருந்தும். சிறப்பாக இதன்பால் மட்டும் விரை வீக்கம், கரப்பான் போன்ற நோய்களில் பயனாகிறது.

இதன் எண்ணெய் மற்ற ஆமணக்கின் எண்ணெயைக் காட்டிலும் பேதியை அதிகமாக்கும். இதை அதிகம் சாப்பிடுவதால்

பேதி அதிகமாகும். இதை நிறுத்த எலுமிச்சம் பழச்சாறு கொடுக்க வேண்டும்.

* * *

## ஆயபனை

## Eupatorium ayapana

### (N. O. Compositae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Whole herb including dried leaves, flowering tops and twigs.*

*Coustituents* : *An essential volatile oil and neutral crystalline, principle Ayapanin.*

*Action* : *Dried leaves, flowering tops and twigs are Tonic, Expectorant, Diaphoretic and Anti-periodic.*

Uses : Dried leaves, flowering tops and twigs are used in the form of infusion as a bitter tonic, expectorant, diaphoretic and antiperiodic. Ayapanin is extracted from the herb.

இது ஒரு குத்துச் செடி. இதன் சாரத்தினின்று ''அயபானின்'' என்கிற நுண்சத்து பிரித்தெடுக்கப்படுகிறது. இருமல், சளி, உடல் வீக்கம் போன்ற உபாதைகளின் போது இம்மருந்தை பயன்படுத்தி மருந்துகள் செய்கிறார்கள்.

* * *

## ஆரஞ்சுப் பழம்

## Citrus aurantium

### (N. O. Rutaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Rind, flowers and fruits.*

*Constituents* : *Rind of the fruit contains the volatile oil, a fixed oil, Aurantiamarin and gum resin. Flowers and rind also contain a volatile oil. Fruits are rich in vitamin C.*

*Action* : *Flowers, Anti-spasmodic and Anodyne. Rind of the fresh fruit is Astringent, Stomachic and Auromatic.*

Uses : Orange is the safest of the acid fruits. It is a blood purifier and appetiser. Juice is valuable in Bilious affections and stops Bilious diarrhoea. For children suffering from anemia nervous debility, rickets etc., fresh expressed grape juice and orange juice make an excellent tonic. Oil obtained from the rind and flowers forms an excellent stimulating lininent, useful in gout, rhuematism etc.

ஆரஞ்சு பலவிதமான தட்பவெப்ப நிலைகளிலும் பயிராகும். இது உடலில் குளிர்ச்சியை உண்டாக்கும். மேலும் பசியைத் தூண்டும். இனிப்பு ஆரஞ்சுபழம் தாகம், வாந்தி, சுரம், அரோசகம், இளைப்பு ஆகியவைகளை நிறுத்தும். இரத்தத்தை சுத்தம் செய்யும்.

இந்தப் பழம் நோய்வாய்ப்பட்டவர்களுக்கு மிகவும் இன்றியமையாதது. சிறு குழந்தைகளுக்கு, தாய்ப்பாலுடன் இதன் பழரசத்தை சேர்த்துக் கலந்துக் கொடுத்து வந்தால் வயிற்றுக் கோளாறுகளை நிறுத்தும்.

ஆரஞ்சு பழச்சாற்றுடன், திராட்சைப் பழரசம் சமபாகம் கலந்து தினமும் காலை, மாலை இருவேளைக் கொடுத்து வந்தால் சோகை, உட்சூடு, மாந்தம் போன்ற நோய்கள் நீங்கி உடல் வலிவுப் பெறும்.

பழத்தோலிலிருந்து எடுக்கப்பட்ட எண்ணெயை மூட்டுவலி, வாதக் குடைச்சல், ஆகியவற்றிற்கு தடவினால் உடனே நிவாரணம் கிடைக்கும்.

* * *

## ஆரைக்கீரை

**(நீர் ஆரைக்கீரை)**

## Marsilea Quadrifolia

**(N. O. Marsileaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Rich in Vitamins.*

*Action* : *Diuretic, Refrigerant, Tonic and Aphrodisiac.*

Uses : This tastes sweets. This controls the blood sugar and urine sugar. If takes along with food this controls diabetes, bile disorders. Infusion of dried leaves with milk and sugar candy, if taken twice daily, can give excellant results in controlling blood in urine (haematuria).

இக்கீரை ஆடி, ஆவணி முதல் கார்த்திகை, மார்கழி வரையில் தன்னிச்சையாகவே நீரோடைகளின் இருமருங்கிலும் வளரும். ஆரைக்கீரை சத்து மிகுந்தக் கீரை. இது இனிப்பு ருசியையுடையது. வாரம் ஒருமுறை குழம்பாக சமைத்துண்ணலாம். பசியை நன்கு உண்டாக்கும். ஆண்மையுணர்வைப் பெருக்கும்.

நீரிழிவு நோயாளிகளின் இரத்தத்தில் சர்க்கரை, சிறுநீரில் சர்க்கரையின் அளவைக் கட்டுப்படுத்தும். அன்றாடம் இக்கீரையை உணவில் உண்டுவர ஆரம்பகால நீரிழிவு நோய், பித்த நோய், இரத்தப்பிரமேகம், ஆகிய நோய்கள் நீங்கும். இக்கீரையை உலர்த்தி எடுத்துக் கொண்டு ஒரு குவளைத் தண்ணீருடன் 35 கிராம் உலர்ந்த இலையைப் போட்டுக் காய்ச்சி அரைக் குவளையாக்கி அதில் காய்ச்சிய பசும்பாலுடன் சிறிது பனங்கற்கண்டு சேர்த்து காலையும் மாலையும் குடிக்க மேக உஷ்ணத்தால் சிறுநீரில் இரத்தம் போதல், அதிக தாகம் ஆகியவைகளை நீக்கி உடலுக்குக் குளிர்ச்சியைத் தரும். மேலும் சுக்கிலம் பலப்படும்.

* * *

## ஆலமரம்

### Ficus Bengalensis

**(N. O. Urticaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Milky juice and bark.*

*Constituents* : *Bark and young buds contain tannin Wax and caoutchouc.*

*Action* : *Bark is Tonic, Alterative and Demulcent. Milky juice is Aphro disiac,Demulcent and Refrigerant. Root is Astringent.*

• Uses : Milky juice and seeds are useful as external application for pain and bruises, sores and ulcers. An infusion of the bark has specific properties in reducing blood sugars in diabetes, dysentry and diarrhoea. Tender ends of the hanging roots can be given for obstinate vomiting. Slender twigs of the tree is good for brushing tooth and strengthens gums and teeths.

பழங்களிலிருந்தும், விதைகளிலிருந்தும் எடுக்கப்பட்டச் சாறு எல்லாவிதமான தோல் நோய்களுக்கும் பயன்படுத்தப் படுகின்றது. இதன் விழுதைக் கொண்டு பல் துலக்க, பற்கள் கெட்டிப்படும். அவ்விழுதிலுள்ள முனைகளைக் கடித்து, மென்றுச் சாப்பிட வாய்புண் ஆறும். ஆலம் விழுது என்னக் காரணத்தால் வாந்தி ஏற்பட்டாலும் தடுத்து நிறுத்தும். இதனைக் கஷாயமாகச் செய்துச் சாப்பிட வேண்டும். மற்றும் விளாமிச்சை, நாவல் இலை ஆகியவையும் சேர்த்து குடிநீராக்கிக் கொடுத்தால் குழந்தைகளின் பலவிதமான குடல் கோளாறுகளை நீக்கும்.

விழுதின் முனைகளைக் கஷாயம் செய்துச் சாப்பிட சீதபேதியும் வயிற்றுப் போக்கும் கட்டுப்படும்.

* * *

## ஆல்பகோடா

## Prunus Communis

### (N. O. Rosaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits*

*Constituents* : *Fruits contains malic-acid, citric acid, sugar albuminoids and pectin.*

*Action* : *It is Demulcent, Laxative and Nutrient.*

Uses : Fruit is largely consumed by the rich in various forms of chutney. It acts also as a refrigent, laxative, especially when taken on empty stomach. It is useful in cases of torpid and hepatitis. Oil prepared from the seeds resembles apricot-kernal oil and is edible.

ஆல்பகோடா பழம் சற்று புளிப்பான பழம். ஆல்பகோடா மரம் சிறியது. இதன் பழம் நல்ல மருந்து. இது உடற்சூட்டைத் தணித்து மலத்தை இளக்குகிறது. புளிப்புச் சுவையுள்ள இது காய்ச்சல் காரணமாக நாக்கு சுவையிழந்து விடும்போது சுவையை மீட்க உதவும்.

பித்தக் கோளாறுகளை இது சமனப்படுத்தும். பித்தநீரை பேதியாக வெளியாக்கும்.

* * *

## ஆவாரம்
### (ஆவாரை)

## Cassia auriculata

### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Root, Leaves, Flowers, Bark and Seeds*

*Constituents* : *Bark contains tannin*

*Action* : *Flower, Leaf and Bark are Tonic and Astringent, Seeds are Referigerant and Attenuant. Root in Decoction is used as Alterative.*

Uses : Seeds are powdered and blown into the eyes or the powder mixed with coconut or gingelly oil is applied to the sore eyes. "Seeds are also used in diabetes and chyluria" The plant is used in the form of powder mixed with honey or the decoction' especially of flower buds, is adminis tered in chylous urine and diabetes for excellant results. Leaves are used as a substitute for tea.

Flowers are used as pessries by women to check excessive menstrual flow. Infusion of bark is used for enema, as a substitute for tannic acid, or oak galls, Compound syrup is prescribed for nocturnal emissions.

ஆவாரம் பூவை சமைத்துச் சாப்பிடலாம். இது நரம்புகளையும், உடல் தாதுக்களையும் சுருக்கி உதிரம், சீழ் முதலியவற்றை நிறுத்தும். உடலுக்கு பலம் அளிக்கும். மேகநீர், வறட்சி, உடம்பில்

உப்புப்பூத்தல், கற்றாழை நாற்றம் ஆகியவையும் நீங்கும். உடம்பும் பொற்சாயலைப் பெறும்.

இதனுடைய பட்டை கஷாயம் சாப்பிட சருமத்திற்கு ஒளி தரும். நீரிழிவுத் தீரும். இதன் பூவைக் கூட்டுச் செய்துச் சாப்பிட மூத்திர சம்பந்தமான நோய்கள் குணமாகும். வெள்ளை வெட்டைத் தீரும். குளிர்ச்சியைத் தரும்.

ஆவாரை இலை துவர்ப்புச் சுவையுடையது. சீதம் இதனுடைய வீரியம். இந்த மூலிகை சிறுநீரில் உள்ள சர்க்கரையைக் குறைக்கும். மற்றும் ஆண்குறி எரிச்சல், வெள்ளை, உட்சூடு, அதிதாகம் போன்ற பிணிகளை அகற்றும்.

* * *

## ஆவாரை

**(நிலாவாரை, நிலவாகை)**

## Cassia angustifolia

**(N. O. Caesalpiniaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Pods and Dried leaves.*

*Constituents* : *Pods and Leaves contain Cathartin.*

*Action* : *Cathartic, Anthelmintic, Purgative and Diuretic.*

Uses : Leaves are bitter and cause nausea. The purgative properties of senna are well known and it is the most commonly employed of all cathartics. It is apt to gripe and cause nausea. It should not be prescribed in cases of fever nor during pregnancy nor in the existence of piles. Decoction of the leaves is very effective in cases of dyspepsia flatulency, fissure of the anus, constipation.

It gives good results for phelgmatic and bilous complaints; removes impurities through motions, eliminates the burnt or dead useless matter from the system, bringing bad accumulation of fluid in the cerebral region checks asthma and moderates hard breathing.

Senna is a safe and efficient purgative well adapted for childhood. Powdered leaves mixed with vinegar and made

into a plaster are applied locally in certain skin diseases. Senna leaves combined with Henna are used as a hair-dye to make the hair black.

இது ஆவாரை இனத்தைச் சேர்ந்தது. இதைப்போலவே சூரத்து நிலாவாரை (Cassia acutifolia-Alexandrian senna), சீமை நிலாவாரை போன்ற வகைகளுமுள்ளன. எல்லா ஆவாரை வகைகளிலும் திருநெல்வேலி ஆவாரை தான் சிறந்தது.

இதன் இலை கசப்பும், வெகுட்டலும் உள்ளது. ஆதலால் இது சுரத்தால் பீடிக்கப்பட்டக் காலத்திலும், கர்ப்பிணியாயிருக்கும் காலத்திலும் உதவாது. இலையைக் கஷாயம் வைத்துக்கொடுக்க குன்மம், வயிற்றுப்புசம், ஆசன வெடிப்பு, மலச்சிக்கல் இவைகள் நீங்கும். சூரணம் செய்துச் சாப்பிட கபம், பித்தம், வாதம், இவற்றை பேதிமூலம் கழிக்கும். தீய்ந்து போனச் சத்துக்களை வெளிப்படுத்தும். மூளையில் தங்கியிருக்கும் வாதநீர், பித்த நீரைப் போக்கும்; காசம், அதிமூச்சு, இவைகளைக் கண்டிக்கும். வாயு, கீல்வாயு, பக்கநோய், குலைநோய், உடம்பில் ஆழ்ந்து கிடக்கும் துர்நீர், நரம்பிசிவு, வயிற்றுப்புழு இவைகளைப்போக்கும். இத்துடன் பாதம் நெய் அல்லது ரோஜாப்பூ சேர்த்து உபயோகிக்க மெத்த அனுகூலமாயிருக்கும். அன்றியும் மூலவாயுவுக்கும், சீழ்சிரங்கு களுக்கும் இது சிறந்தது. இதன் இலையைக் கஷாயமிட்டு இத்துடன் காடிச்சேர்த்து சொறி, சிரங்கு, படை இவைகளுக்குப் பூச ஆறும். கூந்தல் உதிரும் இடங்களில் இதைப் பூசிவர உதிராமல் தடுக்கும். இவ்விலையுடன் மருதோன்றி இலையையும் கூட்டி அரைத்து செம்பட்டை அல்லது சிவந்த மயிருக்குப் பூச கருக்கும், இத்துடன் மற்ற கடைச் சரக்குகளையும் சேர்த்துக் கஷாயமாக தேக வாகுக்குத் தக்கபடி பயன்படுத்தலாம்.

* * *

## ஆவாரை
### (பொன் ஆவாரை)

## Cassia occidentalis
### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, seeds and roots.*

*Constituents* : *Seeds contain fatty matters. Leaves contain carthartin.*

*Action* : *Leaves, roots and seeds are Purgative. Seeds are Febrifuge. Root is Dicueretic and Anti-periodic.*

Uses : Seeds are used as a substitute for coffee seeds. Also useful in cough and whooping coughs. Externally the seeds and leaves are applied smeared with grease like sores itch and blisters. Infusion of the root is considered as an anti-dote to various poisons. The decoction of whole plant is used for skin diseases as an application.

A decoction of the leaves, roots and flowers is highly used in hysteria to releave the spasm. A decoction of the powder and seeds is used as laxative and as a mild purgative.

இதன் பூ, தழை, சமூலம், மொக்கு, விதை; இதில் எதைச் சாப்பிட்டாலும் அனேக ஆண்டுகள் நோயின்றி இருக்கலாம். இது ஒரு கர்டப மூலிகை. மலத்தை இளக்கும். இதன் பூ சரும நோய்கள், தடிப்பு, மேகப்படைகள், வெடிப்பு, தினவு முதலிய வற்றை நீக்கும்.

இதில் பெரிய பொன்னாவாரை, சிறிய பொன்னாவாரை என இரண்டு வகையுண்டு. இரண்டின் குணமும் ஒன்றாகும். கண்டு கண்டாக உடலில் தோன்றும் தடிப்பு, சொரிந்தால் சருமத்தூள் சிந்துதல் போன்ற குறைகளை இது நிவர்த்திக்கும்.

வேரிலிருந்து தயாரிக்கப்பட்ட கஷாயம் விசக்கடிகளுக்கு மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## ஆவாரை
### (ஊசித்தகரை)

**See : Cassia tora**

**பார்க்க : ஊசிதகரை**

* * *

# ஆளிவிதை

## Lepidium sativum

### (N. O. Cruciferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds, Leaves, Roots and Flowers.*

*Constituents* : *Seeds contain a volatile essential aromatic oil.*

*Action* : *Seeds are Aperient, Diuretic, Alterative, Tonic, Demulcent, Aphrodisiac, Carminative, Galactagogue and Emmenagogue. Leaves are gently Stimulant and Diuretic.*

Uses : Seeds are useful in hiccup, dysentery, diarrhoea and skin diseases caused by impurity of blood. In the form of decoction of seeds or cold infusion, seeds are recommended for the dispersion of certain chronic enlargements of spleen etc. Emulsion made by soaking or boiling the seeds in water is given as a drink to relieve hiccup. Seeds boiled with milk are administered to cause abortion.

The tonic made by boiling the seeds in milk is used as galactogogue. This is useful also in seminal debelity and leucorrhoea. This plant is used in cases of Asthma, cough with much expectoration and in bleeding piles.

இளைத்த உடலுக்கு பலத்தை உண்டாக்கும். ஆளி விதையை, ஆழிவிரை என்றும் சொல்வதுண்டு. இலையை பச்சடி செய்து சாப்பிட்டால் உடல் வலிமை பெறும். இது நீர்க்கட்டை உடைத்து நீரை வெளியேற்றும். ஆஸ்துமா, இருமல், மூலம் ஆகியவற்றைக் குணப்படுத்தும்.

இளம் தாய்மார்களுக்கு ஆளிவிதைகளை பாலிலிட்டு கொதிக்கவைத்து சிறிது சர்க்கரையுடன் கொடுக்க தாய்ப்பால் அதிகமாகச் சுரக்கும்.

ஆளி விதையினால் ஓக்காளம், அருசி, சோபை, வாதவலி, உடற்கடுப்பு, அஸ்திச் சூடு, நரம்புச் சூலை முதலியவைகள் நீங்கும்.

மேலும் இதன் வேர், பீனிசம், வாதவலி, டீஜவாயு நீக்கும். இதன் வேர், கிரந்தி, சீழ்பிடிப்பிற்கு உதவும்.

* * *

## ஆற்றுத் தும்மட்டி

**See: Citrullus colocynthis**

பார்க்க: தும்மட்டி

* * *

## ஆற்று நெட்டி

### Aeschynomene indica

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Pith*

*Action* : *Anti-rheumatic*

Uses : It is known by different names as River-pith plant, River cork, Sponge wood etd., The decoction of the plant is useful remedy in dropsy. Leaves are used as greens in food.

The pith in useful in commerce in many ways. The soft wood of this has insulating properties and is used for making artificial flowers, swimming jackets etc.

இது கொடி நெட்டி, ஆற்று நெட்டி போன்ற பல பெயர்களில் வழங்கப்படுகிறது. இதன் சமூலத்தை கஷாயமிட்டு பாண்டுவிற்குக் கொடுக்கலாம். இலையைக் கீரையாகப் பயன்படுத்துவருமுண்டு.

இதன் இலைச்சாற்றில் வெள்ளிப் பஸ்பமாகும். வீக்கம், வாதம், வலி ஆகியவற்றிற்குப் பற்றிடக் குணமாகும்.

* * *

## இங்கி மரம்

**(கொடி வேலம்)**

### Caesalpinia coriaria

**(N. O. Caeselpiniaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Pods*

*Constituents* : *Rich in Tannin.*

*Action* : *Pods are Astringent, Antiperiodic, Tonic, Detergent and Vulnerary.*

Uses : Used in intermittent fever.

இது சுரத்தைக் குறைக்க உதவுகிறது. இரத்த மூலத்தைக் குறைக்கிறது. இதனை உட்கொள்வதால் புண்ணாறும், பல் இறுகும். இதனைப் பற்பொடியில் சேர்த்து உபயோகிப்பார்கள். காயிலிருந்து இங்க் தயாரிப்பார்கள்.

* * *

## இசங்கு

**பார்க்க: சங்கம் குப்பி**

**See : Clerodendron inerme**

* * *

## இசப்புக்கோல்

### Plantago ispagula

**(N. O. Plantaginaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Mucilage, fixed fatty oil and Aucubin.*

*Action* : *Seeds are Cooling, Demulcent, Mildly Astringent, Emollient, Laxative and Diuretic.*

Uses : Seeds are used in Catarrh, chronic dysentery, Intestinal fluxes, Diarrhoea, Blenorrhoea, and affections of the bladder, Urethra and kidneys. Also seeds are used in inflammatory and functional de-arrangements of digestive organs and febriel conditions.

In rheumatic and gouty infections in irritable surfaces of the skin, the crushed seeds moistered with water form a good, soothing and emollient poultice.

இதில் பல வகையுள்ளது. இசப்புக்கோல் (Plantago Ispagulla) சிகப்பு இசப்புக் கோல் (Plantago amplexicaul). வெள்ளை இசப்புக் கோல் (Plantago ovata), கருப்பு இசப்புக் கோல் (Plantago psyllium) என்பனவாம்.

இதனுடைய விதையிலிருந்து இறக்கப்பட்டக் கஷாயம், சீதபேதி, இரத்தம் போதல், சிறுநீரகம், சிறு-பெருங்குடல் பகுதிகளில் காணப்படும் ரணம் வீக்கங்களுக்கு குணமளிக்கும். மூத்திர தாரை ரணத்திற்கும் குணமளிக்கும். பாம்புக்கடி விஷத்தை, வெள்ளை இசப்புக்கோல் முறிக்கும். மேலும் மலச்சிக்கலையும் நீக்கும்.

இசப்புக் கோல் விதையின் மேல் தோலிலிருந்து மலச்சிக்கலுக்கான பல மருந்துகள் தயாரிக்கின்றனர். மேலும் இதை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள்.

* * *

## இச்சி
### (குருகு)

## Ficus infectoria
### (N. O. Urticaceae)

*Habit* : *Tree*

*Parts ueds* : *Bark and leaves.*

*Action* : *Astringent, Emolliant, Herpatic and Anti-syphillitic and Curative of Raktadosha and Pralaba.*

Uses : Decoction of the bark is used as a gargle in salivation; as a wash for ulcers and also as an injection in leucorrhoea. As a vegetable the leaves can be eaten for the cure Raktapitta.

இதன் பட்டை குஷ்டம், கிரந்தி, படர் தாமரை, சரும நோய்கள் ஆகியவற்றைக் குணப்படுத்தும். இதைக் கஷாயம் செய்துச் சாப்பிட வேண்டும். இதன் இலையை கீரைப் போன்று சமைத்துச் சாப்பிட இரத்தத்திலுள்ள பித்தம் குறையும். வெள்ளை ஒழுக்கினை குணமாக்கும்.

இதில் பேய் இச்சி (Ficus retusa) என்ற ஒரு வகையுண்டு. இதன் குணங்களும் இச்சியுடன் ஒத்திருக்கும்.

இதன் பட்டைச்சாற்றைக் கொண்டு வாய்க் கொப்பளித்தால் வாய்ப்புண் ஆறும். வாயில் நீர்சுரக்கச் செய்யும்.

* * *

## இஞ்சி

## Zingiber officinale

**(N. O. Scitaminaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome*

*Constituents* : *Contains an aromatic oil. The essential oil and resin, to which ginger owes its pungent flavour.*

*Action* : *Aromatic, Carminative, Stimulant to the gastro-intestinal tract and Stomachic also Sialagogue and Digestive.*

Uses : Ginger is prepared from the dried rhizomes. Ginger is used in dyspepsia, colic, vomiting, and spasms. For biliousness 70 ml of ginger juice mixed well with 250 ml of cows milk and boiled down to half its volume and then a sufficient quantity of sugar candy added to it should be taken in suitable doses at bed-time.

Ginger juice rubbed on and around the naval cure all kinds of diarrhoea. Juice of ginger and onion mixed together and given, relieves nausea, vomiting and retching. In painful affections of the bowels, stomach etc. Infusion of dry ginger is given with the addition of a tablespoonful of castor oil to the does of the infusion.

ஒக்காளம், அதிசாரம், கபம் போகும். இஞ்சி உணவில் வாசனைக்காகவும், காரத்திற்காகவும் பயன்படுகிறது. விஷம் முறிவுக்கு இதைப் பயன்படுத்தலாம். பசியைத் தூண்டும் ஆற்றல் இதற்கு உள்ளது. மேலும் இது உமிழ்நீரைப் பெருக்கும்.

காய கல்ப மருந்துகளில் ஒன்றெனக் கூறப்படும் இஞ்சியை இந்தியாவின் பல இடங்களில் பயிரிடுகின்றனர். இதனை உணவுடன் உட்கொள்ளுவதால் உடலுக்கு உஷ்ணத்தை

அளித்து அகட்டிலுள்ள வாயுவை நீக்கி பசியையும் நல்ல செரிப்பையும் உண்டாக்கும்.

இஞ்சியை உபயோகித்தால் காசம், கபம், வெள்ளோக்காளம், பித்ததோடம், சந்நிபாதசுரம், வாதாதிசுரம், வாதசூலை, வாதகோபம் ஆகிய பிணிகள் நீங்கும், பசி உண்டாகும்.

இஞ்சியை வாயில் மென்று உமிழ்நீரைத் துப்பினால் தொண்டைப்புண், குரல் கம்மல் ஆகியவை குணமாகும். இஞ்சிச் சாறும், வெங்காயச் சாறும் வகைக்கு ஒரு கிராம் வீதம் எடுத்துக் கலந்து கொடுத்தால் வாந்தி நிற்கும். அஜீரணத்திற்கு இஞ்சிச் சாற்றைத் தொப்புளைச் சுற்றித் தடவலாம். இஞ்சிச் சாற்றில் கற்கண்டு போட்டுக் குடித்தால் நீரிழிவு நோய் குணமாகும்.

இஞ்சியை வெல்லப்பாகு அல்லது பழச்சாற்றில் ஊறவைத்து உண்பது உடலுக்கு நலம் பயக்கும். இஞ்சியை கற்கண்டுடன் சேர்த்து உண்பதால் நீரிழிவு நோய் கட்டுப்படும்.

இஞ்சியை சுத்தம் செய்து மேல்தோலை நீக்கி நன்கு வெயிலில் உலர்த்தியதே சுக்கு எனப்படுகிறது. இஞ்சியின் எல்லா குணங்களும் இதற்கும் உண்டு.

சுக்கும் கற்கண்டும் சம அளவு எடுத்து பொடித்து, ஒரு சிட்டிகையை இளநீரில் கலந்து தினம் காலையும் மாலையும் சாப்பிட பாரம் தூக்கியதால், உடல் அதிர்வதால் ஏற்படும் நெஞ்சுவலியை குணப்படுத்தும். சுக்குத்தூளை கரும்புச்சாற்றுடன் கலந்து தினம் காலையில் உட்கொள்ளுவதால் வயிற்றெரிச்சல் நீங்கும்.

சுத்தம் செய்யப்பட்ட 1 கிலோ இஞ்சியை மெல்லிய துண்டுகளாக நறுக்கி, லேசாக இடித்து அத்துடன் 250 மி. லி. சுத்தமான தேனைக் கலந்து ஒருவாரம் வரை ஊறவிட வேண்டும். இத்துண்டுகளை காலை இரண்டு, மாலை இரண்டு என சாப்பிட்டுவர பித்தவியாதிகளை அணுகாமல் பார்த்துக் கொள்ளலாம்.

காலையில் வெறும் வயிற்றில் சிறிய இஞ்சித்துண்டையும், பகலில் மிகச்சிறிய சுக்குத் துண்டு ஒன்றையும், இரவில் கடுக்காய் துண்டு சிறிதளவும் வாரத்தில் இரண்டு தடவை சாப்பிட்டு வந்தால் மலச்சிக்கல் இருக்காது.

சிறிதளவு சுக்குத் தூளுடன் சரியான அளவில் கரைப்பான்களைக் (Solvents) கலந்து இதன் நுண் சத்துக்களான Ginger oil, Oleo resin, Ginger starch முதலியவற்றைப் பிரித்தெடுக்கலாம்.

இவைகள் உணவுகளில் மணத்துக்காகவும், ரொட்டி தயாரிக்கவும் மருந்து வகைகள் தயாரிக்கவும் பயன்படுகிறது.

* * *

## மாங்காய் இஞ்சி

## Curcuma amada

### (N. O. Scitaminaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome*

*Constituents* : *Essential oil, resin and Aromatic Organic acids.*

*Action* : *Carminative, Cooling, Aromatic, Stomachic and Astringent.*

Uses : Fresh root is used as a perfume. It is similiar to ginger, also could be used medicinally when fresh and dry. They are useful in prurigo. Tubers rubbed with the leaf-juice of ceasalpinia bonduc is given for worms. Rhizomes are used as an external application for bruises and skin diseases. It is also combined with other medicines and used for improving the quality of blood.

மாங்காய் போன்று மணம் வீசுவதால் இதனை மாங்காய் இஞ்சி என்று கூறுவர். இது சமையலில் வாசனை பொருளாகவும் பயன்படுகிறது. இதில் ஊறுகாய் தயாரிப்பார்கள். இஞ்சியைப் போன்றே மருத்துவகுணம் உடையது. இதனை கழற்சிக்காயுடன் இழைத்து வயிற்றுப்பூச்சிகளுக்குக் கொடுக்க உடன் நீங்கும்.

மேலும் இக்கிழங்கை அரைத்து நெடுநாள் ரணங்களுக்கும், கொப்புளங்களுக்கும், மற்ற தோல் வியாதிகளுக்கும் தடவ விரைவில் குணமாகும்.

இதை உட்கொள்வதால் வாத பித்தம் தணியும்.

* * *

## இஞ்சி

**மலை இஞ்சி, சீமை கிச்சலிக்கிழங்கு**

## Hedychium spicatum

**(N. O. Scitaminaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome*

*Constituents* : *Acid Resin and Fixed oil.*

*Action* : *Tuber has Camphoraceous smell which is Stomachic, Carminative, Stimulant and Tonic.*

Uses : Root-stalks are employed as stomachic, carminative, bitter tonic, and stimulant useful in dyspepsia. It promotes the growth of hair.

இது வாத பித்த நோய்களுக்கு நல்லது. மேலும் நாசி அடைப்பு நோய்கள் குணப்படும். முடி வளர் தைலங்களிலும் முடி வளர்க்கும் மருந்துகளிலும் இது பயன்படுகிறது.

* * *

## இண்டு

**(வெள்ளை இண்டு, கரு இண்டு)**

## Mimosa spinosiliqua, M.rubicaulis

**(N. O. Mimosaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Herb*

*Action* : *Diuretic, Carminative, Emmenagogue, Hydriatic, and Vulnerary.*

Uses : This is an ideal anti-rheumatic, analgesic herb used for all types of painful condition. The extract of this herb is mixed with castor-oil and boiled well and made a paste as an applicant in all painfull conditions in children. This also could be used for psoriasis throat infection fever, paralysis and burns.

சகல வாதங்களையும் அறுக்கும். பீனிசத்தைப் போக்கும். தலையில் நீரேற்றம், மண்டைக் குடைச்சல், வாதங்கள், மூட்டு வாதங்கள் அறுமென்க. இதன் சாற்றை விளக்கெண்ணையில் விட்டுக் காய்ச்சி குழந்தைகளுக்கு மேற்படி ரோகங்களுக்குக் கொடுக்கலாம். மேலும் சிலேட்டும வாந்தி, கரப்பான், குரல் கம்மல், சீதசுரம், சந்திக வாதம், தீப்புண் ஆகியவற்றைக் குணமாக்கும்.

* * *

## இண்டு
### (புலித்தடுக்கி)

## Caesalpinia Sepiaria

### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Whole plant*

*Action* : *Diuretic, Carminative, Emmenagogue, Hydriati- and Vulnerary.*

Uses : The extract of this shrubs is used for gynacoe logical disorders as a uterine corrector-also used to curc migrane.

சூதகவாய்வு மற்றும் சூதகத் தடையை நீக்கி சரிப்படுத்தும். கபால குடைச்சலை நீக்கும். தீப்புண்ணை ஆற்றும்.

குழந்தைகளுக்கு ஏற்படும் சுழிக்கணைக்கு, இண்டு இலைச் சாறு 2 அவுன்ஸ், பொடுதலைச் சாறு 2 அவுன்ஸ், செம்முள்ளிச் சாறு 2 அவுன்ஸ், சங்கனிலைச் சாறு 2 அவுன்ஸ், நூணாயிலைச் சாறு 2 அவுன்ஸ், வெள்ளைப் பூண்டுச் சாறு 2 அவுன்ஸ் சேர்த்து வடிகட்டி அத்துடன் 4 அவுன்ஸ் பசு நெய்யைச் சேர்த்து நல்ல மணம் வரும்வரை காய்ச்சி பின் வடிகட்டி ஒரு தேக்கரண்டி அளவு தினம் இருமுறை கொடுக்கலாம்,

* * *

## இத்தி
(இத்திரி - இறலி)

## Ficus talboti
**(N. O. Urticaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark and unripe fruit.*

*Action* : *Herpetic, Bitter, Laxative, Cooling, Anthelmintic, Demulcent. Fruits are Antiromatic.*

Uses : This belongs to the family of banian tree. The seeds are bitter in taste. This is generally consumed along with ghee. The tender seeds are used in the medicine to treat intestinal ulcer, dysmenarrhoea, rheumatism leprosy, obesity.

இத்தி ஆல் வகுப்பைச் சேர்ந்தது. இதனை சுவி என்றும் சொல்வதுண்டு. துவர்ப்புச் சுவையுடையது. இதனை நெய்விட்டு வெதுப்பிச் சாப்பிடுவது வழக்கம். இதன் பிஞ்சை அரைத்துச் சாப்பிட்டால் அதிசாரம், பெரும்பாடு, ஆகியவை நீங்கும். குஷ்ட நோய், வெள்ளை போதல், ஊளைச் சரீரம் முதலான நோய்களுக்கு ஆக்கப்படும் மருந்துகளில் இது துணை மருந்தாக செயல்படுகிறது.

* * *

## இம்புரா வேர்
(இம்பூரல் சாய வேர்)

## Hedyotis umbellata
**(N. O. Ribiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root, leaves*

*Constituents* : *Alkalloids*

*Action* : *Expectorant, Styptic, Cholagogue, Alterative Antiperiodic and Febrifuge.*

Uses : Leaves in dry powder made into cakes with flour are used in asthma and phthisis. Decoction of the root and leaves is used as a wash for poisonous bites.

This is a small medicinal plant used as a medicine in all types of coughs. The ash of this plant is used in skin ailments as anti-pruritic. This is an ideal plant to relieve Phlem. This is also used in abdominal spasam and distension. This also cures chronic malaria.

இது ஒரு சிறிய கொடி. இதனைக் கொண்டு அனைத்து ரக இருமலுக்கான மருந்துகளையும் தயாரிக்கிறார்கள். இதனை எரித்துச் சாம்பலை சொறி சிரங்குகளுக்கு மருந்தாக உபயோகிக் கலாம்.

கபத்தை அகற்றுவதில் இச்செடிக்கு நிகரானச் செடி எதுவுமில்லை. வயிற்றிரைச்சல், சீதபேதி போன்றவற்றிற்கும் இது நல்லது. நீண்ட நாட்களாக இருக்கும் மலேரியா நீங்கும்.

* * *

## இயூக்கலிப்ட்டஸ்

### Eucalyptus globulus

**(N. O. Myrtaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Dry leaves, gum and oil distilled from the fresh leaves.*

*Constituents* : *Leaves contain Volatile Oil.*

*Action* : *Leaves are Febrifuge, Carminative, Stimulant, Analgesic, Antiphilogestic and Expectorant. Eucalyptus oil is powerfully Antiseptic and Disinfectant. Eucalyptus increases the flow of saliva, gastric and intestinal juices and thus increases appetite and digestion.*

Uses : Fresh leaves are externally applied as a local application to small wounds. The fluid extract is a strong disinfectant. So this could be used as application to ulcers with offensive discharges of all kinds. This is also an

antiseptic could be used as gorgle in foetid breath, spongy and bleeding gums. Large quantity of eucalyptus is used as an aromatic agent in soaps and also in seperating mineral sulphides for their ores. The essential oil, dyes perfumes and kinos are all very useful. The volatile oil of eucalyptus is proved to have strong anti-malarial properties.

If taken internally in small quantity it improves intestinal secretion and increases apitite and digestion. it is also used in the treatment of catarrhas states of the brancho-pulmunary mucous membrane, septic fewer, diptheria, wooping cough, catarrhal affections of genetio: urinary organs.

யூகலிப்டஸ் இலைத்தழைகள் மேற்பூச்சு மருந்துகளில் பயனாகும். இதனை நாட்டு வழக்கில் தண்ணீருடன் கொதிக்க வைத்து தைலம் இறக்குவார்கள் இத்தைலம் பெரும்பாலும் தலைவலி தைலங்கள் தயாரிப்பில் ஒரு கூட்டுப் பொருளாகப் பயன்படுகிறது. இத்தைலத்தில் இருந்து தனிக் கருப்பொருளையும் தற்போது பிரித்தெடுக்கிறார்கள். இது அல்சர் மருந்தாக பயன் படுகிறது. இத்தைலத்தை பல்லில் இரத்தம் வருதலுக்கும், தொண்டை அழற்சிக்கும் வாய் கொப்பளிப்பதன் மூலம் மருந் தாகப் பாவிக்கலாம்.

தவிர சோப்பு தொழிலிலும், நச்சுத் தன்மையை அகற்றும் கிருமி நாசினிகளிலும் இத்தைலம் பெருமளவில் பயனாகிறது. இத்தைலம் மலேரியா காய்ச்சலில் பெரும்பங்கு வகித்து நோயின் வீரியத்தை குறைக்கிறது,

* * *

## இரத்தபோளம்

### (மூசாம்பரம்)

### Aloe littoralis

### (N. O. Liliaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Aloin, resin and a volatile oil.*

*Action* : *Laxative, Tonic and Emmenagogue.*

Uses : It is a cosmetic herb and also laxative tonic useful in diseases of the spleen. The decoction of the root is prescribed as a febrifuge. Tender leaves mixed with the powder of carium seeds and sugar candy are an excellant remedy in dysentry characterised by bloody stools. Juice of the leaves mixed with little opium and applied to the forehead relieves headache-pulp of the leaves well washed in cold water is prescribed as a refrigerant medicine in canjactivitis, with a small quantity of sugar candy, the same pulp purified with the addition of little burnt alum is considered a valuable appli -cation in the case of ophthalmia. Freshly expressed juice is a external applicant for local inflamations. Mixed with butter it is applied to ulcers to relieve the burning sensation. Tuber grind into paste with turmeric powder added is applied to inflammed or diseased breasts.

கத்தாழையின் ஒரு வகையிலிருந்து கிடைக்கும். சாற்றிலிருந்து இது தயாரிக்கப்படுகிறது. கைப்புச் சுவையுடைய இது அடிபட்டு, ரத்தம் கட்டி மிகவும் வலியுற்ற இடத்தில் இதை உரைத்துப் போட, கட்டி கரைந்து வலியை நீக்கும்.

தவிர வாயு பிடிப்பு, மலபந்தவாயு, வயிற்றுமுறுக்கு முதலியவை நீக்கும்.

* * *

# இருவாட்சி

## Jasminum sambac

### (N. O. Oleaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Flowers, Root and leaves.*

*Constituents* : *A Volatile Oil*

*Action* : *Lactifuge*

Uses : This is another jasminus spicies. Flower yield a fragrant essential oil. It is used as a deodrant infoul smelling ear and nose diseases. Root, Leaves and Flowers are used as galactogogues, therefore used as lactifuge. Leaves if boiled in oil exude a balsam which is used for anointing the head in eye-

complaints and also to strengthen the vision. It is also used as a remedy in case of insanity.

மல்லி வகைகளில் இதுவும் ஒன்று. இதன் பூ மணமிக்கது. இதிலிருந்து கிடைக்கும் எண்ணையிலிருந்து வாசனாதி திரவங்கள் செய்யப்படுகின்றன. இதன் பூக்களை மார்பகங்களில் கட்டி பால் சுரப்பதை தடுப்பர். கண் பற்றிய நோய்களில் இதன் சமூலம் பயனாகிறது. இதன் பயன் கருதி உடல்பூச்சு தைலங்களில் இதை கலந்து பாவிப்பார்கள்.

* * *

## இருவி

## Dryopteris felix

### (N. o. Polypodiaceae)

*Habit* : *Fern*

*Parts used* : *Rhizome*

*Constituents* : *Filicin*

*Action* : *Vermifuge*

Uses : It is used as vermifuge.

வயிற்றுப்புழு, நாடாப் புழு ஆகியவற்றை வெளியேற்றும். ஆதலால் இது எல்லா வயிற்று சம்பந்தமான மருந்துகளிலும் சேர்க்கப்படுகிறது.

* * *

## இரேவல் சின்னி

### (மஞ்சட் சீன கிழங்கு, பேதிக் கிழங்கு நாட்டு இரவேல் சின்னி)

## Rheum emodi

### (N. O. Polygonaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome*

*Constituents* : *Root contains Chrysophanic acid.*

*Action* : *Purgative, Cathartic and Anti-rheumatic, Stomachic, Bitter and tonic.*

Uses : It is used in simple Diarrhoea, But not in constipation. Combined with ginger it is given in the form of pill in cases where the bowls are sluggish. Mixed with grey powder it is given for the irritation of the bowls in chronic dysentry and in deudanal catarrah.

இது மஞ்சட் சீன கிழங்கு, பேதிகிழங்கு, மஞ்சட்கிழங்கு எனவும் கூறப்படுகிறது. இதில் நாட்டு இரவேல் சின்னி என்ற ஒரு வகையுண்டு. இரண்டின் குணங்களும் ஒன்றே ஆகும். இதை பேதியாவதற்குக் கொடுப்பார்கள். மூல நோயுள்ளவர்கள் இதனை உட்கொள்ளக் கூடாது. மேலும் இதனை உட்கொள்வதால் குடல் சுத்தியாகும். வீரிய விருத்தித்தரும். வாதம் தணியும்.

* * *

## இலந்தை

### Zizyphus jujuba

**(N. O. Rhamnaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits, bark*

*Constituents* : *Rich in Vitamins and Calcium*

*Aciton* : *Astringent, Emollient, Appetizer, Styptic and Pectoral.*

Uses : It is used as laxative, Stomachic, and Expectorant. Fruit is good for checking bilious complaints and improving digestion. The dried powder of the fruit is called borkut. Fruit purifies blood and assists digestion. Bark is astringent and used in diarrhoea, in the from of powder or decoction.

Juice of the root bark is used as a purgative and externally in gout and rheumatism.

Tender leaves and twigs are useda as an application to boils abscesses and carbuncles.

இலந்தை விலைக்குறைவான பழவகைகளுள் ஒன்றாகும். இதில் காட்டு இலந்தை (Z. rugosa) என்ற ஒரு வகையுமுண்டு. இலந்தைப் பழத்தை சைனா பேரீச்சை, சீமை இலந்தை எனவும் கூறுவர். இலந்தைப் பழத்தில் வைட்டமின் 'C' யும், உடலுக்குத் தேவையான எல்லா உலோகச் சத்துக்களும் உள்ளன.

இலந்தைப் பழத்தை பகல் ஆகாரத்திற்குப் பின்பு உட்கொள்வதால் உணவு ஜீரணமாவதுடன், பித்தமும், கபமும் சாந்தப்படும். மேலும் அதிகளவு உண்பவர்களுக்கு மறுநாள் மலம் இளகலாகப் போகும். இப்பழத்தின் சதையுடன் உப்பு மிளகாய் தூள் சேர்த்து அடைதட்டிச் சாப்பிடுவதினால் பித்த மூர்ச்சை அரோசகம், அக்கினி, மந்தம், வாந்தி, வலிவாதம், முதலியவை நிவர்த்தியாகும்.

இலந்தை மரவேரினால் அயர்ச்சி நீங்கும்.

இலந்தைப் பட்டையை இடித்துத் தூள் செய்து அந்தத் தூளை ரணங்களின் மீது தூவிக் கட்டுப்போட, நாள் பட்ட ரணங்கள் ஆறும். பட்டையைக் கஷாயமாக்கி வாத நோயாளிகளைக் குடிக்கச் செய்தால் வாதத் தொடர்பாகத் தோன்றிய பலத் தொல்லைகள் நீங்கும்.

இதன் இலைக் கொழுந்துக்கு சீழ்மூலம், இரத்த அதிசாரம், தேக எரிச்சல், வயிற்றுக் கடுப்பு, பித்தமேகம் ஆகியவற்றைக் நிவர்த்தியாக்கும் குணமுண்டு.

* * *

## இலவங்கம்

### Eugenia coryophyllum

**(N. O. Myrtaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, Leaves, and Flower buds.*

*Constituents* : *A heavy volatile oil and a camphor resin.*

*Action* : *Antispasmodic, Carminative, Stomachic, Stimulant and Aromatic. Externally oil is an Anti-septic. Local Anesthetic and Rubefacient.*

Uses : Cloves are generally used as spice. Medicinally they are used to correct griping caused by purgatives. It is also

used to relieve flatulence, various forms of gastric irritability, colic, dyspepsia, and to increase the flow of saliva. Lavengathi churnam, made of cloves, dry ginger, black pepper and fried borax taken in equal measure is useful in bronchitis. Cloves heated over flame and kept in the mouth, juice swallowed improves the breath and relieves sore-throat also strengthen the gums.

இலவங்கம் சம்பாரப் பொருட்களில் ஒன்று. இது கிராம்பு, அஞ்சுகம், சோகம், திரளி, வாராங்கம் என்ற வேறு பெயர்களாலும் வழங்கப்படுகின்றது. சுவையும், மணமும் தரும் இதை ஊறுகாய், பற்பொடி, வாசனை புகையிலை ஆகியவற்றில் சேர்க்கிறார்கள். ஜாவாவில் இதை சிகரெட்டிலும் பயன்படுத்துகின்றனர்.

இது பசியைத் தூண்டி, உடலைத் தேற்றி வாயுவை அகற்றக் கூடியது. இசிவையும் துடிப்பையும் தடுத்து வாந்தியை நீக்க வல்லது. செடியின் மலராத மொக்குகளைப் பறித்து உலர்த்தியதே இலவங்கம் எனப்படும். மருந்து குணம் காக்க இதை லேகியம், சூரணம் க்ருத வகைகள் ஆகிய எல்லாவற்றிலும் சேர்க்கிறார்கள். இலவங்கத்துடன் தண்ணீர் சேர்த்து கொதிக்க வைத்து பின்னர் வடிகட்டி இலவங்க எண்ணெய் எடுக்கப்படுகிறது. இந்த எண்ணெயானது பல்வலிக்கும், தோல்வியாதிக்கும் நல்லபலன் தருகிறது.

வயிற்றில் வளரும் சிசுவின் தோல் சம்பந்தமான வியாதிக்கு மருந்தாகவும் பயன்படுகிறது. இலவங்கத்தை நீர்விட்டு அரைத்து. நெற்றியிலும், மூக்கின் மீதும் இட்டால் தலைபாரம், நீரேற்றம் குணமாகும். இதை அனலில் வதக்கி வாயிலிட்டுச் சுவைத்தால் தொண்டைப்புண் ஆறும். பற்களின் ஈறு கெட்டிப்படும். இதை தேனிலிழைத்து உட்கொள்பவரின் உடலுக்குண்டாகின்ற முக்குற்ற நோய் நீங்கும். இது புண்ணில் சீழ்ப்பிடிப்பதை தடுக்கும். கைகால் நடுக்கத்தை அகற்றும்.

* * *

# இலவங்கப்பட்டை

## Cinnamomum cassia

### (N. O. Lauraceae)

*Habit* : *Tree*
*Parts used* : *Dried inner bark of the shoots and essential oil.*

*Constituents* : *A volatile oil, cinnamic acid, resin and tannika.*

*Action* : *Bark is Stimulant, Carminatiue, Astringent, Aphrodisiac, Aromatic, Antiseptic, Stomachic, Germicide, Haemostatic, and Anti-spasmodic.*

Uses : This spice is the bark of young shoots. The bark is used in the from of infusion, decoction, and powder,

Oil is used in bow complaints such as dyspepsia flextulency, diarrhoea and vomiting. It is employed as an purgatives and astringents in bitter tonics. As a stimulant of the uterine muscular fibre it is used in uterine tonics. The essential oil is used in flavouring sweets and as a powerful stimulant in a menorrhoea. The bark chewed relieves nausea and vomiting. It is used internally as germicide in typhoid fever and as an antiseptic in gonorrhoea.

இது இலையுதிராத மரம். இலவங்கப்பட்டை, காரமும், இனிப்பும் உடையது. பலவித விஷம், வாதம், சுவாச காசம் நீக்கும். சுக்கில நஷ்டத்தை சரிப்படுத்தும். கர்ப்பபையை சுருக்க, இதனை கஷாயம் வைத்து சாப்பிடுவார்கள். பெரும்பாடு நிற்க இத்துடன் ஆவாரம் பட்டையைச் சேர்த்து கஷாயம் வைத்துச் சாப்பிடுவார்கள்.

இருமல், உள்மூலப்புண் ஆகியவற்றைப் போக்கி உடலுக்குக் குளிர்ச்சி உண்டாக்கும் ஆற்றல் இலவங்கப் பட்டைக்கு உண்டு. பட்டையை இடித்துக் கடல் நீரில் ஊறவைத்து மெதுவாக்கிய பிறகு முழுவதையும் விரைவாக வாலை வடித்து இதிலிருந்து எண்ணெயைப் பிரிப்பார்கள். இந்த எண்ணெயின் மணம் கருதி சாக்லேட்டுகள், மதுவகைகள், வாசனை பொருட்கள், முதலியவற்றில் பயன்படுத்துகிறார்கள்.

* * *

## இலவங்கப்பத்திரி

### Cinnamomum iners

**(N. O. Lauraceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and Bark*

*Constituents :* *Essential oil*

*Action :* *Bark is Carminative, Stomachic and Expectorant Leaves are Stimulant, Carminative and Stomachic.*

Uses : Leaves are used in scorpion-sting. The compound powder with other carminative preparations, is given in fevers, flatulence, dyspepsia and urinary diseases. Leaves are largely used as a condiment.

ஒரு வகை இலவங்கப்பட்டைச் செடியின் இலைக்கு இலவங்கப் பத்திரி என்று பெயர். இலவங்கப் பத்திரி வெப்பம் உண்டாக்கும். ஆகவே இது உஷ்ணக்காரி (Stimulant). இது அகட்டுவாய்வகற்றுவதால் உதரவாத ஹரகாரி (Carminative) என்றும், பசியைத் தூண்டுவதால் ஜடாக்னிவர்த்தகி (Stomachic) என்றும் வியர்வையைப் பெருக்குவதால் ஸ்வேதகாரி (Diaphoretic) என்றும் கூறப்படுகிறது.

மேகசுரம், சீதளம், வெட்டை, சுவாசம், காசம் தாதுநட்டம், அருசி, இவைகளைப் போக்கும் ஆற்றல் இலவங்கப் பத்திரிக்கு உண்டு.

* * *

## இலவம்

## Eriodendron anfractuosum
## or
## Bombax Pentandru

**(N. O. Bombacaceae)**

*Habit :* *Tree*

*Parts used :* *Gum, unripe fruits, seeds, flowers, roots and leaves*

*Constituents :* *Seeds contain oil*

*Action :* *Juice has Tonic, Alterative, Astringent, Aphrodisiac and Laxative properties. Dried flowers are Demulcent. Roots are Stimulant and*

*Tonic effect. Unripe fruits are regarded as Demulcent and Astringent.*

Uses : Gum is useful as a styptic. Powder is given with milk as a good tonic for impotence and to children as a cooling laxative. Dried flowers are boiled with poppy seeds, goat's milk and sugar. It is given three times a day in haemorr-hoids. Young roots form a chief ingredient in aphrodisiac medicines. Leaves are ground into paste and administered in treating gonorrhoea.

இதன் இலைகள் கொழகொழப்புத் தன்மையுடையது. பிரசவக் காலத்தில் தாய்மார்களுக்கு இதன் கஷாயத்தைக் கொடுத்து வலிகுறைய வைப்பார்கள். விஷம் குடித்து விட்டவர் களுக்கு அந்த விஷத்தை முறிக்க இதன் பட்டைச்சாற்றை கொடுத்து முறிப்பார்கள். மராட்டி மொக்குக்குப் பதிலாக இதை கடையில் கலந்து விற்பார்கள். இதன் காயிலிருந்துக் கிடைக்கும் பஞ்சு விலை உயர்வுள்ளது. இதன் மருத்துவ பயனைவிட இதன் பஞ்சு உற்பத்திக்காகவே இம்மரத்தினை வளர்க்கிறார்கள்.

இம்மரத்திலிருந்து கிடைக்கும் கோந்து மருந்து சூரணங்களை இறுக்கி குளிகைகளாக்க உதவும்.

* * *

## இலவம்

**(சிகப்பு இலவம், முள் இலவம்)**

## Bombax malabaricum

**(N. O. Malvaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Gum, seed, leaves, capsule, taproot, bark, cotton and flower*

*Constituents* : *Seeds contain a non-drying oil. Gum contains tannic and gallic acid.*

*Action* : *Leaves are Refrigerent and Demulcent. Flowers are Laxative and Diuretic. Seed is Demulcent, Aphrodisiac and Styptic. Gum is Astringent, Demulcent and Haemostatic.*

Uses : Gum is useful in the treatment of diarrhoea, dysentery, menorrhagia and other affections in which astringents like kino and catechu are useful. Leaves ground into paste are applied to skin diseases. Tap root is useful for gonorrhoea and dysentry. Fruits strengthen the genital organs. Bark is used externally in inflammations in the form of a paste.

இது ஒரு சிறந்த மலங்கட்டும் மருந்தாகும். எல்லாவகை பேதிகளையும் இது கட்டுப்படுத்தும். நீர்கட்டை நீக்கும். இரத்தப் போக்கை கட்டுப்படுத்தி இரணத்தை ஆற்றும். மேலும் மூத்திரப்பை இரணத்தை ஆற்றும். இம்மரத்தின் கோந்து சீதபேதியை கட்டுப் படுத்தும், உடல் சூட்டைத் தணிக்கும். பெரும்பாடு, சூதக கோளாறுகளில், முள் இலவத்தின் பூவும், இலையின் சாரமும் பயனாகிறது.

* * *

## இலவம்

### (காட்டு இலவம்)

## Cochlospermum gossypium

### (N. O. Bixineae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves and the gum obtained from the trunk Seeds contain oil*

*Action* : *Gum is Demulcent and Astringent*

Uses : Gum is made into lozenges and musilege. It is useful in cough and scalding in the urine. Mixed with curds it is used in diarrhoea, and dysentery. Young leaves are used to make a cooling wash for the hair.

இருமல் மருந்துகளிலும் பேதி மருந்துகளிலும் சேர்க்கப் படுகிறது. தயிருடன் சேர்த்து இதனை பேதி, சீதபேதி ஆகியவற்றிற்கு மருந்தாக கொடுக்கலாம். வெள்ளை, வெட்டை ஆகிய நோய்க்கான மருந்துகளில் சேர்க்கின்றனர். இலைக் கொழுந்தை அரைத்து தலைமுடியை கழுவ பயன்படுத்துவர்.

* * *

# இலுப்பை
## (ஓமை)

## Bassia longifolia
### (N. O. Sapotaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds and bark*

*Constituents* : *Seeds contain fatty oil called 'bassia oil'*

*Action* : *Bark is Astringent and Emollient. Flowers are Stimulant and Anthelmintic.*

Uses : Seeds are largely employed as a lotion in chronic ulcers, as a gargle in bleeding and spongy gums. Liquid extact in water makes a useful gargle. Fat is used in treating rheumatism by vaidyas. The oil cake in used as cattle food.

இந்தியாவிலும், இலங்கையிலும் பயிராகும், மூலிகை. இம் மருந்தின் பூ இனிப்புச் சுவையுடையது. இக்காய்கள் உலர்ந்ததும் மணிகள் கலகலவென்று ஒலியெழுப்பும். ஆதலால் இவைகளை வைத்து பண்டைய நாளில் யானைக் கூட்டத்தைக் கூடக் கட்டுப்படுத்துவார்கள்.

இப்பூவின் மணம் மயக்கம் தரக்கூடியது. வாதநோய்கள், விஷக்கடி, கரப்பான், பீஜவிக்கம், முதலான மருந்துகளில் இது பிரதான உபசரக்காகப் பயன்படுகிறது.

இப் புண்ணாக்குக் கால் நடைகளுக்குப் பயன்படுகிறது இதன் எண்ணெ எரி எண்ணையாகப் பயன்படுகிறது. இலுப்பை மரத்தின் இலையை சேகரித்து அரைத்து, குளிக்கப் பயன் படுத்தினால் தேமல் சருமநோய்களுக்கு பொது பாதுகாப்பு அளிக்கும்.

* * *

## இலுப்பை
(காட்டு இலுப்பை)

## Bassia latifolia
**(N. O. Sapotaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Flowers, fruit, oil of the seeds, leaves and bark*

*Constituents* : *Seeds contain oil*

*Action* : *Fresh juice of the seeds is Astringent. Flowers when fresh are Cooling, Demulant, Expectorant, Tonic, Nutritive and Stimulant. Bark is Astringent and Tonic.*

Uses : Fruit is edible. The action and properties are similar to bassia longifolia. The kernels yield a concrete oil which is known as 'Illupai ghee' and is useful for application in skin diseases and it relieves pain in chronic rheumatism. The decoction of the bark is a remedy for rheumatic affections, rubbed on the body it cures itch.

பொதுவாக இலுப்பை மரத்தின் இலை, வேர், பட்டைகளுக்கு உள்ள குணங்களே இதற்கும் பொருந்தும். வேறு சிறப்பு இயல்புகள் இதற்கு இல்லை.

இதன் பட்டையிலிருந்து எடுக்கப்பட்ட கஷாயம் வாத நோயினால் உண்டாகும் பல தொல்லைகளை நீக்குகிறது. இதை எரிச்சல் உள்ள இடங்களில் பூச உடன் நீங்கும்.

* * *

## ஈசுவர மூலி
(பெருமருந்து, கருடக்கொடி, சிவமூலி)

## Aristolochia indica
**(N. O. Aristolochiaceae)**

*Habit* : *Twiner*

*Parts used* : *Root, rhizome (stem) and leaves*

*Constituents :* *It contains an aromatic oil, isoranillin, arists linsdure and aristolochiasdure*

*Action :* *It is Stimulant, Emmenagogue, Emetic Abortivum, Antidote.*

Uses : Root is valuable antidote to snake-bite and to bites of poisonous insects, scorpion etc. It is used both externally and internally. Rubbed with honey it is given in white leprosy. Decoction of the root and the rhizome is stimulant, tonic and febrifuge. Root is used for termination of pregnency.

இது மணமிக்கதோர் பூக்கொடி. பாம்பு, பூரான் போன்றவை களின் நஞ்சுக்களுக்கு நல்ல முறிவை ஏற்படுத்தும். இதன் முழுக் கொடியையும் எரித்த சுட்ட சாம்பலை குசும்பா எண்ணெயில் குழைத்து கரப்பான் நோய்க்கு பயன்படுத்தலாம். மற்ற மூலிகைகளை மருந்துக்குப் பயன்படுத்தும் போது பெரு மருந்தின் ஒரு இலையை முன்னதாக அரைத்து சேர்த்துக் கொள்வார்கள். இது மருந்தின் செயல்பாட்டைக் கூட்டும் என சித்த மருத்துவ நூல்கள் கூறுகின்றன.

நீரிழிவு, பித்த ரோகம், நீர்த்தோஷம், நரம்பு தளர்ச்சி போன்ற மருந்துகளில் இது புறமருந்தாக செயல்படுகிறது.

மாட்டு நோய்களுக்கு இதன் கொடியை கழுத்தில் சுற்றி வைத்தால் நல்ல பயனைத் தரும். பாதரசம், லிங்கம் முதலியவை களைக் கட்டும். இதை பெருமருந்தென்றும் அழைப்பர்.

* * *

## ஈச்சன்

**(பேரீச்சன்)**

## Phoenix dactilifera

**(N. O. Palmae)**

*Habit :* *Tree*

*Parts used :* *Fruit and inflorescence*

*Constituents :* *Dates contain valuable salts and iron fruits are highly nutritious.*

*Action* : *Dates are Expectorant, Aphrodisiac, Tonic, Demulcent, Laxative, Diuretic and highly Saccharine.*

Uses : Water in which fresh dates are soaked for a while is a drink given to relieve alcoholic intoxication. Infusion made of fresh dates and milk is a very nourishing drink to children as well as adults. Dried fruits mixed with almonds, spices, pistachia nuts, and sugar forms a nutritious suppliment. It is used as an aphrodisiac and tonic.

Dates are useful in asthma also. The roasted seed powder is used to make a beverage like coffee and is known as date coffee. It relieves bileous affection and is a laxative.

இதன் கள் நரம்பு தளர்ச்சி நோயை உண்டு பண்ணும். பதநீர், மலபந்தம், நீர்தோஷம், பித்தரோகம் முதலியவற்றை நீக்கும். இதன் பழத்தில் விட்டமின் "E" சத்தும், "B" சத்தும் இருப்பதால் புணர்ச்சி சக்தி குறைந்தோர் பாலுடன் இதை உண்டு வரின் புணர்ச்சி சக்தியை கூட்டும்.

உமிழ்நீரைப் பெருக்கும், மதுநீரைப் போக்கும், பசியைத் தூண்டும். பேரீச்சங் குருத்தை புசிக்க குன்மம், வலி போகும். இம்மரத்தின் உச்சியின் நடுவில் கிழங்கைப் போன்ற வெண்குருத்துக் காணப்படும். இது உண்பதற்கு இனிப்பாக இருக்கும். இதனை உண்பதால், குன்மம், வாந்தி வயிற்றுவலி, வயிற்றுப் பொறுமல் ஆகிய நோய்கள் நீங்கும்.

* * *

## ஈச்சன்
### (சிற்றீச்சன்)

## Phoenix sylvestris
### (N. O. Palmae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit and root*

*Constituents* : *Rich in vitamins*

*Action* : *Tonic and Restorative*

Uses : The dates are small less sweet and a good astringent. Spirit made from this fruit is used as an intoxi-cating drink like toddy. Root is used in toothache and nervous debility. Central tender part of the plant is useful in gonorrhoea.

இதன் பழம் கறுப்பாக சிறியதாக இருக்கும். இதை ஊற வைத்து கால்நடைகளுக்கு உணவாகக் கொடுப்பார்கள். மேற் தோலை அரைத்து புற்றுமண் கலந்து புண்களுக்குப் பற்றிடுவார்கள். மரத்தின் உச்சியில் இருக்கும் வெண்குருத்தை வெட்டை நீங்க பயன்படுத்துவார்கள். மேலும் இதன் வேர் பல்வலியையும், நரம்புத் தளர்ச்சியையும் குணப்படுத்தும்.

* * *

## உகரமரம்

See : Delonix regia

பார்க்க : மயில்கொன்றை

* * *

## உசில மரம்

**(கருவாகை, சீக்குரான், கலிலை)**

## Albizzia amara

**(N. O. Mimosaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, flowers and leaves*

*Constituents* : *Saponin*

*Action* : *Seeds are Astringent, Expectorant, Restorative and Resolvent*

Uses : The extract of its leaf is used in the treatment of inflammatory diseases. The powdered bark extract can be used generally as a general tonic. Root bark extract is used in primary complex. Its gum is useful in manufacturing leather garments. This is used also in sexually transmitted diseases.

இதன் இலைச்சாறு படர்தாமரையை குணப்படுத்தும். மேலும் புண், ரணம் மூலம் நோய்களுக்கும் கட்டி வீக்கம் கரைய உதவும்.

இதன் பட்டையிலிருந்து செய்யப்பட்ட சூரணம் உடலுக்கு வலிமை தரும். வேர்ப்பட்டை சூரணம் மாந்தம் நீக்கும்.

பிசின் பித்தமேகத்தை குணப்படுத்தும். இப்பிசினை தோல் பதனிடும் தொழிலில் பயன்படுத்துவர்.

இதனுடைய பட்டையை சூரணம் செய்து சாப்பிட உடல் கல்தூண் போலாகும்.

* * *

# உத்தாமணி

## Daemia extensa

### (N. O. Asclepiadeae)

*Habit* : *Twiner*

*Parts used* : *Leaves, roots and root bark*

*Constituents* : *Leaves and roots contain an alkaloid named Daemine*

*Action* : *The plant is externally Irritant. Flowers and leaves are Emetic, Expectorant, Anthelmintic, Stomachic, Anti-rheumatic, Vermifuge and Vulnerary. Root is Purgative.*

Uses : Decoction of the leaves is given to children as an anthelmintic and is also used in the treatment of asthma and snake bite. The juice combined with lime is applied in rheumatic swellings. The juice of the leaves with ginger is used in rheumatism. This is used in thc calcination of silver. It is used as an anthelmintic, emetic and also to reduce swellings. This can be given to relieve pain. Its leaf extract is used in Iverterate ulcers.

The plant extract is used for urinary infections, menstrual disorders and to facilitate parturition. Administration of its extract stimulates gastric secreation.

இக்கொடியின் இலைக் கஷாயம் குழந்தைகளுக்குக் கொடுத்தால் வயிற்றுப்புழுக்கள் அகன்று விடும். இலைச் சாற்றுடன் சமஅளவு எலுமிச்சம் சாறுக்கலந்து தடவினால் மூட்டு வலி நீங்கும். இதன் இலைச்சாற்றோடு சமஅளவுத் தேன் கலந்துக் கொடுத்தால் நாள்பட்ட வயிற்றுநோய் குணமாகும். மேலும் பெண்களுக்குக் கர்ப்பம் தொடர்பான சூலை நோய் குணமாகும். உத்தாமணி இலையினை அரைத்து விழுதை பிளவை நோய்மீது வைத்துக் கட்ட குணமாகும்.

இவ்விழுதை நகச்சுற்று, கண்டமாலை ஆகியவற்றிற்குப் பற்றுப்போட உடனே குணமாகும். சூதகவாயு, கீல்வாதம் ஆகியவற்றிற்கான எண்ணெயை இதனை கூட்டு சேர்த்து தயாரிக்கிறார்கள். மேலும் இதன் இலைக் கஷாயம் ஆஸ்துமா, வாதநோய், தலைவலி, கால்வீக்கம் முதலியவற்றைக் குணமாக்கும்.

* * *

## உப்பிலாங் கொடி

### Pentatropsis capensis

### (N. O. Asclepiadiaceae)

*Habit* : *Twining herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Cooling, Alterative and Astringent*

Uses : Dry roots are given in decoction as astringent and cooling alterative. It is used in the preparations of gold parpam.

மாந்தத்தினால் அவதியுறும் குழந்தைகள் இடுப்பில் இதை கட்ட மாந்தம் குணமாகும். தங்கத்தூளை இதன் சாற்றினாலரைத்து மூன்று புடமிட நல்ல பற்பமாகும்.

* * *

## உப்புசனகா

### Cressa cretica

**(N. O. Convolvulaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Alkaloid*

*Action* : *Tonic, Expectorant and Antibilious.*

Uses : It has a sour unpleasant taste and is used as Alterative, Stomachic, Tonic and Aphrodisiac.

இது உடலை உரமாக்குவதுடன் தாது விருத்தி செய்யும்.

* * *

## உமரி

**(உமிலி, கொய்யா பிப்பிலி)**

### Salicornia indica

**(N. O. Chenopodiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Emmenagogue, Abortifacient and Anti-rheumatic.*

Uses : The ash is used as emmenagogue and abortifacient. It is useful in scorpion sting.

இது தேள்கடிக்கு சிறந்த மருந்தாகும். வயிற்றுப் புண்ணையும் வாதநோயையும் குணப்படுத்தும். இதன் சாற்றை உட்கொள்ள கர்ப்பம் கலையும். இதன் சாம்பல் புண்ணை ஆற்றும். மேலும் அரிப்பையும் எரிச்சலையும் குறைக்கிறது.

* * *

## உருளைக்கிழங்கு

## Solanum tuberosum

### (N. O. Solanaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome, leaves and skin of the rhizome*

*Constituents* : *Rhizome is rich in starch*

*Action* : *It is Antiscorbutic. It is employed as an Aperient Diuretic, Galactagogue, Nervous, Sedative and Stimulant in gout. Leaf extract is used as an Anti-spasmodic agent.*

Uses : The juice of the leaves is given in the treatment of cough. Potato is consumed as a nourishing food, cooked in various kinds of curries and it is used in the manufacture of starch. Potatoes are rich content of glucose. Potato meal is used as an infant food which contains minerals, albuminoids and vitamns. Baked potatoes with cream is good baby food.

Potato ground into a paste is applied as plaster to burns caused by fire.

உலகின் பல பாகங்களில் முக்கியமான உணவாக பயன்படும் உணவுகளில் ஒன்றாகும். உருளைக்கிழங்கிற்கு அபிசிதமூலம் என்ற ஒரு பெயரும் உண்டு.

இது இனிப்புச் சுவையுடையது. மலத்தை இளக்கும். இளந்தாய்மார்கள் உருளைக்கிழங்கை உட்கொள்வதால் பால் பெருகும். இது மல பந்தத்தை நீக்கும். மூத்திரத்தை அதிகரிக்கும். நரம்புகளுக்கு சிற்றயர்வை உண்டாக்கி மேகவியாதியினருக்கு உற்சாகத்தையுண்டு பண்ணும்.

இதனை தோல்நீக்கி வேகவைத்து நெய்யில் வறுத்துச் சாப்பிட தேகம் நன்றாக உறுதிப்படும். நாட்பட்ட இருமல் நோயால் வருந்தி நித்திரையில்லாமல் இருப்பவர்கள் உருளைக் கிழங்கு இலையின் சாற்றை அருந்தினால் சுகமாக நித்திரை வரும். இக்கிழங்கை பசையாக்கி தீப்புண் மேல் வைத்துக் கட்ட அத் தீப்புண் குணமாகும்.

* * *

## உருத்திர சடை

**See : Ocimum basilicum**

**பார்க்க : திருநீற்று பச்சை**

* * *

## உருத்திராக்கம்

**See : Elaeocarpus ganitrus**

**பார்க்க ; ருத்திராக்ஷம்**

* * *

## உருளரிசி

**See : Coriandrum sativum**

**பார்க்க : தனியா, கொத்தமல்லி**

* * *

## உளுந்து

Phaseolus radiatus

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *It contains albuminoids. starch, minerals and vitamins*

*Action* : *Demulcent, Cooling as well as most Nutritious of all pulses. Also it is Aphrodisiac, Lactogogue and Nervine-tonic. Roots are Narcotic.*

Uses : Green pods are used as a vegetable. The black ripe pulse is split into dhall and is a most fattering food. A clear decoction of it is useful to treat diabetes.

It is employed internally in gastric, catarrh, dysentry, diarrhoea, cystitus, paralysis, piles and rheumatism. The

decoction of this is used in the treatment of liver and nervous diseases. Ordinary cooked dal acts as lactogogue.

உளுந்து இனிப்புச் சுவையுடையது. பயறுகளுள் துவரைக்கு அடுத்த இடத்திலுள்ளது உளுந்து, என்பதுடன் புரத சத்தும் அதிக முள்ளது. இதில் கொழுப்புச் சத்தும் அதிகமாகவுள்ளது. சீதபேதி, பேதி, வயிற்றுவலி, அஜீரண பேதி, மூத்திர சம்பந்தமான நோய்கள், மூலவியாதி, ஈரல் வியாதிகள் முதலிய நோய்களைக் கண்டித்து தாதுவைப் புஷ்டியாக்கும் ஆற்றல் உளுந்துக்கு உண்டு. பெண்களுக் குண்டாகும் கர்ப்பாசய உறுப்புக்களின் நோய்களை இது குணமாக் கும். ஆனால், கபத்தை விருத்தி செய்யும். பித்தத்தைக் குறைக்கும். மந்தத்தை உண்டாக்கும். வாயு அதிகரிக்கும். உளுந்தை மாவாக்கிப் பலகாரம் செய்து சாப்பிட்டால் தாதுக்களுக்குப் பலம் உண்டாகும்.

இளந்தாய்மார்கள் இதை உணவில் சேர்த்துக் கொள்வதால் பால் சுரக்கும்.

* * *

## உளுந்து
### (காட்டு உளுந்து)

## Glycine labialis
### (N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Action* : *Stomachic, Febrifuge and Astringent*

Uses : It is used in nerve diseases, paralysis and rheumatism.

பாரிசவாயு, வாதநோய் ஆகியவற்றில் இதன் எண்ணெய் பயன்படுகிறது. நரம்பு தளர்ச்சியுடையவர்கள் இதை உணவில் சேர்த்துக்கொள்ள உடல் வலிமையடையும்.

* * *

## உண்ணி செடி

## Lantana indica

**(N. O. Verbinaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves*

*Action* : *Parasiticide, Resolvent, Anti-rheumatic, Toxic*

Uses : Leaves are used for snake bite. This can be used in the treatment of rheumatism swelling and boils.

* * *

## உண்ணையங் கொடி

## Argyreia aggregata

**(N. O. Convolvulaceae)**

*Habit* : *Twining herb*

*Parts used* : *Leaves*

*Action* : *Leaves are Antiphlogistic.*

Uses : Leaves made into a paste applied externally in cough and quinsy.

* * *

## ஊசிக்களா

## Berberis asiatica

**(N. O. Berberidaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits, berberis, root, stems*

*Constituents* : *Contains berberine in flai. quantity.*

*Action* : *Stems are Diuretic and Laxative. Root bark is a Tonic and Anti-periodic Root is Anti-periodic, Diuretic and Anti-pyretic.*

Uses: Medicinal uses of this plant are similar to those of B. Aristatel. Fruits are given as a mild laxative to children. Stems are useful in rheumatism. Decoction made from the root and root bark is used to bring down fever.

இதன் பயன்கள் மரமஞ்சளை ஒத்திருக்கும். இதன் கனியை குழந்தைகளுக்கு மலமிளக்கியாகப் பயன்படுத்தலாம். இதன் தண்டு வாதநோய்களை கட்டுப்படுத்த பயன்படுகிறது. இதன் வேர், வேர்ப்பட்டை ஆகியவற்றின் கஷாயம் சுரத்தைக் கட்டுப் படுத்துகிறது.

* * *

## ஊசித்தகரை

See : Cassia tora

பார்க்க : தகரை

* * *

## ஊசிப் பாலை

See : Oxystelmia esculentum

பார்க்க : பாலை வகைகள்

* * *

## ஊசிப்புல்

### Aristida depressia

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Flowers and stem*

Uses : The ashes of the whole plant is used for general skin desorders.

இது துடப்பம்புல் என்றும் அழைக்கப்படும். முழுவதுமாக சுட்டெரிக்கப்பட்ட இதன் சாம்பலுடன் குசும்பா எண்ணெயை சேர்த்து சரும நோய்களுக்கு பயன்படுத்துவார்கள்.

## ஊசி மிளகாய்

## Capsicum fastigiatum

**(N. O. Malvaceae)**

பார்க்க : மிளகாய்

**See : Capsicum Varieties**

* * *

## ஊமத்தை

## Datura alba

**(N. O. Solanaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Leaves and seeds contain a poisonous alkaloid-daturine. Seeds also contains hypocyanime, atropine and hyoscine.*

*Action* : *Emetic, Antispasmodic, Anodyne and Narcotic.*

Uses : Leaf oil is used in the treatment of Rabbis Though it is a very useful medicinal plant, it should be used very cautiously. There are three types of Datura alba. The black colour plant is the most useful among these. The other varieties are also used, when the black variety is not available. The leaves and flowers will give relief to Asthma, when the smoke of this is inhaled as cigar. It could be inhaled twice or thrice a day to give relief, but if it produces headache, giddiness or vomiting, it should be stopped immediately. For chronic dry cough this type of smoking is very effective. Equal quantity of powdered leaf and rice powder to be mixed and if consumed, it will give relief in pain, andarthritis and inflammation etc.

In Dracunculous Medinensis, this can be applied locally which will kill the worms and give relief.

ஊமத்தை உபயோகமான மருந்துப் பொருளாக இருந்தாலும் இதை பிரயோகிப்பதில் அதிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஊமத்தை இனத்தில் வெள்ளை, நீலம், கருப்பு, பூ நிறத்தோடு மூன்று இனங்களுண்டு. இவற்றில் கருப்பு நிறச் செடியே மிக உயர்ந்ததாகும். அது கிடைக்காத தருணங்களில் மற்ற நிற மூலிகையைப் பயன்படுத்தலாம்.

இதன் இலையை அல்லது பூவை அல்லது இவை இரண்டையுமே உலர்த்தி சுருட்டு சுற்றுவது போல் சுற்றி புகைப் பிடிப்பது போல் பற்றவைத்து வாயிலிட்டு புகையை இழுத்து வெளி விடுவதினால் சுவாசகாச ரோகத்தில் வரும் கஷ்ட சுவாசத்தை சமனம் செய்யும். தேவைக்கு தகுந்தபடி தினம் இரண்டு மூன்றுமுறை பற்ற வைத்து உபயோகிக்கலாம். ஆனால் தலைசுற்றல், வாய்குமட்டல் முதலிய துர்குணங்கள் உண்டாக்குமானால் உடனே நிறுத்திவிட வேண்டும்.

நெடுநாட்களாக பீடிக்கப்பட்டுள்ள வறட்டு இருமலுக்கு இவ்வாறு சுருட்டைப் பிடித்தால் குணம் ஏற்படும். அரைத்த இலையுடன் சமஅளவு அரிசிமாவு சேர்த்து ஒருவிரல் கனத்திற்கு பற்றுஇட வாதத்தினால் உண்டாகும் வலி, வீக்கம், மேகவியாதிகள், கட்டிகள் முதலியவை குணமாகும். இதையே நரம்புச் சிலந்தி வியாதியில் கொப்புளம் வெடித்த பின்பு தடவுவதால் உள்ளிருக்கும் கிருமிகள் உடன் வெளிவந்து விடும். இது பித்த மயக்கத்தையும் வெறியையும் தருவதால் சாராயத்தில் கலப்படப் பொருளாக சேர்க்கின்றனர்.

* * *

## ஊமத்தை
### கரு ஊமத்தை

## Datura fastuosa

**(N. O. Solanaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and capsule.*

*Constituents* : *Similar to Datura alba.*

*Action* : *Similar to Datura alba.*

Uses : This is the most important variety of Datura. This is used as the best antidote for the snake venom. This

should be used externally. It has got all the property of Daturaalba. This could be used similarly as white Datura and gives better result than that. For facian oedema due to nervous disorder this is used by mixing 4 parts of pigs fat with 1 part of dried and powdered leaves of Datura. The juice of its leaves is used in hysteria and also could be used in dry cough and Phlegmatic disorders.

This could be also used as general tonic. This is mixed in anti-arthritic preparations. Three drops of this juice mixed in cow's milk, acts as a useful medicine in mental disorder. Mercury can be made into a paste with the held of its extract or juice. The tender fruit of Datura mixed with saliva is an ideal medicine for alopecia. (This is an age old remedy)

ஊமத்தை வகைகளில் இது மிக உயர்ந்த மூலிகையாகும். இது பாம்புக் கடிக்கு சிறந்த மருந்தாகப் பயன்படுத்தப் படுகிறது. இதை வலி உபயோகத்திற்கு மட்டுமே பயன்படுத்த வேண்டும். ஊமத்தையின் எல்லா குணங்களும் இதற்கு உண்டு. வெள்ளை ஊமத்தையை எப்படி எல்லாம் உபயோகிக்கிறோமோ, அதேபோல் இதையும் உபயோகிக்கலாம். அதைவிட இது சிறந்த பயன்தரும். முகத்தில் உண்டாகும் நரம்பைப் பற்றிய வீக்கங்களுக்கு ஒரு பங்கு காய்ந்த இலையை நான்கு பங்கு பன்றிக் கொழுப்பிற் கலந்து தடவினால் வீக்கம் கரைந்துவிடும். இதன் இலைச்சாறு மன மயக்கத்தைக் குணப்படுத்தும் வறட்டு இருமலை அகற்றும். கோழை கபம் அகற்றும். சுக்கில பலம் தரும். வாதநோய் தைலங்களில் இதுவும் சேர்க்கப்படுகிறது.

இதன் இலைச்சாற்றில் மூன்று துளிகள் பசும்பாலில் விட்டுக் கொடுக்க பைத்தியம் தெளியும். பாதரசத்தை இதன் சாறுவிட்டு அரைக்க வெண்ணையாக்கும்.

தலை சொட்டையை நீக்க பிஞ்சு ஊமத்தங்காய் ஒன்றை எடுத்து உமிழ்நீருடன் சேர்த்து மைய அரைத்துத் தடவ மீண்டும் முடி வளரத் தொடங்கிவிடும். இது ஒரு பழமை வைத்தியம்.

* * *

## ஊமத்தை
(மருள் ஊமத்தை)

## Xanthium strumarium
**(N. O. Compositae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Fruit contains fat, albuminoids, sugar and resin.*

*Action* : *Whole plant is Diaphoretic, Sedative, Sudorific and Sialagogue.*

Uses : The decoction of this plant is used as a medicine in the periodic fever, arthiritis etc. This is also used in Leucorrhoea, Malaria, Dismenarrhoea etc. The root of the plant made as tonic is used to cure leprosy.

குளிர்ஜுரம், முறைக்காய்ச்சல், தலைவலி மற்றும் வாதநோய்களுக்கு இச்செடியின் கசாயத்தைக் கொடுக்க குண மாகும். மேலும் இது வெள்ளைப்போக்கு, பெரும்பாடு, மலேரியா போன்றவற்றிற்கும் குணம் தரும். இதன் வேரை மணப்பாகு செய்து சாப்பிட புற்றுநோயை எதிர்க்கும். இதன் இலைச்சாற்றை உட்கொள்வதால் புண், புரை ஆகியவை ஆறும்.

* * *

## ஊமத்தை
(பொன் ஊமத்தை)

**See : Hibiscus abelmoschus**

பார்க்க : கஸ்தூரி வெண்டை

**(N. O. Malvaceae)**

* * *

# எட்டி
## (விஷமுஷ்டி)

## Strychnos nux-vomica
### (N. O. Loganiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Stem - bark, dried ripe seeds and Leaves.*

*Constituents* : *Seeds contain alkaloids like strychnine brucine, vomicine etc. Tincture is extracted from the seeds.*

*Action* : *Dried seeds are Nervine, Stomachic, Tonic and Aphrodisiac and a Spinal Stimulant.*

Uses : Seeds produce a sort of intoxication. This is very rare plant. All the parts of this tree is very bitter. The root bark extract is an ideal medicine for cholera and dysentery. Tender leaves mixed with garlic and gingelly oil and dried till becomes red, is used every day as application on the head, gives relief in migrane.

The persons who takes the seeds regularly is very resistant to snake and scorpion poison. The seeds are used instead of coffee seeds by burning it along with rice husk. If this is consumed regularly it will give strength and vigour. It is also used as sedative. The tincture of this seed is used for the cardiac patients. The ladies with hysteria may not consive, so. for those patients the decoction of the bark along with red ochre may make them fertile and disease free. This decoction is mainly used to cure the psychic patients. No preparation of this seed should be used except under careful medical supervision.

எட்டி மரத்தைக் காண்பதரிது. இதன் எல்லா பாகங்களும் கசப்பு நிறைந்தது. காலரா விஷபேதி, போன்ற பிணிகளுக்கு இதன் வேர் சிறந்த மருந்தாகும். இலைக் கொழுந்தை எடுத்து நசுக்கி, வெள்ளைப்பூண்டும், நல்லெண்ணெயும் சேர்த்து சிவக்கும் வரை காயவிட்டு, ஆறவைத்து வடித்து தினசரி தலையில் தடவ ஒற்றைத் தலைவலி குணமாகும்.

இருபது கிராம் வேர்ப்பட்டையுடன் இரண்டு குவளை நீர் சேர்த்து கால்பாகமாக சுண்டக்காய்ச்சி அந்த கசாயத்தை காலை, மதியம், மாலை என மூன்று வேளை சாப்பிட காலரா மட்டுமின்றி எல்லாவகை பேதியும் உடன் நீங்கும்.

எட்டி விதையை சாப்பிட்டுப் பழகியவர்களை தேள், பாம்பு விஷம் பாதிப்பதில்லை. எட்டிக் கொட்டைகளை உமியின் நடுவில் வைத்து கொளுத்த வெந்து வெண்மையாகக் காணப்படும். இந்த எரிந்த கொட்டையை தூளாக்கி காப்பித்தூளுக்குப் பதிலாக உபயோகித்து கால் சர்க்கரை சேர்த்து உபயோகிக்க தேகத்திற்கு அதிக பலம் தரும். லேசான போதையும், போக இச்சையையும் உண்டுபண்ணும்.

இருதய வியாதியஸ்தர்களுக்கு காணும் வீக்கங்களுக்கு ஒரு சிறு துளி முதல் ஐந்து துளி எட்டி கொட்டை டிங்ச்சர் கொடுக்க குணமடையும். பெண்களுக்கு உண்டாகும் மனோவியாதி (Hysteria) யினால் அவர்களுக்கு கர்ப்பம் தரிப்பது கஷ்டம். இதன் மரப்பட்டை கஷாயத்துடன் ஒரு சிட்டிகை பூங்காவி சேர்த்து கொடுத்துவர இந்நோய் நீங்கும்.

இதன் வேர்ப்பட்டை கஷாயத்துடன் ஒரு சிட்டிகை பூங்காவி சேர்த்து கொடுத்துவர இதய பலவீனம், கர்ப்பப்பையின் நரம்பு உணர்ச்சியற்ற தன்மையினால் உண்டாகும் பித்த ரோகம், உன்மத்த ரோகம் நீங்கும்.

* * *

## எருக்கன்

### Calotropis gigantea

**(N. O. Asclepiadaceae)**

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Shrub* |
| *Parts used* | : | *Root, root-bark, leaves and flowers.* |
| *Constituents* | : | *Resins, Caoutchoue, Akudarin and Calotropin.* |
| *Collection & Storage* | : | *For medicinal uses the thick, rough corky epidermis of the bark should be scraped off before the root bark is reduced to powder.* |

*Action* : *This drug is acting like Digitalis on the heart Root bark is Alterative, Tonic, Antispasmodic, Expectorant and in large doses Emetic. Flowers are Digestive, Tonic, Stomachic and Expectorant. Milky juice is a Violent, Purgative, Rubefacient and Deodorant. Leaves are Anthelmintic, Alterative and Stimulant.*

Uses : For inflammation and painfull conditions of the heel ripened leaf is very useful. It is used by keeping the inflamed heel on the leaf which is kept on the hot brick. If this is repeated, will give relief in pain. For respiratory tract infections and disorders, the flower is used as medicine, by mixing it with clove and pepper. It is also used as local applicant for skin ulcers by mixing it with castor oil.

The leaf also could be used as a local applicant for boils and feruncles. Honey mixed with the extract of this leaf is an ideal intestinal coolant. It is used as antidote for snake bite and other venomous bites.

குதிக்கால் வீங்கி குத்துவலியாக இருக்கும்போது பழுப்பான எருக்கன் இலையை எடுத்து, நெருப்பிலிட்டு சுட்ட செங்கல்லின் மீது வைத்து குதிகாலை அதன்மேல் வைத்து எடுக்க குதிகால் வீக்கம் மாறி சுகம் தோன்றும்.

வெப்பமுள்ள இது கைப்பு, மதுரம், காரம் ஆகிய சுவைகளை உள்ளடக்கியதாகும். எருக்கம் பூவுடன் கிராம்பு, மிளகு சம எடை கலந்து அரைத்து தொடர்ந்து உட்கொள்ள சுவாச காசம் குணமாகும்.

நாள்பட்ட ரணங்களுக்கு உலர்த்தி பொடியாக்கிய இலை யுடன் விளக்கெண்ணெய் சேர்த்து தடவ குணமாகும்.

கட்டிகளுக்கு இந்த இலையை வதக்கி இளஞ்சூட்டோடு வைத்துக் கட்டினால் கட்டி பழுத்து சீக்கிரமாக உடையும்.

எருக்கின் இலைச் சாற்றோடு தேன் கலந்து சாப்பிட்டால் குடல் புழுக்கள் முற்றிலுமாக வெளியேறிவிடும். மேலும் கீல் வீக்கம், பாம்பு விஷம் போன்றவற்றையும் இது குணமாக்கும்.

எருக்கம்பால் விஷங்களை அறுக்கும். கடிவாயில் உடனே எருக்கம்பால் அடிக்க விஷம் இறங்கும். வீக்கங்களுக்கு இப்பாலடித்து மஞ்சள் பொடி தூவ வீக்கங்கள் குணப்படும். இதில் வெள்ளெருக்கம் பால் சிறந்தது.

பூச்சாற்றில் அபிரேகம் சுத்தியாகும். மேலும் இச்செடிக்கு மகோதரம், கல்லீரல்-மண்ணீரல் வீக்கம், நாடாப்புழு தொல்லை ஆகியவற்றை நீக்கும் குணமுண்டு.

எருக்கின் வேர் சூரணத்தை நல்ல ஆமணக்கு எண்ணெயி விட்டு தடவிவர மேகரணம், கீல்வாதம், குஷ்டம் முதலியவை குணமாகும்.

* * *

## எருக்கன்
### (வெள்ளை எருக்கன்)

## Calotropis procera
### (N. O. Asclepiadaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Root, root bark, leaves and flowers.*

*Constituents* : *Similar to Calotropis, gigantea.*

*Action* : *Flowers have Detergent properties.*

Uses : This is more potent than calotropis gigantia. This could be used in all medicinal preparation, where Calotropis is required and this gives more benefits than the other. For snake bites the milk of this plant is very effective.

வெள்ளை எருக்கின் எல்லா குணங்களும் எருக்கன் செடியுடன் ஒத்திருக்கும். ஆனால் இதன் வீரியம் மிகுதி. எருக்கனை உபயோகிக்கும் எல்லா வைத்திய முறைகளிலும் இதனை உபயோகிக்கலாம். அதைவிட சிறந்த பலன் தரும். எருக்கன் பாலைவிட வெள்ளெருக்கன் பால் விஷக்கடிக்கு சிறந்ததாகும்.

* * *

## எலிக்காது துத்தி

(எலிக்காதுகீரை, பெரட்டிக்கீரை.)

## Evolvulus emarginata

**(N. O. Convolvulaceae)**

*Habit* : *Twining herb* .

*Parts used* : *Leaves*

*Action* : *Diuretic, Alterative, Deobstruent and Anti-rheumatic.*

Uses : The leaves of this plant is green as well as blue. Along with its leaves equal quantity of the root extract of muringa (drumstick) Terminalia bilarica (Thandrikkai) fruits, dried Emblica officinallie (Neilikkai), Tcrminaliachebula (Kadukkai) to be taken and boiled together. The juice of this is ideal for ear disorder, This is also could be used to treat Arthritis and used as anti-dysentery medicine, Cardiac patients can use this as vegetable and consumed regularly for the well being.

இதன் இலை பச்சையாக இல்லாமல் சிறிது நீலநிறம் கலந்திருக்கும். இதன் இலையுடன் சமஅளவு முருங்கை வேர், தான்றிக்காய், நெல்லி வற்றல், கடுக்காய் ஆகியவை சேர்த்து தண்ணீரில் போட்டு பாதியாகக் காய்ச்சி தினம் இருவேளை உட்கொள்ள எல்லாவகையான காது நோய்களும் குணமாகும். மேலும் இது வாதவலி, பாண்டு, சூலை ஆகிய நோய்களை நீக்கும். மலம் கட்டும். இருதய நோய் உள்ளவர்கள் இதை கீரையாகப் பாவிக்க இருதயநோய் குணமாகும்.

* * *

## எலுமிச்சம்பழம்

## Citrus acida

**(N. O. Rutaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, and fruits.*

*Constituents : Rich in Vitamin 'C'. Oil contains Citrol, Pectin Citric acid and Anti-Scorbutic acid.*

*Action : Fruit is Refrigerent, Stomachic, Appetizer and Antiseptic.*

Uses : The leaves, fruits, and the fruit juice of this tree are medicinally valuable. The fruit is used widely for cooking. If this is used regularly it gradually cures mental disorders. The fruit is an apetizer, and relieves belching. It is also used as anti-emitic. The toxicity of other medicines could be reduced with this, If used regularly, it prevents skin ailments, This is rich in vitamin "C". The fruit juice taken along with any medicine will enhance the action of the drug.

For the treatment of gonorrhoea the preparation of the medicine is as fallows. The soaked seed of Pedalium murex (Anainerunji) should be made a paste and to the quantity of abetelnut. Add mixture of lime juice and same quantity of cow's butter milk. This mixture to be consumed for seven days. This is an, ideal cure of gonorrhoea, and also for treatment of jaundice,

எலுமிச்சை மரத்தின் இலை, காய், பழம், பழத்தின் ரசம் அனைத்துமே மருத்துவச் சிறப்பு உடையது. எலுமிச்சம் பழம் சமையலுக்கு பெரிதும் பயன்படுத்தப்படுகிறது. இவைகளை முறைப் படி உட்கொண்டு வர பைத்திய நோய் படிப்படியாகக் குறையும். எலுமிச்சை பசியை உண்டாக்கும். வயிற்றிலுள்ள வாயுவை அகற்றும். மயக்கம், வாந்தி, குமட்டல், நீர்வேட்கை, பித்த உஷ்ணம், திரிதோஷம், பித்த மயக்கம் ஆகியவை நீக்கும்.

நாம் உட்கொள்ளும் மருந்துகளின் உஷ்ணத்தை ஓரளவு குறைக்கும். கண்நோய் காதுவலி ஆகியவற்றை நீக்கும். அடிக்கடி இதனை உணவில் சேர்ப்பதனால் சொரி, கரப்பான் (Scurvy) போன்ற நோய்கள் வராது. இந்நோய்கள் விட்டமின் 'C' குறை வினால் உண்டாகின்றது. எலுமிச்சம் பழத்தில் விட்டமின் 'C' மிகுதியாக உள்ளது.

இதன் பழச்சாறை எந்த மருந்துடன் உட்கொண்டாலும் அதன் வீரியத்தை அதிகப்படுத்தும். ஆனை நெருஞ்சி விதையை ஊறவைத்து அரைத்து ஒரு கொட்டைப் பாக்களவு எடுத்து ஒரு கண்ணாடி டம்ளரில் போட்டு எலுமிச்சம் பழச்சாற்றுடன் சமஅளவு பசுமோர் சேர்க்கவேண்டும். இதை ஏழு நாட்களுக்கு காலை வேளையில் சாப்பிட வெட்டைநோய் பூரணமாக குண

மாகும். மஞ்சள் காமாலை, மூலம், இரத்த ஒழுக்கு முதலிய நோய்களை குணமாக்குவதில் இது மிகச் சிறந்ததாகும்.

* * *

## எலுமிச்சை
### (பெரிய எலுமிச்சை)

## Citrus limonum
### (N. O. Rutaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Rind of the ripe fruit, fruit.*

*Constituents* : *Rind of the ripe fruit contains a volatile oil.*

*Action* : *Rind is Stomachic and Carminative. Fruit is Bitter, Aromatic, Stomachic and Carminative.*

Uses : This fruit is oval in shape. The property of this is similar to the lime. The pickles of this fruit is good for the spleen disorders. The skin of this fruit is an apitizer. This is also used for several skin ailments, including itching. This fruit is also used to cure other ailments like Arthritis, Hepatic disorders, Phlegm and Gastric disorders etc.

பெரிய எலுமிச்சைக்காய் நீள் வட்டமாக முனையில் காம்பு போன்று புடைப்புள்ளதாக இருக்கும். எலுமிச்சை போலவே இதன் பழமும் நிறையப் பயன்படும். இதன் ஊறுகாய் மண்ணீரல் வீக்கத்துக்கு நல்லது. இதன் தோல் பசியை உண்டாக்கும். சொறி கரப்பானுக்கு மிக நல்லது. காய்ச்சல், அழற்சி, கீல்வாதம், சீதபேதி, வயிற்றுப்போக்கு முதலியவற்றிற்கும் இது மருந்தாக உதவுகிறது.

எலுமிச்சைக் காயும், பழமும் புளிப்புச் சுவையுடையன. திரிதோஷம், வாதகபம், சூலை, சர்த்தி, குன்மம், இடுமருந்து, பித்த உஷ்ணம் முதலியவற்றை எலுமிச்சைக்காய் போக்கும்.

* * *

# எலுமிச்சை

## (காட்டு எலுமிச்சை)

## Atalantia monophylla

## (N. O. Rutaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Root, berries and leaves.*

*Action* : *Berries are Appetizer. Root is Antispasmodic and Stimulant.*

Uses : The leaf of this plant is bitter in taste, the fruits are sour, but the skin of the fruit is bitter. The seeds are very bitter. This plant is used to cure intestinal ulcer, fever and cough. Decoction of the leaves is applied in itch and other skin complaints.

The juice of this fruit mixed with potassium nitrate (Vediuppu) is an ideal medicinal preparation for skin ailments including skin ulcers, pruritis etc. This also acts as anti-spasmodic and analgesic.

காட்டு எலுமிச்சையின் இலை கார்ப்புச் சுவையுடையது, சதை புளிப்புச் சுவையுடையது. கைப்பும், விறுவிறுப்பும் பழத் தோலின் சுவையாகும். விதை கைப்புச் சுவையுடையது.

காட்டு எலுமிச்சையினால் வாத சேத்துமம், சூலை, குன்மம், சுரம், இருமல் ஆகியவை தீரும்.

காட்டு எலுமிச்சைப் பழரசத்தோடு வெடியுப்பு, சிறிது சேர்த்துச் சொறி, சிரங்கு முதலியவைகட்குப் போட அவை அகலும்.

குன்ம நோயாளிகளுக்குக் காட்டு எலுமிச்சைப் பழ ரசத்தை ஒவ்வொரு நாளும் மாலை வேளைகளில் கொடுத்து வர வாந்தியோடு கூடிய வயிற்றுவலி நீங்கும். தலைவலியும் அகலும்.

* * *

# எலுமிச்சம் துளசி

## Ocimum gratissimum

### (N. O. Labiatae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds and leaves*

*Constituents* : *Leaves contain essential oil*

*Action* : *It is Styptic, Stimulant, Demulcent, Diuretic and Carminative.*

Uses : The extract of this plant is used in the medicine for cough asthma etc. The decoction prepared from the seeds of this plant is ideal medicine for urinary disorders. This is sometimes used to cure veneral disease also. The extract of the leaves are used as anti-inflammatory and analgesic. If this extract is taken internally it cures abdominal-spasm and Stomach ache. The extract of the seed mixed with honey is given to children to stop vomiting. The oil extracted from the seeds are used as mosquito repellent also.

இது துளசி வகையைச் சேர்ந்த ஒரு செடியாகும். இத்துளசி யிலைச் சாற்றை இருமல், காசம், மூச்சிரைப்பு முதலியவற்றிற்கு மருந்துகள் தயாரிக்கும்போது அதனுடன் உபசரக்காகச் சேர்த்துக் கொள்வார்கள். இதன் விதையிலிருந்து தயாரிக்கப்படும் கஷாயம் மூத்திரத்தாரைக் கோளாறுகளுக்கு பயனாகிறது. சில சமயங்களில் வெட்டை போன்ற நோய்களுக்கும் இந்த கஷாயத்தை பயன் படுத்துவார்கள்.

இலைச்சாற்றை வீக்கமான கை, கால்களுக்கும், தோல் தடிப்பு, கரப்பான் போன்ற நோய்களுக்கும் பயன்படுத்தலாம். வயிற்றுவலிக்கு இவ்விலைச் சாற்றை நேரிடையாகச் சாப்பிட்டால் உடனடியாக நீங்கும். குழந்தைகளுக்கு ஏற்படும் வாந்திக்கு இச்செடியின் விதையை தேனுடன் அரைத்துக் கொடுக்க வாந்தி நிற்கும்.

இதிலிருந்து எண்ணெய் வடிக்கப்படுகிறது. இந்த எண்ணெய் இருமல் மருந்துகளிலும், ஆவியாதல் மூலம் கொசு கொல்லும் மருந்து அட்டைகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

* * *

## எலுமிச்சம் புல்

**(கற்பூரப் புல், சம்பாரப் புல், வாசனைப் புல்)**

## Andropogon citratus

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Volatile oil, Which is known as lemon grass oil. It contains 75% of citral*

*Action* : *Stimulant, Diaphoratic, Antispasmodic and oil is Carminative and Tonic.*

Uses : This belongs to grass family like paddy. Oil is extracted from its leaves and it is known as "Lemon grass oil". This oil contains 75% of citral which is a powerful insecticide, therefore it is widely used in manufacturing phenyle, soaps etc. This is also used as external applicant in rheumatism and in neuritis. The oil is also used as a medicine in gastric disorders. The oil is exported from India.

நெல்லைப் போல வளரும் ஒரு புல்லினமாகும். இப்புல்லில் இருந்து எண்ணெய் எடுக்கப்படுகிறது. லெமன் கிராஸ் ஆயில் என அழைக்கப்படும். இந்த எண்ணெயில் 75% சிட்ரால் எனும் கிருமிநாசினி இருக்கிறது. ஆகவே இது பினாயில், சோப்புகள் போன்றவற்றில் அதிகம் பயனாகிறது. கீல்வாதம், நரம்பு குடைச்சல் போன்ற புறநோய்களுக்கு இதை மேற்பூச்சாகப் பூசுவார்கள்.

இந்த எண்ணெயைச் சுத்தப்படுத்தி வயிற்று பொருமல் போன்ற நோய்களுக்கான மருந்துகளிலும் சேர்க்கிறார்கள். இந்த எண்ணெய் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி ஆகிறது.

* * *

## எழுத்தாணிப் பூண்டு
### (தாணிப் பூண்டு)

### Prenanthera sarmentosa

*Habit* : *Herb*

*Parts used* : *Whole Plant*

*Action* : *Laxative, Alterative and Vermifuge.*

Uses: The plant is used in anti-leprosy drug. The paste of this plant is used as an external application to the ulcer of leprosy patients which gives very good relief. If taken internally it acts as laxative. The extract mixed with pungam oil is used as ideal application for the skin ailments including psoriasis. The extract of the plant is also used in anti-diabetic and anti-hypertensive drugs.

இது புற்றுநோய் மருந்துகளில் பயனாகும் ஒரு செடியாகும். இதையரைத்து வதக்கி புற்றுநோயின் புண்களில் கட்ட புற்று நோய் வேகமாக குணப்படும். உள்ளுக்கு கொடுக்க மலக்கட்டை நீக்கும்.

கரப்பான் போன்ற தோல் நோய்களுக்கு இதன் சாற்றை புங்க எண்ணெயில் கலந்து கொதிக்கவிட்டு ஆற வைத்து பாவிக்கலாம். தவிர பிரமேக மருந்துகளில் பயன்படுத்தலாம்.

* * *

## எள்ளு

### Sesamum indicum
### (N. O. Pedaliaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds and flowers*

*Constituents* : *Seeds contain fixed oil*

*Action* : *Seeds are Laxative, Emollient, Demulcent, Diuretic, Nourishing, Lactagogue and Emmenagogue. Leaves are Demulcent*

Uses : Seeds are Specially useful in piles, dysentery, scorpion sting and constipation.

The extracted oil from the seed is called gingelly oil. This is widely used as cooking oil. If sweet or bitterness is mixed with oil, it gives good flavour and taste. This is also used as bathing oil. Like all other oils, this will also removes dirt from the skin. It is used as an external application for burns, when mixed with ghee and camphor. If a handful of this seed is consumed every day morning, it is considered very healthy in Ayurveda. The flower of this plant is a good medicine for eye disorders. For eye irritation and burnings, nine pepper seeds, 20 thippallimool, 25 aniseed are mixed with 40 Seeds of this plant and made a paste, This mixture should be applied for the eye disorders is small quantity. This paste, if used at night on the eyes will improve eyesight also.

எள்ளிலிருந்து வடிக்கப்படும் எண்ணெய்யை நல்லெண்ணெய் என்பர். சமையல் எண்ணெய்யாக பல விதங்களில் பயன்படுகிறது.

இந்த எண்ணெய்யில் காரமோ, கசப்போ, இனிப்போ, துவர்ப்போ எது கலந்தாலும் சுவை தரும். இதை உடலில் தேய்த்துக் குளிக்க பயன்படுத்துவார்கள். எல்லா எண்ணெய்களையும் போல இதுவும் உடல் அழுக்கை கரைத்து வெளியேற்றும். இக் குளியலால் நன்மை ஏதும் இல்லை.

நெருப்புக் காயங்கள் மீது எள் விழுதோடு உருகாத நெய் விழுதையும் நீரில் கழுவி கலந்து கற்பூரத்தை சேர்த்துக் கட்டுவதால் குணமேற்படும். காலை வேளைகளில் ஒரு கைப்பிடி எள்ளைச் சாப்பிடுவது சரீர போஷிப்புக்கு நல்லது என்கிறது ஆயுர்வேதம். இதன் பூ கண் தொடர்பான எல்லாப் பிணிகளுக்கும் பயன்படுகிறது. கண் அரிப்பு, கண் எரிச்சல், பார்வை சரியில்லாமல் இருத்தல் போன்ற நோய்களுக்கு நாற்பது எள்ளுப்பூவுடன் ஒன்பது மிளகு, இருபது அரிசித் திப்பிலி, இருபத்தி ஐந்து சம்பங்கி மொக்கு, ஆகியவற்றைச் சேர்த்து நன்றாக அரைத்து வஸ்திர காயம் செய்து வைத்துக் கொள்ள வேண்டும். இந்த சூரணத்தில் ஒரு சிறு மிளகளவு கண்களில் இட்டு வந்தால் குணமாகும். தவிர எள்ளுப்பூவை நன்றாக வதக்கி இரவில் கண்களுக்குக் கட்ட கண்பார்வை தெளிவாகும்.

* * *

# ஏலக்காய்
## (சிற்றேலம்)

## Elettaria cardamomum
## (N. O. Scitaminaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Fruits and seeds*

*Constituents* : *Seeds contains fixed oil*

*Action* : *Powerful Aromatic, Stimulant, Carminative, Stomachic and Diuretic. These properties are due to the essential oil present in the seed.*

Uses : Cardamom is a precious spice of south India. There are many types in cardomom This is hot in taste so it increases salivary secretion. This is used as one of the ingredient in the drugs used for constipation, stomachic sweetness of the mouth, excessive thirst, headache with excessive sweating and phlegm. Oil is extracted from this. Cardamom oil apart from its aromatic uses in other drugs, it itself exhibits medicinal properties. This is widely used in day to day cooking as a flavouring agent.

ஏலம் தென்னிந்தியாவின் பூர்வீக விளைபொருள்களில் ஒன்றாகும். வாழை, மஞ்சள், இஞ்சி, அரத்தை, ஏலம் முதலியன ஒரேக் குடும்பத்தைச் சேர்ந்தவை. ஏலத்தில் பல வகைகள் உண்டு. இதில் சிற்றேலம் கார்ப்பு சுவையுடையது. இது சிறுநீர்ப் பெருக்கி, வாயில் நீர் ஊறுதல், வாயினிப்பு, தாகம், வேர்வையுடன் கூடிய தலை வலி, மிகுந்த வறட்சி, கபம் முதலானவற்றுக்கான மருந்துகளில் இது உபசரக்காக பயனாகிறது. இதிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். ஏல எண்ணெய் பல மருந்து சரக்குகளில் வாசனைப் பொருளாகப் பயன் படுவதுடன் தானே ஒரு மருந்தாகவும் செயல்படுகிறது. பொதுவாக சமையலில் இது ஒரு சம்பாரப் பொருளாகவே பயன்படுத்தப்பட்டு வந்தது.

* * *

## ஏலக்காய்
(பெரிய ஏலம்)

## Elettaria repens
**(N. O. Scitaminaceae)**

*Habit : Herb*

*Parts used : Fruits and seeds*

*Constituents : Seeds contains fixed oil*

*Action : Similar to Elettaria cardamomum*

Uses : This exhibits the same property as chitrelam.

சிற்றேலத்தின் குணங்களே இதற்கும் பொருந்தும்.

* * *

## ஏலக்காய்
காட்டு ஏலம்

## Amomum subulatum
**(N. O. Scituminaceae)**

*Habit : Herb*

*Parts used : Seeds*

*Constituents : An essential oil which is rich in cineole.*

*Action : Similar to E. repens and E. cardamomum.*

Uses : Kattelam (wiid variety) is found abundantly in non-cultivating areas. The paste of this is hot, so this secrets saliva. This is used as one of the ingredient in the medicines used for appetite, hysterria, phlegm and dysentery.

பயன்படுத்தாத நிலங்களில் காட்டு ஏலம் சுயேச்சையாக வளரும். இது கார்ப்பு, துவர்ப்புச் சுவையுடையது. இது பசியைத் தூண்டும் மருந்துகளிலும், மனமயக்கம், கபம், பேதி போன்ற மருந்துகளிலும் துணை மருந்தென சொல்லப்படுகிறது.

* * *

# ஏழிலைப் பாலை

(சப்தாபரணம், சப்தபரணி)

## Alstonia scholaris

(N. O. Apocynaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and bark*

*Constituents* : *It Contains Ditamine, Echetenine and Echido venidine*

*Action* : *Bark is Acrid, Bitter, Alterative, Febrifuge. Laxative, Anthelmintic and Galactagogue.*

Uses : The bark of this tree and milk is used in drugs. This is mainly used in the medicines for Arthiritis. cardiac problems, nervous debility, asthma and skin ailments. An alkaloid called "Detamine" is extracted from this, This is bitter in taste . This is also used as one of the main ingredients for anti-leprotic drug. The extract of the bark mixed along with milk is used in anti-leprotic drug.

The same extract is used as anti-dysenteric drug also When mixed with cyprus rotendrus it could be used in high fevers. All the parts of the plant are used as per the seasons. Many researches are conducted in this plant on various aspects. British pharmacopia 1914 clearly indicates about the usage of this plant. They claim that this plant could be used in place of quinine against Malaria.

இந்த மரத்தின் பட்டையும், பாலும் மருந்துகளிலும் பயனாகிறது. வாதநோய், இருதயநோய், நரம்பு தளர்ச்சி, ஆஸ்த்துமா, படர்தாமரை, புண், ஆறாத ரணம், சீதபேதி இவைகளுக்கு குணம் தரும்.

இதிலிருந்து ''டிட்டாமைன்'' என்கிற அல்கலாய்டு தயாரிக்கப்படுகிறது. இது கசப்பு சுவையுடையது. இது குஷ்ட ரோக நிவாரண மருந்துகளில் பயன்படுகிறது.

இதன் பட்டையிலிருந்து இறக்கப்படும் சாரத்தை பாலுடன் கொடுத்து குஷ்டரோகத்தை சீக்கிரம் குணமாக்கலாம். இந்த சாற்றை கடுமையான பேதியை நிறுத்தும் மருந்தாகப் பயன்

படுத்தலாம். இந்தச் சாற்றுடன், கோரைக்கிழங்கு சாற்றையும், கலந்து கடுமையான காய்ச்சலுக்கு மருந்தாக பாவிக்கலாம். ஏழிலைப் பாலையின் எல்லா பகுதிகளும் காலத்திற்கேற்றார் போல பயன்படுவது விந்தையாகும். இதை குறித்து ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன. **1914**ல் B. P.யில் (British Pharacopia) இதன் பயன் குறித்து தெளிவாக சொல்லப்பட்டுள்ளது.

* * *

## ஒதிய மரம்

## Odina wodier

### (N. O. Anacardiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves and bark*

*Coustituents* : *Bark contains tannin and ash contains considerable quantity of potassium carbonate.*

*Action* : *Astringent, Tonic, and Disinfectant, Styptic, Resolvent and Deobstruent.*

Uses : The leaf of this "Rhusodena" tree is used as an external application for rheumatic complaints and inflammation. The Leaf immerssed in oil and heated could be used for the above conditions. For skin ailments the bark of the tree is powdered and mixed with neem oil and used as external application. For leprosy and ulcers it is made a paste with water and used as external application. The decoction of the bark is useful is toothache, and stomatitis. I t is used as anti-dote for other poisonous seeds and herbs.

உடைமரத்தின் இலையை எண்ணெயிலிட்டு காயவைத்து லேசான சூடுடன் வாதவீக்கங்கள் காணப்படும் இடத்திலும், வாதவலி இருக்கும் இடத்திலும் தடவ குணமாகும். அந்த இலையை வீக்கத்தின் மேல் வைத்துக் கட்ட உடனே வீக்கம் குறையும்.

இதன் பட்டையை பொடி செய்து வேப்ப எண்ணெயுடன் கலந்து தோல் நோய்களுக்கு தடவினால் குணமாகும். இதை நீருடன் அரைத்து குஷ்டநோய் புண்களுக்கு தடவ உடனே குணமாகும். இதன் பட்டை கஷாயத்தை அருந்துவதால் பல்வலி, வாய்புண் தீரும். குழந்தைகள் ஏதாவது உண்ணக்கூடாத

காய்களையோ, கொட்டைகளையோ சாப்பிட்டுவிட்டு வாந்தி எடுத்தால், இதன் இலைக் கொழுந்துடன் தயிர்சேர்த்து அரைத்து கொடுக்க விஷவேகம் குறையும்.

* * *

## ஓட்ஸ்

## Avena sativa

### (N. O. Gramineae)

*Habit* : *Herb*

*Parts used* : *Spike and flowers*

*Constituents* : *Fat, starch, sugar and mineral matter*

*Action* : *As tincture it is a nerve Stimulant. Seeds are Invigorative, Stimulant and Alterative.*

Uses : This is an ideal nutritional food. This contain fats, vitamins, carbohydrates and minerals which are essential to our body. If taken regularly it invitalites the body This is also used in making bread.

இது ஒரு சிறந்த உணவுப்பொருளாகும். இது மாவுச்சத்து, புரதச்சத்து, கொழுப்புச்சத்து போன்ற உடலுக்குத் தேவையான எல்லா சத்துக்களையும் கொண்டிருக்கிறது. இதை தொடர்ந்து உணவில் சேர்த்துக் கொள்வதால் தளர்ந்த தேகம் இறுகும். இது ரொட்டி செய்வதற்கு பயன்படுகிறது.

* * *

## ஓணான் கொடி

## Ericiba paniculata

*Habit* : *Twiner*

*Parts used* : *Whole plant*

*Action* : *Stimulant, Anti-rheumatic and Diuretic.*

Uses : This is an ideal medicine for gastric disorders. It is an effective medicine for the people having a tendency of

hunch back. For joint pains and inflamation also this is very effective.

வாயுத்தொல்லைக்கு இது ஒரு சிறந்த மருந்தாகும். கூன் விழுபவர்கள் இதை உட்கொள்ள கூன் நீங்கும். கைகால் மூட்டுவலி, மூட்டு வீக்கம் இவைகளுக்கு குணம் தரும். இடுப்பில் கட்ட ஓடு வாய் நீங்கும்.

* * *

## ஓமம்

## Ptychotis ajowan

### (N. O. Umbelliferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Fruit*

*Constituents* : *An aromatic volatile essential oil*

*Action* : *Seeds posses Defusible, Stimulant, Stomatic-Carminative, Tonic, Aromatic, Pungent, Anti, spasmodic and Antispetic properties.*

Uses : The mixer of the juice of this with white crumbs is used for swollen eyes and also in swelling of breasts. This is very effective in stomach upset and also to reduce gas formation The docoction of the herb root or seed is diuretic. Herb taken raw is also a diuretic and is effective against poisonous bite. The seeds of this can be used as an effective anti-poisonous agent. This is a good apetizer. The juice of this, if taken regularly, is used in the treatment of ulcer. If taken along with food this gives relief from all stomach ailments. Its flower mixed with baking soda gives relief from flatulance, accidity and dyspepsia.

ஓமம் ஒரு முக்கிய மருந்துப் பொருளாகும். வாசனைப் பொருளாகவும் பயன்படுத்தப்படுகிறது. இது பசியைத் தூண்டும். வயிற்றுக் கோளாறுகளை நீக்கும். மேலும் குழந்தைகளுக்கு ஏற்படும் வயிற்றுக் கோளாறுகளுக்கு சிறந்த மருந்தாகப் பயன்படுகிறது. சமஅளவு ஓமம், மிளகு, வெல்லம் எடுத்து அரைத்து வைத்துக் கொண்டு கொட்டைப்பாக்கு அளவு தினம் காலை, மாலை ஆகிய இருவேளை உண்டால் வயிற்றுக்கடுப்பு நீங்கும்.

ஓமம் ஒரு பங்கிற்கு கால்பங்கு கறியுப்பினைச் சேர்த்து நன்றாக முறைப்படி உட்கொண்டுவரின் வயிற்றுநோய் நீங்கும். ஓமத்தை குடிநீராகச் செய்து பருகி வந்தாலும் குன்ம நோய் தீரும்.

ஓமத்தை உணவில் சேர்த்துக் கொள்வதால் அசீரணம், வயிற்றுப்பிசம், அதிசாரம், சீதபேதி, தந்தரோகம் போகும்.

ஓமத்திலிருந்து ஓமத்தைலம் எடுக்கப்படுகிறது. இத்துடன் இதன் பூவையும் சேர்த்து சிறிது சோடாஉப்புடன் உட்கொள்ள வயிற்றுப் பொருமல், அமிலத் தன்மை, வயிற்று அழிச்சல் உடனே நீங்கும்.

ஓமத்தை அரைத்து பற்றுப்போட வயிற்றுவலி நீங்கும்.

* * *

# ஓமம்
## (குரோசாணி ஓமம்)

## Hyoscyamus niger
### (N. O. Solanaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and Seeds*

*Constituents* : *Leaves contain Hyoscyamine, Hyoscine etc.*

*Action* : *Leaves are Sedative, Hypnotic, Anodyne, Narcotic, Anti-spasmodic and Hyocyamine. Seeds are Intoxicating, Narcotic, Anodyne, Digestive, Astringent and Anthelmintic.*

Uses : Its seed, leaf, root are useful in treating Insomnia. It is very effective in rheumatic conditions. It is very effective in the treatment of spermatoria. It gives relief from schizophoria also gives relief from ulcer, and psoriasis. It produces sedation.

இதன் இலை, வேர், விதை அனைத்தும் பயன்படுகின்றன. தூக்கமின்மையை நீக்கி சுகம் தரும். வாதநோய் தொல்லைகளை நீக்கும். உடல்வலி, விந்து நஷ்டத்தைக் குணப்படுத்தும்.

இதை விசேஷமாய் நினைவு தடுமாற்றம், அதிமூத்திரம், விரணம், உடற்கடுப்பு, கரப்பான், நீங்காக்கபம் ஆகியவற்றிற்கு பயன்படுத்தலாம். அதிமயக்கம் உண்டாக்கும்.

இதன் இலையை அதிகாலையில் பறித்து மென்று தின்று விட்டு உடன் பசும்பால் குடிக்கவேண்டும். இவ்வாறு நாற்பது நாட்கள் சாப்பிட தாது பலம் மீண்டு தாம்பத்திய வாழ்வில் நீங்காத இன்பத்தை அடையமுடியும். மேலும் இது மூத்திர தாரையில் தோன்றக்கூடிய எரிச்சலையும் அகற்றிவிடும்.

* * *

## ஓரிதழ் தாமரை
(ரத்னபுருசு)

## Viola odorata
(N. O. Violaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and flowers*

*Constituents* : *Flowers and leaves contain violin which is an emetic principle*

*Action* : *Laxative, Diuretic, Lactagogue, Tonic and Demulcent.*

Uses : This is used as a medicine for vigour and vitality. This gives relief from dysentery and rheumatic disorders. It's leaf along with milk if taken regularly for 40 day- gives vigour and vitality. This gives relief from urinery infecs tions.

இது நீரில் வளரும் செடியல்ல. வயல்வெளியிலும், சதுப்பு நிலங்களிலும் வளரும். யூனானி வைத்தியர்கள் இதனை ரன்னபுருசு என்பார்கள். இம்மூலிகை காளை வயதில் கட்டுக்கடங்காமல் காம நினைவுகளால் உடம்பைக் கெடுத்துக் கொண்ட இளைஞனை கல்யாணத்திற்கு தகுதி உடையவனாக்கும். எனவே இளவயதில் கிழட்டுத் தனமாக்கிவிட்ட வாலிபர்களுக்கெல்லாம் ரெத்தின புருஷ் என்ற இந்த மூலிகை ஒரு வரப்பிரசாதம் ஆகும்.

இது சீதபேதியை நிறுத்தவும், மேகவாத தொந்த ரோகங்களுக்கும் கொடுத்துவரலாம்.

* * *

# ஓரிலை பாலை

## Uraria lagopoides

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Whole plant*

*Action* : *Anti-rheumatic, Anti-catarrhal, Emmenagogue, Tonic and Alterative.*

Uses : This is used as medicine for rheumatism, fever, bleeding piles and scorpion bite. If given along with cow's milk it induces pregnancy, abortion.

இது வாதநோய்களிலும் சுரம், இரத்தமூலம், தேள்கடி முதலியவற்றிலும் மருந்தாக பயன்படுகிறது. கர்ப்பிணிப் பெண்கள் இதனை பாலுடன் உட்கொண்டால் கருச்சிதைவு ஏற்படும். ஏழு மாத கருகூட சிதைய வாய்ப்புண்டு. எனவே இது குடும்பக் கட்டுப்பாட்டிற்கு சிறந்தது.

* * *

# கக்கரிக்காய்

(முள்வெள்ளரி)

## Cucumis sativus

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Twiner*

*Parts used* : *Fruit and seeds*

*Constituents* : *Seeds contain much farinaceaus matter and a mild oil*

*Action* : *Seeds are Diuretic, Nutrient and Demulcent. Fruit is Refrigerent.*

Uses : This is a twiner plant. The fruit is fleshy and oblong in shape. Leaves and Seeds are very useful. The fruit is very useful in cooking. This has a property of increasing salivery secretions. This is effective in piles and other similar conditions, but this accumulates phlegm. For skin

ailments like Scabies and ulcers, it is very effective if taken internally.

கக்கரி தரையிலும், பந்தலிலும் கம்பிகளிலும் படரும் ஒரு பருவக்கொடி. இதன் காய் நீண்டு தடித்து உருளையாக பல அளவிலும் வடிவிலும் இருக்கும்.

கக்கரிக்காயின் இலையும், விதையும் பயன்படும் உறுப்புக் களாகும். கக்கரிக்காய் சமையலில் பயன்படும் பச்சடிபயிர். இது சிறுநீர் பெருக்கியாகும். மூலச்சூடு, இரத்தபித்தம், இவைகளைக் குறைக்கும். ஆனால் கபத்தையும் குளிர்ச்சியையும் உண்டாக்கும்.

இதற்கு முள்ளன் வெள்ளரி என்று ஒரு பெயரும் உண்டு. சிரங்கு, சொறி முதலிய நோய்கள் இருக்குங்காலத்தில் இதை உள்ளுக்கு உணவாகக் கொள்ளலாம்.

* * *

## கசகசா

### (வெள்ளை போஸ்தகாய்)

## Papaver somniferum

### (N. O. Papaveraceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Seeds contain sanguinaranin, Globulin, Papaverin and codeine. Seed oil is odourless. Seeds are rich in lecithin and protein. Opium from the capsule contains 9. 5% morphine.*

*Aciton* : *Seeds are Nutritive, Demulcent, Astringent Emollient, Aphrodisiac, Tonic and Narcotic.*

Uses : This is a poppy plant with a fruit capsule. The seeds are known as Kasakasa. This is white in colour. The lactic secretion which oozes out from the fruit is known as opium. But kasakasa do not give sedative effect like opium. This is used as a beverage as well as medicine. This is sweet in taste. This is efeective in acute diarrhoea; and as an anthel-mintic. It is mixed with cows milk and palmsugar and made a paste by boiling. If this paste is consumed 8 gm per day it gives

strength and vitality. It is effective in stomatitis. If it is consumed by mixing it with dried cocoanut. It is also good for the treatment of insomnia.

போஸ்தக்காய்க்குள்ளிருக்கும் விதை கசகசா எனப்படும். இது வெண்மை நிறம். காயின் தோலுக்குப் போஸ்தக்காய்த் தோல் என்று பெயர். கீறப்பட்ட காயினின்றும் வடிந்து உறையும் பாலுக்கு அபினி என்று பெயர். இன்னும் விபரங்களுக்கு அபினி பார்க்கவும்.

கசகசா அபிணியைப் போன்று மயக்கம் தருவதில்லை. இது சம்பாரப் பொருளாகவும், மருந்தாகவுமே உபயோகப் படுத்தப்படுகிறது. இது இனிப்புச் சுவையுடையது. இதனை ரத்தக் கழிச்சல், சீதக்கழிச்சல், உடல்வன்மை ஆகியவற்றிற்குப் பயன்படுத்துவர். குடல்புழுவை அழிக்கும். இதனைப் பசுவின் பாலுடன் அரைத்து பனங்கற்கண்டு சேர்த்து அடுப்பில் வைத்துக் கிளரி லேகியம் ஆக்கிக் கொண்டு இதை தினமும் 8 கிராம் அளவு சாப்பிட்டுவர உடல்வன்மையும். ஆண்மையும் பெருகும்.

வாய்ப்புண்ணுக்கு கொப்பரைத் தேங்காயை கசகசாவுடன் சேர்த்து சாப்பிட்டால் குணமாகும்.

இதை உணவில் சேர்த்துக் கொள்வதால் சுகநித்திரை தரும்.

* * *

## கசகசா
### (சிகப்பு போஸ்த்தக்காய்)

## Paparer rhoeas
### (N. O Papaveraceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Rhoeadine, Morphine, Paramorphine, Narcotine*

*Action* : *Milk from the capsules of this variety is Norcotic and has slightly Sedative properties.*

Uses : It is another kind of kuskas. It is red in colour. used to treat insomnia and also as a colouring agent for medicines.

இது கசகசாவில் ஒரு வகையாகும். சிவந்த போஸ்த்தக்காய் என்று இதனைக் கூறுவர். இது நித்திரையைத் தரும். மருந்துகளுக்கு சாயம் சேர்க்க உதவும்.

* * *

## கச்சோலி கிழங்கு

## Kaempferia galanga

### (N. O. Scitaminaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome and leaves*

*Constituents* : *Rhizome contains an essential oil*

*Action* : *The tubers are Diuretic, Carminative, Stimulant and Expectorant.*

Uses : Rhizomes and Leaves are used in cosmetics. They are administered with honey in cough and pectural affections. The decoction of the rhizomes is used in dyspepsia, headache and Malaria. Boiled as oil, the rhizomes are applied externally to remove nasal obstructions. Roasted rhizomes are applied hot in rheumatism and for hastening the ripening of inflammatory tumours. The juice of the plant could be used as an ingredient of some tonic preparations. The leaves are used in lotions and poultices for sore eyes, sore throat, swellings, rheumatism and fevers.

இது வாசனைப்பொருளாகவும், சம்பாரப் பொருளாகவும் பயன்படுத்தப்படுகிறது. கிழங்கை தேனுடன் உட்கொள்ள இருமல் குணமாகும். இலை, கிழங்கின் கஷாயம் தலைவலி, மலேரியா ஆகியவற்றை குணமாக்கும். இதன் கிழங்கை வதக்கி வாத வலியுள்ள இடங்களில் வைத்துக்கட்ட உடனே குணமாகும். இங்கனனம் கட்டிகளின் மேல் வைத்துக் கட்டினால் உடனே பழுத்து உடைந்துவிடும். இலையை அரைத்து பற்றுபோட கண் எரிச்சல், தொண்டை எரிச்சல், வீக்கம், மூட்டுவலி, சுரம் ஆகியன நீங்கும்.

* * *

# கஞ்சா
## (கோரக்கர் மூலி)

## Cannabis sativa, C. indica
### (N. O. Urticaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves, flowers, fruiting tops*

*Constituents* : *A volatile oil and Cannabinine, a powerful Sedative.*

*Action* : *All parts of the plant are Narcotic, Stomachic Anti - spasmodic, Analgesic, Stimulant, Aphrodisiac and Sedative. In large dose it first produces mental exaltation, intoxication and finally loss of memory, Gloominess etc.*

Uses : This is also known as "Korakkar" medicine. Commonly leaves, shoot and roots are used in medicines. But mainly the leaves are used as medicine. The medicine prepared from this is used to relieve abdominal spasm, piles, dysentery, obesity, phlem, psoriasis and impotency. If taken regularly, it generates enormous appetite and sedation.

If it is misused as a smoke for pleasure, it is very much addict forming and it destroys the health and it may leads to madness. It may also lead to nervous break down and severe canstipation. If it is hot used with caution, it is dangerous. For migrane and head ache, the extract of ganja mixed with the extract of betel leaves used for 10 days, maygive relief. It is used in"poornadi lehgyam"which increases potency of male.

இது கோரக்கர் மூலி என்றும் கூறப்படுகிறது. பொதுவாக கஞ்சாவின் இலை, பூ, சமூலம், நார் ஆகியன மருந்தாகப் பயன்பட்டப் போதிலும் இதன் இலையே பெரிதும் மருந்தாகப் பயன்படுகிறது. வயிற்றுவலி போன்ற நோய்களுக்கும், மூலவாய்வு, நாள்பட்ட பேதி, பெருத்த சரீரம். மிகுகபம். கரப்பான். ஆண்மைக் குறைவு ஆகியன இதனை உட்கொள்வதால விலகும். இதனை அடிக்கடி உண்பதால் மிகுந்த பசியும். மயக்கமும் உண்டாகும்.

கஞ்சாவை காரணமின்றி போதைக்காக அடிக்கடி உட்கொள்வதால் உடல் நஞ்சாகி உன்மத்தம் பிடிக்கும். மேலும்

நரம்புச்சந்நி கோளாறு உண்டாவதுடன் மலச்சிக்கலும் உண்டாகும்.

இதனை தக்க காரணத்திற்காக அளவுடன் பயன்படுத்துவது அபாயமற்றதாகும். தலைவலிக்கு கஞ்சாவின் சத்தினை எடுத்து வெற்றிலை சாற்றுடன் 10 நாட்கள் உண்டுவர குணமாகும்.

பூரணாதி லேகியத்தில் இது பயன்படுகிறது. இந்த லேகியம் ஆண்மையைப் பெருக்கும்.

* * *

## கஞ்சாங் கோரை
### (நாய் துளசி)
## Ocimum album
### (N. O. Labiatae)

*Habit* : *Herb or under shrub*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *It contains volatile oil*

*Action* : *Stimulant, Diaphoretic, Carminative, Restorative Tonic and Stomachic.*

Uses : It is an ideal application to eradicate body lice This mixture is prepared from the leaves and spices. This mixture should be used as an external application for 10 days, which will eradicate body lice. For worm manifestation it should be used as an external application in the anus by heating the leaves. A mixture of leaves and milk is ideal for the children having hicups, cough and phlem.

வயல்வெளிகளில் காணப்படும் இதை கங்கா துளசி, நாய் துளசி என்றும் கூறுவர். உடம்பில் தோன்றக்கூடிய பேன்களை ஒழிப்பதற்கு இது நல்ல மருந்து. இத்தொல்லை நீங்க இதன் இலையையும். கதிரையும் சேகரித்து, வசம்பு சேர்த்து நன்றாக இடித்து உடல்முழுவதும் பூசி சிறிது நேரம் கழித்து குளிக்க வேண்டும். இவ்வாறு 10 நாட்கள் செய்தால் பேன் தொல்லை நீங்கிவிடும்.

ஆசனத்தில் பூச்சி நெளிந்து, இரவு நேரத்தில் தினவு உண்டாக்குமானால், கஞ்சாங் கோரை இலையை வதக்கி,

இளஞ்சூட்டுடன் ஆசனத்தில் வைத்துக் கட்டி வந்தால் பூச்சிகள் அழிந்து அரிப்புத் தொல்லைகள் நீங்கி அமைதியுண்டாகும்.

குழந்தைகளுக்கு உண்டாகும் மாந்தக் கழிச்சல், விக்கல், மூச்சடைப்பு, இருமல், சளி ஆகியவைகளுக்கு பாலுடன் சிறிது இலைச்சாறு சேர்த்துக் கொடுத்தால் குணமாகும்.

* * *

# கடம்பு

**வெள்ளை கடம்பு**

## Anthocephalus cadamba

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit, leaves and bark*

*Constituents* : *Bark contains astringent principle*

*Action* : *Bark is Tonic, Febrifuge, Refrigerant, Antidote and Antirheumatic. Fruit is refrigerant.*

Uses : Root resembles, Sincona root, slightly bitter appearent and cooling. Fresh juice of the bark with equal quantity of lime juicc, opium and alum is applied around the orbit of inflammation of the eyes. Decoction of the bark is given in fevers. Juice of the fruit with cumin is given to children in gastric irritability.

இதன் வேர் கொய்னாவைப் போன்றதாகும். சிறு கசப்புத் தன்மையுடையது. உடல் வெப்பத்தைத் தணிக்கும். மலத்தை இளக்கும். இக்காயைப் பொடித்து ஆக்கிராணப் பொடியாக உபயோகப் படுத்தலாம். இதன் பட்டையில் இருந்து எடுக்கப்படும் கசாயம் சுரத்தைக் குறைக்கும்.

* * *

## கடம்பு
### (நிலக் கடம்பு)

## Asarum europaeum
### (N. O. Rubiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Flowers and leaves*

*Action* : *Plant is Aromatic. Flowers are Diuretic and Anti-spasmodic.*

Uses : The leaves as a decoction cause violent purging and Vomiting The powdered dried plant is given internally with great success in rheumatic artheritis, jaundice, phlegm, strangury, menstural disorders etc., The juice of the leaves is applied externally round the eyes in ophthalmia; medicated oil is prepared by mixing the juice with gingelly oil It is applied to the head in both cases of insanity and other cerebral disorders.

இதன் இலையை சூரணித்து நசியமிட மூக்கின் சளி போகும். இதன் கசாயம் வாந்தியையும், பேதியையும் உண்டாக்கும். வாயுவைக் கண்டித்து, நீரை வடித்து, ஈரல், மண்ணீரல், இரைகுடல் ஆகியவற்றிலுள்ள அழுக்கை அகற்றும். கீல்வாயு, காமாலை, கபம். கல்லடைப்பு, உதிரச்சிக்கல் இவைகளுக்கு இதன் சமூலத்தை சீரணித்து தினம் சாப்பிடலாம். இச்சாற்றைக் கண்ணைச் சுற்றிப் பற்றுபோட கண்வலி நீங்கும். இதை நல்லெண்ணையுடன் சேர்த்து தைலமாக்கி தேய்த்து குளித்தால் பைத்தியம் குணமாகும்.

* * *

## கடம்பு
### (செங்கடம்பு)

## Barringtonia acutanguala
### (N. O. Myrtaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, fruits and leaves*

*Constituents : Bairingtonin and saponin*

*Action : Seeds are Aromatic, Carminative and Emetic,*

Uses : Fruit is used in cases of diarrhoea, suppression of cough, head ache, and fever. The bark of this plant is reputed to possess properties similar to those of cincona and so, it is used as decoction. The fruit as a powder is used like snuff to clear the nostrils, in cases of head-ache, cold and catarrh of the nose. The powdered seeds given in small doses to children, acts as an expectorant and emetic. The powder is also said to cure lesion of the throat and cutaneous affections.

தலைவலி, சுரம். இருமல், பேதி ஆகியவற்றிற்கு இதன்காய் மருந்தாகப் பயன்படுகிறது. இதன் மருத்துவ குணங்கள் கொய்னாவை ஒத்திருக்கும். தலைவலி, ஜலதோசம் முதலியவற்றிற்கு இதன் காயை பொடி செய்து மூக்குப்பொடி போன்று பயன் படுத்தலாம். இதன் பவுடரை தொண்டையில் வரும் வியாதிகளுக்கும் தோல் வியாதிகளுக்கும் பயன்படுத்தலாம்.

* * *

## கடம்பு

**(மஞ்சள் கடம்பு)**

## Adina cordifolia

**(N. O. Rubiaceae)**

*Habit : Tree*

*Parts used : Fruit*

*Constituents : There is a bitter principle*

*Action : Febrifuge and Antiseptic.*

Uses : It is used in skin ailments.

புண், புரை, தோல் வியாதிகளுக்கு குணம்தரும்.

* * *

## கடம்பு
(நாய்க் கடம்பு)

## Hymenodictyon excelsum
**(N. O. Rubiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Constituents* : *Contains toxic alkaloid and Hymenodictine.*

*Action* : *Astringent*

Uses : Bark is used as an astringent.

இதன் மரப்பட்டை துவர்ப்புச் சுவையுடையது.

* * *

## கடம்பு
(சின்னக் கடம்பு)

## Mitragyna speciosa
**(N. O. Rubiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

Uses : The bark and root of the tree are used for fevers and colic. The bark yields a cordage fibre.

மரப்பட்டையும் வேரும் சுரத்தை குறைக்கிறது. மரப்பட்டையிலிருந்து ஒருவகை நார்ப்பொருளை எடுக்கின்றனர்.

* * *

## கடலை

## Cicer arietinum
**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Pods and seeds*

*Constituents* : *Seed contains starch and albuminoids*

*Action* : *Plant is Refrigerant. Seeds are Astringent and Antibilious. Acid fluid is Astringent. Roasted pulse is an Aphrodisiac. Fried seeds are Diuretic. Leaf-juice is Stomachic and Laxative.*

Uses : This is a seasonal crop. Different types of Bengal gram are available, each differ in the colour and size. They are mainly divided into two, namely "nattu kadalai" and "ven kadalai." The young plant can be taken as a food. Kadalai ghadi or Kadalai pulippu can be obtained by keeping a muslin cloth on its growing branch at night. The acid is secreted through out night and this acid is collected in the cloth which could be taken by squezing the cloth. During the growing period seeds are rich in protein. It can be used to treat all diseases relating loss of apetite.

If it is taken in excess it may produce all diseases caused by excess protein. Bengal gram if taken in natural form can give strength to body and its organs. Grinded paste of this is effective in dysentery. This powder of dried Bengal gram is very effective in flatulance and urinary problems. Dried and ground Bengal gram mixed with water and filtered if consumed every day (100 ml) it cures vomiting.

கடலை ஒரு பருவப்பயிர். பலவிதமான கடலைகள் உண்டு. அவை நிறத்திலும, பருமனிலும் வேறுபடுகின்றன. நாட்டுக்கடலை, வெண்கடலை என இருபிரிவாக பிரிக்கப்பட்டுள்ளது. இளம் கடலைச் செடியை சமைத்துண்ணலாம். பூக்கும் சமயம் கிளை களிலுள்ள நுண்ணிய இழைகளில் ஊறும் அமில நீரை சேகரிக்க செடியின்மீது மஸ்லின் துணியை விரித்து வைப்பர். மறுநாள் காலை அத்துணியை பிழிந்து அமிலநீரை எடுப்பர். இதனை கடலைக் காடி அல்லது கடலைப் புளிப்பு என்று கூறுவர்.

கடலையில் புரதச்சத்து அதிகமாக உள்ளது. முளைத்த கடலையை உண்டால் ஊட்டக்குறைவு நோய்களை வரவொட்டாமல் தடுக்கலாம். ஆனால் கடலையை மிக அதிகமாக உட்கொண்டால் புரதச்சத்து மிகுதியால் உண்டாகும் எல்லா நோயும் வரும். பச்சைக் கடலையால் தேகம் தழைக்கும். நுரையீரல் பலம்பெறும்.

முதிராத பச்சைக் கடலையைப் பறித்து உடனே அரைத்து அருந்தினால் சீதபேதி தீரும். கடலையை வறுத்துப் பொடித்து

சாப்பிட்டால் வயிற்றுப் பொருமல், மூத்திரத்தடை தீரும். தண்ணீர்விட்டு அரைத்த கடலையை, நீரில் கலக்கி வடிகட்டி தினமும் அரை கப் வீதம் குடித்தால் தேகம் பலப்படும். வாந்தியை யும் போக்கும்.

* * *

## கடல் தேங்காய்
### (கடற்றேங்காய்)

## Lodoicea sechellarum
### (N. O. Palmae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits*

*Action* : *Preservative and Alexipharmic*

Uses : Kernel is used as a tonic and paste made out of it in conjunction with the powdered horns of sambhar deer and the seeds of strychnos nuxvomica is applied to enlarged glands. For diabetes it is used to reduce the blood sugar level. Kernel is ground with honey is used to check vomiting. A decoction of the fibrous husk is reported to bring down urinary sugar level in diabetic patients. But the effect is temporary.

இது மதுமேகம், நெறிகட்டி இவைகளை குணமாக்கும். கடல்தேங்காய், மான்கொம்புத்தூள், எட்டிவிதை முதலியவற்றை 2: 1: ½ விகிதத்தில் எடுத்து அரைத்து வீக்கங்களுக்கு வைத்துக் கட்டிவரச் சுகமாகும்.

இத்தேங்காயை தண்ணீரில் வேகவைத்துக் கஷாயமிட்டு தினம் 50 ml அளவு அருந்திவர மதுமேக நீரின் சர்க்கரை குறையும்.

இதைத் தேன்விட்டரைத்து நாக்கில் தடவிவர வாந்தி நிற்கும்.

* * *

## கடல் பாலை
(சமுத்திர பச்சை)

## Convolvulus speciosa (or) Argyreia speciosa
(Convolvulaceae)

*Habit* : *Large climber*

*Parts used* : *Leaves and root*

*Constituents* : *Tannin and resins*

*Action* : *Root is Alterative and Tonic.*

Uses : Leaves are used for abscess and for reducing swelling. The under or white side of the leaf is a muturant, where as the upper side of the leaf is used as a discutient. Seeds are used as a tonic and as such used for rheumatism and gout. The root is medicinally used as an alterative. Mixed with vinegar, it is rubbed over the body to reduce obesity.

இதற்கு சமுத்திரபச்சை என்ற மற்றொரு பெயரும் உண்டு. இது எல்லா இடங்களிலும் பயிராகும். கட்டிகள் பழுத்துடைவதற்கும், வீக்கங்களை கரைப்பதற்கும் இதன் இலைகள் உபயோகமாகும். இவ்விலையின் உட்பக்க வெண்ணிறப் பகுதிதான் கட்டிகளை பழுக்கச் செய்கிறது. இதன் விதைகள் உடலுக்கு பலமுண்டாக்கும். இது கீல்வாயு, நரம்பைப் பற்றிய வாத ரோகம் இவைகளுக்கு உபயோகமாகும். இதன் வேரை காடியிற் கலந்து உடம்பிற் தேய்க்க பருத்த தேகம் இளைக்கும்.

* * *

## கடல் ஜாடி

## Mandragora officinalum
(N. O. Solanaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Root, bark and leaves*

*Constituents* : *It contains abasic substance isomeric with hyoscyamine i. e., pseudo-hyescyamine, known as Mandragorine.*

*Action* : *It is Sedative, Anaesthetic, Poisonous, Narcotic and Cholagogue.*

Uses : Root bark and leaves are local anaesthetics and applied on painful swellings. It increases sexual exitement in both sexes.

இதன் வேர்பட்டையும் இலையும் மயக்கமருந்தாகப் பயன் படுகிறது. இதை வீக்கங்களுக்கு அரைத்து பற்றுப்போட குணமாகும். தவிர இருபாலருக்கும் போக இச்சையைத் தூண்டும்.

* * *

## கடாரங் காய்

## Citrus medica

### (N. O. Rutaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit*

*Constituents* : *Similar to Lemon (C. Limonum). Rich in vitamins*

*Action* : *Fruit is an excellant antidote for poisons. Rind is Aromatic, Stimulant, Tonic and Antiscorbutic, Distilled juice of the fruit is Sedative. Seeds, leaves and flowers are Refrigerant, Astringent and Digestive.*

Uses : Its juice makes a pleasant refrigerant drink. Fruits are used as pickles. The juice is refrigerant and astringent. Preserved rind is used as a remedy for dysentery also used for making agricultural implements. Fleshy rind is preserved as marmalade. This is also found useful in scorpion - sting and snake bite.

இதன்சாறு சர்பத் செய்வதற்கும், பழம் ஊறுகாய் செய்வதற்கும் பயன்படுகிறது. இது உடல் வெப்பத்தைத் தணிக் கிறது. மேல் தோலுக்குக் கீழே உள்ள பஞ்சு போன்ற பகுதியை நன்றாக தேனில் ஊறவைத்து சீதபேதிக்கு மருந்தாகப் பயன் படுத்தலாம். இதை தேள் கடிக்கும், பாம்பு கடிக்கும் மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.

* * *

# கடுகு
## (வெள்ளை கடுகு)

## Brassica alba
### (N. O. Cruciferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds and flowers.*

*Constituents* : *Seeds containing a fixed oil*

*Action* : *Seeds are Emetic, Rubefacient, Stimulant, Diuretic. Volatile oil is Stlmulant, Rubefacient and Visicaent.*

Uses : The seeds are rarely used alone, but they are used with black mustards. Ths oil cake is used for fatening sheep. Flowers of this mustard made into a paste with water is applied as a stimulant poultic or plaster to the epigastrium in obstinate vomiting and cholera.

This is mainly used to cure the paediatric ailments. This is also used for scabies in children and in Arthritis. If this is given in small doses, it improves digestion and gives alertness, but this is hot for the humanbody. Persons consumed poison could be treated with this, if they take this with water they will vomit all the poison consumed. The oil extract is very useful in rheumatism and skin ailments.

வெண்கடுகு குழந்தைகளுக்கு உண்டாகும் தோசங்களை நீக்கும். பூச்சிக்கடியின் வீரியத்தைக் குறைக்கும். முடக்குவாத நோயை நீக்கும். இதை அளவாகக் கொடுக்க மந்தம் நீங்கி சீரண சக்தி உண்டாகும். ஆனால் சூட்டை உண்டாக்கும். விஷம் உட்கொண்டவர்களுக்கு இதனை நீரில் அரைத்துக் கொடுக்க குமட்டலின்றி வாந்தியை உண்டுபண்ணி நஞ்சை வெளியேற்றும்.

கடுகு எண்ணையை வாதநோய்களுக்கும், கிரந்தி புண் களுக்கும் மேலே பூசலாம்.

* * *

## கடுகு
### (கருங் கடுகு)

## Brassica nigra
### (N. O. Cruciferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds and leaves*

*Constituents* : *Black mustard contains myrosin and a fixed oil*

*Action* : *Externally oil is Stimulant and mild Counter-irritant. Internally Seeds are Emetic. In moderate dozes they are Digestive and Laxative, also Stimulant, Rubefasient and Vesicant. Leaves are Pungent and Stomachic.*

Uses : Like other varieties, this is also emitic. This is used in the treatment of headache, phlegm, stomachache and psychic disorders. It also exhibits anti-allegic property. If consumed by pregnant ladies, it helps for a trouble free labour (delivery). It is also used in indigestion, hiccups and giddiness.

மற்ற கடுகு வகைகளைப் போலவே இதுவும் வாந்தியை உண்டாக்கும். கருங்கடுகு தலையிடிப்பைத் தரக்கூடிய இருமல், பீனஸம், கோழைகபம், பைத்தியம், காணா விஷக்கடி, வாதகபம், குடைச்சல், வயிற்றுவலி முதலியவற்றை விலக்கும். சுகப் பிரசவித்தைத் தரும். அஜீரணம், தலைச்சுழற்றல், விக்கல் இவைகளை கருங்கடுகு போக்கும்.

* * *

## கடுகு
### (சாதா கடுகு)

## Brassica juncea
### (N. O. Cruciferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents : Seeds contain an essential oil*

*Action : Whole plant is bitter, Aperient and Tonic. Seed is Stimulant and Counter-irritant.*

Uses : This is useful in the treatment of arthritis, rheumatism and gastric disorders. This is also used to reduce the intoxication of alchocol in man by mixing one teaspoon full of Kataku with water. This is similarly used to bring out the consumed poison by vomiting. This is also used in cooling. Even for oedema of legs and joints it is used as an external applicant. This has a bactericidal property, so it is used in pickles as presevative.

குன்மம் வாதநோய் ஆகியவற்றை குணமாக்கும். வயிற்றி லுள்ள மற்ற உறுப்புக்கள் நன்கு வலிமைபெறும். குடிபோதையை நீக்க ஒரு ஸ்பூன் கடுகுடன் நீர் சேர்த்து அரைத்துக் குடிக்கச் செய்தால் வாந்தியுண்டாகும். குடிபோதை நீங்கும். மேலும், விஷம் உட்கொண்டவர்களுக்கும் இங்ஙனம் கொடுக்க விஷம் வாந்தியுடன் வெளிவந்துவிடும். இது சமையலில் சம்பாரப் பொருளாக பயன் படுகிறது. கைகால் வீக்கத்திற்கு கடுகை அரைத்து பற்றிடுவார்கள். கடுகிலுள்ள சில சத்துக்கள் பாக்டீரியாக்களை அழிக்குமாதலால் இதை காய்கறிகள், ஊறுகாய் முதலியவற்றில் சேர்த்துக் கொள்வார்கள். இப்படி செய்வதால் காய்கறிகளையும் ஊறுகாயை யும் கெட்டுப்போகாமல் பாதுகாக்கும்.

* * *

## கடுகு ரோகிணி

### (வெள்ளை கடுகுரோகிணி)

## Picrorrhiza kurrooa

### (N. O. Scophulariaceae)

*Habit : Herb*

*Parts used : Dried rhizomes*

*Constituents : Root contains a glucoside called picrorhizin*

*Action : Anti-periodic, Cholagogue, Stomachic, Laxative and Cathartic.*

Uses : This is bitter in taste. This is not advisable to be consumed by cardiac patients as it has got bad effects on

heart. It reduces the body temperature. The following salts are taken from this: Ceradine, Jervine, Ruby Jervine, Pseudo Jervine, Veratralbine, Veratine. It reduces pulse rate. It is highly toxic, but if used in recommended doses, it is useful in cough, asthma, haematological disorders, juandice and urinery tract infections (U.T.I.)

கடுகு ரோகிணி கைப்புச் சுவையுடையது. இது இருதயத்திற்கு சோர்வுண்டாக்கும்; தாது வெப்பகற்றும். இதிலிருந்து சிவாடைன் (Cevadine), ஜர்வைன் (Jervine), ரூபி ஜர்வைன் (Ruby jervine), சியூடோ ஜர்வைன் (Pseudo jervine), சிரடைன் (Ceradine), வெராட்ரால்பைன் (Veratralbine), வெராடைன் (Veratine) என்னும் உப்புகள் எடுக்கப்படுகின்றன.

தாபசுரம், பிரசவசந்தி (Puerperal eclampsia) நுரையீரல், தாபனரோகம் ஆகிய நோய்களை இது குணப்படுத்தும். நாடி தீவிரத்தையடக்கும். ஆனால், இது ஒரு கொடிய நஞ்சு.

தவிர இது ஆஸ்த்துமா, இரத்த சம்பந்தமான நோய்கள், வெண்குஷ்டம், மஞ்சன் காமாலை, மூத்திரத்தாரை நோய்கள் முதலானவற்றில் உபசரக்காக பயன்படுகிறது.

* * *

## கடுகு ரோகிணி
### (கருப்பு கடுகுரோகிணி)

## Helleborus niger
### (N. O. Ranunculaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Dried Rootlets and rhizome*

*Constituents* : *Glucoside called helleborin*

*Action* : *Cathartic, Emmenagogue, Laxative, Anti-rheumatic.*

Uses: This is less bitter than Vellai Kadugurohini. This is an ideal ingredient in the prepartion of medicines for Piles, Oedema, Leukoderma, Respiratory disorders, disease of the teeth etc. This is mainly used in the system of Unani. The root of this plant is used as decoction for fever. This prevents

the influence of poison of snake and other venomous bites. Generally this is toxic in nature.

இது வெள்ளை கடுகு ரோகிணியைவிட கசப்புத்தன்மை குறைவானது. மூலம், வீக்கம், வெண்குஷ்டம், மூச்சிறைப்பு, பல்ரோகங்கள் போன்ற நோய்களில் இது மருந்தாக செயல் படுகிறது.

யூனானி மருந்துகளில் வெள்ளை கடுகு ரோகிணியைவிட கருப்பு கடுகு ரோகிணியை தான் பெரிதும் பயன்படுத்துவார்கள். காய்ச்சல் மருந்துகளில் இதன் வேரை கஷாயமாக்கி கொடுப்பது வழக்கிலிருக்கிறது.

பாம்பு போன்ற விஷமுள்ளவைகள் கடித்தால் அவற்றின் விஷத்தை உடம்பில் ஏறாமல் முறிக்க இதன் சாரத்தை பயன் படுத்துவார்கள்.

பொதுவில் இது நஞ்சுத் தன்மையுடையது!

* * *

## கடுகு ரோகிணி

**(பச்சை கடுகுரோகிணி)**

## Helleborus viridis

**(N. O. Ranunculaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Dried rootlets and rhizome*

*Constituents* : *Glucoside, helleborin*

*Action* : *Depressant, Sedative, Highly poisonous, Hydrogogue, Cathartic and Emmenagogue.*

Uses: This is uesful in the treatment of respiratory disorders. This gives strength to lungs and trachea. It reduces blood pressure, normalises the pulse rate. This is more anti-toxic than other varieties.

இது நுரையீரல் நோய்களை குணப்படுத்தவல்லது. நுரையீரலுக்கு பலத்தை தரும். ரத்தகொதிப்பை குறைக்கும். நாடித்துடிப்பை குணப்படுத்தும். மற்ற கடுகுரோகிணி வகைகளை விட அதிக விஷத்தன்மை உடையது.

* * *

# கடுக்காய்

## Terminalia chebula

### (N. O. Combretaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Dried fruits, immature fruits, mature fruits myrobalans and galls.*

*Constituents* : *Myrobalans contain astringent principles and a large amount of gallic acid and Chebulinic acid.*

*Action* : *Mvrobalans are Affective, Purgative. Fruit is Astringent, Alterative, Laxative, Tonic, Rejuvenator and Purgative.*

Uses : There is seven varieties in Kadukkai. This is mainly used in the disease of "Thridosha". It is very effective in toothache and chronic ulcers. Though it is very useful in curing many diseases, it is better to avoid this by the following patients: patients with less digestive power, starving people, pregnant ladies and blood donors etc.

கடுக்காய் ஏழு வகையுண்டு. அவை : விஜயன், சரோஜினி பிருதிவி, அமிர்தம், சிவந்தி, திருவிருத்தி, அபயன் என்பனவாம். கருங்கடுக்காய், செங்கடுக்காய், வரி கடுக்காய், பால் கடுக்காய் இந்நான்கும் மேற்படி ஏழு இனங்களில் அடங்கினவையே. தவிர காபூல் கடுக்காய் என வேறொரு ஜாதியுமுண்டு. இது யூனானி மருத்துவத்தில் ஏராளமாய் பயன்படுகிறது.

கடுக்காயை சிறப்புடன் குறிப்பிட அமிழ்தம்—காயகற்பம் என்று சொல்வார்கள். முப்பிணிகளுக்கான நோய்களில் கடுக்காய் முதலிடம் வகிக்கிறது. பல்நோயிலும், ரணத்தை ஆற்றுவதிலும் தீவிரமாக செயலாற்றுகிறது.

அரு சுவைகளில் உப்பு நீங்கலாக மற்ற ஐந்து சுவைகளும் இதில் அடங்கியுள்ளன. ஆகையால் வாத. பித்த, கபரோகங்களை யும் போக்கும். குற்றங்களில் ஒன்றை அதிகமாக்கி மற்றொன்றைக் குறைப்பது போன்ற செயல் தன்மை இதற்கு இல்லை. தாய் பிள்ளையை வளர்ப்பது போல் மனிதனை வளர்க்கும் தன்மை கொண்டது என்று சொல்வர்.

இவ்வளவு சிறப்புகள் பெற்றிருந்தாலும் கீழ்கண்டவர்கள் இதன் தவிர்த்தல் நல்லது.

1. சீரண சக்தி குறைந்திருப்பவர்கள்
2. வறட்சியான உணவு உட்கொள்பவர்கள்
3. பட்டினி கிடப்போர்
4. மகப்பேறு அடைந்துள்ள பெண்டிர்
5. இரத்த தானம் செய்தோர்
6. தொண்டை கட்டியுள்ளவர்கள்.

* * *

## கடுக்காய்
### (வெள்ளை கடுக்காய்)

## Terminalia pallida
### (N. O. Combretaceae)

*Habit* : *Tree*
*Parts used* : *Bark and fruit*
*Constituents* : *Similar to T. Chebula. Bark is mildly diuretic.*
*Action* : *Similar to T. Chebula.*

Uses : If this is consumed regularly it rejuvenate the health and reduces greying. It is a good medicine in stomatitis. It is an ideal external application for fistula. It could be used as as a laxative and apetizer. It stops nasal bleeding.

இந்த கடுக்காயில் முரப்பா செய்து சாப்பிட நரைதிரையை மாற்றும். வாய்புண்ணை ஆற்றும். வெளிமூலத்திற்கு இதன் காயை அரைத்து தடவ குணமாகும், மலசிக்கல் தீர உள்ளுக்கு சாப்பிட வேண்டும். மேலும் பசியைத்தூண்டும். மூக்கில் வரும் ரத்தத்தை நிறுத்தும்.

* * *

## கடுக்காய் பூ
### (கர்க்கடகசிங்கி)

## Rhus succedanea
### (N. O. Anacardiaceae)

*Habit* : *Tree*
*Parts used* : *Fruit and flower*

*Constituents : Essential oil*

*Action : Astringent, Tonic, Expectoraut and Stimulant. Gall is also a cholagogue.*

Uses : This is known as"kadagusivangi"useful in many ways Fruit and flowers are used in medicinal preparations. The lactic secretion of the plant which is condensed is called kadukkaipuli. The flowers should be well cleaned before usage; The lactic secretion (milk) is useful as a general tonic for health. It is also used to increase bile secretion. For cough, piles ane fistula, it is an ideal medicinal preparation. This could be used as throat liozenger, to get relief from cough. This is also proved effcctive in leucoderma and other skin ulcers. For the cure of leucoderma it is used along with sugar and milk but non vegetarian food should be avoided while taking this medicine.

கர்க்கடகசிங்கி என்ற பெயருடைய இது பலவகைகளில் பயன்படுகிறது. இதன் காயும் பூவும் பயன்படுகிறது. பூச்சிகள் மரத்தைத் துளைக்க அதனின்று வழிகின்ற பால் கட்டுவதாலுண்டா வதற்குக் கடுக்காய்பூ என்று பெயர். இதையே கர்க்கடகசிங்கி என்றும் கூறுகின்றனர். பூவை உபயோகிக்குமுன் பூச்சிக் கூடுகளை நீக்க வேண்டும். மரத்தின் பாலினால் கிடைக்கும் கடுக்காய்ப்பூவில் பூச்சிகள் இருக்காது. இது தட்டையாகவும் ஓரங்களில் மலர் போன்றும் இருக்கும். உடலை உரமாக்குதல் செரிப்புண்டாக்குதல் கோழையகற்றுதல் வெப்பமுண்டாக்குதல், பித்தநீர் பெருக்குதல் ஆகிய குணங்கள் இதற்கு உண்டு.

மேலும் இது சீத்ளத்தால் உண்டாகும் இருமல், மூலம் இரத்தமுலம், அதிஉஷ்ணம் போன்றவற்றை நீக்கும். இதை வாயிலடக்கிக்கொண்டு இதன் சாரத்தை விழுங்க இருமல் அடக்கும். இதை காடிவிட்டு அரைத்துப் பூச வெண்குட்டம் நீங்கும். புரை யோடிய விரணத்தையும், இரத்த மூலத்தையும் இதன் புகை குண மாகும். இதை தேனுடன் சாப்பிட தேகம் புஷ்டியாகும்.

இதனை சர்க்கரையுடன் கலந்து உட்கொண்டு பால் குடிக்க வெள்ளைப்போக்கை நிறுத்தும். பின்பு கோதுமை, நெய் சேர்த்துக் கொள்ளவேண்டும். இறைச்சியை தவிர்க்கவேண்டும்.

* * *

# கட்டுக்கொடி

## (பெரிய கட்டுக்கொடி)

## Cocculus villosus

## (N. O. Menispermaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Root cnd leaves*

*Constituents* : *Resin*

*Action* : *Root is Bitter and Acidic, Sudorific, Alterative Laxative and Demulcent.*

Uses : Thls is found in marshy place. It is similar to Cypalondsa indico. The fruits and flowers are very small in size. The stem of the flower and fruit is very slender and look like golden wire and cannot be cut easily. If the extract is added with water it becomes green in colour. It is used in dysentery itching in the anus and burning sensation. It is an ideal medicine to treat primary complex in children. To ward off demon and ghost it is tied on the hip, but it is absolutely a superstetious belief.

நீர் நிலைகளுக்கு அருகில், ஈரப்பசையுள்ள இடங்களில் வளரும் கொடி வகை. கோவைக் கொடியைப் போலவே பூத்துக் காய் விடும். காயும் பூவும் மிகச் சிறியதாக இருக்கும். இதன் காம்பு தந்தி கம்பிப்போல வெகு நீளமாக ஓடி அதிக இடை வெளியிட்டு இலை பரவும். இழுத்து அறுக்க எளிதில் அறுபடாது.

இதன் இலைச்சாற்றை பிழிந்து அதை நீரில் விட்டு பார்க்கச் சிறிது நேரத்திற்கெல்லாம் நீர் பச்சையாய் கட்டிப் போகும். சீதபேதி ஆசனக்கடுப்பு, எரிச்சல், பெரும்பாடு, நீர் வழி எரிச்சல் வாத வலிகள் நீக்கும். சிறு குழந்தைகளுக்கு உண்டாகும் மாந்த கணம் முதலியவை தீரும். பூத பிசாசு கேஷ்டைகளுக்கு இடுப்பில் கட்டும் மூடப்பழக்கமும் இருந்து வந்தது.

* * *

## கட்டுக்கொடி
### (சிறிய கட்டுக்கொடி)

## Cocculus hirsutus
### (N. O. Menispermaceae)

*Habit* : *Scandent shrub*

*Parts used* : *Leaves and root*

*Constituents* : *Similar to C. villosus*

*Action* : *Alterative, Demulcent, Bitter, Laxative and Anti-bilious.*

Uses : The juice of the leaves contain a mucilage. When mixed with water it forms a jelly which is taken as a cooling medicine for gonorrhoea and used externally for oedama and impetigo. The root is bitter, alterative and is used with other ingredients for bilious dyspepsia, rheumatism and stomach ache in children.

இலைச்சாறு உடலுக்கு குளிர்ச்சித் தருகிறது. இலைச்சாற்றை தண்ணீரில் கலக்கிட, தண்ணீர் கட்டும் (Jelly). மேலும் இதை உட்கொள்வதால் விந்துவை பலப்படுத்துகிறது, உடலில் உப்பை குறைக்கிறது. இதன் வேர் வாத நோயை குணப்படுத்துவதுடன் குழந்தைகளின் வயிற்றுவலியைக் குறைக்கிறது.

* * *

## கணப் பூண்டு

## Exacum pedanculatum
### (N. O. Gentianaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Deobstruent, Febrifuge, Stomachic and Tonic.*

Uses : It possess tonic and stomachic properties and are employed as substitute for gentian.

இது உடலுக்கு பலத்தை அளிக்கிறது. பசியை தூண்டுகிறது.

* * *

# கண்டங்கத்திரி

## Solanum xanthocarpum

**(N. O. Solanaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *A gluco alkaloid termed as solanocarpine*

*Action* : *Plant is an Expectorant, Carminative and Diuretic. Seeds are Hydragogue. Fruit is Capestrol.*

Uses : This thorny plant is found in all common places. The root ash is used for medical preparations. This extract of the leaf along with oil is an external ointment for skin disorders. The fruit without seed is used as a vegetable, regular consumption of this will give relief in cough and stomach disorders. The decoction of root and pith is used to treat fever. This is also a general tonic for health. For burning mincturation the extract of the leaves along with some quantity of honey is an ideal remedy. This same preparation could be used for dog bites. The paste of the seed is also an application for oedema of the joints. This is good for the patients of tuberculosis, cough, respiratory infections, itching etc. This also helps to increase the body complexion.

இது எல்லா இடங்களிலும் இருக்கும் முட்செடியாகும்.

கண்டங்கத்திரியின் வேரை உலர்த்திப் பொடித்து சூரணம் செய்துகொள்ள வேண்டும். இதை சாப்பிட்டு சுடுநீர் குடிக்க நீர்க்கோர்வை, இருமல், வாதக் கோளாறுகள் ஆகியவை குணமாகும்.

இதன் இலைச் சாற்றை, தேங்காயெண்ணெயோடு சேர்த்துக் காய்ச்சி கால் கைகளிலுள்ள வெடிப்புகளுக்குத் தடவி வர மாறி விடும். இதன் காயைத் தட்டி விதையைப் போக்கிவிட்டு குழம்பு, சாம்பார் செய்து சாப்பிடுகின்றனர். இதனால் உடல் அலுப்பும், இருமலும் சமனமாகி விடுகின்றன.

சாதாரண சுரமுள்ள போது கண்டங்கத்திரி வேரையும் சுக்கையும் சேர்த்துக் கஷாயம் வைத்து அருந்தி வருகின்றனர். இதனால் உடல் சோர்வும் தளர்ச்சியுங் கூட நீங்கிவிடும்.

உடலில் அதிக உஷ்ணம் ஏற்படும் போது சிறுநீர் இறங்காமல் வலி ஏற்படும். அச்சமயங்களில் கண்டங்கத்திரி இலைச் சாற்றோடு சம அளவு தேன் கலந்து ஒரு வேளை சாப்பிட சுகமாகும். இதையே நாய் கடிக்கும் கொடுக்கலாம். கை, கால், வீக்கங்களுக்கு இதன் விதையை நீரில் அரைத்துப்பற்றுப் போட குணமாகும்.

இது தச மூலங்களில் ஒன்றாகும். இதன் பழம் இருமல், சுவாசம், க்ஷயம், கபம், பல்லரனை, நமைச்சல் ஆகிய நோய்களை போக்கும். இதன் பழத்தை வேகவைத்து கடைந்து வடிகட்டி எண்ணெய் சேர்த்துக் காய்ச்சி வெண்குட்டத்தின் மீது பூசிவந்தால் வெண்மை மறைந்து தேக நிறம் உண்டாகும்.

* * *

## கண்டங்கத்திரி

(வெள்ளை கண்டங்கத்திரி)

Solanum hirsutum

(N. O. Solanaceae)

Uses : Similar to S. xanthocarpum.

* * *

## கண்டலங்காய்

Ceropa granatum

Uses : This is very effective in the treatment of ilar iasis.

யானைக்கால், மார்புவீக்கம், ஆகியவற்றிற்கு குணம் தரும்.

* * *

## கண்டத் திப்பிலி

**See : Piper dichotama**

பார்க்க : திப்பிலி

* * *

## கண்டில்

## Avicennia officinalis

**(N. O. Verbenaceae)**

*Habit* : *Shrub or a small tree*

*Parts used* : *Bark, fruit and leaves*

*Constituents* : *It contains an astringent principle*

*Action* : *Bark is Stimulant, Expectorant, Emmenagogue and Astringent. Root is Astringent and Aphrodisiac.*

Uses : The wood is brittle and coarse-grained and is used only as fuel. In paper making trade, it is readily pulped by the soda process, on account of the shortness of its fibers. This pulp is not easily bleachable. The wood-ash is rich in alkali. The kernal of fruit, though bitter, is used as edible. The leaves are used as cattle food. The green bitter and somewhat aromatic resin which oozes from the bark is said to posess medicinal properties. Bark is also used in the treatment of small pox.

இதன் காய் கசப்புத்தன்மை உடையதானாலும் இதை சிலர் சாப்பிடுவர். மரத்தின் பட்டைகளுக்கு நடுவிலிருந்து வழியும் பசைக்கு மருத்துவ குணங்கள் உண்டு. இப்பட்டை சின்னம்மையை குணப்படுத்தும். அதன் வீரியத்தைக் குறைக்கும்.

* * *

## கண்டு பரங்கி
**(சிறு தேக்கு)**

## Premna herbaceae

**(N. O. Verbenaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Root and leaves*

*Constituents* : *Root contains resin and alkaloid*

*Action* : *Root is Stimulant, Alterative, Stomachic and Tonic. Leaves are Alterative and Anti-rheumatic.*

Uses : As a poultice, leaves are used in promoting the suppuration of boils. Powdered roots are given with honey for bronchial asthma. Fresh juice of the root with ginger and warm water is given in asthma.

இதற்கு சிறுதேக்கு என்பது மற்றொரு பெயராகும். இதன் இலை, வேர் ஆகியவை பயன்படுகின்றன: கைப்பும், துவர்ப்பும் இதன் சுவையாகும். வெப்பமுண்டாக்குதல், தாதுவெப்பமகற்றுதல் ஆகியவை இதன் குணங்களாகும்.

கண்டு பரங்கி இலையை அரைத்து வீக்கம், கட்டி முதலியவை களுக்குப் பற்றிட்டால் அவை பழுத்து உடைந்து ஆறிவிடும். இதன் வேர்ச்சூரணத்துடன் சம அளவு சுக்குத்தூள் சேர்த்து தேனில் கலந்து கொடுக்க சுவாசகாசம் தீரும்.

இதன் வேர்ச்சாற்றுடன், இஞ்சிசாறு கலந்து சுடுநீருடன் அருந்த ஆஸ்துமா குறையும். இதன் இலை சுரம், இருமல், வாதநோய் ஆகியவற்றை குறைக்கப் பயன்படுகிறது. இதன் சமூலம் பாம்புகடி, தேள்கடி விஷத்தை குறைக்கும்.

மேலும் இதனை உட்கொள்ள கிரந்தி, திரிதோஷம், மன நோய் (Hysteria) ஆகியவை குணமாகும்.

* * *

## கதிர் பச்சை

## Pogostemon patchouli

**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and flowering spikes*

*Constituents* : *Dried tops yield an essential volatile oil called "Oil of patchouli"*

*Action* : *Diuretic, Carminative, Expectorant and Hydragogue.*

Uses : It is used in the treatment of head ache, heaviness of the head, asthma and rheumatism. It is given with Basil seeds in scanty urine and biliousness

தலைவலி, தலைபாரம், ஆஸ்துமா, கபநோய், வாததோய் இவைகளுக்கு குணம் தரும். துளசிவிதையுடன் இதை சாப்பிட சிறு நீர் நன்கு பிரியும்.

* * *

## கத்தக் காம்பு

## Nauclea aculeata

### (N. O. Rubiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Catechin and tannic acid*

*Action* : *Astringent, Anti-spasmodic, Anti-dysenteric and Haemostatic.*

Usss : It is used in the treatment of dysentery, piles, ulcer, tooth ache and flatulence. It is also used in the treatment of diarrhoea.

திரிதோஷம், வயிற்றுவலி, சீதபேதி, ரத்தம் விழுதல், குன்மம், பல்நோய் ஆகியவற்றை குணமாக்கும். பேதியைக் கட்டுப்படுத்தும். வெள்ளை ஒழுக்கு மருந்துகளில் இதனை துணை மருந்தாக பயன் படுத்துவர்.

* * *

## கத்திரிக்காய்

## Solanum melongena

### (N. O. Solanaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Fruits, roots and leaves*

*Constituents* : *Leaves are the main source of anti-scorbutic acid and vitamin 'C'.*

*Action* , *Stimulant, Hypnotic, Expectorant, Stomachic, Digestive and Purgative.*

Uses : The fruit is generaly used as a vegetable. Pierced all over with the needle and fried in gengelly oil the fruit is employed as a cure for toothaches. Both leaves and fruit produce a marked drop in blood cholestrol level. Leaves are used in cholera, bronchitis, dysuria and asthma. Brinjals are recommended in lever complaints. Root is used as one of the ingradients in anti-rheumatic medicines.

இது ஒரு பருவச்செடி, கைப்பும் துவர்ப்பும் இதன் சுவையாகும் வெப்பமுண்டாக்கும். இது பத்தியத்திற்கு உதவும். பித்தத்தால் வந்த கபத்தைப் போக்கும். ஆனால் படை, கரப்பான், சொறி சிரங்கு, கிரந்திப்புண் ஆகியவற்றை அதிகப்படுத்தும் மேக ஊரலை அதிகப்படுத்தும்.

இரைப்பு, கோழை, வாததோஷம் இவைகள் நீங்கும். குன்ம நோய்கள் உள்ளவர்கள் இதை சாப்பிடக்கூடாது. கரப்பான், பித்த ரோகம், குட்டம், பெருவிரணம், சுச்கில நட்டம், தேக அனல் இவைகளை உண்டாக்கும்.

* * *

## கத்திரி

### (கொத்து கத்திரி)

### Solanum stramonifolium

Uses : Similar to S. melongina.

* * *

## கத்திரி

### (கண்டங்கத்திரி)

see: Solanum xanthocarpum

* * *

## கமேலா

**(கபிலி, குரங்கு மஞ்சணத்தி)**

## Mallotus philippinensis

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Glands and hairs from the capsules or fruits.*

*Constituents* : *Resins, Rottlerin, Iso-rottlerin and mallotoxin.*

*Action* : *Cathartic, Anthelmintic, Styptic, Purgative, Aphrodisiac and Lithontriptic.*

Uses : Kamela powder is used as an anthelmintic. Kamela taken internally relieves leprous eruptions and also externally it has been used in skin diseases. Kamela powder is applied in syphilitic ulcers. It is very effective in the treatment of taenia or tape worm. The powder possess purgative properties which is used as an external application for parasite infection of the skin such as scabies, ringworm and herpes.

இதன் பொடியை உட்கொள்ள வயிற்றிலுள்ள நாடா புழுக்களையும் பிற குடல் புழுக்களையும் வெளியாக்கும். எல்லாவித சர்ம நோய்களுக்கும் இதை வெளியே பூசப் பயன்படுத்துகின்றனர். இங்ஙனம் செய்வது நோய்களின் வீரியத்தைக் குறைக்கும்.

* * *

## கம்பு

## Pennisetum glaucum or P. typhoideum

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Rich in proteins and starch*

*Action* : *Refrigerant, Restorative. Alterative, Herpetic and Scorbutic.*

Uses : It is a nutrituous food. Unleavened bread and cakes are made from its flour. The green leaves are parched and eaten.

கம்பு இனிப்புச்சுவையுடையது. உடலை பலமாக்கும். மேலும் உடற்கொதிப்பையகற்றி குளிர்ச்சியை தரும்.

* * *

## கரந்தை

### (சிவகரந்தை)

## Sphaeranthus indicus

### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Stems, leaves, flowers, roots and seeds*

*Constituents* : *Seeds contain oil. Stems, leaves, and flowers contain sphaeranthine*

*Action* : *Herb is Bitter, Stomachic, Stimulent, Alterative, Pectoral and Demulcent. Root is Anthelmintic.*

Uses : Juice of the plant is useful in liver and gastric disorders. The paste of the herb mixed with oil is applied in itching. The powdered seeds and roots are given as an anthelmintic. The decoction of root is useful in piles. Leaf juice is boiled with milk and sugar candy is used in the treatment of cough. It is also used in glandular swelling of the neck and in jaundice.

இதன் சாரம் கல்லீரல் மண்ணீரல் நோய்களை குணமாக்குவதாகும். உடல் நமைச்சலுக்கு இச்செடியை அரைத்து பற்றுப் போட உடன் குணமாகும். வேர்க்கஷாயம் மூல நோயை குணமாக்குகிறது. இதன் இலைச்சாற்றுடன் பால், வெல்லம் சேர்த்து கொடுக்க இருமல் குணமாகும். இது மஞ்சட் காமாலையை குணப்படுத்தும். மேலும் இதன் இலைச்சாறு, அக்கினி மாந்தம், காசம், கரப்பான் போன்றவற்றிற்கு சிறந்ததாகும். இதன் இலையை நிழலில் உலர்த்திப் பொடித்து சூரணமாக பயன்படுத்த விந்து நஷ்டத்தை ஈடுகட்டலாம். மேலும் இது உஷ்ணத்தினால் தோன்றும் வாந்தியை நிறுத்தும்.

* * *

## கரந்தை
### (விஷ்ணு கரந்தை)

## Sphaeranthus hirsutus
### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Similar to S. indicus*

*Action* : *Simlar to S. indicus.*

Uses : The smoke of dried leaves give relief from asthma. Powdered leaves are used in chronic skin diseases. The drug is also useful in urethral discharges and jaundice.

காய்ந்த இலையின் புகையை சுவாசிக்க ஆஸ்துமா தொல்லைகள் குணமாகும். இலை சூரணம் தோல் நோய்களை நீக்கும். மஞ்சட் காமாலையை குணமாக்கும்.

* * *

## கரந்தை
### (கொட்டைக் கரந்தை)

## Shphaeranthus zeylanicus
### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Similar to S. indicus*

*Action* : *Astringent, Diuretic. Stomachic, Anti-spasmodic, Anti-syphilitic, and Anti-emollient.*

Uses : This has two varieties namely "red" and "white". This gives relief from gonorrhoea, psoriasis leucorrhoea. This is laxative. This is very effective in the treatment of rheumatism, mental disorders, skin ailments and boils. The treatment for the above diseases is as follows: Dried whole plant powder has to be taken daily once. Powdered leaves if taken twice daily, give relief from skin diseases.

Powder of its seed mixed with honey could be given in the treatment of cough and indigestion. This powder is an anthelmintic. powdered root bark mixed with butter is an external application in the treatment of bleeding piles.

இது தென்னிந்தியாவிற்கேயுரியது. இதில் வெண்மை, செம்மை என இரு பிரிவுகளுண்டு. இது ஒழுக்குப் பிரமேகம், வெள்ளைப்படுதல், கரப்பான், சொறிசிரங்கு இவற்றை குணமாக்கும். மேலும் இது சிறந்த மலமிளக்கியாகும். வாதம், பையித்தியம், முதலியவற்றையும் ஒழிக்கும்.

இதன் சமூலத்தை உலர்த்தி பொடித்து ஒரு வேளைக்கு ஒரு ஸ்பூன் வீதம் சாப்பிட மேற்கண்ட நோய்கள் குணமாகும். இலையை நிழலில் உலர்த்தி பொடித்து தினம் இருவேளை சாப்பிட தோல் நோய்கள் நீங்குவதுடன் தாது பலப்படும்.

விதைச் சூரணத்தைத் தேனில் கலந்து கொடுக்க அஜீரணம், இருமல் தீருவதுமின்றி மலக்கிருமிகளும் வெளிப்படும்.

வேர்ப்பட்டையை அரைத்து வெண்ணெயிற்கலந்து கொடுக்க இரத்தமூலம் குணமாகும். இதையே வெளிப்பிரயோகமாக உபயோகிக்கலாம்.

* * *

## கரந்தை

### (நாரக் கரந்தை)

## Blumea balsamifera

### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Astringent, Anthelmintic, Sudorific, Carminative and Expectorant.*

Uses : It is used in medicines and magic. The leaves of the plant are used in cases suppression of urine, chest pain, anaemia. especially of "vatha" type. There is also another species called pterdonta. It consolidates mercury.

Fresh juice of the leaves is dropped into the eyes in chronic purulent discharges. The decoction of dried herb is

given as an anthelmintic and also in dysentery and chronic uterine discharges. It is particularly useful in the disease of the nose called "Ahwah" peculiar to Bengal, and accompanied by strong fever, heaviness in the head, pain in the neck, shoulders and joints.

இதன் கற்பூர எண்ணெய் மணம் வீசும். இது இடிந்த சுவர்களின் மீது வளரும். இதன் இலையானது நீர்க்கட்டு, மார்பு நோய், வாத சோகை இவைகளைப் போக்கும். இது ரசத்தை கட்டும் காய சித்தி மூலிகையாகும். புற்றுநோய் உள்ளவர்கள் உட்கொள்ள நோய் முற்றாமல் குணமாகும்.

* * *

## கரப்பான் பூண்டு
### (பஞ்சு பூண்டு)

## Lepidagathis cristata
### (N. O. Acanthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Tuber*

*Action* : *Antidote, Antisyphylitic and Antirheumatic.*

Uses : This is used in medicinal preparation as a whole along with the roots. The roots are burned and powdered. This powder is mixed with cocoanut oil and made into a paste and applied externally on the skin of the children to cure scabis and other types of itchings. This preparation, mixed with commonly available mritharsingi and castor oil and made into a paste. This paste is very useful in chronic dandruff, scabis and skin ulcers. Fish and eggs should be avoided while the patient is using this medicine.

To treat arthritis, constipation and urinary blockage this plant along with the leaves of Mimosa pudica is added and made into a powder and small quantity of this powder if consumed twice a day with honey will cure the above said disorders. If the body temperature goes up it can be brought

down by consuming along with milk or butter. This powder is highly effective in insect bites, scorpion bites etc. This powder if consumed with little water will releive pain and itching.

பஞ்சு பூண்டு என்றும் இதனைக் கூறுவர். இதற்குப் பல மருத்துவ பயன்கள் உள்ளன உடலில் உள்ள மிக நுண்ணிய கிருமிகளை அழிக்கக் கூடியது. தோல் நோய்கள் எல்லாவற்றையும் தீர்க்கக் கூடியது.

இதனை ஆணிவேருடன் பிடுங்கி உலர்த்தி நெருப்பிலிட்டு கொளுத்தி சாம்பலாக பூக்காமல் கரியாக்கி தூள் செய்து உபயோகிக்க வேண்டும்.

இத்தூளை தேங்காய் எண்ணெயுடன் கலந்து குழந்தைகளுக்கு வரும் தோல் நோய்களுக்கு ஒரு நாளைக்கு இரண்டு வேளைவீதம் நான்கு நாட்கள் தடவ குணமாகும்.

இத்தூள், விளக்கெண்ணெய், மிருதார்சிங்கி மூன்றையும் கலந்து மேக ரோகங்களுக்கும், தோல் நோய்களுக்கும் தடவி வர விரைவில் குணம் அடையும். இச்சமயங்களில் மீன் முட்டை உண்ணு தல் கூடாது.

கரப்பான் பூண்டு, தொட்டால் சிணுங்கியிலை இரண்டையும் தூளாக்கி சிட்டிகையளவு எடுத்து தேனில் குழைத்து தினம் இரண்டு வேளை பாலுடன் சாப்பிட்டு வர வாத நோய், கபம், மலச்சிக்கல் மூத்திரத் தாரையின் குற்றங்கள், சிறுநீர் தடை ஆகியவை நீங்கும்.

இத்தூளை கருவண்டு, செவ்வண்டு, கொள்ளுப்பூச்சி, பூரான், செய்யான், தேள்கடித்த இடங்களிலும், நமைச்சல், குடைச்சல் வலி உள்ள இடங்களிலும் உள்ள தழும்புகள் கருமை நிறமாகி விட்டால் மூன்று சிட்டிகையளவு எடுத்து வெந்நீர் விட்டு குடிக்க குணமாகும்.

* * *

## கரிசலாங்கண்ணி

(கரிசலாங்கண்ணி)

## Eclipta alba

**(N. O. Compositae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents : Eclibtine*

*Action : Alterative, Deobstruent, Hepatic, and nTonic. Rootsand leafs are Cholagogues.*

Uses : This is used in the manufacture of eht different kind of medicines. This is an ideal medicine for jaundice. This can be used as a liver tonic. The root of this is used to strengthen body and also the girths. This is a laxative. The leaf juice mixed with oil can be used as a hair tonic. This is very effective in the treatment of eye diseases, jaundice, anaemia and dropsy. This is a remedy for all internal organ's disorders. If its leaves chewed it can strengthen the gum. This cures asthma. If taken regularly it solves all e ye problems.

கரிசலாங்கண்ணி பலவிதமாக மருந்துகளுக்குப் பயன்படுகிறது. காமாலைக்கு இது மிக நல்லது. கல்லீரலை தேற்றக்கூடியது. வீக்கத் தைக்குறைக்கக்கூடியது. இதன் வேர் உடலுக்கு பலத்தைக் கொடுத்து மேனியை வளர்க்கக் கூடியது. மலமிளக்கியாகும். கரிசலாங்கண்ணி இலை சாற்றினை தேங்காய் எண்ணெயில் சேர்த்துக் காய்ச்சி தலை யில் தடவ முடிவளர்வதோடு கண்பார்வையையும் விருத்தி செய்யும்.

இதனை மக்கள் கீரையாக உபயோகிக்கின்றனர். இது இரத்தத்திலுள்ள அமிலத்தன்மையைக் குறைக்கும். இதனால் இரத்தசோகை, காமாலை, பாண்டு ரோகங்களும் தோல் நோய் களும் குணமடையும்.

உள் அவயங்களில் ஏற்படும் எல்லா விதமான அழற்சிகளுக்கும் இது கை கண்ட உணவுமருந்தாகும். இதன் இலையை மென்று சாப்பிட பல் ஈர்கள் கெட்டிப்படும். இது கபத்தையும் வாதத்தையும் ஒழிக்கும் குணம் உள்ளதால் ஆஸ்துமாவுக்குச் சிறந்தது. நெடு நாட்களாக உட்கொள்பவர்களுக்கு கண்நோய்கள் குணமாகும்.

* * *

## கரிசலாங்கண்ணி

**(மஞ்சள் கரிசலாங்கண்ணி, பொற்றலை கையான் தகரை)**

### Eclipta prostrata

**(N. O. Compositae)**

*Habit : Herb*

*Parts used : Whole plant*

*Action* : *Emetic, Alterative, Deobstruent, Carminative, Refrigerant and Demulcent.*

Uses : It relieves ulcer. This is used in the calcination of several minerals. If taken regularly it gives relief from anaemia and jaundice. Its leaf juice drop is very effective in ear problems. Juice of leaves mixed with gingelly oil or cocanut oil is used as a hair tonic. Root powder is very effective in the treatment of spleen and liver disorders. It reduces swellings. This could be used as laxative also.

இது உடலிற்கு பொற்சாயலையும், விழிக்கு ஒளியையும் தெளிவையும் உண்டாக்கும். குன்மகட்டியைப் போக்கும். பலவித செந்தூரங்கள் செய்யவும் உதவும்.

இதை உட்கொள்ள பாண்டு, சோபை, காமாலை முதலிய நோய்கள் தீரும். இதன் இலைச்சாற்றை நல்லெண்ணெய் அல்லது தேங்காயெண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சித் தலைக்கு தேய்க்க முடிகருத்து வளரும். வேர் சூரணம் கல்லீரல் மற்றும் மண்ணீரல் நோய்களுக்கும் சருமநோய்களுக்கும் கொடுக்க குணமாகும். சிறு குடலுக்கு வலிமை தரும். வீக்கங்களை குறைக்கும்.

இதை கீரையாக அடிக்கடி பருப்பு, நெய் சேர்த்து உணவுடன் உட்கொள்ள மலச்சிக்கல் நீங்கும். பொதுவாக இது வீட்டுத் தோட்டத்தில் வளரக்கூடியதாகையால் வளர்த்து பயனடையலாம்.

* * *

## கரிமுள்ளி
### (பப்பர முள்ளி)

## Solanum indicum
### (N. O. Solanaceae)

*Habit* : *Herb or under shrub*

*Parts used* : *Root and fruit*

*Constituents* : *It contains solanine and solanidine*

*Action* : *Astringent, Resolvent, Cordial, Aphrodisiac, Dio-phoretic, Expectorant, Diuretic, and Stimulant.*

Uses : Root is carminative and expectorant, useful in coughs and catarrhal affections, dysuria and colic. A decoction of the root is prescribed as a tonic and is also used in difficult parturition. Root is powdered and used for the treatment of nasal ulcers. It is one of the ingredients of Dasamula. Leaves are also used as vegetables. The smoke from burning seeds is said to relieve toothache. It is used against itch and ringworm. Alcoholic extract of fruits is active against staphylococcus aureus and Escherichia coli. The extract of leaves also is active against Escherichla coli.

ஆஸ்துமா நோய் உள்ளவர்களுக்கு இதை கொடுக்க கபத்தை வெளியாக்கும். மார்புசளியை அகற்றும். வாத வலியையும் பிற தொல்லைகளையும் குறைக்கும். தேள்கடி விஷத்தை குறைக்கும். இதன் வேர்க் கசாயம் உடலுக்கு பலத்தைத் தரும். சிறுநீர்த்தாரை எரிச்சலை குணப்படுத்தும். சிலர் இந்த இலையை கீரையாகப் பயன் படுத்துகின்றனர்.

* * *

## கறிவேப்பிலை

### Bergera koenigii

**(N. O. Rutaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, root and leaves*

*Constituents* : *Leaves contain a volatile essential oil and Vitamin A and B*

*Action* : *Leaves, bark and root are Stomachic, Root is slightly Purgative.*

Uses : Infusion of the root bark or of the leaves is useful in vomiting. Green tender leaves are eaten raw for the cure of dysentery. It is boiled in milk and ground for a good application in poisonous bites and to eruptions. Leaves are popularly used for flavouring curries and condiments.

கறிவேப்பிலையால் அரோசகம், சீதபேதியால் வரும் வயிற் றளைவு பழஞ்சுரம், பித்ததோஷம் ஆகியவை நீங்கும். பித்தத்தை

குறைக்கும். இதன் இலைக் கஷாயத்தை அருந்தினால் வாந்தி நிற்கும். பத்திய தோஷங்களை நீக்கும்.

சிறிது கறிவேப்பிலை இலையை, ஓரிரு மிளகுடன் சேர்த்து, சிறிது நெய் விட்டு வறுத்து, சிறிது வெந்நீர் விட்டரைத்து, அரைத்ததைக் கரைத்து பாலர்களுக்குக் குளிப்பாட்டிய பின் கொடுத்தால் மாந்தம் ஏற்படாது. பசியைத் தூண்டும். பொதுவாக சமையலில் கறிவேப்பிலையைச் சேர்த்துக் கொள்வதுண்டு. இது உடல் நலத்திற்கு ஏற்றது.

கறிவேப்பிலை ஈர்க்கும் பயன் அளிப்பதாகும். இதன் ஈர்க்குடன் வேப்ப ஈர்க்கு, நெல்லி ஈர்க்கு இவைகளைச் சேர்த்து இடித்து நீரிலிட்டுக் காய்ச்சவும். இந்நீரைப் பருகினால் வாந்தியை உடனே நிறுத்தும்.

* * *

## கறிவேப்பிலை

### (காட்டு கறிவேப்பிலை)

## Clausena dentata (or)
## C. willdenowii

### (N. O. Rutaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and fruits*

*Constituents* : *Oil contains clausenan and esters*

*Action* : *The leaves are Aromatic.*

Uses : The leaves are aromatic. The essential oil is obtained from the leaves. Fruits are small. Leaves are used for flavouring curries and condiments. Its uses are similar to Bergera koengii and the smell of this is not as like as Bergera goengii.

இதுவும் கறிவேப்பிலை போன்றே பயன்படுத்தப்படுகிறது. ஆனால் இதற்கு மணம் குறைவு. இதை தாளிப்பதற்கு பயன் படுத்துவர்.

* * *

# கருங்காலி

## Acacia sundra

### (N. O. Mimosaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, wood, flowering tops and gum*

*Constituents* : *Catechin and catechu-tannic acid*

*Action* : *Powerful Astringent, Tonic, Digestive, Cooling and blood purifier.*

Uses : Catechu bark is used in the treatment of diabetes, piles and cough. Powder of bark, if taken regularly reduces abdominal dropsy. The oil taken from this is a remedy for leprosy. Root is used as a remedy for worms in the colon and rectum. This is also found effective in diabetes, leprosy and dysentery. Bark decoction purifies blood and strengthen the body. 4 gms of bark gum diluted with water will give relief from diabetes, psoriasis and indigestion.

கருங்காலி மரப்பட்டை பிரமேகம், அதிமூத்திரம், மூல ரோகம், இருமல் சுவாசம் ஆகியவற்றைப் போக்கும். பட்டை சூரணத்தை தினமும் உட்கொள்ள பெருவயிற்றைக் குறைக்கும். இதிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் குஷ்டத்தைக் குறைக்கும்.

இம்மரத்தின் வேர் மலாசயக் கருங்கிருமி, நீரிழிவு நோய், குஷ்டப்புண், ரத்தபேதி ஆகியவற்றை குணமாக்குகிறது. மரப்பட்டைக் கஷாயம் இரத்தத்தைச் சுத்தம் செய்வதுடன் உடலுக்கு வலுவைத் தரும்.

4 கிராம் எடையுள்ள கருங்காலி மரப்பிசினை நீரில் கரைத்துக் கொடுக்க கருங்கரப்பான், மேகநீரிழிவு போன்ற நோய்களை நீக்கி விந்துவை வளர்ப்பிக்கும்.

* * *

## கருங்காணம்

((முலைப்பால் விதை (அ) காட்டுக்கொள்)

## Cassia absus

**(N. O. Leguminosae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Action* : *Astringent, Diuretic, Stimulant, Cathartic and Laxative.*

Uses : This plant is very useful to treat opthalmic disorders and skin ailments. It is also useful in treating joint pains and inflammations.

கண்பற்றிய நோய்களையும் சருமநோய்களையும் குணப் படுத்தும். மேலும் கைகால் குடைச்சல், முளைமூலம், நீரடைப்பு முதலியவற்றை நீக்கும்.

* * *

## கருடன் கிழங்கு

(ஆகாய கருடன் (அ) கொல்லன்கோவை)

## Bryonia epigoea

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climbing herb*

*Parts used* : *Root*

*Constituents* : *A bitter glucoside 'bryonin', Starch and mineral matter*

*Action* : *Alterative, Cathartic, Stomachic, Tonic, Alexipharmic, Anthelmintic and Aperient.*

Uses : This is also called 'Paicheenthil'. This is useful in the treatment of leucorrhoea, venereal diseases, primary complex in children, chronic wound etc., This bitter tasting tuber is an ideal antidote for all types of snake bite. The skin allergies caused by earth serpent could be sucessfully treated with it's tuber.

If one spoon of this tuber is powdered and consumed, it gives relief from venereal diseases, leucorrhoea and many types of skin ailments. The juice of the leaves are very useful in treating venereal disorders, inflamed feruncles, night blind ness, abscess of the joints etc., Chronic wounds and skin ailments could be sucessfully treated with the powder of the leaves. This leaves mixed with oil and used as an external application. For inflammation and pain of the joints, this powder should be mixed with castor oil and used as an application. Though the oil is bitter in taste,it is useful as a blood purifier. The tuber, if hung in a properly airated place, it grows automatically.

கோவைக் கொடி இனத்தைச் சார்ந்த இதனைப் பேய்ச் சீந்தில் என்றும் கூறுவர். கருடன்கிழங்கு அரையாப்புக்கட்டி, வெள்ளை, கொறுக்கு, மாந்தம், நெடுநாள் ரணம் ஆகியவற்றை நீக்கும். சிறிது கைப்புச் சுவையுடைய இந்த கிழங்கு ஒரு சிறந்த விஷநாசினி ஆகும்.

எந்தவகையான பாம்புக்கடிக்கும் இதை சிறிதளவு உண்டால் போதும் ,விஷம் இறங்கிவிடும். மண்ணுள்ளிப் பாம்பின் நக்கலினால் வரும் ,தீராத சருமரோகங்களை இக்கிழங்கு அறவே நீக்கிவிடும்.

இக்கிழங்குத்தூளை தினமும் ஒரு ஸ்பூன் அளவு சாப்பிட்டுவர கிரந்தி, நமைச்சல், தீராத வெள்ளை ஒழுக்கு, கொறுக்குப்புண், லிங்கப்புற்று ஆகிய நோய்கள் விலகும்.

இதன் இலையை அரைத்து துடைவாழை, அரையாப்பு, கழலைக் கட்டிகள், கண்டமாலை கைகால் சந்துகளில் உள்பக்கம் உண்டாகும் கட்டிகள், இரத்தக்கட்டிகள் ஆகியவைகளுக்கு வைத்துக்கட்ட குணமாகும். உலர்ந்த இலையின் தூளை தேங்காய் எண்ணெய்யுடன் கலந்து இரண்டுநாட்கள் வெய்யிலில் வைத்து பிறகு மேலுக்குப் பூச அக்கிப்புண், நெடுநாள் ரணங்கள், தேக உஷ்ணம், கரப்பான்சிரங்குகள் நீங்கும். இலையை ஆமெணக்கெண்ணெய்யுடன் வதக்கி கைகால் மூட்டுவீக்கம், வலி ஆகியவைகளுக்கு ஒற்றடம் கொடுக்க குணமாகும்.

கிழங்கின் எண்ணெய் கசப்பாக இருந்தாலும் உடம்பில் உள்ள பூரித துர்நீர்களையும், ரணம், புரைகள் உண்டாக்கும் கிருமிகளையும் அழித்து தூய்மைப்படுத்தும்.

இந்தக் கிழங்கை காற்றோட்டமான இடத்தில் கட்டித் தொங்கவிட்டால் தானே தழைத்து வளரும் கொடியினமாகும்.

* * *

# கருணைக்கிழங்கு

## Amorphophallus campanulatus

### (N. O. Aroideae)

*Habit* : *Herb*

*Parts used* : *Corm or tubers and roots*

*Constituents* : *Tuber contains enzymes and calcium oxalate.*

*Action* : *Alterative, Carminative, Stomachic, Nutritive Acrid and Restorative.*

Uses : This herb is useful in treating rheumatism, piles and fistula, phlegmatic disease due to excess of heat of sacral places. This is also an apitizer, used as food. If taken regularly corrects hepatic disorders. The stem of this plant is cooked as vegetable and this acts as an apitizer and gives strength and vitality.The powder of the tuber is used as an antidysenteric medicine. The root of the plant cures skin ailments and arthritis.

இது சிலேத்தும ரோகம், வாதநோய், ரத்த மூல முளை, அக்கினிமந்தம் ஆகியவற்றை நீக்கும். இது பசியை உண்டாக்கும். உணவில் ருசி தரும். தினமும் இதை உணவில் சேர்த்துக் கொள்ள மண்ணீரல் நோய்களுக்கு குணம் தரும்.

கிழங்கின் தண்டை கீரைபோன்று சமைக்கப் பயன்படுத்து கின்றனர். இதை உட்கொள்வதால் மூலரோகம், கபரோகம், நீங்கும். தாதுவிருத்தி சீரணம், பசி ஆகியவை உண்டாகும்.

கிழங்கு சூரணத்தை சீதபேதி, மூலம் ஆகியவற்றிற்கு லேகியம் செய்து சாப்பிட குணமாகும். இதன் வேர் சரும வியாதிகளையும் வாதநோய்களையும் குணமாக்கும்.

## கருணைக் கிழங்கு
### (காறு கருணைக்கிழங்கு)

## Typhonium trilobatum
### (N. O. Araceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Corm or tubers and roots*

*Constituents* : *Roots contains an acrid principle*

*Action* : *Acrid, Vermifuge, Rubefacient, and Stomachic.*

Uses : This herb irritates the throat, if not cooked properly. This is useful in all types of skin ailments including eczema and psoriasis. I is also found effective in piles.

இது சிறிது காறலுடன் இருக்கும். இதை சரியாக சமைக்காமல் சாப்பிட தொண்டையில் உறுத்தல் ஏற்படும். இது கரப்பான், பொடிச் சிரங்கு, சொறி, உட்கிரந்தி, மந்தாக்கினி, கபக்கோழை, நமைச்சல் ஆகியவற்றை குணப்படுத்தும். மூலரோகத்தையும் போக்கும்.

* * *

## கருணைக் கிழங்கு
### (காட்டுக் கருணைக்கிழங்கு)

## Dracontium polyphyllum
### (N. O. Aroideae)

*Habit* : *Herb*

*Parts used* : *Tuber and roots*

*Action* : *Emmenagogue, Alterative, Rubefacient, Stomachic and Nutrient.*

Uses : This herb is an ideal medicine for rheumatism and diabetes. This increases the appetite and cures night blindness, leprosy, toothache and asthma.

இதனை உட்கொள்ள வாதம், பிரமேகம், முளைமூலம், சுரதோஷம் நீங்கும். அதிகமான பசியும் கரப்பானும் உண்டாகும்.

மேலும் இது கண்டமாலை, குஷ்டம், பல்வலி, ஆஸ்துமா ஆகியவற்றிற்கு குணம்தரும். பற்பம் தயாரிக்க உதவும்.

* * *

## கரும்பு

### Saccharum officinarum

**(N. O. Gramineae)**

*Habit* : *Tall perennial grass*

*Parts used* : *Shoot*

*Constituents* : *Rich in sucrose*

*Action* : *Refrigerant, Diuretic, Preservative, Demulcent, Antiseptic, Cooling, Laxative, Aphrodisiac, Nutrient and Pectoral.*

Uses : This is a refrigerant,so it is used to reduce the excess heat of the body. This cures internal inflammations and acts as laxative. Very useful in treating weeping eczema. This is also a potent diuretic. If mixed with long pepper and curd, it is found good in treating hiccups excess body heat etc., If regularly taken in the morning along with palmsugar and dried ginger, it reduces the excess bile secretion and cures ulcers. If (10ml) consumed every morning, it is found effective in diabetes, also it acts as anthelmintic. If added with sugar and used as an external application to chronic wounds it is found very effective in healing. It is effective in dysentery also. If 60gms of the root is mixed with 10 aniseed, 5 pepper and 5 gms. vettiver and consumed three times a day, it helps to treat burning mincturation and other urinary problems.

கரும்பிற்கு சீதள குணமுண்டு. ஆகவே சிலேத்தும நோய்களுக்கு தூண்டுகோலாக அமையுமென்றாலும் உடல் சூட்டைத் தணிக்கும். உள் அழற்சிகளை அகற்றும். இது ஒரு சிறந்த மலமிளக்கியாகும். அழுகல் ரணங்களை அகற்றும். சிறுநீர் பெருக்கியான இது உடலை உரமாக்கும்.

கரும்புச் சாற்றுடன் இரண்டு திப்பிலியை தூள்செய்து போட்டு தயிருடன் சாப்பிட உடல் எரிச்சல், விக்கல், அரோசகம் ஆகியவை நீங்கும்.

தினமும் காலை வெல்லத்துடன் சுக்குதூள் கலந்து தயிருடன் சாப்பிட்டுவந்தால் பித்தம் குறையும். குன்மம் விலகும்.

வெள்ளை சர்க்கரையை மண்சட்டியிலிட்டு கருப்பாகும் வரை அடுப்பில் வைக்கவேண்டும். பின்பு 10 மி.கி. எடுத்து, 10 மி. லி. தேன் சேர்த்து காலை வேளையில் சாப்பிட நீரிழிவுநோய் நீங்கும். மேலும் இவ்வாறு சாப்பிடுவது வயிற்றிலுள்ள புழுபூச்சிகள் நீங்கும்.

ஆறாத நெடுநாள் ரணங்களுக்கு சர்க்கரையை மாவாக்கிக் கட்ட இரண்டே நாட்களில் குணமாகும்.

திடீர் என்று ஆகும் பேதி நிற்க 30 கிராம் கற்கண்டு தூள் உடன் நீர்அருந்த உடனே நிற்கும்.

கரும்பின் வேர் 60 கிராம் எடுத்துக்கொண்டு அத்துடன் சோம்பு 10, மிளகு 5, வெட்டிவேர் 5, சேர்த்து அனைத்தையும் நசுக்கி மண்சட்டியிலிட்டு அரைபடி நீர் விட்டு காய்ச்சி வடிகட்டி தினம் மூன்று வேளை குடிக்க மூத்திரதடை, மூத்திர எரிச்சல் ஆகியவை நீங்கும்.

* * *

## கரும்பு

**(பேய் கரும்பு)**

## Coix barbata

**(N. O. Gramineae)**

*Habit* : *Perennial grass*
*Parts used* : *Stem*

Uses : This is also included in Grass family and it exhibits the property similar to Sugarcane.

கரும்பின் குணங்களே இதற்கும் உண்டு.

* * *

## கருவேலம்

## Acacia arabca

**(N. O. Mimosaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark gum, leaves, seeds and pods*

*Constituents* : *Gum contains arabic acid combined with calcium, magnesium and potassium*

*Action* : *Astringent, Demulcent, Aphrodisic, Nutritive and Expectorant. Bark is a powerful Astringent. Pods are Expectorant.*

Uses : The tender leaves are useful in medicinal preparations. A handful of leaves mixed with equal quantity of cumin seeds are well meshed and made into a paste. This paste used on the eye externally willcure eye diseases. The paste along with betel leaves are useful in chronic skin ulcers. Mint leaves also could be added in the paste. Bark extract of the tree could be used to reduce the bile secretion and cure the ulcers. The root is useful in treating piles fistula and diseases due to excess body heat. The gum of this tree is very useful in preparation of medicines. Mixed with Myrobalan is powdered filtered and taken internally with honey will increase the semen. The tender leaves are an ideal anti-dote for the poisons if taken internally.For chronic ulcers the tender leaves are used as an external application.

படுக்கும்முன் கருவேல மரத்தின் கொழுந்து இலையைக் கைப்பிடியளவு எடுத்துக்கொண்டு சமஅளவு சீரகம் சேர்த்து மைபோல் அரைத்து, கண் குழியளவிற்கு அடைபோல் தட்டி மத்தியில் ஒரு துவாரம் செய்து கட்டிவிட வேண்டும். காலையில் எடுத்து கண்களை சுத்தமாகக் கழுவ கண்வலி நீங்கும்.

இலையை அரைத்து புண்ணின்மேல் வைத்து வெற்றிலையால் மூடி கட்டுப்போட புண்கள் ஆறும். ஆறும்வரை தினமும் புண்களை சுத்தம் செய்ய வேண்டும். இதனுடன் புதினா இலையையும் சேர்த்துக் கொள்ளலாம்.

கருவேல மரப்பட்டை சுரத்தையும் பித்த நோயையும் போக்கும். பற்களை உறுதியாக்கும்.

இதன் வேர் ரத்தக்கடுப்பு, அக்கினிமந்தம், மகாவாதம், கரப்பான், அதிசாரம் ஆகியவற்றைப் போக்கும்.

கருவேலம் பிசின் பல மருத்துவ குணங்களையுடையது. இதனுடன் கடுக்காய்த்தோல் சேர்த்து இடித்து சல்லடையில் சலித்து ½ தேக்கரண்டி அளவு தேனுடன் தினமும் இருவேளை சாப்பிட தாது கெட்டிபடும்.

விஷப்பண்டங்கள் வயிற்றுக்குள் சென்றுவிட்டால் அதனால் ஏற்படும் கோளாறுகளுக்கு உடனடியாக கருவேலங் கொழுந்து மிகவும் பயன்படும். கருவேலங் கொழுந்தைத் தயிர்விட்டு அரைத்து உள்ளுக்கு கொடுக்க வேண்டும்.

நர்ள்பட்ட ரணங்களுக்கு கருவேலங் கொழுந்தை அரைத்துக் கட்ட குணமாகும்.

* * *

## கலப் பூ
### (ரதிப் பூ)

## Parmelia perlata
### (N. O. Lichenes)

*Habit* : *Epiphytes*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *These lichens contain a yellow crystalline, stuff, gum, sugar extractive, lichenin and chrysophanic acid*

*Action* : *They are Bitter, Febrifuge, Astringent, Resolvent, Emollient, Demulcent and Diuretic.*

Uses : This belongs to the family of Lichens. Indigestion, headache, chronic venereal disorders could be treated with this. It regulates urination. It corrects menstural cycle in women. This also could be used in cooking to add taste.

இது லைகன் (Lichens) வகையைச் சேர்ந்ததாகும். இதனால் அதிசாரம், நீடித்த மேகம், தலைவலி முதலியவை குணமாகும். தடைப்பட்ட சிறுநீரை வெளியாக்கும். பெண்களுக்கு மாதவிடாய்

சமயம் தோன்றும் நோய்களுக்கு மருந்தாகும். சிலர் இதனை உணவில் ருசிக்காக சேர்ப்பார்கள்.

* * *

## கலப்பைக் கிழங்கு

**(கார்த்திகைக் கிழங்கு (அ) கர்பம் கலக்கி)**

## Gloriosa superba

**(N. O. Liliaceae)**

*Habit* : *Climbing plant*

*Parts used* : *Tubers or roots*

*Constituents* : *Tannin and a bitter principle superbine*

*Action* : *Root is a Tonic, Anti-periodic, Cholagogue, Alterative, Purgative, Abhortifacient and Parasiticide.*

Uses : This is an important herb which is widely exported from India. The tuber of this plant is used in treating skin ailments, leprosy, snake bite, scorpion sting, herpes etc., It aborts pregnancy. If consumed above the recommended quantity, it is poisonous but improves bile secretion and acts as an anthelmintic. Many contraseptive pills are manufactured from the seeds of this plant. The tuber along with Nigella sativa,(Black cummin), Veronia athelmintiea,(Purple Fleebane) and Psoralia corylifolia (balueti seeds) is used to treat all types of skin ailments. This could be used as an antidote for snake bite when mixed and fried in curd. The tuber, made a paste with water and used in the hands, legs and naval region of pregnant woman,will help for a trouble free labour(delivary).

இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் கிழங்கு வகையினுள் இது ஒன்றாகும்.

இதன் கிழங்கு சர்மவியாதிகள், கிரந்தி, குஷ்டம், பாம்புக் கடி, தேள்கடி ஆகியவற்றை குணப்படுத்தும். கர்ப்பத்தை கலைக்கும். இதை அதிக அளவில் உட்கொள்ள விஷமாகும். பித்தம் அதிகரிக்கும். மலக்கிருமிகளை நீக்கும்.

இதன் விதையிலிருந்து பல கர்ப்பத்தடை மருந்துகள் தயாரிக்கின்றனர். இதன் கிழங்கு, கருஞ்சீரகம், கார்போக அரிசி

இவைகளைச் சேர்த்தரைத்து சர்மநோய்கட்கு தடவ குணமாகும். இதனை மோர், உப்பில் வற்றல் செய்து தினம் சாப்பிட பாம்பு கடி விஷம் நீங்கும்.

இக்கிழங்கைப் பொடித்து நீர்விட்டரைத்துத் தொப்புள், உள்ளங்கை, உள்ளங்கால் இவ்விடங்களில் பூச பிள்ளை பேற்றைத் தீவிரமாக்கும்.

* * *

## கல் தாமரை

**(மலைத் தாமரை)**

## Similax zeylanica

**(N. O. Liliaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Tubers*

*Action* : *Alterative in Syphilitis, Scrofula etc., Anti leprosy and Aphrodisiac.*

Uses : This is also called as Hill Lotus (Malaithamarai). It increases the quantity of semen and gives vitality. It is a good medicine to cure leprosy, gives strength and vitality. This herb which contains gold could be used to make many calicifications. Dysentery, and rheumatism also could be treated with this herb.

இது மலைத்தாமரை என்றும் வழங்கப்படுகிறது. இதை உட்கொள்ள சுக்கிலம் பெருகுவதுடன் தாதுபலம் உண்டாகும். குஷ்டநோயை கட்டுப்படுத்தும். உடலுக்கு வலிமை தரும். நீண்ட ஆயுளைக் கொடுக்கும்.

இது தங்கசத்துள்ள மூலிகையாகும். பல பஸ்பங்கள் செய்ய உதவும். சிலர் இதை நன்னாரிபோல் உபயோகிப்பர். சீதபேதி, மேக, வெட்டை வாதம் ஆகியவற்றை நீக்கும்.

* * *

## கல்லுருக்கி

## Pouzlozia indica

**(N. O. Urticaeeae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Antisyphilitic and Aphrodisiac.*

Uses ; This is an ideal preparation for venereal diseases and to cure leucorrhoea. It is an antidote for snakebite. It acts as an anthelmintic, cures chronic ulcers.

கிரந்தி, வெள்ளை நோய்களுக்கு குணம் தரும். பாம்புக்கடி விஷத்தை தீர்க்கும். இதை உட்கொள்ள வயிற்றுப் பூச்சியை வெளியாக்கும். அழுகல் ரணத்தை ஆற்றும்.

* * *

## கல்லுருவி

**(நீர்மேல் நெருப்பு)**

## Ammania vesicatoria

**(N. O. Lythraceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *The herb and leaves*

*Constituents* : *Resin, glucose and perhaps an active principle.*

*Action* : *Highly Acrid. Vesicant, Rubefacient and Irritant.*

Uses : This plant has a property to cure typhoid and tuberculosis.Leaves could be used as an external application for all skin ailments. If consumed in little quantity, it cures venereal diseases, psoriasis, rheumatism, snake bite etc. It reduces the sexual urge. The leaf juice is allergic to skin.

இச்செடிக்கு டைபாய்டு, க்ஷயரோகம் போன்றவற்றை எதிர்க்கும் தன்மை உண்டு. இலையை அரைத்து பற்றுபோட சர்மநோய்கள் விலகும். இதை சிறிய அளவில் உட்கொள்ள கிரந்தி,

கரப்பான், வாதநோய்கள், திமிர்வாதம், பாம்பு விஷம் ஆகியவற்றை குணப்படுத்தும். காம இச்சையை குறைக்கும். இதன் இலைச்சாறு தோலில் பட்டால் கொப்புளத்தை உண்டாக்கும். மிகமிக லேசாக தடவ ஒற்றைத் தலைவலி நீங்கும்.

* * *

## கல்யாண முருக்கன்

## Erythrina indica

### (N. O. Papilonaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, flowers and bark*

*Constituents* : *Leaves contain two resins and a bitter poisonous alkaloid erythrine.*

*Action* : *Bark is Antibilious, Expectorant, Febrifuge and Anthelmintic. Leaves are Diuretic, Laxative Emmenagogue and Galactagogue.*

Uses : This is a tree; and leaves are used in medicinal preparations. The leaf extract mixed with 50ml of white garlic extract along with juice of boiled rice if taken internally every morning gives relief in respiratory disorders, asthma etc., This improves lactation in feeding mothers. Leaf extract acts as diuretic also. If taken regularly every day it improves chronic urinary problems and improves fertility in women. The decoction of the powder gives relief in intestinal ulcers. The flower also could be used as an external applicaion to cure utrine ulcers. The mixture of the powder with pepper if consumed regularly improves fertility.

நுரையீரல் சம்பந்தப்பட்ட சுவாச நோய்களுக்கும் ஆஸ்துமா இரைப்பு நோய்களுக்கும் வெள்ளை கல்யாண முருக்கன் இலையை இடித்து பிழிந்து சாறு 50 ml, வெள்ளை வெங்காயச் சாறு 50 ml எடுத்து சிறிது புழுங்கலரிசியை வேகவைத்து, வேகும்பொழுது சாற்றை சேர்த்து இளஞ் சூடாக காலையில் அருந்த குணமாகும்.

கிராமப்புற மக்கள் பிரசவ காலங்களில் இதன் இலையைக் கொண்டு வந்து அரிந்து சிறுபயறுடன் வேகவைத்து உண்பர். இதனால் சிறுநீர் எரிச்சலைப் போக்கி தாராளமாய் நீர் இறங்க

செய்யும். தினமும் காலையும், மாலையும் 25 ml அளவு இதை குடித்து வர நீண்டகால நீர்ச்சுருக்கு, நீர் எரிச்சல் போன்ற வியாதிகள் நீங்கிவிடும். மேலும் இவ்வாறு அருந்துவது பெண் மலட்டுத்தன்மையையும் மாற்றும். இலைச்சாற்றை சர்பத்தாக காய்ச்சி உபயோகிக்கலாம். தினமும் இதை அருந்த உடல் மெலியும். அதிகம் அருந்த கர்ப்பம் கலையும்.

இந்தப் பூவுடன் சிறிது மிளகுச் சேர்த்து ஒட்ட அரைத்து, தினமும் காலை, மாலை இருவேளை வெறும் வயிற்றில் சாப்பிட்டு வந்தால் குழந்தைப்பேறு உண்டாகும்.

* * *

## கல்வாழை

### (பூவாழை, கண்டாமணி)

## Canna indica

### (N. O. Scitaminaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome and Fruit*

*Constituents* : *Fat, traces of an alkaloid, gum and starch.*

*Action* : *Root is Diuretic, Diaphoretic and Demulcent Seed is cordial and Vulnerary. Drug is Narcotic.*

Uses : Root in decoction is used in fevers, dropsy and dyspepsia. Seed juice is warmed and used as ear drops to relieve earaches.

வேர் சுரத்தை குறைக்கிறது. மேலும் பாண்டு நோய்க்கு நிவாரணம் அளிக்கின்றது. வயிற்றுக்கோளாறுகளுக்கும் பயன்படும். விதையின் சாற்றை காதில்விட காதுவலி நீங்கும். கால்நடைகள் விஷசெடிகளை தின்றுவிட்டால் வேர்க்கிழங்கை அரிந்து கஞ்சி தண்ணீருடன் குடிக்கச் செய்தால் வெளிவந்துவிடும்.

* * *

## கவிழ் தும்பை

**(கழுதைத் தும்பை, கல்லுடைத்தும்பை)**

## Trichodesma indicum

**(N. O. Boraginaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

Action and Uses : Leaves and roots are Antidote and Diuretic. Plant is Anthelmintic, Anti-rheumatic, Emmenagogue, Carminative and Deobstruent. Cold infusion of leaves is considered as Depurative. Plant is used as Emollient poultice.

இச்செடிக்கு வாதநோய், சீதபேதி, ஆசன கடுப்பு, கட்டி ஆகியவற்றிற்கு குணம் தரும். இலைச் சாற்றில் பெரும்பாடு தணியும். இலையும் வேரும் பாம்புக் கடிக்குச் சிறந்த மருந்தாகப் பயன்படுகிறது. இலைச்சாறு செந்தூரம் செய்யப் பயன்படுகிறது. இலையின் குளிர்ந்த கஷாயம் இரத்தத்தைச் சுத்தப்படுத்தும்.

* * *

## கழற்சிக் காய்

**(கெச்சைக் காய், களச்சிக்காய், வச்சிறம்)**

## Caesalpinia bonducella

**(N. O. Caesalpiniaceae)**

*Habir* : *Shrub*

*Parts used* : *Bark, root, leaves and fruits*

*Constituents* : *Seeds contain bonducin and phytosterinin*

*Action* : *Nuts and root-bark are Antiperiodic, Antispasmodic, Bitter, Tonic, Anthelmintic and Febrifuge. Powdered Seeds are Tonic, Febrifuge and Antiperiodic. Leaves are Deobstruent and Emmenagogue. Root is a Gastric Tonic.*

Uses : This is useful in treating chickenpox and filariasis. Tender leaves are used to treat liver dlsorders. The

seed extract oil is used to treat hydrosils, stomachache, skin ailments and hernia of both the types of strangulating and dysending.

To treat inflamed testicle, add pepper along with tender leaves and make a paste. This paste to be consumed three days in the mornings, and the doss to be repeated after three days till the disease cured. Chicken soup should be taken during this medication.

Leaves, bark, stem and seeds are very useful in medicinal preparations. All these exibit anti-inflammatory property. This plant is also used as refrigerant and corrects menstural cycle. There are two varieties namely white and black, but the properties are same.

To reduce oedema, paste of the tender leaves should be mixed with cocoanut and fried in castor oil.

To treat ulcer, the seedling should be mixed with as a foetida and fried in ghee and the mixture should be made into a powder. This powder to be consumed in the morning and evening along with curd. To reduce inflammation and oedema, the seeds should be mixed with the white of the egg and should be used as an external applicantion.

அண்டவாயு, குன்மம், காதில் சீழ்வடிதல், அம்மை, யானைக் கால், பல்நோய்களுக்கு உதவும். இலைக்கொழுந்து மண்ணீரல் வீக்கத்தைக் குறைக்கும். விதை எண்ணெய் விரை வீக்கம், வயிற்று வலி, சர்மவியாதிகள் ஆகியவற்றை குணமாக்கும்.

அண்டவாயு குணமாக கழற்சி இலையுடன் மூன்று மிளகாய் சேர்ந்து அரைத்து மூன்று நாட்கள் வரை காலையில் மட்டும் சாப் பிடவேண்டும். பின்பு மூன்று நாள்விட்டு மறுபடியும் மூன்றுநாள் சாப்பிடவேண்டும். நோய் குணமாகும் வரை சாப்பிடவேண்டும்.

இதன் இலை, கொட்டை, பட்டை, வேர் யாவும் மருத்துவப் பயனுடையதாகும். இவையாவற்றிற்குமே வீக்கத்தைக் குறைக்கும் தன்மை உண்டு. மேலும் இச்செடி வெப்பமகற்றும். ருது உண்டாக் கும், புழுவைகொல்லும், உடலை உரமாக்கும், இசிவகற்றும் தன்மை களை உடையது. இதில் வெண்மை, கருமை என இருவகையுண்டு. இரண்டின் குணங்களும் ஒன்றேயாகும்.

வீக்கம் வடிய சமஅளவு கழற்சி இலையும், முற்றிய தேங்கா யையும் திருவி போட்டு, ஆமணக்கெண்ணெய்யில் வதக்கி இளஞ்சூட் டுடன் வீக்கங்களில் வைத்துக்கட்ட சிறிது நேரத்தில் வீக்கம் வடியும். இங்ஙனம் கட்டுவது ஏறண்டம், இறங்கண்டம், சதையண்டம், விரைவீக்கம் முதலியவற்றைக் கூட குணமாக்கும்.

இதன் உள்பருப்புடன் பெருங்காயம் சேர்த்து நெய்யில் பொரித்து இடித்து தூளாக்கி காலையும் மாலையும் ஒரு சிட்டிகை அளவு பசு மோருடன் குடிக்க குன்ம நோய் தீரும். இதை நோய் தீரும்வரை குடிக்கவேண்டும். இப்பருப்பை கோழிமுட்டையின் வெண் கரு விட்டரைத்து வீக்கத்துக்குத் தடவ வீக்கம் குறையும்.

* * *

## கழுநீர்

**See : Ponsederia vaginalis**

**பார்க்க : குவளை**

* * *

## களர்வா

**(பெரிய களர்வா)**

### Salvadora wightiana

**(N. O. Salvadoraceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruit, flower, root and leaves*

*Constituents* : *Plant contains salvadorine and flowers contain an essential oil*

*Action* : *Leaves are Expectorant. Flowers are Stimulant, and Laxative. Fruit is Deobstruent, Carminative, Linthontropic, Alterative, Diuretic and Purgative. Root is Vesicant and Emmenagogue.*

Uses : This is useful in treating chronic headache, intestinal gas etc. This is useful in removing the obstrucle in uteres. This is also useful in rheumatism and leucorrhoea. The

fruit of the plant is an aphrodisiac, but this should not be taken raw as it produce mouth ulcers. The leaves are used to treat cough and it gives sedation in horses.

To treat headache, the flower is useful. The flower should be pressed well and mixed with ½ litre of oil and boil it. This oil if used regularly relieves headache. The mixture could be used in the begining stage of leprosy.

தீராத தலைவலி, குடற்காற்று போன்றவற்றை குணமாக்கும். கருப்பையில் உள்ள அடைப்புக்களை நீக்கும். சிலருக்கு மாத விடாயின் போது வெள்ளைவிழும். இதற்கு குணம் தரும். மேலும் வாதரோகம், விஷக்கடி இவைகளுக்கும் குணம் தரும். இதன் பழம் காம இச்சையை தூண்டும். பழத்தை தனியாகச் சாப்பிட்டால் வாய்புண் உண்டாகும். மேலும் இது மண்ணீரல் நோய்களுக்கும், வாதநோய்களுக்கும், லேசான சுரத்திற்கும் நிவாரணம் அளிக்கும். இலை குதிரைகளுக்கு லேசான போதையை கொடுக்கும். இத னால் பந்தயக் குதிரைகளுக்கு இந்த இலையை புல்லுடன் கலந்து கொடுப்பார்கள். இருமலுக்கு நிவாரணம் தரும்.

இதன் பூவை நன்றாக உலர்த்தி, இடித்து, அரை லிட்டர் எண்ணெய்யில் போட்டு நன்றாக காய்ச்சி தைலம் தயாரித்து தலைவலி வரும்போது பூசினால் தலைவலி உடனே நீங்கும்.

குட்டரோகத்தின் ஆரம்பக் காலத்தில் இந்தத் தைலத்தை மேல் பூச்சாகப் பூசி வந்தால் நல்ல குணம் தெரியும்.

* * *

## களர்வா
### (சிறு களர்வா)

## Salvadora persica
### (N. O. Salvadoraceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves, flowers, fruit and root*

*Constituents* : *Similar to S. wightiana*

*Action* : *Similar to S. wightiana.*

Uses : The property of this is similar to S. wightiana. This is an antidote for all venemous bites. The bark is useful

to treat skin ailments. This is also a skin coolent. The decoction of the bark gives strength, corrects menstrual cycle in women. The decoction of the leaves relieve asthma. Fruits are edible and could be used in poisonous bites. It is also useful to check dysentery.

இதன் எல்லா குணங்களும் பெரியகளர்வாவுடன் ஒத்திருக்கும். இது எல்லா விஷக்கடிகளுக்கும், சூதக நோய்களுக்கும் உதவும். வேர்ப்பட்டைகளை அரைத்துப் பற்றுபோட தோல்நோய்கள் தீருவதுடன் குளிர்ச்சி தரும். சிலசமயம் இது கொப்புளங்கள் உண்டாக்கும். வேர்ப்பட்டைக் கஷாயம் உடலை உரமாக்குவதுடன் மாதவிடாய் தொல்லைகளை நீக்கும். இலைக் கஷாயம் ஆஸ்துமா, இருமல் ஆகியவற்றைப் போக்கும். பழங்களை சாப்பிடலாம். இது எல்லா விஷக்கடிகளுக்கும் பயன்படுத்தப்படுகிறது. பேதியை கட்டுப்படுத்தும்.

* * *

## களா
### (பெருங்களா)

## Carissa carandas
### (N. O. Apocynaceae)

*Habit* : *Shrub or small tree*

*Parts used* : *Fruits, roots and flowers*

*Constituents* : *Fruit is rich in proteins, minerals and salicylic acid*

*Action* : *Antiscorbutic, Stomachic, Emollient and Peturifacient.*

Uses : This is mainly used in pickles. The root is useful in treating the diseases like madness, uterus problems after delivery.

இதை ஊறுகாய் போட பயன்படுத்துவர். இதன் வேர் விஷ ரோகம், பைத்தியம், கபாதிக்கம், கபவியர்வை, பிரசவ அழுக்கு, மந்தாக்கினி ஆகியவற்றை நீக்கும்.

களாப்பூ நேத்திரத்தில் உண்டாகும் கரும்படலம், ஸ்வேதபடலம், ரத்தப்படலம், தசைப்படலம் முதலிய நோய்களை நீக்கும்.

களாக்காய் உண்பதனால் காதடைப்பு, தாகம், பித்த தோஷம், வாந்தி, அருசி, ரத்தபித்தம் ஆகியவை நீங்கும். அதிமந்தமாயிருக்கும் பொழுது இதை உண்ண பசி ஏற்படும். பசியுள்ள போது இதை சாப்பிட வயிற்றில் எரிச்சல் உண்டாகும்.

இதன் பழத்தை உண்டுவரின் உடல்வலி தீரும். உடலை உரமாக்கும்.

பித்ததோஷம் நீங்க இதன்காயைச் சுத்தமாக அலம்பி சிறு துண்டுகளாக வெட்டி உப்பிட்டு ஊறவைத்து உட்கொள்ள வேண்டும்.

* * *

## களா
(சிறுகளா)

## Carissa spinarum
**(N. O. Apocynaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Flowers, fruit and root*

*Constituents* : *Similar to C. carandas*

*Action* : *Similar to C. carandas*

Uses : Similar to C. carandas.

இதை பெரிய களாவை பயன்படுத்துவதைப் போலவே பயன்படுத்துவர். ஊறுகாய்ப் போட பயன்படும்.

* * *

## களா
(காட்டுகளா)

## Flacourtia ramontchi
**(N. O. Flacourtiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruits*

Uses : Fruits are sweet, appetizing and digestive. They rae given in jaundice and enlarged spleen. The seeds are ground

to paste with turmeric and rubbed all over the body to prevent rheumatic pains from exposure to damp winds, after child birth. Gum is administered along with other ingredients to treat cholera.

இதன் காய் சிறிது இனிப்புச்சுவையுடன் இருக்கும். இது மஞ்சட்காமாலையையும் மகோதரத்தையும் குணப்படுத்தும். பெண்கள் குழந்தை பேற்றிற்குபின்பு இதன் விதைகளை மஞ்சளுடன் சேர்த்து அரைத்து உடல் முழுவதும் பூச வாதவலிகள் தீரும். இதன் பிசின் காலரா மருந்துகளுடன் சேர்க்கப்படுகிறது.

* * *

## கள்ளி

**(இலைச் செவிக்கள்ளி, முயற் செவிக்கள்ளி)**

## Euphorbia neriifolia

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Root and the whole plant*

*Constituents* : *Euphorbon, resin, malate of calcium and gum.*

*Action* : *Juice is Purgative and Expectorant. Root is Anti-spasmodic.*

Uses : This medicinal plant is bitter in taste. To treat eczema in children, this is an ideal medicinal plant. In california researchers are being done to find out weather petroleum products could be extracted from this plant. The extract of the leaf is also used to treat inflammation of the joints and oedema. The latex of this plant exhibits many medicinal properties. This latex could be used to cure ear ailments. This milky secretion also could be used as an external application in psoriasis. For rheumatism, this milky secretion is mixed and boiled with oil and used as an external application. This milk is used to remove the warts, this could be used also for venereal diseases. If a little salt is added to this milky secretion it becomes an effective medicine for anaemia, ulcer, jaundice and herpes. It regulates the flow of urination.

கைப்புச் சுவையுடைய இந்த மூலிகை வெப்பத் தன்மை வாய்ந்தது. இதனுடைய இலைச் சாற்றை வரகு வைக்கோலுடன் வதக்கி, சாறு பிழிந்து குழந்தைகளுக்குக் கொடுத்தால் கரப்பான் வியாதி குணமாகும். குடல் அண்ட விக்கங்களையும் கை, கால் கீல்களைப் பற்றிய நோய்களையும் நீக்கும்.

இதன் பால் பல மருத்துவ குணங்களை உடையது. காது சம்பந்தமான நோய்கள் ஒழிய இப்பாலை காதில் விடவும். செங் கரப்பான் மீது தொடர்ந்து தடவ நீங்கும். இப்பாலை எண்ணெய் யுடன் சேர்த்து காய்ச்சி வாதநோய்களுக்கு உபயோகிக்கலாம். தனிப்பாலை மருள்களுக்குத் தடவ விழும். விக்கங்களுக்குத் தடவ குறையும். பால்நோய் அனைத்தும் அப்பாலால் பறக்கும்.

இதன் சாறுடன் சற்று உப்பு சேர்த்து காய்ச்சி சாப்பிட்டால் கக்குவான், சோகை, சூலை, காமாலை, குன்மம், கிரந்தி போன்ற நோய்கள் குணமாகும். மேலும் சிறுநீர் அடைப்பை நீக்கும். கலிபோர்னியா தாவர ஆராய்ச்சிக் கழகத்தில், இதன் பாலிலிருந்து பெட்ரோலியம் தயாரிக்கமுடியுமா என்று ஆராய்ச்சி செய்கின்றனர்.

* * *

## கள்ளி
### (கொடிக் கள்ளி)

## Sarcostemma brevistigma
### (N. O. Asclepiadaceae)

*Habit* : *Twinning herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Intoxicating liquor is made from the juice of the plant*

*Action* : *Milky juice is Anti-syphilitic and Anthelmintic.*

Uses : The plant yields a large quantity of milk juice. Among the ancient Hindus fermented liquor was prepared by mixing its juice with barley and ghee and this wine is known as soma juice.

இப்பாலை வைக்கோலில் வாட்டிய பின்னர் பிழிந்தால் தெள்ளியசாறு கிடைக்கும். அச்சாற்றில் கால் அல்லது அரை பெருங் கரண்டி வீதம் தாய்ப்பாலுடன் குழந்தைகளுக்குப் புகட்ட கரப்பான்

தொண்டைக்கட்டுதல், சொறி, சிரங்கு, செரியாமை ஆகியவை தீரும். பரவிய புண்கள், பெரும் புண்கள் மற்றும் செய்யான் போன்ற புழுப்பூச்சிகளின் கடியால் பரவியவிஷம் முறியும். குட்டம், குன்மமும் குணமாகும். இதன் சாற்றிலிருந்து சாராயம் காய்ச்சுவர் அது சோமரசம் எனப்படும். லேசான போதையைத் தரும்.

* * *

## கள்ளி
### (சதுரக் கள்ளி)

## Euphorbia antiquorum

### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Small tree*

*Parts used* : *Stem, root, and root bark*

*Constituents* : *Dried juice contain Euphorbin, two resins and gum*

*Action* : *Purgative, Emetic, Alterative, Stomachic, Rubefacient and Vesicant.*

Uses : The latex of this plant is a good medicine for herpes, leprosy and other skin ailments like psoriasis. The recommended dose is only 1 to 2gms. For scorpion sting this latex is an ideal remedy. The bark of the plant is useful in treating nervous disorders and typhus fever. To treat the joint pains, the inner fleshy part of this plant is mixed with 2 teaspoon of mustard and it is powdered and heated. If this heated powder is used externally on the inflamed joints it relieves pain and inflammation.

சதுரக்கள்ளியினால் குன்மம், கிரந்தி, கரப்பான், இல்பிடிப்பு முதலிய நோய்கள் குணப்படும். பாஷாணங்களை நீற்றும்.

இதன் பாலால் குஷ்டம், காணாக்கடி, சூலை, ஜலதோஷம், பாதாக்ஷேப வாதம், கபவாந்தி, அருசி ஆகியவை நீங்கும்.

இப்பாலை நன்கு உலர்த்திஅரைக் குன்றிமணியளவு உள்ளுக்கு சாப்பிட கழிச்சல் ஏற்படும். உடலுக்கு தெம்பு தரும். புளியும் சீரகமும் சேர்த்து இப்பாலுடன் அரைத்து சாப்பிட மூலநோய் உடையவர்களுக்கு கழிச்சல் ஏற்படும்.

மூட்டுக்களில் ஏற்படும் வீக்கங்களுக்கு இப்பாலைத்தடவி இதன் வேர்மண்ணை பாலின் மீது இட குணமாகும். இதன்பால் எல்லா தோல் நோய்களையும், புண்களையும், ரணங்களையும் ஆற்றும். வாதநோய்களையும் குணப்படுத்தும்.

சதுரக் கள்ளியின் சாற்றைப் பருகினால் கபநோய், குன்ம வயிற்று நோய் போன்றவை அகலும். இதன் சாற்றை மேலே தடவினால் சொறி, சிரங்கு, நமைச்சல் அகலும்.

* * *

## கள்ளி

### (திருகுக் கள்ளி, கொம்புக் கள்ளி)

## Euphorbia tirucalli

### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Small shrub*

*Parts used* : *Bark and the whole plant*

*Constituents* : *Euphorbon, gum, resin, caoutchouc and malate of calcium*

*Action* : *Milky juice is in small doses is Purgative in large doses an Acrid, Counter - irritant and Emetic. Externally it is Rubefacient.*

Uses : Herpes, rheumatlsm, leprosy, worm infections. Partial paralysis and eczema could be treated with the latex of this plant. Only 2 gms of condensed latex is used as medicine. The painful scorpion sting could be relieved by applying this latex on the spot where it is stung.

The bark of this is used in treating dracunculous medinensis, phlegmatic and rheumatic diseases. The inner fleshy pulp is used externally along with mustard powder, when it is heated and applied on the places wherever there is pain and inflammation. This latex is also useful as an anthelmintic.

திருகு கள்ளிப்பாலினால் கிரந்தி, கஞ்சவாதம், பெருவியாதி, சீதக்கட்டு, கிருமி ரோகம், பக்கச் சூலை, கரப்பான் ஆகியவைகள் நீங்கும்.

உறைந்த பால் ஒன்று முதல் இரண்டு கிராம் எடை அளவே உபயோகிக்க கூடிய அளவாகும். தேள் கொட்டிய இடத்தில் கள்ளிப் பாலை இட்டால் வேதனையடங்கும். கள்ளி மரப் பட்டை நரம்புச் சிலந்தி; கபவாத தொந்தம், சந்நிபாதம் ஆகியவற்றை நீக்கும்.

கை கால் கடுப்பு குணமாக திருகுக் கள்ளியின் உள் சதையை ஒரு டம்ளர் அளவு அடுத்து சட்டியில் போட்டு அத்துடன் இரண்டு தேக்கரண்டியளவு கடுகு எடுத்துப் பொடி செய்து போடவேண்டும். இது நன்கு சூடேறிய பின் ஒரு துணியில் கொட்டி சிறிய மூட்டை போல் செய்து வலியுள்ள இடத்தில் ஒத்தடம் கொடுக்க குணமாகும்.

ஐயநோய் எனப்படும் திருட்டு நோய், குடல் புழுக்களின் தொந் தரவுகள், வலி முடக்குகள் ஆகியன இதன் பாலால் ஒழியும். கரப்பா னுக்குத் தடவ குணமாகும்.

* * *

## கள்ளி

**(பெருங்கள்ளி, ஈழத்தலரி)**

**See : Plumeria alba**

**அலரி வகைகளைப் பார்க்கவும்**

* * *

## மான் செவிக்கள்ளி

## Coelasia klernii

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Euphorbon, gum, resin, caoutceouc and malate of calcium*

*Action* : *Milky juice is in small doses Purgative in large doses an Acrid, Counter irritant and Emetic.*

Uses : This plant is an ideal medicine to treat chronic ulcers, chronic herpes etc. The extract of this plant is bitter in taste. This generates body heat. The latex of this plant

induces loose stools. This also could be used as an external application for skin ailments. If taken internally it cures herpes.

இச்செடியால் ஆறாத புண்கள், தேக வறட்சி, புடைப்பு பொரிக்கிரந்தி இவை நீங்கும். இது கைப்பு, கார்ப்பு சுவையுடையது வெப்பத் தன்மையுடையது. ஆறாத, மிகவும் நாள்பட்ட புண்களுக்கு பாலைத்தடவ குணமாகும். படைகளுக்குத் தடவ படை தீரும். இதன்பாலை உள்ளுக்கு சாப்பிட பேதியாகும். உடல் வளர்ச்சிக் குறைகள் நீங்க இதை சாப்பிடவேண்டும். மேலும் இதை உள்ளுக்கு சாப்பிடுவதனால் பால்நோய்கள் தீருவதுடன் சதைப்பற்றிய வரிக் கிரந்தி நோய்களும் தீரும்.

* * *

## கள்ளி

### (கள்ளி முள்ளையான்)

## Staphylea indica

### (N. O. Vitaceae)

*Habit* : *Herb or under shrub*

*Parts used* : *Root and the whole plant*

*Action* : *Root is Stomachic, Tonic and Astringent in Diarrhoea, Colic etc., Plant is Anti-rheumatic and Astringent*

Uses : This is refrigerant and increases the secretion of salivary glands. This also helps to treat indigestion, nausea and vomiting.

The sourness(pullippu)of this latex cures rheumatism,the bitter taste cures biliary disease and sweet taste cures phlegmatic diseases. To treat indigestion this plant should be cut into small pieces and roasted in gingelly oil, then black gram, ginger, mint leaves, pepper, cumin and salt to be added. This mixture is ground and is taken along with food to cure indigestion.

இது குளிர்ச்சியுண்டாக்கி, உமிழ்நீர் பெருக்கி அஜீரணத்தை போக்கி செரிப்புண்டாக்கும். பசியை தூண்டும். உடலை உரம்பெறச்

செய்யும். குமட்டல், வாந்தி, வாய் அருசி ஆகியவைகளை நீக்குவதுடன் நீர்தாக வேட்கையை அடக்கும்.

கள்ளிமுளையானின் புளிப்பால் வாத நோய்களும், கைப்புருசியால் பித்த பிணிகளும், இனிப்புருசியால் சிலேத்தும நோய்களும் விலகும்.

இதனை சிறு துண்டுகளாக்கி நல்லெண்ணெய் விட்டு வதக்கி உளுந்து, இஞ்சி, கொத்தமல்லி, மிளகு, சீரகம், சிறிது புளி, உப்பு சேர்த்து துவையலாக சாப்பாட்டில் சேர்க்க அஜீரணம் போகும்.

* * *

## கறிமுள்ளி
### (பப்பர முள்ளி)

## Solanum indicum
### (N. O. Solanaceae)

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Herb or under shrub* |
| *Parts used* | : | *Fruit, roots, seeds and leaves* |
| *Constituents* | : | *Fruit and root contain wax, fatty acids and alkaloids, solanine and solanidine* |
| *Action* | : | *Cordial, Aphrodisiac, Astringent, Carminative, Cardiac, Tonic and Resolvent.* |

Uses : This is a recommended medicine for dry cough fever, and asthma. This contains fat and iron. The decoction of the fruit is a good medicine for urinary disorders. The decoction of the leaves is useful to treat irritating cough. The smoke made out of this seed gives relief in asthma. Root is regarded as diuretic, useful in dropsy and used as an expectorant. It is useful in cough and catarrhal affections. Fruit is edible.

இதனை பப்பரமுள்ளி என்றும் கூறுவர். வறட்டு இருமல், காய்ச்சல் ஆஸ்துமா போன்ற பிணிகளுக்கு இது நல்ல மருந்தாகும். இதில் கொழுப்புச்சத்தும், இரும்புச்சத்தும் அதிகமாக உள்ளது. இதன் காயைக் கஷாயம் செய்து சாப்பிட சிறு நீரகக் கோளாறுகள் குணமாகும். புகை இருமலுக்கு இதன் இலையைக் கஷாயமாகச் செய்து சாப்பிடவேண்டும். இதன் விதையைப் புகையவிட்டு

சுவாசிப்பதன் மூலம் சுவாச காசநோய் தொடர்பான இரைப்பு சமனப்படும். இதனை வற்றல் போட்டும் மேற்கண்ட நோய்கட்கு சாப்பிடலாம்.

* * *

## கற்றாழை

### (சோற்றுக் கற்றாழை)

## Aloe indica

### (N. O. Liliaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *It contains a mixture of glucosides collectively called 'aloin',*

*Action* : *Stomachic, Tonic in small doses, in large doses Purgative and Indirectly Emmenagogue and Anthelmintic.*

Uses :This is the best among the Aloe species. If it is consumed for 48 days it rejuvenates the body.

Commonly this plant is used to treat rheumatism, phleg-matic diseases, worm infection, leprosy, piles, psychic dis orders and dyspepsia. It is an important rejuvenator which gives strength and vitality. It cures piles, flatulance and dysentery. If sugar candy and cumin is added with this plant extract, dysentery could be successfully stopped. For the diseases of the spleen, the tender stem extract should be added with turmeric and taken internally. The flesh of the stem is a refrigerant. This also exhibits a good laxative property.

The pulp of the leaves is washed well and mixed with alum. This mixture is placed into a bag with a piece of cloth and hung, the droplets falling from this bag is very useful in treating many opthalmic ailments. The extract of this plant alone is useful in many calcination processes. The pulp mixed with oil and heated is used as hair dye to stimulate hair growth.

The juice of the leaves is applied on inflammations. The pulp washed in cold water and mixed with a little burnt alum is used with great advantage for persons predisposed to apoplexy, it improves intellect. Iron magnet and Iron dross are easily reduced into red oxide by this pulp. Pulp of leaves and seeds are eaten in famine.

பொதுவாக எல்லாக் கற்றாழைகளும் வாதமேகம், கபமேகம் கிருமிகுத்தல், பெருநோய். மூலம், உன்மத்தம், பவுத்திரம், குன்மம், பித்தகிரீச்சரம் ஆகியவற்றை போக்கும்.

சோத்துக் கற்றாழை ஒரு சிறந்த ரசாயன மூலிகையாகும். வயிற்றுநோய்களான மூலம், சீதபேதி, ரத்தமூலம் போன்றவற்றை குணமாக்கும்.

இளமடலுடன் சீரகம் கற்கண்டு சேர்த்து அரைத்து கொடுக்க சீதபேதி நிற்கும்.

இளமடலுடன் மஞ்சள் சேர்த்து உள்ளுக்கு கொடுக்க ஆரம்ப பீலிக வளர்ச்சிக்கு உபயோகிக்கலாம். இதன் உட்சோறு உடலுக்கு மிக்க குளிர்ச்சியை தரும். இதனின்று தைலம் இறக்கி தினப்படி அருந்த வெட்டைச் சூடு தணியும். உடம்பு பெருக்கும், மலச்சிக்கல் நீங்கும்.

கற்றாழையின் சோற்றை கழுவி அத்துடன் சிறிது படிகாரம் சேர்த்து சிறுதுணியில் முடிந்து தொங்கவிட்டு அதன் கீழ் ஒரு பாத்திரம் வைக்க அதில் நீர் வடியும் இந்த நீரை கண்ணில் விட, கண்ணோய், கண் சிவப்பு, கண்ணறுத்தல் முதலியவை மாறும். இதன் தனிச்சாறு பற்பசெந்தூரங்கள் செய்ய உதவும்.

சோற்றை எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலைக்குத் தேய்க்க கூந்தல் வளரும். நித்திரை உண்டாகும்.

இந்த எண்ணெய் எலும்புருக்கி நோயினால் ஏற்படும் உடல் நலிவுக்கு சிறந்த பயனளிக்கிறது. கல்லீரல் ஆரோக்கியமாக இருப்பதுடன் நீண்டகால மலச்சிக்கல் நீங்கும். பெண்களுக்கு மாதாந்திர ருதுவை ஒழுங்கு படுத்தும்.

இதன் பால் கண், இரைப்பையில் உண்டாகும் புண்களுக்கு குணம்தரும். மேலும் இது இரும்பு அல்லது எஃகை நீராக்கும்.

இச்செடியின் சாற்றை அழற்சிக்குப்பூசலாம். இதன் மடலை குளிர்ந்த நீரில் சுத்திசெய்து பொடித்த படிகாரத்தைக் கலந்து கொடுக்க சன்னியைக் கேட்கும், புத்தியை அதிகரிக்கும்.

இதனை பசுமோரிலிட்டு வற்றல் செய்து தினமும் சாப்பிட வாத மேகம், மூலம், உள்சூடு முதலியவை தீரும்.

* * *

## கற்றாழை
### (செங்கற்றாழை)

## Aloe vera
### (N. O. Liliaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and root*

*Constituents* : *Aloin, resin and gum with small quantities of Anthra-quinone derivatives such as emodin and chrysophanic acid*

*Action* : *Laxative, Tonic, Emmenagogue and Styptic.*

Uses : This is the most important of all the varieties. If it is consumed for forty eight days it rejuvenates the body by expelling all the toxic effects. This could be used to cure rheumatism also. It eliminates the excess body heat. If this extract is consumed with 'thirikadugu churnam' vitality could be regained.

இது கற்றாழை வகைகளில் மிகச்சிறந்தது. இதை 48 நாட்கள் உட்கொள்ள உடம்பிலுள்ள தோஷங்கள் போகும். முன்கொண்ட உப்பெல்லாம் முறிந்து உடம்பில் நிற்காமல் வெளியேப் போகும். இதன் சோற்றை எடுத்து கடுக்காய்த்தூள் சேர்த்து முறைப்படி சுறுக்குக் கொடுக்க ரசம் மணியாகும். இது வாத நோய்களுக்கு மிகவும் உபயோகமானது. இதனால் உட்சூடு போகும். இதனை திரிகடுகு சூரணத்துடன் சாப்பிட உடல் வலிமைப் பெறும்.

* * *

# கற்றாழை

## (சிறு கற்றாழை)

## Aloe litoralis

## (N. O. Liliaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and roots*

*Constituents* : *Aloin resin and a volatile oil*

*Action* : *Laxative, Tonic, Styptic and Emmenagogue.*

Uses : Mucilagenous juice of the leaves is applied on the forehead in high fever to reduce temperature of the body. A powder is made from the juice of the leaves and it is called 'Cuaco' or Barbados Aloe. This is used as stomachic, laxative, a cooling, emmenagogue, vermifuge, useful in fever, piles and menstrual troubles.

Fresh juice of the leaves is cathartic and refrigerant, used in liver spleen ailments and for eye troubles. It is also useful in x-ray burns dermatitis and other skin disorders.

The latex of this plant is also called "Kariabolam". It is black or red in colour but bitter in taste. It increases the body heat. If consumed it checks dysentery. Chest pain, joint pains, oedema and rheumatism. Stomach ache also could be treated with this. The latex is not used as a medicine alone. It is always mixed along with other medicinal preparations. It is proved to possess laxative property if taken in a small quantity.

உலர்ந்தபால் கரியபோளம் என்றும் கூறப்படுகிறது. இது கருப்பாகவும், சிவப்பாகவும் இருக்கும். இது கைப்புச்சுவையுடையது. இது உடலுக்கு வெப்பத்தை உண்டாக்கும் இதை உட்கொள்ள ருது காணும், பேதியாக்கும்.

மார்புவலி, வீக்கம், மகாவாதம், வயிற்றுவலி, பக்கநோய் மேகக்கட்டி, கைகால்களின் சூலைநோய் போன்றவற்றை குணப் படுத்தும். உலர்ந்த பாலை தனியே பயன்படுத்த மாட்டார்கள். பிற மருந்துகளுடன்தான் பயன்படுத்துவார்கள். இதனை ஒன்றரை முதல் மூன்று குன்றி எடைவரை கொடுக்க மலத்தைக் கழிக்கும்.

* * *

## கற்றாழை
(ஆனைக் கற்றாழை)

## Agave americana
**(N. O. Amaryllidaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root, leaves and gum*

*Constituents* : *Agavose which is an inactive sugar and saponins*

*Action* : *Root is Diuretic and Anti-syphilitic. Sap is Laxative, Diuretic, Emmenagogue and Anti-scorbutic.*

Uses : The root of this plant is an effective diuretic. The extract of the plant is a good medicine for arthritis and oedema. A kind of rope is made out of the fibre of this plant.

இதன் வேர், நீர்க்கட்டை நீக்கி சிறுநீரை தாராளமாக வெளியேற்றும். இலைச் சாற்றை உட்கொள்ள வாதவலி, வாதவீக்கம் குணப்படும். இதன் நாரிலிருந்து கயிறு எடுக்கப்படுகிறது.

* * *

## கற்பூரம்

## Cinnamomum camphora
**(N. O. Lauraceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *The concrete volatile oil obtained by distillation with water of the wood of the trees*

*Constituents* : *Cymene which contains many essential oils and Camphoric acid*

*Action* : *Diaphoretic, Stimulant of skin and Cardiac, Stimulant, Antiseptic, Antispasmodic, inter-nally Expectorant, Sedative, Temporary Aphrodisiac, Narcotic, internally carminative and*

*externally Anodyne. In large doses it is an Aphrodisiac.*

Uses : Camphor is of a very peculiar fragnant with a penetrating odour, bitter, pungent and aromatic taste. It is extremely volatile and inflammable and burns with a bright light and much smoke.

This is bitter in taste and increases the body heat. This is an expectorant and controls the blood pressure. This also exhibits tranquilising and healing property. This could be also used as a rejuvenator. The following diseases could be effectively treated with camphor: worm infections, cold, rheumatism, burns, nausea and vomiting. The dossage for these ailments are 1 to 5gms.

For sprain and itching, this should be applied as an external application. To treat cold, this should be mixed with cumin and the mixture should be inhaled regularly. To treat rheumatism this should be mixed with guggul (Bosewalia glabra) and to be applied externally. If used with cooth powder, it stops bad breath.

Also it is good in typhus, confluent small pox and all fevers and eruptions of the typhoid class; also in measles, febrile delirium, whooping cough, hiccup, spasmodic asthma, hysteria, nymphomania, dysmenorrhoea, epilepsy and chronic bronchitis.

இது விறுவிறுப்புடன் கூடிய கைப்பு, கார்ப்புச் சுவையுடையது. இது வெப்பமுண்டாக்கி, அகட்டுவாய்வகற்றி, சமனகாரி, துயரடக்கி, இசிவகற்றி, அழுகலகற்றி, தூக்கமுண்டாக்கி, கோழையகற்றி. மேலும் தாது பெருக்கியாகும்.

கற்பூரத்தினால் கிருமி, நீர் ஏற்றம், இசிவு, சந்நிவாதம், வாத அலசம், தீச்சுட்டப்புண், கோரசுரம், வாந்தி, பித்தம், கபவாதம், காதையும் முகத்தையும் பற்றிய பிணிகள் அகலும். இதனை மேற்கண்ட நோய்களுக்கு ஒன்றுமுதல் 5 கிராம் எடை அளவே பயன்படுத்தவேண்டும்.

சுளுக்கு விரணம், நமைச்சல் இவைகட்கு இதைப் பொடித்துப் பூச குணமாகும். கற்பூரத்தையும் சீரகத்தையும் பொடித்து பொட்டலம் கட்டி முகர நீர் ஏற்றம் நீங்கும். குங்கிலியத்துடன்

சிறிது கற்பூரங்கலந்து வாதக்குடைச்சல், கீல்வாதம், பிடிப்பு, மார்புச்சளி இவைகட்குப் பூசி ஒத்தடம் கொடுக்க குணமாகும். பற்பொடியுடன் இதை சிறிது சேர்த்து பல் துலக்கிவர வாய்நாற்றம், பற்புழு நீங்கும். இதிலிருந்து கற்பூராதி சூரணம், கற்பூராதி மாத்திரை ஆகியவை தயாரிக்கிறார்கள்.

* * *

## கற்பூரம்

**(பச்சைக் கற்பூரம், ரசக்கற்பூரம்)**

## Dryobalanops aromatica

**(N. O. Dipterocarpeae)**

*Habit* *Tree*

*Parts used* : *The volatile oil of the wood*

*Constituents* : *Borneol, camphene, terpeniol and sesquiterpene*

*Action* : *Diaphoretic, Antiseptic, Antispasmodic and Stimulant.*

Uses : The drug is useful in hysteria and dysmenorrhoea.

This is easily evoporated. This is aromatic and gives cooling effect. There are three types of pachai karpuram. They are Easan, Veeman and Bhoothachirayan. These three are very effective in treating ulcers, joint pains, arthritis, diabetes, and phlegmatic disorders. This is refrigerant and tonic.

Easan type is white in colour and it is jelly like. Biliary diseases, giddiness, nasal disorders, thirstyness could be treated with this. Veema type is dirty white in colour. It is effective against thirstyness and stomatitis. This is refrigerant, tonic and slightly laxative.

Bhoothachirayan type is yellowish and bitter in taste. Cough and certain type of skin diseases, rheumatism and biliary diseases could be effectively treated with this. Pruritic ulcer is also treated with this. Liver and lung disorders also could be cured with this type of Dryobalanops aromatica.

இது கற்பூர வாழையில் பொருமி நிற்கும். பெருங்காற்றில் பறந்து போகும். இது ஆவிபட்டால் மறைந்துவிடும். நறுமண வாசனையும் குளிர்ச்சியும் உடையது. ஈசன், வீமன், பூதாச்சிறையன் என இது மூன்று வகைப்படும். இவை மூன்றுமே எட்டு விதமான குன்மங்கள், கீல்களில் குத்தல், வாதநோய், சீழ்ப்பிரமேகம், சிலேத்துமகோபம் ஆகியவற்றை நீக்கும். இது உடலுக்கு குளிர்ச்சி உண்டாக்கும், உரமாக்கும், கோழையை அகற்றும். ஈசன் வகை வெளுப்பும், தளதளப்பும், சாரமும் உடையது. கபசுரம் பித்தம், மயக்கம், நாசிநோய், தாகரோகம் ஆகியவைகளைப் போக்கும்.

வீமன் வகையானது அழுக்கு வெண்மை நிறமுடையது. நாக்கு முள், தாகரோகம் ஆகியவற்றை குணப்படுத்தும். உடல் நலமும் குளிர்ச்சியும், அற்பவிரோசனமும் உண்டாக்கும். பூதாச்சிறையன் மஞ்சள் நிறமும் கசப்பு சுவையுமுள்ளது. இது இருமல், அரித்திரா மேகம், வாதபித்த கபதோஷங்கள், திரிதோஷம், நமை நெருங்கிய புண்கள் ஆகியன நீக்கும்.

மேலும் பச்சைக்கற்பூரங்கள் ஈரல் அழற்சியைப்போக்கும். நுரையீரல் இரணத்தை ஆற்றும். மூளைக்குப் பலத்தைத் தரும்.

* * *

## கற்பூரப் புல்

**See : Andropogon citratus**

**பார்க்க : எலுமிச்சம் புல்**

* * *

## கற்பூர வள்ளி

## Anisochilus carnosus

**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Consiituents* : *Volatile essential oil*

*Action* : *Volatile oil is Stimulant, Diaphoretic and Expectorant.*

Uses : Fresh juice of the leaves mixed with sugar candy are given to children in coughs. It increases sweating.

If sugar and gingelly oil is added to the leaf extract and made into a mixture, this forms a cooling liniment for the head and this is useful in treating cold and phlegmatic diseases of the children. To calcify banana, the leaf extract is used. If the leaf juice is consumed three times a day for three days, cold could be cured. If the squeezed leaves are applied in the forehead, it releives head ache.

கார்ப்புச் சுவையும் வெப்பத்தன்மையும் உடையது. இது வெப்பமுண்டாக்குதல், வியர்வைப்பெருக்குதல், கோழையகற்றுதல் போன்ற குணங்களை உடையது. கற்பூரவள்ளியினால் காசம் என்கிற பொடி இருமல், அம்மைக் கொப்புளம், சிலேத்தும தோஷம், புறநீர்க் கோவை, கபக்கட்டு, வாதகடுப்பு ஆகியவை போகும்.

இலைச்சாற்றுடன் கற்கண்டு சேர்த்துக் குழந்தைகட்குண்டாகும் இருமலுக்குக் கொடுக்க குணமாகும். இலைச் சாற்றுடன் சர்க்கரை, நல்லெண்ணெய் சேர்த்துத் தடவிவர உடல் குளிரும். மேலும் தலைக்குத் தடவ ஜலதோஷம் தீரும். குழந்தைகட்கு கப தோஷத்தினால் உண்டாகும் பிணிகள் நீங்கும். மேலும் இதன் இலையால் வாழைப்பழம் பற்பமாகும்.

இவ்விலை சாற்றை காலை, மாலை இருவேளையும் அரைடம்ளர் அளவு சாப்பிட மூன்றே வேளையில் ஜலதோஷம் குணமாகும்.

இலையைக் கசக்கிப் பொட்டில் தடவ தலைவலி குணமாகும். குழந்தைகளுக்கு ஏற்படும் செங்கிரந்திக்கு இலைச் சாற்றுடன் சம அளவு குன்றிமணியிலைச் சாறும், வெங்காயச் சாறும் சேர்த்து காலை, மாலை கொடுத்து வர குணமாகும். புகைந்து புகைந்து தோன்றும் இருமலுக்கும் இது நல்லது.

இலைச்சாற்றைக் குழந்தைகளுக்கு கால் அரை தேக்கரண்டி அளவு தாய்ப்பாலோடு சேர்த்துக் கொடுக்க இருமல், நெஞ்சில் கபம் கட்டியிருத்தல், உள்நாக்கு அழற்சி (டான்சில்), நீர்க்கோவை, மாந்தம், கணை முதலான நோய்கள் அகலும்.

இலைச்சாற்றை நீர்சுண்ட காய்ச்சி ஒரு தேக்கரண்டியளவு பெரியவர்களுக்கும் ½ தேக்கரண்டி அளவு சிறியவர்களுக்கும் கொடுக்க அம்மைக் கொப்புளங்கள் நீங்கும்.

* * *

## கனகாம்பரம்

## Crossandra undulaefolia

**(N. O. Acanthaceae)**

*Habit* : *Herb or under shrub*

Uses : It is a common ornamental plant, bearing orange yellow flowers.

இதற்கு குறிப்பிடும்படியான மருத்துவப்பயன்கள் எதுவுமில்லை. ஆரஞ்சு, மஞ்சள், பச்சை போன்ற பலநிற பூக்களைக் கொண்ட செடிகள் உள்ளன. பூக்களை பெண்கள் தலையில் சூடுவர்.

* * *

## கஸ்தூரி மஞ்சள்
## Curcuma aromatica

**(N. O. Scitaminaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome*

*Constituents* : *A volatile essential oil, resin, starch, mucilage, sugar, gum, albuminoids and curcumin*

*Action* : *Tuber is Cooling, Diuretic, Stimulant Carminative, Antiseptic, Tonic and Aromatic.*

Uses : This is bitter in taste and increases the body temperature. This is an expectorant and cures ulcers, eczema and worm infections of the skin. This is also an aphrodisiac. This gives lustre to the skin if applied externally. This is used as an aromatic ingredient in perfumes. The leaf extract is useful in treating disease of the head. This is also used as an antidote for poisonous bites. To avoid skin diseases this could be mixed with black basil and used all over the body as applicant before hot water bath. It is also used externally when boiled in oil, as an application to sprains and bruises. The smoke made from the burning tuber if inhaled gives releif in asthma. This drug cures the nervous affections arising in pregnancy.

இது கைப்புச்சுவையும், வெப்பத்தன்மையும் உடையது. இது உரமாக்கியாகவும், வெப்பமுண்டாக்கியாகவும் அகட்டுவாய்வகற்றியாகவும் செயல்படுகிறது. இது பெருவிரணம், கரப்பான், கிருமிநோய், அக்கினிமாந்தம் இவைகளைப் போக்கும். வீரியமும் அறிவும் விருத்தியாகும்.

இதை அரைத்துத் தேய்த்துக்குளிக்க கரப்பான், கிருமிநோய், பெருவிரணம், மந்தாக்கினி ஆகியவை போகும். தோல் பளபளப்பாகும். வாசனைத் திரவியங்களோடும், தைலவர்க்கங்களோடும் இதைச் சேர்ப்பது வழக்கம்.

இதன் இலையின் சாறு எடுத்துப் பயன்படுத்த சிரசு தொடர்பான எந்த ரோகமும் குணமாகும் கரப்பான், வீக்கம் போன்றவற்றையும் நலமாக்கும். விஷக்கடிகளுக்கு நல்லது.

கஸ்தூரி மஞ்சளுடன் கருந்துளசியைச் சேர்த்து அரைத்து உடலெங்கும் தேய்த்து வைத்திருந்து இளஞ்சூட்டில் குளிக்க உடல் கவர்ச்சியுடனும் பளபளப்பாகவும் காணப்படும். சருமநோய்கள் எதுவுமே வராது. கஸ்தூரி மஞ்சளைச் சுட்டு அதன் புகையை மூக்கிலிழுக்க காச நோய், தொடர்பான இரைப்பு உடன் அடங்கும். இது கர்ப்பத்தினாலுண்டாகும் வாதநோயைப் போக்கும்.

* * *

## கஸ்தூரி வெண்டை

## Hibiscus abelmoschus

### (N. O. Malvaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds, root and leaves*

*Constituents* : *Seeds contain fixed oil, a solid crystalline matter Odoriferous principle and Resin*

*Action* : *Seeds are Stimulant, Carminative, Cooling, Diuretic, Demulcent, Stomachic, Antispasmodic, and Tonic.*

Uses : Aromatic oil is extracted from the seeds. Tincture is also made from this. This is used in all types of nervous disorders. This aromatic oil is used in the medicines which are used to cure headache. The powder of the seed

mixed with alcohol is used as an application on the wound of the snake bite. The extarcts of the leaf and root is used as a medicine to cure leucorrhoea. Seeds rubbed to a paste with milk is used to cure itch.

Mucilage prepared from the root and leaves of the plant is recommended in gonorrhoea and venereal diseases.

இதிலிருந்து வாசனை எண்ணெய் எடுக்கப்படுகிறது. இதிலிருந்து டிங்க்சர் தயாரிக்கலாம். இதனால் நரம்பு பற்றிய நோய்கள் குணமாகும். இந்த வாசனை எண்ணெய்யை தலைவலி, பித்தமயக்கம் ஆகியவற்றை நீக்கும் தைலங்களில் சேர்ப்பர். விதைத்தூளை சாராயச்சத்துடன் குழைத்து பாம்புக்கடிகளுக்கு தடவுவார்கள். விதைகளை அரைத்து பாலுடன் சேர்த்து தடவ உடல் எரிச்சல், நமைச்சல்தீரும். வேரிலிருந்தும் இலையிலிருந்தும் தயாரிக்கப்பட்ட குடிநீரை அருந்த வெள்ளை, வெட்டை நோய்கள் தீரும்.

* * *

## காக்கட்டான்

### (காக்கணாம் கொடி)

## Clitoria ternatea

### (N. O. Papilionaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Root, bark, seeds and leaves*

*Constituents* : *Root bark contains Tannin and Resins. Seeds contain fixed oil*

*Action* : *Fresh root is Aperient and Diuretic. Seeds are powerful Cathartic. Root bark is Demulcent, Diuretic and Laxative.*

Uses : This is used to treat indigestion, constipation, arthritis and eye ailments. This is employed with advantage in cases of ascites, enlargementof the abdominal viscera, sore throat, skin diseases etc. This removes phlegm and the mucous in the throat through purgation. They are useful in spleenic disorders, intestinal worms, neurosis of the thumb similar to cramp itching, sloughing ulcers black and white spots in the body etc.,

Roots relieves the irritation of the bladder and urethra, it is prescribed for gonorrhoea, diabetes and other urinery disorders. Ground into powder and it is given for children in indigestion, fever and croup.

அஜீரணம், மலச்சிக்கல் வாதவலி, கண்நோய், இவைகளுக்கு குணம் தரும். இது வயிற்றுப் புழுக்களை அழிக்கும், பெருவயிறு, தொண்டைப்புண், சரும நோய்களுக்கு குணம் தரும். இது கபத்தை பேதி மூலம் வெளியாக்கும். இதன் சாறு கல்லீரல் கோளாறுகளை குணப்படுத்தும், குடல் புழுக்களை அழிக்கும்; கட்டை விரலில் எற்படும் நரம்புச் சிக்கலை குணப்படுத்தும். உடம்பிலுள்ள தேமல், கரும்புள்ளிகளை குணமாக்கும்.

இதன் வேர் மேக ரோகங்கள், மூத்திரப்பை நோய்கள், மூத்திரத்தாரை எரிச்சல் போன்றவற்றை குணமாக்கும். இதனைப் பொடித்து குழந்தைகளுக்குக் கொடுக்க மாந்தம், சுரம், பிற நோய்கள் தீரும்.

* * *

## காக்கட்டான்
### (கருப்புக் காக்கணாம் கொடி)

## Clitoria ternatea
### (N. O. Papilionaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Root, bark, seeds and leaves*

*Constituents* : *Similar to white variety*

*Action* : *Similar to white variety.*

Uses : This is used to treat indigestion headache, heavyness in the head and also used to make calcination.

தலைவலி, தலைபாரம் ஆகியவற்றைக் குணப்படுத்தும். பற்பம் செய்ய உதவும்.

* * *

## காக்கட்டான்
### (ஜிகிரி காக்கட்டான்)

## Ipomoea hederacea
### (N. O. Convolvulaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Dried seeds*

*Constituents* : *Seeds contain a thick oil mucilage, glucoside tannin and pharbitisin*

*Action* : *Cathartic and Anthelmintic.*

Uses : It relieves gas and indigestion. For the patients of piles, the powder of the seed is very useful as laxative. This powder mixed with ginger will loosen the stools and reduces body temperature.

வாய்வு, அஜீரணம் நீக்கும். இதன் விதையைக் காயவைத்துப் பொடித்து, அரைத்தேக்கரண்டியளவு சாப்பிட மூலநோய் உள்ளவர்களுக்கு மலம் இளகும். அத்தூளுடன், இஞ்சியும், மிளகுத்தூளும் சேர்த்துக்கொடுக்கப் பேதியாகும். இது உடல் சுரத்தைத் தணிக்கும்.

* * *

## காக்கட்டான்
### (கருப்பு காக்கட்டான்)

## Convolvulus nil
### (N. O. Convolvulaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Dried seeds*

*Constituents* : *Similar to Ipomoea hederacea*

*Action* . *Cathartic and Anthelmintic.*

Uses : The powder of the seed is very useful as laxative. This is used to treat headache, heavyness of the head, rheumatism etc. This is laxative and relieves constipation. This is used in calcination. In filariasis medicines, it is used as one of the important ingredient. The root boiled in milk and made in to paste with milk and consumed every day

twice along with milk, it cures, diabetes, leucorrhoea burning sensation of the urinary tract, vaginal secretions etc.

The root along with the leaves of Cocculus villosus, root of phyllanthes niruri, Pedalium murca leaves and Cynodon bactylone all mixed and ground with 6 pepper. This mixture with buffelow's milk, if consumed twice a day, it cures chronic leucorrhoea, venereal ulcers, boils and vubos etc.

தலைவலி, தலைபாரம், வாதம் ஆகியவற்றிற்கு குணம் தரும். மலச்சிக்கலை நீக்கும். பற்பம் செய்ய உதவும். யானைக்கால் நோய்களுக்கான மருந்துகளில் உபசரக்காகும்.

காக்கணாங்கொடி வேரெடுத்து பாலில் வேகவைத்து, பால் விட்டரைத்து வேளை ஒன்றுக்கு, சுண்டைக்காயளவு, தினம் இரு வேளை பாலுடன் சாப்பிட்டு வர மேகரோக சம்பந்தப்பட்ட வெள்ளை ஒழுக்கு, பிரமேகம், தந்திமேகம், மூத்திர தாரை எரிச்சல், அழற்சி எரிச்சல் ஆகியவை தீரும்.

காக்கணாங்கொடி வேர், கட்டுக் கொடி இலை, கீழாநெல்லி வேர், ஆனை நெருஞ்சில் இலை, அருகம்புல் ஆகியவைகளை சம அளவு எடுத்து இதில் ஒரு கைப்பிடி அளவு எடுத்து அத்துடன் 6 மிளகுச் சேர்த்து, அரைத்து நெல்லிக்காய் அளவு எடுத்து 200மி.லி. கட்டி எருமைத் தயிருன் காலை, மாலை இருவேளை சாப்பிட பல ஆண்டுகளாக இருக்கும் வெள்ளையொழுக்கு, மேக ரோக சம்பந்தப் பட்ட இரணங்கள், கட்டிகள், அரையாப்பு, கொறுக்கு, ஆகியவைத் தீரும்.

* * *

## காக்கைக் கொல்லி

### Anamirta cocculus

### (N. O. Menispermaceae)

*Habit* : *Climbing shrub*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Picrotoxin, cocculin and anamirtin*

*Action* : *Emetic, Parasiticide and Narcotic.*

Uses : This transquilises the fishes. The seeds are used to eradicate lices. This is also used in treating epilepsy, paralysis and head ache. For the boils and feruncles this

is used as an external application. The seeds are also used to cure asthma.

இது காகமாரி, பேன் கொட்டை, நச்சுக் கொட்டை என்றும் கூறப்படுகிறது. இது மீன்களை மயங்கச்செய்து கரையில் கொண்டு வந்து சேர்க்கும். இதன் விதைகளினால் பேன்கள் சாகும். காக்கை வலிப்பு, பக்கவாதம், தலை புலி ஆகியவற்றிற்கு குணம் தரும். கட்டி புண்களுக்கு, இதன் விதையை அரைத்துப் பற்றுப் போட குணமாகும். இவ்விதை காச நோயை எதிர்க்கும்.

இதற்கு பூச்சியை அழிக்கும் குணமுண்டு. இதை ஆமணக்கு எண்ணெயுடன் கலந்து சரும நோய்களுக்கும் பச்சைக்காயின்சாற்றை ஊழ்த்தசைச் சிலந்திகளுக்கும், புண்களுக்கும் உபயோகப்படுத்துவர். இவ்விதையைச் சூரணித்து நெய்யோடு கலந்து களிம்பாக இரணங் களுக்குப் போடலாம். விஷத்தன்மையுள்ளதால் வழுவுண்ட ரணங் களில் சம்பந்தப்படாமல் எச்சரிக்கையாய் உபயோகப்படுத்த வேண்டும்.

* * *

## காசுக்கட்டி

See : Catechu pallidum

பார்க்க : கத்தக்காம்பு

* * *

## காசித் தும்பை

### Impatiens balsamina

**(N. O. Geraniaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Flowers and the whole plant*

Uses : This is used to cure statis. The extract of the whole plant is used in medicinal preparations. The extract of the flower is used as a healing agent for burns. The extract is diuretic and corrects the urinary passage.

இது குருதியோட்ட நிறுத்தத்தில் பயன்படுத்தப்படுகிறது. இம்முழுச் செடியின் சாறு இதற்கு மருந்தாகும். இதன் பூக்களின்

சாற்றை தடவ சுடுநீரால் உண்டான கொப்புளங்கள் ஆறும். இச் சாற்றை உள்ளுக்குச் சாப்பிட சிறுநீர் பெருகும். சிறுநீர் பாதையை சுத்தப்படுத்தும்.

* * *

## காசி ரத்னம்

### Ipomoea quomoclit

**(N. O. Convolvulaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Leaves*

*Action* : *Diuretic, Cooling and Vulnerary*

Uses : The squeezed leaf is used externally on the carbuncles of diabetic patients. The leaf extract if taken internally relieves piles. Piles could be completely cured if this extract is consumed along with cow's ghee regularly in the morning and evening.

இதன் இலை துவர்ப்புச் சுவையும் குளிர்ச்சியும் உடையது. இதன் இலையை நசுக்கி நீரிழிவு நோயால் உண்டாகும் பிளவு களுக்கு வைத்துக்கட்ட இரண்டு நாட்களில் குணம் தெரியும். மேலும் இந்த நசுக்கிய இலையிலிருந்து சாறெடுத்து உள்ளுக்குக் கொடுக்க மூலநோய் கட்டுப்படும். இதன் சாற்றுடன் பசுநெய் சேர்த்து காலையும் மாலையும் 2 ஸ்பூன் அளவு தொடர்ந்து சாப்பிட மூலநோய் அறவே நீங்கும்.

* * *

## காசினிக் கீரை

### Hibiscus cannabinus

**புளியாரைக் கீரைப் பார்க்கவும்**

**(கீரை வகைகளைப் பார்க்கவும்)**

* * *

## காஞ்சொறி
### (பெருங்காஞ்சொறி)

## Tragia involucrata
### (N. O. Euphorbiaceae)

*Habit* : *A stinging nettle*

*Parts used* : *Root*

*Action* : *Diaphoretic, Alterative and Diuretic.*

Uses : Root is useful in treating the itching of the skin. It is used in the form of paste to aid the extraction of guinea-worm.

Paste with Basil juice is also employed as a cure for itchy skin eruptions. The drug is also used in scorpion sting.

Fruit, rubbed over the head is useful in baldness.

இது கிடைப்பதரிது. இதன் வேருக்கு பொடியிருமல், நீர்க் கோவை, கபாதிக்கம், அரோசகம் ஆகியவற்றைப் போக்கும் குணம் உண்டு. இதன் வேரை கஷாயமிட்டுச் சாப்பிட மூத்திரக்கட்டை உடைத்து நீரைப் பிரிக்கும். இதன் சாற்றைப் பசும் பாலில் சர்க்கரை யிட்டுக் கொடுக்க சுரம், சொறி சிரங்கு போகும். இதன் காயை நசுக்கிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்ட பழுத்து உடையும்.

பெருங்காஞ்சொறி எங்கும் அருமையாய் கிடைக்கும். இதன் வேருக்கு காசம், சுவாசம், கபசுரம் ஆகியவற்றைப் போக்கும் குணமுண்டு.

* * *

## காட்டாத்தி

## Woodfordia floribunda
### (N. O. Lythraceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Flowers*

*Action* : *Flowers are Stimulant and Astringent, Dried ones are Astringent and Tonic.*

Uses : It is a small tree common in many parts of India. The leaf and buds are used in the preparations of anti-dysenteric medicines. The flower mixed along with the bark of wood apple, piper lanuolate and root of Aagle marmelos if taken as a drink it is useful as laxatrve. This is also widely used in making arishtas. The flowers exhibits tonic property. The fruit is diuretic. The seeds are used to cure the ulcers and poisonousbites. The decoction of the bark is also used as tonic.

இது எல்லா இடங்களிலும் காணப்படும். இதன் இலை மற்றும் மொட்டுகளைத் தனித்தோ அல்லது பிற மருந்துப் பொருட்களுடனோ குடிநீர் செய்து குடிக்க சீதபேதி நிற்கும்.

இதன் பூவுடன் வில்வவேர், வெள்ளிலோத்திரம், யானைத் திப்பிலி ஆகியவை சேர்த்து குடிநீர் செய்து குடிக்க கழிச்சல் ஆகும். மேலும் இது பல்வேறு அரிஷ்டங்களில் சேர்க்கப்படுகிறது. பூக்களை உட்கொள்ளுவதால் உடல் உரமாவதுடன் தாது விருத்தியாகும்.

இதன் காய் சிறுநீர் தடையில்லாமல் இறங்க உதவுகிறது. விதையை காடியுடன் அரைத்து நஞ்சுக்கடியினால் உண்டாகும் புண்களுக்கு தடவ குணமாகும்.

மரப்பட்டை கஷாயம் உடலை உரமாக்குவதுடன் தாதுவை விருத்தி செய்யும். மரப்பட்டையை அரைத்து கழுநீருடன் கலந்து கட்டிகளுக்குத் தடவ கட்டிகள் உடைந்து குணமாகும்.

* * *

## காட்டு இலுப்பை

**See : Bassia latifolia**

**இலுப்பை வகைகளைப் பார்க்கவும்**

* * *

## காட்டு சீரகம்

**See : Vernonia anthelmintica**

**சந்நிநாயகம் பார்க்கவும்**

* * *

## காட்டு புகையிலை

See : Lobelia nicotiana

புகையிலை வகைகளைப் பார்க்கவும்

* * *

## காட்டுப் பேய்ப் புடல்

See : Tricho santhes cucumerina

பேய்ப்புடல் வகைகளைப் பார்க்கவும்

* * *

## காட்டு மிளகு

See : Toddalia aculeata

மிளகரணை பார்க்கவும்

* * *

## காட்டு முருங்கை

See : Moringa cancanensis

மாலிங்கு பார்க்கவும்

* * *

## காட்டு முள்ளங்கி

நாரக்கரந்தை

See : Blumea auritia

* * *

## காட்டு வெங்காயம்

## Urginea indica

### (N. O. Liliaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Bulb*

*Constituents* : *Scillarian 'B'*

*Action* : *Expectorant, Stimulant, Diuretic, Emmenagogue, Deobstruent and Cardiac.*

Uses : Young tunicated bulbs only should be used as they lose their medicinal properties as they get older. Bulbs when rubbed tothe soles of the foot, relieves burning sensation. This reduces the heart beat and pulse. This is also used as diuretic. If consumed in large quantity, it is a tranqulizer and produces haematuria.

இதனை நரிவெங்காயம் என்றும் கூறுவர். இதன் இளம் வெங்காயம்தான் (Bulb) மருத்துவப் பயனுடையது. முற்றிவிட்டால் இதன் மருத்துவத்தன்மை போய்விடும்.

இது இதயத்துடிப்பை குறைக்கும். சிறுநீர் போக்கை அதிகப் படுத்தும். இதை அதிக அளவு உட்கொள்ள போதையுடன் கூடிய மயக்கம் உண்டாக்கும். சிறுநீருடன் இரத்தம் போகும்.

இவ்வெங்காயத்தை காயவைத்து பொடி செய்து மருளுக்குத் தடவ விழும். இவ்வெங்காயத்தின் சாறு ஆஸ்துமா நோய்களைக் குறைக்கும். கபம், கோழை, சீதளம், மகோதரம் ஆகியவற்றிற்கும் குணம் தருவதுடன் கால் ஆணிக்கும் சிறந்தது.

* * *

## கானான் வாழை

## Cammelina bengalensis

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Camellin*

*Action* : *Astringent, Febrifuge, Stimulant and Aphrodisiac.*

Uses : This could be cooked. The leaves along with the leaves of moringa to be boiled. This mixture should be added with cow's milk and sugar. If this mixture is consumed for 40 days, it helps to purify the blood and gives strength and vitality. Stem, leaf powder exhibit medicinal properties. The root reduces the body heat. This also used as an anti-dysenteric. This is also used to treat bed sores, stomatitis and dysentery, but it increases the phlegm function. To cure pyrexia, take 4 pepper, little quantity of cummin to be added with Cammelina bengalensis, boiled and consumed. The skin ulcers could be cured if the extract of the leaves are used as an externa l application. To reduce the excess menstural flow a preparation, is made from Cammelina bengalensis by mixing Bermuda grass (Cyanodon dactylon) bark of Ashoka with the leaves of the plant. A paste is made and this should be consumed along with hot water.

இதனை கானான் கோழிக் கீரை என்றும் கூறுவார்கள். இதை சமைத்தும் சாப்பிடலாம்.

இதன் இலையுடன் முருங்கை இலை சேர்த்து தண்ணீர் விட்டு கொதிக்க வைத்து இறுத்து அரை டம்ளர் அளவு பசும்பாலும் 1 தேக்கரண்டியளவு சர்க்கரையும் சேர்த்து நாற்பது நாட்கள் குடிக்க தேகத்தில் புதிய இரத்தமும், தாது விருத்தியும் நீற்றுப் போன இந்திரியம் இறுகி, ஆண், பெண் உடலுறவின் போது புதிய இன்பம் உண்டாகும்.

கானாம் வாழையின் காம்பு, இலை, பூ யாவும் மருத்துவப் பயன் உடையது. இதன் வேர் உடல் சூட்டை தணிக்கும். காய்ச்சலை போக்குவதில் சிறந்தது. தளர்ந்த நரம்பு சதை நாளங்களை உரப் படுத்தும். நீரான மலத்தை கட்டும். சிற்றின்ப உணர்வைத் தூண்டும். மற்றும் குழிப்புண், ஸ்தனப்புண், படுக்கை ரணம், ரத்தப்போக்கு (பெரும்பாடு) ரத்தபேதி, உஷ்ண பேதி ஆகியவைகளும் இதனால் குணமாகும். ஆனால் இது கபத்தை பெருக்கும் தன்மையுடையது. கானாம் வாழையை வேருடன் எடுத்து நீரில் அலசி ஓர் பிடி சிதைத்து இரண்டு குவளை நீரில் போட்டு கொதிக்க காய்ச்சி அரை குவளை யாக்கி ஒரு மடக்கு வீதம் குடிக்கவேண்டும். அடிக்கடி குடித்து வர சாதாரண காய்ச்சல் அகலும். நீர் வேட்கை மிகுந்த சுரங்களுக்கு

நாலு மிளகும் சிறிதளவு சீரகமும் சேர்த்து தட்டி கானாம் வாழை யுடன் சேர்த்துக் காய்ச்சி குடிக்க அடங்காத தாகமும் அடங்கி சுரம் தணியும். சுரத்துடன் பேதிக்கு இலை கஷாயம் குடிக்க குணமாகும்.

கானாம் வாழையுடன் அருகம்புல்லையும் சேர்த்து மைபோல் அரைத்து சிறிதளவு காலை, மாலை இரு வேளையும் பசும்பாலுடன் குடிக்க இரத்த பேதி நிற்கும். இது சமயம் காரம், புளி சேர்க்காமல் மோர், தயிர் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

புண்களை ஆற்ற இவ்விலையை அரைத்து புண்களின் மீது வைத்துக் கட்டிவர புண்கள் ஆறும்.

கானாம் வாழையிலை, அருகம்புல், அசோகமரத்துப்பட்டை, ஆகியவை சமஅளவு எடுத்து அரைத்து காலை, பகல், மாலை மூன்று வேளையும் 10 கிராம் அளவு சாப்பிட்டு வெந்நீர் அருந்திவர பெரும்பாடு குணமாகும். மேலும் மாதவிலக்கின் போது ஏற்படும் அதிக இரத்தப்போக்கும் நிற்கும்.

* * *

## காப்பி

### Coffea arabica

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Alkaloids caffiene, adenine, xanthine, hypoxanthine and guanosine*

*Action* : *Stimulant, Diuretic, Antispasmodic and Antisoporific andAnthelmintic.It assists Assimilation and Digestion, Promotes intestinal Peristalsis and Decreases the excretion of urea.*

Uses : Coffee is used in spasmodic asthma, whooping cough, hysterical affections and in Cholera infantum. It checks the chronic diarrhoea. The strong infusion made from the roasted seed powder stimulate the nervous and vascular systems. It accelerates the action of heart, kidney and skin. A strong decoction without milk or sugar is an effectual stimulant in opium poisoning and other narcotic poisons. If it is

used in hot instead of cold climates countless diseases are said to arise. This should not be used by dyspeptic patients. It is said to cause paralysis, rheumatism and diabetes.

காப்பி நறுமணம் உள்ள பானமாகும். இப்பானம் உண்ட உணவை செரிக்க வைக்கும். சப்த தாதுக்களை கட்டுப்படுத்தும். மூளையில் சேர வேண்டிய இரத்தத்தைக் குறைத்து நரம்பு நாளங்களில் அதிக அளவில் சேர்க்கும். மனச் சோர்வை நீக்கும். நித்திரையை குறைக்கும். உற்சாகத்தை உண்டாக்கும்.

காப்பி வடிநீரை பாலில் சேர்த்து அருந்த உமிழ்நீரை குறைத்து ஜீரண சக்தியை கொடுக்கும். இதனால் தீரா தலைவலி, நித்திரை யின்மை, இருதயப் படபடப்பு, பக்கவாதம், குன்மம் முதலிய வயிற்று நோய்களைத் தந்து முதிர்வதற்குரிய குறிகுணங்களை காட்டும்.

குழந்தைக்கு நித்திரையின்மையை உண்டாக்கி, அதன் வளர்ச்சியைத் தடுக்கும். ஆகையால் இப்பானத்தைக் குழந்தை களுக்குக் கொடுக்கக் கூடாது.

சிறிய அளவில் காப்பிப் பானத்தைக் கொடுத்தால் கக்குவான், குழந்தைகளுக்குண்டாகும் வாந்தி பேதி, அதிசார பேதி, இருதயப் படபடப்பு முதலிய நோய்கள் சாந்தமாகும். மூத்திரத்தை விருத்தி செய்து கை, கால் விக்கங்களைக் குறைக்கும். குளிர் சுரத்திற்கு இப்பானம் மிகவும் ஏற்றது.

* * *

## காயப்பங் கொட்டை

## Strycnos ignatii

### (N. O. Loganiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Seed contains strychnnine and Brucine.*

*Action* : *Stimulant, Nervine and Tonic.*

Uses : Seeds should be used with great caution. Seeds are used in Asthma, dropsy and piles. A paste made from this seeds is useful to reduce swellings.

இதன் விதைகளை மிகவும் எச்சரிக்கையுடன் பயன்படுத்த வேண்டும். இது ஆஸ்துமா, பாண்டு, மூலம் போன்ற நோய்களைக் குணப்படுத்தும். மேலும் இதை அரைத்து பற்றுப்போட வீக்கம் குறையும்.

* * *

## காயாச் செடி

## Memecylon edule

### (N. O. Melastemaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and roots*

*Constituents* : *Leaves contain a yellow glucoside besides chlorophyll-resins, Colouring matter and Gum.*

*Action* : *Astringent, Cooling and Emmenagogue.*

Uses : Infusion of the leaves is used in leucorrhoea and gonorrhoea. Decoction of the root is used in menorrhagia and gonorrhoea.

காயாச் செடி வெள்ளைப்போக்கு, வெட்டை போன்ற நோய்களுக்குச் சிறந்தது. மேகம், பெரும்பாடு போன்ற நோய்களை இதன் வேர்க்கஷாயம் குணப்படுத்தும்.

* * *

## காராமணி

## Vigna catiang

### (N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Rich in protiens*

*Action* : *Seeds are Acrid, Laxative, Appetizer, Galactagogue, Tonic, Aphrodisiac, Diuretic and Indigestible. Pulse is diuretic and Anti-bilious.*

Uses : Pulse is used to strengthen the stomach. Boiled seeds are good food and they destroy worms in the stomach.

இதனை தட்டைப்பயறு என்றும் கூறுவர். இது புரதச்சத்து மிக்கது. இதனை அதிக அளவில் உண்ண வாய்வுக் கோளாறுகளை உண்டுபண்ணும். மேலும் அஜீரணம், வாதபிடிப்பு, வாதமூலம், நீங்காத பேதி ஆகியவை உண்டாகும். ஆனால் வயிற்றிலுள்ள பூச்சிகளை அழிக்கும்.

* * *

## காரை

**(குத்துக் காரை, பெருங்காரை)**

## Webera tetrandra

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves*

*Action* : *Refrigerant, Cholagogue and Styptic.*

Uses : Leaves are edible. If it is consumed regularly it regulates blood pressure and cures dysentery and diarrhoea with blood and mucous. Leaf is refrigerent which is bitter in taste. Mixture of leaf and tamarind is used to treat bloody stools. The fruit is also proved medicinal.

இலைகளை உணவாகப் பயன்படுத்துகின்றனர். இதை உட்கொள்ள ரத்தக் கொதிப்பு, அதிசாரம், சீதரத்தம் முதலியவை குணப்படும். காரை இலை துவர்ப்பும்,இனிப்புச் சுவையும்,குளிர்ச்சித் தன்மையும் கொண்டது. இரத்தக்கடுப்பு நீங்க காரை இலையுடன் சேர்த்து கடைந்துண்ண வேண்டும். இதன் பழமும் மருத்துவ குணமுடையது.

* * *

## காரை

**(மணக்காரை)**

## Vangueria spinosa

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruit and leaves*

*Constituents* : *Fruit contains gum and a small quantity of tannic acid*

*Action* : *Refrigerant, Cholagogue, Anthelmintic, Dipurative and Expectorant.*

Uses : It relives Diphtheria. Fruit is used in biliary complaints with hepatic congestions. Fruit is edible. The fruit of this plant is a refrigerant. It cures diphtheria and liver disorders.

இதன் பழம் உடலுக்கு குளிர்ச்சியை உண்டாக்கும். தொண்டை அடைப்பான் நோயை குணப்படுத்தும். கல்லீரல் கோளாறுகளை சரிசெய்து பித்த சம்பந்தமான நோய்களை குணப்படுத்தும்.

* * *

## காரை

**(மலங்காரை)**

## Elaecarpus oblongus

**(N. O. Tiliaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruit*

*Action* : *Fruit is Emetic.*

Uses : Fruit is used as an emetic, The fruit ஓ this plant induces vomiting, but it is used as a medicine to cure rheumatism, pneumonia, intestinal ulcer, piles, leprosy and dropsy.

இதன் பழம் வாந்தியை உண்டாக்கும். ஆனால் இது வாத நோய், நிமோனியா காய்ச்சல், வயிற்றுப்புண், குஷ்டம், பாண்டு, மூலம் ஆகியவற்றைப் போக்கும்.

* * *

## காரை
### (உலங்காரை)

## Elaeocarpus serratus
### (N. O. Tiliaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and fruits*

Uses : Leaves are used in rheumatism and used as an antidote to poison. Fruits are used in dysentery and diarrhoea. The leaves are used to treat rheumatism. This is also used as an antidote for poisons. The fruit checks dysentery.

இதன் இலைகள் வாதநோயைப் போக்குவதுடன் விஷமுறி வாகவும் பயன்படுத்தப்படுகிறது. காய் பேதியையும், சீதபேதியையும கட்டுப்படுத்தும்.

* * *

## காரை
### (செங்காரை)

## Canthium parviflorum
### (N. O. Rubiaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves, root and fruits*

*Action* : *Root is Anthelmintic and Cooling.*

Uses : Decoction of the leaves and root checks dysentery. The leaves and fruits are used as food.

இலை, வேர்க் கஷாயம் பேதியை கட்டுப்படுத்தும். இதன் இலையும், பழமும் உணவுப் பொருளாகப் பயன்படுத்தப்படுகிறது.

* * *

## காரை
(மரக்காரை)

**See : Randia durnetorum**

மருக்களாங் காரை வகைகளைப் பார்க்கவும்

* * *

## காரை
(வலங்காரை)

## Flacourtia jangomas
**(N. O. Flacourtiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruits, leaves and bark*

*Action* : *Leaves are Diuretic and Diaphoretic.*

Uses : The leaf of this plant is diuretic. The fruits are used to cure biliary diseases. The decoction of the bark reduces biliary secretion.

இதன் இலை சிறுநீரைப் பெருக்கும். பழம் பித்த நோய்களை குணப்படுத்தும். பட்டைக்கஷாயம் பித்தத்தைக் குறைக்கும்.

* * *

## காரை
(விலங்கு காரை)

## Heynea trijuga
**(N. O. Meliaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Bark, leaves and fruits*

*Constituents* : *An essential oil*

*Action* : *Bark and leaves are Bitter and used as a Tonic.*

Uses : Bark and leaves are bitter in taste. It gives strength and vitality.

பட்டையும் இலையும் கசப்புத்தன்மை உடையது. உடலை உரப்படுத்தும். இதன் பழத்தை திருடர்கள் உணர்வை மழுங்கச் செய்யப் பயன்படுத்துவர்.

* * *

## கார்போக அரிசி

## Psoralea corylifolia

### (N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds and leaves*

*Constituents* : *Seed contains an unsaponifiable essential oil.*

*Action* : *Seeds are Anthelmintic, Diuretic and Diaphoretic. The oil has an Irritant and Specific effect on the skin and mucous membrane. In ayurveda the seeds are described as Laxative, Fragrant, Stimulant and Aphrodisiac.*

Uses : This is useful in skin diseases. Oil is extracted from this seed. This oil diluted with chalmogra oil, forms a useful application in leucoderma. Seeds ground into paste mixed with cow's milk used for skin diseases such as itches, psoriasis, leprosy, eczema, ringworm etc.. and also in snake bites and scorpion sting. Seeds increases appetite.

Seeds mixed with the seeds of Hygrophila spinosa are powdered and made into a paste with coconut oil, it is useful in skin ailments.

இது சிறந்த மலமிளக்கியாகும். இதனை அதிகம் உட்கொள்ள காம இச்சையைத் தரக்கூடியது. இதன் இலை சருமநோய்களை குணமாக்கும். இரைப்பைக்கு வலுவைத் தரும் விதை எண்ணெய் பல மருத்துவப் பயன்களையுடையது. இந்த எண்ணெயை சால்முகரா எண்ணெயோடு கலந்து வெண்குட்டத்திற்கு பூசலாம்.

விதைகளை பசும்பாலில் அரைத்து பாம்பு விஷம், நமைச்சல், ஆனைச்சொறி, குஷ்டம், கரப்பான், இரணம், முதலிய சருமநோய்களுக்கு மேலே தேய்த்துக் குளிக்க குணமாகும். தேள்கடிக்கும் இதை உபயோகிக்கலாம்.

இவ்விதைகளை நீர்முள்ளி விதையுடன் சேர்த்து தூள்செய்து தேங்காய் எண்ணெயுடன் கலந்து தடவ சிரங்குகள் குணமாகும்.

* * *

## காவளை

## Clerodendron indicum

### (N. O. Verbenaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Root leaves and resin*

*Constituents* : *Resin*

*Action* : *Anti-rheumatic, Antisyphilitic and Leaves are Anthelmintic.*

Uses : The root is useful in asthma, cough and scrofulous affections. The juice of the leaves and tender branches are used with ghee as an external application in herpetic eruptions and pemphigus.

A resin obtained from the plant is employed for syphilitic rheumatism.

இதன் வேர் ஆஸ்துமா, இருமல், கண்டமாலை ஆகியவற்றை குணப்படுத்தும். இதன் இலையிலிருந்தும், இளம் குருத்துக்களிலிருந்தும் எடுக்கப்பட்ட சாற்றுடன் நெய் சேர்த்துக் குழைத்து படர்த்தாமரை, நீர்க் கொப்புளம் போன்றவற்றிற்கு தடவ குணமாகும்.

* * *

## காவாளை

## Tephrosia hirta

### (N. O. Leguminosae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, bark and roots*

Uses : This is used only as manure to other plants and trees.

இது ஒரு சிறந்த பசுந்தாள் உரமாகப் பயன்படுத்தப் படுகிறது.

* * *

## காவாட்டம் புல்

## Cymbopogon martini

### (N. O. Gramineae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *This grass contains palmorosa oil and Geranium oil*

*Action* : *Carminative, Stimulant and Antiseptic.*

Uses : It is used as a remedy for fever, rheumatism, vomiting, diarrhoea and thirstyness.

The oil is used as a base for several perfumes and in cosmetics. Along with sandal wood oil, it is used in ointments for warding off mosquitoes It is used as a remedy for lumbago and stiff joints and in skin diseases. It prevents falling of hair. In small doses it gives relief from bilious complaints. This oil is used to cure low back pain. If taken internally it reduces the biliary diseases. This oil is also used externally as an application to reduce the pain in rheumatism. Decoction of the leaves are prescribed for fever and dehydration.

இதன் சாரம் வாதநோய், சுரம், வாந்திபேதி, போன்றவற்றை குணமாக்கும். இதிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் இடுப்பு வாத நோயையும், கீல் பிடிப்பையும் குணப்படுத்தும். இந்த எண்ணெய் தலைமுடி உதிர்வதை தடுக்கிறது. இதனை வாசனைத் தைலங்களில் சேர்க்கின்றனர். இதை உள்ளுக்குச் சாப்பிட பித்தநோய்கள் குண மாகும்.

* * *

## காளான்

### (நாய்க்குடைக் காளான்)

## Agaricus campestris

### (N. O. Fungi)

*Habit* : *Mycelium wtth fruit body*

*Parts used* : *Fruit body*

*Constituents* : *The true active principles are Agaric and Fungic or laric acid*

*Action* : *Febrifuge, Vulnerary, Lactifuge, Antidote Antiseptic and Tonic.*

Uses: It grows on rotten wood. This is rich in Proteins. Preventive medicines for cholera, small pox and malaria are made from this. Stomatitis intestinal ulcer, ulcer of the anus are cured by this. It deminishes the lactic secretion.

இது புரதச்சத்து மிக்கது. விஷசுரம், அம்மை, காலரா போன்ற வற்றின் கால தடுப்பு மருந்துகளை இதிலிருந்து உற்பத்தி செய்கின் றனர். வாய்ப்புண், குடல்புண் மற்றும் ஆசனபுண் ஆகியவற்றை ஆற்றும். தாய்ப்பாலை வற்றச்செய்யும். இதில் பல வகையுண்டு. புற்றுக்காளான் (எறும்பு புற்றில் வளர்வது), வரிக்காளான், வலைக் காளான், பொரிக்காளான் போன்ற பல இனங்கள் உள்ளன.

* * *

## காளான்

**(கருப்புக் காளான்)**

## Agaricus muscaria

**(N. O. Fungi)**

Uses : This is poisonous, therefore it is not used.

இது விஷத்தன்மையுடையது. இதை பயன்படுத்துதல் கூடாது.

* * *

## கிச்சிலிக் கிழங்கு

## Kaemferia galanga

**(N. O. Zingiberaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Rhizome*

*Constituents* : *A volatile oil*

*Action* : *Stimulant, Carminative, Expectorant, Alterative, Diuretic, Aromatic and Cooling.*

Uses : This is white and round in shape. This is aromatic. If consumed regualrly, it not only increases the body weight, but also cures all phlegmatic diseases. This also cures arthritis, bad breath, anorexia, dyspepsia, leprosy piles, asthma and jaundice. It is also an appetizer. Juice of the leaf if taken in recommended doses it reduces the oedema.

இது வெளுப்பும் வட்டவடிவமும் உள்ள ஒருவகைக் கிழங்கு. இதற்கு நல்ல மணம் உண்டு இதனை உட்கொள்ள உடல் தேறுவதுடன், கபதோஷம், கீல்பிடிப்பும் நீங்கும். மேலும் வாதம், வாய் நாற்றம், அரோசகம், மீலிகாபி விருத்தி, குன்மம், குட்டம், மூலம், காசம், காமாலை ஆகிய நோய்களை நீக்கும். பசியையுண்டாக்கும் குணம் இதற்கு உண்டு.

கிச்சிலி இலைச் சாற்றைத் தக்க அளவில் கொடுக்க கைகால் வீக்கம் குறையும்.

* * *

## கிச்சிலிக் கிழங்கு

**(சீமை கிச்சிலிக்கிழங்கு)**

**See : Hedychium spicatum**

**(N. O. Zingiberaceae)**

**மலை இஞ்சி பார்க்கவும்**

* * *

## கிரந்தி நாயகம்

**(சிலந்தி நாயகம்)**

### Ruellia prostrata

**(N. O. Acanthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, tender fruits and flowers.*

*Action* : *Diuretic, Laxative, Germicide, Antisyphilitic and Vulnerary.*

Uses: It cures all types of boils and furuncles of the body. The leaf extract mixed with boiled cow's milk and consumed twice a day kills the bacteria which are the cause to form boils, and furncies. For the skin ulcers, the leaf is used as an application when made paste without adding water. The leaf extract reduces the glucose contents in the blood, if taken daily. For the inflammation of the nail, the extract is used as an external application. Tender fruits and flowers added with 25 ml pure rose water and mixed with powdered alum (4gms) will be useful to treat eye problem if used after 4 hours. Moreover this juice of the leaf is also proved to cure internal cancers.

இதனை பட்டாசுக்காய்ச் செடி என்றும் கூறுவர். உடலில் தோன்றும் எந்தவிதமான கட்டிகளையும் குணப்படுத்தும் தன்மை இதற்கு உண்டு. சிலந்திநாயகப் பச்சிலையை இடித்துச் சாறு எடுத்து காய்ச்சிய பசும்பாலில் தேக்கரண்டியளவு கலந்து தினம் இருவேளை சாப்பிட கட்டிகள் தோன்றுவதற்கான நுண் கிருமிகளை அழிப்ப துடன் கட்டிகளையும் குணப்படுத்தும். இதை தண்ணீர் விடாமல் அரைத்து கட்டிகள், உடலில் தோன்றும் ரணங்கள் ஆகியவற்றில் அரைத்துக் கட்ட குணமாகும். இரத்தத்தில் சர்க்கரையின் அளவைக் குறைக்க இச்சாற்றை தினமும் சாப்பிட்டு வரவேண்டும்.

நகச்சுற்றுக்கு இலையை நீர் விடாமல் அரைத்து விரலில் கட்ட உடைந்து கெட்ட நீர்கள் யாவும் வெளியேறி குணமாகிவிடும்.

இதன் இளம் பிஞ்சுகளையும் பூக்களையும் எடுத்து 25ml சுத்தமான பன்னீர்விட்டு அதில் பொடித்த படிகாரம் 4 கிராம் அளவு போட்டு 5 மணி நேரத்திற்குப் பின்பு கண் கோளாறுகள், பார்வை மங்கல் போன்றவற்றிற்கு ஒரு துளி கண்ணில் விட குணமாகும்.

மேலும் இதன்சாறு உடல் உள்ளுறுப்புக்களில் காணும் புற்று நோய் இரணங்களைக்கூட குணப்படுத்தும் தன்மையுள்ளது.

* * *

## கிராம்பு

**See : Carryophyllum aromaticum**

**பார்க்க : இலவங்கம்**

* * *

# காட்டுக் கிராம்பு

**(நீர்க் கிராம்பு)**

## Jussiaea suffruticosa

**(N. O. Onagraceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Young buds and whole plant*

*Action* : *Astringent, Carminative, Diuretic, Vermifuge and Anthelmintic.*

Uses : The plant reduced to a pulp and steeped in butter milk is useful in diarrhoea and dysentery. Decoction of the plant is given in flatulence and leucorrhoea.

If applied for ulcers and wounds it heals fast. Butter milk with this plant extract is a good combination to check dysentery. The decoction this plant eradicate the intestinal worms and induces loose motion.

இதில் நீர்க்கிராம்பு (Jussiewa repens) என்ற வகையுமுண்டு இரண்டின் குணங்களும் ஒன்றேயாகும். சீதரத்தபேதி, வெள்ளைப் போக்கு பெண்களுக்கு மாதவிடாய் சமயம் வெள்ளை படுதல் போன்றவற்றிற்கு குணம் தரும். புண் காயம் இவற்றிற்கு பற்றிட சிறந்த குணம் ஏற்படும்.

இச்செடியை அரைத்து மோருடன் கலந்து கொடுக்க சீதபேதி நிற்கும். இதன் கஷாயம் வயிற்றிலுள்ள பூச்சிகளை அழித்து பேதியாகச்செய்யும்.

* * *

# கிரிமிஞ்சி ஓமம்

## Lingusticum diffusum

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *A volatile oil*

*Action* : *Anthelmintic and Aromatic.*

Uses : This is used as a medicine for cattle.

இது கால்நடைகளுக்கு மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## கிலுகிலுப்பை

(நரிமிரட்டி, பேய்மிரட்டை)

## Crotolaria verucosum

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Crotalaburrin*

*Action* : *Germicide, Insecticide, Uterine Tonic, Emmenogogue, Anti-syphilitic and Vulnerary.*

Uses : The leaf is bitter in taste. The leaf paste is used as an external application for eczema of the skin. The decoction of the leaves eradicates intestinal worms and increases the salivary secretion.

இதன் இலை கசப்புச் சுவையும், வெப்பத்தன்மையும் கொண்டது. சொறி சிரங்குகள் மீது இதன் இலைகளை அரைத்துப் பூசலாம். மேலும் உமிழ்நீர் தேவையான அளவு சுரக்க, வயிற்றிலுள்ள நுண்புழுக்களை அழிக்க இதன் இலைகளைக் கழுவி, ஐந்நூறு மில்லி சுத்தமான தண்ணீரில் இட்டுக்காய்ச்சி வடிகட்டி குடிக்கவேண்டும்.

* * *

## கீரிப்புரண்டான்

(கீரிப் பூண்டு)

## Ophiorrhiza mungos

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Roots, leaves and bark*

*Constituents* : *Starch, Resin and Fat*

*Action* : *Plant is Emetic, Stomachic, Laxative, Soporific and Antidote. Root is Bitter and it is used as a Tonic.*

Uses : The root bark made into a paste with milk, if consumed for 3 days, it acts as an antidote for snake bites and rabbis. This also cures cancer. This induces sleep and improves fertility. The decoction made out of its leaves and root bark is an appetizer. Root bark also acts as laxative.

இதன் வேர்ப்பட்டையை அரைத்து பாலில் கலந்து 3 நாள் காலையில் குடிக்க பாம்புக்கடிவிஷம், வெறி நாய்க்கடிவிஷம் நீங்கும். புற்றுநோய்க்கு குணம் தரும். நித்திரை வரும். மேலும் கர்ப்பம் தரிக்கச்செய்யும். இலை, வேர், பட்டைக் கஷாயம் பசியைத் தூண்டும். பட்டைக் கஷாயம் மலமிளக்கியாகும்.

* * *

## கீரை

**(அருக்கீரை, அரைக்கீரை)**

### Amaranthus tristis

**(N. O. Amaranthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Rich in vitamins*

*Action* : *Stimulant, Laxative, Diuretic, Aphrodisiac and Tonic.*

Uses : This is a very useful medicinal plant. If this is cooked and taken regularly it relieves temperature, phlegmatic diseases, arthritis etc. This is also used to regain strength and vitality. This is given to women after child birth as labour tonic. If consumed with toordhal and pepper, it relieves cough and reduces temperature. For cold and fever it should be taken along with asafoetida and onion. If it is taken along with dried ginger, pepper, garlic and asafoetida, it gives relief in rheumatism and discomfort due to intestinal gas formations. This gives relief in all types of headaches too. This also exhibits the property of hair tonic and gives cooling effect to eyes.

இக்கீரை மருத்துவத்தில் மிகச் சிறந்த கீரையாக பயன்படுகிறது. இக்கீரையை சமைத்துண்ண, காய்ச்சல், நடுக்கம், ஜன்னி, கபரோகம், வாதநோய் ஆகிய நோய்கள் நீங்கும். தாது விருத்திக்கு இக்கீரை சிறந்ததாகும். பத்திய பதார்த்தமாக பயன்படுகிறது. பிரசவித்த பெண்களுக்கு சீதளம் வராமல் இக்கீரையிலடங்கியுள்ள சத்துக்கள் பாதுகாக்கின்றன. அத்துடன் பிரசவ மெலிவைப் போக்கி உடலுக்கு சக்தியை தரும். அரைக்கீரையை மிளகு ரசத்துடன் உண்ண நோய் களைக் கண்டித்து நல்ல குணமளிக்கும். அரைக்கீரையுடன் துவரம் பருப்பும், உலர்ந்த மிளகாயும் சேர்த்து தாளிதம் செய்த அவிய லானது இருமல், கப இருமல், போன்ற நுரையீரல் காய்ச்சல் களைக் கண்டிக்கவல்லது. இக்கீரையுடன் பெருங்காயமும், வெங் காயமும் சேர்த்துச் செய்த பொரியலானது ஜலதோஷம், ஜன்னி, பாதசுரம், குளிர்க்காய்ச்சல் ஆகியவைகளை நீக்கும்.

பித்த கபசுரம், வாய் ருசியற்றுப் போதல், பசி இல்லா நிலை ஆகியவைகளுக்கு அரைக்கீரையைப் பழம் புளியுடன் கடைந்து உண்ண வேண்டும்.

இத்துடன் சுக்கு, பூண்டு, மிளகு, பெருங்காயம் சேர்த்து உண்ண வாதரோகங்களும், வாய்வு சம்பந்தப்பட்ட உடல் வலிகளும் நீங்கும். பிடரி நரம்பு வலித்தல், மண்டை பீனிச நரம்பு வலி, ஜன்னி, தலைவலி, கன்னநரம்பு புடைப்பு ஆகியவற்றிற்கு குணம் அளிக்கும்.

மாதவிடாய் காலத்தில் பெண்ணுடன் சேர்ந்த சேர்க்கையால் வரும் சூதக ஜன்னிக் கோளாறுகளை அரைக்கீரையுணவு குணப் படுத்தும் மேலும் இக்கீரையை தினமும் உணவில் சேர்ப்பது தீயவழி களில் உடல்சக்தியை இழந்தவர்களுக்கு அருமருந்தாகும். தலை முடியை நன்கு வளரச் செய்யும்.

இதன் விதை நாட்பட்ட நோய்களை குணப்படுத்தும். இதனிலிருந்து எடுக்கப்படும் தைலம் முடியை வளரச்செய்வதுடன் கண்ணுக்கு குளிர்ச்சியை கொடுக்கும்.

* * *

## கீரை

**(கீரைத்தண்டு, வெண்தண்டுக் கீரை)**

## Amaranthus blitum

**(N. O. Amaranthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Rich in potassium nitrate*

*Action* : *Cooling, Stimulant, Stomachic, Emollient.*

Uses : The juice of the plant is used externally as an application in ulcerated conditions of the throat and mouth, leucorrhoea, and as a wash for ulcers, sores, etc. Because of its astringency it is much recommended in diarrhoea, dysentery and haemorrhages of the bowels.

The stem of this plant is a nutritious food. Tender leaf could be cooked and it gives relief from biliary disorders. The cooked stem gives relief from dysentery, gleet, oedema, piles and regulates the menstrual flow.

இச்செடியின் தண்டே ஒரு முக்கிய உணவாகும். இளம் இலைகளையும் சமைத்துண்பர். இதன் கீரை பித்தத்தை தணிக்கும் குணமுடையது. பசுமையான தண்டுகளை சமைத்துண்ண மேகச்சூடு, வயிற்றுக் கடுப்பு, இரத்தபேதி, நீர்க்கட்டு, நீர்ச்சுருக்கு, மூலக்கடுப்பு, பெரும்பாடு ஆகியவற்றை குணப்படுத்தும்.

வெண்கீரைத்தண்டினால் உடல் வெப்பமும், வெளிமூல ரோகமும், பித்த எரிச்சலும் நீங்கும். மேலும் இது மூலக்கடுப்பு, மாதவிடாய் கோளாறுகளை குணமாக்கும். உடல் பருமனைக் குறைக்கும்.

* * *

## கீரை

### (செந்தண்டுக் கீரை)

## Amaranthus blitum

### (N. O. Amaranthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Rich in potassium nitrate*

*Action* : *Similar to white type.*

Uses : This exhibits the same property as the white variety.

வெண்கீரைத்தண்டின் அதே குணங்களே இதற்கும் உண்டு. மேலும் இது பித்தம், மேகச்சூடு, ரத்தபேதி, பெரும்பாடு ஆகியவற்றிற்கு குணம் தரும்.

இதன் இலை மட்டும் சிவப்பு கலந்த பச்சைநிறமாக இருக்கும். தண்டு சிவப்பு நிறத்துடன் காணப்படும். பெண்கள் அடிக்கடி இதன் தண்டை சாப்பிட்டுவர சிறந்த முறையில் மாதாந்திர தொல்லைகளிலிருந்து விடுபடலாம்.

* * *

## கீரை

### (குப்பைக் கீரை)

## Amaranthus viridis

### (N. O. Amaranthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and Young shoots*

*Action* : *Diuretic, Laxative, Stomachic, Demulcent and Emollient.*

Uses : This has many medicinal properties. This give lusture and smoothens the skin. It is normally given along with other pulses to cattles to obtain more milk. This plant has many vitamins, mineral and calcium. It is a good appetizer. This increases the body heat and acts as diuretic. The paste of this plant could be used as an external application for odema and boils. The charred root also could be used for the same purpose. This is also an effective antidote for snake-bite, scorpion- sting etc. This is used in the calcination of the gold.

இக்கீரை பல மருத்துவ குணங்களை உடையது. தோலிற்கு மென்மையும், அழகும், பளபளப்பும் கொடுக்கும். இதனை பயறு வகைகளுடன் அரைத்து தீவனமாக மாடுகளுக்கு கொடுக்க அதிகப்பால் கொடுக்கும்.

இக்கீரையில் பல வைட்டமின்களும், முக்கிய தாதுக்களும் சுண்ணாம்புச் சத்தும் உள்ளது.

இக்கீரையானது உள் அழல் ஆற்றவல்லது. பசியைத் தூண்டி உணவை ஏற்கும் ஆற்றலைக் கொடுக்கும். இது வெப்பத்தை உண்டாக்கும். மேலும் சிறுநீரைப் பெருக்கும்.

கீரையை அரைத்து வீக்கம், கட்டி இவைகளுக்குக் கட்டினால் அவைகள் கரைந்து போகும்.

வேரைச்சுட்டு சாம்பலாக்கி கட்டிகளுக்கு வைத்துக் கட்ட கட்டிகள் உடைந்து சீழ் வெளிப்பட்டு புண் ஆறும்.

மேலும் இக்கீரை பாம்புக்கடி, தேள்கடி, போன்ற சகல விஷங்களையும் நீக்கும். மலத்தை கட்டும். தங்க பஸ்ப முறையில் இதனைப் பயன்படுத்துவர்.

* * *

# கீரை

## (சக்கரவர்த்திக் கீரை)

## Ipomoea reptans

### (N. O. Convolvulaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Action* : *Laxative, Anthelmintic, Refrigerant, and Antiscorbutic.*

Uses : This purifies the blood, gives strength and vitality. This gives a very good taste and induces appetite. This is found effective in intestinal disorders. This increases salivary secretion. If it is consumed 4 times a week it works as an aphrodisiac. The oil extracted from its seed is used as anthelmintic.

இது எல்லா கீரைகளிலும் சிறந்ததனால் இப்பெயர் வந்தது. சக்கரவர்த்திக் கீரையை அரைக்கீரையுடன் ஒப்பிடலாம். இதனை உட்கொள்ளுதலால் இரத்தம் விருத்தியாகும், தாது பெருக்கும், உடலுக்கு சக்தியையும் அழகையும் கொடுக்கும்.

இக்கீரை நாவிற்கு உருசியை ஊட்டிப் பசியைத் தூண்ட வல்லது. கிராணி என்ற வயிற்றுப்போக்கு நோய்க்கு இக்கீரை கண் கண்ட மருந்தாகும். சிறுநீர் கழிக்க வழியின்றி அவதிபடுவோர் இக்கீரையைப் பயன்படுத்தலாம். உடலுறவிற்கு நல்ல சக்தியை தரும். வாரத்திற்கு நான்கு நாட்கள் இக்கீரையை உணவுடன் சேர்த்து உண்டு வருவதினால் உடலுறவில் விருப்பமும் ஆர்வமும் பெருகும்.

இதன் விதையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் குடலில் தோன்றும் கொக்கிப் புழு, நாக்குப்பூச்சி ஆகியவற்றை அழிக்கும்.

இக்கீரையை தொடர்ந்து உண்பதனால் ஞாபக சக்தி அதிகரிக்கும்.

* * *

## கீரை
### (சிறு கீரை)

## Amaranthus gangeticus
### (N. O. Amaranthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Rich in Vitamins*

*Action* : *Diuretic, Refrigerant, Laxative and Antidote.*

Uses: This is rich in minerals and other vitamin. If consumed daily along with food it reduces iron defficiency. This is found effective in Tuberculosis and phlegmatic diseases. This also found effective in arthritis, liver disorders and urinary infections. This is also used as an antidote in poisonous bites.

சத்து மிகுந்த கீரையாகும். இக்கீரையை தினமும் சமைத்துச் சாப்பிட இரும்புச் சத்தும், புது ரத்தமும் உடலில் பரவும். இது தூம்பிரநோய், காசம், படலம், இரணம், மூத்திரக் கீச்சரம் வீக்கம், பித்த நோய், தாவரங்களினால் ஏற்படும் நஞ்சு முதலியவற்றை நீக்கும். மேலும் இக்கீரை வாதநோய், கல்லீரல் நோய்கள், சிறுநீரகம் தொடர்பான நோய்கள் முதலியவற்றை குணப்படுத்தவல்லது. விஷக்கடி முறிவாகப் பயன்படுத்தப்படுகிறது.

மருந்து வீரியம் குறைக்கும். உடல் பருமனைக் குறைப்பதுடன் பித்தக் கோளாறுகள் சிறுநீர் எரிச்சலைத் தணிக்கும். உடலுக்கு வலிவைத் தருவதுடன் அழகு தரும்.

* * *

# கீரை
## (பண்ணைக் கீரை)

## Amaranthus polygamus
### (N. O. Amaranthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and young shoots*

*Constituents* : *Rich in minerals and Vitamins*

*Action* : *Laxative, Diuretic, Nervine, Tonic, Astringent, and Demulcent.*

Uses : It's leaves and young shoots are used as greens in food. If cooked with dhal and eaten with rice, it does immense good to bowels. It is a laxative. It cures indigestion ulcers, eczema, syphilitic sores etc. Apart from this it gives strength to intestine and spincter muscles. This is also given to eradicate thread worms. It cures intestinal ulcers. This plant helps for the digestion.

The drink made out of the flower of this plant is used to cure the excess menstural flow and dysentery. The seeds of this plants are used in making medicines to cure phlegmatic cough, dysentery and urinary infections.

பண்ணைக்கீரையின் இளம் தண்டையும் கீரையையும் சமைத்துண்ணலாம் இக்கீரை மனித உடலில் உள்ளழலை ஆற்றும் தன்மை பெற்றது. இக்கீரை மலத்தை இளக்கி, குடலுக்கும் ஆசன வாயிலுக்கும் வலுவைக் கொடுக்கும். வயிற்றிலுள்ள நூற்புழுக்களைக் கொல்லும் ஆற்றல் பெற்றது. குடல்புண் அழுக்கை அகற்றும் தன்மையுடையது. இக்கீரை ஜீரணிக்கப்பட்ட உணவை இரத்தத்துடன் கலக்க உதவுகிறது.

கரப்பான், இரணம், கிரந்தி, மேகவூரல் போன்ற தோல் சார்ந்த நோய்களை இக்கீரை போக்கவல்லது.

பண்ணைக்கீரையின் பூவினால் தயாரிக்கப்பட்ட குடிநீர் உதிரப் போக்கையும் வயிற்றுப் போக்கையும் கண்டிக்கும்.

இக்கீரையின் விதையினால் கப இருமல், இரத்தபேதி, மூத்திரத்தாரை தொடர்பான நோய்கள் நீங்குகின்றன.

* * *

## கீரை

### (பரட்டைக் கீரை)

## Justicia madurensis

### (N. O. Convolvulaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Rich in Vitamins*

*Action* : *Laxative, Stimulant, Refrigerant Anti-rheumatic.*

Uses : It gives relief in arthritis, phleghmatic disorders and eczema. It increases the bile secretion.

இதைத் தொடர்ந்து உட்கொள்ள வாதநோய், கபநோய்கள், கரப்பான் போன்ற நோய்கள் குணமாகும். இது பித்தத்தை அதிகரிக்கும்.

* * *

## கீரை

### (பருப்புக் கீரை)

## Chenopodium album

### (N. O. Chenopodiaceae)

*Habir* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Rich in essential oil, mineral matters particularly in potash salts*

*Action* : *Anthelmintic, Stimulant, Laxative, Diuretic and Stomachic.*

Uses : This is used to cure all the biliary disorders. It is also used to treat venereal diseases, skin ailments, dysentery etc. If taken along with pulses as food, it gives strength and acts as laxative. This reduces the body heat and acts as diuretic. This also acts as an antidehyrant.The boils errupted

during summer could be cured if this is used as an external application along with turmeric. If the juice of the leaf (50 m, to 100 ml) is consumed every day and might in empty stomacht it checks all types of dysentery, disuria and pyrexia. To get relief from headache. The squeezed leaf could be applied on the forehead.

To cure the liver and spleen disorders, the leaf should be mixed with turmeric and curd, and to be consumed for forty days in the mornings. The taste of the leaves is good and gives relief from burns. To get relief from prickly heat and burning sensation of the head and feet, the stem of this plant should be made into a paste and applied externally. The powdered seeds mixed with tender cocoanut water, will stop diarrhoea and pain in abdomen. This plant also acts as an anthelmintic and laxative.

பருப்பு கீரையினால் பித்த சம்பந்தப்பட்ட நோய்கள் நீங்கும். மேலும் மூத்திர வியாதிகள், ரத்த பித்தம், மேகம், தோல் சம்பந்தப் பட்ட நோய்கள், சீதபேதி இவைகள் குணமாகும். இதை பருப்புடன் உண்ண தேகம் வலுக்கும், மலத்தை இளக்கும், சிறுநீரைப் பெருக்கும் அதிக சூட்டைத் தணிக்கும். அன்றியும் வறட்சியை போக்கி உள்ளழற்சியைத் தணிக்கும், குளிர்ச்சி தரும்.

வேனல் கட்டிகள், இரத்த சீழ்கட்டிகள் முதலியன புடைத் தெழும் போது சிறிது மஞ்சளுடன் மேல் பக்கமாகப் பற்றுப் போட கட்டி உடைந்து சீழ் வெளிவரும்.

இக்கீரையிலைச் சாற்றைப் பிழிந்து 50 முதல் 100 மிலி கிராம் காலை, மாலை இரு வேளையும் வெறும் வயிற்றில் குடிக்க இரத்த பேதி, சீதபேதி, மூத்திரதடை, வெப்பம், நீர்ச்சுருக்கு முதலியனவும் உடல் அனலும் தணியும். இவ்விலையை அரைத்து நெற்றியில் பற்றுப் போட தலைவலி குணமாகும்.

இக்கீரை மஞ்சளுடன் சேர்த்து அரைத்து தயிரில் கலந்து காலையில் மட்டும் 40 நாட்கள் குடித்துவர கல்லீரல், மண்ணீரல் சம்பந்தமான நோய்களும், கல்லீரல் மரத்தல், கல்லீரல் புண், கல்லீரல் பெருத்தல் போன்றவை நீங்கும். இவ்விலையை அரைத்து தீப்புண்களில் தடவ புண் ஆறிவிடும். இக்கீரையின் தண்டை அரைத்துப் பற்றுப் போட வேர்க்குரு, கை கால் எரிச்சல், மூத்திர எரிச்சல் முதலியவை குணமாகும், இக்கீரை விதையை அரைத்து இளநீரில் கலந்துக் கொடுக்க சீதபேதி, வயிற்றுளைச்சல் நீங்கும்.

மேலும் மூத்திர எரிச்சலைக் கண்டித்து வெள்ளையையும் தணிக்கும். இக்கீரை குடலிலுள்ள புழுக்களையும் நீக்கும். மலமிளக்கியாகவும் பயன்படுகிறது.

* * *

## கீரை

**(புங்கிக் கீரை)**

## Amaranthus cowdatus

**(N. O. Amaranthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and seeds*

*Action* : *Leaves are Anthelmintic and the seeds are Vulnerary.*

Uses : This is not commonly used but it cures scrofulous affections and ulcers.

இக் கீரை அதிகமாக உபயோகத்தில் இல்லை. இது கண்டமாலையை குணமாக்குவதுடன் அழுகிய இரணங்களை குணமாக்கும்.

* * *

## கீரை

**(புளிச்சக் கீரை)**

## Hibiscus cannabinus

**(N. O. Malvaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Young shoots and leaves*

*Constituents* : *Iron and vitamins.*

*Action* : *Leaves are Pectoral and Emollient. Seeds are Aphrodisiac and roots are Demulcent and Tonic.*

Uses : This is the refrigerant for the body and gives digestive power. This is also used to treat intestinal ulcers,

cordiac problems, high blood pressure etc., This acts as laxative too. Sour taste of this plant cures feeble coughs and fatigue. This is also found effective in treating rheumatism, anorexia and syphilitis.

The juice of the flower added with pepper and sugar will act as appetizer. The seed oil extract is used as an external application for oedema and internal haemorrhage. The seeds along with other medicines will give strength and vitality. Vitamins and Iron are found in abundance in this plant.

இதற்கு காசினிக் கீரை என்ற மற்றொரு பெயரும் உண்டு. இக் கீரை உடம்புக்கு குளிர்ச்சியையும், செரிமான சக்தியையும் தருவதுடன் பித்தத்தையும் தணிக்கிறது. குடற்புண், மூத்திர நீரை வெளியேற்றுதல், இதய நோய், நரம்பு சம்பந்தப்பட்ட நோய்களைத் தவிர்ப்பதுடன், இரத்த அழுத்தத்தையும் குறைக்கிறது. மலத்தை இளக்குகிறது. இக் கீரையின் புளிப்பு தன்மையால் சிணுக்கு இருமல், மந்தம் நீங்கி, காய சித்தியும், வீரிய சக்தியும் உண்டாக்குகிறது. மேலும் வாத நோய், உருசியின்மை, சீதளம், இரத்தப் பித்த ரோகம், கரப்பான் வீக்கம் முதலிய நோய்களையும் நீக்கும். இந்தப் பூக்களைப் பிழிந்த சாற்றுடன் மிளகும், சர்க்கரையும் சேர்த்து சாப்பிட, அரோசகம், பித்த வாந்தி முதலிய நோய்களை நீக்கலாம். இவ் விதையின் எண்ணெயை வீக்கங்களுக்கும், ஊமைக் காயங்களுக்கும் தடவ வலி நீங்கும்.

இவ் விதையை வேறு மருந்துகளோடு சேர்த்து சாப்பிட தேக வலி நீங்கும். இக் கீரையில் வைட்டமின் சத்துக்களும், இரும்புசத்துக்களும் கணிசமான அளவில் உள்ளது.

* * *

## கீரை

### (புளியாரைக் கீரை)

## Oxalis corniculata

### (N. O. Oxalidaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and the whole plant*

*Action* : *Leaves are Cooling, Refrigerant, Antiscorbutic,*

*Astringent, Appetizing, useful in fever and Biliousness.*

**Uses :** This regulates the body temperature, builds up muscles acts as an appetizer. If taken regularly it improves the body resistance. Garlic juice mixed along with extract of this plant is used to get relief in head-ache. Even migrane could be treated with this, when mixed with onion juice and applied on the forehead. The paste made out of this plant and turmeric is an ideal external application for boils. Rose water mixed with this leaf extract is a good application for the face to eradicate pimples.

இக் கீரை உடல் வெப்பத்தை சமனப்படுத்தி, தசைகளையும் கெட்டிப்படுத்தும். பசியைத் தூண்டும். தொடர்ந்து இக் கீரையைச் சாப்பிட நோய் தடுப்புச் சக்தியை அதிகமாக்கவும், நஞ்சுகளை முறிக்கவும் செய்கிறது. இக் கீரையுடன் வெங்காயச் சாற்றைச் சேர்த்துக் காய்ச்சி நெற்றியில் பற்றிட பித்தத்தினால் உண்டான தீராத வலி நீங்கும்.

இக் கீரையுடன் மஞ்சள் சிறிது சேர்த்து அரைத்து கட்டிகள் மேல் தடவ இரத்தக் கட்டிகள், பழுக்காத கடினமான கட்டிகள் கரைந்து குணமாகும். இக் கீரையுடன் சிறிது பன்னீர் சேர்த்து அரைத்து முகத்தில் தடவ முகப் பருக்கள் நீங்கியும், முகத்திற்கு பளபளப்பும் தருகிறது. இவ்விலைச் சாறுடன், மிளகுப் பொடி, வெண்ணெய் சேர்த்து தாமரை முள்ளின் மேல் வைத்து தடவ திப் புண்களும், சீழ்ப் பிடித்த கொப்பளங்களும் நீங்கும். இக் கீரையை அரைத்து பசுவின் மோரில் கலந்து 40 நாட்கள், காலை மாலை தொடர்ந்து சாப்பிட கடுமையான மூல நோய்கள் குணமாகும். கண் நோய்க்கும் சிறந்த மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## கீரை
### (புள்ளைக் கீரை)

## Ipomoea pestigridis
### (N. O. Convolvulaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Leaves*

*Action* : *Antidote and Anthelmintic.*

Uses : The drug is an antidote to dog bites, and used in boils and carbuncles.

இது வாத நோயை குணப்படுத்தும். காக்கை வலிப்பு நோயுள்ளவர்கள் இதனை அடிக்கடி உணவில் சேர்த்துக் கொள்ள நோய் குணப்படும். குஷ்டம், வெறிநாய்க் கடிக்கு மருந்தாகப் பயன் படுகிறது.

* * *

## கீரை

**(பொட்டிக் கீரை)**

**See : Ipomoea reniformis**

**பார்க்க : எலிக்காது துத்தி**

* * *

## கீரை

**(பொன்னாங்கண்ணி)**

## Alteranthera sessilis

**(N. O. Amaranthaceae)**

*Habit* : *Creeping herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Rich in minerals and gold*

*Action* : *Refrigerant, Diuretic, Demulcent Cooling, Febrifuge and Alterative.*

Uses : This plant is an ideal remedy for all the opthalmic disorders. To cure eye disorders this leaf is consumed regularly along with butter. If this plant is regularly taken for 40 days, it improves the eyesight, cures cataract etc. It also cures liver disorder, stomatitis and bad breath. Moreover it gives relief in gonorrhoea heart burn etc. To curepiles this plant is consumed along with garlic regularly. This gives complexion and strength to body. If the extract of the plant is used as shampoo, will give releif in eye problems and headache.

பொன்னாங்கண்ணிக் கீரை கண் சம்பந்தப்பட்ட வாத காசம், கருவிழி நோய்கள் முதலியவற்றை குணமாக்க வல்லது. இக் கீரையை வெண்ணெய் சேர்த்து உண்ண கண் சம்பந்தப்பட்ட 96 வகையான வியாதிகள் நீங்கும். இக் கீரையை 40 நாட்கள் தொடர்ந்து சாப்பிட கண் பார்வை மங்கல், சாலேசுவரம், தூரப் பார்வை, திரைப் போட்டு மறைக்கும் கண் படலம் எல்லாம் விலகும். இக் கீரையை உண்பதால், வாய்ப்புண், வாய் நாற்றம், ஈரல் நோய், மூலச் சூடு, கை கால் எரிவு, உலர்த்து மேகம், வெள்ளை வயிற்றெரிச்சல், வாத தோடம், தேகச் சூடு முதலிய வியாதிகள் நீங்கும். இக் கீரையை பூண்டுடன் சேர்த்து வதக்கி சாப்பிட மூல நோய் குணமாகும். மேலும் உடல் வலுப் பெறும். உடலைப் பொன் நிறமாக மாற்றும். இக் கீரையின் தைலத்தை எடுத்து தலைமுழுகி வர கண்நோய்களும் வெப்ப நோய்களும் குணமாகும்.

* * *

## கீரை

### (முளைக் கீரை)

## Amaranthus paniculatus

### (N. O. Amaranthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Small plant*

*Constituents* : *Rich in Vitamins and Calcium*

*Action* : *Appetizer, Anti-syphilitic and Expectorant.*

Uses : This plant improves digestible power and acts as an appetizer. This is very nutritive and helps for the better growth. Calcium and Vitamin A and B is abundant in this plant. This is also used to treat neuritis intestinal ulcers, eczema and eye disorders. Asthmatic is also could be reduced. The greying process of the hair could be reduced if it is consumed regularly.

இக் கீரை ஜீரண சக்தியை வளர்த்துப் பசியைத் தூண்டும். சீரான உடல் வளர்ச்சிக்கு முளைக்கீரை மிகவும் சிறந்தது. இக் கீரையில் சுண்ணாம்புச் சத்து நிறைய உண்டு. மற்றும் வைட்டமின் 'எ', 'பி' சத்துக்களும் உண்டு. நரம்புத் தளர்ச்சி, வயிற்றுப் புண், சொறி, சிரங்கு, கண் கோளாறுகள் போன்றவற்றையும் குணப்

படுத்தும் இயல்பு இதற்கு உண்டு. காச நோயின் துன்பத்திலிருந்து விடுபட வைக்கும். இக் கீரையை உணவாக சமைத்து உண்பவரின் தலைமயிர் நரைக்காது.

* * *

## கீரை
### (முள்ளுக் கீரை)

## Amaranthus spinosus
### (N. O. Amaranthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, tender shoots and the whole plant.*

*Action* : *Antidote, and Lactagogue. Roots is good for menorrhagia and gonorrhoea.*

Uses : This is used as an antidote for snakebites. It acts as diuretic. The paste of its leaf reduces the inflammation and oedema. The mixture of celery, garlic and this plant is useful to check stomach ache. The deeoction of the root is useful in treating gleet. It regulates the urinal flow. This is ideal for the patients of urinary disorders.

முள்ளுக்கீரை தண்டுக் கீரை குடும்பத்தைச் சார்ந்தது. இக் கீரைப் பாம்பு நஞ்சை முறிக்கும். நீரைப்பெருக்கும் ஆற்றல் பெற்றது. இதன் இலையை அரைத்து வீக்கம், கட்டிகளுக்குத் தடவ கட்டிகள் கரைந்து போகும். இதன் வேரை சாம்பலாக்கிச் சீழ்க்கட்டிகளுக்கு வைத்துக் கட்ட குணமாகும். இக் கீரையை வேருடன் எடுத்து ஓமம், பூண்டு சேர்த்து அரைத்து கொடுக்க வயிற்றுவலி குணமாகும். இதன் வேரை கஷாயம் செய்து கொடுக்க வெள்ளை நீங்கும். நீரடைப்பு உடைப்பட்டு நீர் நன்கு போகும். மூத்திரக் கோளாறுகள் சம்பந்தப்பட்ட நோய்களுக்கு இக் கீரை மிகவும் நல்லது.

இக்கீரை இலைச்சாற்றை ரசத்தை பஸ்பமாக்க பயன்படுத்துவார்கள். தவிர, இயற்கையிலேயே பாதரஸம் உள்ள மூலிகைக் கீரையாகும் இது.

* * *

## கீரை
### (செம்முள்ளி கீரை)

## Barleria prionitis
### (N. O. Acanthaceae)

*Habit* ; *Spiny herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Expectorant*

Uses : This is an ideal medicine for the children having fever with chest congestions and phlegm. The leaf extract induces sweating and used to treat fatigue. The cracking of the foot could be cured by the extract if applied externally. The ashes of burnt plant mixed with water and rice water is employed in dropsy, anasarca and coughs. A paste is made out of its root and applied to disperse boils, absceses and glandular swellings. A medicated oil, made by boiling the leaves and a stems with oil is used as a cleansing application. Being an expectorant it is prescribed for children in cases of tabe mesenterica, hard breathing etc.,

குழந்தைகளுக்கு உண்டாகும் கபத்துடன் கூடிய சுரத்திற்கு செம்முள்ளி இலைச்சாற்றுடன் தேன் கலந்து கொடுக்க குணமாகும். இவ்வாறு உண்ண வியர்வையுண்டாக்கும். கோழையை அறுக்கும். உள்ளங்கால் வெடிக்காமலிருப்பதற்கு இதன் சாற்றை தடவலாம். இதன் பூண்டை கொளுத்திய சாம்பலுடன் தண்ணீரும், அரிசிக் கஞ்சியும் கலந்து சாப்பிட பாண்டு, இருமல் நோய்கள் நீங்கும். இதனுடைய வேரை அரைத்து கொப்புளங்களுக்கும் கிரந்தி வீக்கங்களுக்கும் தடவலாம். இதன் இலைகள், தண்டு இரண்டையும் தூள் செய்து எண்ணெயில் கொதிக்க வைத்து இரணங்களுக்குப் பூசுவதுண்டு. இதைக் கஷாயமிட்டு குழந்தைகளுக்குக் காணும் களைமாந்தம், மேல் மூச்சு இவைகளுக்குக் கொடுக்க நோய் குணமாகும்.

* * *

## கீரை
(தாளிக் கீரை)

## Ipomoea sepiaria
(N. O. Convolvulaceae)

*Habit* : *Twiner*

*Parts used* : *Leavcs*

*Action* : *Alterative, Anti - spasmodic, Demulcent, Laxative and Aphrodisiac.*

Uses : If it is taken regularly, it cures piles and gives strength.

இக் கீரையை அடிக்கடி உணவில் சேர்த்துக் கொள்ள மூல நோய் குணமாகும். மேலும் இது தாதுவை பலப்படுத்தும்.

* * *

## கீரை
(வெந்தயக் கீரை)

## Trigonella foenum - graecum
(N. O. Leguminosae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and Seeds*

*Constituents* : *Two alkaloids namely choline and trigonelline*

*Action* : *Leaves are Cooling and Mild Aperient. Refrigerant, Laxative, Stimulant and Tonic.*

Uses : This plant, if taken regularly cures asthma, eczema, indigestion, eye problems, stomach ache and back pain. If red tamarind, fig and grapes are mixed with this plant adding milk, ghee and boiled and this mixture if consumed regularly gives strength and vitality. This plant also could be used as an external application to reduce oedema. It cures fatigue and gives energy.

வெந்தயக் கீரை இளம் பச்சை நிறமுடையது. இக் கீரையை சாப்பிட்டு வந்தால் காச நோய், சொறி, சிரங்கு, அஜீரணக்

கோளாறு, பார்வைக்கோளாறு, வயிற்று நோய், குடலில் ஏற்படும் கடுப்பு நோய், இடுப்பு வலி போன்ற நோய்களுக்கு நல்ல மருந்தாகப் பயன்படுகிறது. இக் கீரையுடன் சீமைப்புளி, அத்திப்பழம், திராட்சை சேர்த்து பால்விட்டு அரைத்து நெய்விட்டு காய்ச்சி உண்ண உடலுக்கு வலிமையும், வனப்பும் தரும். இக் கீரையை அரைத்து சூடு செய்து வீக்கங்கள் மேல் தடவ வீக்கம் தணியும். சோம்பலைத் தவிர்த்து சுறுசுறுப்பை தரக்கூடிய அரும்பெரும் மருந்தாகவும் இது பயன்படுகிறது.

* * *

## கீழா நெல்லி

### (கீழ்வாய் நெல்லி)

## Phyllanthus niruri

### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Rich in Potassium*

Uses : The juice of this plant along with the same quantity of buffalow's milk, if consumed regularly in the morning for three days it cures jaundice, but for these days the patient should not consume salt. The root and tender leaves mixed along with pepper and boiled in 400ml of water and filtered. This mixture is divided into three parts and each part should be consumed three times a day. This should be repeated for three days. This cures the burning sensation and itching of the body. For cobra bite, the leaf of this plant along with pepper of equal quantity to be mixedand made into a paste and this paste if consumed in little quantity with lukewarm water, it works as an antidote.

This is an ideal medicinal plant to cure jaundice. The prepartion of medicine is as follows. Take equal quantity of the leaves of Phyllanthus niruri, Alternanthera sessilis and Boerhaavia diffusa and make a paste; this paste should be consumed in small quantity (size of a marble) along with rice water. This cures jaundice.

For the skin diseases like itching and eczema, the leaves should be made into a paste along with salt and apply it externally on the skin. For anaemic patients, the ground leaves should be consumed along with milk. This also proved very effective in treating liver, spleen and kidney inflammations. This purifies the blood too. The tablets, made out of the paste of this leaves along with pepper and garlic, is useful in treating fevers, dysentery and dyspepsia. This also could be used to stop hiccups. The paste made out of its root along with cow's milk also used to cure jaundice.

இதன் இலை நெல்லியிலை போன்றிருக்கும். 100 மிலி இலைச்சாற்றுடன் சம அளவு எருமை தயிர் கலந்து மூன்று நாட்கள் தொடர்ந்து காலையில் சாப்பிட்டு வர மஞ்சள் காமாலை நோய் குணமாகும். இம் மூன்று நாளும் உப்பிலாப் பத்தியம் இருக்க வேண்டும்.

இச்செடியின் வேர், இலைக் காம்பு போன்றவற்றை எடுத்து 9 மிளகு சேர்த்து 400 மிலி நீர்விட்டு காய்ச்சி வடிகட்ட வேண்டும். இந்த கஷாயத்தை மூன்று பங்காகச் செய்து, வேளைக்கு ஒரு பங்கு வீதம் காலை, பகல், மாலையாக மூன்று நாள் சாப்பிட தேக எரிச்சல் நீங்கும்.

கீழாநெல்லி இலை, பொன்னாங்கண்ணி, மூக்கிரட்டை இம் மூன்றையும் சம அளவாக எடுத்து, அரைத்து நெல்லிக்காயளவு எடுத்து சாதம் வடித்த கஞ்சியுடன் சாப்பிட காமாலை நோய், கண் நோய் போன்றவை குணமாகும்.

இவ்விலையுடன் சம அளவு மிளகு சேர்த்து அரைத்து நெல்லிக் காயளவு சாப்பிட்டு வெந்நீர் குடிக்க நல்ல பாம்பு விஷம் நீங்கும். இதற்கு உப்பு, புளியில்லா பத்தியம் இருக்கவேண்டும்.

இதன் இலையை உப்புடன் சேர்த்து அரைத்து தடவி குளிக்க நமைச்சல், சிரங்கு, சொறி போன்றவை நீக்கும்.

கீழா நெல்லி இலையை அரைத்துப் பாலுடன் சாப்பிட இரத்த சோகை, கல்லீரல், மண்ணீரல், சிறு நீரகங்களின் வீக்கம் குறையும். இரத்தத்தை சுத்தம் செய்யும். கீழாநெல்லி, மிளகு, வெள்ளைப்பூண்டு போன்றவற்றை அரைத்து மாத்திரை செய்து வைத்துக்கொள்ளவும். இது குளிர்க் காய்ச்சல், முறைக்காய்ச்சல், நாட்பட்ட காய்ச்சல், சீதபேதி, வயிற்று மாந்தம் முதலியவை நீக்கும். மேலும், விக்கல், ஏப்பம் ஏற்படும் சமயம் இதை மென்று சாப்பிட குணமாகும்.

வேரை பசும்பால் விட்டரைத்து காலை, மாலை உட்கொள்ள காமாலை தீரும்.

* * *

## கீழா நெல்லி
### (சிகப்புத் தண்டு)

## Phyllanthus urinaria

### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Constituents* : *Rich in potassium.*

*Action* : *Plant is Astringent, Deobstinent, Stomachic, Diuretic, Febrifuge, Antiseptic, andGalactagogue.*

Uses : This exhibits the same medicinal property as phyllanthus niruri. This cures diabetes and leprosy also.

கீழாநெல்லியின் குணங்களே இதற்கும் உண்டு. இது மதுமேகம், குஷ்டம் போன்ற நோய்களை குணப்படுத்தும் தன்மை யுடையது. இதனை குடிநீர் செய்து குடிக்க குன்மநோய் அகலும்.

* * *

## மேலா நெல்லி

## Phyllanthus maderaspatensis

### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Action* : *Seeds are Laxative, Carminative and Diuretic.*

Uses : The seeds exhibit medicinal property to cure heavyness in the head, head ache, cold etc. This also acts as laxative and diuretic.

இதன் விதை தலைபாரம், தலைவலி, நீரேற்றம் போன்ற வற்றை குணப்படுத்தும். மேலும் இது மலச்சிக்கலை நீக்கும். சிறுநீரைப் பெருக்கும்.

* * *

## குக்கல்

See : **Balsamodendron mukul**

பார்க்க மைசாட்சி

* * *

## குங்கிலியம்

(குந்திரிகம்)

## Shorea robusta

**(N. O. Dipterocarpaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Resin which exudes from incisions made in the bark*

*Constituents* : *Bark contains tannic principles.*

*Action* : *Resin is a mild Astringent, Aphrodisiac, Stimulant, Expectorant, Diuretic, Emmenagogue, Diaphoretic, Vermifuge and Antibiotic.*

Uses : This is a resin taken from the tree called Balsamodendron mukul. There are many varieties in this. This dissolves in alcohol. This is useful in treating skin diseases, ulcers and eczema and diseases of the bones etc. Two grams of powdered resin if consumed along with milk, it serves as a health tonic. This is used as a deodirant when smoked in fire. This when mixed along with sulphur helps to heal the wounds. This is useful in diabetes and flatulency caused by venereal heat. If taken regularly along with milk, it cures cough, piles, bleeding piles, chest conjestion, gleet, etc. If taken along with sugar, it stops dysentery and cures indigesion, gleet etc. This purifies blood. This is also used in treating venereal diseases, arthritis, witlow, poisonous bites, etc.

குங்கிலியம் என்பது கருமருது என்ற மரத்திலிருந்து எடுக்கப்படும் பிசின் குங்கிலியத்தில் பல வகையுண்டு. இது சாராயத்தில் கரையும். இது தோல் நோய்கள், புண், சிரங்கு, எலும்பைப் பற்றிய விரணம் ஆகியவற்றைப் போக்கும்.

குங்கிலியத்தை பொடித்து 2 கிராம் எடை வீதம் பாலில் கலக்கித் தினமும் காலையில் சாப்பிட தாது புஷ்டியுண்டாகும். இதை தணலில் போட்டு புகைத்தால் துர்நாற்றம் நீங்கும்.

இதைக் கந்தகத்துடன் சேர்த்துக் களிம்பு செய்து இரணங் களுக்கும், சிரங்குகளுக்கும் போட குணமாகும். இது கசப்பும், கரகரப்பும், வெகுட்டலும் உடையதாயிருக்கும். இது பிரமேகம், மேக வாய்வு இவைகளுக்கு உதவும். இதைப் பாலில் கலந்துக் கொடுக்க இருமல், மூலம், மார்ச்சளி, மாதருக்குக் காணும் வெள்ளை இவை கள் நீங்கும். சர்க்கரையோடு சேர்த்து சீதபேதி, செரியாமை, வெள்ளை, தாது புஷ்டி இவைகளுக்குக் கொடுக்க குணமாகும். மேலும் இவ்வாறு சாப்பிடுவது இரத்தமூலத்தை குணப்படுத்தும். இது உடம்பிலுள்ள கெட்ட நீரையிழுக்கவல்லது.

மேலும் இது மேகப்பிணி, கீல் வாதவலி, கீல்வாத வீக்கம், நகச்சுற்று, விஷக்கடி போன்றவற்றிற்கு குணம் தரும்.

* * *

## குங்கிலியம்
**(வெள்ளை குங்கிலியம்)**

## Boswellia serrata
**(N. O. Burseraceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Gum resin and oil.*

*Constituents* : *Oil called Olibene.*

*Action* : *Resin is Refrigerant, Diuretic, Aromatic, Demulcent, Aperient, Alterative, Emmenagogue and Ecbolic.*

Uses : This apart from curing fistula it is used as an appitizer and reduces fatigue. This regulates the menstural cycle. This also cures all types of skin diseases caused by venereal infections.

இது உள்மூலம், பௌத்திரம் ஆகியவற்றிற்கு குணம் தருவதுடன் பசி தரும். கோழை நீக்கும். மாதாந்திர விலக்கை ஒழுங்கு படுத்தும்.

மேலும் இது வெட்டையால் பிறந்த நாளப் புண், கொப்புழ் விரணம், சீழ் மேகம், உள்மூல விரணம் ஆகியவற்றை குணப்படுத்தும்.

* * *

## குங்கிலியம்

(கருப்பு குங்கிலியம்)

## Boswellia tumbaggia

**(N. O. Burseraceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Resin*

*Constituents* : *A volatile essential oil and resin.*

*Action* : *Resin is Stimulant to skin and it acts as an Antidote.*

Uses : This is a wonderful antidote for poison. This also cures joint pains, venereal diseases and witlow. To treat the diseases of the ear, lips, nose, venereal diseases, boils and abscesses 2 gms of this should be mixed with 200ml of milk and consumed daily.

இது சகல விஷங்களையும் இறக்கும். கீல்பிடிப்பு, மேகப்புண், கட்டி, நகச்சுற்று போன்றவற்றிற்கு குணம் தரும்.

காது, உதடு, நாசி முதலிய இடங்களில் உண்டாகும் நோய்கள், மேகப்புண், கட்டி, வாதவித்திரதி, சூலை, கிராணி, காணாவிடம் கீல்பிடிப்பு, இரணங்களைப் பற்றிய விரணம் இவை யாவும் நீங்க கருப்புக் குங்கிலியத்தை பொடித்து 2 கிராம் எடை வீதம் ஆழாக்குப் பாலில் கலக்கி தினமும் காலையில் சாப்பிட்டு வர நோய் யாவும் அகலும்.

* * *

## குங்கிலியம்

**(பூனைக்கண் குங்கிலியம், ரூமிமஸ்தகி குங்கிலியம்)**

## Pistacia lentiscus

**(N. O. Anacardiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves and fruits*

*Constituents* : *Leaves contain tanin and fruit contains resin and essential oil.*

*Action* : *Stimulant and Diuretic. Resin is Astringent.*

Uses : This looks similar to cat's eye. The resin cures oedema.

இது உருண்டு மஞ்சள் அல்லது பொன்னிறமுள்ளதாகவும் பூனைக்கண் போலும் தோன்றும். இதன் தைலம் வீக்கத்தைப் போக்கும்.

* * *

## குங்குமப் பூ

(ஞாழல் பூ)

## Crocus sativus

**(N. O. Iridaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Dried stigmas and tops of the styles*

*Constituents* : *Three crystalline colouring matters A-Crocetin, B-crocetin Q-crocetin*

*Action* : *It has a Bitter and Pungent taste with an Aromatic odour. It is Stimulant, Aphrodisiac, Stomachic, slightly Anodyne, Antispasmodic and Emmenagogue.*

Uses : The hair like stigmas present in the flowers of this plant is used as medicine. This is known as Saffron. Asthma and menorragia could be treated with this. This is

consumed by pregnent ladies along with betel leaves to have trouble free labour. To treat cold and headache this is used as an application on the forehead along with breast milk. This is also used in Lehyams to reduce the dryness of the mouth. If it is consumed in prescribed quantity, it tones up the stomach, regulates blood circulation, favours functioning of the skin. If taken in over doses, it acts as narcotic.

Smooth paste made out of saffron and honey is very useful as an external application for the skin ulcers and wounds. It is supposed to promote eruption of small-pox, keep off sea sickness and relieve palpitation of the heart and induce sleep. Vaidyas prescribe it in nervous affections unattended with vertigo or disposition to apoplexy, and also in melancholia, hysteric depressions and typhus fever. It is also recommended after child birth and as an infusion to prevent fever. Externally if it is applied around the eye in ophthalmia by mixing it with powdered gall and lime-juice. In small doses, it is used for curing enlargement of the liver and in catarrhal affections of children. It has emmenagogue virtues.

If this taken along with boiled cow's milk regularly, it cures the ulcers erupted in the intestine due to the consumption of alcohol. The extract of this is helpful in dyspepsia and indigestion.

குங்குமப்பூச் செடியின் பூவிலுள்ள முடி போன்ற பகுதிகளை எடுத்து உலர்த்தி பயன் படுத்துவர். இதுவே குங்குமப்பூ எனப்படுகிறது. இது மணமூட்டக்கூடியது. இழுப்பு, இரத்தப்பெருக்கு, உஷ்ணம் முதலியவற்றை நீக்கும். இப்பூவை கர்ப்பம் தரித்த பெண்கள் தாம்பூலத்துடன் உண்ண சுகப்பிரசவம் ஆவதுடன் பிரசவ கசடுகளைத் தாராளமாய் போக்கிச் சுத்தமாக்கும். மேலும் தலைவலி, ஜலதோஷம் இவைகளுக்கு முலைப்பாலில் இழைத்துப் பற்றுப் போட குணமாக்கும். இதனை வைத்தியர்கள் எல்லா லேகியங்களிலும் சேர்ப்பர். நாவரட்சி, வாந்தி, கபம் இவற்றை தீர்க்கும். இதனை மிதமாய் உள்ளுக்குச் சாப்பிட வயிற்றுக்கு வலிவைக் கொடுப்பதுடன் இரத்த ஓட்டத்தைப் பலப்படுத்திச் சருமத்தின் தொழிலை விருத்திச் செய்யும். அதிகஅளவில் விஷத்தன்மையுள்ளது. மயக்கத்தை உண்டுபண்ணும். ஆகவே மூளையையும், நரம்பையும் பலவீனப்படுத்தும். அம்மையை பூரிக்கச் செய்யும்.

தலைச்சுழற்சி, சன்னி இவைகளால் பீடிக்கப்படாத நரம்பு நோய்களுக்கு குணம் தரும். அன்றியும் சித்தபிரமை, சூதகப் பைத்தியம், சன்னி பாதசுரம் முதலியவைகளுக்கும் பிரசவித்தப் பெண்களுக்கும், இதைக் கஷாயமிட்டுக் கொடுக்கலாம். சுரத்திற்கும், உற்சாகத்தைக்கொடுப்பதற்கும், பிரசவ அழுக்கைப் போக்குவதற்கும் இதனை பயன்படுத்துவதுண்டு.

இதை கடுக்காய்த் தூளுடன் கலந்து எலுமிச்சம் பழ ரசத்தில் குழைத்துக் கண்ணைச் சுற்றிலும் கண்வலிக்கு பற்றுப்போட குணமாகும்.

குங்குமப்பூவை தேன் விட்டரைத்து சாந்துபோல் ஆக்கி இரணம் ஏற்பட்டுள்ள பாகங்களில் பூச ஆறிவிடும். இதன் குடிநீர் மந்தாக்கினியை குணப்படுத்தும்.

மது அருந்தி உண்டான குடல் புண்ணை ஆற்ற காய்ச்சிய பசும்பாலில் இதை கலந்து நாள்தோறும் பருகவேண்டும்.

இதிலுள்ள மேலான மருத்துவ குணத்தையும், வாசத்தையும் பயன்படுத்திக் கொள்ளவே நாம் இதை பாயாசத்திலும் மற்ற இனிப்பு பண்டங்களுடனும் சேர்க்கின்றோம்.

* * *

## குசும்பா

## Carthamus tinctorius

**(N. O. Compositae)**

*Habit* : *Tree*

*Parts used* : *The plant, seeds, roots and flowers.*

*Constituents* : *Flowers contain Carthamin and the seeds contain fixed oil.*

*Action* : *Seeds are Purgative; Oil extracted from the seed is Anti-rheumatic.*

Uses : The yellowish oil extracted from its seeds are commonly used as cooking oil. This oil is used externally as an application in treatment of arthritis and paralysis. This is also used externally for eczema and other skin disorders. The oil helps in the growth of hair; therefore it forms a

constituent in hair oils. The seeds are laxative. Dried flowers are used in treating dropsy and jaundice.

இதன் விதையிலிருந்து எடுக்கப்படும் மஞ்சள் நிறமான எண்ணெய் விளக்கெரிக்கவும் சமையல் எண்ணெயாகவும் பயன் படுத்தப்படுகிறது. இந்த எண்ணெய் வாதபிடிப்பு, பாரிசவாயு போன்றவற்றிற்கு மேற்பூச்சுத் தைலமாகப் பூசவும் உபயோகப்படு கிறது. இந்த எண்ணெய் புண், சிரங்கு, ஆகியவற்றிற்கு தடவ குண மாகும். இந்த எண்ணெய் முடி வளர்வதை அதிகரிப்பதால் கூந்தல் தைலங்களில் இது சேர்க்கப்படுகிறது. விதை மலத்தை இளக்கும். காய்ந்த பூக்களை பாண்டு, காமாலை போன்ற நோய்களுக்குப் பயன்படுத்தலாம்.

* * *

## காட்டு குசும்பா

### Satrijuga oxyacantha

**(N. O. Compositae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds*

Uses : This exhibits the same medicinal property as Carthamus tinctorius.

குசும்பாவின் குணமே இதற்கும் உண்டு.

* * *

## குடியோட்டிப் பூண்டு

**(குருக்கம் செடி, பிரம்ம தண்டி, பிரம்மதண்டு)**

### Argemone mexicana

**(N. O. Papaveraceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seed, root, leaves and the whole plant.*

*Constituents* : *Plant contains berberine and protopine*

*Action* : *Seeds are Laxative, Emetic, Vermifuge, Demulcent, Expectorant and the oil is Purgative. Root is an Anodyne.*

Uses : The seeds are laxative, but induces vomiting and it is also used in treating internal ulcers. It is also used as an expectorant. The oil extract of the seed acts as purgative. This is used as an external application for eczema and joint pains. The seeds when smoked along with tobacco leaves, produces narcotic effect, but this smoke gives relief in tooth ache. This oil is useful in treating all skin ailments. To treat diabetes, equal amount of plant extract and Aristolochia bracteata, is mixed with ghee and this mixture is consumed one teaspoon twice a day.

The extract also exhibits diuretic properties, so it is given to treat oedema, dropsy etc. If 25 ml of this plant extract is consumed daily in empty, it cures leprosy and this should be used as an external application.

இதன் விதை மலத்தை இளக்கும், வாந்தி ஓக்காளத்தையுண்டு பண்ணும். கோழையை அறுக்கும். அழற்சியை தடுக்கும். விதையின் எண்ணெய் பேதியையுண்டாக்கும். எண்ணெயைச் சொறி, சிரங்கு, உடம்பு வலி இவைகளுக்குப் பூசுமருந்தாக உபயோகிக்க குணமாகும். விதையை பொடித்து புகையிலையில் கலந்து புகைப்பிடிக்க மயக்கத்தைத்தரும். மேலும் இப்புகை பல்வலி, பல்சொத்தை ஆகியவற்றைத் தீர்க்கும்.

இவ்வெண்ணெயை ஒரு தேக்கரண்டி அளவு எடுத்து சர்க்கரை அல்லது தண்ணீரில் தினம் 3 வேளை கொள்ள சயரோகம் சாந்தியாகும். இந்த எண்ணெய் எல்லா சரும நோய்களையும் குணப்படுத்தும்.

குடியோட்டு பூண்டு சாறும் ஆடுதீண்டாப் பாளைச்சாறும் சம எடை கலந்து அத்துடன் நெய் சேர்த்து ஒரு தேக்கரண்டி வீதம் தினம் இரு வேளை உண்டுவர பிரமேகம் குணமாகும்.

இதன் சாற்றிற்கு சிறுநீரை பெருக்கும் செய்கை இருப்பதால் பாண்டு போன்ற நோய்களுக்கு அனுபானமாக கொடுக்க குணமேற்படும்.

25 மிலி சாற்றை காலைதோறும் வெறும் வயிற்றில் 40 நாள் சாப்பிட குட்டம் போன்ற சரும நோய்கள் குணமாகும். இச்சாற்றையே வெளிப்பிரயோகமாக உபயோகிக்க வேண்டும்.

* * *

# குண்டுமணி

## Abrus precatorius

### (N. O. Leguminosae)

*Habit* : *Climbing Shurb*

*Parts used* : *Roots, seeds and leaves.*

*Constituents* : *Seeds contain poisonous proteins and the roots contain glycyrrhizin.*

*Action* : *Leaves are Laxative, Expectorant and Aphrodisiac, Seeds are Purgative, Emetic, Tonic Antiphlogistic, Aphrodisiac and Anti-opthalmic*

Uses : This is mainly given to girls, who has delayed puberty. To attain puberty equal amount of the leaves of this plant along with jaggery and gingelly seeds are mixed and made into a paste and if this is given in the size of a lemon, within six hours the girl will attain puberty. But green unripened bannana which is uncooked should be given after this medication.

The root of the another kind of this (Anaikundrimani) is called Liquorice (Glycyrrhiza glabra). To treat burning of the eyes, the leaf extract of this plant is mixed with Eclipta alba and boiled in Gingelly oil and used as an application on the head. It is found very effective in treating leucoderma. The preparation for the treatment is, the leaf extract of this plant is mixed with the root of Plumbago zeylanica and made into a paste. This paste should be applied on the affected area of the skin for forty days. The dried seed is powdered and applied as an external application for oedema. This is also used in joint pain, crams, muscular catch, numbness of the foot and arthritic pains. The oil extract is used as an application for leprosy also. The root induces abortion and could be used in treating pscychic complaints. The seed is used as purgative.

இதனை குன்றிமணி என்றும் கூறுவர்.

சமஅளவு குன்றிமணி இலை, வெல்லம், எள்ளு இவைகளை எல்லாம் எடுத்து இடித்து எலுமிச்சம் பழ அளவு கொடுக்க ஆறே

மணி நேரத்தில் பருவமடையாத பெண், பூப்படைவாள். பின்பு பச்சை வாழைக்காயை தோல் சீவி சாப்பிடக் கொடுக்க வேண்டும்.

இதில் ஒரு வகையான ஆணைக்குண்டுமணியின் வேர்ப் பகுதியே அதிமதுரமாகும்.

இதன் இலைச்சாற்றையும், கரிசலாங்கண்ணிச் சாற்றையும் நல்லெண்ணெயுடன் காய்ச்சி தலைக்குத் தேய்க்க கண்ணெரிச்சல் குணமாகும்.

இதன் காய்ந்த விதைகளை அரைத்து வீக்கங்கள் மேல் தடவ வீக்கங்கள் குணமாகும். மேலும் வலிகள், சுளுக்கு, தசைபிடிப்பு, கை கால் மரத்துப் போதல், வாதவலி, கீல்வாதம், அழற்சி முதலியவற்றை போக்கவல்லது.

குன்றிமணியிலைச் சாற்றில், வெண் கொடிவேலி வேரை அரைத்து உடலிலுள்ள வெண்ணிறப் பகுதிகளில் 40 நாட்கள் தடவ வெண்குட்டம் குணமாகும்.

விதை வாதவலி, கீல்வாதம் ஆகியவற்றிற்கு குணம் தரும். இதன் எண்ணெய் குன்மம், கிரந்தி நோய்க்கு உதவும். வேர் கர்ப்பத்தை சிதைக்கும். மேலும் மனநோய்க் கோளாறுகளை நீக்கும். வாந்தியை உண்டுபண்ணும். இதன் விதை,நீராக பேதியாகச்செய்யும். உடலை உரமாக்கும்.

* * *

## குதிரைக் குளம்படி

### Cyanotis cristata

**(N. O. Commelinaceae)**

*Habit* : *Creeping herb*

*Parts used* : *Leaves and root.*

*Action* : *Anti-rheumatic, Deobstruent, Diuretic and Emollient.*

Uses : The leaves are used externally to reduce oedema It is also used in arthritis, itching and in extreme chillness.

இதன் இலைகளை வீக்கங்களுக்கு வைத்துக்கட்ட குணமாகும். மேலும் இது வாதம், சன்னி, தேக நமைச்சல் வீக்கம், ஆகியவற்றை குணப்படுத்தும்.

* * *

## குதிரை மசால்

## Medicago sativa

**(N. O. Leguminosae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and seeds*

*Constituents* : *Leaves and seeds are rich in protein.*

*Action* : *Tonic and it supports to reduce the milk flow*

Uses : The leaves and seeds are used as food for horses.

இது பால் சுரப்பதை குறைக்கும். குதிரைகளுக்கு ஒரு சிறந்த உணவாகும். இதன் இலையும் விதைகளும் குதிரை உண வாகும்.

* * *

## குதிரை வாற்புல்

**See : Ipomea tridentatae**

**அம்மையார் கூந்தல் பார்க்க**

* * *

## குதிரை வாலி

## Panicum frumentaceum

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Action* : *Nutrient*

*Constituents* : *Rich in Vitamin B*

Uses : This is an ideal medicinal plant to treat primary complex in children. It should be consumed with ghee. This is also used to treat blurrness of the eyes, dryness of the mouth, diadetes, cough, boils and indigestion.

இதை பசு நெய்யிற் கொள்ள குழந்தைகட்குக் காணும் தசை யில்லா எலும்புருக்கி மேகம் தீரும். இந்த மூலிகையினால், கண்மங்குதல், நாவரட்சி, பிரமேகம், இருமல், கட்டி, அக்கினி மந்தம், வாத கபம் ஆகியவை நீங்கும்.

* * *

## குத்துக்காரன் சம்மட்டி

## Indigofera oblongifolia

### (N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Root and the whole plant.*

*Action* : *Stimulant, Deobstruent, Anti-rheumatic and Antidote.*

Uses : The Churnam made out of its root is used in treating venereal ulcers, lumbar arthritis, numbness and fatigue. The decoction of the plant extract is used in oedema, joint pains due to arthritis and gout. It is an ideal medicine for paralysis and as a lotion for rheumatic complaints such as swelling due to rheumatic inflammation. It is an antidote for poisons and reduces the inflammation of spleen and liver.

இதன் வேரைச் சூரணித்துக் கொடுக்க மேகத்தாலெழுந்த விரணங்கள், திமிர்வாதம், மூர்ச்சை இவைகள்போகும். உஷ்ணத்தை தணிக்கும். சகுலத்தைக் கஷாயமிட்டு வீக்கம், வாத சம்பந்தத்தினால் உண்டாக்கும் கீல்வாயு, சூலைப் பிடிப்பு, வாத வீக்கம், இவைகளைக் குணப்படுத்தும்.

மேலும் இது பாரிசவாயுக்கு சிறந்த மூலிகையாகும். மகா வாதம், திமிர்வாதம், கீல் வாதம் போன்றவற்றை குணப்படுத்தும். விஷங்களை முறிக்கும். மண்ணீரல், ஈரல் வீக்கங்களை தணிக்கும்.

* * *

# குப்பை மேனி

## Acalypha indica

### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Acalypus and Acalyphine*

*Action* : *Cathartic, Anthelmintic, Emetic, Expectorant, Emmenagogue, Anodyne, Hypnotic and Stomachic*

Uses : It is a commonly available important medicinal plant. The extract is given to infants to cure phlegmatic diseases. The mixture of leaf with salt is used for eczema and skin ulcers as an external application but this should be washed after some time and cocoanut oil should be applied on the affected areas. The leaf extract with cocoanut oil, when boiled and used as an external application,it cures body pain. The leaf also could be cooked. To eradicate the worms which causes the abdominal spasm in children, the leaves should be dried in the shade and powdered. One spoon of this powder along with milk should be given. This powder is applied on bed sores and cocoanut oil is used to spread it on the sores. The leaves roasted in castor oil is useful in the treatment of piles and gives lusture to the skin, if consumed for forty days. This is also used as an antidote for rat bites, scorpion sting, centipede bites by applying the leaf extract on the wound along with lemon juice.

This mixture also gives relief in inflammatory conditions including ear pain, but leaf decoction should be taken internally.

To treat chest pain, difficulty in breathing, half tea spoon of powdered leaf along with milk should be consumed half an hour before retiring. If powdered leaf is consumed along with powdered Piper longum for 40 days with lukewarm water it cures fistula.

இது சர்வ சாதாரணமாக எங்கும் கிடைக்கும். இது ஓர் அற்புதமான மூலிகைச் செடி. சிறு குழந்தைகளுக்கு ஏற்படும் கபக்

கட்டு நீங்க இதன் சாற்றை கொடுக்க வாந்தியுடன் கபம் வெளியேறும். இலையை சிறிதளவு உப்புடன் அரைத்து சொறி சிரங்கின் மேல் தடவி கழுவிவிடவேண்டும். பின்பு தேங்காய் எண்ணெய் தடவ குணமாகும்.

இதன் இலைச் சாற்றை தேங்காய் எண்ணெயுடன் கலந்து சூடு செய்து வெது வெதுப்பாயிருக்கையிலேயே உடல் வலிகளுக்குத் தடவ குணமாகும்.

இதன் இலையை சமைத்தும் சாப்பிடலாம் இதை உணவில் சேர்த்துக் கொள்ள திமிர்வாதம் குணமாகும். இலையை நிழலில் உலர்த்தி பொடித்து வைத்துக்கொண்டு குழந்தைகளின் வயிற்றில் வேதனை உண்டு பண்ணும் புழுக்கள் வெளியாக இதை ஒரு ஸ்பூன் அளவு எடுத்து பாலில் கலந்து புகட்ட வேண்டும். படுக்கை புண்களை குணப்படுத்த இத்தூளை அதன் மேல் தூவி தேங்காய் எண்ணெய் தடவ குணமாகும். இதன் இலைகளை ஆமணக்கெண்ணெய் ஊற்றித் தாளித்து 40 நாள் தொடர்ந்து காலையில் சாப்பிட மூலம், நமைச்சல், பிற தோல் நோய்கள் நீங்குவதுடன் தோல் பளப்பளப்பாகும்.

மேலும் இது எலிக்கடி, பூரான் கடி விஷத்தை நீக்கும். இதற்கு கடிவாயில் இலைச்சாற்றுடன் சிறிதளவு சுண்ணாம்பு சேர்த்துத் தடவவேண்டும். மேலும் இது தேள் கடி விஷத்தை முறித்து கடுப்பை குறைக்கும்.

இலையை அரைத்துச் சுண்ணாம்புடன் கலந்து வேதனையுடன் கூடிய வீக்கங்கட்கும், கட்டிகட்கும் பூச குணமாகும். காது வலிக்கு காதைச் சுற்றிப் பூச நோய் தணியும். இத்துடன் நோய் நீங்க இலைக் கஷாயத்தை உள்ளுக்குக் கொடுக்கவேண்டும்.

நெஞ்சுவலி, நெஞ்சறுத்தல், மூச்சுத் திணறல் போன்றவை குணமாக ஏழுநாள் தொடர்ந்து அரை தேக்கரண்டியளவு இலைப் பொடியை பாலில் கலந்து படுப்பதற்கு அரைமணி நேரம் முன்பு சாப்பிட்டுவிட்டு படுக்க வேண்டும்.

இலைத் தூளுடன் அரிசிதிப்பிலியையும் பொடிசெய்து கலந்து 40 நாள் சாப்பிட்டு வெந்நீர் குடித்துவர பவுத்திரம் குணமாகும்.

* * *

# குமிழ்

(பெருங் குமிழ்)

## Gmelina arborea

**(N. O. Verbenaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Root, bark, fruit and leaves.*

*Constituents* : *Root contains viscid oil and resin. Fruit contains organic acids, resin and tannin.*

*Action* : *Demulcent, Stomachic, Bitter, Tonic, Laxatives, Emollient and Refrigerant. Fruit is Bitter and Cooling. Extract of root is Bitter and Tonic.*

Uses : The extract of the stem dissolved in cold water is an ideal medicine for gonorrhoea, dysuria and urinary bladder disorders. This is also found very effective in burning sensation due to diabetes and dengue fever.

Decoction of the root is given in cough, rheumatism, accompanying gout, indigestion etc., Infusion of leaves is useful in gonorrhoea and catarrh of the bladder. Root when taken with liquorice, honey and sugar increases the secretion of milk in lactaing woman The powered root-bark is applied externally in gout.

குளிர்ந்த நீருடன் இலைத்தண்டு சாறு சேர்த்து அருந்த வெட்டை, நீர்ச்சுருக்கு, மூத்திரப்பை சம்பந்தமான நோய்கள் ஆகியவை தீரும். மேலும் இது மதுமேக எரிச்சல், வாதசுரம் போன்ற வற்றை நீக்கும்.

வேர்க்கஷாயம் இருமல், வாதநோய்கள், செரியாமை ஆகிய வற்றை குணப்படுத்தும். இலைக்குடிநீர் வெட்டை நோயையும் சிழ் பிரமேகத்தையும் குணப்படுத்தும். வேருடன் அதிமதுரம், தேன், சர்க்கரை சேர்த்து உட்கொள்ள பால் சுரப்பது அதிகரிக்கும். பொடித்த வேர்ப்பட்டையை நீருடன் குழைத்துத் தடவ மூட்டுவலி நீங்கும்.

* * *

## குமிழ்

### (நிலக் குமிழ்)

## Gmelina asiatica

### (N. O. Verbenaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Leaves and young shoots.*

*Constituents* : *Glucoside.*

*Action* : *Leaves and young shoots are Demulcent, Mucilaginous, Astringent, Alterative and Aromatic.*

Uses : It is an antidote for poisonous bites, Cold water impregnated with the thick viscid mucillage of the leaves and young shoot is given in the treatment of gonorrhoea, gleet and catarrh of the bladder. This also cures yawning, fainting, fatigue and diarrhoea.

விஷக்கடிகளுக்கு குணம் தரும். இலைச் சாற்றுடன் பசும் பால் கலந்து கற்கண்டு சேர்த்து அருந்த வெள்ளை, வெட்டை நோய்கள் தீருவதுடன் சீழ் பிரமேகம் குணமாகும். மேலும் இது கொட்டாவி, மயக்கம், மந்தம், பேதி, கண்சொருகுதல் இவைகளை நீக்கும்.

* * *

## கும்பை

### (சிறிய கும்பை)

## Gardenia gummifera

### (N. O. Rubiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Root and fruit.*

*Constituents* : *It contains resins.*

*Action* : *Cathartic, Anthelmintic, Alterative, Carminative and Antispasmodic. Externally Antiseptic and Stimulant.*

Uses : This is a medicinal plant used to treat ulcers, toothache, intestinal ulcers etc., The resin of the tree reduces the fevers. This is also used to treat obesity, enlargement of the spleen etc. This acts as an anthelmintic.

It yields a yellow gum resin from buds and from cracks of the bark. Gum resin is antispasmodic, insecticide, by dissolving it in spirit it is used as an external application for cleaning foul and callous ulcers and for keeping off flies from sores. It is mostly employed internally in hysteria, flautlent and dyspepsia nervous disorders. It is a successful anthelmintic in cases of round worms.

இது புண், பெருவிரணம், பல்வலி, குன்மவலி போன்ற நோய்களை குணமாக்கும். இதன் மரத்திலிருந்து கிடைக்கும் பிசின் போன்ற பொருள் சுரத்தை குறைக்கும். மேலும் இது உடல் பருமனைக் குறைக்கவும், மண்ணீரல் வீக்கத்தை குறைக்கவும் பயன் படுகிறது. இதை உள்ளுக்கு கொடுக்க வயிற்றிலுள்ள புழுக்கள் சாகும்.

* * *

## கும்பை

(பெரிய கும்பை)

## Gardenia latifolia

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Root and fruit.*

*Constituents* : *It contains resins*

*Action* : *Antiperiodic, Antispasmodic, Anthelmintic, Alterative, Carminative and Cathartic. Externally Antiseptic and Stimulant.*

Uses : This exhibits the same medicinal property of Gardenia Gummifera. This cures the nervous disorders due to dentition.

சிறிய கும்பையின் எல்லா குணங்களும் இதற்கு உண்டு. மேலும் இது வயிற்றில் உண்டாகும் அழற்சி, குன்மம், பல் முளைப்பதனால் உண்டாகும் நரம்புக் கோளாறுகள் போன்றவற்றை நீக்கும்.

* * *

## குருகத்தி

## Goertnora racemosa

### (N. O. Urticaceae)

*Habit* : *Small tree*

*Parts used* : *Whole plant and flowers*

*Action* : *Restorative, Cooling, Alexipharmic and Vulnerary*

Uses : This plant is used in the medicinal preparation to cure venereal ulcers, disorders on the head, biliousness etc. The flower extract is used to prepare 'Parpams' (Calcinations). The flower extract decoction is also used to cure biliousness, headache, dryness of the mouth etc.

இது துஷ்டரணம், சிரஸ்தாடம், பித்ததோஷம், பலவித விஷம் போன்றவற்றை குணமாக்கும்.

இதன் பூச்சாற்றினால் பஸ்பங்கள் செய்யலாம். மிகவும் பித்த மாக இருந்தால் இப்பூவைக் கொண்டு கஷாயம் செய்து சாப்பிட குணம் ஆகும். இக்கஷாயம் தலைவலி, நாவறட்சி போன்றவற்றை போக்கும். இதனை மாதவிப் பூ என்றும் கூறுவர்.

* * *

## குருவிப் புல்

## Arundo donax

### (N. O. Gramineae)

*Habit* : *Herb*

Uses : This is used in treating skin diseases.

சரும நோய்களை குணப்படுத்தவல்லது.

* * *

# குருவேர்

## Coleus vetiveroides

### (N. O. Labiatae)

*Habit* : *Herb*

*Parts used* : *Root*

*Constituents* : *A volatile oil*

*Action* : *Aromatic, Stomachic, Carminative, Stimulant and Vulnerary.*

Uses : The roots exhibit medicinal property. An aromatic preparation is made from this plant. This is also uscd to cure rigidity of the joints. This induces sweating and gives energy. The root oil prevents hair falling and helps for the growth. The decoction of the root is used in rigidity of the joints, fever, flatulency in the womb, biliousness, jaundice, anaemia, leprosy, spermatorrhoea, unconciousness due to arthritis and phlegmatic diseases of the eyes. The extract could be used as an external application for dracunculous medinensis of the breast and venereal ulcer The soaked root infusion cures stomach ache and fever. The oil given along with sugar stops vomiting.

இதன் வேர் மருத்துவப் பயனுடையதாகும். இதன் புல்லினின்று ஒரு வாசனைத் தைலம் எடுப்பர். இந்த எண்ணெயை கை கால் பிடிப்புக்குப் பூச குணப்படும். வேர்வையை உண்டாக்குவதுடன், உற்சாகத்தைத் தரும். தலைமயிர் விழாமல் காப்பதுடன் வளரச்செய்யும். இதன் கஷாயம் சுரத்திற்கும், கைகால் பிடிப்பு, சூதக வாயுவுக்கும் உபயோகப்படும்.

பித்த ரோகம், காமாலை, சோகை, சுரம், குட்டம், தலை நோய், கழுத்து நோய், சுக்கில நட்டம், உன்மத்தம், திரிதோட மூர்ச்சை, நேத்திர ரோகம் முதலிய நோய்கள் குணமாகும். இதை ஸ்திரீகளுக்கு ஸ்தனங்களில் காணும் சிலந்தி, அக்கினி விரணம், வித்திரக்கட்டி, மேகக்கட்டி இவைகளுக்கு மேல் பூச்சாக உபயோகிக்க குணப்படும்.

இதன் ஊறல் கஷாயம் வயிற்றுநோய், சுரம் முதலியவற்றை குணப்படுத்தும். எண்ணெயைச் சர்க்கரையில் கலந்து கொடுக்க ஊழிநோயில் உண்டாக்கும் வாந்தியை நிறுத்தும். இவ்

வெண்ணெயை அனேக தைலங்களிலும், பித்தசாந்திக்குரிய லேகிய சூரணங்களிலும் சேர்ப்பர்.

* * *

## குருவிச்சிப் பூண்டு

### (குருவிஞ்சிப் பூண்டு)

### Ehretia buxifolia

### (N. O. Boragineae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Chlorogenic and Glucoside.*

*Action* : *Astringent, Antisyphilitic, Demulcent, Sedative and Alterative.*

Uses : This medicinal plant stops chronic diarrhoea with phlegm and mucous. It is also found effective in infertility, syphilitic eczema etc. This could be used as decoction an application in the form of paste. Dropsy and other skin ailments are also treated with this plant.

குருவிச்சிப் பூண்டு சீத ரத்த கிராணி, மலடு, சிலேஷ்ம மேகம், விஷமாந்தம், கரப்பான் முதலிய நோய்களை குணப்படுத்தும். கஷாயம் வைத்தும், அரைத்து பற்றாகவும் போடலாம்.

மேலும் இது பெண்மலடு, பாண்டு, மேக கரப்பான் போன்ற நோய்களை குணமாக்கும். இதன் கஷாயத்தை அருந்த சீதபேதி குணமாகும்.

* * *

## குவளை

### (கழுநீர், உற்பலம்)

### Ponsederia vaginalis

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Action : Refrigerant, Anti-bilious, Alterative, and Aromatic.*

Uses : The tuber of the plant is an ideal medicine for venereal diseases. This is also used in hair tonics. It gives relief from cough and phlegmatic diseases. The root reduces the body temperature. Therefore it is used as a refrigerant. The sharbat made out of the flower of this plant is also a coolant to body and it regulates the urine flow and acts as laxative. This is normally consumed by soaking the flower in the water for some time and filtered water is used fot drinking.

இதனை உற்பலம் என்றும் கூறுவர். இதன் கிழங்கு சர்வ மேகங்களையும் நீக்கும். புணர்ச்சியினால் உண்டான சூட்டை தணித்து குளிர்ச்சி தரும். கூந்தல் தைலங்களில் சேர்ப்பர். மேலும் இதனால் இருமல் பித்த நோய் போன்றவை நீங்கும்.

செங்கழுநீர் பூவினால் செய்யப்பட்ட சர்பத் உடலுக்கு குளிர்ச்சி தரும். மேலும் இது நீர்கட்டு, மலபந்தம் ஆகியவற்றை நீக்கும். இப்பூக்களைப் பறித்து தண்ணீரில் போட்டு அப்படியே ஊற வைத்து பின்பு பருக தாகம், உடல் உஷ்ணம் ஆகியவற்றை நீக்கும்.

* * *

## குவளை

**See : Nymphea stellata**

**பார்க்க அல்லி வகைகள்**

* * *

## குறட்டை

**(சவுரிக்கொடி)**

## Trichosanthes palmata

**(N. O. Cucurbitaceae)**

*Habit : Climber*

*Parts used : Fruits and root bark*

*Constituents : Pulp of the fruit contains Tricho-santhin*

*Action* . *Fruit is Hydragogue, Cathartic. Root is anti-pyretic, Refrigerant Vulnerary and Pectoral.*

Uses : This medicinal plant is very effective in treating migrane, chronic headache, catarrh of the nose due to vitiated bile and venereal heat finding its way into the head etc. This is also good in treating ear inflammation, carbuncle of the back bone etc. The smoke made out of its fruits give relief in asthma. The fruit juice mixed along with root bark is used to darken the hair. To treat gonorrhoea a decoction is made out of its root, with tree myrobalans and turmeric which is to be consumed with honey.

இதன் பழம், வேர், இரண்டும் மருத்துவப் பயனுடையது. இதன் வேர் தீராத தலைவலி, ஒற்றைத் தலைவலி, நீர்பீநிசம், காது வலி, சீழ்வடிதல், ராஜபிளவை போன்றவற்றிற்கு குணம் தரும்.

பூச்சாற்றுடன் வேர்ப்பட்டை சேர்த்து நல்லெண்ணெயில் போட்டு காய வைத்து அந்த எண்ணெயில் தலைமுழுக முடி கருத்து வளரும்.

இதன் வேருடன் மூன்று கடுக்காய்த் தோல், மஞ்சள் சேர்த்து செய்யப்பட்ட கஷாயத்தை தேனுடன் அருந்த வெட்டை நோய் குணமாகும்.

இக்கொடியின் வேரை இடித்து நீருடன் காய்ச்சிக் குடிக்க வெள்ளை ஒழுக்கு நிற்கும்.

இதன் பழத்தை நன்றாக இடித்து தேங்காய் எண்ணெயுடன் கலந்து காய்ச்சி தை காது, மூக்கு வலிக்கும் காதுகளில் உண்டாகும் புண் புரைகளுக்கும் தினம் இருவேளை விட்டுவர அவை ஆறி விடும்.

காய்ந்த பழத்தை இடித்து மஞ்சளும் சேர்த்து பொடித்து புகைக்க சுவாசகாசம், இரைப்பு முதலியவை உடனே நீங்கும்.

* * *

# குறட்டை

## (சிறு குறட்டை)

## Trichosanthes incisa

### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Herb*

*Parts uses* : *Fruits and roots*

*Constituents* : *Tricho-santhin*

*Action* : *Similar to T. Palmata*

Uses : This exhibits all the medicinal properties of T. palmata, moreover if it is taken internally it cures intestinal ulcers.

குறட்டையின் எல்லா குணங்களும் இதற்கும் உண்டு. இதனை உள்ளுக்கு சாப்பிட வயிற்றுப்புண் குணமாகும்.

* * *

# குறிஞ்சான்

## (சிறு குறிஞ்சான், சர்க்கரை கொல்லி, குரிந்தை)

## Gymnema sylvestre

### (N. O. Asclepiadaceae)

*Habit* ; *Herb*

*Parts used* : *Root and leaves.*

*Constituents* : *Dried leaves contain resin and gymnemic acid.*

*Action* : *Leaves are Astringent, Stomachic, Stimulant, Refrigerant, Anti-periodic and Stomachic.*

Uses : The leaves and roots exhibits medicinal property. It is an appetizer and coolant. This rejuvenates the nerves. This reduces the glucose level in the blood. These roots are antidote for poison and it is emetic. To treat the fever accompanied with dryness of the mouth the decoction of leaves along with pepper and cumin seeds are given every ten minutes (1 teaspoon ful).

The mixture of 10gms. of its leaves and 20gms. of leaves of Carrisa caranda is made into a paste and this patse is found effective in correcting menstrual cycle and uterous problems, if taken in empty stomach in the morning. To treat diabetes following preparation to be made. Make a paste of its leaves and then make double quantity of cocoanut flower paste. Mix both these paste and make tablets out of this. These tablets should be taken twice daily (in doses of one in the morning and one in the evening regularly). This controls diabetes.

To cure diabetes dried leaves are made into powder and equal quantity of seeds of Eugenia jambolena to be mixed. If the spoon of this mixture is taken for forty days thrice daily with warm water will cure diabetes. The dried powder of the root is found to be an antidote for the poisonous bites. It should be taken internally in doses of 3 pinches to induce vomiting. To treat asthma with lung congestion, the powder of the root (1 pinch) along with powder of dried ginger, piper longum (longpepper) and pepper to be consumed with warm water. This expectorates the phlegm.

இதனை சர்க்கரை கொல்லி என்றும் கூறுவர். இதன் இலையும் வேரும் மருத்துவப் பயனுடையது பசியைத் தூண்டி, சூட்டைத் தணிக்கும். உடலை உரமாக்கி தளர்ந்த நரம்புகளை கெட்டிப்படுத்தி விடும் சக்தி இதற்கு உண்டு. உடம்பிலுள்ள சர்க்கரை நீரை பிரித்து விடும் விசேஷ சக்தி இதற்கு உண்டு. வேர் விஷங்களை முறிக்கும் மேலும் வாந்தியையுண்டாக்கும்.

நாவரட்சியுடன் காணும் காய்ச்சலுக்கு இதன் இலையுடன் மிளகு சீரகம் சேர்த்து கஷாயத்தை 10 நிமிடத்திற்கு ஒரு தேக்கரண்டி வீதம் சாப்பிட குணமாகும். 10 கிராம் இலையுடன் 20 கிராம் களா இலை சேர்த்து அரைத்து காலை வெறும் வயிற்றில் சாப்பிட உதிர சிக்கல் நீங்கி குறித்த நேரப்படி ருது உண்டாகுவதுடன் கருப்பாசய கோளாறுகள் நீங்கும்.

நீரிழிவு நோய் கட்டுப்பட இதன் இலைகளை அரைத்து வைத்துக் கொள்ளவேண்டும். இதன் இரண்டு மடங்கு அளவு தென்னம் பாளையினுள்ளிருக்கும் பூவை நிறுத்து எடுத்து அதையும் அரைத்துக் கொள்ளவேண்டும். பின்பு இரண்டையும் நன்கு கலந்து சிறு மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி எடுத்து வைத்துக் கொள்ளவேண்டும். இதை காலை ஒன்று மாலை ஒன்று

வீதம் சாப்பிட்டு வெந்நீர் குடிக்க சர்க்கரை நீரில் காணாது கட்டுப் படும்.

இலையை காய்வைத்து அரைத்து அத்துடன் சமஅளவு நாவல் கொட்டையைக் காயவைத்து இடித்து கலந்து 40 நாட்கள் தொடர்ந்து காலை மாலை தேக்கரண்டியளவு தூளை வாயிலிட்டு வெந்நீர் குடிக்க நீரிழிவு நோய் குணமாகும்.

வேரை காயவைத்து பொடித்து மூன்று சிட்டிகை வீதம் சாப்பிட எந்த விஷக்கடிக்கும் உள்ளுக்கு சாப்பிட வாந்தியுடன் விஷம் வெளியேறும்.

சுவாசகாசம், என்ற நுரையீரலில் சளி சேர்ந்து மூச்சுவிட கஷ்டப்படுத்தலுக்கு இதன் வேர்தூள் 1 சிட்டிகை, சுக்கு மிளகு, திப்பிலிப்பொடி 1 சிட்டிகை கலந்து இரண்டும் வாயிலிட்டு வெந்நீர் அருந்த கபம் எல்லாம் வெளியாகும்.

* * *

## குறிஞ்சான்

**(பெருங் குறிஞ்சான் வசந்தகால மல்லிகை: மாதவி)**

### Hiptage madablota

**(N. O. Malpighiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Hiptagin*

*Action* : *Alexipharmic and Antidote.*

Uses : This is an antidote for all poisons. The leaves are used to treat skin ailments and asthma.

இது எல்லா விஷங்களையும் நீக்கும். இதன் இலை வாதநோய், தோல் நோய்கள் மற்றும் ஆஸ்துமா நோய் போன்றவற்றை குணப் படுத்தும்.

* * *

## குறிஞ்சி

## Strobilanthes auriculatus

**(N. O. Acanthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Action* : *Refrigerant.*

Uses : This plant flowers only once in 12 years. The leaves reduces the body temperature.

இது பன்னிரண்டு வருடத்திற்கு ஒருமுறை பூக்கும். இலைகள் சுரத்தை குறைக்கும்.

* * *

## குறுங்தொட்டி

(குறுந்தட்டி, சிற்றமுட்டி)

## Pavonia zeylanica

**(N. O. Malvaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Roots.*

*Action* : *Astringent, Demulcent, Febrifuge, Anthelmintic, Aphrodisiac and Tonic.*

Uses : This cures oedema and chronic ulcers. It is used as an antidote for snake bites. It induces the labour pain and helps for a trouble free delivery. The root decoction is used in treating rheumatism, pneumonia, headache and ailments of the eyes and ears.

வீக்கங்கள், ஆறா தரணங்கள் போன்றவற்றை குணப்படுத்தும். பிரசவ வலியை அதிகப்படுத்தி பிரசவிக்க செய்யும். பாம்புக்கடி விடம் தீரும். வேர்க்கஷாயம் வாதநோய், நிமோனியா சுரம், தலை வலிகள், காது, கண் நோய்கள் போன்றவற்றை குணப்படுத்தும்.

* * *

## கூத்தக்குதம்பை
(மூக்குத்திப் பூண்டு, வராகன் பூண்டு)

## Lantana indica
(N. O. Verbenacaae)

*Habit* : *Shurb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Stimulant, Stomachic, Anti-rheumatic, Deobstruent and Cholagogne.*

Uses : This plant is used in the treatment of paralysis, palsy, neuralgia, gout and arthritis. This is uesful in preparations of all chendurams. Leaves are used for snake-bite.

இது சன்னி, பாரிசவாயு, மகாவாதம், சூலை போன்ற நோய்களை நீக்கும். செந்தூரம் செய்ய உதவும்.

இதன் முழு பாகத்தை நிழலில் உலர்த்தி பொடி செய்து உட்கொள்ள நோய்கள் குணமாகும்.

* * *

## கூந்தல் பனை
(இரும் பனை)

## Caryota urens
(N. O. Palmae)

*Habit* : *Tree*

*Parts used* : *Juice, spirit and nuts.*

*Constituents* : *Sugar.*

*Action* : *Nutrient, Diuretic, Laxative and Aphrodisiac.*

Uses : This yields toddy and jaggery from the sap. The mesocarp of the fruits is used to make an inferior kind of sago. The rind of the fruit is non acrid, The fresh toddy is a laxative and coolant.

இதன் சாற்றிலிருந்து கள்ளும் வெல்லமும் எடுப்பர். இதன் பழத்தின் மேல் புறத்தில் உள்ள பஞ்சு போன்ற பகுதியிலிருந்து மட்டரகமான ஜவ்வரிசி செய்வர். இதில் கஞ்சி செய்து நோயாளி

களுக்கு பத்திய உணவாக கொடுப்பர். பழத்தோல் ஒருவித கார்ப்பு சுவையுடனிருக்கும். புதிதாக இறக்கப்பட்ட கள்ளை தினம் காலையில் அருந்த மூலநோய் குணமாகும். மேலும் உடல் வெப்பம் தணியும்.

* * *

## கூர்கன் கிழங்கு

### Coleus tuberosus

**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Tuber*

*Action* : *Refrigerant.*

Uses : This is used for cooking.

இதை சமையலுக்கு உபயோகப் படுத்துவர்.

* * *

## கேசரிப் பருப்பு

### Lathyrus sativa

**(Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Rich in proteins and starch.*

*Action* : *Nutrient*

Uses : This is nutritious food, but if taken regularly it induces paralysis and arthritis. The leaf of this plant is used for cooking.

இது ஒரு சத்துள்ள உணவுப் பொருளாகும். ஆனால் இதனை தொடர்ந்து உட்கொள்ள வாதநோய்களும் பின்பு பாரிசவாயுவும் ஏற்படும். இதன் இலையையும் கீரையாக உபயோகிப்பர்.

* * *

## கேழ் வரகு

## Eleusine coracana

### (N. O. Gramineae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Albuminoids and starch and proteins*

*Action* : *Astringent and Nutrient.*

Uses : This is not easily digestable, but gives strength for the body. It is an ideal food for the hard working people.

இது இலேசில் ஜீரணிக்காது. ஆனால் இதனால் உடல் மிகுந்த வலிமை பெறும். கடும் உழைப்பாளிகளுக்கு இது மிகவும் ஏற்ற உணவாகும். இது வாதம், பித்தவாதம் போன்றவற்றை உண்டாக்கும்.

* * *

## கையாப்புடை

## Melaleuca leucadendron

### (N. O. Myrtaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Cajuput oil is distilled from the leaves*

*Action* : *Stimulant, Antiseptic and Rubefacient.*

Uses : It is digestible, stimulant, antispasmodic and diaphoretic when used internally. It is a rubefacient when used externally. It is found useful in flatulent colic and spasmodic affections of the stomach.

இதன் இலையிலிருந்து ஒருவித எண்ணெய் எடுக்கப்படுகிறது. இதை மருந்தாக உள்ளுக்கு கொடுக்க சுறுசுறுப்பை உண்டாக்கும். இசிவைப் போக்கும். மேலும் வியர்வையைப் பிறப்பிக்கும். பூசு மருந்தாக உபயோகிக்க தோல் சிவக்கும். மேலும் சுரம், பாரிசவாயு,

நரம்பிசிவு, வாதவலி இவைகளை குணமாக்கும். இது வாந்தி பேதியை நிறுத்தும். மேலும் வயிற்றுவலி, வயிற்றிசிவு, சூதக சன்னி போன்றவற்றை குணப்படுத்தும்.

* * *

## கொங்கு

### Balanocarpus utilis

**(N. O. Dipterocarpaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Action* : *Diuretic and Germicide.*

Uses : It is useful in treating diabetes;and tooth ache.

நீரிழிவு, பல்நோய் போன்றவற்றிற்கு குணம் தரும். கல்நாரை பஸ்பமாக்கும்.

* * *

## கொங்கு

**(வெள்ளை கொங்கு)**

### Balanocarpus parviflora

**(N. O. Dipterocarpaceae)**

Uses : Similar to the properties of B. utilis.

கொங்கின் குணங்களே இதற்கும் உண்டும்.

* * *

## கொசு வெட்டி

## Drosera peltata

**(N. O. Droseraceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves.*

*Constrtuents* : *Enzymes.*

*Action* : *Leaves are Alterative, Acrid, Bitter, Astrigent, Atoxic, Antiseptic and Powerful Rubefacient.*

Uses : This is used in the calcination of gold. The extract of this plant is used in colouring the silk threads.

இது தங்கத்தை பஸ்பமாக்கும். இதிலிருந்து கர்ப்ப பூச்சிக் கொல்லி மருந்துகள் தயாரிக்கப்படுகின்றன. மேலும் இதன் சாற்றை பட்டு நூல்களில் சாயமேற்ற பயன்படுத்துவர்.

* * *

## கொச்சிலித்திப்புல்

## Iris foetidissima

**(N. O. Iridaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *An essential oil and a bitter glucoside*

*Action* : *Anti-syphilitic, Antiscorbutic and Rubefacient.*

Uses : This cures skin ailments like herpes and dropsy.

இது சரும நோய்கள், கிரந்தி, குஷ்டம் போன்றவற்றிற்கு குணம் தரும்.

* * *

## கொஞ்சி
### (கடல் கொஞ்சி)

## Murrya exotica
### (N. O. Rutaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves and flowers*

*Constituents* : *An essential oil, Murrayix and Murrayin.*

*Action* : *Stomachic, Refrigerant, Stimulant, Astringent, Aromatic and Tonic.*

Uses : This is used in rheumatoid arthritis, rigidity of the joints, inflammation and dysentery. The leaves and flowers exhibit medicinal properties.

கீல் வாதம், பிடிப்பு, வாதவலி, சீதபேதி, பேதி ஆகிய வற்றிற்கு குணம் தரும். இதன் இலைகளும் பூக்களும் மருத்துவ குணமுடையது.

* * *

## காட்டுக்கொஞ்சி

## Glycomis pentaphylla
### (N. O. Rutaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Wood*

*Action* : *Astringent, Febrifuge, Stimulant and Stomachic*

Uses : This is used in the paediatric treat mentto cure dulness and flatulence.

இது குழந்தைகளுக்கு வரும் மாந்தம், வயிற்றுப் பொருமல் நீக்கும்.

* * *

## கொடி வேலி

**See : Plumbago zeylanica**

**பார்க்க : சித்ர மூலம் வகைகள்**

* * *

## கொடுக்காய்புளி

## Garcinia morella

**(N. O. Guttiferae)**

*Habit* : *Small tree*

*Parts used* : *Fruits and leaves*

*Action* : *Carminative, Digestive and Refrigerant.*

Uses : The white spongy inner contents of the fruit is edible. The leaves are used to heal the wound. The paste of the leaves are used as an external application for the wound.

கொடுக்காய்ப்புளியின் உள்ளிருக்கும் பஞ்சு போன்ற பகுதியை சாப்பிட பயன்படுத்துவர். இதன் இலை வெட்டுக் காயத்தை ஆற்றக் கூடிய சக்தி வாய்ந்தது. இதற்கு இலையை அரைத்து காயத்தின் மேல் வைத்துக் கட்டிவிட்டால் அப்படியே ஒட்டிக்கொள்ளும். காயம் ஆறியபின் விழுந்துவிடும்.

* * *

## கொட்டைப் பாக்கு

**See : Areca catechu**

**பார்க்க : பாக்கு வகைகள்**

* * *

## கொட்டைப் பாசி

**See : Ammonia debilis**

**பார்க்க : கல்லுருவி**

* * *

## கொத்த அவரை

**See : Cyamopsis tetragonaloba**

பார்க்க : அவரை வகைகள்

* * *

## கொத்தர் கோவை

**See : Casearia esculenta**

கோவை வகைகளைப் பார்க்கவும்

* * *

## கொத்தான்

**(ஆகாயவள்ளி)**

## Cassytha filiformis

**(N. O. Lauraceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Action* : *Alterative, Tonic, Cooling, Antilithic, Antidysenteric and Anti-syphilitic.*

Uses : This reduces the body heat and acts as refrigerant. The pulvarised whole plant is mixed with ginger and butter is used in treating chronic ulcers. Juice with gingelly oil is employed for strengthening the roots of the hair. The juice mixed with sugar is applied to inflammed eyes. This is also used in treating gonorrhoea, anuresis, obstruction of the urethral passage, burning sensation, fatigue etc. Skin ailments also could be treated with this. The oil extracted from the root is used in 'Magic'.

உடல் வெப்பத்தை நீக்கி அதிக குளிர்ச்சி தரும். வெள்ளை நோய், நீரடைப்பு, நீர் எரிச்சல், ஆயாசம் போன்றவற்றை நீக்கும். மேலும் இது சரும நோய், சீதபேதி போன்றவற்றிற்கு குணம் தரும். பித்தம் சாந்தியாவதுடன் மயிர் வளரச் செய்யும். வேரிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்யை சித்து வேலைகளில் பயன்படுத்துவர்.

இக்கொடியை சூரணித்து, சுக்குத் தூளுடன் கலந்து வெண்ணெய்யுடன் குழைத்து நெடுநாள் இரணங்களுக்குப் பூச குணமேற்படும். இக்கொடிச் சாற்றுடன் நல்லெண்ணெய் சேர்த்து காய்ச்சி தலைக்கு தடவி குளித்துவர மயிர்க்கால்கள் பலப்படும். சமூலத்துடன் சர்க்கரை கலந்து கண்ணோய்களுக்கு வெளியில் தடவ சிறந்த குணமேற்படும்.

* * *

## கொத்தமல்லி

**(தனியா, உருளரிசி)**

## Coriandrum sativum

**(N. O. Umbelliferae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Plant contains Albuminoids and soluble carbohydrates. Fruits yield a volatile essential oil, fixed oil which contains fat, muscilage, tannin and malic acid.*

*Action* : *Fruit is Aromatic, Stimulant, Carminative, Stomachic, Antibilious, Refrigerant, Tonic, Diuretic and Aphrodisiac. Fresh leaves are pungent and Aromatic.*

Uses : Thls ıs commonly used in cooking, but its leaf and seeds are of medicinal value. The leaf is also used in cooking. The leaves cure bilious diseases. It gives strength and increase the secretion of semen. This reduces the temperature and removes insomnia. This cures loathing for food and improves appetite.

100 to 150 gms of the leaves are made into a paste and mixed in 200 ml of milk and this mixture when consumed with sugar cures psychosometic disorders. This should be taken twice a day for three days. The infusion is used to wash the eyes to avoid infection of the small pox and chicken pox on the eyes. If this infusion is taken internally, it gives relief in joint pain and intestinal ulcers. Bleeding piles, could be cured

if the patients takes this infusion mixed in milk and sugar regularly.

The seeds are laxative, reduces the thirstyness and acts as an anti-emetic. The seeds when chewed, is found effective in phlegmatic diseases, gum inflammations and tooth ache. This stops bad breath. This is also proved effective in strengthening heart, liver and brain. This cures venereal diseases in man, specially boils of the penis. The oil extract from the seed is used in many medicinal preparations and in perfumes. The decoction made out of the seed is used to cure ulcers of the throat, flatulence, rheumatism and nervous debelity. Fried, powdered seeds added with sugar is effective in indigestion and dyspepsia.

சமையலில் பயன்படுத்தப்படும் இதன் இலையும் விதையும் பல மருத்துவ குணங்களை உடையது. இதன் இலை கீரையாகவும் பயன் படுத்தப்படுகிறது. இக்கீரையால் பித்த வர்க்கமும், பித்த சுரமும் நீங்குகிறது. உடலுக்கு வன்மையும் சுக்கில விருத்தியையும் இக்கீரை அளிக்கிறது. இதனை உண்பதால் கபாலசூடு தணிவதுடன் நித்திரை உண்டாகும். மேலும் அரோசகம் நீங்கும்.

இக்கீரையை 100லிருந்து 150 கிராம் அளவு எடுத்து அரைத்து ஓர் ஆழாக்கு பசும்பாலில் கரைத்து வடிகட்டி கரும்பு சர்க்கரை சேர்த்துக் கொடுக்க மனநோய் நீங்கும். தினம் இருவேளையும் மூன்று நாட்களும் உட்கொள்ளவேண்டும். மல்லிநீரைக்கொண்டு கண்களைக் கழுவ அம்மை நோயால் கண்கள் பாதிக்கப்படாது. இந்நீர் மூட்டுகளில் ஏற்படும் எரிச்சலையும் வயிற்றுப் புண்களையும் குணப்படுத்தும். கொத்த மல்லியிலிருந்து இறக்கப்பட்ட நீருடன் பாலும், சர்க்கரையும் சேர்த்து அருந்த ரத்தமூலம் குணமாகும். இவ்விதைகள் மலத்தை இளக்கும். தாகத்தை தணிக்கும், வாந்தியை தடுக்கும். கொத்துமல்லியை வாயிலிட்டு மெல்ல சளியும் கபமும் நீங்கும். பல்வலி மற்றும் பல்லீறு வீக்கம் முதலியவைகள் கொத்த மல்லியால் நிவர்த்தியாகும்.

இதன் நீர் இதயம், ஈரல், மூளை, ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உதவும். ஆண் குறி கொப்பளங்களையும் மற்ற புண்களையும் ஆற்றும். வாயிலிட்டு சுவைக்க வாய்நாற்றம் நீங்கும். இதன் விதையி லிருந்து எடுக்கப்படும்எண்ணெய் பலமருந்துகளில் சேர்க்கப்படுகிறது.

இதன் விதை வாசனைப் பொருளாக பயன்படுகிறது. இதி லிருந்து செய்யப்பட்ட கஷாயம் தொண்டைப்புண், வயிற்றுப் பொருமல், வாதவலி, நரம்புத் தளர்ச்சி போன்றவற்றை நீக்கும்.

இந்த விதையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய், வாசனைத் தைலங்களில் சேர்க்கப்படுகிறது.

இவ்விதையை வறுத்து பொடித்து சர்க்கரை சேர்த்து சாப்பிட வயிற்றுப்பொருமல், அசீரணம், குன்மம் போன்ற நோய்கள் குணம் ஆகும்.

* * *

## கொம்பு அரக்கு

### Coccus lacca

**(N. O. Palmae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Resin*

*Action* : *Alterative, Deobstruent, Germicide, Nutritive and Refrigerant.*

Uses: This is found effective in treating gigivitis and other teeth problems. This is commonly mixed with tooth powder. It is also used in oils. Its medicinal properties are aganist phlegmatic discases, bilious disorders impurity of the blood, cough, fever, ulcers etc. Chest pains due to injury also could be treated with this.

இது தந்தரோகம், சொத்தைப்பல் இவைகளுக்கு குணம் தரும். பற்பொடியில் சேர்ப்பர், உடலுக்கு வன்மை தரும். லேகியங்களில் உபசரக்காக சேர்க்கப்படுகிறது. தைலங்களிலும் சேர்க்கப்படுகிறது. உடல் நிறத்தை அழகுறச் செய்யும். கபம், பித்தம், இரத்த தோஷம், விக்கல், இருமல், காய்ச்சல், விரணம், மார்பில் தாக்குண்டதால் ஏற்படும் காயம், அக்கி போன்ற நோய்களை தீர்க்கும் .

* * *

## கொய்யா

### Psidium gujava

**(N. O. Myrtaceae)**

*Habit* : *Shrub or small tree*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Bark contains tannin, resin and crystals of calcium oxalate. Leaves contain a volatile oil. Root, stem-bark and leaves contain a large amount of tannic acid. Fruits are rich in vitamins.*

*Action* : *Stem, bark and root-bark are Astringent. Bark is Astringent, Febrifuge and Antiseptic. Fruit is laxative, Tonic and Cooling. Leaves are Astringent, Diuretic and Carminative.*

Uses : The fruit is full of vitamins and minerals. This is a nutritious food. Unripened fruit checks diarrhoea. Tender leaves mixed with ½ teaspoon of cumin seed and salt and made into a paste. The paste if consumed in recommended quantity acts as an appetizer. The tender leaves if chewed removes the throat irritation caused by yam. If this leaves are used to clean the teeth daily, it cures the toothache.

Indigestion and intestinal gas could be cured by this leaves. To treat cholera, the leaves or roots are used. The decoction made from its leaves or root with dried chillies.

To treat cholera the decoction made out of its leaves or roots along with dried chillies is given. This also used in to check chronic infantile diarrhoea. Locally it is applied beneficially for prolapsus of the anus. Crushed root is soaked in water and the water is found effective in curing piles, when washed with this water regularly. Fruit is laxative.

இதன் பழத்தில் பல உயிர்ச்சத்துக்கள் உள்ளன. இதன் காய் பேதியை நிறுத்தப் பயன்படுத்தப்படுகிறது. பழம் சிறந்த உணவாகும்.

பசி உண்டாக கொய்யா இலையின் கொழுந்து இலையில் மூன்றை எடுத்து, அரைத் தேக்கரண்டியளவு சீரகம், உப்பு இவைகளை வைத்து மைபோல் அரைத்து சாப்பிட்டு அத்துடன் சிறிது வெந்நீர் குடிக்க வேண்டும்.

இலைக் கொழுந்தை உட்கொள்ள ஜீரண உறுப்புக்கள் பலப்படும். இதை மெல்லுவதினால் கருணை கிழங்கை உட்கொள்வதனால் உண்டான காரலை குணப்படுத்தும்.

பல்வலிக்கு இலையை நன்றாக மென்று துப்பி சுத்தம் செய்து வந்தால் நீங்கும். துவர்ப்புச் சுவையுடையதால் நீரைக் கட்டும்

குணம் மிகுதி. அஜீரணம், செரியாமாந்தம், குடல் வாய்வு ஆகியவை இதன் கொழுந்து இலையைத் தின்றால் நீங்கும். காலரா நோய்கள் இலையையோ அல்லது வேரையோ சிறிது உலர்ந்த மிளகாயுடன் சேர்த்து கஷாயம் செய்து சாப்பிடலாம்.

வேர்ப்பட்டை கஷாயம் குழந்தைகளுக்கு உண்டாக்கும் இடைவிடாத வயிற்றுப்போக்கை கட்டுப்படுத்துவதுடன் இது ஆசன வாய் அடித்தள்ளி போவதை குணமாக்கும்.

நசுக்கிய வேரை நன்றாக ஊறவைத்த நீரினால் கழுவிவர சதை மூலம் குறையும். இதன் பழம் மலக்கட்டை நீக்கும்.

கொய்யாவில் பல இனங்களுண்டு. அவை வெள்ளை கொய்யா (Psiclum pyriferum), சிகப்பு கொய்யா (Psidium pomiferum), சீமை கொய்யா (Psidlum littorali).

* * *

## கொய்யா பிப்பிலி

**See : Salicornia indica**

**(உமரி பார்க்கவும்)**

* * *

## கொரந்தி

### Salacia reticulata

**(N. O. Celastraceae)**

*Habit* : *Climbing shrub*

*Parts used* : *Root bark*

*Action* : *Anti-rheumatic and Anti-syphilitic,*

Uses : Root bark is used in gonorrhoea, rheumatism and skin diseases.

வேர்பட்டை, வெட்டைநோய், வாதம், தோல் நோய்கள் ஆகியவற்றைப் போக்க உதவுகிறது.

* * *

## கொரந்தி
(பொன் கொரந்தி)

## Salacia oblonga
**(N. O. Celastraceae)**

*Habit* : *Climbiug shrub*

*Parts used* : *Root bark*

Uses : Root bark is used in gonorrhoea, rheumatism and skin diseases.

வேர்பட்டை மேகம், வாதம், சருமநோய்கள் ஆகிய இவற்றை போக்க உதவுகிறது.

* * *

## கொல்லைப்பல்லி
(பல்லிப் பூண்டு)

## Buchanania asiatica
**(N. O. Anacardiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Anti-rheumatic, Anti-bilious and Antidote.*

Uses : It is used as an antidote for snake bites. It relieves rheumatism billousness and toothache. This is used in calcination.

இதனால் பாம்புக் கடி விஷங்கள் தீரும். வாத பித்தம், பல்வலி போன்றவற்றிற்கு குணம் தரும். மேலும் பஸ்பங்கள் செய்ய உதவும்.

* * *

## கொழுக்கட்டைப் புல்

**See : Pennisetum cenchuloides**

பார்க்க : புல்வகைகள்

* * *

# கொழுக்கட்டை மரம்

## Sterculia urens

**(N. O. Sterculiaceae)**

*Habit* : *Tree*

*Action* : *Sedative, Haemostatic, Antirheumatic, Refrigerant and Aromatic.*

Uses : It is used to treat piles, dysentery, rheumatism aud bloody stools.

இது மூலக்கடுப்பு, சீதபேதி, ரத்தபேதி, வாதம் போன்றவற்றிற்கு குணம் தரும்.

* * *

# கொள்ளு

## Cassia absus

**(N. O. Caesalpiniaceae)**

*Habit* ; *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Rich in proteins*

*Action* : *Astringent, Diuretic, Tonic and Lithontriptic.*

Uses : The seeds are used as food for horses. It is slso used in curries at time. This pulse is a demulcent in calculus affections, cough etc. The water which is used to boil the gram is given to patients of cold. This not only improves emaciation but also invigorates the system. This is found effective it leucorrhoea. It is also given to females during parturition to promote lochial discharges. Thts is an appetizer too, if taken regularly it improves the secretion of semen.

இதன் விதை குதிரைகளுக்கு தீவனமாகப் பயன்படுத்தப்படுகிறது. இதை உணவாகவும் பயன்படுத்துவர். இது கல்லடைப்பு, இருமல் போன்றவற்றை குணப்படுத்தும். இதை உட்கொள்ள உடலிலுள்ள தேவையில்லாத சதைகள் குறைவதுடன் உடல் மெலியும்.

கொள்ளை நீரிலிட்டு கொதிக்க வைத்து அந்நீரை அருந்த ஜலதோஷம் குணமாக்கும். உடல் உறுப்புக்களை பலப்படுத்தும் இது வயிற்றுப்போக்கு, வயிற்றுப்பொருமல், கண்ணோய்கள், ஜலதோஷம் போன்ற நோய்களை இந்நீர் குணப்படுத்தும். வெள்ளைப் போக்கை கட்டுப்படுத்துவதுடன் மாதாந்திர ஒழுக்கை சரிப்படுத்தும். மேலும் இது பெண்களுக்கு உண்டாகும் வெள்ளையை குணப்படுத்துவதுடன் பிரசவ அழுக்கை வெளியேற்றும்.

கொள்ளும் அரிசியும் கலந்து செய்யப்பட்ட கஞ்சி பசியை தூண்டுவதுடன் தாதுவை பலப்படுத்தும்.

* * *

## காட்டுக் கொள்ளு

**See : Cassia absue**

**கருங்காணம் பார்க்கவும்**

* * *

## காசிக் கொள்ளு

### Phaseolus lunatus

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Phaseothione*

*Action* : *Nutrient and Tonic.*

Uses : This is full of protines. If it is consumed regularly, it gives strength.

இதில் புரதச் சத்து மிக அதிக அளவில் உள்ளது. இதை தொடர்ந்து உட்கொள்ள உடல் பலப்படும்.

* * *

# கொள்ளுக்காய் வேளை

**(காய்வேளை, கொளுஞ்சி)**

## Galega purpurea or Tephrosia purpurea

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, seeds, root and root bark*

*Constituents* : *The plant yields gum and brown resin.*

*Action* : *Febrifuge, Cholagogue, Diuretie, Deobstruent Tonic and Laxative.*

Uses : The drug is useful in cough, asthma and conjestion of the chest. The decoction of the root along with pepper gives relief in bilious febrile attacks, enlargment and obstsuction of liver spleen and kidneys. Leaves along with leaves of Cannabis indica gives relief in bleeding piles and with pepper it acts as diuretic in gonorrhoea. Decoction of the root gives relief in in dyspepsia, chronic diarrhoea and in stomatitis. Powdered root is mixed with honey and is used as an externa application to ulcers.

இதன் சமூலம் இருமல், காசம் நெஞ்சடைப்பு, ஆகிய இவற்றிற்கு குணம் தரும். வேர்க் கஷாயத்துடன் மிளகுத் தூள் சேர்த்து அருந்த பித்த சுரம், ஈரல், கல்லீரல், மூத்திரக்காய் நோய்கள், கல்லடைப்பு ஆகியவற்றிற்கு குணம் தரும். இலையுடன் கஞ்சா இலை சேர்த்து உண்ண இரத்த மூலம் குணமாகும். இலையுடன் மிளகு சேர்த்து வெட்டை நோய் உள்ளவர்கள் உட்கொள்ள நீர் தாராளமாய் இறங்கும். வேர்க்கஷாயம், குன்மம், கிராணி, வாய்ப்புண் ஆகியவற்றை குணப்படுத்தும்.

ஈரல் வீக்கம், அழற்சி, புற்று நோயின் ஆரம்ப நிலை முதலானவற்றில் கொளுஞ்சியை வைத்து செய்யப்படும் மருந்துகள் மிக்க பலனளிப்பவை. இதனுடன் கரிசலாங்கண்ணி, நிலவேம்பு, கடுக்காய், துளசி, கீழாநெல்லி முதலானவற்றை சேர்த்து கஷாயம் தயாரித்து அருந்தினால் ஈரல் நோய்கள் வரவே வராது.

* * *

# கொன்றை
## (சரக்கொன்றை)

## Cassia fistula
### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Pulp of the fruit, root-bark, flowers, pods leaves and root.*

*Constituents* : *The powdered fruit contains a volatile oil. Pulp, consists of sugar, gum, gluten, colouring matter, and water.*

*Action* : *Demulcent, laxative, Vermifuge, Expectorant Anti-pruritic and Purgative.*

Uses : The legume resemble drum stick nearly 2 ft. in length with numerous cells. Leaves ground in water is used for ringworm and other cutaneous affections. Tender shoots are used as laxative. Decoction made out of its flower is given in stomach affection, diabetes and leprosy. Roots are febrifuge and also used in colic and nausea. Bark and leaves rubbed up and mixed with oil are applied to pustules, itches, etc., The juice of the leaves applied externally reduces swelling. The root bark decoction is given in fever and heart affections. The bark of the plant and root of Solanum trilobatum in equal quantity is powered. If the powder is consumed with honey and cow's milk, it cures asthma, phlegm and difficulty in breathing. The leaves and flowers are used as an external application for the eyes to cure eye disorders, piles and other similar disorder could be treated with the leaf extract and sugar.

The mucilaginous pulp surrounding the seeds is known as tamarind as it resemble its pulp. It is dark, fragrant, bitter and is a laxative. This could be given to children and pregnant ladies to remove constipation. It is mixed with tamarind and given in biliousness and in diabetes. Mixed with senna, it removes phlegm and taken with tara leaves, pepper, water and Indian endive it cleans the bowels.

'தளவு, மாகதி, மொனல், முல்லை' எனச் சூடாமணி நிகண்டிலும், 'இதழி, கொன்றை, மதலை ஆர்க்கு வதமென் றாகும்' என பிங்கல நிகண்டிலும் கொன்றையின் பெயர் வகைகள் குறிக்கப்பட்டுள்ளன. எல்லா மொழிகளிலும் மொத்தத் திலும் இவ்வாறு இருநூறு பெயர்களைப் பெற்றிருத்தல் இம்மரம் உலகமெங்கிலும் பரவலாக, தொன்று தொட்டு காணப்பட்ட சிறப்பினை வலியுறுத்தும்.

இதன் காய்கள் இரண்டு அடி அளவு முருங்கைக்காய் போன்று நீண்டு இருக்கும். இதன் இலை விழுது சரும நோய்களை குணப் படுத்தும். இதன் கொழுந்தை துவையல் செய்து சாப்பிட மலபந்தம் போகும். பூவைக் கஷாயமிட்டு நீரிழிவு, பெருவியாதி, வயிற்றுக் கோளாறு, பிரமேகம், சலமேகம் இவைகளுக்குக் கொடுக்கலாம். இதன் வேரை கஷாயமிட்டுக் கொடுக்க சுரம், சூலை, அரோசிகம் முதலியவைகள் போகும். பட்டையையும், இலையையும் அரைத்து எண்ணெயில் கலந்து பூச சிரங்குகள் குணமாகும். இதன் இலைச் சாற்றை உடம்பில் தேய்க்க சோகையின் வீக்கம் போகும். இதன் வேர் பட்டையைக் கஷாயமிட்டுக் கொடுக்க சுரம், இருதய நோய், ரோகங்கள் குணமாகும். மலச்சிக்கலைப் போக்கி வயிற்றுப் புழுக் களைக் கொல்லும்.

கொன்றைப்பட்டை, தூதுவளை வேர் இரண்டையும் சம அளவு எடுத்து தூள் செய்து தேனில் குழைத்து காலை, மாலை இரு வேளையும் பாலுடன் சாப்பிட சளி, கபக்கட்டு, கஷ்ட சுவாசம் நீங்கும்.

இலையையும், பூவையும் அரைத்து கண்களின் மேல் வைத்துக் கட்ட கண்நோய்கள் வராது. இலைச்சாற்றை சர்க்கரைச் சேர்த்துக் குடிக்க மூலரோகம், மலக்கட்டு, ஆசனத்தினவு, கடுப்பு முதலியன குணமாகும்.

இதன் காய்க்குள்ளிருக்கும் பசையுள்ள சதைப்பற்று புளியைப் போன்று இருப்பதால் இதனை சரக்கொன்றை புளி என்பர். சாதாரண புளியுடன் கலந்து உபயோகிக்க பித்தம் சாந்தியாகும். குழந்தைகளுக்கும் கர்ப்பிணிகளுக்கும் கொடுக்க மலக்கட்டு நீங்கும். இது இரத்தக் கொதிப்பை தணிக்கும். சீமை சிவதையோடு சாப்பிட கபமும், தாராயிலை ரசம், காசினிக்கீரை இவைகளோடு சாப்பிட வண்டலும் போகும். மேலும் ஈரல்வரட்சி, காமாலை, உஷ்ண சுரம் போகும்.

* * *

## கொன்றை
### (சிறு கொன்றை)

## Cassia arboreum
### (N. O. Caesalpineaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Action* : *Tonic, Cooling and Laxative.*

Uses : This exhibits the same medicinal property of C. fistula. It cures the eye diseases due to excess heat in the head. The bark decoction cures piles and gives strength to body.

கொன்றையின் பல குணங்கள் இதற்கும் உண்டு. இதனால் கபால உஷ்ணத்தால் வரும் நேத்திரரோகம் குணப்படும். அழகு தரும். இதன் பட்டை உள்மூலம் தீர்ப்பதுடன் சரீரத்திற்கு வலிமை தரும்.

* * *

## கொன்றை
### (செங்கொன்றை)

## Cassia marginata
### (N. O. Caesalpineaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves and bark*

*Action* : *Expectorant, Vermifuge, Anti-scorbutic and Anti-syphilitic.*

Usea : This is used to make kajal for the eyes. The leaf juice is used for ear ache, asthma and ring worm infections. The paste of the bark is useful in leprosy, psoriasis and ulcers of the skin.

இதனை சிவப்புக்கொன்றை என்றும் கூறுவர். இது அஞ்சனம் செய்ய உபயோகப்படும். இதன் இலைச்சாறு காதுவலி, ஆஸ்துமா, படர் தாமரை ஆகியவற்றிற்கு குணம் தரும்.

இதன் பட்டையை குஷ்ட ரோகம் மீது அரைத்து பற்றுப் போட நலம் தரும். மேலும் இது ஆணைச்சொறி, இரணப்படை ஆகியவற்றை குணமாக்கும்.

* * *

## கொன்றை

### (மைக்கொன்றை)

## Cassia sophera

### (N. O. Caesalpineaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Flowers and bark*

*Action* : *Diuretic and Anti-rheumatic.*

Uses : This is found effective in treating diabetes and albuminuria. This expels the gas found in the stomach. The decoction of the flower cures diabetes and the diseases due to accumulation of morbid fluid.

இதனை மயில் கொன்றை என்றும் கூறுவர். இதனால் பிரமேகம், சலமேகம் போகும். இது வயிற்றிலுள்ள வாயுவை வெளிப் படுத்தும்.

இதன் பூ, பிரமேகம் நீக்குவதுடன் குடல் வாதம், சூலை நோய்கள் ஆகியவற்றை குணப்படுத்தும்.

* * *

## கொன்றை

### (மஞ்சள் கொன்றை)

## Cassia siamea

### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, bark and fruit.*

*Constituents* : *The bark and fruit contains tannic acid. The wood contains toxic alkaloid.*

Uses : Leaves can be used as manure.

இது ஒரு சிறந்த பசுந்தாள் உரமாகும். இதன் பூக்கள் மஞ்சள் நிறமுடைய்து.

* * *

## கொன்றை

### (மயில் கொன்றை, உகாமரம்)

## Delonix regia

### (N. O. Leguminosae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, leaves and fruit.*

*Action* : *Astringent, Anti-rheumatic, Laxative and Cooling.*

Uses : This is a small tree, the bark of this tree is smooth and the flowers are greenish yellow in colour. The leaves are anti-inflammatory, expectorant, diuretic and anthelmintic. The extract of this is used to cure eczema. This is also found very effective in asthma. The fruit juice mixed with sugar relieves cough and acts as coolant. This dissolves the stones in the urinary bladder and reduces the inflammation. This is also found effective in joint pains. The extract of the seed gives strength to body and could be used to joint pains. This increases the body heat. The decoction of the bark is used in treating vaginal discharges. It is also used as an analgesic application. It is an anthelmintic also. The sticks of the branches are used to clean the teeth.

இதனை உகா மரம் என்றும் கூறுவர். இது ஒரு சிறுமரமாகும். இதன் பட்டை வெண்மையாகவும், பூக்கள் பச்சை சாயையுள்ள மஞ்சள் நிறமாக இருக்கும். இலை வீக்கமுருக்கி, அகட்டுவாய்வகற்றி ஆகும். மேலும் இதற்கு சிறுநீர் பெருக்குதல், புழுக் கொல்லுதல் போன்ற குணங்கள் உண்டு. இதன் சாறு கரப்பானை குணப் படுத்தும். மேலும் ஆஸ்துமாவிற்கு சிறந்த மருந்தாகும்.

இதன் கனி சாற்றையும், சர்க்கரை நீரும் சேர்த்துச் சாப்பிட இருமல் குணமாகும். மேலும் உடலுக்கு குளிர்ச்சி தரும். இது மூத்திரப்பை கற்களை கரைப்பதுடன், வீக்கத்தைக் குறைக்கும். சிறுநீரைப் பெருக்கும். கீல் வாதத்திற்கு சிறந்த மருந்தாகும்.

இதன் விதை எண்ணெய் உடலுக்கு வலிவுதரும். கீல்வாதப் பகுதிகளில் தடவ குணமாக்கும். குழந்தை பிறந்தவுடன் உடல் முழுவதும் தடவுவர். இதற்கு வெப்பமுண்டாக்கும் தன்மை உண்டு.

இதன் வேர்ப்பட்டை கஷாயம் சூதகம் நீக்கும். வலியுள்ள இடங்களில் தடவ வலி நீங்கும். இதன் மரப்பட்டை கஷாயம் குடற் புழுக்களை அழிக்கும். இதன் குச்சிகளைக் கொண்டு பல் துலக்க ஈறு பலப்படும்.

* * *

## கொன்றை
### (புலிநகக் கொன்றை)

## Wagatea spicata
### (N. O. Papilionaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark and leaves*

*Action* : *Anti-scorbutic.*

Uses : This cures all skin diseases.

இதன் பூக்களின் இதழ்கள் புலியின் நகத்தைப் போன்று இருக்கும். இது கொன்றையைப் போன்றே எல்லா சரும நோய் களையும் போக்கும்.

* * *

## கொன்றை
### (பெருங்கொன்றை)

## Peltophorum ferrogenium

Uses : This is effective in dysentery, toothache and eye disorders.

இது சீதபேதி, பல்வலி, கண்நோய் போன்றவற்றை குணப் படுத்தும்.

* * *

## கொட்டிக்கிழங்கு

## Aponogeton monostachyon

**(N. O. Aponogetonaceae)**

*Habit* : *Aquatic herb*

*Parts used* : *Tuber*

*Action* : *Refrigerant and Tonic.*

Uses : Powdered tuber is used in the form of gruel. To treat skin diseases, gonorrhoea and internal heat, the powdered tuber is given in doses of eight grams.

The pulvarised root is a remedy for urinary diseases. It is capable of binding zinc.

இதனால் தேமல், வெள்ளை, உடல்கடுப்பு, உட்சூடு ஆகிய நோய்கள் போகும். இதை உலர்த்தி பொடித்து மாவாக்கிக் கஞ்சி காய்ச்சிக் குடிக்கலாம். இது செம்பைச் சுத்தி செய்யும்.

* * *

## கோகிலம்

**See : Gymnema sylvestre**

**சிறு குறிஞ்சான் பார்க்கவும்**

* * *

## கோகிலா

## Lavunga scandens

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *An aromatic oil.*

*Action* : *Refrigerant, Stimulant and Aromatic.*

Uses : A type of aromatic oil is extracted from this plant and it is used mainly in perfumes.

இதிலிருந்து ஒருவித வாசனை எண்ணெய் எடுக்கலாம். இது வாசனைத் தைலங்களில் சேர்க்கப்படுகிறது.

* * *

# கோக்கோ

## Theobrama cocoa

### (N. O. Sterculiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Seeds contain albuminoids, an alkaloid theobromine and cocoa red.*

*Action* : *Stimulant, Refrigerant and Aromatic.*

Uses : Cocoa powder which is reddish is derived from plant called cocoa. This is used to make cocoa drink. This contains fat, proteins, carbohydrates and minerals.

கோக்கோ என்பது கக்கோவா என்னும் மரத்தின் கொட்டையிலிருந்து செய்யும் செம்பழுப்பு நிறமான தூள். இது கோக்கோ என்னும் பானம் செய்யப் பெரிதும் பயன்படுகிறது.

கோக்கோ மிகச்சிறந்த உணவுப் பொருள். இதில் சுமார் புரோட்டீன் 18 சதம், கார்போஹைடிரேட்டு 40 சதம், நெய் 27 சதம், தாதுப்பொருள் 6 சதம் உள்ளன. உணவுப் பண்டங்களைத் தயாரிப்பதில் இதைப் பலவிதமாகப் பயன்படுத்துகின்றனர்.

இதனுடன் பாலும், சர்க்கரையும் சேர்த்து இனிய சுவையும், மணமும், சத்தும் உள்ள சற்று உற்சாகம் தரும் பானம் தயாரிக்கிறார்கள்.

* * *

## கோடகசாலை

(சதைக்கரண்டி, கோடாசூரி, முடிமேலழகி, மாரம்)

## Rungia repens

(N. O. Acanthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Diuretic, Vermifuge, Febrifuge, Cooling, Alexipharmic and Vulnerary.*

Uses : This is a febrifuge and used to treat venereal diseases. This cures fever and ulcers. The decoction of the leaves along with inflamed genetials. This is also used as an antidote for snake bites. Venereal ulcers could be cured if the dlant extract is applied on it and a small quantity is taken internally along with buttermilk.

இது வெப்பத்தைத் தணிக்கும். மேலும் பிணிகளை ஒழித்து, காய்ச்சல், புண், புரைகளை ஆற்றிவிடும் ஆற்றல் இதற்குண்டு. நாக்கு ரணம், வாய், உதட்டுரணம் ஆகியவை இதன் இலைக் கஷாயத்தால் தினம் வாய்க் கொப்பளிக்கக் குணமாகும். உலர்ந்த இலையைப் பொடித்து நெய்யுடன் காலை, மாலை இருவேளை உண்டுவர காய்ச்சல், அஸ்தி (வெட்டை), மேக அனல், மேகச் சூடு ஆகியன தீரும். பாம்புக்கடி விஷத்தையும் போக்கும்.

மேகத்தால் உண்டான கிரந்திப்புண்கள், அரையாப்பு, கொருக்கு, லிங்கப்புற்று, யோனிப்புற்று ஆகியவைகட்கு புண்களின் மேல் சிறிதளவு இதன் சமூலத்தைத் தடவி, சிறிதளவு சாப்பிட்டு பின்பு மோர் குடிக்க குணமாகும்.

* * *

## கோரைப் புல்

(செவ்வரகு புல்)

## Chloris barbata

(N. O. Gramineae)

*Hab t* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Aetion : Anti-rheumatic and Febrifuge.*

Uses: Plant is used in treating rheumatism and colds.

இதில் நார்ச்சத்தும், மாவுச்சத்தும் அதிகமாக உள்ளது. இந்த புல் சிறந்த கால்நடை உணவாகும்.

* * *

## கோதுமை

### Triticum vulgare

**(N. O. Gramineae)**

*Habit : Herb*

*Parts used : Seeds*

*Constituents : Seeds contain proteins, starch, fat and fibre.*

*Action : Nutrient, Demulcent and Antidote.*

Uses: This gives better strength than any other pulses. This contains proteins, calcium, phosphates and iron. It is tonic in action and gives strength if used regularly. This increases semen. It is found effective in diabetes and rheumatism. The gruel of this is an ideal food suppliment to patients of fever and phlegmatic disorders.

இது மற்ற தானியங்களைவிட உடம்பிற்கு வலிமையைக் கொடுக்கும். இதில் 3 முதல் 17 சதம் புரோட்டீனும், 2 முதல் 3 சதம் சர்க்கரைச் சத்தும், மூன்றரை முதல் இரண்டு சதம் வரை தாதுப் பொருள்களும் உள்ளன. இத்தாதுப் பொருளில் கால்சியம், பாஸ்பரம், இரும்பு முதலிய சத்துக்கள் உள்ளன.

கோதுமை உடலுரமாக்கியாகவும், உள்ளழலாற்றியாகவும் செயல்படுகிறது. கோதுமை அரிசி உடலுக்கு பலத்தைக் கொடுப்பதுடன் சுக்கிலம், பித்தம் இவைகளை விருத்தி செய்யும். தனிவாத கோபத்தை நீக்கவும், பிரமேகத்தை நீக்கவும் பயன்படுகிறது.

இதன் கஞ்சி கபம், சுரம் கொண்ட நோயாளிகளுக்கு சிறந்த உணவாகும்.

* * *

## கோபுரம் தாங்கி

(பேய்த்தும்பை)

## Andrographis echinoides

**(N. O. Acanthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Tuber*

*Action* : *Alterative, Expectorant and Febrifuge.*

இது கைப்பு, துவர்ப்பு சுவையுடையது. இதன் கிழங்கு, மருத்துவப் பயனுடையது. இது தங்கத்தைப் பற்பமாக்கும்.

* * *

## கோரைக் கிழங்கு

(முத்தக்காசு)

## Cyperus rotundus

**(N. O. Cyperaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Tuber or bulbous root.*

*Action* : *Astringent, Stimulant, Diuretic, Diaphoretic, Demulcent, Emmenagogue, Vermifuge and Lactagogue.*

Uses : This is bitter and acerbity in taste. This cures shivering fevers, biliousness, rheumatic fever and diarrhoea. This also could be used in treating mental disorders, thirsty-ness, phlegmatic disorders, rheumatic sore, fainting, vomiting due to rheumatism and biliousness. The mixture of ginger and this tuber is smashed well and mixed with honey will cure dysentery and intestinal worms. The decoction of the tuber is effective in treating vomiting, dysentery and dyspepsia etc. The paste of the tuber when applied on the breast by lactating mothers, it increases the milk flow. This is an ideal medicine for scorpion stings.

இது புல்லினத்தைச் சேர்ந்தது. இதன் கிழங்கிற்கு கோரைக் கிழங்கு என்று பெயர். இதில் பல இனங்கள் உண்டு. இதன் சுவை கைப்பும், துவர்ப்பும் ஆகும். இது நளிர்ச்சுரம், இரத்தபித்தம், வாத சுரம், குதிக்காலைப்பற்றிய வாயு மூர்ச்சை, திரிதோடவாந்தி போன்ற ரோகங்களுக்கு சிறந்தது. இதன் கஷாயம் அதிசாரம், வாந்தி, பேதி, சீதபேதி, குன்மம் ஆகிய நோய்களை குண மாக்கும்.

இஞ்சி, கோரைக்கிழங்கு இரண்டையும் இடித்து தேன் கலந்து சிறிதளவு சாப்பிட சீதபேதி குணமாகும். இது மலப்புழுக்களையும் அழிக்கும்.

பச்சைக்கிழங்கை அரைத்து மார்பில் பற்றிட்டால் பால் நன்றாகச் சுரக்கும். உடலில் பூச வியர்வை நாற்றம் விலகும்.

இது தேள் கடிக்கும் மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## கோழிக் கீரை
(பருப்புக் கீரை)

**See : Chenopodium album**

**கீரை வகைகளைப் பார்க்கவும்**

* * *

## கோவை

Cocinia indica

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Whole plant.*

*Constituents* : *Root contains resins and the plant contains Glucokenin.*

*Action* : *Plant is Diaphoretic, Stimulant, Diuretic and Cooling. Leaves and stem are Antispasmodic and Expectorant. Fruit is Bitter.*

Uses : Leaves, fruit, stem and tuber of this plant possess medicinal value. The leaves arc used as coolant to eyes. Rheumatism, ulcers, body heat, anarexia could be effectively treated with this. Dysentery could be cured if the leaf extract is consumed in the morning and evening regularly. The leaf extract along with equal amount of gingelly oil if consumed with rice water cures gonorrhoea, anurisis, ulcers and chronic stomach ache. Unriped fruit is effective in eczema, cold, diabetes etc., The tuber is used for leprosy, rheumatism diabetes and phlegmatic disorders.

இது கொடியினத்தைச் சேர்ந்தது. இதன் இலை, காய், வற்றல், தண்டு, கிழங்கு ஆகியவை மருத்துவப் பயனுடையது. இது கைப்புச் சுவையுடையது. கோவை இலை, கண்ணுக்கு குளிர்ச்சி தரும். இருமல், வாதகோபம், பெருவிரணம், சிறுசிரங்கு, தேகச்சூடு, நீரடைப்பு ஆகியவை நீங்கும். இதன் இலைச்சாற்றை காலை, மாலை இருவேளை குடித்தால் சீதபேதி குணமாகும். வெட்டை நோய்க்கு இதன் இலைச்சாற்றுடன் சமஅளவு நல்லெண்ணெய் சேர்த்து நீராகாரத்துடன் விட்டு கலக்கி ஏழு நாட்கள் சாப்பிட்டால் பூரணமாக குணம் பெறலாம். நீரடைப்பு, பெருவிரணம், தீராத வயிற்றுவலி ஆகியவற்றிற்கும் இது சிறந்த மருந்தாகும்.

இதன் காய் கரப்பான், ஜலதோஷம், நீரிழிவு போன்ற நோய்களுக்கு மருந்தாகப் பயன்படுகிறது.

இதன் கிழங்கு குஷ்டரோகங்களுக்கும், பிரமேகம், வாதம், கபம், பித்தம், போன்றவற்றிற்கும் மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## கோவை

**(அப்பக்கோவை)**

**See : Kedrostis rostata**

* * *

# கோவை
## (ஐவிரல் கோவை)

## Bryonia laciniosa
### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Whole plant.*

*Action* : *Aperient, Laxative and Tonic.*

Uses : The leaves are used as coolant to eyes. This is also used to cure gonorrhoea, ulcers, anurisis etc. Butter mixed with the leaf extract of this plant is used as an external application for all skin diseases. It includes sweating. The fruit cures loathing for food fever, eczema etc. Tender fruit cures stomatitis. The tuber cures rheumatism, biliousness, phlegmatic disorders, rheumatoid arthritis, prudung sensation of the feet, diabetes, skin diseases, stomatitis, difficulty in breathing etc. The extract of the root is a main constituent in anti-diabetic medicines.

கொடியினத்தை சேர்ந்த இதன் இலையினால் கண்ணுக்கு குளிர்ச்சியுண்டாகும். பெரும்புண், சிறு சிரங்கு, உடல் வெக்கை, நீரடைப்பு நீங்கும். இலைச்சாற்றுடன் வெண்ணெய் சேர்த்து சிரங்குகளுக்குப் பூசலாம். மேலும் இது சருமநோய்களை குணப் படுத்தும். வியர்வையை உண்டுபண்ணும்.

இதன் காயால் சுவையின்மை, வெப்பம், கபம், சுரம், கரப் பான் நீங்கும். இளங்காய் வாய்ப்புண்களை ஆற்றும்.

இதன் கிழங்கு முப்பிணி, கீல்களிலுண்டாகும் குத்தல், அழல் நோய், நீரிழிவு, படைகள், வாய்புண், இரைப்பு போன்றவை குண மாகும். இதன் சாறு நீரிழிவு, படைபோன்றவற்றை குணப்படுத்தும். கிழங்கின் சாற்றை நீரிழிவு மருந்துகளுக்கு தனியாக வழங்கலாம்.

* * *

## கோவை
(கற்கோவை)

## Bryonia umbellata
**(N. O. Curcurbitaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Bitter principle known as bryonin*

*Action* : *Refrigerant, Diuretic, Stimulant, Tonic, Antidote and Alexipharmic.*

Uses : This is effective in anaemia and anurisis. This is also found to be an antidote. The leaf extract if taken twice daily increases the urine flow.

கொடியினத்தை சேர்ந்த இது சோகை, நீரடைப்பு நீக்கும். விஷத்தை முறிக்கும். இலையை அல்லது சமூலத்தை இடித்துப் பிழிந்த சாற்றை எடுத்துத் தேனுடன் தினம் ஒருவேளை வீதம் சாப்பிட்டு வர மூத்திரம் அதிகப்படும் சோகை நீங்கும்.

* * *

## கோவை
(கொல்லன் கோவை)

**See : Bryonia epigoea**

**கருடன் கிழங்கு பார்க்கவும்**

* * *

## கோவை
(கொத்தர் கோவை)

## Casearia esculenta
**(N. O. Samydaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Root and bark*

*Constituents :* *Bark contains tannin and carthartic acid. Root contains resin and tannic acid.*

*Action :* *Diuretic, Stomachic and Cooling.*

Uses : The root and barks are of medicinal use. The paste of the bark is used as an external application for the piles. The root, if taken internally it cures inflammation of the liver and piles. Root bark decoction cures diabetes.

இதன் வேரும் பட்டையும் மருத்துவ பயனுடையது. கைப்புச் சுவையுடையது. வேரை அரைத்து பற்றுபோட மூலநோய் குணமாகும். வேரை உள்ளுக்கு சாப்பிட்டு வர கல்லீரல் வீக்கம், மூலநோய் போன்ற நோய்களை குணமாக்கும். வேர், பட்டை கஷாயம் நீரிழிவு நோயை குணப்படுத்தும்.

* * *

# கோஷ்டம்

## Saussurea lappa

**(N. O. Compositae)**

*Habit :* *Herb*

*Parts used :* *Roots*

*Constituents :* *Roots contains two liquid resins, salt of valeric acid and the ash contains manganese. Root contains an essential oil.*

*Action :* *Stomachic, Expectorant, Stimulant, Carminative, Diaphoretic, Antiseptic and Alexipharmic.*

Uses : This is found in wells. The root is aromatic and exhibits medicinal property. It is sweet and acrid in taste. This increases the semen secretion. It is effective in treating rheumatism, herpes, cough, leprosy, phlegm etc., There are two types of costus, it is namely white and red variety. The root is employed in treating the diseases of eyes, head, stomach, neck, tongue, mouth ete,, Fever, fistula, ulcers, asthma also could be treated with this. In venereal ulcers, snake and rat bites, leucorrhoea, mental disorders it is used affectively. To treat leprosy of the head, equal quantity of this

and coriander is mixed and made into a paste. The paste is applied on the affected areas. This could be used with butter also. The bulbous root is soaked in the juice of citrus limonum is dried and powdered mixed with honey, is applied on pimples, black heads etc. The oil extracted from this is used in piles, skin diseases and pimples. The stem is used as sharbat. This could be used instead of opium in certain medicines.

கிணற்றுப்பகுதிகளில் மிகுதியாக வளரும். இதன் வேர் மணமுடையது. மேலும் மருத்துவப் பயனுடையது. இனிப்பு கார்ப்புச் சுவையுடைய இது உஷ்ணத் தன்மை கொண்டது. விந்துவை வளர்க்கும். வாதரத்தம், அக்கி, இருமல், குட்டம், கபம் போன்றவற்றை போக்கும்.

இதில் வெண் கோஷ்டம், செங்கோஷ்டம் என இரு வகையுண்டு. இதனால் கண், கபாலம், வயிறு, கழுத்து, தலை, நா, வாய் இவ்விடத்திலுண்டாகும். நோய்கள், சுரம், அதைப்பு, உதாவாத்தரோகம், கம்ப வாதம், மூலமுளை, விரணம், சுவாசகாசம், எலி, பாம்பு, தாவரம் முதலியவைகளின் விடங்கள்,மேகக்கட்டி விடபாகம் தாது நஷ்டம், வெள்ளை ஒழுக்கு, பைத்தியம் போகும். மேலும் சுகப்பிரசவம் உண்டாகும்.

கோட்டம், தனியா இரண்டையும் சமஎடை எடுத்து அரைத்துத் தடவ மண்டைக்குட்டம் நீங்கும். அல்லது கோட்டத்தை அரைத்து வெண்ணெய் கலந்தும் பூசலாம்.

கோஷ்டத்தை நாரத்தைச் சாற்றில் ஊறவைத்து உலர்த்திப் பொடி செய்து தேன்கூட்டி, முகக்குரு, வங்கு இவைகட்குப் பூச குணமுண்டாகும்.

இதிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய், மூலநோய், சருமநோய், முகக்குரு ஆசியவைகளை நிவர்த்திக்கும்.

இதன் தண்டை சர்பத் செய்து சாப்பிட தேகம் பலப்படும். சில இடங்களில்அபினுக்கு மாற்று மருந்தாகவும் இது செயல்படுகிறது.

* * *

## கௌசுபான்

## Caccinia glauca

**(N. O. Boraginaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Constituents* : *An oil and an liquid extract known as Goazaban*

*Action* : *Alterative, Demulcent, Expectorant, Refrigerant, Spasmodic and Tonic.*

Uses : It is used in syphilis and rheumatism.

கரப்பான், வாதம் போன்ற நோய்களுக்குக் கௌசுபான் குணம் தருகிறது.

* * *

## சங்கம் குப்பி
### (இசங்கு, பீநாறி)

## Clerodendron inerme
### (N. O. Verbenaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and juice of the root and the leaves.*

*Constituents* : *Leaves contain a bitter principle. Resin, gum and ash contains sodium.*

*Action* : *Tonic, Febrifuge and Alterative. Leaves are Muscilaginous, Bitter Fragrant, Cholagogue, Expectorant, Antiphlogistic, Antisyphilitic, Anti-rheumatic, Alexipharmic and Antidote.*

Uses : The leaves are small, smooth shining oval and with three flowered. Juice of root and leaves are bitter. It acts as an alterative in scrofulous and venereal affection. Juice when given either in pure or in conjunction with castor oil is useful in itches, skin erruptions, rheumatism etc. Root boiled in mustard oil is used as an application for rheumatic pains. Leaves made into a paste are applied externally to bulibos. Powdered root is a remedy for heat, cough, venereal ulcers of children in the womb, snake bite, poisoning and ulcerated leprosy. Leaves smeared in mustared oil applied to cut wounds for quick healing.

The whole plants is febrifuge and good for rheumatism.

இதன் இலைகள் வழவழவென்று சிறியதாகவும், அண்ட வடிவமாகவும் இருக்கும். சங்கங்குப்பி அரைக்கடுவன், கிரந்தி, கருங் குட்டம், வெள்ளை செவ்வாப்புக் கட்டி, சொறி, சிரங்கு, சூலை, பெருவளிநோய், பாம்புக் கடி, அழல் நோய்கள் போன்ற நோய் களுக்கு மருந்தாகப் பயன்படுகிறது. பித்தத்தை அதிகரிக்கும்.

இதன் இலைச்சாற்றை தினம் இருவேளை சிறிதளவு கொடுத்து வர கழுத்துக் கழலையை நீக்கி, இரத்தத்தை சுத்தம் செய்து உடலை வலுப்படுத்தும். இலையை குடிநீரிலிட்டு குடித்துவர விடாத சுரங் களும் நீங்கும். இலையை நீரிலிட்டு காய்ச்சி, இந்நீரில் குளித்துவர சொறி, சிரங்கு, வெறி நோய் குணமாகும். மேலும் இலையை ஆமணக்கு நெய்விட்டு வதக்கிக்கட்ட, அரையாப்பு கரையும்.

இலைச் சாற்றையும், சிற்றாமணக்கு எண்ணெய்யையும் கலந்து காலை, மாலை கொடுத்துவர வெட்டை, கழலை, கரப்பான், சொறி, சிரங்கு, முதலியவற்றிற்கு இதன் வேர்த் தூளைப் பயன் படுத்தலாம்.

மேக தைலங்களில் இது முக்கிய கருப்பொருளாதலால் இதை ''மேக ரோகங்களுக்கு ராஜா'' என்பர். இதன் இலையுடன் மிளகு சேர்த்து கசாயம் செய்து சாப்பிட ஆஸ்த்துமா, சுவாசகாசம் குண மாகும்.

இதன் இலையை அரைத்து கடுகு எண்ணெய்யுடன் சேர்த்துத் தடவ வெட்டுக் காயங்கள் குணமாகும்.

* * *

## சங்கன்

### (நற்சங்கன்)

## Azima tetracantha

### (N. O. Salvadoraceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Leaves, root and juice obtained from root-bark.*

*Action* : *Expectorant, Stimulant, Astringent, Antiperiodic, Diuretic, Vulnerary, Anti-rheumatic and Alexipharmic.*

Uses : This cures anaemia, eczema, fabrile temperature, dyspepsia inflammation of the joints, rheumatism,

bilious diseases, poisonous bites etc. The leaves and roots possess medicinal properties. This improves the eye sight and purifies blood.

Root bark cures phlegm, cough, fever, herpes and rheumatism. This also acts as an anthelmintic. Latex of the root bark gives relief in oedema, cold and fever. The infusion of the leaf if taken regularly gives relief in rheumatism. The paste of the leaves used as an application for the tumours of the neck. This also cures syphilitis. Decoction of the leaves gives relief in asthma, chest pain, rheumatic pain, herpes and poisonous bites.

சோகை, கரப்பான், வெப்பம், கழலை, குன்மம், சீல்வீக்கம், வாத கோபம், பித்தநோய், நஞ்சுக்கடி ஆகியவற்றிற்கு இதன் இலையும், வேரும் மருந்தாகப் பயன்படுகின்றது. மேலும் இது கண் பார்வையையும், இரத்த விருத்தியையும் உண்டாக்கும்.

இதன் வேர்ப்பட்டைக்கு கோழை, இருமல், ஐயச்சுரம், கடுப்பு, ஐய சதைப்பு, கிரந்தி, உட்சுரம், வளிநோய்கள், வயிற்றுப் புழுக்கள் ஆகியவற்றைப் போக்கும் தன்மையுண்டு. வேர்ப்பட்டையி லிருந்து எடுக்கப்படும் பாலுக்கு வீக்கம், நீரேற்றம், சுரவேகம் ஆகியவற்றை தணிக்கும் தன்மையுண்டு.

இலையின் சாறு கோழையை வெளிப்படுத்தி இருமலைத் தணிக்கும். இலையின் குடிநீரை வளிநோய்க்கு வழங்கிவர குண மாகும். மேலும் இது கரப்பானுக்கும் சிறந்த மருந்தாகும்.

ஆஸ்த்துமா, இருதய நோய், வாதவலி, சீல் வாதம், கிரந்தி, விஷக்கடி ஆகியவற்றிற்கு இது சிறந்த மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## சங்கன்

### (முட்சங்கன்)

## Monetia barberioides

### (N. O. Salvadoraceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves, root and juice obtained from root bark.*

*Action* : *Diuretic, Stimulant, Diaphoretic and Tonic.*

Uses : The leaves of this plant is commonly used to treat rheumatism, paralysis and rehumatagia. The paste made out of equal quantity of seeds leaves and bark if taken internally along luke warm water is found effective in treating rheumatism.

இச் செடியின் இலை பொதுவாக வாத ரோகங்களுக்கு நல்ல மருந்து. பாரிச வாதம், வாய்வுக் குமைச்சல் போன்றவை இதனால் நல்ல முறையில் குணமாகும்.

இதன் இலையையும் விதையையும், வேர்ப்பட்டையையும் சம அள்வாக எடுத்து அரைத்துக் கொள்ள வேண்டும். தினம் காலை மாலை இருவேளையும் சிறிதளவு சாப்பிட்டு சுடுநீர் அருந்த வாத ரோகங்கள் குணமாகும்.

பாரிச வாதம் காரணமாக கைகால்கள் விழுந்தவர்கள் தொடர்ந்து 30 நாட்கள் சாப்பிட குணம் தெரியும்.

* * *

## சங்கு புஷ்பம்

**See : Clitoria ternatea**

**காக்கணாம் கொடி பார்க்க**

* * *

## சடாமாசி

**(சடாமஞ்சி, தகரம்)**

## Valeriana officinalis

**(N. O. Valerianaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root*

*Constituents* : *Root contains a volatile oil.*

*Action* : *Stimulant, Antispasmodic, Carminative, Aromatic, Deobstruent and Emmenagogue.*

Uses : Dried and fresh root of this plant exhibit medicinal property. This cures epilepsy and diarrhoea. It regulates

the heart beat. The oil extracted from this, if used as hair oil it helps the hair to grow thick and black.

Dried root in combination with certain oils it forms a fragrant and cooling liniment for the head. It is used in perfumes. Powdered drug is prescribed in cases of menstrual disorders, swoon, epilepsy and convulsive affections. Medicated oil and tincture are chiefly used for epilepsy.

Root is used as an ingredients of medicines for leprosy, septic poison from ulcers, chronic fevers, internal heat, flatulent diarrhoea, blood pressure, opthalmia etc. It also acts as an appetizer. This also cures rheumatic boring pain, palpitation of the heart and difficulty in breathing.

இதை சடாமஞ்சி, தகரம் என்றும் கூறுவர். இது சிலந்தி, நஞ்சு, பழைய சுரம், உட்சூடு, வாய்வு, கழிச்சல், கண்நோய்கள், இருமல், குருதியழல், இரைப்பு போன்ற நோய்களுக்கான மருந்துகள் தயாரிக்கப் பயன்படுகிறது.

காக்கை வலிப்பு, பேதி முதலியவற்றைக் கட்டுப்படுத்தும். இருதய துடிப்பைச் சீராக்கும். இதிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்யை தலையில் தேய்க்க மயிர் கருமையாக, நன்றாக வளரும்.

உலர்ந்த வேரை எண்ணெய்யுடன் சேர்த்து தலைக்குத் தடவ குளிர்ச்சி தரும். இது வாசனைத் தைலங்களிலும் திரவியங்களிலும் பயன்படுத்தப்படுகிறது. இதை பொடித்து உள்ளுக்குக் கொடுக்க சூதகவாயு, மூர்ச்சை, காக்கைவலி, இசிவு முதலியன குணமாகும்.

மேலும் இவ்வேரால் குட்டம், சிலந்தி விஷம், பழைய சுரம், உட்சூடு, வாயு பேதி, இரத்தபித்தம், கண் நோய், காசம் இவை தீரும். மேலும் வாதக் குடைச்சலை நிவர்த்திக்கும்.

* * *

## சணல்

**(சணப்பு)**

## Crotolaria juncea

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, root and seeds.*

*Constituents* : *Leaves contain muscilage, a little solid fat and a resin.*

*Action* : *Leaves are Refrigerant, Demulcent, Emetic, Purgative, Emmenagogue and Abhortive. Root is Astringent, seeds are Corrective of blood and Abhortifacient.*

Uses : The plant extract is used to abhort early pregnancy. Reduces bile secretion. The seed is of medicinal value which purifies the blood and cures stomach ache.

இதன் சமூலம் இளம் கர்ப்பத்தை கலைக்கும். பித்தம் தணிக்கும். இது ரத்தத்தை சுத்தம் செய்வதுடன் வயிற்றுவலியை குணப்படுத்தும். இதன் விதை மருத்துவப்பயனுடையது. இதன் வேர் கைப்புச் சுவையுடையது.

* * *

## சண்பகம்
### (இலை சம்பங்கி)

## Michelia champaca
### (N. O. Magnoliaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, root, root-bark, leaves, flowers and fruit.*

*Constituents* : *Bark contains a volatile essential oil, fixed oil, resin, tannin, mucilage, starch and sugar.*

*Action* : *Bark is Bitter, Tonic and Astringent.*

Uses : This is an ideal medicine for stomach ache. It is used with honey to cure stomachache. The flower of the plant is used in treating rheumatic fever, gonorrhoea, sexual debility, rickectic fever etc. The infusion made out of this cures dyspepsia, fever and nausea. The flower smashed in oil is used as an external application for the forehead to cure headache and eye disorders. This paste is also found effective in rheumatic pain, inflammation of the joint, if applied externally. To treat rathakanam, a paste is made out of this flower along with equal quantity of cardamum, sarasaparilla,

sageplant and liquorice using breast milk. Pure ghee is also mixed along with the paste. The mixture cures rathakanam. The root of the plant cures febrile temperature, catract and induces appetite. The oil extracted from the root gives sexual vigour for men.

இதன் மறு பெயர் இலை சம்பங்கி என்பதாகும். வயிற்று வலிக்கு இலைச்சாற்றை தேனுடன் கலந்து கொடுக்க சிறந்த பயன் தரும்.

இதன் பூ வாதசுரம், என்புச்சுரம், வெள்ளை, ஆண்மைக் குறைவு, கண் அழலை ஆகியவற்றைப் போக்கி மனக்களிப்பை உண்டாக்கும். இதை குடிநீரிலிட்டுக் குடிக்க குன்மம், சுரம், ஓக்காளம் நீங்கும். பூவை எண்ணெய்யிலிட்டுப் பிசைந்து தலை நோய், கண் நோய், மூக்கடைப்பு முதலியவைகளுக்கு நெற்றியில் பற்றிடலாம். இதையே மேலுக்குத் தடவ வாதவலி, கீல் வீக்கம் முதலியன போகும். பூவுடன் ஏலம், நன்னாரிவேர், தூதுவளை, அதிமதுரம் இவைகளை சமஅளவு கலந்து, முலைப்பால் சேர்த்து அரைத்து, அத்துடன் பசு நெய்யை விட்டு குழைத்து சாப்பிட இரத்தகணம் உடனே நீங்கும்.

இதன் வேர் வெப்பம், சுரம், கண் படலம் போக்கி நன்றாக பசியை உண்டாக்கும். இதன் எண்ணெய் மனதிற்கு உற்சாகத்தைக் கொடுத்து ஆண்மையைப் பலப்படுத்தும்.

* * *

## சண்பகம்

### (காட்டு சண்பகம்)

## Michelia nilgirica

### (N. O. Magnoliaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark and flowers*

*Constituents* : *It contains a volatile essential and a fixed oil, acrid resin, tannin, sugar, starch and calcium oxalate.*

*Action* : *Bark infusion is Febrifuge.*

Uses : The bark decoction reduces fever.

இதன் பட்டை க்கஷாயம் சுரத்தை தணிக்கும்.

## சதகுப்பை

**(சதகுப்பி, சோழிக்கீரை, மதூரிகை)**

## Anethum sowa (or) A. graveolens

**(N. O. Umbelliferae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, flowers and seeds.*

*Constituents* : *Dried ripe fruit contains a volatile oil and i xed oil.*

*Action* : *Carminative, Stomachic, Aromatic, Stimulant, Diuretic, Resolvent, Emmenagogue and Galactagogue. Fruit (seed) is regarded as Stimulant, Carminative and Aromatic.*

Uses : The leaves of this plant is used in rheumatism, haemorrhoids, head ache, ear ache etc. The decoction made out of its leaves and palmsugar cures vomiting. This remove, the obstructions of the liver, lungs, stomach and gives strength to these organs. To treat the primary complex in children the leaves boiled in castor oil is found very effective. The leaf extract alone also could be used. The same extract could be used to treat neurasthenia, amenorrhoea and epilepsy. Powdered dried leaves along with sugar if given in a dose of three pinches will cure headache, ear ache, anorexia etc. Heated leaf with oil is used as an external application for inflammation and boils. Infusion made out the leaves is given to ladies after child birth will remove the obstructions in the uterus. The decoction of the flower induces labour if given to pregnant women. This regulates menstrual cycle. The paste of the seeds which is boiled in the steam is found very effective as an external application for the joint pains.

இதனை சதகுப்பி, சோழிக்கீரை, மதூரிகை என்றும் கூறுவர். இது வாதநோய், குருதிப் போக்கு, தலைவலி, காதுவலி, மூக்கிலிருந்து நீர் பாய்தல், கீழ்வாய்கடுப்பு முதலியவைகளுக்கு மருந்தாகப் பயன்படுகிறது.

இதனுடன் பனைவெல்லம் சேர்த்து கசாயமிட்டுக் கொடுக்க உடனே வாந்தி நிற்கும். இது பசியைத் தூண்டி ஈரல், நுரையீரல்,

இரைப்பை இவைகளிலுள்ள சிக்கலை அறுத்து வன்மையைக் கொடுக்கும். குழந்தைகட்கு உண்டாகும் மாந்த நோய்க்கு இதன் இலையை சிற்றாமணக்கெண்ணெயிலிட்டுக் காய்ச்சியோ அல்லது இலைச்சாற்றைத் தனியாகவோ கொடுக்கலாம். சூதகசன்னி, சூதகக் கட்டு, காக்கை வலிப்பு இவைகளுக்கும் மேற்கண்ட மருந்தைக் கொடுக்கலாம். இலைத் தூளுடன் சர்க்கரைக் கலந்து மூன்று சிட்டிகை அளவு கொடுக்க தலைநோய், காதுவலி, பசிமந்தம் இவைகள் தீரும். இலையை எண்ணெய் தடவி வதக்கி வீக்கம், கட்டிகளுக்குப் போட சீக்கிரம் பழுத்து பின்பு குணமாகும். இலையை குடிநீர் செய்து பிள்ளை பெற்றவர்களுக்குக் கொடுக்க குருதி சிக்கல் தீரும்.

இதன் பூ கசாயம் வெகு விரைவில் பிள்ளைப் பேற்றை உண்டுபண்ணி, மாதவிடாய் கோளாறுகளை நீக்கும்.

விதையை அரைத்து நீராவியில் வேகவைத்து இதன் வேருடன் சேர்த்து கீல்வாயுவிற்குப் பற்றிடலாம்.

* * *

## சதகுப்பை
### (காட்டு சதகுப்பை)

## Anethum graveolens
### (N. O. Umbelliferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Action* : *Expectorant, Laxative and Aphrodisiac*

Uses : This cures piles, cough, constipation, liver disorders, vomiting, intestinal worm infections and uterus ulcers. This improves appetite and digestive power.

இது மூலம், இருமல் இவைகளைப் போக்கி, ஆண்மையை உண்டு பண்ணும். மேலும். மலபந்தம், ஈரல் நோய்கள், வாந்தி, வயிற்றுப் புழு, கருவாய்ச் சூலை இவைகளையும் போக்கும். பசித் தீயையும் செரிப்பையும் பெருக்கும். இதை சதகுப்பையைப் போலவே பயன்படுத்தலாம்.

* * *

# சதாப்பு

## (அருவதா, அருதா, சதாப்பிலை)

## Ruta graveolens

## (N. O. Rutaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Glucoside, resin and an essential oil.*

*Action* : *Antiseptic, Stimulant, Emmenagogue, Irritant and Abortifacient.Juice of the plant is Stimulant, Expectorant, Antispasmodic and also Anthelmintic to children.*

Uses : The leaves are greenish grey in colour and it is oily. The leaves smashed with alcohol is an ideal application for paralysis. For the patients of cough, the smoke of this leaves gives relief. This cures ammenorrhoea, dysentery, epilepsy, stomach ache etc., To treat the chest conjestion of the children, the leaves ground with pepper and added with breast milk gives relief. The worms which lives on this plant is also of medicinal value. These worms fried in gingelly oil and added with celery is used as nasal drops to treat any diseases of the nose.

The decoction of the leaves cures fevers, indigestion, flatulence, stomach ache, chronic chest conjestion, intestinal worm infection etc.

இதனை அருதா, அருவதா, சதாப்பிலை, என்றும் கூறுவர். இதன் இலை பச்சைச் சாம்பல் நிறமுடையது.இது எண்ணெய்ப் பசையுடையது. இலையை இடித்து சாராயத்தில் கலந்து சருமத்தில் கட்ட பாரிசவாயுவை குணப்படுத்தும். இருமல் நோயாளிகளுக்கு இதனால் தூபம் போடலாம். மேலும் இது சூதகக்கட்டு, சீதபேதி, காக்கை வலிப்பு, வயிற்றுவலி, ஆகியவற்றிற்கும் சிறந்தது. குழந்தைகளின் கோழைக்கு இதன் இலையுடன் மிளகு சேர்த்தரைத்து தாய்ப்பாலில் கலக்கி கொடுக்கலாம்.

இச்செடியில் காணப்படும் புழுவை நல்லெண்ணெயிலிட்டு, ஓமம் சேர்த்து வெயிலில் இட்டு மூக்கில் சிலதுளி விட பீனிசம் போகும்.

இதன் இலைக் கஷாயம் காய்ச்சல், அஜீரணம், மாந்தம், வயிற்றுப் பொருமல், வயிற்றுவலி, செரியாமை, நாட்பட்ட மார்புச் சளி, வயிற்றுப்புழு நோய், பால் மாந்தம், மாந்தவலி, மாந்தசுரம், கணக்கழிச்சல் ஆகியவற்றிற்கு மருந்தாகப் பயன்படுவதோடல்லாமல் பிள்ளைப் பேற்றினால் உண்டாகும் துன்பத்தையும் நிவர்த்திக்கும்.

* * *

## சதா வேரி

**(சதா மூலம், தண்ணீர் விட்டான், நாராயண மூலி)**

## Asparagus racemosus

**(N. O. Liliaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Roots and leaves.*

*Constituents* : *Large amonut of Sacharine matter and mucilage.*

*Action* : *Root is highly mucilagenous, Antidiarrhoetic, Refrigerant, Diuretic, Anti-dysenteric, Nutritive, Tonic, Demulcent, Galactagogue, Aphrodisiac and Antispasmodic.*

Uses : Leaves and tubers of this climbing shrub possesses medicinal propery. Leaves boiled and mixed with ghee are applied externally to promote suppuration in boils and tumours. Root boiled in oil is used in cutaneous affections. The tuber is demulcent and aphrodisiac. The infusion of the root prevents confluency of small pox.

The paste made out of this with vinegar is useful in skin ailments. Tuber extract with ghee and long pepper if consumed regularly it increases sexual activity. This cures phlegmatic and febrile temperature. The powder made out of this cures liver disorders, testicle disorders, fever, diabetes and piles.

The tuber is anti-diuretic and it is an ideal medicine for diabetes. The decoction of the tuber (100ml) if taken regularly for 21 days gives relief in diabetes. This is also effective in biliousness, gonorrhoea, tuberculosis and chronic fever etc.

இக்கொடியின் இலையும் கிழங்கும் மருத்துவப் பயனுடையது. இனிப்புச் சுவையுடையது. இது உடலை உரமாக்கும், தாய்ப் பாலைச் சுரக்கச் செய்யும், காமம் அதிகரிக்கும், இசிவுகளைப் போக்கும்.

இதன் கிழங்கே தண்ணீர் விட்டான் கிழங்கு எனப்படும். இக்கிழங்கை அரைத்து பாலுடன் கலந்து அருந்த பித்தம் குறையும். இலைகளைக் கொதிக்க வைத்து நெய் சேர்த்து கட்டிகளுக்கு வைத்து கட்ட குணமாகும். இது வெண்ணிறமாகவும் நீளமாகவும் இருக்கும். நசுக்கி நீரிலிட்டு குடிக்க அம்மையைத் தடுக்கும். உடம்பின் வெப்பு நீக்கி, வெள்ளையை நிறுத்தும்.

இதை காடியோடு சேர்த்து சரும நோய்களுக்கும் உபயோகிக் கலாம். இக்கிழங்குச் சாற்றை நெய் கூட்டிக் கிருதமாகச் செய்து தேன், திப்பிலி கூட்டி உண்ண இந்திரியத்தைக் தடிப்பாகப் போகச் செய்து சக்தியுண்டாக்கும். கபத்தையும்,சூட்டையும் குணப்படுத்தும். இதன் சூரணம் ஈரல், குண்டிக்காய் நோய்களையும்,அஸ்திகாய்ச்சல், பிரமேகம், மூலம் இவைகளையும் போக்கும். இக்கிழங்கு வெகு மூத் திரத்தைப் போக்கும்.

இது நீரிழிவு நோய்க்கு நல்ல மருந்தாகும். இதன் கஷாயம் வெள்ளை வெட்டை தொந்தரவுகளை விலக்கும். ரத்த பித்தம், எலும்புருக்கி நோய், நாள்பட்ட காய்ச்சல் ஆகிய பிணிகளையும் குணமாக்கும்.

கிழங்கின் கஷாயத்தை 100மிலி அளவு தொடர்ந்து 21 நாட்கள் காலையும் மாலையும் அருந்த நீரிழிவு நோய் குணமாகும்.

* * *

## சந்தனம்

## Santalum album

**(N. O. Santalaceae)**

*Habit* ; *All every green tree*

*Parts used* : *Wood*

*Constituents* : *Essential oil.*

*Action* : *Wood is Bitter,Cooling, Sedative and Astringent. Oil is Astringent and Disinfectant to the mucous memberances of the genitourinary and bronchial tracts also Diuretic, Expectorant and Stimulant.*

Uses : The wood of the plant is used in many ways. The infusion made out of the powdered wood cures indigestion, fever and palpitation. The wood paste made with juice is effective in treating itches, eczema, herpes, ringworm and other minor skin ailments. This is also used as an external application with honey to treat headache. The water of the sandal wood paste along with rose water, honey and sugar if taken internally will give relief in flatulance, dysentery, febrile temperature, thirstyness etc., The sandal wood paste mixed with milk is effective in gonorrhoea. The infusion with sugar candy and rosewater, if taken internally will cure prolapse of the anus, diabetes and fever. Sandal wood oil cures gonorrhoea.

இம்மரத்தின் கட்டை பலவிதங்களில் பயன்படுகிறது. சந்தனக் கட்டையைப் பொடி செய்து காய்ச்சிய குடிநீர், மாந்தம், சுரங்கள், மார்புத் துடிப்பு இவைகளைப் போக்கும்.

கட்டையை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, நமைச்சல், சொறி, சிரங்கு, அக்கி, படர்தாமரை, தேமல், வீக்கம் இவைகளுக்கு மேற்பூச்சாக உபயோகிக்க குணமாகும். மேலும் தலைவலி, புருவத்தின் வலிக்கு தேனிலரைத்து தடவலாம்.

சந்தன அரைப்பைக் கலக்கித் தெளிந்த நீர், தண்டுல நீர், தேன், சர்க்கரை கலந்து உட்கொள்ள வயிற்றுப் பொருமல், சீதக் கழிச்சல், வெப்பம், நீர் வேட்கை போன்றவை தணியும்.

சந்தனத்தூளை மைபோலரைத்துப் பாலில் கலந்து சீழ் வெள்ளைக்குக் கொடுக்கலாம். இதன் குடிநீருடன் கற்கண்டு கூட்டி காய்ச்சி வடிகட்டிக் கொண்டு பன்னீர் சேர்த்து உட்கொள்ள மூலச் சூடு, பிரமேகம், சுரம் தீரும். சந்தனத் தைலத்தினால் வெள்ளை, உட்சூடு தீரும்.

* * *

## சந்தனம்

**(செஞ் சந்தனம், சிகப்புச் சந்தனம்)**

## Pterocarpus santalinus

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Small tree*

*Parts used* : *Wood*

*Constituents* : *Santaline or Santalic acid, a crustalline red principle, santal pterocerpin, and pterostilbine.*

*Action* : *Mildly Astringent, Cooling. Tonic and Diaphoretic.*

Uses : This is an ideal medicine tor haemorrhoids and bleeding piles. This is a coolant and reduces oedema. The wood paste is useful in treating burning and irritant eyes. Then the paste is applied with honey it cures boils and feruncles.

இது இரத்த மூலம், இரத்தப்பெருக்கு ஆகியவற்றிற்கு மருந்தாகப் பயன்படுகிறது. இது குளிர்ச்சியை உண்டு பண்ணுவதால் வீக்கங்களுக்குத் தடவ குணமாகும். இதன் கட்டையை அரைத்து கண் நோய்களுக்கும், கண்ணெரிச்சலுக்கும் தடவ குணமாகும். இதை தேனுடன் சேர்த்து கொப்புளம், கட்டி போன்றவற்றிற்கு தடவ குணமாகும்.

* * *

## சந்தன வேம்பு

See Aquilaria agallocha

**(N. O. Thymeleaaceae)**

**(அகில் பார்க்க)**

* * *

## சந்திர காந்தி

Ipomoea bona-nox

**(N. O. Convolvulaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root*

*Action* : *Antibilious, Diuretic, Refrigerant, Antidote and Cooling.*

Uses : The root of this plant is of medicinal use. This cures anarexia, micturition, diseases and burning sensation.

It gives relief in painful condition of the naval and also found effective in snake bite.

இச்செடியின் வேர் மருத்துவப்பயனுடையது. இது நீரடைப்பு, நீர்எரிச்சல், நீர்க்கடுப்பு, பித்தஎரிச்சல், தொப்புள் வலி, பாம்புக்கடி போன்றவற்றிற்கு குணம் தரும்.

* * *

## சந்நி நாயகம்
### (காட்டு சீரகம்)

## Vernonia anthelmintica
### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds, leaves and root.*

*Constituents* : *Seeds contain resins, alkaloid known as vernonine*

*Action* : *Seeds are Anthelmintic, Stomachic, Tonic, Diuretic, Antiperiodic and Alterative. Oil extracted from the seeds is Diuretic and powerful Anthelmintic.*

Uses : The seeds are triangular in shape and black in colour. It is bitter in taste. It cures the disease due to excess chilness, fever, dryness of the mouth, arthritis, dyspepsia, ringworms etc. If taken internally it eradicates intestinal worms. This eradicates cutaneous affections. Erruption on the head of the children also could be cured. It is also found effective in headache, eye problems, eczema, flatulance, chest pain, cough, vomiting, oedema and jaundice.

இது முக்கோண வடிவமும், கருநிறமும் உடையது. இது சந்நி, சுரம், நாவரட்சி, வாதம், குன்மம், படர் தாமரை போன்ற நோய்களுக்கு குணம் தரும். மேலும் இதை உட்கொள்ள வயிற்றுப் பூச்சி, நாடாப்புழு வெளியாகும். சருமபுள்ளிகள் நீங்கும். சன்னிக்கு மிகவும் உதவும்.

மேலும் இது மண்டைக் கரப்பான், விரணம், சிராய்ப்பீநசம், உட்சூடு, தலை நோய், கண் நோய், சிரங்கு, வயிற்றுப் பொருமல்,

குன்மம், மார்பு வலி, இருமல், வாந்தி, ஓக்காளம், வீக்கம், காமாலை ஆகியவைகளும் இதனால் நீங்கும்.

* * *

## சப்தலை

**See : Herpestis monniera**

**(நீர் பிரம்மி, பிரம்மிய வழுக்கை)**

**நீர் பிரம்மி பார்க்க**

* * *

## சப்ஜா

**See : Ocimum basilicum**

**பார்க்க : திருநீற்றுப்பச்சை**

* * *

## சப்பாத்தி

**(நாக தாளி, பலகைக் கள்ளி)**

Opuntia dilleni

**(N. O. Cactaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Thick fleshy leaf like stem.*

*Constituents* : *It contains malate of manganese, a fluid fatty acid, citric acid, resinous matter and wax. Fruit contains albuminoids, fat and fibre.*

*Action* : *Refrigerant, Antibilious, Antibiotic, Mucilaginous and Diuretic*

Uses : This is prickly pear with a big bright yellow flower. The leaves and fruits are of medicinal use. The inner flashy part is useful in eliminating body heat. Inner part of the leaf without thorns are used as an healing agent for wounds. This also could be used in eye problems. Boiled and

squeezed juice of the fruit is used in treating cough and gonorrhoea. Potash is prepared from this plant. This plant reduces the severity of neuralgia, palsy and vegetable poison. This reduces bilious giddiness. The toddy taken from this plant is effective in treating diarrhoea. A type of cochineal insect which thrives on this cures cutaneous affection, tooth-ache, earache, rheumatism, burns etc.

இது முள் செடியாகும். பெரிய மஞ்சள் நிறப்பூக்களை உடையது. இதன் இலையும், பழமும் மருத்துவப் பயனுடையது. இதனுள்ளிருக்கும் சதைக்கு உஷ்ணத்தைப் போக்கி ஆயாசத்தைத் தீர்க்கும் குணமுண்டு. இலையிலுள்ள முட்களை சீவிப்போட்டு சிதைத்து புண்களின் மீது வைத்துக் கட்ட புண் உலரும். இதை கண்ணோய்களுக்கும் வைத்துக் கட்டலாம்.

பழத்தை வேகவைத்து பிழிந்த சாற்றை அல்லது பழரசத்தை மணப்பாகு செய்து தினம் இருவேளை சாப்பிட இருமல் நோயும், வெள்ளையும் தணியும். இதன் சாம்பலினின்று காரவுப்பு தயாரிப்பர். இச்செடி மாகாவாதம், தாவரவிஷம் போன்றவற்றின் வீரியத்தை தணிக்கும். பித்த மயக்கத்தை தீர்க்கும்.

இச்செடியிலிருந்து இறக்கப்பட்ட கள்ளு பேதியை கட்டுப்படுத்தும். இச்செடியில்தான் கிரிமிஞ்சிப்புழு எனப்படும் சப்பாத்திப்புழு வளரும். இது சரும நோய்களையும் பல்வலி, காது வலி, வாதவலி, தீப்புண் போன்றவற்றையும் குணப்படுத்தும்.

* * *

## சப்போட்டா

### Acras zapota

**(N. O. Sapotaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit*

*Constituents* : *Glucosides, Alkaloid and sapotin.*

*Action* : *Tonic, Febrifuge and Diuretic.*

Uses : The fruit is edible. Excess urine flow, anarexia and arthritis could be treated with this. Nodular rheumatism could be cured with this.

இம்மரத்தின் பழத்தை உண்ணலாம். இது சுவையுடையது; அதிமூத்திரம், ருசியின்மை, கபம், வாதம் நீக்கும். மேலும் இதனால் சோனித வாதம் குணப்படும். விதை சிறுநீர் பெருக்கியாகும்.

* * *

## சம்பங்கி

**(இலை சம்பங்கி)**

**See : Michelia champaca**

* * *

## சம்பங்கி

**(செடி சம்பங்கி)**

## Cananga odorata

**(N. O. Annonaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Flowers*

*Constituents* : *Flowers contain an aromatic oil.*

*Action* : *Analgesic and Anti-rheumatic.*

Uses : Flowers are greenish yellow in colour. Aromatic oil is extracted from its flower. This is used to treat disorders of the eyes, heavyness of the head, headache and rheumatism.

இது மரசம்பங்கி என்றும் கூறப்படுகிறது. இதன் பூவிலிருந்து வாசனை நீர் வடிப்பர். மேலும் எண்ணெய் எடுக்கலாம்:

இது கண் பற்றிய நோய்கள், தலை பாரம், தலைவலி, வாத வலி போன்றவற்றிற்கு குணம் தரும்.

* * *

## சம்பங்கி

(நில சம்பங்கி)

## Polianthes tuberosa

(N. O. Amaryllidaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Flowers.*

*Constituents* : *An essential oil.*

*Action* : *Flowers are Diuretic, Emetic, Depurative and Aromatic.*

Uses : The flowers are white in colour. It increases the urine and induces vomiting. The tuber of this plant is used to treat gonorrhoea, dysuria and burning sensation during micturition.

வெள்ளை நிற பூக்களையுடையது. இப்பூ சிறுநீரைப் பெருக்குவதுடன் வாந்தியை உண்டாக்கும். இச்செடியின் கிழங்கு வெள்ளை நோய், நீர்கடுப்பு, நீர்தாரை எரிச்சல் போன்றவற்றிற்கு குணம் தரும்.

* * *

## சம்பங்கி

(காட்டு சம்பங்கி)

See : Pittosporum floribundum

நஞ்சுண்டை பார்க்க

* * *

## சர்பகந்தி

(சர்பகந்தா, சிவன் மேல் பொடி, பாம்புகளா)

## Rauwolfia serpentina

(N. O. Apocyanaceae)

*Habit* : *Climbing shrub*

*Parts used* : *Root*

*Constituents* : *Root contains an alkaloid "Ophioxylin", resin and wax*

*Action* : *Root is a Bitter, Tonic, Febrifuge, Stimulant, Sedative and Hypnotic.*

Uses : The leaves of this plant is used to treat eye disorders. The root is of high medicinal value. It helps for pain free labour (child birth). It reduces hypertension and induces sleep. This is also said to cure many types of haematological disorders. This is also found to be effective in treating inflammation of the uterus, fever, stomachache and snake bite etc.

இச்செடியின் இலையானது கண்பற்றிய நோய்களை குணப்படுத்தும். இதன் வேர் பல மருத்துவ குணங்களையுடையது. இது சுகப் பிரசவம் உண்டாக்கும். இது இரத்தக் கொதிப்பைக் குறைக்கும். இதற்கு அமைதியை உண்டாக்கி தூக்கத்தை எழுப்பும் குணமுண்டு. இது இரத்த தோஷத்தின் தடையினால் ஏற்படும் மயக்கத்தைப் போக்கி குணம் ஏற்படுத்தும்.

மேலும் இது கர்ப்பப்பை வீக்கம், தூக்கமின்மை, சுரம், வயிற்று வலி, பாம்பு விஷம் போன்றவற்றை குணப்படுத்தும். சர்ப கந்தா செடியை மூலப்பொருளாகக் கொண்டு பல இரத்தக் கொதிப்பை அடக்கும் மருந்துகள் தயாரிக்கப்படுகின்றன. இதுவும் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் மூலிகையாகும்.

* * *

## சல்லாத்துக் கீரை

### Lactuca sativa

**(N. O· Compositae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves.*

*Constituents* : *Lactucarium, vitamins and iron.*

*Action* : *Refrigerant, Sedative, Diuretic and Laxative.*

Uses : This is a small tree. The bark is bitter, tonic and of many medicinal value. This reduces the excess body heat and cools the system. It contain iron in abundance. This cures anurisis and burning sensation. This gives flavour and taste to the food. If taken regularly constipation could be cured.

இது ஒருவகை சீமைக் கீரை. இதற்கு தமிழில் கச்சு எனவும் பெயர். இது தேக உஷ்ணத்தைப் போக்கி குளிர்ச்சியைத் தரும். இதில் இரும்புச்சத்து அதிகமுள்ளது. இது நீர்ச்சிக்கல், நீரடைப்பு, நீர் எரிச்சல் போன்றவற்றிற்கு குணம் தரும். உணவுக்கு ருசி தரும். தொடர்ந்து உட்கொள்ள மலச்சிக்கல் தீரும்.

* * *

## சவுரி

**See : Trichosanthes palmata**

**குறட்டை பார்க்கவும்**

* * *

## சவுக்கு

### Casuarina equisetifolia

**(N. O. Casuarinaceae)**

*Habit* : *Shrub or small tree*
*Parts used* : *Bark*
*Constituents* : *Casuarine*
*Action* : *Astringent, Tonic and Anti-dysenteric.*

Uses : This is a small tree. The bark is bitter, tonic and of many medicinal value. The decoction of the root cures dysentery and diarrhoea.

இது சிறு மரமாகும். இதன் பட்டை மருத்துவப் பயனுடையது. இது கைப்புச் சுவையுடையது. உடலை உரமாக்கும். இதன் பட்டைக் கஷாயம் சீதபேதி, பேதி ஆகியவற்றை நிறுத்தும்.

* * *

## சவுக்கு

**(சிறு சவுக்கு)**

### Tamarix gallica

**(N. O. Tamaricaceae)**

*Habit* : *Tree*
*Parts used* : *Galls.*

*Constituents* : *Galls yield tannic acid. Manna contains cane-sugar, invent sugar, dextrin and water.*

*Action* : *Astringent, Laxative, Aperient, Expectorant and Detergent.*

Uses : The branches of the tree possesses small tuberculatous galls which are produced by puncture by insects. These are globular in shape and have a bitter astringent taste. Galls are used in pharma copoeial preparations. The decoction made out of its bark or galls cure dysentery and cholera. It is also effective in treating ulcers of the anus.

இம்மரக் கிளைகளில் உருண்டையான பூச்சிகளின் செயலால் ஏற்படும் கரணை வளர்ச்சி காணப்படும். இது பல மருந்து தயாரிப்புகளில் பயன்படுகிறது. இதன் பட்டை அல்லது கரணையினால் செய்யப்பட்ட கஷாயம் பேதி, சீதபேதி போன்றவற்றை குணப்படுத்தும். மேலும் இது மூலநோயினால் வரும் புண், ஆசனவாயில் உண்டாகும் புண்களை குணப்படுத்தும்.

* * *

## சன்ன ராஷ்டகம்

**(சந்த ராஷ்டம், சித்தரத்தை)**

**See : Alpinia galanga**

**அரத்தை பார்க்க**

* * *

## சாணாக்கிப் பூண்டு

**(சாணாக்கிக் கீரை, சீதேவிப் பூண்டு)**

## Ocimum polystachyum

**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves.*

*Constituents* : *Salad basil.*

*Action* : *Expectorant, Diuretic, Vermifuge, Diaphoretic, Laxative and Vulnerary.*

Uses : The leaves are used in medicinal preparations and also used as vegetable. If it is consumed regularly as vegetable, it cures phlegm, indigestion, abdominal dropsy and ascites due to the disease of liver and spleen. This also cures chronic wounds, ulcers infected by worms and enlargement of the liver.

சாணாக்கிப் பூண்டின் இலைகள் மருத்துவப் பயனுடையதாகும். இதனை கீரை உணவாகப் பயன்படுத்துவர். இக்கீரையை சமைத்துண்ண கபம், மாந்தம், சுழிக்கணம், பெருவயிறு புழு நெளி கின்ற புண் ஆகியவற்றைப் போக்கும். மகோதரத்திற்கும் அக்கினி மாந்தத்திற்கும் குணம் தரும்.

* * *

## சாதிக்காய்
### (ஜாதிக்காய்)

## Myristica officinalis
### (N. O. Myristicaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit.*

*Constituents* : *Toxic, Nutmeg oil and an essential oil.*

*Action* : *Stimulant, Carminative, Narcotic, Aphrodisiac, Tonic and Aromatic.*

Uses : This is an aromatic fruit. The other portion which forms the kernel of the fruit is yellowish and the seed is within this. Over the seed there is a coated aromatic veins known as 'mace'. The fruit is effective in flatulence and colic. This is used as an ingredient in many medicinal preparations. If mixed with alcohol and consumed, it fexpells the intestinal gas, but it intoxicates. The oil of the ruit cures ulcers, wounds, paralysis and sprain etc., if it is used as an external application. If taken internally, it cures cough, rheumatism, wheezing, headache, spermetorhoea etc. The oil could be given internally to check diarrhoea and dysentery. Mixture of this with sandal, camphor, cardamom, cloves and plumbago root are powdered and if taken internally cures

stomachache, cough, migrane, menorrhagia, dysmenorrhoea, rheumatic pain etc., The decoction of the fruit checks cholera. To refresh the eyes, the paste of this could be used as an external application around the eyes.

சாதிக்காய் ஓர் வாசனையுள்ளகாய். மேலே பழுப்புநிறமாயும், சதைப் பற்றுள்ளதாயும் உட்பக்கம் காயுமிருக்கும். இது வாயுத் தொல்லைகளைப் போக்கி சுறுசுறுப்பை கொடுக்கும். மேல் தோல் ஊறுகாய் போடப் பயன்படும். இதை சாதிப் பத்திரி என்பர்.

இக்காய் வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அதிசார பேதி இவைகளுக்கு கொடுக்க குணமுண்டாகும். இதை அனேக மருந்து களுடன் சேர்ப்பார்கள். சாராயத்துடன் கலந்து அருந்த வாயுவைப் போக்கி மயக்கத்தைத் தரும். இதன் தைலம் நல்லெண்ணெயைப் போல சிவந்திருக்கும். இது இரணம், புண், காயம், பாரிச வாயு, சுளுக்கு முதலியவைகளை குணப்படுத்தவும், சூலை வாதம் இவைக ளுக்கு மேல்பூச்சாகவும், பல்வலிக்குப் போடவும் உதவுகிறது. மேலும் இதனை உட்கொள்ள இருமல், உஷ்ண வாதக் கிரகணி, இரைப்பு, தலை நோய், வாதம், அதிசாரம், விந்து நஷ்டம் முதலிய நோய்கள் குணமாகும். இந்த எண்ணெயை சீதபேதி, கழிச்சல், குன்மம் முதலியவைகளுக்கு உள்ளுக்குக் கொடுக்கலாம்.

சாதிக்காயை பொடித்து ஆவியிலவித்து சூட்டுடன் பிழிய எண்ணெய் வடியும். இது வாதப் பிணி, கீல்வாயு போன்றவற்றைப் போக்கும். மேலும் கழிச்சலும் நீங்கும்.

சாதிக்காய், சணல், சூடம், ஏலக்காய், கிராம்பு, சித்திரமூல வேர் இவைகளைப் பொடித்து உட்கொள்ள இருமல், வயிற்றுவலி, ஒற்றைத் தலைவலி, பெரும்பாடு, சூதகவலி, வாதவலி முதலியவை தீரும்.

இக்காயை கஷாயம் செய்து சாப்பிட வாந்தி பேதி நிற்கும். இதை அரைத்து கண்ணைச் சுற்றிப் பற்றிட கண் ஒளியடையும்.

* * *

## சாதிக்காய்

**(நாட்டு சாதிக்காய்)**

## Myristica malabarica

**(N. O. Myristicaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds and arillus.*

*Constituents : Seeds contains fat and the mace. In each case the fat is associated with red resin, an essential oil.*

Uses : This exhibits the same medicinal property as Myristica officinalis. This is also useful in treating nervous debility and gives strength.

சாதிக்காயின் குணங்களே நாட்டு சாதிக்காய்க்கும் உண்டு. இது வாதவலி, நரம்புத் தளர்ச்சி போன்றவற்றை நீக்கும். தாது வைப் பெருக்கும்.

* * *

## சாதிக்காய்
### (காட்டு சாதிக்காய்)

## Myristica laurifolia
### (N. O. Myristicaceae)

*Habit : Tree*

*Parts used : Fruit*

*Action : Local Stimulant.*

Uses : This elminates the gastric problems.

சாதிக்காயின் குணங்களே காட்டு சாதிக்காய்க்கும் உண்டு. மேலும் இது வாயுத் தொல்லைகளைப் போக்கும்.

* * *

## சாதி பத்திரி

## Myristica officinalis
### (N. O. Myristicaceae)

*Habit : Tree*

*Parts used : Dried seed, nutmeg, aril surrounding the seeds mace and wood.*

*Constituents : Mace contains an essential oil, a fixed oil, fat, sugar, resin and destrin.*

*Action* : *Mace is Carminative, Aphrodisiac, Aromatic, Carminative, Narcotic, Stomachic and Stimulant.*

Uses : It is a false aril or arillode investing the shell of the kernel. This is aromatic. This is golden yellow in colour. Oil is extracted from this. This checks gastric troubles and diarrhoea. This increases the semen secretion and it is used as one of the important constituents in electuaries. Fever, tuberculosis, chronic stomach ache are treated with this. This gives strength to uterus. The powder of this when inhaled relieves headache and epileptic fits.

This is also used in low stages of fever, inflammatory fever, chronic diarrhoea in consumption, asthma and chronic bowel complaints. When roasted it is used in cholera and obstruction of liver and spleen.

சாதிபத்திரி என்பது சாதிக்காயின் மேரில் கொடியைப் போல் படர்ந்துள்ள வாசனை வஸ்துவாகும். இது பழுப்பு அல்லது சிவந்த நிறமுடையது. இதிலிருந்து எண்ணெய் எடுப்பர். இது வயிற்று வாயுவை கண்டிக்கும். சலபேதி, பேதி நிற்கும். சுக்கிலத்தை விருத்தி செய்யும். இதனை லேகியங்களில் உபசரக்காகப் பயன்படுத்துவர்.

சாதிபத்திரியை அற்ப சுரம், அழற்சுரம், கிரகணி, சயம், காசம், நாட்பட்ட குடற் கோளாறு முதலிய நோய்களுக்கு கொடுக்க குணமாகும். இதை வறுத்து வாந்தி பேதிக் கழிச்சலுக்கும், கல்லீரல் மண்ணீரல் அடைப்புகளுக்கும் உபயோகப்படுத்தலாம்.

இதை உட்கொள்ள கருப்பை வலுக்கும். பொடித்து நசிய மிட தலைவலி, காக்கைவலிப்பை குணமாக்கும்.

* * *

## சாத்துக்குடி

## Citrus sinensis

### (N. O. Rutaceae)

*Habit* : *Small tree.*

*Parts used* : *Fruits.*

*Constituents* : *Fruits are rich in vitamin 'C'.*

*Action* : *Alterative, Cordial, Demulcent, Diuretic, Febrifuge and Restorative.*

Uses : This is a kind of sweet orange. The fruit juice is used mainly for canvalonsing patients.

சாத்துக்குடி ஓர் வகையான இனிப்புச் சுவையுடைய கிச்சலி யாகும். பல வைட்டமின் சத்துக்களையுடையது. இப்பழச்சாறு நெடுநாள் நோயிலிருந்தவர்களின் உடலை தேற்ற பயன்படும்.

* * *

## சாபரா

**(ஜாபரா விதை, சாப்பிரா விதை, குரகு மஞ்சள்)**

## Bixa orellana

**(N. O. Bixaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, seed-pulp and root-bark.*

*Constituents* : *Seeds contain a yellow colouring matter 'Bixin'.*

*Action* : *Pulp surrounding the seed is Astringent. Seeds and root are Cordial, Aphrodisiac, Astringent and Febrifuge. Root-bark is Antiperiodic and Antipyretic. Fruit is Astringent and Purgative.*

Uses : The seeds are slightly astringent and a good remedy for gonorrhoea. Decoction of root bark is a substitute for quinine and other alkaloids of cinchona as antiperiodic.

காமாலை, வெள்ளை நோய்களை குணப்படுத்துவதற்கு சாப்ரா பயன்படுகிறது. இதிலிருந்து சாயமெடுப்பர். வேர்பட்டைக் கஷாயம் சுரப்பிட்டைக்கு மாற்று மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## சாமந்திப் பூ
### (செவ்வந்திப் பூ)

## Chrysanthemum indicum
### (N. O. Compositae)

*Habit* : *Herb.*

*Parts used* : *Flowers and root.*

*Constituents* : *Essential oil, glucoside and chrysanthemin.*

*Action* : *Laxative, Stimulant, Carminative and Tonic.*

Uses : There are three types of flowers, yellow, white and blue. The root and flowers are of medicinal value. The root of this when chewed give tingling sensation to the tongue. Pepper is mixed with this plant extract and made into a decoction.This decoction is used to treat gonorrhoea. This relieves giddiness and refresh the eyes. This helps the eye lashes to grow well. This improves intelligence. Ammenorrhoea, neurasthenia could be treated with this. Oil is extracted from its flower. This oil is used in rheumatoid arthritis, sprain and nervous pain.

இதனை செவ்வந்திப்பூ அல்லது சிவந்திப்பூ என்றும் கூறுவர். இது மஞ்சள், வெள்ளை, நீலம் என்ற மூன்று நிறங்களில் காணப் படுகிறது. இதன் வேரும் பூவும் மருத்துவ குணமுடையவையாகும்.

இதன் வேரை மெல்ல விறுவிறுப்புண்டாகும். இதை மிளகோடு சேர்த்துக் கஷாயமிட்டுக் கொடுக்க மேகவெள்ளை குணமாகும்.

இச்செடி, தலைச்சுற்றல், மயக்கம் நீக்குவதுடன் கண்ணுக்கு ஒளியுண்டாக்கும். கண் இரப்பை ரோமங்களை செழிக்கச் செய்யும். புத்தி தீட்சண்யம் தரும். சூதகக்கட்டு, சூதகசந்நி, குடைச்சல் முதலியவற்றைப் போக்கும்.

இதன் பூவிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். இது சுளுக்கு, கீல்வாதம், நரம்புவலி ஆகியவற்றிற்கு குணம் தரும்.

* * *

## சாமந்தி
### (சீமை சாமந்தி)

## Anthemis nobilis
### (N. O. Compositae)

*Habit* : *Herb.*

*Parts used* : *Flowers.*

*Constituents* : *Anthenine acid.*

*Action* : *Stimulant, Tonic and Stomachic.*

Uses : This is a rare plant. Oil is extracted from this. If taken internally it gives vigour, energy and relieves fits. The decoction of the flower improves digestion. It is carminative and promotes emetic action. This cures neurasthenia and ammenorrhoea. The oil is used to treat flatulance and dyspepsia. It also cures stomach ache due to dentition.

சீமை சாமந்தி கிடைப்பதரிது. இது பாரசீகத்திலிருந்து கொண்டுவந்ததால் பாரசீக சாமந்தி என்றும் கூறுவர். இதிலிருந்து எண்ணெய் எடுக்கப்படுகிறது. இதை உள்ளுக்குக் கொடுக்க சுறுசுறுப்பைத் தரும். வலிப்பைப் போக்கும். இதன் பூக்கஷாயம் உடம்பிற்கு பல விருத்தியையும், சீரண சக்தியையும், குமட்டலையும் உண்டாக்கும். மேலும் இது சூதகசன்னி, சூதகத்தடைக்கு குணம் தரும்.

எண்ணெய் குன்ம வாயு, வாயுவினால் ஏற்படும் வயிற்றுவலி முதலிய நோய்களுக்கு குணம் தகும்.

* * *

## சாமந்தி
### (துலுக்க சாமந்தி, மஞ்சள் பூ)

## Tagetes erecta
### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Flowers.*

*Constituents* : *A volatile oil.*

*Action* : *Acrid, Astringent and Vulnerary.*

Uses : This checks dysentery and diarrhoea. The extract is of foul smell but purifies blood. This is used to treat eye diseases. The leaves are used in treating carbuncles, chronic ulcer and ear ache. Yellow dye is made out of its flower.

துலுக்க சாமந்தியை துலுக்க மல்லிகை என்றும் கூறுவர். இது இரத்த பேதி, சீதபேதி ஆகியவற்றிற்கு குணம் தரும். பூ மஞ்சள் நிறமுடையது. இதன் சமூலம் கெட்ட நாற்றம் வீசும். ஆயினும் இரத்தத்தை சுத்தி செய்யும் குணம் வாய்ந்தது. கண்ணோய்க்கும் உபயோகப்படும்.

இதன் இலை பிளவு, ஆறாத ரணம், காதுவலி ஆகியவற்றை குணப்படுத்தும். இதன் பூவிலிருந்து மஞ்சள் சாயம் தயாரிக்கலாம்.

* * *

## சாமந்தி

**(துலுக்க சாமந்தி, சிகப்பு பூ)**

## Tagetes patula

**(N. O. Compositae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Flowers.*

*Constituents* : *Yellow dye is manufactured from the flowers.*

*Action* : *Similar to T. erecta.*

Uses : This exhibits the same medicinal property of Tageta erecta. Oil is extracted from this.

மஞ்சள்பூ செடியின் குணங்களே சிகப்பு செடிக்கும் உள்ளது. இதிலிருந்து தைலம் எடுப்பர்.

* * *

## சாமை
(சிறு சாமை)

## Panicum miliare
(N. O. Gramineae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Rich in proteins and carbohydrates.*

*Action* : *Alterative, Demulcent, Tonic and Cholagogue.*

Uses : This is the quickest growing of all millets. Red millet and wild millet are the two varieties. This could be consumed as gruel or rice. The gruel is effective in bilious disorders and diarrhoea. This could be easily assimilated and digested. This is also found effective in rheumatism. Cooked millets gives relief in phlegmatic diseases.

சிறு சாமை மற்ற தானியங்களைவிட சீக்கிரம் முளைக்கும் புல் இனமாகும். இதில் சிவப்பு சாமை, காட்டு சாமை என இருவகை உண்டு. கஞ்சியாகவும், சாதமாகவும் இதனை சாப்பிடலாம். சாமைக்கஞ்சி கழிச்சலையும், பித்த தொல்லைகளையும் குறைக்கும். மிகவும் எளிதான முறையில் ஜீரண பாதையில் செரிமானமாவதால் இதற்கு எல்லாத் தரப்பு மக்களிடையேயும் வரவேற்பு உள்ளது. சாமைச் சோறு கோழையையும், கபத்தையும், வாத நோயையும் நீக்கும்.

* * *

## சாம்பிராணி
(பெண்குமைஞ்சான், மலாக்காச் சாம்பிராணி)

## Styrax benzoin
(N. O. Styraceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Gum flowing from the incised stem-bark*

*Constituents* : *Benzoin contains three resins, benzoic acid, cinnamic acid, vanillin acid and a volatile oil.*

*Action* : *Stimulant, Expectorant, Antiphlogistic, Aromatic, Carminative and Anti-hydriatic.*

Uses : This is a resin secreted from the incised bark of the tree. This is aromatic and acrid in taste. This contains Benzoic acid. The oil extracted from the resin is a remedy for cold and headache. Ointment is also prepared further by mixing pigs fat in 1:4 ratio. This is useful as a healing agent for wounds, ulcers, rheumatic infections, swelling etc. Benzoic acid is obtained from the resin by sublimation. This is white and occurs in the form of needle with an agreeable odour like benzoin. This could be dissolved in alcohol. This is more effective than benzoin. This has penetrating property, so it is very useful in arthritis and rheumatic complaints as an ointment. Diluted in water, this is used to clean sores and ulcers.

மரப்பட்டையிலிருந்து வடிந்து உலர்ந்துப் போன ஒருவித நறுமணமும் கார்ப்பும் உள்ள பிசினே சாம்பிராணி எனப்படுகிறது. இதனை வெட்டிப் பார்த்தால் சிறு மணிகளைப் போலத் தோன்றும். இதில் பென்சாயிக் ஆசிட் என்கிற அமிலச் சத்து இருக்கிறது. இதிலிருந்து ஆக்கப்படும் தைலம் தலைவலி, ஜலதோஷம் இவைகளைப் போக்கும்.

சாம்பிராணித் தூளையும், பன்றிக் கொழுப்பையும் 1:4 என்கிற விகிதத்தில் கலந்துஉருக்கி வடிகட்டி புண்களுக்குமேல்மருந்தாகப் பாவிக்கலாம். சாம்பிராணியிலிருந்து பதங்கம் தயாரிக்கலாம். இப்பதங்கம் வெண்ணிறமாக சிறிய கம்பிகளாய் இருக்கும். இதற்கு நல்ல மணமுண்டு. நீரில் அதிகமாக கரையாது. சாராயத்தில் கரையும். காற்றினால் கெடாது. சாம்பிராணியை விட பதங்கம் மிகக் காரமுள்ளது. ஊடுருவிப்பாயும் தன்மையும் உள்ளதால் இதனைக் கொண்டு மூட்டுவாத நோய்களில் களிம்பு தயாரிப்பார். இக்களிம்பு மூட்டுவாத நோயில் மிகமென்மையாக செயல்பட்டு வாத நோயை நீக்கி குணமளிக்கும். சாம்பிராணி பதங்கத்தை புண் கழுவவும் பயன்படுத்தலாம்.

* * *

## சாம்பிராணி

**(பரங்கி சாம்பிராணி)**

## Boswellia glabra

**(N. O. Burseraceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Gum, resin and oil.*

*Constituents* : *Oil is extracted from the gum or resin.*

*Action* : *Resin is of a bitter balsamic odour, when burnt used as Astringent, Refrigerent, Diuretic, Aromatic, Demulcent, Aperient, Alterative, Emmenagogue and Ecbolic. Oil called 'Olibene' is Stimulant.*

Uses : This is yellowish and glittering. The smoke of this is aromatic. The taste is bitter, but it increases sweating and gives energy. This also cures rheumatism and nervous disorders.

பரங்கி சாம்பிராணியே பால் சர்ம்பிராணி என்று கூறப்படுகிறது. இது ஓர் மரத்தின் பால். இது பளபளப்பாயும் மஞ்சளாகவும் இருக்கும். இதன் புகை மிக்க வாசனை தரும். துவர்ப்புடைய இது வியர்வையையும் உற்சாகத்தையுமுண்டாக்கும். இது வாத நோய், நரம்பு பற்றிய நோய்கள் போன்றவற்றிற்கு குணம் தரும்.

* * *

## சாயமரம்

## Caesalpinia sappan

**(N. O. Caesalpiniaceae)**

*Habit* : *Thorny tree*

*Parts used* : *Wood*

*Constituents* : *Red colouring matter sappan acid, gallic and tannic acids. Brastlin phallandrene dye is manufactured.*

*Action* : *Wood is a powerful Astringent, Emmenagogue, Febrifuge, Tonic, Haemostatic, Antirheumatic and Antisyphilitic.*

Uses : The bark of this tree exhibits medicinal value. This checks chronic dysentery, diarrhoea and haemorrhoids, when used as decoction. The infusion of the powdered root bark is mixed with Cinnamon and the filtered water could be used as medicine to check dysentery and diarrhoea. The hot infusion stops the bleeding due to menorrhagia, uterous cancer and reduces pain.

சாயமரத்தின் பட்டை மருத்துவப் பயனுடையது. இதை நாட்பட்ட கழிச்சல், சுரம், சீதபேதி, குருதிப்பெருக்கு முதலிய நோய்களுக்குக் கொடுக்க குணம் தெரியும்.

சாயமரத்தின்வேர்ப்பட்டைத் தூளை நீரிலிட்டு ஊறப் போட்டு குடிநீர் செய்து கருவாப்பட்டை சேர்த்து குளிர்ந்த பிறகு வடிகட்டி, தினம் சாப்பிட சீதபேதி, சுரம் போன்ற நோய்கள் குணமாகும்.

இதன் சூடான குடிநீரை உட்கொள்ள பெரும்பாடு, சூதகப் புற்று இவைகளாலுண்டாகும் குருதிப் பெருக்கை அடக்கும். வலி குறையும்.

* * *

## சாரணை

**(சத்தி சாரணை, சாரு வேளை, சாரடை)**

## Trianthema decandra

**(N. O. Ficoidaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and root.*

*Action* : *Alterative, Expectorant, Laxative, Diuretic, Emmenagogue, Cardiac and Stimulant.*

Uses : The seeds are black in colour and the root is bitter in taste. The powder of seeds along with ginger loosen the stools and acts as laxative. The leaves and tender leaves are used as vegetables in cooking. This gives relief in boils, piles, cataract, chest pain, wheezing etc. The root is used for cold, allergy, dyspepsia, ulcers, gonorrhoea, cough etc. An

infusion made out of this root along with salt, myrobylans and dried ginger cures eczema and oedema. The paste made out of this root with milk is an ideal application to reduce the inflammation and oedema of the testicles. Infusion made out of the root and dried ginger is a good digestive agent. If the root is consumed for 80 days regularly it reduces all the types of rheumatic complaints,fever, fever due to the swelling of lymph glands, constipation, anurisis, dyspepsia etc. The dossage should be started with a small quantity in the begining which increases daily for the first 40 days. Then the dossage should be tappered down for the next 40 days.

சாரணையின் விதைகள் கரும்புநிறத்துடனிருக்கும். வேர் கசப்புச் சுவையுடையது. இதன் சூரணத்தை இஞ்சியோடு கலந்து உள்ளுக்குக் கொடுக்க பேதியாகும். மலக்கட்டு நீங்கும். இதன் இலையையும், கொழுந்தையும் கீரையாக உபயோகப் படுத்துவர்.

கட்டி, மூலவாயு, கண்படலம், மார்புநோய் இரைப்பு நோய் ஆகியவற்றிற்கு இதன் இலை மருந்தாகப் பயன்படுகிறது.

இதன் வேரானது நீரேற்றம், தடிப்பு, தேமல், குன்மம், சிறு சிறங்கு, வெள்ளை, இருமல் ஆகியவை போக்கும். இத்துடன் உப்பு, கடுக்காய், சுக்கு ஆகிய நான்கையும் கலந்து குடிநீரிலிட்டுக் குடிக்க கரப்பானும், வீக்கமும் விரைவில் தீரும்.

வேரை பாலில் அரைத்து தினம் காலையில் உட்கொள்ள விரை வீக்கம் குணமாகும். வேருடன் சமஅளவு சுக்கு சேர்த்து குடிநீர் செய்து அருந்த மந்தம் நீங்கும்.

இதன் சமூலம் பல மருத்துவகுணங்களை உடையது. இலைச் சாற்றை மூக்கிற் பிழிய நீரேற்றம், ஒற்றைத் தலைவலி நீங்கும். உள்ளுக்குச் சாப்பிட காமாலை, வீக்கம், குன்மம், வயிற்றுளைச்சல் இவைகள் நீங்கும். கண்ணில் விட கண்ணோய்கள் குணமாகும். இதன் சாரத்தால் பசி அதிகரிப்பதுடன் குருதி, அழல்களால் விளையும் தீங்குகள் விலகும். இதன் இலையை மேற்கண்ட நோய் நீங்க நெய்யில் வறுத்து தினம் சாப்பிட வேண்டும். இதன் இலைச்சாற்றுடன் சம அளவு எண்ணெய் கூட்டி காய்ச்சி பூசிவர கீல் வாயுகள் நீங்கும். இலைச்சாற்றை பாலுடன் அருந்த நீர்க்கட்டை உடைத்து உடனே நீரை வெளியேற்றும்.

முதிர்ந்தவேரை தொடர்ந்து எண்பது நாட்கள் உட்கொள்ள எல்லாவித வாதரோகங்களும், சுரங்களும், நெறிக்கட்டி சுரமும், மலக்கட்டு, நீர்க்கட்டு, குன்மம் முதலியனவும் தீரும். இதை முதலில்

சிறிதளவில் தொடங்கி நாள்தோறும் அளவை உயர்த்தி 40 நாள் உட்கொள்ள வேண்டும். 41ஆம் நாளிலிருந்து குறைத்துக் கொண்டே வந்து 80ஆவது நாள் நிறுத்திவிட வேண்டும்.

* * *

## சாரணை
(சிறு சாரணை)

## Trianthema tirquetra or T. obcordata
**(N. O. Ficoidaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and root.*

*Action* : *Expectorant, Laxative and Diuretic.*

Uses : The tuber of this plant is effective in paralysis. This exhibits the same medicinal property as Trianthema decandra. The mashed root mixed with long pepper is an ideal external application for all types of haemorrhoids.

சிறு சாரணை ஒரு காயசித்தி மூலிகையாகும். இதன் கிழங்கானது திமிர்வாதம், விரைவாதம் நீக்கும். சத்திச் சாரணைக்குள்ள குணமும் இதற்குண்டு. இதன் வேரை இடித்து திப்பிலி சேர்த்து இரத்தக்கட்டு வீக்கத்திற்குப் போட வீக்கம் கரையும்.

* * *

## சாரணை
(சிகப்பு சாரணை)

## Trianthema monogyna
**(N. O. Ficoidaceae)**

Uses : This also exhibits the same properties of other Trianthema decandra.

சத்தி சாரணையின் எல்லா குணங்களும் சிகப்பு சாரணைக்கும் உண்டு.

* * *

## சார பருப்பு

(சாரை பருப்பு, முடமா பருப்பு)

## Buchanania lanzan

**(N. O. Anacardiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds.*

*Constituents* : *Albuminoids and mucilage. Edible seeds furnish cheroonjee oil.*

*Action* : *Diuretic, Refrigerant, Laxative and Sedative.*

Uses : This is the seed of wild mango. This gives strength for the body and it is used in 'Lehyams'. If it is consumed regularly along with cow's milk,it gives strength and energy. Dysuria, and burning sensation could be treated with this. This is also employed in anti-diabetic preparations. This increases the quantity of semen.

சார பருப்பு என்பது காட்டு மாங்காயின் விதையாகும். இப்பருப்பு உடலிற்கு பலத்தை கொடுக்கும் இது பல லேகியங்களில் சேர்க்கப்படுகிறது. இதைத் தொடர்ந்து பசும்பாலிலிட்டு அரைத்து சாப்பிட உடலுக்கு பலம் தரும். இதனால் நீர்ச்சுருக்கம், நீர்க்கடுப்பு நீங்கும். வெண்ணீர் இறுகும். மேலும் இது பிரமேகம் நீக்கும் சுக்கிலத்தை விருத்தி செய்யும்.

* * *

## சாலா மிசிரி

## Orchis mascula

**(N. O. Orchidaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Bulbous root or tuber.*

*Constituents* : *Tubers contain a glucoside, albumen and a trace of oil. Ash contains phosphates, chlorides pottassium and lime.*

*Action* : *Stimulant, Refrigerent, Laxative, Nervine, Tonic, Aprodisiac, and Diuretic.*

Uses : This bulb and the root of salap used commonly in 'Lehyams'. This improves the health. The powdered bulb root made to a gruel reduces the salt contents in urine and gives strength and vitality. Nervous debility could be cured by this bulb. This is commonly used in all healty tonics.

சாலா மிசிரி என்பது ஓர் செடியின் கிழங்காகும். இலேகியங்களில் அதிகமாக பயன்படுகிறது. இது தாது விருத்திக்கும், உடம்பை போஷிப்பதற்கும் பயன்படுகிறது. இக்கிழங்கை பொடித்துக் கஞ்சி செய்து சாப்பிட உடல் வலுப்பதுடன் சிறுநீரில் உள்ள உப்பு சத்து மிகுதியைக் குறைக்கும். நரம்புத் தளர்ச்சி, பலவீனம் நீக்கும். ஆண்மையைப் பெருக்கும். பொதுவாக இதனை தாது விருத்திக்காக செய்யப்படும் எல்லா மருந்துகளிலும் சேர்ப்பார்கள்.

* * *

## சால் முகுரா

## Hydnocarpus wightiana

### (N. O. Flacourtiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Root*

*Constituents* : *Oil is extracted from the kernel of the seeds which contains an active principle known as gynocardiac acid.*

*Action* : *Alterative, Stimulant and Parasiticide.*

Uses : It is a large evergreen tree. Oil is extracted from the kernel of the seeds. According to Ayurveda and Siddha there are 18 varieties of leprosy of which some of them are regarded as psoriasis, eczema, ulcers etc. The active principle of this oil is gynocardiac acid and this should not be confounded with tuvaraka oil (Hydnocarpus venenata or H. kurzil).

Oil is extracted from the kernel and is reddish in colour. This is employed for all the forms of leprosy, it is highly

useful in cases of tubercula anasthetic and mixed leprosy.

This oil is mixed with margosa oil or oil of pongamia glabra etc. It is applied to cure leprosy, eczema and syphillis. It is administered with great advantage in scorfula, chronic rheumatism psoriasis and other cutaneous affections.

இம்மரத்தின் விதை எண்ணெய் பல மருத்துவப் பயன்களை உடையது. ஆயுர்வேதம், சித்த மருத்துவம் ஆகியவற்றில் குட்ட நோய் 18 வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றில் சில கரப் பான், ஆணை சொறி முதலியனவாகும். இந்த எண்ணெயின் குணங்களே நீரடிமுத்து எண்ணெய்க்கும் உண்டு. இது கிடைக்காத சமயங்களில் துவரக்காய் எண்ணெயைப் பயன்படுத்தலாம்.

சால்முகுரா விதையிலிருந்து எடுக்கும் எண்ணெய் சால்முகுரா எண்ணெய் எனப்படும். இவ்வெண்ணெய் சிவந்த நிறத்துடன் காணப்படும். இது புளிப்புச்சத்துடையது. இது எல்லாவித குட்ட நோய்களுக்கும் பயன்படும். இதை வேப்பெண்ணெய் அல்லது புங்கெண்ணெயோடு கலந்து வாதப் பிடிப்பு, கண்டமாலை, சரும நோய் இவைகளுக்கு உள்ளுக்குக் கொடுக்க குணமேற்படும். இருந் தாலும் உள்ளுக்குக் கொடுக்கும் மருந்துகளை விட மேற்பூச்சு மருந்துகளிலேயே இது பெரிதும் பயன்படுகிறது. குறிப்பாக சோரியாஸிஸ் (ஆணைசொறி) எனப்படும் சரும நோயில் இது சிறப்பாக செயல்பட்டு பிணியை நீக்கும். இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் மருந்து எண்ணெய்களில் இதுவும் ஒன்று.

* * *

## சிக்கரி

## Cichorium endivia

### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Root*

*Constituents* : *Bitter substant*

*Action* : *Resolvent and Cooling.*

Uses : The fried and powdered root of this plant is mixed with coffee powder. This does not have much medicinal properties. It is used in bilious complaints.

இச்செடியின் வேரை காய வைத்து வறுத்துப் பொடித்து காப்பித் தூளுடன் கலந்து உபயோகிப்பர். இதன் மருத்துவப்பயன் பெரிதாக இல்லை. இது பித்த நோய்களை குணப்படுத்தும்.

* * *

## சிங்காரக் கொட்டை

**See : Trapa bispinosa**

**பன்னிமோந்தான் கிழங்கு பார்க்க**

* * *

## சித்த கத்தி

**See : Sesbania aegyptiaca**

**செம்பை பார்க்க**

* * *

## சித்ர மூலம்

**(வெண் கொடி வேலி)**

### Plumbago zeylanica

**(N. O. Plumbaginaceae)**

*Habit* — *Climber*

*Parts used* : *Root and leaves*

*Constituents* : *Root contains plumbagin. This is present in all varieties of plumbago species.*

*Action* : *Stimulant, Diaphoretic, Stomachic, Rubefacient, Anti-periodic, Abortifacient, Vesicant and Sialagogue. Plumbagin set up the irritation of the skin.*

Uses : There are three types of plumbago namely, black, red and white varieties. All the three exhibits same properties. These could be used in treating boils, ulcers,

tumours, rheumatism, bubos, anaemia, piles, cold and abdominal dropsy. Other diseases like rheumatic gout, herpes, venereal ulcers, fever due to the inflammation of lymphs also could be treated with this.

The root and root bark exhibits many medicinal properties. Herpes, leprosy, ringworm, ascites, arthritis, paralysis, and asthma could be treated with this. If taken in large quantity it aborts the pregnancy. This is also used in treating cancers. The mashed fresh root boiled in gingelly oil is used as hair tonic to get relief from migrane and cold. The oil extract of this plant is used in treating rheumatism, arthritis and hemiplegia.

இதை கொடி வேலி என்றும் கூறுவர். இதில் மூன்று வகை உள்ளது. கருங்கொடி வேலி, செங்கொடி வேலி, வெண் கொடி வேலி. இன்மூன்றின் குணமும் பெரும்பாலும் ஒன்றேயாகும். இதனால் கட்டி, புண், கழலை, வளிநோய்கள், அரையாப்புக்கட்டி, குத்தல், சோபை, மூலரோகம், உதிரக்கட்டு, நீரேற்றம், பெருவயிறு இவை போகும். மேலும் இதனால் சூலைக்கட்டு, குழிப்புண் கிரந்தி, மேகப்புண், நெறிசுரம், நச்சுச் சுரம் முதலியவை தீரும். இதிலிருந்து பிளம்பகோ என்கிற வெண் சத்தைப் பிரித்து எடுக்கிறார்கள்.

இதன் வேரும், வேர்ப்பட்டையும் பல மருத்துவ குணங்களை யுடையது. இது கிரந்தி, குஷ்டம், படர் தாமரை, மகோதரம், வாதம், பாரிசவாயு, ஆஸ்துமா ஆகியவற்றிற்கு குணமளிக்கும். இதை அதிகம் உட்கொள்ள கர்ப்பத்தை சிதைக்கும். புற்றுநோயை குணப்படுத்தும்.

இதன் பச்சை வேரை நசுக்கி எண்ணெயிலிட்டு காய்ச்சி அந்த எண்ணெயை தலைக்குத் தடவி தலைமுழுக நீர்ப்பீநசம், தும்மல், தீராத் தலைவலி இவைகள் தீரும்.

கொடி வேலித் தைலத்தை கீல்வாதம், பக்கவாதம் இவை கட்டுப் பூச குணமாகும்.

* * *

## சித்ர மூலம்
### (செங்கொடி வேலி)

## Plumbago rosea
### (N. O. Plumbaginaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Root and root bark.*

*Constituents* : *Root contains an acid crystalline principle, called 'Plumbagin'*

*Action* : *Alterative, Gastric Stimulant and Appetizer Locally it is Vesicant.*

Uses : The flower is pink in colour. The root gives tingling effect to the tongue. Owing to this vesicant or blistering properties the bruished root tempered with bland oil such as sessamum oil is used as a rubifacient in bubo and as an external application in rheumatic arthritis, swelling, gout. lumbago etc., in venereal complaints, syphilis, nervous head aches, migrane and other diseases. An application of this oil sometimes inflames the skin, and even blisters it and raises boil in the affected part. It is an abortifacient

This powder is taken in along with cow's ghee or honey in an auspicious day all the ailments in the system including dropsy will be cured.

செங்கொடி வேலியின் பூ வெளிறிய சிவப்பு நிறமுடையது. வேரை நசிக்க விறுவிறுப்பையுண்டாக்கும். உடம்பின் தோலில் போட வெந்து போகச் செய்யும். ஆகவே இதை வாய்வு, வீக்கம், சூலைப்பிடிப்பு, நரித்தலை வாதம், இடுப்பு வலி, மேகப் படை, அரையாப்பு, மண்டையிடி, தலைவலி முதலிய நோய்களுக்கு இவ்வேரை எண்ணெயில் போட்டுக் காய்ச்சி இறுத்துப் பூசத் தோலைச் சிவக்கச் செய்து குணப்படுத்தும்.

இது கர்ப்பத்தை அழிக்கக் கூடியது. இதன் வேர்ப்பட்டையைக் கருப்பையின் வாயில் வைக்க கருப்பை புண்ணாகி கருவை வெளிப்படுத்தும். இதை மேகம், உதிரக்கட்டு, குட்டம் இவைகளுக்கு தகுந்த அளவில் உட்கொள்ள குணம் தரும்.

இது கபம், வீக்கம், வாதம், வயிற்றுப்புழு, பாண்டு முதலிய வற்றையும் சூலைஅகசன்னி, வாய்வு, மந்த சுரம்,தலை நோய் ஆகிய வைகளையும் கண்டிக்கும்.

செஞ்சித்ரமூலம் செம்பை பஸ்பமாக்கும்.

* * *

## சித்ர மூலம்

**(கருங்கொடி வேலி)**

## plumbago capensis

**(N. O. Plumbaginaceae)**

***Habit*** : *Climber.*

***Parts used*** : *Root.*

***Constituents*** : *Root contains plumbagin.*

***Action*** : *Tonic and Stomachic.*

Uses : The root is used in medicinal preparations. Rheumatism and ascites could be treated with this.

இச்செடியின் வேர் மருத்துவக் குணமுடையது. இது வாத ரோகம், மகோதரம் நீக்கும். இதை உட்கொள்ள மூத்திர தாரை எரிச்சலை உண்டுபண்ணும்.

* * *

## சித்தா முட்டி

**See : Pavonia zeylanica**

**(N. O. Malvaceae)**

**குறுந்தொட்டி பார்க்க**

* * *

## சித்திரப் பாலாடை

**See : Euphorbia pilurifera**

**அம்மான் பச்சரிசி பார்க்க**

* * *

# சிரட் குச்சி

## (நாட்டு நிலவேம்பு)

## Swertia chirata

### (N. O. Gentianaceae)

*Habit* : *Herb.*

*Parts used* : *Leaves and stem.*

*Constituents* : *Ophelic acid, chiretin, resins, gum and phosphates of potash lime and magne sia.*

*Action* : *Bitter, Tonic, Stomachic, Febrifuge, Anthelmintic, Vermifuge, Anti-pyritic and Stimulant.*

Uses : The flower, stem and root are bitter in taste. Leaves and stem are used in medicinal preparations. Rheumatic fever, fever due to cold are treated with this. The leaves, orange rind and coriander are mixed together with hot water and the filtered water is consumed to get relief from the above said diseases. Juice of the leaves relieves flatulance and diarrhoea in children. Leaves along with cloves and cardamom are soaked in water. If this water is consumed, it relieves fever, regidity of joints, indigestion and gives strength.

சிரட்குச்சியின் பூ, தண்டு, இலை, வேர் எல்லாம் கசப்புச் சுவையுடையது. இது நாட்டு நில வேம்பு என்றும் கூறப்படுகிறது. இதன் இலையும், தண்டுகளும் மருத்துவப் பயனுடையது. இதனால் வாதசுரம், நீர்க்கோவை, சுரங்கள் மயக்கம் நீங்குவதுடன் புத்தி தெளிவடையும். மேற்கூறிய நோய்களுக்கு இதன் இலை, கிச்சலித் தூள், கொத்தமல்லி எடுத்து வெந்நீரில் சேர்த்து மூடி ஒரு மணி நேரம் சென்றபின் வடிகட்டி தினம் இரு முறை சாப்பிட வேண்டும்.

இவ்விலைச் சாற்றைக் குழந்தைகட்கு உள்ளுக்குக் கொடுக்க வயிற்றுப் பொருமலும் கழிச்சலும் நீங்கும்.

நில வேம்பு, கிராம்பு, ஏலம் சேர்த்து வெந்நீரில் ஊற வைத்து பின்பு வடிகட்டி தினம் இரு வேளை சாப்பிட முறை சுரம், குளிர்ச் சுரம், கீல் பிடிப்பு, செரியாமை இவை யாவும் குணமாவதுடன் உடலுக்கு வலிமை தரும்.

* * *

## சிலந்தி

### Ochna squarrosa

**(N. O. Ochnaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Root*

*Action* : *Bark is Digestive, Tonic, Emmenagogue. Leaves are Emollient.*

Uses : Root is used as an antidote to snake bite. Its decoction is given in menstrual complaints and also for controlling asthma.

இம்மரத்தின் பட்டையும் இலையும் மருத்துவப் பயனுடையது. இதன் வேர்க்கஷாயம் மாதவிடாய் கால நோய்களைக் குணப்படுத்தும். மேலும் இலை ஆஸ்துமா, ஷய இருமல் ஆகியவற்றிற்கு குணம் தரும்.

* * *

## சிலந்தி நாயகம்

**See : Ruellia prostrata**

**கிரந்தி நாயகம் பார்க்க**

* * *

## சிலாரஸ்

(நெரியரிசிப் பால்)

### Altingia excelsa

**(N. O. Hamamelidaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Resin obtained from the tree*

*Constituents* : *This resin is known as 'Storax'. This is the mixture of Cinnamic aldehyde, benzaldehyde, vanilion, styrol and stylacin etc.*

*Action* : *Bitter, Expectorant, Carminative, Tonic, Stomachic and Antiscorbutic.*

Uses : There is a resin secreted from the bark of the tree. This cures cold, spasmodic conditions, phlegm and asthma. This is also used in treating inflamed testicles, ring worm, eczema etc. This is refrigerent and relieves phlegm. The secreted milk if consumed strengthen the teeth.

சிலாரஸ் என்பது நெரியரிசி மரப்பட்டையிலிருந்து வழியும் பிசின் போன்ற பொருளாகும். இதை சலதோஷம், தனுர்வாதம், சந்நி, பீனசம், சிரசு தாபம், கபம், காசம் இவைகளுக்குக் கொடுக்க குணமாகும். மேலும் இது ஆரம்ப நிலையிலுள்ள விரை வீக்கம், வயிற்றுவலி, படர் தாமரை, சொறி சிரங்கு ஆகியவற்றை குணப்படுத்தும். இது உடம்பின் உஷ்ணத்தை போக்கி கபத்தை அறுக்கும். இதன் உறைந்த பாலை மெல்லுவதால் பல்லிருகும்.

* * *

## சில் கோசா

### (சில் கோஜா)

## Pinus gerardiana

### (N. O. Coniferae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Nuts contain albuminoids. starch and oil. Kernel, contains an essential non volatile oil.*

*Action* : *Seeds are Anodyne, Carminative, Stimulant Expcctorant and Aphrodisiac.*

Uses : The seeds of this tree is used as food. It is used as a main ingredient in health tonics. This cures chronic rheumatism, seminal debility, leucorrhoea and gleet.

இம்மரத்தின் விதை, (பருப்பு) உணவாகப் பயன்படுத்தப்படுகிறது. இதை உடலைப் பலப்படுத்தும் இலேகியங்களில் உபசரக்காக சேர்க்கின்றனர். இது நெடுநாள் வாத நோய், விந்து நட்டம், வெள்ளைப் போக்கு, வெள்ளைஆகிய வற்றை குணப்படுத்தும்.

* * *

# சிவதை வேர்
## (வெள்ளை இனம்)

## Ipomoea turpenthum
### (N. O. Convolvulaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Stem, dried root and root-bark.*

*Constituents* : *Turpith resin contains turpethin.*

*Action* : *Stimulant, Laxative, Acrid, Nauseasing Cathartic and Purgative.*

Uses : It is a cathartic and laxative. The ash colour root is aromatic and acrid in taste. The root bark is used in many medicinal preparations. This cures stomach disorders, diseases due to biliousness and disorders of the children. This is used as a healing agent in burns. It is also used as anthelmintic. The root is light and porous in the centre. The ends are coated with exuded resin and innerside is white in colour. This is used in subdueing the mental patients.

வெள்ளை சிவதை வேருக்கு மலம் போக்கியென்றும் பெயர். சாம்பல்நிறமுடையஇதன் வேர் சிறிது வாசனையுடனும், விறுவிறுப்புள்ளதாயிருக்கும். வேர்ப்பட்டை பல மருத்துவ குணங்களையுடையது இது வயிற்றிலுண்டாகும் கேடுகள், பித்த வாதநோய்கள், சிறு பிள்ளைகளுக்குண்டாகும் சில நோய்கள் ஆகியவற்றைப் போக்கும். கைப்பும் துவர்ப்புங்கலந்த இது தீப்புண்களை ஆற்றும். வயிற்றுப் புழுக்களை வெளியாக்கும். பேதியுண்டாக்கும். இது லேசாகவும் நடுவில் துவாரமுள்ளதாகவும் இருபக்கங்களில் படிந்திருக்கும் பிசினுடனிருக்கும். உட்புறம் வெண்மையாயிருக்கும். இதனை சூரணித்துக் கல்லுப்புடன் சாப்பிட பேதியாகும்.

* * *

## சிவதை வேர்
(கருப்பு இனம்)

## Ipomoea turpenthum
(N. O. Convolvulaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Root and root-bark*

*Constituents* : *Turpethin.*

*Action* : *Highly purgative.*

Uses: This exhibits the same property as white variety. This is used as an antidote for rat bites and cures dyspepsia due to bilious causes. If mixed with myrobalan and taken internally it cures dropsy and ascites. This is purgative.

வெண் சிவதையின் குணங்களே இதற்கும் உண்டு. இது எலிக் கடி விஷம், பித்தத்தினால் நேர்ந்த குன்மம் இவைகளைப் போக்கும்' இதை கடுக்காயோடு சேர்த்துக் கொடுக்க பாண்டு வகை அல்லது மகோதரம் போகும்.

காரமும் கைப்புமுடைய இதுமிகுந்த கழிச்சலையுண்டாக்கும்.

* * *

## சிவனார் வேம்பு
(சிவன் மூலிகை, காந்தாரி)

## Indigofera aspalathoides
(N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, flowers, tender shoots and roots.*

*Constituents* : *Oil is extracted from the roots.*

*Action* : *Bitter, Antiseptic, Disinfectant, Demulcent, Cooling, Anti-rheumatic. Anti - syphilitic, Stimulant and Vulnerary.*

Uses: This is a twiner with small leaves and violet flowers. The fruit contains six seeds. The leaves, flowers,

stem and root are used medicinally. They are refrigerant. This is mainly used in skin ailments like ring worm, chronic ulcers, eczema, bruises, carbuncles, rheumatism, indigestion and snake bites etc. This is also used in treating leprosy and wheezing.

The decoction made out of its leaves and flowers is used in treating leprosy and carbuncle. The root if chewed gives relief in toothache, stomatitis etc. The boiled root with oil is used as an external application for skin diseases like eczema, ulcer etc. Mashed root with butter is used as an application to reduce oedema. The oil extracted from root is used in treating the eruption on the children's scalp. The extract if taken internally it is found effective in leprosy and other skin diseases. The ash of the plant is used to make medicine to eradicate dandruff.

இது ஓர் படர்கொடி. சிறிய இலைகளையும் ஊதாநிறப் பூக்களையும் உடையது. இதன் காயினுள் ஆறுவிதைகளுண்டு. இதன் இலை, பூ, தண்டு, வேர் யாவும் மருத்துவப் பயனுடையது. இவை குளிர்ச்சி தரும். அழற்சியை போக்கும். இதனால் தோலைப் பற்றி வரும் படைகள், நாள்பட்ட புண், சொறி, சிரங்கு, பிளவை, வலி அதிகமுள்ள வாத நோய்கள், மந்தம், பாம்பு நஞ்சு இவை இரைப்பு, உட்சுரம், முதலியனவும் போகும்.

இதன் இலையையும் பூவையும் நீரிலிட்டு கஷாயமிட்டுக் குடிக்க அது குட்டம், பிளவை போன்ற நோய்களை தீர்க்கும். இதன் வேரை வாயிலிட்டு சுவைக்க பல்வலி, வாய் ரணம் முதலியவை நீங்கும். வேரை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி சொறி, சிரங்குகளுக்கு தடவ குணமாகும். வேரை இடித்து வெண்ணெயில் குழைத்து வீக்கங்களுக்குப் பூசலாம். வேரினின்று குழித்தைல மிளக்கி மண்டைக் கரப்பான், அக்கினிக் கரப்பான் போன்றவற்றிற்கு தடவ குணமாகும். சிவனார் தைலத்தை உள்ளுக்குக் கொடுத்து மேலுக்குப் பூச பெருநோய் படை முதலியவைகள் போகும். இத்தைலத்துடன் சிவனார் வேம்பின் பொடிசேர்த்து சரும நோய் களுக்கும் பயன்படுத்தலாம்.

இச்செடியை உலர்த்தி, கொளுத்திய சாம்பலைக் கொண்டு மருந்து தயாரித்து உபயோகிக்க தலைச்சுண்டு போகும்.

* * *

## சிறியா நங்கை

See : Polygala chinensis

(N. O. Polygalaceae)

பார்க்க நங்கை

* * *

## சிறுதேக்கு

See : Premna herbaceae

கண்டு பரங்கி பார்க்க

* * *

## சிறு புள்ளடி

See : Hedysarum gangeticum

புள்ளடி பார்க்க

* * *

## சிற்றா முட்டி

See : Pavonia zeylanica

குறுந்தொட்டி பார்க்க

* * *

## சின்னி

(சிறு சின்னி)

Acalypha fruticosa

(N. O. Euphorbiaceae)

*Habit* : Herb

*Parts used* : *Leaves and root.*

*Action* : *Alterative, Attenuant, Stomachic, Antibilious and Alexipharmic*

Uses : There are two varieties. The leaves are used in treating insect bites, gonorrhoea, a kind of hectic fever arround and with pthisis, indigestion. Garlic and pepper added along with its leaf and is made into a paste. The paste if consumed cures above said diseases. The paste of the leaves alone will cure indigestion, cholera and it works as an appetizer. The root is used in treating piles and dysentery. This could be used as an ingredient in the 'Lehyams' prepared to treat piles. The iufusion of the root relieves gonorrhoea. Sulphur could be melted with its leaves. The leaves are antidote for the poisons of parthenium.

சிறு செடிவகுப்பைச் சேர்ந்த இதில் சிறு சின்னி, பெருஞ்சின்னி என இரு பிரிவுண்டு.

இலைக்கு வண்டுக்கடி, நஞ்சு காணாக்கடி, வெள்ளை, கணச் சுரம், மாந்தம் ஆகியவைகள் போகும். இலையுடன் பூண்டு, பத்து மிளகு சேர்த்து அரைத்துக் கொடுக்க மேற்கண்ட நோய்கள் நீங்கும்.

இலையை மட்டும் அரைத்து சிறிதளவில் கொடுத்து வர செரியாமை, வாந்திபேதி இவற்றைப் போக்கி பசியைத் தூண்டும். உடலை தேற்றும். இதன் வேரை சின்னிக் கிழங்கு என்றும் கூறுவர். இதனால் மூலநோய், குருதிக் கழிச்சல் நீங்கும். மூலத்துக்கான லேகிய வகைகளில் இதைச் சேர்ப்பார்கள்.

இதன் வேரைக் குடிநீரிட்டுக் கொடுக்க வெள்ளை, மூலம், கணச்சுரம்,மாந்தம் நீங்கும். சிறுசின்னி இலையால் கந்தகம் நீராகும். பார்த்தீனியத்தின் விஷத்தை முறிக்கும்.

* * *

## சின்னி

### (பெருஞ் சின்னி)

## Acalypha fruticosa

### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and root.*

*Action* : *Similar to small variety.*

Uses : This exhibits similar property as Acalypha fruticosa small variety. The leaves are used as an antidote for insect bites.

சிறு சின்னியின் செய்கையும் குணமும் பெருஞ்சின்னிக்கும் உண்டு. இலை காணாக்கடி நஞ்சும், பிற நஞ்சுக் கடிகளின் நஞ்சையும் நீக்கும்.

* * *

## சின்னி

**(கிழங்கு சின்னி, கிட்டிக் கிழங்கு)**

## Acalypha betulina

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root*

*Action* : *Stomachic and Alterative.*

Uses : The tubers are used to cure chronic gonorrhoea. This is also an appetizer. This could be consumed by boiling or frying. The dried tuber helps to increase the body weight. It cures lucoderma.

கிட்டிக்கிழங்கினால் நாட்பட்ட வெள்ளை போகும். மிகுந்த பசி உண்டாகும். இதை வேகவைத்தும், வற்றலிட்டும், வறுத்தும் உண்ணலாம். இதனை சில தைலங்களிலும் சேர்ப்பர். இதனை வற்றல் செய்து உணவாகக் கொள்ள உடல் மெலிவும், வெண் குட்டமும் நீங்கும்.

* * *

## சீத்தா

## Annona squamosa

**(N. O. Annonaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits, leaves, bark, root and seeds.*

*Constituents :* *Seeds yield an oil, amorphous alkaloid and toxic resin.*

*Action :* *Fruit is Cooling and Cholagogue. Seeds and leaves are Anthelmintic, Detergent and Insecticide. Root is Purgative. Bark is Astringent and Toxic.*

Uses : This includes in a family of small tree. Leaves, bark, root, seeds and fruits are used in medicinal preparations. Leaf juice,if it is used as nasal drops cures unconsiousness.The paste made out of leaves and fruit without water is an ideal curative for skin ulcers and eczema. It acts as an anthelmintic if taken internally. The infusion of the bark increases the body weight. The paste of root bark with water acts as purgative, but the unriped fruit stops dysentery and diarrhoea. The ripened fruit is used to treat burns and also given in delirium. The sharbath made out of fruit reduces the body temperature. Powdered seed, if applied in the skin ulcers, cleans the ulcers and helps for faster healing. Powdered seed if taken in recommended dosses aborts pregnancy.

சிறு மர வகுப்பைச் சேர்ந்த சீத்தாவின் இலை,பட்டை, வேர், விதை, காய், பழம் அனைத்தும் மருத்துவப் பயனுடையது.

இலைச்சாற்றை மூக்கில் பிழிய மயக்கம் போகும். இலையையும், காயையும் நீர்விடாமல் அரைத்து புண்களுக்கும், கொப்புளங்களுக்கும் பூச எளிதில் குணமாகும். உள்ளுக்கு சாப்பிட புழுக்களை கொன்று வெளிப்படுத்தும். பட்டை குடிநீர் உடல் வன்மையை பெருக்கும்.

வேர்ப்பட்டையை அரைத்து தக்க அளவில் நீரில் கலந்து கொடுக்க கழியும். வேரை அரைத்துக் கொடுக்க பேதியாகும்.

துவர்ப்புடைய இதன் காய் கழிச்சல் சித்தபிரமையை குணமாக்கும். இதன் மணப்பாகு உடல் வெப்பத்தைத் தணிக்கும். விதையைப் பொடித்து புண்களின் மீது தூவ, அவைகளிலுள்ள அழுக்கை அகற்றி, அவைகளை எளிதில் ஆற்றும். இதைத் தகுந்த அளவில் உட்கொள்ள கர்ப்பம் சிதைக்கும். பெண் உறுப்பு சரிப்படும்.

* * *

## சீத்தா
### (ராம் சீத்தா)

## Annona reticulata

### (N. O. Annonaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits and bark*

*Constituents* : *Seeds and bark contain tannic acid.*

*Action* : *Fruit is cooling, Antidysenteric, Astringent and Anthelmintic. Leaves and Seeds are Insecticide and Anthelmintic.*

Uses : This exhibits the same property as Annona squamosa. The unriped fruit checks diarrhoea and dysentery.

சீத்தாவின் எல்லா குணங்களும் ராம் சீத்தாவிற்கு உண்டு. பேதி, சீத பேதியை இதன் காய் நிறுத்தும். பழத்தின் ருசியும் நிறமும் வேறுபாடாய் இருக்கும்.

* * *

## சீத்தா
### (முள்ளு சீத்தா)

## Annona muricata

### (N. O. Annonaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves and fruit*

*Constituents* : *Leaves contain an essential oil and alkaloid substance. Bark yields alkaloids, crystalline alkaloids, muricine and muricinine isolated. The fibrous fruit contains proteins and sugars.*

*Action* : *Root is Antiscorbutic, Bark is Astringent. Root-bark is an Anti-dote. Leaves are Anthelmintic and externally Suppurant.*

Uses : The seeds heals the ulcers of the skin. This is found commonly in thick forests. Dried tender fruits are very effective in skin disorders.

முள்ளு சித்தாவின் விதை புண்களை ஆற்றும். பெரும்பாலும் அடர்ந்த காடுகளில் விளையும். காட்டுப் பன்றிகள் இதனை விரும்பி உண்ணும். புண், புரை முதலியவற்றை காய்ந்த பிஞ்சுகள் ஆற்றும்.

* * *

## சீந்தில்

### (அமிர்தக் கொடி)

## Cocculus cordifolius

### (N. O. Menispermaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Berberine, giloin, gilioinin*

*Action* : *Alterative, Stimulant, Anti-pyretic, Anti-periodic and Tonic.*

Uses : The plant is very bitter in taste and bears small yellow flowers. The stem and root is of medicinal use. This is commonly found as a climber on other trees, but the one which is found on the neem tree has more medicinal value. The leaves heated over fire is used externally for skin ulcers. The decoction of this plant cures periodic fever, fatigue, indigestion, rheumatism and herpes etc.

A type of tincture is extracted from this plant. This is used in disorders of spleen. This is also used in numbness of the feet, gonorrhoea etc. The decoction made out of its stem and dried ginger in the preparation of 4:1 and administered twice daily. It is useful in diarrhoea, thirst and palpitation.

சீந்திற்கொடி அல்லது அமிர்தக்கொடி எனப்படும்இது மிகுந்த சிறப்புடையது. சிறு மஞ்சள் பூக்களையுடையது. இதன் தண்டு வேர் பல மருத்துவப் பயனையுடையது. பெருமரங்களில் படர்ந்திருக்கும். இதில் வேப்பமரத்தின் மேல் படர்ந்திருப்பதே பல அரிய

மருத்துவப் பண்புகளையுடையது. இது உடலுக்கு வலுவைத் தருவதுடன் தாது விருத்தி செய்யும்.

இலையை அனலில் வாட்டிப் புண்களின் மீது போட புண்கள் கரைந்து குணமடையும்.

இதன் முற்றிய கொடியே பயன் தரும். இதைக் கஷாயம் செய்து சாப்பிட முறை சுரம், பலவீனம், அஜீரணம், வாதநோய், கிரந்தி முதலிய நோய்கள் குணமடையும். இக்கொடியிலிருந்து ஒருவித சர்க்கரை எடுப்பர். இது வெண்மையாகவும், கசப்பாகவும் இருக்கும். இதை மண்ணீரல் வலி, வீக்கம், பலவீனம் முதலியவற்றிற்கு கொடுக்க குணமாகும். மேலும் இது கைகால் திமிர், மேகவெட்டை போன்றவற்றை விலக்கும். இக்கொடியை மற்ற கடைச்சரக்குகளுடன் சேர்த்து அதிசாரத்துடன் கூடிய சுரம், தாகம், இருதயப் படபடப்பு, பலவீனம் முதலிய நோய்களுக்குக் கொடுப்பதுண்டு. சீந்திற்கிழங்கினால் மேகம், குருதியழல் நோய், சுரம், பெருங் கழிச்சல், மாந்தம், கணம், நஞ்சு ஆகியவைப் போவதுடன் பசியும் அதிகரிக்கும். விடத்தைப் போக்கும். மேற்கண்ட நோய்களைப் போக்க இக்கிழங்கின் குடிநீருடன் தேன், நெய் சேர்த்து அருந்த வேண்டும்.

மேலும் இக்கொடியினால் கடுமையான பேதி, சீதபேதி, வெள்ளை நோய் நீங்கும். இதனை இலக்கியங்கள் "பொற்சீந்தில் கொடி" என்றும் கூறுகின்றன.

* * *

## சீந்தில்
### (பொற் சீந்தில்)

## Tinospora malabarica

### (N. O. Menispermaceae)

*Habit* ; *Climber*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Similar to Coculus cordifolius*

*Action* : *Similar to Coculus Cordifolius.*

Uses : The tuber of this plant is used in treating veneral diseases, fever, diarrhoea, indigestion and acts as an antidote also. This is also an appetizer. The infusion of the tuber with honey and ghee is used as medicine for the above

said diseases. Severe dysentery and diarrhoea could be also cured with this plant. The tuber and root also exhibits medicinal properties.

இதன் கிழங்கு, வேர் முதலியவை பல மருத்துவப்பயன்களை உடையது. சீந்திற்கொடியை போன்றே இதனையும் பயன் படுத்தலாம். பொற்சீந்திற் கிழங்கினால் நீரிழிவு, இளைப்பு நோய், நஞ்சுகள், குருதியழல் நோய், சுரம் ஆகியவைப் போகும்.

* * *

## சீந்தில்

**(பேய் சீந்தில், ஆகாய கருடன், கொல்லன் கோவை)**

**See : Bryonia epigoea**

**கருடன்கிழங்கு பார்க்க**

* * *

## சீமை சிவதை

## Convolvulus terpethum

**(N. O. Convolvulaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root*

*Constituents* : *Cut ends of the root contains resinous deposits.*

*Action* : *Cathartic and Expectorant.*

Uses: Root bark exhibit medicinal property. Root bark is light and it is white or yellow in colour. The cut ends exhibit resinous deposition. It is catharatic as such removes phlegms, over burnt tissues, accumulation of bilious deposits. Decoction made out of this and gall nut is a very good remedy for epileptic fits, lunacy nervous pain of the libs etc.

மருத்துவப் பயனுடைய சீமை சிவதையின் வேர் நடுவில் துவாரமும் வெட்டுண்ட இருபக்கத்தில் பிசினுடனுமிருக்கும். இதனை பேதி மருந்தாகப் பயன்படுத்த கபம், எரிந்த பித்தநீர்க்கட்டு இவைகளை வெளிப்படுத்தும். கடுக்காய் சேர்த்து கஷாயமாக சாப்பிட காக்கைவலிப்பு, பைத்தியம், கால்நரம்பு வலி இவைகள் போகும்.

* * *

## சீமை செம்மரம்

## Haematoxylon campechianum

**(N. O. Leguminosae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Wood*

*Constituents* : *Wood contains tannic acid*

*Action* : *Astringent and Tonic.*

Uses : Decoction of the wood is used in chronic or acute diarrhoea especially in children. It is also used douche in leucorrhoea. Wood oil is applied over carbuncle to reduce the amount of its discharge.

சீமைசப்பங்கம் என்றும் இது கூறப்படுகிறது. இம்மரத்தின் வைரம் சிவப்பாயிருக்கும். இது வாசனையாகவும் தித்திப்பாகவும் துவர்ப்புடனும் இருக்கும். குழந்தைகளின் விடாபேதியும், வெள்ளை ஒழுக்குக்கும் இதன் கஷாயம் அருந்த குணப்படும். இதிலிருந்து எடுக்கப்படும் தைலம் பிளவையை குணப்படுத்த பயன்படும்.

* * *

## சீமை அழவணம்

**(சீமை மருதோன்றி)**

**See : Peganum harmala**

**அழவணம் வகைகள் பார்க்க**

* * *

## சீமை ஆமணக்கு

## Baliospermum montanum

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Under shrub*

*Parts used* : *Leaves, seeds and root*

*Constituents* : *Oil is extracted from the seeds*

*Action* : *Seeds are Drastic, Purgative, Stimulant and Rubefacient.*

Uses : Seeds are purgative. Seeds externally acts as rubefacient. Seed oil is an antidote for poison. This also used as an analgesic application. Root is purgative and given in the treatments of dropsy and jaundice. Root is also an antidote for snake bites.

சீனத்தாமணக்கு எனப்படும் சீமை ஆமணக்கின் விதை பேதியாக்கும். அதிக அளவில் விஷமாகும். மேலுக்குத்தடவ சுறுசுறுப்பைத் தரும். தோல் சிவக்கும். இதன் எண்ணெய்க்கு விஷம் நீக்கும் குணமுண்டு. இது வாதப்பிடிப்புக்கு மேற்பூச்சு மருந்தாக உபயோகப்படும். வேர் பேதியாகச் செய்யும். வேரைப் பொடித்து பாண்டு, காமாலை முதலிய நோய்களுக்குக் கொடுக்கலாம். வேர் பாம்புக் கடி விஷத்தையும் போக்கும்.

* * *

## சீமையிலந்தை

## Zizyphus mauritiana

### (N. O. Rhamnaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits*

*Constituents* : *Fruit contains the salts of sodium, potassium magnesium, iron and phosphorus*

*Action* : *Digestive and Tonic.*

Uses : Fruit contains salts of pottassium, sodium, magnesium, iron and phosphorus. If it is consumed regularly it gives relief from indigestion.

இக்கனியில் உழமண்ணுப்பு, சுண்ண உப்பு, சாரவுப்பு, காந்த உப்பு, அயமண்ணுப்பு போன்ற அனேகவித உப்புச்சத்துக்கள் உள்ளன. எளிதில் சீரணமாகக் கூடியது. தினப்படி சாப்பிடலாம். அஜீரண நோயைக் குணப்படுத்தும். மூளையை உபயோகித்து வேலை செய்வோர்க்கு இது ஓர் சிறந்த உணவு.

* * *

## சீயக்காய்

### (சிகைக்காய், சீக்காய்)

## Acacia concinna

### (N. O. Mimosaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Pods (fruits) and leaves*

*Constituents* : *Pods freed from seeds contain alkaloin, saponin, malic acid, resin. glucose, gum, colouring matter, grude fibre and ash*

*Action* : *Externally Detergent and Astringent. Internally Aperient, Expectorant, Emetic, Purgative, Cathartic and Nauscant.*

Uses : This removes the oil. The tender leaves of this tree cures jaundice, it is sour in taste. The leaves added in pepper soup acts as purgative and removes biliousness. The fruit, if taken internally, removes the dirt for the intestiness and acts as an expectorant. The seed decoction is used in treating jaundice and other bilious disorders. The unriped fruit is purgative and emetic. Powdered fruit with 4 volume of water is used to wash hair to eradicate dandruff.

சிகைக்காய் எண்ணெய் பிசுக்கை போக்குவதற்கு சிறந்தது. இம்மரத்தின் இலைக்கொழுந்து புளிப்பாய் இருக்கும். காமாலையைக் குணப்படுத்தும்.

இலையை மிளகு இரசத்திலிட்டு உட்கொள்ள பேதியாக்கி பித்தத்தை கழற்றும்.

காயை உள்ளுக்குச் சாப்பிட குடலின் மாசுக்கள் போவதுடன் கோழையை அறுக்கும். இதன் விதைக்கஷாயம் மஞ்சட்காமாலை போன்ற பித்தக் கோளாறுகளை அகற்றும். இதன் காய் கழிச்சலையும், வாந்தியையும் உண்டாக்கும்.

நன்றாய்ப் பொடித்த காயின் தூளுடன், நான்கு பங்கு நீர்சேர்த்துக் காய்ச்சி தலைமுடியைக் கழுவிவர தலையிலுண்டாகும் சுண்டு நீங்கி தலைமுடி வளரும். இதில் காட்டு சீயக்காய், மண்டற் சீயக்காய், நல்ல சீயக்காய் என மூன்று வகைகள் உள்ளன.

* * *

## சீயக் கொடி

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Anti-septic and Cordial.*

Uses : This plant with white goat's milk heals ulcers and improves haemoglobin contents in the blood.

இதனை வெள்ளாட்டுப் பாலுடன் அரைத்து கொடுத்துவர புண்களை ஆற்றுவதுடன் உடலிற் குருதியை ஊறச்செய்து உடலுக்குப் புது உற்சாகத்தைத் தரும்.

* * *

## சீரகம்

### Cuminum cyminum

### (N. O. Umbelliferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Fruit or seed and an essential oil*

*Constituents* : *Fatty oil, resin, mucilage gum, protei, compounds, malates and an essential oil. A valuable essential oil 'thymene' rich in 'carvo n' obtained from the seeds. Seeds also contains cumind or cumic aldehyde, a mixture of hydrocarbons, cymene or cymol, terpene etc.*

*Action* : *Seeds are Carminative, Aromatic, Stomachice Stimulant and Astringent. Seeds are Cooling in effect.*

Uses : This plant is with white flowers and the root of this plant gives tingling effect in the mouth. The aromatic seed is used in medicine as well as flavouring agent. The seeds cure stomach ache, stomatitis, liver disorders, asthma, stone in the urinary bladder, wheezing, rhinitis, arthritis etc. This gives strength to the body and cools the eyes. It improves

digestion. Secretion soaked in lime water is used in medicinal preparation. The churnam made out of this and pepper is used in stomach ache due to indigestion, giddiness caused due to bilious infection etc. The seed oil heals wounds. The paste of cumin seeds with lime juice stops vomiting due to pregnancy. If taken along with country brown-sugar regularly it improves general health. If taken along with sugar candy, it stops cough. Powdered cumin seeds with butter stops dyspepsia. The infusion made out of cumin seeds and root of Pavonia zeylanica is useful in treating shivering fever (flew). Cumin seeds are used in making churnam and lahyam. This is also used as flavouring agent.

சீரகச்செடி வெள்ளை நிறப்பூக்களையுடையது. இச்செடி விறுவிறுப்பைத் தரும். வாசனையுடனிருக்கும். இதன் விதை வாசனைப் பொருளாகவும், மருந்துப் பொருளாகவும், சம்பாரப் பொருளாகவும் பயன்படுகிறது.

இதன் விதையினால் அழல் போகும். வயிற்றுவலி, வாய் புண்கள் ஈரல் நோய், காசம், கல்லடைப்பு, குருதிக்கழிச்சல், இறைப்பு, கம்மல், மூக்குநீர் பாய்தல், வெறி, வாதநோய்கள் இவை விலகும். இஃது உடலுக்கு வலிவையும் கண்ணுக்கு குளிர்ச்சியையும் தரும். சீரண சக்தி தரும்.

சுண்ணாம்பில் ஊறவைத்துப் பொடித்த சீரகம் மருந்துகள் செய்யப் பயன்படுகின்றது. இதை மிளகுடன் சேர்த்து சூரணம் செய்து சாப்பிட அசீரணம், வயிற்றுவலி, பித்தமயக்கம், அரோசகம் போகும். இவ்விதை எண்ணெய் காயங்களை ஆற்றும். சீரகத்தை அரைத்து எலுமிச்சம் பழச்சாற்றுடன் கொடுக்க கர்ப்பிணிகளின் வாந்தியை நிறுத்தும்.

தொடர்ந்து சீரகத்தை நாட்டுச்சர்க்கரையுடன் சாப்பிட்டு வர தேகம் வன்மை பெறும். சீரகத்துடன் கற்கண்டு சேர்த்து உட்கொள்ள இருமல் நிற்கும். சீரகத்தைப் பொடித்து வெண்ணெயுடன் கொடுக்க எரிகுன்மம் நீங்கும்.

சீரகத்துடன் சம அளவு குறுந்தொட்டி வேர் சேர்த்து குடிநீர் செய்து சாப்பிட மூன்றே நாளில் குளிர்ச்சுரம் நீங்கும்.

மேலும் பல மருத்துவ வழக்குகளில் சீரகம் பயன்படுகிறது, பல சூரணங்களிலும் லேகியங்களிலும் சேர்க்கப்படுகிறது.

இதை மணத்திற்காகவும், செரிப்புண்டாவதற்காகவும் உணவில் சேர்ப்பர். நற்சீரகம், காட்டுச் சீரகம், பெருஞ்சீரகம், பிளப்பு சீரகம் என்கின்ற வகைகளும் சீரகத்தில் உண்டு.

* * *

# சீரகம்

## (கருஞ்சீரகம்)

## Nigella sativa

### (N. O. Ranunculaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Dried fruit and seeds*

*Constituents* : *Seeds contain a yellowish volatile oil, an essential oil, a fixed oil, melanthine resembling helleborin, ash and arabic acid. Volatile oil is the active constituent*

*Action* : *Seeds are Aromatic, Diuretic, Diaphoretic, Antibilious, Stomachic, Stimulant, Carminative, Digestive, Anthelmintic and also Emmenagogue, Locally, oil is Anaesthetic, Galactagogue. Emollient and Aphrodisiac.*

Uses : Seeds are black in colour and bitter in taste. This cures a kind of eruption on the head in children. This also cures ulcers, internal heat, head ache, eye diseases, eczema, flatulence, dyspepsia, chest pain, cough, vomiting nausea, oedema and jaundice.

Powdered seeds along with vinegar, if taken acts as an anthelmintic. This also cures rabbis and for other poisonous bites. Powdered seeds mixed with the infusion of chaste leaves (vitex regunda) cures venereal diseases, fever and periodic fevers.

Seeds ground in hot water if used as poultice for head ache, inflammation of the joints and oedema gives relief from pain and reduces the swellings. Seeds ground along with honey if applied gives relief from body pain after child birth. Along with gingelly oil it cures eczema and ulcers.

Oil extracted from the seeds gives relief in head ache, catarrh of the nose, and nervous pains.

The oil is applied in betel leaves if taken acts as an, aphrodisiac.

விதை கருநிறமும் கைப்புச்சுவையும் உடையது. இது குழந்தைகளுக்கு ஏற்படும் மண்டைக் கரப்பான் புண்ணை ஆற்றும். மேலும் புண், உட்சூடு, தலைநோய் கண்ணோய், சிரங்கு, வயிற்றுப் பொருமல், குன்மம், மார்புவலி, இருமல், வாந்தி, ஓக்காளம், வீக்கம், காமாலை ஆகியவைகளும் இதனால் நீங்கும்.

இதன் பொடியை காடியுடன் கலந்து உட்கொள்ள குடற் புழுக்கள் வெளியேறும். மேலும் இதனால் பைத்திய நாய்க்கடி, நச்சுக் கடி இவற்றின் நஞ்சு தீரும். நொச்சிக் குடிநீருடன் இதன் பொடியைச் சேர்த்துக் கொடுக்க மேகப்பிடிப்பு, சுரம், விட்டு விட்டு வரும் சுரம் தணியும்.

இதை வெந்நீர் விட்டரைத்து தலைவலி, கீல்வீக்கம், உடல் வீக்கம் போன்றவைக்குப் பூச குணமாகும். இதை காடிவிட்டரைத்துப் படைகளுக்குப் பூசலாம். பிள்ளைப் பெற்றபின் வரும் உடல் வலிக்கு கருஞ்சீரகத்தை தேன் விட்டரைத்துப் பூச குணமாகும். இதை அரைத்து நல்லெண்ணெயில் குழப்பி கரப்பான், சிரங்கு இவைகளுக்குப் பூச நன்மை தரும்.

இதன் பொடியைத் தேன் அல்லது நீரில் கலந்து அருந்த மூச்சுமுட்டம் நீங்கும். மோருடன் கொடுக்க விக்கல் தீரும்.

இதன் தைலம் தலைநோய், மூக்குநீர் வடிதல், நரம்பைப் பற்றிய வலி, இடுப்புவலி நீக்கும்.

இதன் தைலத்தை வெற்றிலையில் பூசித் தின்ன ஆண்மை பெருகும்.

* * *

## சீரகம்

### (காட்டு சீரகம்)

**See : Vernonia anthelmintica**

**சந்நிநாயகம் பார்க்க**

* * *

## சீரகம்
### (பிளப்பு சீரகம்)

## Canum nigrum or Nigella sativa
### (N. O. Ranunculaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Seeds contain a volatile oil*

*Action* : *Seeds are Aromatic, Diuretic, Diaphoretic, Antibilious, Stomachic, Stimulant, Carminative, Digestive, Anthelmintic and Emmenagogue.*

Uses : Seeds are used to cure hysteria and rheumatism. It can be used like Cuminum cyminum. This also cures inflammation of the spleen.

பிளப்புசீரக விதையின் சுவை சீரகத்தினுடையது போன்றே இருக்கும். இதனால், நீங்காவெறியும், வாதநோய்களும் நீங்குவதுடன் உடலுக்கு அழகு உண்டாகும். நற்சீரகத்தை வழங்குவதைப் போல இதையும் வழங்கலாம். மேலும் இதனால் மண்ணீரல் வீக்கம் போகும்.

* * *

## சீரகம்
### (பெருஞ்சீரகம்)

## Pimpinella anisum
### (N. O. Umbelliferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds and leaves*

*Constituents* : *Fruit yields an essential oil, which is known as the oil of anise-seeds and consists of anethole or anise camphor, anise aldehyde and methylchavicol.*

Action : *Fruit or seed is Stimulant, Carminative, Diuretic, Slightly Expectorant and the fruit and oil are Aromatic, Stomachic and Carminative. Oil is Stimulant, Expectorant like all volatile oils, Diaphoretic and mild Expectorant.*

Uses : Flowers, Seeds and roots of this herb possesses medicinal property. This seeds are used in medicines and curries.

Seeds are roasted and powdered. 2 gms of this powder along with sugar juice daily gives relief in uterous disorders, colic, fever, indigestion, cough, liver disorders, wheezing, sore throat and cold. This also cures flatulence in uterus. This acts as galactagogue. Decoction of the seeds is used to relieve uterous disorders. Powdered seeds gives relief in stomach ache, flatulence, fever and cough. Oil extracted from the seeds, if taken internally, induces heat and cures dyspepsia. This oil eredicates the lices.

பெருஞ்சீரகம் ஒரு சிறு செடியாகும். இதன் பூ, விதை, வேர் அனைத்தும் மருத்துவப் பயனுடையது. இது மருந்துகளிலும், மசாலாவிலும் சேரும். இது கருவாய் நோய்கள், வயிற்றுவலி, சுரம், செரியாமை, வயிற்றுப்புசம், இருமல், ஈரல் நோய், இரைப்பு, குரற் கம்மல், மூக்குநீர் பாய்தல் ஆகியவற்றை குணப்படுத்தும். சோம்பை இளவறுப்பாக வறுத்துப் பொடித்து 2 கிராம் அளவில் எடுத்து சர்க்கரையுடன் தினம் இருவேளை உண்ண மேற்கண்ட நோய்கள் யாவும் தீரும்.

மேலும் சூதகவாயுவை கண்டிக்கும். மலத்தை இளக்கும், நீரை வடிக்கும். சீரண சக்தியையும், வியர்வையையும் உண்டாக்கும். மூத்திரத்தையும், வியர்வையையும் அதிகப்படுத்தும். வயிற்றுவலி, வயிற்றுக் குமட்டலை நீக்கும். பால் சுரக்கச் செய்யும். உதிரவாதத் திற்கு குணம் தரும். இதன் கஷாயம் பெண்கள் கர்ப்பவலியை நீக்கும். இதை துவையல் செய்து சுரசாந்திக்கு கொடுக்கலாம். இதன் சூரணம் வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், வயிற்றுப் பீநசம், சுரம், இருமல் இவைகளைப் போக்கும். இதன் தைலம் வாசனையாகவும், தித்திப்பாகவுமிருக்கும். வயிற்றில் உஷ்ணத்தை உண்டாக்கி, பசியை அதிகப்படுத்தி, குன்மத்தைப் போக்கும். இத்தைலம் தலைப் பேன் களை அழிக்கும்.

* * *

# சீரகம்

## (சீமை பெருஞ்சீரகம், கேக்கு விதை)

## Carum carvi

## (N. O. Umbelliferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Dried fruit and seeds*

*Constituents* : *It Contains an essential oil and volatile oil. Volatile oil contains a mixture of ketone, carvone, a terpene and traces of carvacrol*

*Action* : *Stomachic, Carminative, Stimulant, Antispasmodic and Aromatic.*

Uses : This is an aromatic seed commonly found in foreign countries. This is also found in India in extreme cold regions.

This is used to treat stomach-ache and other intestinal disorders. This is used in cooling by roasting and powdering it. This is commonly used as an aromatic ingredient in medicinal preparations. The oil extracted from this seed is used in bitter medicinal preparations to avoid nausea and vomiting.

சீமை சோம்பையே ''கேக்குவிதை'' என்றும் கூறுவர். இது அயல் நாட்டில் விளையும் ஒருவகை மணமுடைய விதையாகும். இந்தியாவில் குளிர்ச்சியான மலைப் பிரதேசங்களில் இது விளைவிக்கப்படுகின்றது.

இதனால் வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல் முதலியவை குறையும். இதை வறுத்து தூள் செய்து கறி மசாலாவாகவும் உபயோகிப்பர். பொதுவாக இதை மருந்துப் பொருள்களுக்கு மணம் சேர்க்கவே பயன்படுத்துவார்கள். இதிலிருந்து வடிக்கப்படும் எண்ணெய் பல கைப்புச் சுவையுடைய மருந்துகளுக்கு மணமூட்டியாகச் சேர்க்கப்படுகின்றது.

* * *

## சுக்கங்காய்
(தும்மட்டிக்காய்)

## Cucumis trigonus
(N. O. Cucurbitaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Leaves, root and fruit*

*Action* : *Fruit is Expectorant and Carminative. Leaves and root are Purgative.*

Uses : Leaves, root, fruit of this climber are said to possess medicinal properties. Unripened fruit gives relief from rheumatism and acts as an appetizer. Leaves and root are purgative. Dried fruits if taken regularly cures wheezing, dyspepsia and cough.

சுக்கங்காய்க் கொடியின் இலை, வேர், காய் யாவும் மருத்துவப் பயனுடையது. காயால் வாத நோய்கள் போகும். தீக்குற்றத்தை மிகுதிப்படுத்தும். சுவையின்மையைப் போக்கும். இலையும், வேரும் பேதியாகச் செய்யும். காயை வற்றல் செய்து சாப்பிட இரைப்பு, குன்மம், இருமல் இவைகளை நீக்குவதுடன், சிறந்த உணவாகவும் பயன்படுகிறது.

* * *

## சுக்காய் கீரை
(சுக்காங் கீரை)

## Rumex vesicarius
(N. O. Polygonaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *The fresh vegetable contains moisture, and the dried material contains albuminoids. Soluble carbo-hydrates, Woody fibre and ash respectively.*

*Action* : *Stomachic, Diuretic, Astringent, Sedative, Antibilious, Hepatic and Tonic.*

Uses : This small herb if taken along with food acts an liver tonic and as an appetizer. This gives relief in intestinal gas and cures chest conjestion. This also checks diarrhoea and dysentery.

சுக்காங்கீரை எல்லா இடங்களிலும் வளரும் சிறுசெடி. இதை உணவில் சேர்த்துக் கொள்ள கல்லீரலுக்கு வலிவைத் தந்து பசித்தீபனத்தை பெருக்கும். சூட்டினாலுண்டாகும் வாயுத் தொல்லையை தீர்க்கும். நெஞ்செரிச்சலை குணப்படுத்தும். மேலும் வெப்பால் உண்டான கழிச்சல், குருதிக்கழிச்சல் போன்றவற்றை நிறுத்தும்.

* * *

## சுக்கு

## Zingiber officinale

**(N. O. Scitaminaceae)**

Dried ginger. Its uses are given in Zingiber officinalis.

இஞ்சி உலர்ந்ததே சுக்கு எனப்படும். சுக்கின் பயன்களும் இஞ்சியிலேயே கூறப்பட்டுள்ளது.

* * *

## சுக்கு நாறிபுல்

## Andropogan schoenanthus

**(N. O Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *An essential oil*

*Action* : *Aromatic. Oil is Stimulant, Carminative, Antispasmodic and Diaphoretic.*

Uses : This grass is said to possess the properties of Andropogon hardus. The oil of this grass if taken along with rice gruel it cures stomach ache, flatulence and vomiting. To treat regidity of joints, rheumatism and neuritis this oil is taken internally and used as externally along with coconut oil.

The oil is used in the preparations of soap phenyle as a flaouring agent.

சுக்குநாறிப்புல்லின் குணங்கள் மாந்தப்புல்லின் குணங்களுடன் ஒத்திருக்கும். இதன் எண்ணெயைக் கஞ்சியோடு கலந்து அருந்த வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், வாந்தி, இவைகள் குணமாகும். இப்புல்லின் எண்ணெயை கீல்பிடிப்பு, வாதநோய், குடைச்சல் இவைகளுக்கு உள்ளுக்கு சாப்பிட்டு, இதன் எண்ணெயோடு தேங்காய் எண்ணெயைக் கலந்து நோயுள்ள இடத்தில் தேய்க்கலாம். சோப்பு, பினாயில் தயாரிப்புகளில் இந்த எண்ணெயை வாசனைக்காக பயன் படுத்துவார்கள்.

* * *

## சுடுகாட்டு மல்லி

**(மிளகாய்ப் பூண்டு)**

**See : Vinca rosea**

**நித்யகல்யாணி பார்க்க**

* * *

## சுண்டைக்காய்

**(அமரக்காய்)**

## Solanum verbascifolium

**(N. O. Solanaceae)**

*Habit* : *Herb or small tree.*

*Parts used* : *Fresh and dried fruit, root.*

*Constituents* : *Alkaloid, Sonanine, Saponin.*

*Action* : *Expectorant, Stomachic, Germicide, Anti-cancer, and Anti-rheumatic.*

Uses : This is a small tree or shrub with white flowers. Dried fruit is roasted and powdered along with salt is given in the treatment of worm infection of the rectum and biliousness. Decoction made outof its dried fruits cures dysentery and piles. This acts as an expectorant. To preserve the fruits, the dried unripened fruits are soaked in curd or

butter-milk with salt during night and dried in the sun during day till it becomes completely dry. They are fried in gingelly oil or ghee and taken as an adjunct to food.

Powdered rootbark if inhaled cures head ache, cold, cephalalgia etc. and causes sneezing. Equal quantity of its root, oil cake of Bassia longifolia and root of Leucas aspera are taken and powdered. If this mixture is inhaled it cures diseases caused by the three kinds of humours in the human body system.

சுண்டைக்காய் சிறுமரம் ஆகும். அமரக்காய் பெரிய இலைகளையும், வெண்ணிற பூக்களையும், சிறிய உருண்டையான காய்களையும் உடையது. காய், சிறிது கசப்புச் சுவையுடையது. இதில் மலைச்சுண்டை, இராமேஸ்வரச் சுண்டை, முச்சுண்டை, கருஞ்சுண்டை போன்ற பல வகைகள் உள்ளன.

இதன் வற்றலை சிவக்க வறுத்துப் பொடித்து உப்புக் கல்லோடு கூட்டிக் கொடுக்க அசீரணம், வயிற்றுப்பொருமல் இவைகள் தீரும். இதை வறுத்துத் தின்ன மலக்கிருமி, பித்த அரோசகம் முதலியவை போகும். கஷாயமாக உபயோகிக்க சீதகக் கட்டு, சீதபேதி, மூலவியாதி கிராணி இவைகள் போகும். இது ஒரு பத்திய உணவாகும். இது கபத்தை அறுக்கும். நெஞ்சு சளி போக்கும். வாயுவைக் கண்டிக்கும். மலக்கிருமிகளைக் கொன்று ஆசனத்துவார சீதகக்கட்டை போக்கும்.

சுண்டைவற்றல் செய்ய, பச்சை சுண்டைக்காயைக் காய வைத்து பிறகு உப்பிட்டபுளித்த மோர் அல்லது தயிரில் ஊறவைத்து பின்பு காயவைக்க வேண்டும்.

வேர்ப்பட்டையைப் பொடித்து முகர தலைநோய், நீரேற்றம், மண்டைக்குடைச்சல், ஒற்றைத் தலைவலி முதலியவை தீரும்.

சுண்டைவேர், தும்பைவேர், இலுப்பைப்பிண்ணாக்கு மூன்றையும் சமஎடை எடுத்து பொடித்து முகர முப்பிணிகளும் தீரும்.

* * *

## சுண்டைக்காய்
### (ஆனை சுண்டைக்காய்)

## Solanum ferox
### (N. O. Solanaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Fruits*

*Constituents* : *Dried fruits and plant contains alkaloid, vitamin 'C' and carotenes.*

*Action* : *Expectorant, Antipyretic, Stomachic and Germicide.*

Uses : The herb is used in the treatment of sore-throat cough, asthma, pain in the chest, dropsy and rheumatism. A decoction of the herb is antipyretic. Roots are made into a paste and if applied cures itch, cuts, wounds and severe bruises. Decoction of the roots is a digestive and relieves labour pain. Seeds and roots are pungent and acts as an appetizer. The gums produced on burning of rhe seeds cures tooth ache.

சுண்டையைப்போன்றே மருத்துவப் பயனுடையது. இதன் வேர் குடிநீர் வாத சுரத்தைக் குணப்படுத்தும்.

* * *

## சுரப்பட்டை
### (சின்கோனா)

## Cinchona cortex, C. officinalis
### (N. O. Rubiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Constituents* : *Cinchona bark contains five chrystalisable alkaloids viz., guinine, cinchonine, guinadine, cinchonidine and hydroquinine.*

*Action* : *Tonic, Stomachic, Astringent, Febrifuge and Antiperiodic. In small doses quinine acts as an*

*Appetizer and increases the flow of saliva and gastric juice. In large doses it causes flatulance and stomach ache.*

Uses : It is the bark of Cincona tree. Bark is usually removed in the fifth or sixth year and the removed bark is dried in the sun. They are made into pieces and rolled up longitudinally into cylinders. The bark moderately grown trees contains rich quality to powerful alkalies. Among them the massed bark is considered medicinally more valuable.

Quinine is prepared from the cinchona bark. It is used to reduce all kind of fevers. It gives relief in typhoid only when it is taken along with mineral acids. It is very useful in spleenic enlargement particularly of malarial origin. If consumed regularly it relieves rheumatic and neuralgic affections. It is a very good remedy for croup, laryngismus striclulous whooping cough, pneumonia pleurpsy, gangrene of the lungs opthalmia, iritis and other infections of the eye connected with suofulous diatheris erysipelas, urticaria, dysentery diarrhoea, gangrene totamas and pthisis. Quinine acts best when given in juice of lime and in solution with sulphuric acid. It also gives good effect if taken on an empty stomach.

சுரப்பட்டை என்பது சின்கோனா அல்லது கொய்னா என்ற மரத்தின் பட்டையாகும். இதை வெயிலில் காயவைத்து உருளைகளாகச் சுருட்டி வைப்பர். இளமையும் முதிர்ச்சியும் அடையாத பாசி படர்ந்த பட்டையே சிறந்தது. இதனின்றுதான் கொய்னா மருந்து தயாரிக்கப்படுகிறது. இம்மருந்து சுரத்தைப் போக்கும், பலந்தரும். விஷசுரங்களுக்கு உலோகதிரவங்களுடன் சிறிதளவு கலந்து கொடுக்க குணப்படும். உடலுக்கு பலத்தை தந்து உடலை தேற்றும். விஷசுரத்தினாலுண்டான சுரக்கட்டிகளுக்கு இதை பேதி மருந்துடன் கொடுக்க குணமாகும். இதைத் தொடர்ந்து சாப்பிட வாதப் பிடிப்பு, நரம்புவலி தீரும். இரைப்பு, மூச்சுத்திணறல், கக்குவான், கொடிய கபவாதசுரம், கண்ணோய், கருவிழியழற்சி அன்றியும் கண்டமாலையினால் உருவாகும் கண்ணோய்கள், உஷ்ணத் துடிப்பு, சீதபேதி, விஷ சுரத்தினாலுண்டாகும் அதிசாரம், அழி விரணம், ஷயம் முதலிய நோய்களை குணப்படுத்தும். இது எல்லா நோய்களையும் கண்டிக்கும். இதனை எலுமிச்சம் பழச்சாறு, தேன், கந்தகத்திராவகம், கடல்புளிப்பு முதலிய அனுபானங்களில் கொள்ளலாம். வெறும் வயிற்றில் உட்கொள்ள நல்லபலன் தரும்.

* * *

## சுரப்பாலை

*Habit* : *Shrub*

*Parts used* : *Bark and latex*

*Constituents* : *Gum*

*Action* : *Gum is Vulnerary and Anthelmintic. Bark is Febrifuge.*

Uses : The latex of this tree is bactericidal. The gum boiled with oil is applied externally on ulcers of the skin. The decoction of the bark reduces the fever, it is bitter in taste.

இதன் பால் கிருமிகளை போக்கும். புண்புரைகளை ஆற்றும். இப்பிசினை எண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சி இரணங்களுக்கும் புண்களுக்கும் பூச குணமடையும். இதன் பட்டை கஷாயம் சுரத்தைக் கண்டிக்கும். பட்டை கசப்புச்சுவையுடையது.

* * *

## சுரிஞ்சான்

### Colchicum luteum

**(N. O. Liliaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Solid extract prepared from the corm or bulbous root*

*Constituentt* : *Seeds and roots both of the bitter variety, found to contain the alkaloid which decomposes into colchiceine, tannic and gallic acids, starch and sugar, gum etc.*

*Action* : *Alterative, Carminative, Demulcent, Laxative, Aperient and Aphrodisiac.*

Uses : The corm is odourless and possesses a bitter and acrid taste. Tuber of this plant is dirty white in colour. There are two varieties in this, one is sweet and the other bitter. The sweet variety is used in medicinal preparations. This cures phlegmatic diseases and rheumatic problems. The

disorder of the liver, spleen, inflammation are cured by this and gives strength. Gonorrhoea also could be treated with this. Phlem is excreted by inducing purging.

சுரிஞ்சான் பழுப்பு நிறக்கிழங்கை கொண்டிருக்கும் சிறுசெடியாகும். தித்திப்பு கசப்பு சுவைகளையுடைய இருவகைகள் உள்ளன. இனிப்புச் சுவையுடைய கிழங்கே மருந்தாகப் பயன்படுகிறது. இது வாத ரோகம், கபரோகம் போக்கும். மண்ணீரல், கல்லீரல் நோய்கள், வீக்கங்களை குணப்படுத்வதுடன் தாதுவை விருத்தி செய்யும். வெள்ளை நோயை குணப்படுத்தும். கபத்தை பேதி மூலமாய் வெளிப்படுத்தும்.

* * *

## சுருள் தேவதாரு

**See : Pinus longifolia**

**தேவதாரு பார்க்க**

* * *

## சுருள்பட்டை

**(வெம்பாடம்)**

**See : Ventilago madraspatana**

**செங்கத்தாரிப்பட்டை பார்க்க**

* * *

## சுரைக்காய்

### Lagenaria vulgaris

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Seeds, seed-oil and pulp of fruit.*

*Constituents* : *Fresh vegetable contains moisture and the dried material contains allbuminoids, scoluble carbohydrates, woody fibre, ash, saponin and fat oil.*

*Action* : *Leaves are Purgative. Fruits are Edible, Cooling, Diuretic and Antibilious. Oil from seeds is Cooling. Seeds are Nutritive and Diuretic.*

Uses : Leaves, stem, fruit and seeds are used in medicinal preparations. The fruit is used as food. Leaves are purgative. Tender leaves cures anaemia, oedema. The fruit is refrigerant and acts as diuretic. The decoction of the fruit cures oedema, ascites, anuresis etc. This gives relief in intestinal ulcers. Sugar mixed with leaf decoction is given in jaundice. The oil of the seed gives relief in headache. The infusion of the stem gives relief in oedema, anuresis and ascites. The pulp of the fruit is used as poultice will cure headache. This also cures burning sensation of the hands and legs. The ashes of the fruit along with honey cures night blindness when applied regularly. Scrofulous affection could be cured by the extract of this fruit when boiled with oil and applied externally.

சுரைக்காயின் இலை, கொடி, காய், விதை அனைத்தும் மருத்துவப் பயனுடையதாகும். காய் ஒரு உணவு பதார்த்தமாகும். இலையினால் பேதியுண்டாகும். கொழுந்து இலையினால் சோகை, உடல் வீக்கம், முத்தோஷம் போவதுடன் நீரிறங்கும். சுரைக்காய் சீதளத்தைத் தரும். மூத்திரத்தை அதிகரிக்கும். கஷாயமானது வீக்கம், மகோதரம், நீர்க்கட்டு இவைகளைக் குணப்படுத்தும். இது குடல்புண்களுக்கு நிவாரணம் தரும். பேதி மருந்தில் சேரும். இலைக் கஷாயத்துடன் சர்க்கரைக் கலந்து காமாலைக்கு கொடுக்க குணம் தெரியும். விதை எண்ணெய் தலைவலியை குணப்படுத்தும். கொடியால் வெறிநோய்கள் தீரும். இதனை குடிநீரிலிட்டு கொடுக்க வீக்கம், பெருவயிறு நீர்க்கட்டு தீரும்.

சுரைக்காயின் சதையை வெப்பத்தினாலுண்டாகும் தலைவலிக்கு நெற்றியில் வைத்துக் கட்டலாம். கைகால் எரிச்சலையும் குணப்படுத்தும். சுரைக்காய் சாம்பலுடன் தேன் சேர்த்துக் கண்ணிலிட மாலைக்கண் போகும். இதன் சாற்றுடன் எண்ணெய் சேர்த்துக் காய்ச்சி கண்ட மாலைக்த் தடவ குணமாகும்.

* * *

## சுவற்று முள்ளங்கி

(நாரக்கரந்தை)

**See : Blumea auritia**

**காட்டு முள்ளங்கி பார்க்க**

* * *

## சூமக்

(கொடி வேலம்)

**See : Caesalpinia coriaria**

**இங்கிமரம் பார்க்க**

* * *

## சுளுக்கு நாயகம்

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

Uses : This plant is commonly used to cure sprain of the heals and legs. This cures of sprains caused by chronic fever, blood clot etc. This is used only as an external application.

இச்செடி கைகால் சுளுக்கைப் போக்கும். இதனால் புள் பார்வை, சுரமெலிவினால் வந்த சுளுக்கு, கைகால்களின் சுளுக்கு, குருதிக் கட்டியதால் ஏற்படும் தடிப்பு ஆகியவை தீரும். இது மேற்பூச்சு மருந்தாகப் பயன்படுகிறது. இதனை அரைத்துப் பற்றிட வேண்டும்.

* * *

## சுளுந்து

## Ixora parviflora

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Small tree*

*Parts used* : *Latex of the tree, flowers and bark*

*Constituents* : *Bark contain fatty matter, tannin and ash containing a trace of feric oxide.*

*Action* : *Bark infusion acts as a Tonic.*

Uses : The flower of this small tree gives internally by mashing it with milk, it cures whooping cough and cough.

சுளுந்து ஒரு சிறு மரமாகும். இச்சிறுமரத்தின் பூக்களைப் பாலில் நசுக்கி உள்ளுக்குக் கொடுப்பதால் கக்குவான், இருமல் குணப்படும்.

* * *

## சூரிய காந்தி

## Helianthus annuus

### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Flowers and seeds*

*Constituents* : *Seeds yield an oil, which is edible.*

*Action* : *Bitter, Carminative, Diaphoretic, Anti-rheumatic and Emollient.*

Uses : Flowers and seeds are of medicinal use. The infusion of the flower cures cold. The oil extracted from the seed is used in cooking. This oil is used externally on the skin which is cruded due to extreme cold. The oil cake is used as cattle feed.

சூரியகாந்திசெடியின் பூவும், விதையும் மருத்துவப் பயனுடையது. இதன் பூவை குடிநீராக்கி கொடுக்க முப்பிணிகளும், நீரேற்றமும் தீரும். இதன் விதையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் சமையல் எண்ணெய்யாகவும் பயன்படுகிறது. இதன் எண்ணெயினைத் தடவ பனியினால் உண்டான கால் வெடிப்புகள் குணமாகும். எண்ணெய் எடுத்த பின் கிடைக்கும் சக்கைகள் கால்நடை உணவாகின்றன.

* * *

## சூரியன் வணங்கி

**See : Desmodium gyrans**
**பார்க்க தொழுகண்ணி**

* * *

## சூரை

## Zizyphus rapica

**(N. O. Rhamnaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Tuber or root and fruits.*

*Action* : *Fruit is Nutritive and Aphrodisiac.*

Uses : The root, fruit and tuber exhibit medicinal properties. This cures stomachache. The root is commonly used in lehyams and choornams.

சூரையின் வேர் அல்லது கிழங்கு பழம் முதலியவை மருத்துவப் பயனுடையவை. இதனால் மந்தம், குடல்வலி தீரும். இதன் வேர் இலேகியங்களிலும், சூரணங்களிலும் பயன்படுத்தப்படுகிறது,

* * *

## செங்கத்தாரிப் பட்டை

## Ventilago madraspatana

**(N. O. Rhamnaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Root-bark*

*Action* : *Antirheumatic, Antiphlogistic, Deobstruent, Vulnerary and Sedative.*

Uses : The root-bark is used in medications. This is commonly used in diabetes, cancer, chronic ulcer, rheumatoid arthritis, joint pain, paralysis etc.

செங்கத்தாரிப் பட்டைகொடியின் வேர்ப்பட்டை மருத்துவப் பயனுடையது. இது நீரிழிவு, ஆறாத இரணம், புற்றுநோய், வாத வீக்கம், வலி, பாரிசவாயு ஆகியவற்றை குணப்படுத்தும்.

* * *

## செங்கொட்டை

**See : Semecarpus anacardium**

**சேராங்கொட்டை பார்க்க**

* * *

## செந்துருக்கம்

**See : Carthamus tinctorius**

**குசும்பா பார்க்க**

* * *

## செந்தொட்டி

**See : Pavonia odorata**

**பேராமுட்டி பார்க்க**

* * *

## செம்பரத்தை

**(சிகப்பு செம்பரத்தை)**

### Hibiscus rosa-sinensis

**(N. O. Malvaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Roots, flowers, seeds and leaves.*

*Constituents* : *Rich in anthocyanin. Oil is extracted from the flowers and leaves.*

*Action* : *Flowers are Refrigerant, Emolliant, Demulcent, and Aphrodisiac, also Emmenagogue. Dark red*

*petals are Demulcent. Leaves are Emollient, Anodyne and Aperient or Laxative.*

Uses : The leaves, flowers and root of this shrub is used in medicinal preparations. Gonorrhoea, menarrogia could be treated with this. The leaf extracted if used as infusion it cures gonorrhoea and gives relief in giddiness. The flower infusion cures urinary treat diseases, mennerogia and it is a coolant to body. Milk, sugar, celery when mixed with this infusion it cures gonorrhoea. The sharbat of the flower cures thirst, heat, burning sensation during micturation etc. This also acts as diuretic. The decoction of the flower cures anuresis, fever, cough etc. The oils prepared from this flower if used regularly on the head it gives relief in burning sensation of the eyes and it also helps in the growth of the hair.

செம்பரத்தை ஒரு குறுஞ்செடியாகும். இக் குறுஞ்செடியின் இலை, பூ, வேர் மருத்துவத் தன்மை உடையது. இதனால் வெள்ளை, குருதிவெள்ளை, பெரும்பாடு, குருதியழல் நோய் தீரும். இலைச்சாற்றை குடிநீராக அருந்த வெள்ளை நோய் குணமாகும். மேலும் இதனால் தலைசுழற்றல் போகும்.

பூவைக் குடிநீரிலிட்டு அருந்த சிறுநீர் நோய்களை கண்டிக்கும், பெரும்பாட்டை நிறுத்தும். உடலுக்கு குளிர்ச்சி தரும். இத்துடன் பால், சர்க்கரை, ஓமம் சேர்த்துக் கொடுக்க வெள்ளை நோய் தீரும். இப்பூவின் சர்பத் தாகம், உஷ்ணம், நீரெரிச்சல், உட்சூடு போக்கும். இது சீதளமுண்டாக்கி மூத்திரத்தை அதிகப்படுத்தும். நீரடைப்பு, சுரம், இருமல் இவைகளை இதன் கஷாயம் தணிக்கும். இதைக்கொண்டு தயாரிக்கப்பட்ட தைலத்தை தொடர்ந்து தலைக்குத் தடவி வர கபால வறட்சி, கண்ணெரிச்சல் இவைகளைப் போக்கி முடியை அடர்ந்து வளரச்செய்யும்.

* * *

## செம்பரத்தை
### (வெள்ளை செம்பரத்தை)

## Hibiscus mutabilis
### (N. O. Malvaceae)

*Habit* : *Shrub.*

*Parts used* : *Similar to H. rosasinensis.*

*Constituents* : *Similar to H. rosasinensis.*

*Action* : *Similar to H. rosasinensis.*

Uses : Though it exhibits the same properties of Hibiscus rosasinensis, only Hibiscus rosasinensis is preferred in medicinal preparations.

சிவந்த செம்பரத்தையின் எல்லா குணங்களும் இதற்குண்டு. ஆனால் சிவப்பு வகைதான் எல்லாவற்றிலும் பயன்படுத்தப்படுகிறது.

* * *

## செம்பருத்தி

## Gossypium arboreum
### (N. O. Malvaceae)

*Habit* : *Shrub or small tree.*

*Parts used* : *Flower.*

*Constituents* : *Flowers contain gossypol.*

*Action* : *Refrigerant, Demulcent, Stimulant, Diuretic and Astringent.*

Uses : The flowers are red in colour. It cures fatigue, dysentery, diabetes, gonorrhoea and thirst. Leaves or tender fruit infusion gives relief in above said diseases. The decoction made out of cardamum, celery, bark of cinnamon along with tender fruit or leaves of this plant check diarrohoea. Petals of the flower soaked in breast milk and squeezed juice if taken internally it cures the eye diseases of the children. Infusion of the root cures chronic fever. The juice of the

leaves (50 ml) if taken internally cures allergic manifestation of the insect bites.

பருத்தி வகையைச் சேர்ந்தது செம்பருத்தி. இம்மரத்தின் பூ செந்நிறமாக இருக்கும். இதனால் உடல் அழற்சி, குருதியழல் நோய், வயிற்றுக்கடுப்பு, நீரிழிவு, வெள்ளை, ஊழிக்கழிச்சல்கள், நீர் வேட்கை தீரும். இலையை அல்லது பிஞ்சுக் காயைக் குடிநீரிலிட்டு உள்ளுக்குக் கொடுக்க மேற்கண்ட நோய்கள் குணமாகும். இத்துடன் ஏலக்காய், ஓமம், கருவாப்பட்டை முதலியவை சேர்த்து கஷாயம் செய்து அருந்த கழிச்சல் நிற்கும்.

பூவின் இதழ்களை தாய்ப்பாலில் அல்லது பசுவின் பாலில் ஊறவைத்துப் பிழிந்து சாற்றை உள்ளுக்குக் கொடுக்க குழந்தைகளின் கண்ணோய் தீரும். வேர்க்குடிநீர் நாள்பட்ட சுரநோய்களை குணப்படுத்தும்.

இதன் இலையை இடித்து கசக்கிப்பிழிந்து சாறுஎடுத்து 50மில்லி அளவு உள்ளுக்குச் சாப்பிட வண்டுக்கடியினால் உடல் முழுவதும் ஏற்படும் தடிப்புகள் நீங்கும். இதற்கு எட்டுநாள் சாப்பிட வேண்டும்.

* * *

## செம்பை

**(கருஞ்செம்பை, சித்தகத்தி)**

## Sesbania aegyptiaca

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Small tree.*

*Parts used* : *Seeds, bark and leaves.*

*Constituents* : *Essential oil is obtained. Seeds contain fat, albuminoids, carbohydrates, cellulose and ash.*

*Action* : *Seeds are Stimulant, Emmenagogue, Astringent, Anthelmintic, Diuretic and Resolvent.*

Uses : The small tree bears yellow flowers. The leaves, flowers, seeds and roots exhibit medicinal properties. The leaves cures gonorrhoea, boils, ulcers and eczema. This cures common cold. Heated leaves are applied externally for the oedema. The leaf extract eradicates the intestinal worms. Leaves along with common salt and Acalypha indica are made into a paste and this is used as external application for eczema,

but the bark paste also should be taken internally. The flower oil cures migranes and head ache. The paste of the seeds if taken internally it checks diarrhoea and menorrhagia. The powdered root mixed with vinegar is applied on the spot where scorpion has stung. It relieves pain immediately.

கருஞ்செம்பை ஒரு சிறுமரம் ஆகும். மஞ்சள் நிறப்பூக்களைக் கொண்டிருக்கும். இதன் இலை, பூ, விதை, வேர் ஆகியவை மருத்துவப் பயனுடையது. இதன் இலையால் வெள்ளை, புண், கட்டி, கரப்பான், கபம், தீக்குற்றங்கள் போகும். மேலும் இது சலதோஷத்தை நீக்கும். இலையை வதக்கி வீக்கங்களுக்கு வைத்துக் கட்ட பழுத்து உடையும். மேலும் புண் வீக்கங்களின் நீரை இழுக்கும்.

பச்சிலை சாறு வயிற்றுப் புழுக்களை வெளியாக்கும். இலையுடன் உப்பும், குப்பைமேனியிலையும் சேர்த்து அரைத்து சொறி சிரங்கிற்கு தடவ குணமடையும். இத்துடன் பட்டையை அரைத்து உள்ளுக்குக் கொடுக்கவேண்டும்.

இதன் பூத்தைலம் மண்டைக்குத்தல், தலைவலி நீக்கும். இதன் விதைகளை அரைத்து உள்ளுக்குச் சாப்பிட செரியாகழிச்சல், பெரும்பாடு, கட்டி இவைகள் நீங்கும்.

வேரை பொடித்து காடியுடன் குழைத்து தேள்கடி வாயில் வைத்து தேய்க்க வலி தீரும்.

* * *

## செம்பை

**(முள் செம்பை, நீர்செம்பை)**

## Sesbania aculeata

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Small tree.*

*Parts used* : *Stalks and leaves.*

Uses : It is used as manure. Leaves are used to cure eczema, boils and bruises.

முள் செம்பை பசுந்தாள் உரமாகவும், கரப்பான், சொறி சிரங்கைக் குணப்படுத்தவும் பயன்படுகிறது.

* * *

# செருப்படை

## (சிறு செருப்படை)

## Glinus lotoides

### (N. O. Ficoidae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Antirheumatic, Refrigerant, Diuretic, Demulcent, Stimulant and Tonic.*

Uses : Infusion made out of this plant cures rheumatism, phlegmatic diseases indigestion, boils, dyspepsia and leucorrhoea. The drug is used in calculation processes.

Juice of the leaves along with juices of neem bark, leaves of Alteranthera sessilis and honey is an effective remedy for whooping cough.

To treat anaemia, leaves along with Acalypha indica and Eclipta alba are dried and powdered. This powder if taken with sugar daily, it cures anaemia. This also strengthens liver and spleen.

Dried powdered leaves are prescribed for gonorrhoea gout and dyspepsia. Decoction of the leaves reduces the rheumatic inflammations, loss of appetite, numbness in rheumatic complaints etc. The dried plant mixed with fenugreek seeds and made into a paste. This is used as an external application to boils and absesses.

சிறு செருப்படையின் குடிநீர் வாதம், கபரோகங்கள், மந்தம், சூலை, குன்மம், வெள்ளைவீழல், நீக்கும். இது உலோகங்களை செந்தூரமாக்க உதவும்.

வேம்பின் பட்டையை பொன்னாங்கண்ணியுடன் இதன் இலை சேர்த்து நசுக்கி சாறு எடுத்து தேன் கூட்டிக் கொடுக்க குற்றிருமல், மேகநோய்கள் போகும்.

சோகை நோய்தீர இவ்விலையுடன் குப்பைமேனி, கரிசலாங் கண்ணி இலை சேர்த்து உலர்த்தி பொடித்து தினமும் ஒரு ஸ்பூன் அளவு சர்க்கரையுடன் சாப்பிட சோகை நோய் தீரும். மேலும்

இதனால் கல்லீரல், மண்ணீரல் போன்ற வயிற்று உறுப்புகள் வலிமை பெறும்.

* * *

## செருப்படை

### (பெருஞ் செருப்படை)

### Coldenia procumbens

**(N. O. Boragineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves.*

*Action* : *Leaves are Anti-rheumatic.*

Uses: This herb is used in treating rheumatism and inflammation.

பெருஞ்செருப்படையால் வாதநோய், வாதவீக்கம் குணப்படும். பாதரசம் வெண்ணெய்யாகும்.

* * *

## செலுப்பை மரம்

### Elaeodendron glaucum

**(N. O. Celastraceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, root and bark.*

*Constituents* : *Bark contains resin and tannin. Ash contains calcium carbonate and calcium oxalate.*

*Action* : *Bark is strong Astringent. Resin is Anti-dote.*

Uses : It is a tree with small yellow flowers. Root is an anti-dote for snake bites. Root-bark is made into a paste with water and applied externally for swellings.

சிறியமஞ்சள் நிறப்பூக்களையுடையது செலுப்பைமரம். இலையும் பட்டையும் துவர்ப்புச் சுவையுடையது. இதன் வேர் பாம்புக்கடிக்கு

உதவும். வேர்ப்பட்டையைத் தண்ணீரிலரைத்து வீக்கங்களுக்குப் பூச வீக்கம் வடியும்.

* * *

# செவ்வியம்

### (மிளகு வேர்)

## Piper chaba

### (N. O. Piperaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Root*

*Constituents* : *An essential oil is obtained.*

*Action* : *Fruit is considered Aromatic, Stimulant, Carminative, Resolvent, Anti-rheumatic, Cooling and Expectorant.*

Uses : This is one of the five important medicinal roots. It is a stem or root of the climber Piper nigrum. This also possesses the properties of pepper. It is used in treating nausea, chronic fever, typhus fever, chronic cough, phlegmatic disorder, sore throat and diseases due to vegetable poison. It is made into a paste and boiled in water and filtered. This decoction mixed with honey is prescribed for cough and bronchitis. This also acts as a tonic.

செவ்வியம் பஞ்சமூலத்திலொன்று. இதுவே மிளகின் வேர் எனப் படுவது. மிளகின் குணங்களும் செவ்வியத்திற்கு உண்டு. இதனால் சூலை, சுவையின்மை, முப்பிணி, நாள்பட்ட சுரம், சன்னி பாத சுரம், அரோசகம், நீடித்த இருமல், வெறி, குரற்கம்மல், தொண்டை நோய்கள் தீரும். மேற்கண்ட நோய்கள் தீர இவ்வேரை இடித்து 2 கிராம் எடை அளவு தினமும் சாப்பிடவேண்டும்.

இதை இடித்து கஷாயமிட்டு தேன் சேர்த்து அருந்த கபத்தினால் ஏற்பட்ட இருமல், இரைப்பு முதலியவைகள் போகும். உடலுக்கு ஆரோக்கியத்தையும் சுறுசுறுப்பையுங் கொடுக்கும்.

* * *

## செவ்வந்தி

**See : Chrysanthemum indicum**

**சாமந்தி பார்க்க**

* * *

## சேசி

## Salvia indica

**(N· O. Labiatae)**

*Habit* : *Herb.*

*Parts used* : *Leaves.*

*Constituents* : *A volatile oil.*

*Action* : *Leaves are Diaphoretic, Spasmodic and Astringent.*

Uses : Infusion of the leaves acts as tonic. Decoction of the leaves if used as a mouth wash, it cures stomatitis, sore throat etc. Leaves ground if taken along with water, it checks nausea in fever.

சீமைக்கற்பூர இலை எனப்படும் சேசி நெருக்கமாக இருக்கும். இலை கசப்பாயும், மிக்க காரமாயும், வாசனையாயும், துவர்ப்பாயுமிருக்கும்.

இலைக் கஷாயம் சுறுசுறுப்பை உண்டாக்கும். இதைக்கொண்டு வாய்க்கொப்பளிக்க வாய் இரணங்களும், தொண்டை இரணங்களும் ஆறும். சுரமுடையவர்களின் வாந்தியை நிறுத்த இவ்விலைகளை அரைத்து நீரில் கலக்கி கொடுக்கலாம்.

* * *

## சேதாரம்

(வெட்சி, கோரன்பூ)

## Ixora coccinea

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Root and flowers.*

*Constituents* : *Root is found to contain an aromatic acrid oil, tannin, fatty acids and a white crystalline substance. Flowers contain a colouring and astringent, organic acid, a wax, a yellow colouring matter and ash.*

*Action* : *It is Sedative, Stomachic, Tonic, Intestinal Anti-septic, Cholagogue and a true intestinal Alterative. Externally Astringent, Antiseptic, Appetizer and Emmenagogue.*

Uses : Root is used to treat gonorrhoea, dysentery and menstrual disorders.

வெட்சிமரத்தின் வேர் வெள்ளை நோய், சீதபேதி, மாத விடாயின்போது வெள்ளை விழுதல் போன்றவற்றிற்கு குணம் தரும். பசியைத் தூண்டும்.

* * *

## சேப்பங் கிழங்கு

(சேம்பு, சேனை)

## Arum colocasia

**(N. O. Araceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Petioles or leaf-stalks and corms.*

*Constituents* : *Tuber, leaves and stems contain needle shaped crystals insoluble in acetic acid but soluble in dilute nitric or hydrochloric acid. Corms contain much starch.*

*Action* : *Juice of the petioles is styptic, Stimulant and Rubefacient. Internally the corm is Laxative, Acrid, Emollient, Nutritive and Restorative.*

Uses : Tuber of this herb is edible. Petioles and tubers exhibit medicinal properties. Leaves and petioles taken regularly cures dysentery and piles. Juice of stem prevents the excess bleeding of the wounds and used in the healing of the wound. Pressed juice of this also cures otalgia, otorrhoea and otitus. This acts as an antidote for honey bee bites.

Mashed tuber along with common salt is used as an external application for herpes, scrofula, gonorrhoea and venereal ulcers.

சேப்பங்கிழங்கானது மெல்லிய தண்டுகளையும், அடியில் கிழங்கு களையும் கொண்டிருக்கும் சிறுசெடி. இதன் கிழங்கு உணவுப் பதார்த்தமாகப் பயன்படுகிறது. தண்டு, இளங்குருத்து, கிழங்கு ஆகியவை மருத்துவப் பயனுடையது.

இதன் இலை இரத்தக்கடுப்பு, மூலம் நீக்கும். இலையையும் தண்டையும் அடிக்கடி உணவில் சேர்த்துக்கொள்ள மூலநோய் குண மாகும். தண்டின் சாறு வெட்டுக்காயத்தின் இரத்தப் பெருக்கை நிறுத்தி இரணத்தை ஆற்றும். காது நோய்களுக்கும், கிரந்தி நோய் களுக்கும் இச்சாற்றைப் பிழிய குணமாகும். குளவி கொட்டிய இடத்தில் இதன் கஷாயத்தைவிட குணமாகும்.

கிரந்தி, வீக்கம், கண்டமாலை, வெள்ளை மேகம் ஆகியவை குணமாக இக்கிழங்கை உப்புடன் சேர்த்து இடித்து வைத்து கட்ட வேண்டும்.

* * *

## சேப்பங் கிழங்கு
**(காட்டு சேப்பங்கிழங்கு)**

## Arisema tortuosum
**(N. O. Araceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Tuber*

*Action* : *Similar to A.colocasia.*

Uses : Similar to A. colocasia

சேப்பங்கிழங்கின் குணங்கள் காட்டு சேப்பங்கிழங்கிற்கும் உண்டு.

* * *

# சேராங்கொட்டை

## Semecarpus anacardium

**(N. O. Anacardiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit (seeds), gum and oil.*

*Constituents* : *Kernel of the nut contains an oil, the pericarp of fruit contains a bitter and powerful astringent oil. This contains bhilawanol and anacardiac acid.*

*Action* : *Caustric, Irritant, Vesicant and Alterative. Oil is powerful Antiseptic and Cholagogue. Ripe fruits are regarded as Stimulant and Digestive. Kernel is a good Nutritive food, also Appetizer, Digestive and Carminative.*

Uses : The nut is outside the fruit and is attached to the fleshy torus. The nut is used in medicines. Oil extracted from the nuts is useful as an external application. The shade of this plant is allergic to some people. Every part of this tree is poisonous except the fruit. Fruit is edible and sweet in taste.

Nut is poisonous but it cures many diseases, if it is employed in chronic cases of veneral complaints, rheumatic and gouty affections. This also cures sprains, ulcerous sores, leprosy, scrofula, palsy, epilepsy, herpes and leucoderma. Decoction of tamarind leaves relieves the swelling and blisters caused by these nuts. Milk or latex of the nut, when it is fresh white and late it turns into black colour. This is insoluble in water.

If the mashed nut is placed in the womb, it induces abortion. If the latex of the tree is used as an ingredient in medicines, it cures worm infection, tuberculosis, rheumatism, arthritis, herpes, palsy, paralysis, flatulent dyspepsia, piles and leprosy.

Oil extracted from the nut is used as nervine tonic. When it is used externally, it acts as rubefacient and vesicant. Corolla or petals of the flowers are edible.

Seeds are very useful in treating rheumatoid arthritis also.

இம்மரத்தின் கொட்டை பழத்தில் இல்லாமல் முந்திரியைப் போன்று வெளியில் ஒட்டிக் கொண்டிருப்பதால் "சேராங் கொட்டை" எனப்படுகிறது. இதன் கொட்டையும், பருப்பும் மருந்திற்காகவும், இதன் எண்ணெய் மேற்பூச்சு மருந்தாகவும் பயன்படுகிறது. இம்மரத்தின் நிழல்கூட சிலருக்கு ஒத்துக் கொள்ளாமல் உடம்பெரிச்சலையுண்டாக்கும். இதன் பழம் இனிப்பாகவும் உண்ணக்கூடியதாகவும் இருக்கும். பழம் உள்ளழற்சியைக் போக்கும்.

இக்கொட்டை மிக விஷத்தன்மையது. ஆனால் நோய்களை குணப்படுத்துவதில் சிறந்தது. தீராத மேகவாத சூலைப்பிடிப்புகள் வலி, குடைச்சல், சுளுக்கு, குட்டம், கண்டமாலை, கிரந்திக்கூட்டம் குன்மம், தீராக்கடி, வெண்குட்டம் நீக்கும். இதனாலுண்டாகும் நஞ்சை முறிக்க புளிய இலை குடிநீர் அல்லது தேங்காய்ப் பால் அருந்தவேண்டும். இக்காயின் பால் முதலில் வெளுப்பாகவும் பின்பு கருப்பாகவும் மாறிவிடும். இது தண்ணீரில் கரையாது. எண்ணெயில் கரையும். இக்கொட்டை நீரைக் கட்டும். இதை நசுக்கி கர்ப்பவாயில் வைக்க கருவையழிக்கும். இம்மரத்தின் பாலைக் கூட்டித் தயாரித்த மருந்தால் புழு, சயம், கீல்வாதம், கிரந்தி, திமிர்வாதம், வாதம், குன்மம், உள்மூலம், காணாக்கடி, குட்டம் இவை விலகும்.

விதை எண்ணெய் நரம்புக்கு வலிவை கொடுப்பதுமன்றி உடம்பைப் பலப்படுத்தும். வெளிப்பூச்சு மருந்தாக உபயோகப் படுத்த சூட்டையுண்டாக்கி சருமத்தை சிவக்கச் செய்வதுடன் கொப்புளமுண்டாக்கும். பூவிதழை உண்பர். விதையை உண்ண சுறுசுறுப்பைத் தருவதுடன் ஞாபக சக்தியை அதிகப்படுத்தும்.

மேலும் இது முடக்கு வாதத்திற்கு சிறந்த குணம் தரும். இதை சுத்திக்கிரமம் செய்துதான் பயன்படுத்தவேண்டும்.

* * *

## சைதூன்

**(கரிவெட்டி மரம்)**

## Olea europaea

**(N. O. Oleaceae)**

*Habit* ; *Tree*

*Parts used* : *Fruits*

*Constituents* : *Fruit, when it is ripe, contain the largest amount of oil. In addition to the oil contained the fruit or pericarp, the seeds also contain a certain proportion of oil.*

*Action* : *Alterative, Demulcent, Depurative, Emollient, Nutritive, Antipyretic and Refrigerant.*

Uses : The oil is expressed from the fruit of this tree and is used in medicines. It is laxative and antidote. It cures burns. If taken internally it acts as tonic and anthelmintic. This also gives relief from chronic diarrhoea, typhus fever, stomach ache and poisonous bites. This is used as an emollient in enemas to relieve constipation and stomach ache. Oil is used as an external application to cure boils, bruises, burns and other skin diseases.

''சைதூன்'' மரத்தையே கரிவெட்டிமரம் என்பர். இதன் பழத்தினின்று எண்ணெய் வடிப்பர். இதனை சைதூன் எண்ணெய் என்பர். இந்த எண்ணெய் பல மருத்துவ குணங்களையுடையது. இனிப்புச்சுவையுடைய இது மலத்தை இளக்கும். அழற்சியைப் போக்கும். விஷத்தை முறிக்கும். சாந்தமாய் பேதியாகச் செய்யும். மேலுக்குப் பூச நமைச்சலை போக்கும். சுட்டப்புண், வெந்நீரால் வெந்த புண்களின் அழற்சியைப் போக்கும். இது உடம்பை போஷிக்கும. நாக்குப் பூச்சிகளைப் பேதியினால் வெளிப்படுத்தும்.சன்னி பாத சுரம், கிராணிக்கழிச்சல், வயிற்றுவலி, விஷக்கடி இவைகளை குணமாக்கும். மேலும் ஆசனத்தில் பீச்சிட வயிற்றுவலி, மலபந்தம், போவதுடன் திமிர்ப்பூச்சி வெளிவரும். இதை களிம்பாக செய்து பூச சொறி, சிரங்கு, தீப்புண், வெந்நீர்இரணம், சருமநோய் போன்றவற்றைப் போக்கும்.

* * *

## சொத்தைக்களா

## Flacourtia sepiaria

### (N. O. Flacourtiaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Root, leaves, bark and fruit.*

*Action* : *Root and leaves are Antidote for snake bites. Bark is Antirheumatic.*

Uses : Decoction of the root or leaves is an antidote for snake bites. Bark boiled in oil is used as an external application for rheumatism and gout.

சொத்தைக்களாவின் காய் பட்டாணியைப் போலிருக்கும். இதன் வேர், இலை கஷாயம் பாம்புக் கடிவிடத்தை இறக்கும். பட்டையை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி வாதநோய்க்குத் தடவ வலி தீரும். காய் தின்பதற்கு உதவும்.

* * *

## சொர்ணப்பட்டி

## Stenolobium stans

### (N. O. Bignoniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Flowers and root.*

*Constituents* : *An oil.*

*Action* : *Root is Antidote.*

Uses : This is a tree with small yellow flowers. Oil is extracted from its flowers. Root is a remedy for snake bite, rat bites and for scorpion sting.

நாக சண்பகம் எனப்படும் சொர்ணப்பட்டி மஞ்சள் நிறப் பூவையுடையது. இதன் பூவிலிருந்து ஒருவிதமான எண்ணெய் எடுப்பர். இதன் வேரானது பாம்புக்கடி, எலிக்கடி போன்ற விசக் கடிகளுக்கு சிறந்த மருந்தாகும்.

* * *

## சோதி மூலி

### (கொடி வேலி)

**See : Plumbago zeylanica**

**சித்ரமூலம் பார்க்க**

* * *

## சோதிப் புல்

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

Uses : This grass cures all the eye diseases.

காந்திப்புல் எனப்படும் ''சோதிப்புல்'' சிறு புல்லாகும். இது பலவித கண் நோய்களை நிவர்த்திக்கும். அவையாவன விழிகாசப் படலம், கருவிழி நோய், தீர்ப்பில்லம், மூசாந்திரம், ஊண் படலம், பூ வெண்புள்ளி முதலியன.

* * *

## சோமவல்லி

Asclepias acida

**(N. O. Asclepiadaceae)**

**See : Sarcostemma brevistigma**

**கொடிக்கள்ளி பார்க்க**

* * *

## சோம்பு

**See : Pimpinella anisum**

**பெருஞ்சீரகம் பார்க்க**

* * *

## சோம்பு

**(சீமை சோம்பு, கேக்கு விதை)**

**See : Carum carvi**

**சீமை பெருஞ்சீரகம் பார்க்க**

* * *

## சோயா பீன்ஸ்

### Glycine soja

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *An essential oil.*

*Action* : *Demulcent, Emollient, Nutritive, Laxative, Refrigerant and Stimulant.*

Uees : Seeds are proteinaceous and acts as tonic. Oil is extracted from the seed is used as a food.

சோயாபீன்ஸ் ஒரு சிறந்த சத்துணவாகும். இதன் விதை உடலுக்கு பலத்தை தரும். இதனை பயன்படுத்தி பல உணவு பொருட்களும் எண்ணெயும் கூட தயாரிக்கப்படுகின்றது.

* * *

## சோளம்

### Sorghum vulgare

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Contains protiens and carbohydrates.*

*Action* : *Nutrient, Laxative, Refrigerant and Stimulant.*

Uses : This is one of the common cereals. If this is consumed in large quantity, it produces skin problem like eczema and pruritis. This is commonly given to convalasing patients as gruel to regain the health. The ash of the spike along with salt is proved effective in whooping cough, throat infection etc.

சோளம் உணவு வகை பயிர்களுள் ஒன்று. இது வீரியவிருத்திக்கு சிறந்தது. இதனை அளவுக்கு அதிகமாக உண்டால் சொறி, சிரங்கு, கரப்பான் இவைகளையுண்டாக்கும். ஆண்மையை உண்டாக்கும்.

இதை கஞ்சி செய்து நோயுள்ளவர்களுக்குக் கொடுக்க உடல் வன்மை யடையும். இக்கதிரின் விதையை எடுத்தபின் உள்ள இழைகளை எடுத்து சாம்பலுடன் உப்புச் சேர்த்துக் கொடுக்க இருமல், கோழைக் கட்டு, கக்குவான் குணமாகும்.

* * *

## மக்காச் சோளம்

## Zea mays

### (N. O. Gramineae)

*Habit* : *Herb*

*Parts used* : *Styles, Stigmas and seeds*

*Constituents* : *The filaments contains maizenic acid, resin and other salts.*

*Action* : *Nutritive, Laxative, Refrigerant and Stimulant.*

Uses : This is the superior variety of all. This is given to children and convalasing patients to regain strength. Sugar is made from this plant. This cures tuberculosis. The decoction made out of its filaments cures anuresis. dysuria etc. The ash of the spongy stalk along with salt will cure phlegm, whooping cough etc. This contain carbohydrates which retains the proteins. This is why it is added in poultry feeds which brightens the yellow yolk. Certain acids are also made from the ash of the stalk. This acid is used as catalyst in plastic manufacturing. This seeds are tasty and it could be given to patients also.

சோளம் வகைகளில் மக்காச்சோளம் மிகவும் சிறந்தது. இச்செடியிலிருந்து சர்க்கரை எடுப்பர். இதன் நொய்யை குழந்தை களுக்கும் நோயாளிகளுக்கும் கொடுக்க உடல் வலிமையடையும். இது க்ஷயரோகத்தைக் குணப்படுத்தும். இதன் சடையை கஷாய மிட்டுக் கொடுக்க நீரடைப்பு, நீர்ச்சுருக்கு முதலான நோய்கள் குணப் படும். இதன் தட்டையை எரித்த் சாம்பலுடன் உப்பு கலந்து கொடுக்க நெஞ்சுவலி, கக்குவான் இருமல் தீரும். இதில் புரதசத்தை நிலை நிறுத்தும் கார்போஹைட்ரேட்டுகள் உள்ளன. இதன் காரண மாக கோழி தீவனங்களில் இதனை முட்டையின் மஞ்சள் கருவை

மஞ்சளாக்கும் பொருட்டு சேர்க்கின்றனர். சோளத்தை உதிர்த்து எடுத்தபின் இருக்கும் கதிரைஎரித்து ஒரு சில அமிலங்களை தயாரிக்கின்றனர். இந்த அமிலம் பிளாஸ்டிக் செய்யும் தொழிலில் வினையூக்கியாக செயல்படுகிறது. சிகப்பு நிற சோளமும் இதில் ஒரு வகையாகும். இச்சோளம் சுவையானது. இதையே சோளப்பொறி தயாரிக்கப் பயன்படுத்துவார்கள். நார்ச்சத்து மிகுந்து இருப்பதால் நீரிழிவு நோயாளிகளுக்கு இக்கஞ்சி சிறந்த உணவாகும்.

* * *

## டிக்காமல்லி

**See : Gardenia gummifera**

**பார்க்க : கும்பை**

* * *

## டுரியன்

### Durio zibethimus

**(N. O. Bombacaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruits, leaves and roots*

*Constituents* : *Fruits are rich in vitamins and minerals.*

*Action* : *Fruit is a Tonic, Leaves and roots are Febrifuge and Antisyphilitic.*

Uses : Decoction of the roots are used in treating fever. Pericarp of the fruit is bruised and if applied gives relief from skin diseases.

டுரியன் உடலுக்கு குளிர்ச்சி தரும். இதன் பழம் தினமும் உட்கொள்ள ஆண்மையைப் பெருக்கும்.

* * *

# தகரை

## (ஊசி தகரை)

## Cassia tora

### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, seeds and roots.*

*Constituents* : *Both leaves and seeds contain a glucoside resembling chrysophanic acid. Leaves contain cathartin, Emodin and glucosides.*

*Action* : *Leaves are internally gentle Aperient, Purgative, Laxative, Febrifuge and Germicide. Seeds are Anti-pruritic.*

Uses : Leaves have a pungent and nausiating smell. Tender leaves ground in vinegar or lemon juice if used as an external application it cures ringworm infection, boils, ulcers, etc. This also cures ricket fever and indigestion. Seeds are antidote and cures chronic skin disorders. Decoction of the leaves is purgative and cures the fever due to dentition.

The root or leaves roasted in castor oil if used as an external application for foul smelling ulcers and boils it cures them. The seeds soaked in the juice of Euphorbia nerifolia and made into a paste with cow's milk is an ideal external application for ringworm, boils etc. The powdered seed with butter is also used for skin ulcers. This acts as antipruritic also. This cures joint pains, insect bites, rheumatism etc., Dye is made out of this seeds. This is exported to many countries.

ஊசி தகரை வழவழப்பான இலையையும் வெகுட்டலான நாற்றத்தையும் உடையது. இலைக்கொழுந்தை எலுமிச்சை ரசத்துடனோ காடியுடனோ சேர்த்தரைத்துப் பூச படை நோய்கள் நீங்கும். இது படர்த்தாமரை, சொறி, மந்தம், எலும்புருக்கிச் சுரம் இவைகளைப் போக்கும். தகரை விதைகள் வண்டுகடி, கடுவன், நாட்பட்ட நமைப் புடை, அனல் இவைகளைப் போக்கும். இலைக் கஷாயம் இலேசாக பேதியாகச் செய்யும். குழந்தைகளுக்குப் பல் முளைப்பதனால் உண்டாகும் சுரத்தையும் குணப்படுத்தும். வண்டுகள் கொட்டின இடத்தில் இலையைக் கசக்கித் தேய்க்க வலி குறையும். இதனால் தேள்

எடுப்பவர்கள் தகரை இலையை எப்போதும் கையில் வைத்திருப்பார்கள்.

தகரை வேர் அல்லது இலையை ஆமணக்கெண்ணெய்யில் வதக்கி நாற்றமுள்ள புண்களுக்கு வைத்துக்கட்ட குணமடையும். கட்டிகளுக்கு கட்ட பழுத்து உடையும்.

விதையை இலைக்கள்ளி இரசம் விட்டு ஊற வைத்து, பசுநீர் விட்டு அரைத்து படர்த்தாமரைக்கும், சிறு கட்டிகளுக்கும் போட குணமாகும். விதையை அரைத்து மோரில் கலந்து சிரங்குகளுக்குப் பூச நமைச்சல் அடங்குவதுடன் வண்டுக்கடி, அரைக்கடுவன், சூலைப் பிடிப்பு, தொடை வாதம், கீல் நோய் இவைகளைக் குணப்படுத்தும். தகரை இலை இந்தியாவிலிருந்து டன் கணக்கில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது.

* * *

## தகரை
### (பெரிய தகரை)

## Cassia sophera
### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, leaves, seeds, root and bark.*

*Constituents* : *Emodin and chrysophanic acid.*

*Action* : *Bark, leaves and seeds are Cathartic. Root is considered Expectorant. Leaves are Anthelimintic and Antiseptic.*

Uses : The seed and leaves are used in treating ringworm, eczema, indigestion, ricket fever. This also cures nsect bites, chronic pruritis, boils due to extreme heat etc.

பெரிய தகரையின் விதையும், இலையும் படர்த்தாமரை, மந்தம், எலும்புருக்கிச் சுரம் இவைகளைப் போக்கும். மேலும் வண்டுக்கடி, கடுவன், நாட்பட்ட நமைப்புடை, அனல், அக்கி போக்கும்.

* * *

## தகரை

### (நாட்டு தகரை)

## Cassia occidentialis

### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, seeds and roots.*

*Constituents* : *Seeds contain fatty matters, tannic acid, sugar, gum, starch, cellulose, acerosine and traces of salts of calcium, phosphate, sodium, magnesium and iron. Root contains a resin, a bitter non-alkaloidal principal, emodin, oxymethyl-anthraquinones and toxalbumin.*

*Action* : *Leaves, roots and seeds are Purgative. Root is also considered as Diuretic and Antiperiodic.*

Uses : This exhibits all the properties of cassia tora.

தகரையின் எல்லா குணங்களும் நாட்டு தகரைக்கும் உண்டு.

* * *

## தகரை

### (சிறு தகரை)

## Cassia obtusifolia

### (N. O. Caesalpiniaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, leaves and roots.*

*Constituents* : *Emodin*

*Action* : *Similar to Cassia tora*

Uses : The seeds of this plant are used in treating eczema and herpes.

சிறு தகரையின் விதை கரப்பான், கிரந்திக்கு குணம் தரும்.

* * *

## தகரை

(வெள்ளை தகரை)

## Bassia obtusifolia

**(N. O. Caesalpiniaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark and leaves.*

*Constituents* : *Glucosides and chrysophanic acid.*

*Action* : *Similar to C. sophera.*

Uses : This is used for all types of skin disorders. Bark and leaves are used in diabetes and gonorrhoea.

வெள்ளை தகரை சரும நோய்களுக்கு மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## தக்காளி

## Physalis indica

**(N. O. Solanaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and fruits*

*Constituents* : *Physalien-B,physalin-B,Epoxide is present.*

*Action* : *Alterative, Diuretic, Aperient, Refrigerant and Laxative.*

Uses : This plant bears yellow flowers and the fruit is a nutritive food. This improves blood. The plant extract with vinegar if applied externally on breast it acts as galactagogue. The fruit of the plant is given in gonorrhoea, oedema etc.

சிறு மஞ்சள் பூக்களுடைய தக்காளிச் செடியின் காய், பழம் ஒரு சிறந்த உணவுப் பதார்த்தமாகும். இது இரத்த விருத்தி செய்யும், சீதளம் தரும். தக்காளியின் சமூலத்தை காடி விட்டரைத்துக் கட்ட முலைப்பால் சுரக்கும். பழம் மேகநோய், சிறுநீர் எரிச்சல், வீக்கம் முதலிய நோய்களைப் போக்கி, உடலைக் காக்கும்.

* * *

## தக்காளி
### (மிளகு தக்காளி)

## Physalis peruviana
### (N. O. Solanaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Fruits*

*Constituents* : *Similar to P. indica.*

*Action* : *Similar to P. indica.*

Uses : This has the same property of P. indica. Moreover indigestion, fatigue, fever, oedema could be treated with this. It helps in calcination of white lead.

தக்காளியின் குணங்களே மிளகு தக்காளிக்கும் உண்டு. கடும் மாந்தம், ஆயாசம், சுரம், வீக்கங்களைக் குணப்படுத்தும். வெள்ளீயத்தை செந்தூரமாக்கும்.

* * *

## தக்காளி
### (சிறு தக்காளி)

## Physalis minima
### (N. O. Solanaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Fruits.*

*Action* : *It is Alterative, Diuretic, Tonic, Aperient and Purgative.*

Uses : This is used as refrigerant and cures all the spleen disorders.

சிறு தக்காளி உடலுக்கு குளிர்ச்சியுண்டாக்குவதுடன் மண்ணீரல் நோயைக் குணப்படுத்தும்.

* * *

## தக்கை

**See : Aesheynomene aspera**

பார்க்க: ஆற்று நெட்டி

* * *

## தக்கைப் பூண்டு

**See : Sesbania aculeata**

செம்பை வகைகளில் முள்செம்பை பார்க்க

* * *

## தணக்கு மரம்

Gyrocarpus jacquini

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds*

Uses : The seeds of this plant is used in making necklaces and rosaries.

தடவு மரம் எனப்படும் தணக்கு மரத்தின் விதைகள் செப மாலையாகக் கோர்க்கப் பயன்படுகிறது.

* * *

## தமரத்தை
**(தம்மட்டங்காய்)**

Averrhoea carambola

**(N. O. Oxalidaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, root and fruit.*

*Constituents* : *Ripe fruit contain a watery pulp which contains much acid potassium oxalate.*

*Action* : *Laxative, Refrjgerant and Anti-scorbutic. Ripe fruit is generally Sour, Antiscorbutic and highly Cooling and Antibilious.*

Uses : The leaves, roots and fruits of this plant is used in medicines as refrigerant. The juice of the plant is a stain remover in clothes. The sharbat of this fruit is a coolant. The fruit juice also with sugar will cure vomiting, psychic disorders and bilious diseases. The decoction of this plant is used in treating phlegmatic diseases, eye disorders and spermatorrhoea. The ripened fruit cures bleeding piles.

மஞ்சள் கலந்த ஊதா நிறப் பூக்களையுடைய தமரத்தை மரத்தின் இலை, வேர், காய் இவைகள் மருந்தில் குளிர்ச்சிக்காக உபயோகிக்கப்படும். தம்மட்டங்காயின் சாறு துணியிலுண்டாகும் இரும்புக் கறையைப் போக்கும். தம்மட்டங்காய் பழச் சர்பத் தேக உஷ்ணத்தையும், பித்தத்தையும் போக்கும். இதன் சாற்றுடன் சர்க்கரை கலந்து கொடுக்க வாந்தி, சித்தப்பிரமை, பித்தம், குரல் கம்மல் இவைகளைக் கண்டிக்கும். தம்மட்டங்காய் கஷாயம் சிலேட்டுமம், கண்ணோய், சுக்கில நஷ்டம் போக்கும். பழம் இரத்த மூலம் போக்கும்.

* * *

## தமரத்தை

**(காட்டு தமரத்தங்காய்)**

## Averrhoea virosa

**(N. O. Oxalidaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, root and fruit*

*Action* : *Similar to A. carambola*

Uses : This has the same property as A. carambola. Piles could be cured with this.

தம்மட்டங்காயின் குணங்களே காட்டு தமரத்தங்காய்க்கும் உண்டு. தம்மட்டங்காய்ப் பழம் மூலநோயைக் குணப்படுத்தும்.

* * *

## தமனகந்தம்
(தவனம்)

## Aristolochia labiosa
(N. O. Aristolochiaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Essential oil named as Davana oil is obtained from the leaves.*

*Action* : *Stomachic, Anodyne, Anti-spasmodic and Expectorant.*

Uses : This cures phlegmatic disorders and acts as refrigerant. Eye disorders also could be cured with this. This is an appetizer. The leaves are aromatic.The oil extracted from the leaves is used externally in eczema and skin ulcers.

தமனகந்தம் கப தோஷங்களைப் போக்குவதுடன் உட் சூட்டைத் தணிக்கும். கண்ரோகம், கண் மங்கலைக் குணப்படுத்தும். பசியைத் தரும். தமன கந்தத்தின் இலை மணம் வீசக்கூடியது. தமன கந்தத்தின் எண்ணெய் சொறி, சிரங்கு, வீக்கங்களுக்குத் தடவ பலன் தரும்.

* * *

## தம்பட்டை
(வாளவரை, பாடாவரை)

## Canavalia ensiformis
(N. O. Papilionaceae)

*Habit* : *Twiner*

*Parts used* : *Root and fruit*

*Constituents* : *Cystin, tyrosin, tryptophan etc. and an alkaloid.*

*Action* : *Coolant, Demulcent, Antibilious and Cordial.*

Uses : Fruit is edible. Root ground into paste with cow's urine and administered internally for consecutive days will cure enlargement of liver.

ஊதா நிறப் பூக்களையுடைய தம்பட்டை கொடியின் காயை சிலர் உணவுப் பொருளாகப் பயன்படுத்துவர்.

* * *

## தரா

## Fumaria parviflora

**(N. O. Fumeriaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Leaves and seeds*

*Constituents* : *Plant is said to contain fumaric acid.*

*Action* : *Plant is Aperient, Diaphoretic and Diuretic.*

Uses : This is a creeper. It increases the sweating and saliva secretion. This is bactericide. This corrects the menstrual cycle, eye diseases and abscess.

This acts as galactagogue. The leaves cures fistula, tastelessness and induces appitite. The dried and powdered leaves with pepper is an ideal medicine for jaundice. The decoction of the leaves cures tuberculosis and acts as laxative. The leaves along with turmeric is made into a paste, and this paste is used as an external application for carbuncles. The decoction of this leaves with lavendar flower cures leucoderma.

தரா கொடி வியர்வையையும் சிறுநீரையும் பெருக்கும். தரா கிருமி நாசினியாகும். தரா மாத விடாய், சிக்கல். கண்காசம். கண் புகைச்சல், சந்நிபாத தோஷம், வித்திரதிக்கட்டி இவைகளைப் குணப்படுத்தும். பெண்களுக்கு முலைப்பால் சுரக்கச் செய்யும். தரா இலையால், முளைமூலம், சுவையின்மை, நீர்த்தாரையிற் சூடு, இளைப்பு ஆகிய நோய்கள் நீங்குவதுடன் பசியுண்டாகும். தரா இலையைப் பொடித்துச் சிறிது மிளகுத்தூள் சேர்த்து காமாலை சுரத்திற்குக் கொடுக்க குணமாகும். மேலும் இலைக்கஷாயம் க்ஷய நோய்களைக் குணப்படுத்துவதுடன் மலபந்தம் நீக்கும். தரா இலை யுடன் மஞ்சள் சேர்த்து அரைத்து பிளவைகளுக்குக் கட்ட பழுத்து உடையும். இலையுடன் பன்னீர் பூ சேர்த்து கஷாயமிட்டுக் குடிக்க வெண்குஷ்டம் மாறும்.

* * *

## தருப்பை
(நாக்கறுத்தான் புல்)

## Poa cynosuroides

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Restorative, Emollient, Astringent, Diuretic and Antifebrile.*

Uses : Fever, thirstyness, pruritis also could be cured with this grass. This acts as diuretic and gives energy. The decoction of this grass is used in fever, phlegmatic diseases and antidote for poisons. This checks menorragia and dysentery.

தருப்பைப் புல்லினால் சிறிய நஞ்சுகள், சுரங்கள், நீர் வேட்கை, நமைச்சல் ஆகியவைப் போகும். தருப்பைப் புல் நீரைப் போக்கவும், சுறுசுறுப்பை உண்டாக்கவும் பயன்படும். தருப்பை புல்லைக் கஷாயமிட்டுக் கொடுக்க சில விஷ தோஷங்கள், சுரம், கபம், தாகம், தினவு சாந்தப்படும். தருப்பைப் புல் கஷாயம் பெரும் பாட்டையும், சீதபேதியையும் உடனே குணப்படுத்தும்.

* * *

## தர்பூசனி

## Citrullus vulgaris

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Seeds and the juice of the pulp of the fruit.*

*Constituents* : *Seeds yield a fixed oil proteids and citrullin.*

*Action* : *Seeds are Cooling, Demulcent, Diuretic, Vermifuge, and Nutritive. Pulp is Cooling and Diuretic. Fruit juice is Cooling and Refreshing.*

Uses : The fruit is green outside and red inside. This is refrigerant and quenches the thirst in summer. It acts

as diuretic. The alcohol obtained from this plant cures dysuria.

தர்பூசனி கொடியின் பழம் மேலே பச்சையாயும் உள்ளே வெள்ளையாயும் பின்பு சிவப்பாகவுமிருக்கும். தர்பூசனி கோடைக் காலத்தில் குளிர்ச்சியைத் தருவதுடன் தாகத்தைத் தீர்க்கும். மேலும் மூத்திரத்தை அதிகப்படுத்தும். தர்பூசனி விதைப்பருப்பு தாது புஷ்டியைத் தரும். தர்பூசனி பழத்திலிருந்து செய்யப்படும் சாரார்யம் நீர்ச் சுருக்கு அதியுஷ்ணம் இவைகளைப் போக்கும்.

* * *

## தலைசுருளிப் பூண்டு

**See : Aristolochia indica**

ஈசுவரமூலி பார்க்க

* * *

## தவசுமுருங்கை

### Adathoda tranqubarensis

**(N. O. Acanthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* . *Leaves*

*Constituents* : *Rich in proteins and vitamin A, B and C*

*Action* : *Carminative, Expectorant, Diuretic and Insecticide.*

Uses : The flower is yellow in colour. The leaves stops rhinitis, wheezing, phlegm and irritating cough. The leaf extract is refrigerant and expectorant. This is commonly given to children suffering from small pox or chicken pox. The smashed leaves are used to heal wounds. The decoction cures difficulty in breathing, whooping cough etc., The leaf juice (15 to 30 ml) is given to ladies after child birth to promote lochial discharge. Leaves are used as coolant which is rich in vitamins. The mashed fruit with curd cures dyspepsia. Heated silver could be made into ashes if dipped in the juice of this leaves.

தவசுமுருங்கையின் பூ மஞ்சள் நிறமுடையது. தவசுமுருங்கை இலையினால் மூக்கு நீர்ப் பாய்தல், உள் நாக்கு நோய், க்ஷயம், இரைப்பு, பொடியிருமல் ஆகியவை நீங்கும்

தவசுமுருங்கை இலைச்சாறு உடம்புக்குக் குளிர்ச்சி தரும். கபத்தை அறுத்து, மலத்தை இளக்கும். குழந்தைகளுக்கு அம்மை கண்டால் இதை உள்ளுக்குக் கொடுக்கலாம். இலையை இடித்து வதக்கி அடிபட்டக் காயங்களுக்கு;வைத்துக் கட்ட குணமாகும். தவசு-முருங்கை கஷாயம் சுவாச காசம், சிணுக்கிருமல் இவைகளைப் போக்கும். இலைச் சாற்றைப் பிழிந்து 15-30 மிலி அளவு கொடுக்க பிள்ளைப் பெற்ற அழுக்கை வெளியேற்றும்.

இலை கீரையாகவும் பயன்படுத்தப்படுகிறது. இதில் விட்டமின்கள் அதிகமிருக்கும். தவசு முருங்கைக்காய் சிறிய நெல்லிக்கனியைப் போலிருக்கும். இதை எடுத்து அரைத்து பசுந்தயிரில் சாப்பிட குன்ம நோய் குணமாகும். தவசுமுருங்கையில் கருவங்கச் சத்துள்ளது.

பழுக்கக் காய்ச்சிய வெள்ளியை இலைச்சாற்றில் தோய்த்து வர பஸ்மாகும்.

* * *

## தழுதாழை

## Clerodendron phlomoides

### (N. O. Verbenaceae)

*Habit* : *Small tree*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Oil is extracted from the leaves*

*Action* : *Leaves are Alterative and Tonic. Root is Aromatic and Astringent. Oil is Anti-rheumatic.*

Uses : This cures paralysis and all the 80 types of rheumatic disorders asthmatic complaints, tumours phlegmatic fever, boring pain etc., This is a small plant with white flowers. This juice of the leaves though it is bitter in taste gives strength. If this is taken internally after boiling in water it cures arthritic pain. The leaf juice with castor oil if consumed will cure gonorrhoea. This is used externally to cure paralysis and venereal diseases. This hot decoction relieve

pain, when the affected area is washed with. The roasted leaves,. if applied gives relief from arthritis.

வாதமடக்கி எனப்படும் தழுதாழை பக்கவாதம் முதலிய 80 வாத நோய்களையும் மூச்சிறைப்பு நோய்கள், புடை, கழலை, சுரம், குடைச்சல் இவை நீக்கும். வெண்ணிற பூக்களையுடைய சிறு மரம், இலைச்சாறு கசப்பாயிருந்தாலும் உடலுக்கு வலிமை தரும். இதை நீர்ச் சேர்த்துக் காய்ச்சி அருந்த வாதப் பிடிப்புகள் நீங்கும். தழுதாழைச் சாற்றை விளக்கெண்ணெய் சேர்த்து அருந்த மேக நோய்க் குணப்படும். பக்கவாதம், மேகப் படை, கிரந்தி, வீக்கம் இவைகளுக்கு மேல் பூச்சு மருந்தாக தழுதாழை எண்ணெயை உபயோகிக்க குணம் தரும். தழுதாழை வெந்நீர்க் கஷாயத்தைக் கொண்டு வாதக் கடுப்பு, வாதப் பிடிப்புகளைக் கழுவ குணம் தரும். வாதவலிக்கு இதன் இலைகளை வதக்கியும் கட்டலாம் அல்லது எண்ணெயிலிட்டுக் காய்ச்சியும் தடவலாம்.

* * *

## தனகுமரம்

**See : Cochlospermum gossypium**

**பார்க்க : காட்டு இலவம்**

* * *

## தாணிப்பூண்டு

**See : Prenanthera sarmentosa**

**பார்க்க : எழுத்தாணிப்பூண்டு**

* * *

## தாதரி

# Woodfordia fruticosa

**(N. O. Lythraceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Flowers*

*Action* : *Anthelmintic, Alexiteric, Diuretic, Stimulant and Refrigerant.*

Uses : This helps in trouble free labour. This strengthens the uterus wall. This also cures leucorrhoea.

தாதரிப்பூ சுகப்பிரசவம் தரும். கர்ப்பாஸய வலிமையை உண்டாக்கும். சீதபேதி, சரும நோய் நீக்கும். பெண்களுக்கு வெள்ளை விழுதலைக் குணப்படுத்தும்.

* * *

## தாமரை
### (வெள்ளை தாமரை)

## Nelumbium alba
### (N. O. Nymphaeaceae)

*Habit* : *Aquatic herb.*

*Patts used* : *Whole plant.*

*Constituents* : *Rhizome and seeds contain resins, tannin and an alkaloid Nelumbine.*

*Action* : *Seeds are Demulcent and Nutritive, filaments and Flowers are Cooling, Sedative, Astringent, Cholagogue, Diuretic, Refrigerant and Expectorant. Root is Demulcent.*

Uses : This is an aquatic plant. Fruit possesses one or two seeds. Flowers and seeds exhibit medicinal properties. Petioles are astringent and refrigerant. Seeds are used as diuretic. Juice of the petioles and leaves are used to check diarrhoea due to indigestion.

Flower reduces the body temperature, fever, thirstyness and burning of the eyes. Anther lobes if taken along with honey and sugar in the early morning it improves fertility and cures deafness. Juice of the flower checks diarrhoea. Sharbat made out of its flower if taken regularly, cures bleeding piles, dysentery, liver diseases and cough. It also improves mental alertness. Flowers along with tuber of nympheaea stellata are ground and mixed with milk. It is given to pregnant women as

an appetizer. This also cures colic. Dried and powdered leaves, if taken regularly, acts as an aphrodisiac. A decoction of the leaves mixed with honey reduces the blood pressure. This also improves mental powers. Nuts increases the haemoglobin contents of the blood. Tubers fried in oil cures cough, skin diseases, phlegmatic disorders and dysentery. Kernel of the seed is edible and rich in proteins.

வெண்தாமரை நீரில் விளையும். இலைக் காம்பை விட பூக்காம்பு அதிக நீளமாகும். கொட்டையினுள் ஒன்று அல்லது இரண்டு விதைகள் இருக்கும். இதன் பூக்களும், விதைகளும் மருந்திற்கு உபயோகப்படும். குணத்தில் அல்லியைப் போன்றது. வெண்தாமரையின் காம்புகள் துவர்ப்பும், குளிர்ச்சியுமுள்ளவை. விதைகள் மூத்திரத்தைப் பெருக்கும்தன்மையதும், சூட்டைத் தணிக்கும் தன்மையதும் ஆகும். வெண்தாமரைத் தண்டு, இலைப்பால் ஆகியவை அசீரண பேதியைக் குணப்படுத்தும்.

வெண்தாமரைப் பூ வெப்பத்தால் பிறந்த விழிஎரிச்சல், சுரம், நீர்வேட்கை ஆகியவைகளைப் போக்கும். பூவின் மகரந்தப் பொடியுடன் சர்க்கரையும் தேனும் கூட்டி விடியற்காலையில் புசிக்க காதுகேளாமை, ஆண்மையின்மை நீங்கும். பூவின் சாறு அசீரண பேதியைக் கண்டிக்கும். வெண்தாமரைப் பூவிலிருந்து சர்பத் தயாரித்து சாப்பிட்டுவர இரத்தமூலம், சீதபேதி, ஈரல் நோய்கள் குணமாகும். மேலும் இருமல் குணமாகும். மூளைக்குப் பலம் தரும். கர்ப்பிணிகளுக்கு பசி எடுக்க வெண்தாமரைப் பூவுடன் நெய்தற்கிழங்கு சேர்த்து அரைத்து பசும்பாலில் கொடுக்க வேண்டும். மேலும் வயிற்றுவலி தீரும். வெண்தாமரைப் பூ கஷாயம் மூளையைப் பலப்படுத்தும். உலர்ந்த தாமரை இலைப்பொடி தாது விருத்தி செய்யும். பூக்கஷாயத்துடன் தேன் சேர்த்து சாப்பிட இரத்தக் கொதிப்பு குணமடையும்.

வெண்தாமரை கொட்டையினால் இரத்தம் விருத்தியடையும். கிழங்கை எண்ணெயில் வறுத்து சாப்பிட இருமல், தவளைச் சொறி, வயிற்றுக்கடுப்பு நீங்கும். தாமரைக்கொட்டையிலிருக்கும் பருப்பு வேர்க்கடலையைப் போன்ற ருசியுடையது. புரதச் சத்து நிறைந்த இப்பருப்பைப் பொடித்து போஷாக்கு உணவு தயாரித்து உண்ணும் வழக்கம் பிலிப்பைன்ஸ் மக்களிடையே இருக்கிறது.

* * *

## தாமரை
(செந்தாமரை)

## Nelumbium speciosum
(N. O. Nymphaeaceae)

*Habit* : *Aquatic herb*

*Parts used* : *Flowers, filaments, anthers, stalks seeds leaves and roots.*

*Constituents* : *Rhizome and seeds contain resins, metarbin and an alkaloid 'Nelumbine'.*

*Action* : *Similar to N. alba.*

Uses : Aquatic herb with red flowers. This strengthens the heart. Leaves cure fever, burning of the eyes, hypertension and epilepsy. Tuber cures eye diseases, allergy and flatulence. Seeds are found to be effective in all skin diseases. Honey of this flower cures eye diseases. Root tuber is powdered and if taken along with cow's ghee it cures fever. Leaf juice is used in calcination of oysters.

வெண்தாமரையைப் போன்றே நீரில் வளரும். சிவப்பு நிறப் பூக்களையுடையது. செந்தாமரை இருதயத்திற்கு வலிமை தரும். சுரம், கண் எரிச்சல் தீர்க்கும். இரத்தக் கொதிப்பு, காக்கை வலிப்பு ஆகியவற்றிற்கு குணம் தரும். செந்தாமரைக் கிழங்கு நேத்திர தோஷம், சருமத்தடிப்பு, வயிற்றுப்பொருமல், கடுப்பு நீக்கும்.

செந்தாமரையின் விதை சகல ரோகங்களையும் தீர்க்கும். தேன் கண் வியாதிக்கு குணம் தரும். இலைச்சாற்றினால் சங்கு பஸ்பமாகும். வேர்க்கிழங்கை சூரணித்து பசுநெய்யில் சாப்பிட கடுமையான சுரம் போகும்.

* * *

## தாமரை
(ஆகாயத் தாமரை)

Ree : Pistia stratoites

பார்க்க : அந்தரத்தாமரை

* * *

## தாமரை

(மலைத் தாமரை)

See : Smilax zeylanica

பார்க்க : கல் தாமரை

* * *

## தாழை

(தாழம்பூ)

## Pandanus odoratissimus

(N. O. Pandanaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Flowers and aerial roots*

*Constituents* : *An essential oil is obtained from the floral brackets.*

*Action* : *Bitter, Purgative, Aromatic, Stimulant, Diaphoretic, Anti-spasmodic, Cooling and Tonic.*

Uses : This plant is a fragrant, large shrub. This grows in swampy ground. Venamous reptiles like cobra thrives under this plant. Aerial roots are produced from the large branches of the shrub. A volatile oil is extracted from the flower. This cures head ache, cold and corrects the menstrual cycle. This acts as an emmenagogue and increases appetite. This acts as an expectorant and cures cataract. Flowers steeped in oil and if applied and rubbed on the head before having a bath cures itch, scally eruptions and other cutaneous diseases. Sharbat made out of this flowers purifies the blood and increases semen secretion. This also cures cold affections, phlegm and cough. This is used as an ingredient in electuaries as tonic. A decoction of its aerial root is preventive against small pox. Anther lobes are used in medicines.

தாழம்பூ ஒரு குத்துச்செடி. இதன் வாசனையால் கவரப்பட்டு நல்ல பாம்புகள் வருவதாகக் கூறுவர். ஆனால் இதன் அடர்த்தியான ஈரப்பதத்துடன் கூடிய குடியிருப்புகாகவே பாம்பினங்கள் வரும்.

இதன் வேர்களிலிருந்தும் அடிமரத்திலிருந்தும், பெரிய கிளைகளி லிருந்து முளைக்கும் பூவிலிருந்தும் அத்தர் போன்ற வாசனைத் தைலம் தயாரிப்பர், தாழம்பூ தலைவலியை குணப்படுத்தும். வாத வலிக்கு நன்கு தேய்த்துத் தடவ குணம் தெரியும். பூ சிரரோகம், தலைவலி, நீரேற்றம் நீக்கும். மாதவிடாயை சீராக்கும். கண்படலம் மார்பு கோழை ஒழிக்கும். பசியை அதிகப் படுத்தும். எண்ணெயி லிட்டு முழுகிவர சொறி, சிரங்கு கற்றாழை நாற்றம் முதலிய சரும நோய்களை நீக்கும். இதை சர்பத்தாக உபயோகிக்க இரத்தத்தை சுத்தப்படுத்தும். இதன் சாறு விந்துவைப் பலப்படுத்துவதுடன் தாதுபுஷ்டியையும், வீரியத்தையுமுண்டாக்கும். அன்றியும் நீர்க் கோவை, கபம், இருமல் இவைகளை குணப்படுத்தும். இதை லேகியத் தில் உபயோகப்படுத்துவதனால் தேக அழற்சியைப் போக்கி ஒளியைத்தரும். தாழம் விழுதை கஷாயமாக்கிக் கொடுக்க அம்மை வராது. பூவினுள்ளிருக்கும் மகரந்தப் பொடியை பல ஔடதங்களில் பயன்படுத்துவர்.

* * *

## தாழம்பூ
### (செந்தாழம்பூ)

## Pandanus odoratissimus
### (N. O. Pandanaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Flowers and aerial roots.*

*Constituents* : *Similar to yellow variety.*

*Action* : *Similar to yellow variety.*

Uses : This variety is used effectually than the yellow variety. This exhibits the same medicinal property. Flower cures cold affections, cough, phlegm and acts as a tonic. This promotes the secretion of semen. A decoction of flower reduces the internal heat.

வெண்தாழம்பூவை விட செந்தாழம்பூவையே மக்கள் அதிகம் விரும்புவர். இப்பூவினால் நீரேற்றம், இருமல், நெஞ்சு கபம் போகும். உடலுக்கு வன்மை தரும். ஆண்மையைப் பெருக்கும். இதன் கஷாயம் உடல் சூட்டைத் தணிக்கும்.

* * *

## தாளிக்கீரை

**See : Ipomoea sepiaria**

**பார்க்க: கீரை வகைகள்**

* * *

## தாளிச பத்திரி

### Taxus baccata

**(N. O. Coniferae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, fruit and bark.*

*Action* : *Carminative, Expectorant, Stomachic, Tonic, Astringent and Stimulant.*

*Constituents* : *There is an alkaloid called Taxine.*

Uses : Middle sized tree with thorns. Leaves are astringent and stomachic in diarrhoea, weakness and consumption. Infusion of this is a very good remedy for hoarseness. Fruits are edible. Oil is extracted from the seeds. Leaves are powdered and if given in honey cures,diarrhoea, catarrh of the nose, dysentery, vomiting, indigestion and externally applied to the gums, to arrest tooth ache. Mixed with vinegar or lemon juice it is used as an external application to cure head ache, colic, and sore throat. Juice of the leaves is used in the treatment of chest pain and pthisical cough. Infusion of bark is used as mouth wash to cure stomatitis. Fruit checks nausea. Leaves powdered and mixed with the juice of Adathoda vasika if taken along with honey, cures cough and wheezing.

தாளிசபத்திரி மரத்தில் முட்கள் மிகுதியாயிருக்கும். இலைகள் துவர்ப்பாக இருக்கும். வயிற்றுக் கோளாறுகளை நீக்கும். அசீரண பேதி, பலவீனம், சயரோகம் முதலிய நோய்களுக்குச்சிறந்தது. இதன் பட்டைக்கஷாயம் தொண்டைக்கம்மலை நீங்கும். காய்கள் தின்பதற்கு உதவும். விதைகளிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். பிற சூரணங்களுடன் சேர்த்துக் கொடுக்க தொந்தசுரம், அக்கினிமந்தம், பித்தாதிக்கம், பலவீனம் போக்குவதுடன் பசி உண்டாக்கும். இதை

இடித்துத் தூள் செய்து தேனில் கொடுக்க பேதி, பீனசம், சீதபேதி, வாந்தி, அசீரணம் குணப்படுத்தும், இத்தூளைப் பல்லில் வைத்து அமுக்க பல்வலிபோகும். காடி, அல்லது எலுமிச்சம் பழ ரசத்தில் அரைத்துப் பூச தலைவலி, வயிற்றுவலி, சயரோக இருமல் போகும். பட்டையைக் கஷாயமிட்டு வாய் கொப்பளித்து வருவதனால் தொண்டைக் கம்மல் நீங்குவதோடு வாய்ப்புண் ஆறும். இதன் பழம் ஒக்காளத்தை நிறுத்தும்.

இலைத்தூளை ஆடாதொடா இலைச்சாற்றில் கலந்து சிறிது தேன் சேர்த்துச் சாப்பிட இருமல், இரைப்பு நோய்கள் போகும்.

* * *

## தாளிப்பனை

## Carypha umbraculifera

### (N. O. Palmae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit,*

*Action* : *Nutrient, Astringent and Alterative.*

Uses : A kind of sago is prepared from the pith of the tree. Flour is made from this which is used to prepare cakes and bread. Gruel made of its sago acts as an appetizer. Fruits dried and powdered and is made into a porridge is given to patients being very nutritious.

தாளிப்பனை மரத்தின் அடிமரத் தக்கையினின்று சவ்வரிசி தயாரிக்கப்படும். இதனின்று மாவு தயாரித்து ரொட்டி செய்யப் படும். இச்சவ்வரிசி கஞ்சி உடலுக்கு பலத்தைக் கொடுக்கும். அதிசாரம், சீதபேதியுள்ளவர்களுக்கு இது ஒரு சிறந்த உணவாகும். இதன் காயை உலர்த்தி இடித்து, கஞ்சி காய்ச்சி அருந்துவார்கள்.

நோயுற்ற காலத்தில் எளிமையான செரிமானமுள்ள உணவாகும் இது. அதிகமாக சாப்பிட மலம் கட்டும். இதன் ஓலையை எழுதுவதற்கு பயன்படுத்துவர். தாளிப்பனை வனம் என்று பழைய மன்னர்கள் காலத்தில் பராமரிக்கப்யட்டு வந்தது. எழுது வதற்கு இக்காலத்தில் காகிதம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியத்துவமும், இவ்வோலைகளுக்கு அக்காலத்தில் இருந்ததால் மன்னர்கள் பராமரித்து வந்தனர். தாளிப்பனை வனக்காவலன் என்ற

ஒரு பதவியை ஏற்படுத்தி இருப்பதாக மலையகராதியில் கூறப்பட்டுள்ளது.

பின்னாளில் மந்திரம் செய்வோர், கடவுளின் பெயரால் அதர்மம் செய்வோர், இம்மலர் மாலையை சூனியம் போன்ற மந்திரசித்து வேலைகளுக்குப் பயன்படுத்தினார்கள். (பிங்கல நிகண்டு 1810 ஆம் ஆண்டு)

* * *

## தான்றி

(தான்றிக்காய்)

## Terminalia baleria

**(N. O. Combretaceae)**

*Habit* : *Tree*

*parts used* : *Fruits.*

*Constituents* : *Baleric myrobalans consists of gallo-tannic acid and an oil.*

*Action* : *Astringent, Tonic, Expectorant, Laxative, Styptic and Anti-rheumatic.*

Uses : Fruit of this tree is bitter and purgative. Being astringent it is roasted and used to check diarrhoea. Fruit contains two seeds. Leaves, fruit and seeds exhibit medicinal property. This is used with great advantage in diseases of male genital organs, gleet, dysentery etc., Decoction of this is used to cure chronic fevers, diabetes, and urinary diseases. Fruit is ground along with vinegar is an external application to syphilitic and venereal ulcers. This, if taken internally, strenghthens the stomach muscles. Kernel of seed is powdered and mixed with water if applied cures ulcers. This is expectorant, laxative and tonic. This induces hair growth. This also cures asthma, diarrhoea, inflammations and toothache. Oil is extracted from the fruits. Juice of the tender leaves cures phlegm in the chest. Pericarp of the fruit is powdered and taken along with sugar and honey strengthens and improves the eye sight. Unripened fruit is purgative, and only the ripe fruits are employed in medicines.

Powdered fruit along with honey if taken internally cures small pox. This along with kathakambu and honey improves immunity.

தான்றிக்காய் துவர்ப்புடையது பேதியையுண்டாக்கும். இதை வறுத்து சாப்பிட பேதியைக் கட்டும். இம்மரத்தின் இலை, பழம், விதை இவைகள் மருத்துவப் பயனுடையது. இதனால் ஆண்குறிபுண், வெள்ளை, குருதியழல் நோய் போகும். இதைக் கஷாயமிட்டுச் சாப்பிட உடம்பின் நோவுசுரம், பிரமேகம் போகும். மேகத்தினால் சம்பந்தபட்ட புண்விரணங்களுக்கு இதனை காடியில் இழைத்துத் தடவ குணமாகும். இது இரைப்பைக்குப் பலத்தைக் கொடுக்கும். இதன் பருப்பைத் தூள் செய்து தண்ணீரில் குழப்பிப் பூசப் புண்ணாறும். தான்றிக்காய்ச் சூரணம் கோழையை அறுத்து. மலத்தை இளக்கி, உடம்பிற்கு பலந்தைக் கொடுக்கும். தலைமயிர் வளரும். மேலும் காசம், சுவாசம், வயிற்றுக் கழிச்சல், வீக்கம், பல்வலிப் போக்கும். இக்கொட்டையிலிருந்து எண்ணெய் எடுப்ப துண்டு. இதன் இலைக் கொழுந்துச்சாற்றை நெஞ்சு கபத்திற்கு கொடுக்க குணமாகும். இத்தோலைச் சூரணித்துச் சர்க்கரைக் கலந்து தேனுடன் பிசைந்து சாப்பிட கண்ணொளி உண்டாகும். தான்றிப் பொடியைத் தேனில் கலந்து சாப்பிட அம்மை நோய் நிற்கும். தான்றிக்காய் பொடியையும், கத்தகாம்பையும் சேர்த்து தேனில் உண்டுவந்தால் உடம்பில் நோய் எதிர்ப்பு சக்தியைப் பெருக்கும். இதனை நெதர்லாந்து டாக்டர் ஒருவர் மெய்ப்பித்துள்ளார்.

* * *

## திப்பிலி

**(அரிசித்திப்பிலி, கண்டத்திப்பிலி)**

## Piper longum

**(N. O. Piperaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Immature berries, and riped berries and stem.*

*Constituents* : *Resin, volatile oil, gum. fatty oil and an alkaloid piperine.*

*Action* : *Infusion is Stimulnant, Carminative and Alterative, Tonic. Seeds are more powerful than Black pepper. Seeds are Aphrodisiac, Diuretic,*

*Vermifuge and Emmenagogue. Externally they are Rubefacient and roots are Stimulant.*

Uses : Seed of this climber exhibits medicinal property. Small variety is more powerful than the others. Mixed with dried ginger and pepper it cures asthma, phlegm, tuberculosis, flatulence, cold catarrhal affections etc., This mixture is made into a electuary, cures difficulty in breathing, colic, abdominal dropsy, fever and dropsy. Mixed with dried ginger cures sore throat, venereal ulcers, head ache, phlegmatic disorders, dyspepsia and fever.

Root of the climber also exhibits medicinal properties. This is yellow in colour. This cures fainting, difficulty in breathing, aversion of food and urinary diseases. This also cures skin diseases if used externally. Powdered mixture of this with ginger and black pepper if inhaled cures drowsiness and coma. Long pepper with its root cures paralysis, morbid fever, rheumatism and hiccups. It checks the bleeding and fever in the case of women after child birth. This acts as an anthelmintic to children. This along with dried ginger is boiled in mustard oil and the oil is used as an external application to treat sciatica and paraplegia.

திப்பிலிக்கொடியின் விதைகள் பல மருத்துவப் பயன்களை யுடையது. அரிசித்திப்பிலி மிகக் காரமாயும் விறுவிறுப்பும் வாசனையுமுள்ளது. இதை சுக்கு மிளகோடு சேர்த்துத் தினம் சாப்பிட்டு வர காசம், கோழை, சயம், வயிற்றுப்பொருமல், நீர்க்கோவை இவைகள் போகும். இதன் லேகியம் சுவாசம், வயிற்று வலி, பெருவயிறு, சுரம், பாண்டு இவைகளைக் குணப்படுத்தும்.

திப்பிலியுடன் சுக்கு சேர்த்து உட்கொள்ள தொண்டை சம்பந்தமான எல்லா நோய்களையும் குணப்படுத்தும். மற்றும் மேகக்கட்டி, தலைவலி, கபநோய், குன்மம், காய்ச்சல் போன்ற நோய்களை விலக்கும்.

திப்பிலிமூலம் என்பது திப்பிலிக் கொடியின் மூலம். சிறு முடிச்சுகளுடன் நீண்டு மெல்லியதாகவும், வெளுத்து மஞ்சள் நிறமாகவும் இருக்கும். இதனால் மூர்ச்சை, சுவாசகாசம், அரோசகம், பிரமேகம் இவைகள் போகும். இதனால் முகத்தில் உண் டாகும் கருத்த மச்சம், சிவப்பு மச்சம் போகும்.

சோம்பல் மயக்கங் கொள்ளுங்காலத்து இதைச் சுக்கு மிளகோடு சேர்த்து நசியமாக உபயோகப்படுத்துவதுண்டு. இதைத்

திப்பிலி மூலத்தோடு சேர்த்து பாரிசவாயு, சூலை, வாதப்பிடிப்பு, இடுப்புவலி முதலிய நோய்களுக்குப் பயன்படுத்துவர். பிரசவித்த வர்களின் இரத்தப்போக்கையும், சுரத்தையும் நிறுத்த இதை உபயோகப்படுத்துவர். குழந்தைகளுக்கு உள்ளுக்குக் கொடுக்க வயிற்றுப்பூச்சிகளை அழிக்கும். இதைச் சுக்குடன் சேர்த்து கடுகெண்ணெயிற் கொதிக்க வைத்து, தொடைவாயு, இடுப்பின் கீழுள்ள திமிர் வாயுவுக்கும் பூச குணப்படும். குங்கிலியம் சேர்ந்த திப்பிலிக்காரம் முடக்கு வாத நோயை துரிதமாக குணமாக்கும்.

* * *

## திப்பிலி

### (யானை திப்பிலி)

## Piper lanceolata

### (N. O. Piperaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Seeds and roots*

*Action* : *Stomachic, Stimulant, Anthelmintic, Sudorific and Diaphoretic.*

Uses : This exhibits the same medicinal properties of piper longum. This cures headache, heaviness of the head catarrhal affections and hoarseness. This acts as an appetizer. tonic and aphrodisiac. This is found to be very effective in cold and other pulmonary disorders. This is powdered and mixed with honey if taken cures flatulence and diarrhoea.

அரிசித்திப்பிலியின் எல்லா குணங்களும் யானைத்திப்பிலிக்கு உண்டு. இது தலைவலி, தலைபாரம், பீநிசம், நீரேற்றம், குரல் கம்மல் ஆகிய இவைகளை குணப்படுத்தும். பசிதரும். வலிமை தருவதுடன் சுக்கிலம் பலப்படும். வெப்ப வீரியமுள்ள இது ஜலதோஷத்தையும், சுவாச நோய்களையும் துரிதமாக குணப் படுத்தும். பொடித்த தேனுடன் சாப்பிட வயிற்றுப் பொருமலும், கழிச்சலும் குணமாகும்.

* * *

# திராட்சை

## Vitis vinifera

### (N. O. Vitaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Fruits and leaves.*

*Constituents* : *Fruits are nutritive and rich in vitamins.*

*Action* : *Fruits are Laxative, Refrigerant, Diuretic, Nutritive, Demulcent, Expectorant and Cooling. Juice of unripe fruit and leaves are Astringent.*

Uses : There are two varieties black and green coloured fruits. This can be taken fresh or dried. Dried fruit is a laxative and expectorant. Juice of this fruit removes thirstyness. This also cures fever, cough, jaundice and pthisis. Grape juice if taken by pregnant women checks vomiting, nausea, bitterness of the tongue and loathing for food.

A decoction is made out of its leaves, black pepper and cumin if taken checks diarrhoea due to indigestion. Grape juice if taken regularly cures intestinal ulcers and strengthen the alimentary canal. This also cures rheumatoid arthritis, hypertension, liver and spleen disorders etc., Dried fruits if taken regularly cures venereal diseases and purifies the blood. Fruits are steeped in rose water is good for heart patients. Fruit along with milk acts as an aphrodisiac. Burning sensation and drowsiness due to bilious causes could be cured by grape juice. A kind of ardent spirit is made from the juice of the ripe fruit by fermentation. This cures, rheumatism, bilious disorders, bodily pain, fever, thirst, cough, hoarseness of throat. This also improves blood and acts as an aphrodisiac.

கொடிமுந்திரி எனப்படும் திராட்சையில் பச்சை, கருப்பு என இருவகையுண்டு. திராட்சையைப் பச்சையாகவும், உலர வைத்தும் சாப்பிடலாம். பழவற்றல் மலத்தை இளக்கும், கோழையை அகற்றும். இதன் இரசத்தை அருந்த நாவறட்சி போகும். இரசத்தை காலை மாலை இருவேளையும் குழந்தைகளுக்கு கொடுத்துவர பல் முளைக்கும்போது உண்டாகும் கழிச்சலை நீக்கும்.

மேலும் இதை சுரம், இருமல், காமாலை, இளைப்புநோய் முதலியவைகளுக்கு வழங்கலாம்.

இதை கர்ப்பிணிகளுக்குக் கொடுக்க வாந்தி, வாய்க்குமட்டல், வாய்க்கசப்பு, அரோசகம் இவை நீங்கும்.

திராட்சை இலையுடன் மிளகு, சீரகம் சேர்த்து கஷாயமிட்டு அருந்த அஜீரண பேதி நிற்கும்.

குடல்புண் உள்ளவர்கள் தினம் திராட்சை சாறு அருந்த குடல் புண் குணமாவதுடன் குடல் வலிமை பெறும்.

கீல்வாதம், இரத்த அழுத்தம், கல்லீரல் மண்ணீரல் நோய்கள் தீரும். தினம் உலர்ந்த திராட்சையை சாப்பிட்டுவர இரத்தம் தூய்மை பெறும். மேகம் தீர்க்கும்.

இப்பழத்தைப் பன்னீரில் ஊறவைத்து அதன் சாற்றைப் பருகி வர இதயம் வலிமை பெறும். பன்னீர் திராட்சையை பாலுடன் சாப்பிட தாது பலம் பெறும்.

பித்த ஆதிக்கம் உடையவர்கள் இதை உண்ண கைகால் எரிச்சல், தலை சுற்றல் தீரும்.

இதன் சாராயத்தினால் வாத பித்ததோஷம், உடம்பு அழற்சி, போகும். இரத்தம், தாது விருத்தியாகும். காமத்தை உண்டாக்கும்.

* * *

## திராய்

### (திராய்க் கீரை)

## Mollugo spergula

### (N. O. Ficoidaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Action* : *Stomachic, Aperient and Antiseptic.*

Uses : This small medicinal herb if taken increases the action of the medicine. This is stomachic and increases the digestive power.

திராய் மருந்திற்கு உதவும் சிறுசெடி. இலைகளை உட்கொள்ள நாம் உண்ணும் மருந்திற்கு பலத்தை உண்டாக்கி சீரண சக்தியை விருத்தி செய்யும்.

* * *

## திருகுபலை

## Helicteres isora

### (N. O. Sterculiaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruits, root-bark and seeds.*

*Constituents* : *Pods contains tannins*

*Action* : *Decoction of root-bark and juice are Demulcent and Mild Astringent.*

Uses : This cures all ear disorders. The drug is useful in treating snake bite and hiccups. Fruits are employed effectively in colic, flatulence, diarrhoea etc., Pods are used to check chronic dysentery. Root bark cures otorrhoea, ulcers in the ear and otalgia and otitis.

திருகுபலையினால் காது சம்பந்த நோய்கள், காது அடைப்பு, காது குத்தல், வலி, காதில் சீழ் வடிதல் குணப்படும். கூன் விழுதலையும் தடுக்கும். விக்கல், கேவல், நீரிழிவு, பாம்புக்கடி நீக்கும்.

* * *

## திருநீற்றுப் பச்சை

## Ocimum basilicum

### (N. O. Labiatae)

*Habit* : *Shrub or herb*

*Parts used* : *Whole plant.*

*Constituents* : *Leaves contain an essential oil which contains new terpene.*

*Action* : *Diaphoretic, Carminative, and Stimulant. Seeds are Mucilaginous, Demulcent, Aphrodisiac and Diuretic. Leaves are Fragrant and Aromatic. Juice of the plant is Anthelmintic. Root is Febrifuge.*

Uses : Flowers of this aromatic herb is white in colour with fragrant smell. Juice of the leaves cures ringworm

infection and other skin diseases. Leaf juice if rubbed reduces the pain in scorpion sting. Leaf juice if taken along with lukewarm water cures vomiting. The mixture of its leaves and sweet flag are ground and if applied reduces the pimples. Juice of the leaves if taken relieves labour pain and pain during parturition. This also cures phlegmatic disorders and vomiting. Juice of the leaves mixed with cow's milk if taken twice daily for seven days, cures venereal diseases.

Seeds and flowers are used as stimulant, diuretic and demulcent. Seeds if taken after child birth, removes the pain. Seeds in decoction cures urinary diseases. Leaves are powdered and used as a snuff to eradicate the maggots from the nose. This also cures drowsiness. Seeds are used to cure piles and constipation. Sharbat made out of its seeds cures dysentery, gleet and cough. Decoction of the leaves if irrigated to the nose acts as parasitiside but produces anaesthesia.

திருநீற்றுப்பச்சை உருத்திரசடை எனப்படும். இதன் பூ வெளுப்பாகவும், மணமாகவும் இருக்கும். இலைச் சாற்றைப் படைகளுக்கும், பிற சரும நோய்களுக்கும் பயன்படுத்தலாம். கசக்கிய இலையைத் தேள்கடிக்கு பூச வலி குறையும். காது வலிக்கும் காதிலிருந்து வரும் சீழை நிறுத்தவும் பயன்படும்.

இதன் சாறெடுத்து வெந்நீரில் கலந்து கொடுக்க வாந்தி நிற்கும். இலைச் சாற்றுடன் வசம்பு சேர்த்து அரைத்துத் தடவ முகப்பருக்கள் குறையும். இலைச் சாற்றை உபயோகிக்க பெண்களுக்கு பிரசவகால வலி மிகவும் குறையும். மற்றும் கபம், இரத்த வாந்தி நிற்கும்.

இதன் இலைச்சாற்றுடன் பசுவின் பால்கலந்து காலைமாலை இரு வேளை தொடர்ந்து ஏழுநாட்கள் அருந்த வெட்டைச்சூடு அறவே நீங்கும்.

விதையும் பூவும் சுறுசுறுப்பைத் தரவும் மூத்திரத்தைப் பெருக்கவும், அழற்சியைத் தணிக்கவும் பயன்படுத்தப்படுகிறது. விதையை பிரசவமானபின் சாப்பிட வலியைப் போக்கும். இதன் கஷாயம் மூத்திர வியாதிகளை குணப்படுத்தும். இலையை நசியமிட ஓர் விதத் திமிர் உண்டாக்கி நாசிக்கிருமிகளைக் கொல்லும். விதைகள் உள்மூலம், மலபந்தம் போக்கும். விதையுடன் செய்யப்படும் சர்பத் சீதபேதி, வெள்ளை, இருமல் இவைகளை குணப்

படுத்தும். இதை சப்ஜா விரை என்று கடைகளில் விற்பார்கள். யூனானி மருத்துவத்தில் இது பெரிதும் பயன்படுத்தப் படுகிறது.

## திருவாட்சி
### (மஞ்சள் அலரி)

## Thevetia nerifolia
### (N. O. Apocyanaceae)

*Habit* : *Shrub or Small tree*

*Parts used* : *Flowers, Bark and seeds*

*Constituents* : *Seeds contain a fixed oil*

*Action* : *Bark is a Bitter and Cathartic and Antiperiodic.*

Uses : This is a small tree with yellow flowers. This cures spleenic disorders. Bark in infusion cures fever.

மஞ்சள் அலரி எனப்படும் திருவாட்சி சிறு மரமாகும். மஞ்சள் நிறப் பூக்களையுடையது. திருவாட்சி மண்ணீரல் நோய்களைப் போக்கும்.

* * *

## திருவாத்தி

## Bauhinia tomentosa
### (N. O. Ceasalpiniaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Whole plant.*

*Constituents* : *Tannin*

*Action* : *Plant is Antidysenteric and Anthelmintic- Seeds are Tonic and Aphrodisiac. Fruit is Diuretic and Diaphoretic. Root-bark is Vermifuge.*

Uses : Seeds if taken regularly acts as aphrodisiac. The mixture of powdered seeds with ginger cures ulcers. Tender leaves flowers and buds are dried and powdered if consumed cures dysentery. Decoction of root bark cures liver ulcers and it is used as mouth wash to cure stomatitis.

திருவாத்தி ஒரு குத்துச் செடியாகும். இக்குத்துச் செடியின் மலர்கள் வெளிர்மஞ்சள் நிறமுடையது. இதன் விதைகள் உற்சாகத்தையும், தாது விருத்தியுமுண்டாக்கும். வயிற்றுப் புழுக்களைக் கொல்லும். இதை காடியுடன் கலந்து விஷப்புண்களுக்குப் போடலாம். இலைக் கொழுந்து பூ, மொக்கு இவைகளை உலர்த்திப் பொடித்து சீதபேதிக்கு கொடுக்க குணமாகும். வேர்ப்பட்டையைக் கஷாயமிட்டு கொடுக்க ஈரல் வேக்காடு தணியும். இக்கஷாயத்தைக் கொண்டு வாய்க்கொப்பளிக்க வாய்ப்புண்கள் குணமாகும்.

* * *

## தில்லை

(தில்லை)

## Excoccaria agallocha

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Small tree*

*Parts used* : *Seeds and bark.*

*Constituents* : *The caoutchouc*

*Action* : *Milky juice is Purgative and Alterative in epilepsy.*

Uses : Latex of the fresh bark is poisinous. This can be used as an external application to cure ulcers and bruises. Seeds are antidote and cures paraplegia, leprosy and other phlegmatic disorders.

தில்லை ஒரு சிறு மரமாகும். கறுப்பு நிறமுடையது. பச்சைப் பட்டையினின்று ஒழுகும் பால் விஷயமுடையது. இப்பாலை ஆறாப் புண்களுக்கும் இரணங்களுக்கும் உபயோகப்படுத்துவார்கள். விதையினால் எல்லா நஞ்சுகளும், திமிர்வாயுவும், கபநோய்களும் பெருநோய்களும் நீங்கும்.

* * *

## தினை

## Panicum italicum

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Seeds are rich in proteins and carbohydrates.*

*Action* : *Astringent, Diuretic, Nutrient, Cholagogue and Appetizer.*

Uses : The flour of seeds mixed with honey is used to strengthen the body. If applied locally along with water it reduces inflammation. This is a diuretic. This helps for a pain free labour.

தினை காலத்தால் அழியாத தானியமாகும். உமியுடன் இத் தானியத்தை வைத்திருக்க எத்தனை வருடங்கள் ஆனாலும் கெட்டுப் போகாது. உமி நீக்கி விட்டால் உடனடியாகப் பயன்படுத்த வேண் டும். இல்லாவிட்டால் கெட்டுப் போகும். இதன் மாவுடன் தேன் கலந்து உண்ண உடலுக்கு வலிவூட்டும். முருக பக்தர்கள் கூட ''தேனும் தினை மாவும் கலந்துனக்கு நான் தருவேன்...சங்கத்தமிழ் மூன்றும் நீ எனக்குத் தா'' என்று கல்வி கேள்விகளில் தாம் சிறந்து விளங்க வேண்டுமென முருகனை வேண்டி வணங்குவார்கள். தேனும், தினையும் எத்தனை சிறந்த உணவு என்பது இதிலிருந்து தெரியவருகிறது. தினைமாவை நீருடன் சேர்த்து வீக்கத்திற்குத்தடவ வீக்கம் வாடும். தினையை உட்கொள்ள மூத்திரத்தைப் போக்கும். வாதப்பிடிப்பிற்கும் மேற் பூசலாம். பிரசவ வேதனை கொள்ளுங் காலத்தில் இதை உபயோகப்படுத்த வலி தணியும்.

* * *

## துத்தி

## Abuliton indicum

**(N. O. Malvaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Constituents :* *Leaves contain tannin, organic acids and traces of asparagin. Ash contains mineral salts. Root also contains asparagin.*

*Action :* *Leaves are Demulcent, Aphrodisiac, Laxative, Diuretic, Vulnerary and Sedative. Bark is Astringent and Diuretic. Muscilage yielded from seeds is Diuretic and Demulcent.*

Uses : This small herb possesses yellow flowers. The whole plant exhibits medicinal property. Leaves are used as an emollient. Seeds are emollient and diuretic. Infusion of leaves cures constipation, venereal heat and irritation in anus. Leaves roasted in castor oil is applied to cure piles, fistula and anus irritation. Leaf juice mixed with cooked rice if applied and bandaged cures, boils and ulcers. If taken internally this cures venereal diseases and internal heat. Infusion of leaves along with milk and sugar checks diarrhoea and dysentery. Flowers along with milk is used as refrigerant and aphrodisiac.

Dried and powdered seeds if taken regularly reduces venereal heat, anus irritation and black heals of the skin. Infusion of seeds cure piles, gleet and chordee. Decoction of the root is used in the treatment of diabetes, micturition, thirst and venereal heat. Smoke of the seeds when applied to the anus of the children to eliminate the worms from rectum.

துத்தி ஒரு சிறு செடியாகும். இச்சிறு செடி மஞ்சள் நிறப் பூக்களையுடையது. இதன் இலை, பூ, வேர், பட்டை யாவும் மருத்துவப் பயனுடையது. இலை அழற்சியைப் போக்கும். இலைக் கஷாயம் மலபந்தம், மேகச் சூடு, ஆசன எரிச்சல் இவைகளை குணமாக்கும். இவ்விலையை விளக்கெண்ணெய் விட்டு வதக்கி மூலவியாதி, பவுத்திரம், ஆசனக்கடுப்பு ஆகியவைகளுக்கு வைத்துக் கட்ட குணமாகும். இலைச் சாற்றுடன் மாவு கலந்து கட்டி, புண்களுக்கு வைத்துக் கட்ட குணமாகும். இதை உள்ளுக்குள் சாப்பிட கருமேகம், உஷ்ணம், உடம்புச் சூடு இவை நீங்கும். துத்தி இலையை குடிநீரிலிட்டு பாலும், சர்க்கரையும் சேர்த்து உட்கொள்ள கழிச்சலை உண்டாக்கி, கீழ்வாய்க்கடுப்பு, சூடு முதலியவைகளை தணிக்கும்.

இதன் பூவை பாலிலிட்டு சாப்பிட குளிர்ச்சி உண்டாவதுடன் சுக்கிலத்தை விருத்தி செய்யும். மேலும் இத்துடன் கற்கண்டு சேர்த்துச் சாப்பிட குருதி வாந்தி நிற்கும்.

இதன் விதை இனிப்புச் சுவையுடையது. விதைச் சூரணத்தால் நீரெரிச்சல், மேகத்திலுண்டாகும் உஷ்ணம், ஆசனக்கடுப்பு இவை போவதுடன் கரும்புள்ளி நீங்கும். விதை குடிநீர் மூலம், வெள்ளை, தந்தி வெள்ளை இவைகளைப் போக்கும்.

இதன் வேர்க்கஷாயம் நீரிழிவு, சொட்டு மூத்திரம், தாகம், மேகச்சூடு இவைகளைப் போக்கும்.

விதைப்புகையை கீழ்வாயில்படும்படி செய்ய புழுக்கள் வெளிப் படும்.

பெருந்துத்தி (Abuliton asiaticum), பணியாரத்துத்தி (Abuliton indicum), கருந்துத்தி (Abuliton genus), கொடித்துத்தி (Sida montana), அரசிலைத்துத்தி (Abuliton polyandrum), எலிச் செவித்துத்தி (Evolvulus emarginatus), ஒட்டுத்துத்தி (Urena lobata) போன்ற வகைகளுடன் மேலும் பலவகை துத்திகள் இருக் கின்றன.

* * *

## தும்பிமரம்

### Diospyros embryopteris

### (N. O. Ebenaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit, bark and dried seeds.*

*Constituents* : *Tannin, and pectin.*

*Action* : *Bark and unriped fruit have Astringent and Styptic properties.*

Uses : The juice of the fruit is used in treating gonorrhoea and venereal diseases. Fruit juice if applied relieves sprain and cures wounds. Oil extracted from the seed checks chronic dysentery and diarrhoea. An infusion is made out by soaking it in water, its gargle cures stomatitis, sore throat and hoarseness. Pericarp of the fruit and bark are being astringent, checks bleeding in haemarrhoids.

தும்பி மரத்தின் கொட்டையினுள் இருக்கும் சாற்றை சத்தாக இறக்கி பிரமேகம் முதலிய நோய்களுக்குக் கொடுக்க குணமாகும். இதன் பழச்சாற்றை காயம், சுளுக்கு இவைகளுக்குப் பூசலாம். விதை

யின் எண்ணெயை சீதபேதி, கழிச்சல் இவைகளுக்குக் கொடுக்கலாம். பழம் ஊறிய தண்ணீரால் வாய்ப்புண் தொண்டைக் கம்மல் இவை களுக்கு வாய் கொப்பளிக்க குணமாகும். பழத்தின் மேல் தோலும், பட்டையும் துவர்ப்புச் சுவையுடையது. இரத்தப்போக்கைக் கட்டுப் படுத்தும்.

* * *

## தும்பிலி

## Diospyros melanoxylon

### (N. O. Ebenaceae)

*Habit* : *Tree.*

*Parts used* : *Bark and fruit.*

*Constituents* : *Bark contains tannin.*

*Action* : *Similar to D. embryoteris.*

Uses: Bark of the tree is astringent. This gives relief in dysentery, diarrhoea and dyspepsia. Bark, is steeped in water and if it is used to wash the eyes cures eye disorders. Powdered bark, if applied, cures ulcers. Along with black pepper cures dysentery.

தும்பிலி மரத்தின் பட்டை துவர்ப்புச் சுவையுடையது. இது அதிசார பேதி, குன்மம் இவைகளுக்கு நிவாரணம் தரும். பட்டை ஊறிய தண்ணீர் கண்கழுவ உதவும். இதை சூரணித்து இரணங் களுக்குத் தூவ குணமாகும். மிளகுடன் சேர்த்து சீதபேதிக்குத் தர குணம் தரும்.

* * *

## தும்பை

## Leucas aspera

### (N. O. Labiatae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Constituents* : *Flowers contain an essential oil and an alkaloid.*

*Action* : *Flowers are Stimulant, Expectorant, Aperient, Diaphoretic, Insectiside and Emmenagogue. Plant is Laxative, Antipyretic, Expectorant, Stimulant, Emmenagogue, Antidote and Alexipharmic.*

Uses : Flowers are used as stimulant, expectorant and laxative. Juice of the leaves gives relief from headache, phlegmatic disorders and rheumatism. Leaf juice mixed with the leaf juice of pergularia extensa, if given to children, gives relief from diarrhoea, indigestion and other stomach disorders. Leaves are made into a paste, if given acts as an antidote for scorpion sting and snake bite.

Flowers are mixed with gingelly oil and boiled. This oil is rubbed on the head before having a bath to get relief from head ache, heaviness of the head, fainting and cole. Decoction of flower is given thrice a day to cure thirst, eye disorders, neurasthenia. Leaves are made into a paste if taken along with gingelly oil in the morning for 4 days, it cures menarrhagia. Flowers are used to cure amenorrhoea. Juice of the leaves mixed with common salt is an excellant application for itching and other skin diseases. Juice of the flower is sniffed up as a remedy for chronic head ache.

தும்பை உடலுக்கு மிக்க சூட்டைத் தரக் கூடியது. கபத்தை அறுத்து மலத்தை இளக்கும். இலைச்சாறு தலைவலி, சிலேட்டும நோய், வாத நோய் இவைகளை குணப்படுத்தும்.

தும்பை இலைச் சாற்றுடன் உத்தாமணி இலைச் சாற்றைக் கலந்து குழந்தைகளுக்குக் கொடுக்க பேதி, மாந்தம், வயிற்றுக் கோளாறுகள் நீங்கும்.

தும்பை இலையை அரைத்து உள்ளுக்குக் கொடுக்க தேள்கடி விஷம் முறியும்.

பாம்புக்கடிக்குத் தும்பைப்பூ நல்லப் பலனைக் கொடுக்கும். தும்பைப்பூவை நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி தலை முழுகி வர உடற்சூடு தணிவதுடன் கண்ணோய்கள், தலைபாரம், மயக்கம், ஜல தோஷம் இவை நீங்கும். பூக்கஷாயத்தை தினம் மூன்று வேளை சாப்பிட்டு வர கண்ணோய்கள் தீரும்.

பெரும்பாடு குணமாக இலையை அரைத்து நல்லெண்ணெயுடன் கலந்து காலை வேளையில் 7 நாட்கள் தொடர்ந்து சாப்பிட குணமாகும்.

பூக்கஷாயம் தாகவிடாய், சன்னிபாதசுரம், கண்ணோய் இவைகளைப் போக்கும். தீராத தலைவலிக்கு பூச்சாற்றை இரண்டு துளி மூக்கில் விட வேண்டும். இது கருவங்க சத்துள்ளது.

* * *

## தும்பை

**(காசித்தும்பை)**

**See : Impatiens balsamina**

* * *

## தும்பை

**(பெருந்தும்பை)**

## Leucas cephalotes

**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Flowers contain an essential oil and an alkaloid.*

*Action* : *Similar to Leucas aspera.*

Uses : This exhibits all medicinal property of L. indica. Moreover it cures inflammation of the spleen, dysentery and jaundice.

தும்பையின் குணங்களே இதற்கும் உண்டு. இது மண்ணீரல் வீக்கம், சீதபேதி, காமாலை நீக்கும்.

* * *

## தும்மட்டி

**(வரித்தும்மட்டி, பேய்த்தும்மட்டி, கலிங்கம், இந்திரவருணி)**

## Citrullus colocynthis

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climbing shrub.*

*Parts used* : *Fruit and seeds.*

*Constituents* : *Oil is extracted from this seeds.*

*Action* : *Seees are Vermifuge. Fruit is Refrigerant.*

Uses : Seeds are bitter, they are powdered and mixed with gingelly oil used as a vermifuge. Seed oil is used as an antidote for scorpion sting and snake bites. Seed oil if applied regularly acts as a hair tonic. Leaves are used externally on healing ulcers and wounds. If taken internally gives relief from dyspepsia and amenorrhoea.

பேய்த்தும்மட்டி ஒரு படர்கொடி ஆகும். இப்படர் கொடியின் விதை கசப்புச் சுவையுடையது. தும்மட்டியை நல்லெண் ணெயில் கலந்து கீரிபூச்சிக்காகக் கொடுக்கலாம். விதை எண்ணெய் பாம்புக்கடி, தேள்கடி ஆகியவற்றிற்கு குணம் தரும். மயிர் கருப்பாக வளரும். இலை புண், இரணம் ஆற்றும். குன்மம், சூதகக் கட்டு குணமாக்கும்.

* * *

## தும்மட்டி

**(மலைத்தும்மட்டி)**

## Cucumis hardwickia

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Fruits*

*Action* : *Alexipharmic, Purgative and Cooling.*

Uses : This cures psycosometic disorders, fatigue and drowsiness.

மலைத்தும்மட்டி பைத்தியம், மயக்கம், தலைச்சுற்றல் ஆகிய மவைகளை குணப்படுத்தும்.

* * *

## தும்மட்டி

(காட்டுத் தும்மட்டி)

**See : Cucumis trigonus**

**சுக்கங்காய் பார்க்க**

* * *

## தும்ராஷ்டகம்

**See : Alpinia galanga**

**பேரரத்தைப் பார்க்க**

* * *

## துயிலிக்கீரை

**(தொய்யாக் கீரை)**

Amaranthus polygonoids

**(N. O. Amaranthaceae)**

*Habit* : *Herb.*

*Parts used* : *Whole plant.*

*Action* : *Diuretic and Antipruritic.*

Uses : This green is used as stimulant and said to cure constipation, venereal discharges, indigestion, itching, ulcer and gonorrhoea. Leaves roasted in oil are applied and bandaged to cure inflammation and chronic ulcers.

துயிலிக்கீரை புளிப்பும் துவர்ப்பும் உடைய இக்கீரை வெப்பமுண்டாக்கி பிறகு தேகத்தில் சுறுசுறுப்பை யுண்டாக்கும். நாள்பட்ட மலச்சிக்கலும், பிரமேக வெள்ளையும் போகும். ஆனால் கபம் உணடாகும். இதை எண்ணெயில் வதக்கி வீக்கம், விஷப்புண்களுக்குக் கட்டலாம்.

* * *

## துரஞ்சிபீன்

## Alhagi maurorum

**((N. O. Leguminosae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Gum.*

*Action* : *Laxative, Diuretic, Expectorant, Nutritive and Antirheumatic.*

Uses : This is saccharine exudation obtained from the tree named perrisan manna. In the condensed gum the portion of the fruits and thorns are found. This is purgative. This cures biliousness, chest pain, loathing for food and fever. This should be taken along with cow's milk. Flowers boiled with gingelly oil is applied on head before having a bath to cure heaviness of the head and cold affections. Soaked in breast milk and if squeezed in the eyes cures eye disorders.

அரபி மன்னா என்னும் முள் செடியின் அடிமரத்தினின்றும் வேரினின்றும் இனிப்புச்சுவையுடைய ஓர் பிசின் தயாரிக்கப்படுகிறது. இப்பிசினுள் முட்களும், செடியில் காய்ந்த பழமும் புதைந்து கிடக்கும். இப்பிசின் பேதியாகச் செய்யும். இது இருமல், பித்தாதிக்கம் மார்புவலி, அரோசிகம், சுரம் இவற்றை நீக்க பசுவின் பாலில் கொடுக்க வேண்டும். இச்செடியின் பூவை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி தலை முழுகி வர தலைபாரம், சீதளம், நீரேற்றம் போகும். முலைப் பாலில் ஊற வைத்து கண்ணில் பிழிய சன்னி ரோகம் போகும்.

* * *

## துரட்டி

## Capparis zeylanica

**(N. O. Capparidaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Action* : *Sedative and Diuretic.*

Uses : Fruits are edible and used in the form of pickles.

துரட்டியின் பழம் ஊறுகாய் போடவும் சமையலுக்கும் பயன் படுத்தப்படுகிறது. இது உடலுக்கு குளிர்ச்சித் தரும்.

* * *

## துரா

## Fumaria officinalis

### (N. O. Fumariaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Constituents* : *Plant contains fumaric acid.*

*Action* : *Alterative, Febrifuge, Tonic, Diaphoretic, Diuretic and Laxative*

Uses : The whole plant is medicinally used except the root. A decoction of this plant is used in treating venereal diseases, dysuria, indigestion and loss of appetite. Moreover it is a laxative and diuretic, purifies blood and promotes secretion of breast milk in woman. This cures diseases and disorders due to rheumatism, biliousness, internal piles, fistula and burning sensation during micturition.

Infusion of leaves and flowers cure inflammation of spleen and liver, colic and flatulence and acts as an appetizer.

துராசெடியின் வேர் தவிர மற்ற எல்லா பாகங்களும் மருத்துவப் பயனுடையது. இது உடலுக்கு பலத்தைக் கொடுக்கும். வியர்வை பிறப்பிக்கச் செய்வதுடன் காய்ச்சலைப் போக்கும். இதன் கஷாயம் மேகநோய், நீர்சுறுக்கு, அஜீரணம், அரோசிகம் முதலியவைகளைப் போக்கும். இது மலத்தை இளக்கி மூத்திரத்தை வடிக்கக்கூடியது. இரத்தத்தை சுத்தம் செய்யும். பால் சுரக்கச் செய்யும். வாத பித்தக் கோளாறுகளை நீக்கும். முளை மூலம், நீரெரிச்சல் இவைகளைப் போக்கும்.

மேலும் இது கல்லீரல், மண்ணீரல் வீக்கங்களையும், வயிற்று வலி, வயிற்றுப் பொருமலையும் நீக்கி உணவில் ருசியைத் தரும்.

* * *

## துரா
(செந்துரா, பம்பந்தாரா)

## Flumaria parviflora
**(N. O. Fumariaceae)**

*Habit : Herb*

*Parts used : Whole plant.*

*Constituents : Fumaric acid.*

*Action : Similar to F. officinalis.*

Uses : It is a rare plant. It is a remedy for piles, fistula, loss of appetite, urethral irritation and fatigue. This acts as galactagogue and corrects the mestrual cycle. This also promotes the cochial discharges after child birth. This is also used in calcinations.

செந்துராவினால் முளைமூலம், அருசி, நீர்த்தாரைச் சூடு, ஆயாசம் நீங்கும். தாய்ப்பால் சுரக்கும். மாதவிடாய் சிக்கலை தீர்க்கும். பிரசவ அழுக்கு சுகமாக வெளியாக்கும். பஸ்பம் செய்யும் போது இவ்விலைச் சாறு பயன்படும் வழக்கில் இருக்கிறது.

* * *

## துரா
(கச்சந்துரா)

## Glinus oppositifolius
**(N. O. Ficoideae)**

*Habit : Herb*

*Parts used : Whole plant.*

Uses : This gives relief in skin diseases and checks diarrhoea.

கச்சந்துரா சரும நோய்களை குணப்படுத்தும்.

* * *

## துரிஞ்சி

## Citrus medica

**(N. O. Rutaceae)**

*Habit* : *Small tree.*
*Parts used* : *Fruits.*
*Constituents* : *Fruit contains citric acid.*
*Action* : *Juice of the fruit is Refrigerant and Tonic.*

Uses : Pericarb of the fruit is stimulant but acts as tonic. The inner pulb is refrigerant. Fruit, leaves and flowers increases the internal heat and thirst. Juice of it is astringent.

துரிஞ்சி, கொடி மாதுளை எனப்படும். இதன் காயின் மேல் தோல் உஷ்ணம் தரும். ஆனால் பலமுண்டாக்கும். உட்சதை குளிர்ச்சி தரும். விதை, இலை, பூ இவைகளும் உஷ்ணத்தையும், வறட்சியையும் தரக் கூடியவை. இதன் சாறு துவர்ப்புடையது.

* * *

## துவரகம்

## Hydnocarpus wightiana

**(N. O. Flacourtiaceae)**

*Habit* : *Herb*
*Parts used* : *Seeds.*
*Constituents* : *An oil is extracted from the seeds*
*Action* : *Oil is Purgative.*

Uses : Oil is extracted from the seed is used to treat leprosy and diabetes. This can be taken along with catechu decoction.

துவரகம் செடியின் விதையினின்று எடுக்கப்படும் எண்ணெயினால் நீரிழிவு, குட்டம் போகும். இதை காசுக்கட்டி கஷாயத்திலும் சாப்பிடலாம்.

## துவரை

## Cajanus cajan

### (N. O. Papilionaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Seeds, pods and leaves*

*Constituents* : *Seeds are rich in proteins,*

*Action* : *Seeds are Nutritive but hot and dry. Diuretic and Stimulant.*

Uses : Leaves and seeds of this **shrub** exhibits medicinal properties. Tender leaves, if chewed, gives relief from stomatitis. Juice of the leaves cures jaundice and checks the secretion of the milk in women. Seeds are edible and digestive. This if taken along with other food materials acts as tonic.

துவரை இலையும், விதையும் மருத்துவப் பயனுடையது. வாய்புண், வயிற்றுப்புண்களுக்கு இலைக் கொழுந்தை வாயிலிட்டு மெல்ல குணமாகும். இலைச்சாற்றினால் காமாலை குணப்படும், முலைப்பால் சுரப்பது நிற்கும். இதன் பருப்பு எளிதில் ஜீரணமாகக் கூடியது. துவரம்பருப்பை உணவுப் பதார்த்தங்களுடன் சேர்த்துண்ண அக்கினி மந்தமும், வாத பிரகோபமும் நீங்கும். தென்னிந்தியர்களின் பிரதான உணவுகளில் குழம்புகளிலும் பதார்த்தங்களிலும் இப்பருப்பு இல்லாமல் இருக்காது.

* * *

## துளசி

### (சாதா துளசி, வெண் துளசி)

## Ocimum sanctum

### (N. O. Labiatae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, seeds and root.*

*Constituents* : *An essential oil,*

*Action* : *Demulcent, Expectorant and Antiperiodic. Root is Febrifuge, Seeds are Mucilagenous and Demulcent.*

*Dried plant is Stomachic and Expectorant. Leaves are Anti-catarrhal, Expectorant, Fragrant and Aromatic.*

Uses : The herb is pungent to taste, Fragrant to smell and removes cold and eliminates phlegm. It is Stimulant, Diaphoretic and Expectorant. The decoction of this herb is used to cure poisinous fever. Leaves are dried and powdered and if used as snuff cures cold and eradicates the worms. Juice of the leaves cures chronic fever, phlegm, colic, indigestion, loathing for food and cough in children. Juice of the leaves mixed with lemon juice is applied externally to cure cutaneous affections and ringworm. This if taken internally strenthens the liver and heart and acts as an appetizer. This cures ammenorrhoea and promotes the secretion of the milk in women. Leaves if chewed gives relief from toothache. Leaf juice is applied to reduce inflammations. Boiled with gingelly oil if used as ear drops cures otitis. Infusion of root gives relief in fever. Leaves along with the leaves of Botaical and nitex neguda are cooked. The expressed juice of this if given to children gives relief from indigestion. Leeves along with milk is boiled and if taken regularly acts as an expectorant and aphrodisiac.

Seeds rubbed in water is given for irritating cough, gonorrhoea, labour pain, burning sensation during micturition and dysentery. Seeds rubbed with cow's milk are given for vomiting and diarrhoea. To treat headache leaves are taken internally and the bruised leaves are applied on the forehead. Dried and powdered root if taken twice daily for seven days cures spermetorrhoea.

வெண் துளசி சிறு செடி, காரமாயும் வாசனையாயுமிருக்கும். சீதளத்தைப் போக்கி, கபத்தை அறுத்து வியர்வையை உண்டாக்கும். உள்ளழலையை போக்கும். கஷாயம் சுரத்தைக் கண்டிக்கும். இலைகளை சூரணித்து மூக்குத் தூளைப் போல் உபயோகப்படுத்த பீனிசத்தைக் குணமாக்கி புழுக்களைக் கொல்லும். இதன் சாறு அஸ்தி சுரம், கபம், வயிற்றுளைவு, மாந்தம், அரோபிகம், இருமல் முதலான குழந்தை நோய்களைப் போக்கும். இதை எலுமிச்சைப் பழச்சாற்றுடன் அரைத்துப்போட சருமநோய்கள் குணமாகும். இதன் இலைச் சாறு $\frac{1}{4}$-$\frac{1}{2}$ தேக்கரண்டியளவு குழந்தைகளுக்கும், 1-1$\frac{1}{2}$ அவுன்ஸ்

விதம் பெரியோர்களுக்கும் கொடுக்க இதயத்திற்கும் ஈரலுக்கும் பலத்தையுண்டாக்கி பசியை உண்டாக்கும். தொண்டைக்கமம், மார்ச்சளி, உதிரச்சிக்கல் முதலியவை போக்கும். பெண்களுக்குப் பால் சுரக்கும். இதன் இலைச்சாற்றை மெல்லுவதால் பல் கூச்சம், பல்வலி நீங்கும். இதன் இலைச்சாற்றை விக்கத்தின் மேல் தடவ குணமாகும். இதை நல்லெண்ணெயில் காய்ச்சி காதிலிட காதுவலி குணமாகும். வேரை கஷாயமிட்டுக்கொடுக்க காய்ச்சல் குணமாகும். இதனுடன் நொச்சி, முசுமுசுக்கை சேர்த்து பிட்டு அவித்து, பின் கசக்கி சாறு பிழிந்து குழந்தைகளுக்குக் கொடுக்க கணமாந்தம் குண மாகும். இலையைப் பாலிலிட்டுக் காய்ச்சுண்ண கபத்தைத் தடுக்கும். தாது புஷ்டியாகும், இலையை உணர்த்தி நசியமிட பீனிச புழுக்கள் வெளியாகும். தண்ணீர் விட்டு வேது பிடிக்க கப தோஷம் நீங்கும். இதன் விதையை நீரிலிட்டு அரைத்து உட்கொள்ள பொடி இருமல், தேக உஷ்ணம், பிரமேகம், பிரசவ வேதனை, நீரெரிச்சல், சீதபேதி முதலியவை குணமாகும். தலைவலி குணமாக துளசி இலையை மென்று தின்றுவிட்டு இலையை நசுக்கிவலியுள்ள இடத்தில் வைத்துக் கட்ட குணமாகும். சொப்பன ஸ்கலிதம் நிற்க வேரை உலர்த்தி பொடித்து தினம் காலை மாலை இருவேளை தொடர்ந்து ஏழு நாட்கள் தேனுடன் சாப்பிட குணமாகும்.

* * *

## துளசி
### (கருந்துளசி)

## Ocimum sanctum

### (N. O. Labiatae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *An essential oil*

*Action* : *Similar to white variety.*

Uses : This is more powerful than white variety. This gives relief in cough, wheezing, boils poisinous bites and acts as an anthelmintic. Leaves are dried and powdered if sniffed up acts as parasiticide.

To treat scorpion sting, nine leaves are given along with ripened cocoanut. This also cures hoarseness due to phlegm.

Seeds rubbed along with cold water if taken internally cures cough and irritating cough and gleet.

கருந்துளசி சாதா துளசியை விட வீரியம் அதிகம் உள்ளது. இதனால் இருமல், இரைப்பு, வயிற்றுப்புழு, சூலை, நஞ்சு இவைகள் நீங்கும். இலையை உலர்த்திப் பொடித்து மூக்கிலிடப் புழுக்கள் வெளிப்படும்.

வயிற்றில் இறந்த குழந்தை வெளியேற இதன் 200 மி.லி. இலைச் சாற்றுடன் நான்கு தேக்கரண்டியளவு நல்லெண்ணெய்யை விட்டுக் கலக்கிக் கொடுக்க குழந்தை வெளியேறும்.

தேள் கொட்டிய விஷம் நீங்க 9 துளசி இலையை மென்று தின்று விட்டு முற்றின தேங்காயை சாப்பிட வேண்டும்.

மேலும் இதனால் நெஞ்சு சளி மிகுதியினாலுண்டாகும் குறு குறுப்புச் சத்தம் நீங்கும்.

விதையை குளிர்ந்த நீரிலரைத்து உண்ண மண்குத்திநோய், குத்திருமல், வெள்ளை முதலிய நோய்கள் நீங்கும்.

* * *

## துளசி
### (கல் துளசி)

## Stone basil

*Habit* : *Herb*

*Parts used* . *Whole plant*

Uses : This cures fever, boils, poisonous bites, cough chest pain and chronic fevers. Juice of the leaves acts as an expectorant. This also cures boils and abcesses.

இதனால் சுரம், கட்டி, வண்டுக்கடி விஷம், காணாக்கடி, கபங் கட்டி இருமல், நெஞ்சு சளி, விஷ சுரம் ஆகியவை போகும். கோழையை நீக்க இலைச்சாற்றை உள்ளுக்குத் தர வேண்டும். மேலும் இது வித்திர திக் கட்டியைக் குணப்படுத்தும்.

* * *

## துளசி
### (சுணைத்துளசி)

## Ocimum villosum
### (N. O. Labiatae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

Uses : This cures fever, rheumatism, biliousness indigestion and fever due to indigestion.

இதனால் கணச் சூடு, வாதபித்த நோய்கள், மாந்தம், மாந்த சுரம் நீங்கும்.

* * *

## துளசி
### (செந்துளசி)

## Ocimum violacecum
### (N. O. Labiatae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and seeds*

*Action* : *Similar to O. sanctum*

Uses : This not only acts as antidote for poison, but it cures all bilious diseases also.

செந்துளசியினால் விஷம் நீங்குவதுடன் வாத கபாதிக்கத்தினால் நுரையீரல் தாக்கப்படுவதனால் ஏற்படும் நோய்களையும் போக்கும்.

* * *

## துளசி
(முள் துளசி)

## Ocimum hispida
**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and seeds*

Uses : This is an antidote for poisons, rat bites, ulcers and boils. This heals wounds.

விஷக்கடி, எலிக்கடி, இரணம் கொப்புளம் இவைகளுக்குக் கொடுக்கலாம். இதனால் வெட்டுக்காயம் குணமாகும்.

* * *

## துளசி
(பெருந்துளசி)

**See : Ocimum gratissimum**

**எலுமிச்சம்துளசி பார்க்க**

* * *

## துளசி
(நாய்த்துளசி)

**See : Ocimum album**

**கஞ்சாங்கோரை பார்க்க**

* * *

## துளசி
(நிலத்துளசி)

## Ocimum prostratum
**(N. O. Labiatae)**

*Habit* : *Prostrate herb*

*Parts used* : *Leaves and seeds*

Uses : This reduces fever and fatigue.

நிலத்துளசியினால் கணச்சூடு, சுரம் அழல் தீரும்.

* * *

## தூங்குமூஞ்சி மரம்

## Enterolobium saman

**(N. O. Mimosaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits and leaves.*

Uses : The fruit of the tree gives strength and vitality. The leaves and fruits are used as cattle food.

தூங்குமூஞ்சி மரத்தின் காய் உடலுக்குப் பலம் கொடுக்கும் இதன் இலையும் காயும் கால்நடை உணவாகப் பயன்படுகிறது.

* * *

## தூணு மரம்

## Cedrus deodara

**(N. O. Pinaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Constituents* : *It contains an essential oil*

*Action* : *Bark is Antibilious, Febrifuge and Vermifuge.*

Uses : Caesalpinia bonducella along with the bark of this plant is a good medicine to treat chronic fever,dysentery, diarrhoea etc. Bilious diseases also could be cured with this. Bark powder is used as an external application for skin ulcers and wounds. The oil extracted from the bark is an ideal medicine for ringworm, and other skin diseases.

தூணுமரப் பட்டையுடன் கழற்சிக் காயைச் சேர்த்து சுரம், முறை சுரம், சீதபேதி, கழிச்சல் இவைகளுக்குக் கொடுக்க குணம் தரும். மேலும் பித்த சுரம், கிராணி அல்லது திராக்கழிச்சல் இவை

களைக் கண்டிக்கும். பட்டைத்தூளைப் புண் புரைகளுக்குத் தடவ குணம் தரும். தூணுமரப் புகையின்று எடுக்கப்படும் எண்ணெய் சிலந்திப்புண், சரும நோய் இவைகளைக் குணப்படுத்தும்.

* * *

## தூதுவளை
### (தூதுவேளை)

## Solanum trilobatum
### (N. O. Solanaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Leaves contain moisture, protein, minerals, crude fibre and other carbohydrates*

*Action* : *Cardiac, Tonic, Carminative, Stimulant, Expectorant, Nutritive, Diaphoretic and Aphrodisiac.*

Uses : This is a kind of climber which has thorns. The root and leaves are bitter and astringent. If taken as a vegitable, it relieves diseases of ear due to phlegm, asthma, indigestion, spermatorrhoea etc. The leaves are roasted along with onion in gingelly oil. This is used to treat difficulty in breathing. The dosage for the first three days is once daily and again after three days continue the same dosage.

The treatment for tuberculosis with this is as follows. The leaves are made into a paste with cow's butter, 10 gms of mixture of long pepper, celery and myrabalan. This paste is heated and 5 ml of the extract is used daily for 40 days. The flower paste with ghee if taken along with curd acts as an aphrodisiac and improves mental power. Leaf is very effective against indigestion, spermatorrhoea and fatigue. To treat diseases of ear, ascites, impaired digestion due to excessive heat, the leaves are used along with pulses If used as ear drops, the leaf juices cures dullness of hearing, otorrhoea and other diseases of ear. Dried and powdered fruit, if taken internally cures phlegmatic disorders, rheumatism, constipation, gastric problems. The ripened

fruit cures chest conjestion chest pain, This is an antidote to snake poisons. The researchers are trying to make medicines from the leaves and stem of this plant.

தூதுவளை ஓர் வகைக் கொடியாகும். தூதுவேளையின் மறு பெயர் ''கூதளம்'' என்பதாகும். சிறு முட்கள் காணப்படும். இதன் வேரும் இலையும் கைப்பு, கார்ப்பு சுவையுடையது. தூதுவேளையை சமைத்துச் சாப்பிட கபத்தால் உண்டாகும் காதுமந்தம், காதெழுச்சி, காசம், நமைச்சல், அக்னி மாந்தம் தேக உட்குத்தல், விந்து நட்டம் ஆகியவை நீங்கும்.

இலையைச் சிறிய வெங்காயத்துடன் சேர்த்து நல்லெண்ணெயில் வதக்கி மூன்று நாட்கள் தொடர்ந்து சாப்பிட்டு பின்பு மூன்று நாட்கள் விட்டு மூன்று நாட்கள் சாப்பிட வேண்டும். இவ்வாறு தொடர்ச்சியாக 21 நாட்கள் சாப்பிட சுவாசகாசம் நீங்கும்.

இலையை அரைத்து அத்துடன் சம அளவு பசு வெண்ணெய், பின்பு 10 கிராம் பொடித்த அரிசித் திப்பிலி, ஓமம், கடுக்காய்த் தோல் சேர்த்துக் கலக்கி சூடு செய்து பிழிந்து கிடைக்கும் நெய்யைத் தேக்கரண்டியளவு தொடர்ந்து 40 நாட்கள் உள்ளுக்குச் சாப்பிட க்ஷயரோகம் குணமாகும்.

தூதுவேளை பூவை நெய்யில் வதக்கி தயிருடன் சாப்பிட விந்து கட்டும், அறிவு விருத்தியாகும். தூதுவேளை இலையைத் துவையல் செய்து சாப்பிட மாந்தம், தாது நஷ்டம், இளைப்பு இவைகள் போகும். பருப்புடன் சேர்த்து இதைக் குழம்பு வைத்துச் சாப்பிட மகோதரம், கர்ண சூலை இவை குணமாகும். தூதுவேளை இலைச் சாற்றைக் காதில் பிழிய காதடைப்பு, காதெழுச்சி முதலிய நோய்கள் குணமாகும்.

தூதுவேளை காயின் வற்றலைக் குழம்பு செய்து சாப்பிட கப ரோகம், பித்த வாதம், வாயு மலபந்தம் இவைகளைக் கண்டிக்கும். தூதுவேளையின் பழம் மார்ச்சளி, மார்பு வலி, பாம்பு விஷம், சயம் இவைகளைப் போக்கும். தூதுவேளையின் தண்டு, இலை முதலானவற்றில் இருந்து சில முக்கிய நுண் சத்துக்களைப் பிரித்து புற்று நோய்க்கு மருந்து செய்ய ஆய்வுகள் நடைபெற்று வருகிறது.

* * *

## தூதுவளை

### (சங்கத் தூதுவளை)

## Solanum trilobatum

### (N. O. Solanaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

Uses : A kind of twining herb with white flowers. It is one of the rejuvenating drugs. Juice of the leaves is used in the preparation of siddha medicines. Plant extract if taken internally improves voice.

சங்கத் தூதுவளையின் பூ வெண்மையாக இருக்கும். இது காயசித்தி மூலிகையாகும். இதன் இலைச்சாறு பாஷாணத்திற்கு சுருக்குக் கொடுக்க உதவும். இக்கொடியின் இலையை உபயோகிக்க குரல் இனிமையாகும்.

* * *

## தென்னைமரம்

## Cocos nucifera

### (N. O. Palmae)

*Habit* : *Tree*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Fresh kernel is rich in proteins, fat lignin, sugars and inorganic substances. Oil is expressed from the dried flesh of the nut. Cocoanut water contains proteins, fats, minerals and carbohydrates. Fermented toddy contains proteins, calcium and phosphorus. Cocoanut oil contains free caprylic acid in addition to glycerides of lauric, myristic, palmitic and stearic acid.*

*Action* : *Cocoanut milk is Refrigerant, Nutrient, Aperient, Diuretic and Anthelmintic. Cocoanut water is Cooling, Demulcent and Aperient. Tender flesh*

*is Refrigerant and Diuretic. Juice of the terminal bud is Refrigerant and Diuretic. Fermented liquor is refreshing and Laxative. Oil from the shell is Rubefacient, Antiseptic and used externally. Root of the cocoanut is Diuretic.*

Uses : All the parts of this tree is useful. Tender cocoanut water is sweet and the kernel is edible. This cures burning sensation during urination, dysuria, venereal heat etc., Cocoanut is an important food. Toddy is made out from cocoanut tree this is tapped from the spathe of the tree. Toddy gives energy and acts as laxative. Fermented toddy is used in making bread and other edible varieties. Powdered cumin and pepper mixed in fresh toddy gives relief in internal heat, venereal diseases, dysentery etc. This gives nutrition and enerygy to body. The vinegar made out of its toddy is useful in curing fever accompanied by thirst. The male flower is used to cure diabetes, internal fever, leucorrhoea and biliousness. The juice of the male flowers mixed in curd is an ideal medicine for menorrhagia and biliousness. The flowers taken from the unopened spathe is made into a paste with cow's milk, and this paste if consumed daily morning and evening, it cures nervous debility, gives strength, and increases the secretion of semen. Anuresis could be cured by mixing the flower juice with equal quantity of curd and lemon juice. This should be consumed three times a day.

Country brown sugar with cocoanut is used in releiving stomach ache and dysentery. Ripe cocoanut is a nutritious food. The milk, squeezed out of cocoanut it used on the body and hair which helps in the hair growth and gives lusture to the skin. This milk is consumed by patients of nerve weakness and begining stage of tuberculosis. If this milk is consumed regularly it cures intestinal ulcers, eczema etc., If applied externally it cures, skin diseases like ringworm, itching, etc. This milk is a refrigerant and tonic. Oil is extracted from cocoanut and it is used as body coolant and as hair oil. This oil is also used to treat burns. The soft downy brown coloured ubstance found on the out side of the lower part of the compound leaf is used in healing cuts, guinea worm infections etc. It stops bleeding caused by leech bite. The oil

prepared from the shell of the cocoanut is used in treating eczema of the hip, ringworms, infection boils and other skin disorders. If black cumin is added with oil and used in bathing it cures all type of skin deseases. Tender leaves stops bleeding piles. The root of the tree along with ginger and palm sugar is made into a decoction. This decoction is very useful in treating intermittent fever and cholera fever. Cocoanut oil mixed in the decoction is used as mouth wash to cure stomatitis.

தென்னை மரத்தில் உபயோகப் படாதது எதுவுமில்லை. குடிக்க இளநீர் தித்திப்பாகவும் வழுக்கை சாப்பிட ருசியாகவுமிருக்கும். இதன் இளநீர் உடம்பின் உஷ்ணத்தைப்போக்கும். செவ்விளநீர் நீரெரிச்சல், நீர்கடுப்பு, மேகச்சூடு இவைகளைக் கண்டிக்கும். தேங்காய் சிறந்த உணவுப் பதார்த்தமாகப் பயன்படுகிறது. இதன் பாளையை சீவி கள் இறக்குவர்.

தென்னங்கள் சுறுசுறுப்பைத் தருவதுடன் மலத்தை இளக்கும். புளித்த கள் ரொட்டி, ஆப்பம் தயாரிக்கப் பயன்படும். காலையில் இறக்கிய கள்ளுடன் சீரகம், மிளகு சூரணித்துப் போட்டு சாப்பிட உடம்பின் உஷ்ணம், மேகநோய், சீதபேதி இவைகளை நீக்கி உடம்பை போஷிக்கும். இக்கள்ளிலிருந்து செய்யப்படும் காடி தாகசுரத்தை போக்கும்.

இதன் பாளைப்பூ பிரமேகம், உட்காய்ச்சல், ஒழுக்கு பிரமியம், இரத்த பித்தம் முதலிய நோய்களை தீர்க்கும். மேலும் பெண்கள் நாதத்தைப் பலப்படுத்தும். பெரும்பாடு, பித்தரோகம், சீதபேதி இவைகளுக்கு பாளை பூவை இடித்து சாறுபிழிந்து தயிரில் கலந்து கொடுக்கலாம். வெடிக்காத பாளையினுள்ளே இருக்கும் பூவை பசும் பால் சேர்த்து அரைத்து தினம் காலையும், மாலையும் உண்ண நரம்புத் தளர்ச்சி நீங்குவதுடன் தாதுபலம் ஏற்படும்.

உஷ்ணப் பெருக்கினால் ஏற்படும் நீர்ச்சுருக்கிற்கு தென்னம்பூ சாறுடன் சம அளவு தயிரும் எலுமிச்சைப் பழச் சாறும் கலந்து தினம் மூன்று வேளை சாப்பிடவேண்டும். தேங்காய்ப் பூவுடன் நாட்டுச்சர்க்கரை சேர்த்து சாப்பிட வயிற்றுக் கடுப்பு நீங்கும்.

முற்றிய தேங்காய் உணவுப் பொருளாகப் பயன்படுகிறது. இதிலிருந்து பிழிந்தெடுத்த பாலை கூந்தலிலும் உடம்பிலும் ஊற்றித் தேய்க்க மயிர் மிருதுவாகி உடலுக்கு பளபளப்பு தரும். இப்பால் நரம்பு கேட்டினால் ஏற்பட்ட பலவீனம், ஆரம்பச்சயம், சௌக்கியக் குறைவு இவைகளுக்குக் கொடுக்க குணப்படும். அன்றியும் தொடர்ந்து சாப்பிட வயிற்றுப்புண் மேக உஷ்ணம், கரப்பான் இவைகளைப்

போக்கும். மேலுக்குத் தடவ சொறி சுரங்கு படர்தாமரை, நமைச்சல் இவை நீங்கும். இப்பால் உடம்பிற்கு குளிர்ச்சி தரும். நீரை வடிக்கும் ஊட்டத்தை கொடுக்கும்.

தேங்காய் எண்ணெய் முடிவளரச் செய்யும். இதை வழுக்கைக்கும் தீச்சுட்டப் புண்ணிற்கும் பூச மிக்க குணமாகும்.

தென்னை மரத்தின் மட்டையின் அடிபாகத்தில் காணப்படும் பஞ்சு போன்ற வஸ்து வெட்டுக் காயம், சிலந்தி, உராய்ந்தபுண், அட்டைக்கடி முதலியவைகளினின்று ஒழுகும் இரத்தத்தை நிறுத்தும்.

தென்னங்கரித் தைலம் எனப்படும் சிறட்டைதைலம் இடுப்புச் சிரங்கு, படைநோய்கள், படர் தாமரை, அரைக்கடுவன், தேம்பல் முதலியவற்றை குணப்படுத்தும். இதனுடன் கருஞ்சீரகம் சேர்த்து தலை முழுகிவர சருமநோய்கள் போகும். இளம் குருத்து இரத்த மூலத்தை நிறுத்தும்.

தென்னம் வேருடன் இஞ்சி, வெல்லம் சேர்த்து கஷாயமிட்டு அருந்த முறைசுரம், விடாசுரம் போகும். இக்கஷாயத்துடன் தேங்காய் எண்ணெய் சேர்த்து வாய் கொப்பளிக்க வாய்ப்புண், தொண்டைப்புண் இவைகளை குணப்படுத்தும்.

* * *

## தேக்கு

## Tectona grandis

### (N. O. Verbenaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, wood and fruit.*

*Constituents* : *Wood contains deposits of calcium phosphate, silica and ammonium and magnesium phosphate.*

*Action* : *Paste of the wood is Diuretic, Astringent, Hepatic and Stimulant.*

Uses : The wood powder is used in treating headaches of all types. If taken internally it reduces the burning sensation of the stomach and it also acts as an anthelmintic.

The charcoal of this is mixed with the juice of the poppy seed and used as an external application in inflammation of the eyes. The oil of the bark is used in treating itching of the skin.

இம்மரத்தின் தூளைப் பசையாகக் காய்ச்சி, பித்த தலை வலி, வீக்கத்தை கரைக்கவும், பித்தாதிக்கத்தினாலேற்படும் வயிற்றின் எரிச்சலுக்கும், வயிற்றுப் பூச்சிகளை கொல்லவும் உபயோகப் படுத்துவர். இதன் கரியை கசகசாவின் பாலோடு குழப்பி, கண்ணிரப்பையின் வீக்கத்திற்குத் தடவ குணமாகும்.

மரப்பட்டை எண்ணெய் உடம்பின் நமைச்சலுக்குத் தடவ குணம் தரும். இம்மரத்தின் காயை தூளாக இடித்து பெண்களின் நிதம்பத்திற்கு கட்டுகட்ட மூத்திரத்தை வெளிப்படுத்தும்.

* * *

## தேயிலை

### Thea assamica

**(N. O. Ternstroemiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Tender leaves*

*Constituents* : *Dried leaves contains theine its chief alkaloid which is identical with caffine and tannin.*

*Action* : *Decoction of the dried powdered leaves is Stimulant, Diuretic and Astringent. In some it prevents sleep and causes mental irritability.*

Uses : The decoction of tea gives instant energy and gives strength to teeth. The poisonous alkaloid of tea known as theine is bad for health. The infusion of the seed is used in treating insect bites.

தேயிலைக் கஷாயம் சுறுசுறுப்பைத்தரும். பற்களுக்கு ஆரோக்கியத்தை தரும். இதில் ஒரு வித சுண்ணவிஷம் இருப்பதால் இதன் நன்மையைவிட உடலுக்கு தீமையே அதிகம். இதன் விதை குடிநீர் பூச்சிக் கடிக்கு சிறந்த மருந்தாகும்.

* * *

## தேவதாரு

### Pinus deodara

**(N. O. Pinaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, leaves and wood*

*Constituents* : *Wood contains oil and resin. Terpentine is obtained from the wood by destructive distillation.*

*Action* : *Bark is Astringent and Febrifuge. Wood is Carminative. Tender leaves acts as Refrigerant.*

Uses : The wood and the bark is of medicinal use. The tender leaves are refrigerant. The decoction of the bark gives strength. This cures chronic fever cold and reduces body temperature. The powdered bark if used as an external application to ulcers. The wood is made into a paste by milk and this paste is used as poultice, which gives sound sleep.

இம்மரத்தின் பட்டையும், கட்டையும் மருத்துவப் பயனுடையது. இதன் இலைக்கொழுந்து உடம்பிற்கு குளிர்ச்சி தரும், பட்டைக் கஷாயம் உடலுக்கு பலம்தரும். மேலும், இது பீநசம், பழையசுரம், நீரேற்றம், உடல் வெப்பம் நீக்கும். இப்பட்டையைத் தூள் செய்து புண்களின் மீது போட மயக்கம், கிறுகிறுப்பு, தூக்கமின்மை விலகி நல்ல தூக்கம் உண்டாகும்.

* * *

## தேவதாரு

### (சரள் தேவதாரு)

## Berrya cordifolia

### (N. O. Coniferae)

*Habit* : *Tree*

*Parts used* : *Gum*

*Constituents* : *An oil is extracted from the Gum.*

*Action* : *Gum is Stimulant, Diaphoretic and Refreshing and Febrifuge. Oil is Expectorant.*

Uses : The latex of this tree gives energy and strength. This reduces sweating and burning sensation of the body. It reduces fatigue also. This could be used in treating ringworm and other skin ailments. Poisonous dropsy, fever also could be treated with this. This is a major ingredient in the medicines prepared for the above said diseases. The oil of this plant is used in treating, wheezing and tuberculosis.

இம்மரத்தின் பிசின் உடலுக்கு சுறுசுறுப்பிற்கும், வியர்வை வாங்கவும், உடம்பெரிச்சலைத் தணிக்கவும், களைப்பைப் போக்கவும் உதவும். இதை 'சிலந்திப்புண், கட்டி இவைகளுக்கு மருந்தாக உபயோகிக்கலாம். மேலும் இது பல்வலி, நடுக்கல் வாதம், கபசுரம் முதலிய நோய்களுக்கான மருந்துகளில் பயன்படுகிறது. இதன் எண்ணெய் சத்தை இரைப்பு, க்ஷயம், முதலிய சிலேட்டும ரோகங் களுக்கும் உள்ளுக்குக் கொடுக்கலாம்.

* * *

## தேவதாரு

(சுருள் தேவதாரு)

## Pinus longifolium

**(N. O. Coniferae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Sap wood yields on insicion an oleo resin.*

*Constituents* : *Terpentine is obtained from the resin be steam distilation.*

*Action* : *Stimulant, Diuretic, Carminative and Diaphoretic.*

Uses : The oil of this plant is used in treating disorders and it is also used as external application for boils and feruncles.

சீமைத்தேவதாரி எனப்படும் இதன் எண்ணெய் வயிற்றுக் கோளாறுக்கும், கட்டி சீழ்கொள்ள மேற்பூச்சு மருந்தாகவும் உபயோகப்படும்.

* * *

## தேற்றான் கொட்டை

(இல்லம், கதகம், சில்லம்)

## Strychnos potatorum

**(N. O. Loganiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Brucine is extracted from the fruit.*

*Action : Anti-dysenteric, Demulcent, Alterative, Stomachic, mild Expectorant, Emetic and Tonic.*

Uses : This tree bears small yellowish green flowers which is used to check dysentery. It acts as an emetic. Fruits exhibit medicinal properties. Seeds give relief in diabetes, gonorrhoea, dysuria, micturition, dyspepsia and fever.

The pulp of the fruit gives relief from dysentery, cough, diabetes and it is used in in the from of decoction or powder. Seeds are ground with camphor and honey into a way substanee and used as collyrium. Also it cures lacrimation. Along with rock salt when used it cures redness of the eye. Powdered seeds mixed with honey is used as an external application to abscesses to hasten its ripening. If the powder is consumed daily along with water, relieves phlegm from the chest. Powder of gall nut, Indian goose berry, berleric fruit, dried ginger, black pepper, long pepper cumin and Alpinia minor along with equal quantity of the powder of this s eeds are made into an electuary and if used as a vehicle of calcined oxide of zinc, it is very useful in piles, consumption ricketic fever and increases of wind humour. Seed ground in water and taken with butter milk gives relief in chronic diarrhoea and with cow's milk cures urinary affections and gonorrhoea. A piece of the white cloths is soaked in the fruit juice and dried. This cloth can be used when the fruit is not available by soaking it in water and sqeezing. This water is used in the place of decoction or powder of the pulp.

தேற்றாமரம் மஞ்சளும், பச்சையும் கலந்த பூக்களை யுடையது. பூ வாந்தியையுண்டாக்கி சீதபேதியைப் போக்கும்.

இதன் பழம் பலமருத்துவப் பயன்களையுடையது. இதன் விதை பிரமேகம், வெட்டை, மூத்திரக் கிரிச்சரம், எரிச்சல் மூத்திரம், வயிற்றுக் கடுப்பு, சடராக்கினி உட்சூடு இவைகளைப் போக்கும். பழத்தின் ஓட்டை சூரணம் அல்லது கஷாயம் செய்து சீதபேதி, இருமல், மது மேகத்திற்குக் கொடுக்கலாம். இவ்விதையுடன் கற்பூரம் சேர்த்து தேன் விட்டரைத்து கண்ணில்விட பீளை தள்ளும். மேலும் நீர் வடிதல் போகும். விதையுடன் இந்துப்பை சேர்த்து தேன் விட்டரைத்து போட கண் சிவப்பு மாறும். இவ்விதையைப் பொடித்து பாலில் கலந்து உள்ளுக்குக் கொடுக்க நீர்ச்சுருக்கு, வெட்டை முதலினவும் திரும். மேலும் இப்பொடியை தேனில் குழைத்து

கட்டிகளுக்குப் பூச சீக்கிரம் பழுத்துடையும், சூரணத்தை நீரில் கலந்து தினம் இருமுறை உட்கொள்ள மார்புசளி, கோழைகட்டு போகும்.

இதன் சூரணத்துடன் திரிபலை, திரிகடுகு, சீரகம், சிற்றரத்தை ஆகியவற்றை சம அளவு எடுத்து கலந்து நெய்விட்டு கிளறி காலைமாலை இருவேளையும் நாகபற்பத்தில் உட்கொள்ள அஸ்திசுரம், வாதாதிக்கம், சயம், மூலம் முதலியவை குணமாகும். விதையை சுத்தம் செய்து நீர்விட்டரைத்து பசுமோரில் உட்கொள்ள நீர் சம்பந்தமான நோய்களும் வெள்ளையும் குணமாகும்.

இப்பழத்தின் சாற்றை குழந்தைகளுக்கு உள்ளுக்குப் புகட்ட கோழைக் கட்டுகள் வெளியாகும். இப்பழச்சாற்றை சுத்தமான துணியிலூற்றிக் காயவைத்துக்கொண்டு பழம் கிடைக்காத காலத்தில் இத்துணியை நீர்விட்டுக் கசக்கி கிடைக்கும் நீர் பழத்தின் எல்லா குணங்களையும் கொண்டிருக்கும்.

பழத்தின் உட்சதையை குறிஞ்சாவுக்குப் பதிலாக சீதபேதிக்கும், தொண்டைப் புண் சிகிச்சைக்கும் உபயோகிக்கலாம்.

* * *

## தேவதாளி

## Luffa ehinata

### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, fruit and seeds*

*Action* : *It is Bitter and Stomachic. In large doses it is Emetic, Anthelmintic, Drastic and Purgative.*

Uses : Fruit along with other drugs is made into a decoction. This cures bilious fever. Fruit is abortifacient. The chewed and powdered plant with sugar candy is mixed with oil and if taken cures piles. It is taken along with black jaggery in treatment of leprosy.

பேய்ப்பீர்க்கு எனப்படும் இதன் காயை மற்ற கடைச் சரக்குகளுடன் கஷாயமாக்கி பித்த சாந்திக்குக் கொடுக்கலாம். இக்காய் கர்ப்பத்தைக் கலைக்கக் கூடியது. சமூலப் பொடியுடன் கற்கண்டும், சர்க்கரையும் எண்ணெயிற் குழைத்து விழுங்க மூலரோகம் தீரும். நல்ல கருப்பங்கட்டியில் குழைத்து விழுங்க குஷ்டம் நீங்கும்.

* * *

# தேள் கொடுக்கி

## (சிறுதேள் கொடுக்கி)

## Heliotropium indicum

### (N. O. Boraginaceae)

*Habit* : *Herb*

*parts used* : *Stem, leaves and flowers.*

*Constituents* : *Stems and leaves contain tannin, a non-crystalline organic acid and an alkaloid soluble in ether.*

*Action* : *Diuretic, Emmolient and Anodyne.*

Uses : Leaves resemble the mint leaves. To treat tuberculosis, its leaves along with cumin 6 pepper is ground and consumed in the size of a marble along with 200 ml. of goat's milk for forty days. This cures tuberculosis. But during this medication cigerrate, alcohol, coffee and tea should be avoided.

Its leaves and turmeric are made into a paste is used as an application for boils and bruises. If the juice of the leaves is rubbed where the scorpion has stung it acts as an antidote.

தேள் கொடுக்கி இலை புதினா இலையைப் போன்றிருக்கும். காச நோயை அகற்றுவதில் இதன் பங்கு சிறந்ததாகும். இதன் இலையுடன் சிறிதளவு சீரகம் 6மிளகு சேர்த்து அரைத்து நெல்லிக்கா யளவு சாப்பிட்டு 200மிலி அளவு ஆட்டுப் பாலுடன் தொடர்ந்து 40 நாட்கள் சாப்பிட காசநோய் குணமாகும். இம்மருந்தை உட்கொள்ளும் பொழுது சிகரெட், மது, காப்பி, டீ ஆகியவற்றை சேர்க்கக் கூடாது.

இலையுடன் சிறிதளவு மஞ்சள் சேர்த்து அரைத்து சொறி, சிரங்கு, புண் ஆகியவற்றிற்குத் தடவ சிறந்த குணம் கிடைக்கும்.

தேள் கொட்டிய இடத்தில் இதன் இலைச்சாற்றை விட்டுவர விஷம் இறங்கும். மயில்துத்தத்தை பஸ்பமாக்கும்.

* * *

## தேள் கொடுக்கி

(பெருந்தேள் கொடுக்கி)

## Heliotropium indicum

**(N. O. Boraginaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Similar to small variety.*

*Action* : *Similar to small variety.*

Uses : Juice of the leaves cures gingivitis, pimples, opthalmia, wounds, sores, boils, stings of scorpion, otherl poisonous bites, herpes, eczema, etc. It is used as an externa application.

The infusion of the leaves and flowers if used as mouth wash gives relief from throat pain and throat ulcers. Decoction of the leaves if consumed cures skin diseases. Decoction of its unripened fruit reduces wheezing.

பெருந்தேள்கொடுக்கியின் இலைச்சாறு பல்லீறை கெட்டிப் படுத்தும். மேலும் முகப்பரு, கண்ணோய், விரணப்புண், கட்டி. தேள்கடி, பூச்சிக்கடி, கருங்கிரந்தி, கரப்பான் இவைகளுக்குப் பூச குணம் தரும்.

இதன் இலையையும் பூவையும் குடிநீராக்கி வாய் கொப்பளிக்க தொண்டைப்புண், தொண்டைவலி போகும். இதன் கஷாயத்தை உள்ளுக்கு சாப்பிட சருமநோய்கள் விலகும். இலைச் சாற்றைக் காதில் பிழிய சீழ்வடிதலும், கண்ணிலிட கண்சிவப்பும் மாறும். காயைக் கஷாயமிட்டுக் கொடுக்க இரைப்பு நோய் குணமாகும்.

தேள் கொட்டிய நஞ்சு நீங்க கொட்டிய வாயில் இலைச் சாற்றைப் பூசலாம்.

* * *

## தொட்டாற் சிணுங்கி

## Mimosa pudica

**(N. O. Mimosaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root and leaves.*

*Constituents* : *Root contains tannin and ash.*

*Action* : *Plant is Resolvent, Alterative and Carminative. Root is Aphrodisiac. Juice is Antiseptic, Alterative and blood Purifier.*

Uses : Leaves are small in size and are sensitive. Decoction of the root gives relief in calcareous deposits and in other gravellish complaints. The juice of the leaves and roots are used as an external application for piles, fistula, boils and bruises. Juice of the leaves internally acts as an aphrodisiac and tonic. It cures copious urine. Dried roots if taken along with milk will cure piles. Leaves are made into a paste and used as an external application for the inflammation of the testicles, joint pains and in inflammation of the joints etc.

Leaves with cumin and onion are made into a paste and if consumed along with butter milk it cures menorrhagia. To treat chronic ulcers the juice of the leaves is applied and a betal leaf is placed on the wound. To treat allergy leaf juice is used as an external application and after half an hour to be washed off.

தொட்டாற்சிணுங்கியுடைய இலைகள் சிறியதாகவும் தொட்டவுடன் சுருங்கும் தன்மையதாகவும் இருக்கும். முட்கள் இருக்கும்.

இதன் வேர்க்கஷாயம் கல்லடைப்பை நீக்கும். மேலும் உடலில் கட்டுகின்ற வாதத்தடிப்பை நீக்கும். இதன் இலைகளும், வேர்களும் மூலநோய்க்கு நிவாரணம் அளிக்கிறது. இது மைக்கூட்டவும் உதவுகிறது. இதன் சமூலத்தின் சாற்றினை பௌத்திரப் புண்களுக்குப் பூச குணம் தரும். புண் புரைகளுக்கு இதன் சாற்றினை பஞ்சில் நனைத்து கட்ட குணம் தரும்.

இச்சாற்றினால் உடல் தேறுவதுடன், காமம் உண்டாகும். மேக மூத்திரத்தை நீக்கும். இதன் வேரை காயவைத்து பாலில் கொடுக்க மூலநோய்கள் குணமாகும். இலையை மெழுகு போல அரைத்துத் தடவிக் கட்ட விரைவாதம், கைகால் மூட்டு வீக்கம் போகும்.

இதன் இலையுடன், சீரகம், வெங்காயம் சேர்த்து அரைத்து மோரில் கொடுக்க பெரும்பாடு நோய் குணமாகும்.

நெடுநாள் குழிப்புண்ணிற்கு இதன் இலைச்சாற்றைவிட்டு மேலே வெற்றிலை வைத்து கட்ட குணமாகும். விஷப்பூச்சிக் கடியினால் உண்டாகும் ஒவ்வாமை, தடிப்புகளுக்கு இலைச்சாற்றைத் தடவி அரைமணி நேரம் கழித்துக் குளிக்க மாறிவிடும். இலையை அரைத்து தடவ மூட்டுவலி நீங்கும்.

* * *

## தொழுகண்ணி

**(சூரியன் வணங்கி)**

## Desmodium gyrans

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Action* : *Antidote.*

Uses : It is a very good remedy to rejoin the cut flesh due to accidents and it enhances the healing processes This also cures snake bite and other poisons.

தொழுகண்ணியின் பூ வெண்மையாகவும், வேர் கருப்பாயு மிருக்கும்.

இம்மூலிகை வெகு அபூர்வமாக கிடைக்கும் ஒன்று. இது துண்டித்த சதையை ஒட்ட வைக்கவும், பாம்புக்கடி விஷத்தை முறிக்கவும் பயன்படுகிறது.

* * *

## நங்கை

**(சிறியா நங்கை)**

## Polygala chinensis

**(N. O. Polygalaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Leaves contain senegin and polygallic acid.*

*Action* : *Alterative, Anti-bilious, Bitter, Laxative and Tonic.*

Uses : This gives strength and beauty to body. A small quantity of the paste of its leaves along with milk, if consumed every day morning it gives strength and vitality. This leaves are also used as an antidote to poisons. Melted zinc if added with this juice the pores of the zinc will be filled.

இது உடலுக்கு வலிமை தரும். உடலுக்கு அழகைத்தரும். இதன் இலையை அரைத்து கொட்டைப் பாக்களவு எடுத்துப் பாலுடன் கலந்து காலையில் உட்கொள்ள உடல் வலுக்கும், இதன் இலையை கைப்புச்சுவை தோன்றுமட்டும் தின்னும்படி கொடுத்துவர கடிநஞ்சு நீங்கும். இதன் சாற்றில் சிறுகண் நாகத்தை உருக்கி சாய்த்து வர அதன் சீறல் அடங்கி கண்ணடைந்து கட்டும்.

* * *

## நங்கை

### (பெரியா நங்கை)

## Polygala elongata

### (N. O. Polygalaceae)

*Habit* : *He.b*

*Parts used* : *Leaves*

*Constituents* : *It contains Methyl salicylate.*

*Action* : *Similar to P. chinensis.*

Uses : It is purgative and used in making different types of calcinations. The paste of its leaves if consumed in recommended quantity venereal it reduces the temperature. The juice of the leaves cures bilious diseases and acts as laxative. This also used as an antidote for insect bites.

பெரியா நங்கையினால் அழல் நோய்கள் போகும். கழிச்சல் உண்டாகும். இதைக்கொண்டு பற்பங்கள் செய்யலாம். இதனிலையை அரைத்து 4 கிராம் எடை உட்கொள்ள அழல் நோய் தணியும் வயிறு கொட்டும். மேலும் இதன் சாறு பித்தரோகங்களை குணப் படுத்துவதுடன் மலபந்தம் நீக்கும். இதனை விஷக்கடிகளுக்கும் பயன் படுத்தலாம்.

* * *

## நஞ்சறுப்பான்

**(நஞ்சுமுறிப்பான், நஞ்சு முறித்தான்)**

## Tylophora asthmatica

**(N. O. Asclepiadaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Root and leaves*

*Constituents* : *Tylophorine*

*Action* : *Expectorant, Carminative, Emetic, Diuretic, Diaphoretic, Antidote and Alexipharmic.*

Uses : This is an ideal medicine for treating all toxicity. This is also used as an antidote for snake poisons. This gives immediate relief in asthma, bronchitis and dysentery. For blood cancer and other types of cancers this is an ideal medicine. Tender roots given along with water, it loosens the stool. Leaves are emetic if taken in the powdered form. If given along with opium as gruel it checks dysentery, indigestion and respiratve disorders. If taken along with cinchona bark it cures chronic fever, poisonous fever and malaria. If poison is consumed it could be brought out and given relief by giving the powder of its leaves and root along with pepper and honey. It should be consumed twice a day.

நஞ்சுறுப்பான் எல்லா நஞ்சு வகைகளையும் போக்கும். பாம்பு விஷம் முறிக்கும். ஆஸ்துமா, சீதபேதிக்குஉடனடி நிவாரணம் தரும். பச்சை வேரைத் தண்ணீரில் இழைத்து அடிக்கடி கொடுக்க பேதியாகும்.

இலையை உலர்த்திச் சூரணித்துக் கொடுக்க வாந்தியுண்டாகும். கஞ்சியாக வைத்து அபினியுடன் கொடுக்க சீதபேதி, அசிரண பேதி, சுவாசகாசும் போகும். கொய்னாவுடன் கொடுக்க முறைசுரம், விஷசுரம், மலைசுரம் போகும். இது சீதபேதியை நிறுத்தும். பாஷாண மருந்துகள் சாப்பிட்டு உடலில் விஷக்குறி தோன்றினால் இதன் இலை, வேர் இவற்றை உலர்த்தி தூள் செய்து அதனுடன் சிறிதளவு மிளகுத் தூள் சேர்த்து அதனுடன் தேன் சேர்த்து ஒரு நாளைக்கு இரண்டு வேளை சாப்பிட குணமாகும்.

* * *

## நஞ்சுண்டான்

## Balanites aegyptiaca

### (N. O. Simaroubaceae)

*Habit* : *Shrub or small tree.*

*Parts used* : *Seeds, bark, leaves and fruits.*

*Constituents* : *Bark contains saponin. Pulp of the fruit contains organic acid, saponin and sugar.*

*Action* : *Bark, unripe fruit and leaves are Pungent, Bitter, Purgative, Antidote and Anthelmintic. Seeds are Expectorant.*

Uses : Unripened fruit of this tree is purgative. The ripened fruit is edible. The seeds cure cough and acute stomach ache. Bark and leaves if consumed in paste it is purgative and expels the intestinal worms. Fruit is used in treating snake bite.

நஞ்சுண்டான் மரத்தின் காய் பேதியுண்டாக்கும். பழம் தின்பதற்குதவும். இதன் விதை இருமலையும், கடும் வயிற்றுவலியை யும் குணப்படுத்தும். பட்டையையும் இலையையும் அரைத்து சாப் பிட பேதியுடன் வயிற்றுப் பூச்சிகள் வெளியேறும். பழம், பாம்புக் கடிக்கு மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## நஞ்சுண்டை

## Pittosporum floribundum

### (N. O. Pittosporaceae)

*Habit* : *Small tree*

*Parts used* : *Leaves and bark*

*Constituents* : *A Bitter glucoside pittosporin and an essential oil.*

*Action* : *Bark is Bitter, Expectorant, Febrifuge, Narcotic and Aromatic. Leaves are Bactetiricidal.*

Uses : Leaves are very sour and it is used as bactericidal. The fruit is purgative, but it is used in treating skin

diseases, herpes, and eczema. This also cures rheumatism. Bark is used as an antidote to snake bite. Bark is also used to cure skin diseases.

நஞ்சுண்டை இலைகள் புளிப்பாகவும், கிருமியைக் கொல்லும் தன்மை வாய்ந்ததாகவுமிருக்கும். காய் பேதியையுண்டாக்கும். மேலும் சருமநோய்கள், கிரந்தி, கரப்பானுக்கு குணம் தரும். வாத நோய் நீக்கும். இதன் பட்டை பாம்புக்கடி விஷத்தை இறக்கும். இது பல சரும நோய்களை குணப்படுத்தும்.

* * *

## நத்தைச்சூரி
### (குழிமீட்டான், தோண்டிப்பூண்டு)

## Spermacoce hispida
### (N. O. Rubiaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds and root.*

*Action* : *Plant is Alterative, Demulcent, Stimulant, Cooling, Tonic, Antidote, Refrigerant and Antirheumatic.*

Uses : This plant bears white or blue flowers. It checks bleeding. Seeds exhibit tonic properties. Root decoction is used in treating chronic ailments. Roots could be used as sarasaparilla roots. The root if consumed as paste along with milk it gives strength. The leaves if chewed gives strength to teeth and gums. This cures cough in pthisis, piles and diarrhoea.

நத்தைச்சூரி வெள்ளை அல்லது நீலநிறப் பூக்களையுடையது. இச்சிறிய செடி இரத்தப் போக்கை நிறுத்தும். விதைகள் தாது புஷ்டியைக்கொடுக்கும். வேர்க்கஷாயம் பழைய ரோகங்களைப் படிப்படியாகக் குறைக்கும். வேர் நன்னாரி வேரைப் போல் பயன்படுத்தப் படுகிறது. இவ்வேரை அரைத்து பாலுடன் அருந்த உடல் வலுக்கும். கிராணி கழிச்சல் போகும். இதன் இலையை வாயிலிட்டு மெல்ல ஈறுகளும், பற்களும் பலப்படும். இது க்ஷய இருமல் நீக்கும். வாத நோய் தீர்க்கும்.

* * *

## நந்தியாவட்டம்

### Ervatamia coronaria

**(N. O. Apocynaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Latex flowers and root.*

*Constituents* : *It contains Coronaridin, Montanine and Terpinoids.*

*Action* : *Flowers and roots are Anthelmintic, Acrid, Purgative and Vermicide.*

Uses : The flowers are used in treating all types of eye disorders. Flower juice is used to treat cataract. This could be used for any ailments of the head also. The root if chewed cures tooth ache. The latex of this plant is used in treating headache. If applied as an external application for ulcers it helps in healing. The decoction of the root brings out the intestinal worms.

நந்தியாவட்டபூவினால் கண்பற்றிய சகல நோய்களும் தீரும் இதில் ஒரே அடுக்குடைய பூதான் மிகவும் சிறந்தது. பூச்சாற்றைக் கண்பூவுக்குப் பிழியலாம். அன்றியும் தலைரோகங்களுக்கும் உபயோகிக்கலாம். இதன் வேரை மென்று தின்ன பல்வலி போகும். இதன் பாலால் தலைவலி குணப்படும். மேலும், ரணம், புண்களுக்குப் போட சீழ் பிடிக்காது. வேர்க்கஷாயம் மலக்கிருமியை வெளியாக்கும்.

* * *

## நரளை

(புளி நரளை)

### Vitis setosa

**(N. O. Vitaceae)**

*Habit* : *Twiner*

*Parts used* : *Leaves*

*Action* : *Acrid, Astringent, Cooling, Styptic, Vermifuge and Expectorant.*

Uses : The leaves are used as infusion to treat dismenorrhoea. The powdered root mixed with sugar if consumed in recommended dosses it cures, diabetes, psoriasis and venereal diseases.

நரளை இலையை குடிநீரிட்டுக் கொடுக்க பெரும்பாட்டை குணப்படுத்தும். இதன் கிழங்கை உலர்த்திப் பொடித்து சர்க்கரை யுடன் கலந்து 2 முதல் 4 கிராம் எடை வீதம் நோய் குணப்படும் வரை உண்ண, மேகம், கரப்பான் புண்கள் முளைமூலம் ஆகியவை தீரும்.

இலையினால் செம்பையின் களிம்பு நீங்கும். லிங்கம் சுத்தி யாகும்.

* * *

## நரிமிரட்டி

**See : Crotalaria verucosum**

**பார்க்க : கிலுகிலுப்பை**

* * *

## நரிவிளா

## Feronia limonia

### (N. O. Rutaceae)

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Small tree* |
| *Parts used* | : | *Fruit, leaves and bark.* |
| *Constituents* | : | *Leaves yield. 73% of essential oil.* |
| *Action* | : | *Leaves are Febrifuge and Carminative. Fruits are Astringent, Stomachic and Stimulant.* |

Uses : The leaves soaked in hot water is used in fever and thirstyness. The leaves are used to treat all types of skin diseases.

நரிவிளாவே குட்டிவிளா என்றும் கூறப்படுகிறது. இதன் இலையை வெந்நீரில் ஊறவைத்து, சுரம், நீர் வேட்கை ஆகியவை களுக்குக் கொடுக்க குணமாகும்.

இதன் இலையினால் சரும நோய்கள் யாவும் தீரும்.

* * *

# நறுவிலி

## Cordia latifolia

### (N. O. Boraginaceae)

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Small tree.* |
| *Parts used* | : | *Fruit, its mucilage, kernel and bark.* |
| *Constituents* | : | *Pulp of the fruit contains gum and sugar.* |
| *Action* | : | *Bark is mild Astringent and Tonic. Fruit is Nervine, Tonic, Muscilagenous, Febrifuge Demulcent, and Emollient.* |

Uses : The fruits of this tree is edible, tasty and viscous. The leaves, fruit, seeds and bark are of medicinal value. powdered leaves or infusion of the leaves are used in treating wheezing. The leaf extract is applied for pimples and boils. Fruits are used in treating cough and it is used as an expectorant. Powdered seeds mixed with oil is used as an application for vitiligo. The infusion of the seed is used to gargle mouth to cure gingivitis, loosened teeth etc., The juice extracted from the bark along with cocoanut milk is used in treating stomach ache.

நறுவலி மரத்தின் பழங்களின் சுளையானது. குழகுழப்பாய் இருக்கும். இதில் சிறு நறுவிலி, பெருநறுவிலி என்று இருவகையுண்டு. இதன் இலை, பழம், கொட்டை, பட்டை ஆகியவை மருத்துவப் பயனுடையது. இதன் இலையைப் பொடி செய்தாவது அல்லது குடி நீரிலிட்டாவது சாப்பிட இரைப்பு நீங்கும். இலைச்சாற்றை தடவ முகப்பருக்களும், கொப்புளங்களும் குணமாகும். பழம் இருமலைக் குணப்படுத்துவதுடன், நெஞ்சின் கோழையை அறுக்கும். கொட்டையைப் பொடித்து எண்ணெயுடன் குழைத்துத் தடவ படை, தேமல் குணமாகும்.

கொட்டையை குடிநீரிலிட்டு வாய்கொப்பளிக்க பல்லரணை, பல்லசைவு, பல்வலி, வாய்ப்புண்கள் நீங்கும்.

பட்டையை இடித்துச் சாறு பிழிந்து, தேங்காய்ப் பாலில் கலக்கி குடிக்க கடினமான வயிற்றுவலி போகும்.

* * *

# நன்னாரி

(காமவல்லி, நீறுண்டி)

## Hemidesmus indicus

**(N. O. Asclepiadaceae)**

*Habit* : *Twining herb.*

*Parts used* : *Root, root-bark, and the juice of the plant.*

*Constituents* : *Cowmarin, a volatile oil hemidesmine, Stearoptin called as Smilasperic acid.*

*Action* : *Root is a valuable Alterative, Tonic, Demulcent, Diaphoretic and Diuretic. It also possesses the Sudorific and Alterative properties of jamaica sarasaparilla. Plant is a blood Purifier, Tonic, Appetizer and Emollient.*

Uses : The flower of this herb is green outside and red inside. The root is dark out side and white inside. It is aromatic. Dried root exhibit tonic action and it is diuretic also. The decoction of this along with milk is given in treating stone in the bladder and dysuria. This is also used in treating indigestion. dyspepsia, anorexia, fever. skin, diseases ulcers, ulcers due to venereal diseases, rigiditiy of joints, and gleet. This purifies blood and removes the bitterness of the mouth due to bilious disorders. To treat above said disorders the decoction should be added with cumin. Milk and sugar is added with the decoction it could be given to children to cure cough and diarrhoea due to indigestion. If tailed pepper, nguggul and root of Cucumis trigonus is added with this decoction it is an ideal medicina preparation for fever, herpes, filariasis paralysis etc.,

The sharbat made out of root, if consumed daily it gives strength. This root soaked in hot water, and the water (30 ml) if consumed every day it cures chronic rheumatism, oedema due to venereal diseases, indigestion etc. The infusion if consumed hot regularly, it gives sexual vigour. To treat bilious diseases the powdered root mixed with powdered coriander seeds is given. The powdered root mixed with vera is used as antidote for poisonous bites. Italso helps as

anti-allergic. Fresh plant mixed with tamarind, salt and ghee, and made into a paste. If this paste is consumed regularly it cures tastelessness of the mouth, biliousness, cold, diabetes and fever.

நன்னாரிக் கொடியின் பூக்கள், வெளிப்பக்கம் வெளிர்ப்பச்சையாகவும், உட்பக்கம் கருஞ்சிவப்பாகவும் இருக்கும். இதன் வேர் மேற்புறம் கருமையாகவும், உட்புறம் வெண்மையாகவும் நல்ல மணமாகவும் இருக்கும். இதன் காய்ந்த வேர் உடம்புக்கு ஆரோக்கியத்தையும் பல விருத்தியையும் உண்டாக்குவதுமின்றி நீர் தாராளமாக இறங்கச் செய்யும்.

இதன் கஷாயத்துடன் பசும்பால் சேர்த்து அருந்த கல்லடைப்பு, நீர்ச்சுருக்கு முதலிய நோய்கள் தீரும். மேலும், இதை, செரியாமை, குன்மம், பசியின்மை, சுரம், சரும நோய்கள், விரணம், மேக நோயினாலேற்பட்ட கிரந்திப்புண், வாதப்பிடிப்பு, பெண்களுக்குக் காணும் வெள்ளை முதலிய நோய்களுக்கும் உபயோகிப்பார்கள்.

ரத்தத்தை சுத்தம்செய்வதற்கும், பித்தத்தினாலுண்டான வாய்க் கசப்பை போக்குவதற்கும் இதன் கஷாயத்துடன் சீரகம் சேர்த்துக் கொடுப்பதுண்டு. இதன் கஷாயத்தோடு பால் சர்க்கரை சேர்த்துக் கொடுக்க குழந்தைகளுக்கு காணும் இருமல், அசிரணபேதி, ஆகியவைகளுக்கு குணம் தரும்.

வேர்க் கஷாயத்தோடு வால் மிளகு, குக்கல், தும்மட்டிவேர் இவைகளை சேர்த்துக் கொடுக்க கிரந்தி, ஆனைக்கால், பாரிசவாயு, திமிர் வாயு முதலிய நோய்கள் குணமாகும்.

வேரினால் செய்யப்பட்ட சர்பத்தை தினமும் உட்கொள்ள உடலுக்கு பலம் தரும்.

நன்னாரி வேரை வெந்நீரில் ஊறவிட்டு 30 மி லி விதம் தினம் 2-3 தடவை கொடுத்துவர, நாட்பட்ட வளிநோய், மேகப்புடை, செரியாமை நீங்கும். இக்குடிநீரை சூடாக சாப்பிட ஆண்மை பெருகும்.

இதன் பொடியுடன் கொத்தமல்லி தூள் சேர்த்து சாப்பிட பித்தக் கோளாறு விலகுவதுடன், வயிறு, குடல், தோஷங்கள் குணமாகும். இதன் வேர்த்தூளுடன் சோற்றுக்கற்றாழை சேர்த்து சாப்பிட விஷக்கடியினால் தோன்றும் கோளாறுகளை நீக்கும். மேலும் தடிப்புகள் நீங்கும். பச்சை நன்னாரிச் செடியுடன் புளி,

உப்பு, நெய் சேர்த்து இடித்து துவையலாக சாப்பிட வாயின் ருசியற்ற தன்மை நீங்குவதுடன், அதிபித்தம், நீரேற்றம், மதுமேகம், சுரவேகம் தீரும்.

* * *

## நன்னாரி
(சீமை நன்னாரி)

## Smilax officinalis

**(N. O. Liliaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root*

*Action* : *Root is Diuretic, Tonic, Anti-rheumatic, Diaphoretic and Anti-syphylitic.*

Uses : This is imported from Jamaica and America. The decoction of this increases the sweating and also acts as diuretic. This is used in treating rigidity of the joints, and skin diseases.

சீமை நன்னாரி ஜமெய்கா, அமெரிக்கா ஆகிய தேசங்களிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. இதன் கஷாயம் வியர்வையை அதிகப்படுத்தும், மூத்திரத்தை வடிக்கச் செய்யும். இது கர்ப்ப மேகம், நீடித்த சூலை, வாதப்பிடிப்பு, சரும நோய் முதலிய நோய்களுக்கு மருந்தாகப் பயன்படும்.

* * *

## நன்னாரி
(பெரு நன்னாரி)

**See : Decalepis hamiltonii**

**பார்க்க : மாவலிக்கிழங்கு**

* * *

## நன்னாரி

(கரு நன்னாரி)

**See : Ichnocarpus frutescens**

பார்க்க : பால்வள்ளி

* * *

## நல்லிரவு நாயகி

### Cestrum nocturnum

**(N. O. Solanaceae)**

*Habit* : *Shrubs or small trees.*

*Parts used* : *Flowers and leaves.*

*Constituents* : *An oil is extracted.*

*Action* : *Aromatic.*

Uses : An aromatic oil is made from this. This is also used in many perfumes as active ingredient.

நல்லிரவு நாயகியிலிருந்து வாசனைத் தைலம் எடுக்கப்படுகிறது. இது பிற தைலங்களில் பயன்படுத்தப்படுகிறது. இதில் நற்பகல் நாயகி (Cestrum diurnum) என்ற மற்றொரு வகையுண்டு.

* * *

## நற்பகல் நாயகி

### Cestrum diurnum

**(N. O. Solanaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Flowers and leaves.*

Uses : Similar to C. nocturnum.

நற்பகல் நாயகியின் குணங்கள் நல்லிரவு நாயகியின் குணங்களை ஒத்திருக்கும்.

* * *

## நாகம்

(வெள்ளை நாகம்)

## Anogeissus latifolia

(N. O. Combretaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Gum*

*Action* : *Astringent, Muscilagenous, Alexipharmic and Antidote.*

Uses : This plant is an ideal antidote for snake bite, scorpion bite etc. The resin of this tree is used as an alternative for the gum of Acacia arabica.

பாம்புக்கடி, தேள்கடி போன்ற பல விஷங்களை முறிக்க வெள்ளை நாகம் பயன்படுகிறது. இதன் பிசின், கருவேலம் பிசினுக்கு மாற்றாகப் பயன்படுத்தப்படுகிறது.

* * *

## நாகப்பூ

(நாகேசுவர பூ, சிறுநாகப்பூ)

## Mesua ferrea

(N. O. Guttiferae)

*Habit* : *Tree*

*Parts used* : *Flower, buds, flowers, fruit, seeds, root, bark and oil.*

*Constituents* : *Essential oil is extracted from the young fruit. Seeds contain a fixed oil. Hard pericarp contains tannin.*

*Action* : *Dried blossoms root and bark are bitter, Aromatic and Sudorific, Bark is mildly Astringent, Unripe fruits are Aromatic, Acrid and Purgative. Resin exuding from the bark and root is Aromatic and Demulcent. Pericarp of the fruit is Astringent. Blossams are Astringent and Stomachic Dried flowers are Astringent, Stomachic, Stimulant and Carminative. Bark is Diaphoretic, Aromatic and Anti-rheumatic.*

Uses : The leaves, buds, flowers, seeds roots and bark are of medicinal value. These are mainly used in treating, gonorrhoea, cough diarrhoea etc It is also used in treating anuresis, ulcers, boils, burning sensation ot the feet etc. Crushed leaves used as poultice on the head to cool the head. The paste of the leaves are used for boils and ulcers. The infusion of leaves are used in treating the burning sensation of finger, soul of the feet etc. The sharbat made out of buds are used in chceking diarrhoea. The paste of the flowers with butter and sugar candy, if consumed regularly, it cures menorrhagia. The powder of the flower is used mainly in electuaries and oils. This powder mixed with ghee is used as an application on the soul of the feet to reduce burning sensation. The flower roasted in ghee and made into a paste. If this paste is consumed with ghee, it cures indigestion, colic, thirstyness, excess of sweating etc. If this is consumed regularly it cures piles, dysentery, gonorrhoea, rheumatism and paralysis. The seeds mixed with the leaves of garden rue and made into a paste. If this paste is consumed it cures, intermittent fever, gonorrhoea, rheumatism, and paralysis. The infusion of the bark gives strength. The extract of the flower is used as diuretic for pregnant ladies. The powder of this flower with honey is used to expel the intestinal gas and it cures anuresis. The leaves boiled in milk is used as an poultice to cure headache.

நாகப்பூ இலை, மொக்கு, பூவிலை, வேர்பட்டை யாவும் மருத்துவப் பயனுடையது. இவை பொதுவாக வெள்ளை, இருமல், கழிச்சல் இவைகளைப் போக்கும். மேலும் நீரடைப்பு, குருதிப் போக்கு, புண், கொப்புளம், காலெரிச்சல் ஆகியவை தீரும்.

இலையை நசுக்கி தலையில் வைத்துக் கட்ட குளிர்ச்சி தரும். இலையை அரைத்து புண், கொப்புளங்களுக்குப் பூச குணம் தரும். இலை குடிநீரை உட்கொள்ள விரல், காலடி இவைகளில் உண்டாகும் எரிச்சல் போகும்.

மொக்குகளைப் போட்டு சர்பத் செய்து கொடுக்க சீதபேதி குணமாகும்.

இதன் பூவை அரைத்து வெண்ணெய், கற்கண்டுடன் கூட்டி உண்டு வர குருதிப்போக்கை அடக்கும். உலர்ந்த பூவின் பொடி லேகியங்களிலும், தைலங்களிலும், மணப்பூச்சுக் கலவைகளிலும்

சேர்க்கப்படுகிறது. இத்தூளை நெய்யுடன் அரைத்துப் பூச கால்களில் காணும் எரிச்சல் தீரும்.

இப்பூவை நெய்விட்டு வறுத்து அரைத்து நெய்யுடன் குழப்பிச் சாப்பிட இருமல், அஜீரணம், வயிற்றுளைச்சல், அதிதாகம், அதி வியர்வை போன்ற நோய்கள் நீங்கும். மேலும் இதைத் தொடர்ந்து உட்கொள்ள ரத்தமூலம், சீதபேதி, வெள்ளை நோய், வாதநோய், முகவாதம் குணப்படும்.

இதன் பூவின்சாற்றை கர்ப்பிணிகளுக்குண்டாகும் நீர்கட்டுக்கு உபயோகிப்பர். மேலும் இது ஆண் குறியில் விழும் வெள்ளை, காச ரோகம் இவற்றை விலக்கும். இதன் தனிச் சூரணத்தில் தேன் அல்லது சர்க்கரை கலந்து குழைத்துக் கொடுக்க வயிற்று வாயு, நீர டைப்பு, பெண்களுக்கு உண்டாகும் உதிரச் சிக்கல் போகும்.

இதன் இலைகளை பாலில் கொதிக்க வைத்து நீர் தோஷத்திற் காகத் தலையில் வைத்துக் கட்ட குணமாகும்.

இதன் விதையுடன் சதாப்பிலை சேர்த்து அரைத்து உட்கொள்ள முறைக் காய்ச்சல், வெள்ளை, இருமல் போகும்.

பட்டையை ஊறல் குடிநீர் செய்து உட்கொள்ள உடல் வலுக்கும்.

* * *

## நாகப்பூ

**(மலபார் நாகப்பூ)**

## Dillenia pentagyna

**(N. O. Dilleniaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Flowers and flower buds*

*Action* : *Similar to Mesua ferrea.*

Uses : This reduces the excess flow of urine, nervous debiliiy and asthma. This acts as an antıdote to rat poisons.

இதனால் வெகுமூத்திரம், நடுக்கல், நரம்புத் தளர்ச்சி, ஆஸ்துமா, எலிக்கடி விஷம் குணப்படும்.

* * *

## நாகமல்லி

**See : Anagallis arvensis**

**பார்க்க : அனிச்சை**

* * *

## நாகமுட்டி

### Tiliacora racemosa

**(N. O. Menispermaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Flowers.*

*Constituents* : *An alkaloid tiliacorine.*

*Action* : *Antidote.*

Uses : This is used as an antidote to all snake poisons. This also cures filariasis. Leaf decoction is applied to cure ulcers.

நாகமுட்டிக் கொடியின் சிறுபூக்கள் வாசனை உள்ளது. வெள்ளைநிறமானது. இதை நசுக்கி தண்ணீரில் குழைத்துக்கொடுக்க சகல பாம்புவிஷமும் நீங்கும். யானைக்கால் நோய்க்கும் குணம் தரும். இலைக்கஷாயம் இரணப் புண்களைப் போக்க உதவும்.

* * *

## நாகமுக்கொற்றி

### Ipomoea glaberrima

**(N. O. Convolvulaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Root and leaves.*

*Action* : *Dried capsules, seeds, flowers, leaves and roots are Antidote to snake bites. Root is purgative.*

Uses : Root is purgative and used as an antidote to snake-bites. Seeds are edible.

நாகமுக்கொற்றி வேர் பேதியாகச் செய்யும். இக்கொடியின் பூ வெண்மையாயிருக்கும். இதன் இலைக்கும் வேருக்கும் பாம்புக்கடி விஷத்தைக் குணப்படுத்தும் தன்மையுண்டு.

* * *

## நாகலிங்கப்பூ

(ஆவுடையார் மரம்)

## Couroupita ginanensis

**(N. O. Lecithydaceae)**

***Habit*** : *Tree*

***Parts used*** : *Flowers and pulp of the fruit.*

Uses : Flowers of this tree are used to cure cold affection, intestinal gas formation and stomach ache. Pulp of the fruit is edible and the shell is used as utensils.

ஆவுடையார் மரம் எனப்படும் இதன் பூவினால் நீரேற்றம், வாயுதொந்தம். வயிற்று உப்புசம், வயிற்று வலி ஆகியவை குணப்

* * *

## நாணல்

## Saccharum spontaneum

**(N. O. Gramineae)**

***Habit*** : *Herb*

***Parts used*** : *Stem*

***Action*** : *Root is used as a galactagogue and Diuretic.*

Uses : Stem and root of this grass exhibit medicinal properties. Juice of the stem cures, hysteria, vomiting, tastelessness, abdominal disorders, wheezing and dropsy.

புல்லினத்தைச் சேர்ந்த இதன் தண்டும் வேரும் மருத்துவப் பயனுடையது.

தண்டின் சாற்றினால் வெறி நோய், வாந்தி, சுவையின்மை, வயிற்றிலெழும் நோய், இரைப்பு, பாண்டு இவை நீங்கும்.

மேலும் இதன் வேரினால் விக்கல், கழும், கபசுரம் குணமாகும். காயகல்பங்களில் ஒன்று.

* * *

## நாணல்

**(பெரு நாணல்)**

## Pragmites maxima

**(N. O. Gramineae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Stem and root.*

*Constituents* : *Furfurol*

*Action* : *Cooling, Diuretic and Diaphoretic.*

Uses : This is used in bandaging to the fracture of the bones. Reyon boards are made from this plant.

எலும்புமுறிவு சிகிச்சைக்கு உதவும். மேலும் இதிலிருந்து ரேயான் போர்டுகளை செய்வர்.

* * *

## நாபி

**(வசநாபி)**

## Aconitum ferox

**(N. O. Ranunculaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Dried tuberous root.*

*Constituents* : *Tuberous root contain toxic alkaloid, napelline picro-aconine, acorine, benyl aconine and homo-napelline.*

*Action* : *Root tuber is Diaphoretic, Diuretic, Antiperiodic, Anodyne, Antidiabetic, Antiphlogistic, Anti-*

*pyretic in small doses. In large doses it is Virulent poison, Narcotic and Powerful Sedative.*

Uses : The root tuber exhibits medicinal properties. There are many varieties in this but this is commonly used in treating leprosy, allergy, inflammation, dyspepsia and fever. Red aconite is used in treating rheumatism, phlagmatic disorders, dyspepsia, fever thirstyness etc. Black aconite is used in treating fever, accompanied by thirstyness. Liver disorders, intestinal worm infection etc. Black aconite is used in treating snake bite, scorpion sting, fever, head ache etc., Equal quantity of aconite and opium mixed together with alcohol is a good preparation to treat guinea worm infection.

This is also used in treating paralysis. Aconite should not be taken internally without purifying. If it is contacted even with a minute cut or wound it may prove fatal. But if it is used after purifying it can be used in treating ascites, stomachache, dropsy, head ache and snake bites. In the system of unanı, it is employed by using it along with other drugs in treating vomiting, diarrhoea, periodic fever, tooth ache etc.

This could be also used externally for neuritis. In ayurvedic system it is used mainly for treating diseases of the brain, indigestion, anorexia cough etc., This is also used in treating skin diseases.

நாபிச் செடியின் நிறத்தைப் பொறுத்து இது நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவையாவன : வெண்நாபி, செந்நாபி, நீலநாபி, கருநாபி போன்றவை.

இச்செடியில் உலர்ந்த வேர்க்கிழங்கு மருத்துவப்பயனுடையது. பெருநோய், காணாக்கடிநஞ்சு, சூலை, மார்பை வீங்கச்செய்யும் நோய்கள், குன்மம், சுரம் இவைகளை குணப்படுத்தும். எல்லா வகை நாபியின் பொதுக்குணம்: செந்நாபியினால் முப்பிணிகள், குன்மம், எலும்பின் சூடு, சுரம், நீர்வேட்கை ஆகிய இவை விலகும். நீல நாபியினால் நாவொட்டிக் காய்ச்சல், ஈரல் நோய்கள், புண்புழு நோய் ஆகியவை தீரும்.

கருநாபியினால் சுரம், முப்பிணி, தலைவலி, எரிப்புழு, பாம்புக்கடி, உள்புண், குறைநோய், தேள் நஞ்சு நீங்கும்.

நாபி, அபினி இரண்டும் சமஅளவு எடுத்து சாராயம் விட்டு மெழுகுபோல அரைத்து, நரம்பு சிலந்திக்கு வைத்துக்கட்ட புழுக்கள்

வெளிப்படுவதுடன் புண் ஆறும். மேலும் இது குறைநோய், பாரிச வாயு முதலிய நோய்களை தீர்க்கும்.

நாபியை சுத்தி செய்யாமல் உள்ளுக்கு சாப்பிடக் கூடாது. புண்களுக்கு தடவினால்கூட மரணம் ஏற்படும். குட்டநோய்க்கு நல்ல பலனைத் தரும். இதை தனிப்பட உபயோகிக்கக் கூடாது. யூனானி வைத்தியர்கள் மற்ற சரக்குகளுடன் சேர்த்து வாந்தி, பேதி, முறைசுரம், பல்வலி, பாம்புக்கடி இவைகளுக்கு மருந்தாக உபயோகிப்பர். இதை சுத்தி செய்து உபயோகிக்க சன்னிபாத சுரம், பாண்டு, மகோதரம், வயிற்றுவலி, அஸ்தி சூடு, தலைநோய், பாம்புக்கடி இவைகளுக்கு குணம் தரும்.

இதை வெளிப்பூச்சாக உபயோகிக்க நரம்புவலி, வாதப் பிடிப்பு இவை குணமாகும். இதை பாரிசவாயுவுக்கும், நரம்பு பலவிருத்திக்கும் கொடுக்கலாம். ஆயுர்வேத வைத்தியர்கள் இத்துடன் மற்ற கடைச் சரக்குகள் சேர்த்து மருந்துகள் தயாரித்து சுரத்தினால் வரும் மூளைப் பற்றிய கோளாறுகளுக்கும் அசீரணம், பசியின்மை, தொண்டைக்கட்டு, இருமல், ஈளை சரும வியாதிகளுக்கும் மருந்தாக உபயோகிப்பர்.

* * *

## நாபி

**(சீமை வசநாபி)**

## Aconitum napellus

**(N. O. Ranunculaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Dried tuberous root.*

*Action* : *Analgesic, Febrifuge, Narcotic and Nervine tonic.*

Uses : This is imported from Germany, This is bitter in taste and produces numbness in tongue. If consumed in small quantity it cures, chronic rheumatism, nervous debility, chestpain and dropsy. It is externally applied for cessation of local pain.

இது ஜெர்மனியிலிருந்து இறக்குமதியாகிறது. வேர் முழுதும் கசப்பும், விறுவிறுப்பும், மரத்தல் குணமும் வாய்ந்தது. இதனின்று நாபிக்காரம் தயாரிக்கப்படுகிறது. சிறிய அளவில் உட்கொள்ள

நாட்பட்ட வாதப்பிடிப்பு சூலை, நரம்பு நோய், நெஞ்சுவலி, பாண்டு முதலிய நோய்களை போக்கும்.

* * *

# நாயுருவி

## Achyranthes aspera

### (N .O. Amaranthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant.*

*Constituents* : *Fruit contains a large percentage of alkaline and ash containing potash.*

*Action* : *Leaves are Astringent, Diuretic, Alterative and Antiperiodic. Root is Purgative and Anti-lithic. Abortifacient, uterine Sedative, Emetic and Emmenagogue and Parturifacient.*

Uses : The flowers of this herb is violet and green. There are five seeds in the fruit. The root is used to clean the teeth. The decoction is used in treating urinary tract diseases and cold. The leaves cures dysentery, bleeding piles, excess sweating etc. Seeds are used in treating rabbis, snake bite, scorpion sting etc. But it could also be used in treating skin ailments. Bruised fresh leaves are used externally at the site of scorpion sting. For rabbis the buds are used along with sugar internally. The ash of the plant clears stomach problems of the delivered ladies and corrects the menstural cycle. The ash along with rice gruel cures ascites. The leaf decoction is purgative.

The leaves along with pepper and garlic is made into tablets to treat periodic fever. Opium along with the juice of the leaves is kept in the sun for drying. The mixture dried could be used externally for herpes. Fresh tender leaves along with turmeric is a good external application for fistula. This also could be taken internally to check dysentery, excess sweating and phlegmatic diseases.

Root decoction terminates pregnancy. But the root decoction also could be used to check stomach ache, indigestion, worm infection, belching, oedema and jaundice. The melted zinc and lead could be calcinised with the root. This calcinated material is mixed with the juice of the leaves and three sputam are made out of this. This has many medicinal properties.

The clear water of the soaked ash is used for treating ear disorders, by boiling it with gingelly oil and used as ear drops.

இப்பூண்டின் பூ ஊதாவும் பச்சையும் கலந்து காணப்படும். இதன் காய்களில் 5 விதைகள் இருக்கும். இதன் வேரை பற்குச்சியாக உபயோகிக்க பற்களும் ஈறுகளும் பலப்படும். இதன் கஷாயம் மூத்திரதாரை நோய்களையும், நீர்க்கோவையையும் குணப்படுத்தும். இதன் இலையினால் அதிசாரம், இரத்தமூலம், வியர்வை, ஆகியவை போகும். இதன் விதைகள் வெறிநாய்கடி, பாம்புக்கடி, தேள்கடி விஷங்களை முறிப்பதுடன், கண்ணோய்களையும் சரும நோய்களையும் குணப்படுத்தும்.

இலைகளைப் புதிதாகப் பறித்து கசக்கி உருட்டித் தேள் கொட்டுவாயில் தேய்க்க விஷமிறங்கும். வெறிநாய்கடி விஷம் நீங்க இதன் மொட்டுகளுடன் சர்க்கரை சேர்த்து அரைத்து உள்ளுக்குக் கொடுக்கலாம்.

இதன் சமூல சாம்பல் பிரசவித்த மாதர்களின் உதிரச்சிக்கலை ஒழிக்கும். எப்பொழுதும் போல் மாதாந்திர விலக்கு ஏற்படச் செய்யும். மேலும் இச்சாம்பலைக் கஞ்சியில் கலந்து உட்கொள்ள மகோதரம் குணமாகும். இலைக்கஷாயம் உட்கொள்ள பேதியாகச் செய்யும். இலைகளை மிளகு, பூண்டு இவைகளுடன் அரைத்து மாத்திரைகளாகச் செய்து கொடுக்க முறைசுரம் போகும். இலைச் சாற்றுடன் அபினியைக் கலந்து வெய்யிலில் வைத்து தடிப்பானவுடன் கிரந்திப் புண்களுக்குத் தடவ குணத்தைக் காட்டும். புதிதாக பறித்த இலைக் கொழுந்துடன் மஞ்சள் அரைத்து சேர்த்து மூலத்திற்கு தடவ குணமாகும். மேலும் இதை உள்ளுக்கு சாப்பிட இரத்த மூலம், அதிசாரம், வியர்வை, தந்திப்பிரமேகம், கபநோய் ஆகியவை நீங்கும். வேர்க்கஷாயம் கர்ப்பத்தைக் கலைக்கும்.

இதன் வேர் கஷாயத்தில் வேரை ஊற வைத்து அடுத்தநாள் காலையில் இக்கஷாயத்தைக் குடிக்க வயிற்றுவலி, அஜீரணம், குடல் கிருமி, புளித்த ஏப்பம், உடல் வீக்கம், காமாலை நோய் முதலியவை நீங்கும். சிறுகண் நாகத்தை உருக்கி இதன் வேரினால் கிண்ட பற்

ப

மாக்கும். பிறகு இதன் இலைச் சாறு சேர்த்தரைத்து மூன்று புடமிட துல்லியமான பற்பமாக்கும். இப்பற்பம் பசியையுண்டாக்கும். ரத்த மூலத்தைப் போக்கும்.

இச்சமூலத்தின் சாம்பல் பல மருத்துவ பயன்களையுடையது. இச்சாம்பலின் நீர்த்தெளிவை இறுத்து நல்லெண்ணெய் சேர்த்துக் காய்ச்சி காதிற்குள் விட காது இரைச்சல், செவி முதலிவை சாந்தப் படும். இதன் சாம்பல் வங்கத்தை பற்பமாக்கும்.

* * *

## நாயுருவி

### (செந்நாயுருவி)

## Achyranthes aspera

### (N. O. Amaranthaceae)

*Habit* : *Herb*

*Parts used* , *Whole plant*

*Constituents* : *Similar to white variety*

*Action* : *Similar to white variety.*

Uses : It is a red variety of Indian burs. It is a rejuvenating plant. It is effective than the white Indian burs. This gives relief from dropsy and menstrual disorders. The decoction of its ash gives relief in anuresis and acts as diuretic. Infusion of the root cures abdominal disorders. This gives strength and cures gonorrhoea, diseases of the lungs and eye disorders.

சிவப்பு நாயுருவி எனப்படும் இது ஓர் கற்பமூலிகை. இது நாயுருவியைவிட வீரியம் அதிகமுடையது. இதனால் ஏறு வீக்கம், பாண்டு, மாதாந்திர ஒழுக்கில் ஏற்படும் சிக்கல்கள் ஆகியவை போகும்.

நாயுருவியை பயன்படுத்தும் எல்லா வழக்குகளிலும் இதனை பயன்படுத்தலாம். இதன் சமூலத்தைக் கஷாயமிட்டு ½ அல்லது 1 டம்ளர் வரையிலும் கொடுத்து வந்தால் நீர்க்கட்டு உடைந்து சிறுநீர் பெருகும். இதன் வேர் ஊறல் கஷாயம் வயிற்றுநோய்களை குணப்படுத்தும். மேலும் தளர்ந்த உடலைத் தேற்றும். மேக ஒழுக்கு, நுரையீரல் வியாதிகள், கண், காது நோய்களை குணமாக்கும்.

* * *

## நாய்புடுக்கன்
### (இருட்பூ)

## Cynometra ramiflora
### (N. O. Laguminosae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, seeds and roots*

*Action* : *Leaves are Vermifuge. Root is Cathartic and Purgative.*

Uses: Leaves are made into a lotion by boiling it in cow's milk and mixed with honey and used as an external application in leprosy, scabies and cutaneous diseases. Oil from the seeds also applied externally in leprosy, scabies and cutaneous diseases.

இருட்பூ எனப்படும் இதன் பூ வெள்ளை நிறமுடையது. இதன் இலையைப் பாலிலிட்டுக் கொதிக்க வைத்து சிறிது தேன்விட்டு உடம்பில் பூச சொறி, சிரங்கு, குட்டம், முதலிய சருமநோய்கள் குணமாகும். விதை எண்ணெய் மேற்கண்ட நோய்களுக்கு பூசு மருந்தாகப் பயன்படுகிறது. வேர் பேதியாகச் செய்யும்.

* * *

## நாரத்தை
### (கொழுஞ்சி, போஜன கஸ்தூரி)

## Citrus medica
### (N. O. Rutaceae)

*Habit* : *Small tree*

*Parts used* : *Rind, Juice and oil*

*Constituents* : *Oil is expressed from the rind of the fruit. It contains citrene or limonene, Citrol, Cymene and Citroneleal*

*Action* : *Yellow pulp is Stomachic. Rind is Aromatic, Stimulant, Tonic, and Antiscorbutic. Fruit juice is Refrigerant, Astringent, Digestive, Antitoxic, Aromatic and Stomachic.*

Uses : There are differnt varieties in it and some of them are much useful in medicines. It is used in pickles. Sharbat made out of this fruits gives relief in fevers, biliousness, thirstyness and vomiting. Juice along with water, removes burning sensation of the stomach. This is also used as stomachic and diuretic. This reduces the blood pressure. Kernal of the seeds if taken internally said to have some effect on snake bite. Sharbat if taken regularly cures rheumatism and flatulence and acts as an anthelmintic, aphrodisiac and tonic.

நாரத்தை பழத்தின் இரசத்தைச் சர்க்கரையில் சேர்த்து சர்பத் செய்து சாப்பிட காய்ச்சல், பித்தாதிக்கம், தாகம், வாந்தி முதலிய நோய்கள் போகும். இதை நீரில் சாப்பிட எரிச்சல் குணமாகும். மேலும் இது இரப்பைக்கு பலத்தை கொடுப்பதுடன் சிறுநீரை தாராளமாக இறங்கச் செய்யும். இரத்தக் கொதிப்பை அகற்றும். இதன் கொட்டையின் பருப்பைத் தின்ன பாம்பு விஷம் இறங்கும். இதன் சர்பத்தை தொடர்ந்து உட்கொள்ள வாதநோய், வயிற்றுப் பொருமல் தணிக்கும். மலக்கிருமிகளை வெளியாக்கும். சுக்கில விருத்தி செய்வதுடன் உடலை ஆரோக்கியமாக்கும்.

* * *

## நாவல்

## Eugenia jambolana

### (N. O. Myrtaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits, leaves, dried seeds and bark*

*Constituents* : *Seed contains jamboline, Phenolic substance, an essential oil, fat, resin, gallic acid and albumen. Bark contains tannin and kino lic gum.*

*Action* : *Bark leaves and seeds are Astringent, and Stomachic. Berry is Astringent. Juice of the fruit is Stomachic, Astringent Diuretic and Demulcent.*

Uses : Fruit of this tree is smaller in size and violet in colour. Bark, leaves, fruit and seeds of this tree exhibit

medicinal property. The whole tree has astringent properties. Bark is used alone or in combination with other drugs are made into a decoction. This is used as a gargle to cure stomatitis. The juice of the bark is mixed with goat's milk is given to check infantile dysentery. Powdered bark checks dysentery. Bark is dried in shadow, powdered and given in goat's milk to cure colic, piles and biliousness. This powder is applied on the cuts and wounds to check the bleeding. The baked mixture of this powder and red rice flour is found effective in menorrhagia and dysentery. This also cures stomatitis, and cough. The bark and tender leaves are taken in the ratio of 1:4 and mixed with powdere cordamum and cinnamomum bark. If taken twice daily for 3 days cures dysuria.

To treat albuminuria decoction made out of its leaves and bark it is given twice daily for three days. Powdered bark if taken along with curd cures menorrhagia. Paste of the bark is applied to reduce inflammations and boils. Vinegar prepared from the juice of the fruit removes intestinal disorders and acts as stomachic and diuretic. Fruit is edible. Powdered seed reduces the blood sugar level in diabetic patients. Decoction of this powder controls diabetes and menorrhagia. To reduce frequent urination five fruits are recommended to be taken. This cures burning sensation during urination. The seeds of this plant along with leaves of Gymnema sylvestre are mixed and made a paste. If this paste is consumed every day it cures diabetes. Long pepper mixed with these flowers and equal amount of palm sugar is made into a powder and if the powder is consumed twice a day for 40 days, with hot water it cures tuber culosis. The root of this plant cures venereal diseases.

நாவல்மரத்தின் பழம் சிறியதாயும், ஊதாநிறமுடனுமிருக்கும். இதன் பட்டை, இலை, பழம், கொட்டை யாவும் மருத்துவப் பயனுடையது. எல்லாமே துவர்ப்புச் சுவையுடையது.

இம்மரப்பட்டையைத் தனியாகவாவது மற்ற சரக்குகளோடாவது சேர்த்துக் கஷாயமிட்டு வாய்கொப்பளிக்க வாய்ப் புண்களை ஆற்றும். இதன் பட்டைச் சாற்றை வெள்ளாட்டுப்பாலில் கலந்து குழந்தைகளின் அதிசார பேதிக்கு கொடுக்க குணமாகும்.

பட்டையை சூரணித்துக் கொடுக்க சீதபேதி நிற்கும். பட்டையை நிழலிலுலர்த்திச் சூரணித்து வயிற்றுளைச்சல், கிராணி, மூலம், கடும்பித்தம் முதலிய நோய்களுக்கு வெள்ளாட்டுப்பாலில் கலந்து கொடுக்க குணமாகும். இதன் சூரணத்தை புண்களில் இரத்தம் வடிவதை தடுக்கப் போடலாம். உடனே ரத்தம் நிற்கும். இச் சூரணத்தை கருங்குருவையரிசி மாவுடன் கலந்து பிட்டவியல் செய்து சாப்பிடப் பெரும்பாடு இரத்தக்கழிச்சல் முதலியவைகள் போகும். மேலும் வாய்புண்கள், இருமல், ஈளை, முதலியவை தீரும்.

நாவல் பட்டையும் இலைக்கொழுந்தும் 1:4 விகிதத்தில் எடுத்து சிறிது ஏலரிசித்துகளையும் இலவங்கப்பட்டைத் தூளையும் கலந்து காலை மாலையாக ஒருநாளைக்கு இருவேளையாக தொடர்ந்து மூன்று நாட்கள் சாப்பிட நீர்ச்சுருக்கு பூரண குணமாகும்.

சிறுநீர் கலங்கலாக இறங்குவதை தடுக்க சமஅளவு நாவல் மரத்து இலையும், பட்டையும் சேர்த்து கஷாயம் செய்து மூன்றுநாள் தொடர்ந்த இருவேளை சாப்பிட்டுவர குணமாகும்.

நாவல் மரப்பட்டைத் தூளை எருமைமோர் கலந்து குடிக்க பெண்களின் பெரும்பாடு தீரும். இப்பட்டையை அரைத்து அடிப் பட்ட வீக்கம், கட்டி முதலியவற்றின் மேல் போட அவை அமுங்கும்.

நாவல் மரத்து இளந்தளிருடன் மாமரத்தளிர்களை சேர்த்து அரைத்து மூன்றுநாள் சாப்பிட சீதபேதி குணமாகும்.

இதன் பழத்தினின்று இறக்கிய காடி குடற்கோளாற்றைப் போக்கி, சீரணசக்தியை உண்டாக்கும். நீரை வடிக்கும். பழத்தை தின்னலாம். பழக்கொட்டையை சூரணித்து நீரிழிவிற்கு கொடுக்க மட்டுப்படும். இதன் கஷாயம் மது மூத்திர ரோகத்தையும், சூதகப் பெருக்கையும் கட்டுப்படுத்தும்.

அடிக்கடி சிறுநீர் இறங்குபவர்களுக்கு தினம் ஐந்து நாவற் பழங்களைச் சாப்பிட குணமாகும். உடல் உஷ்ணம் தணிய தினம் இப்பழங்களை சாப்பிட வேண்டும். மேலும் இது மூத்திரத்தாரை எரிச்சல், கடுப்பு முதலியவற்றை குணமாக்கும்.

இதன் கொட்டையையும் சிறு குறிஞ்சான் இலையையும் அரைத்து உலர்த்தி தினம் சாப்பிட நீரிழிவு நோய் குணமாகும்.

இதன் பூவுடன் திப்பிலி சேர்த்து பொடித்து அத்துடன் சம அளவு பனங்கற்கண்டு சேர்த்து கலந்து வைத்துக்கொள்ள வேண்டும். இதை காலை, மாலை இரு வேளையும் அரை தேக்கரண்டியளவு தொடர்ந்து 40 நாள் சாப்பிட்டு வெந்நீர் குடித்துவர க்ஷயரோகம் குணமாகும்.

இதன் வேரால் கரப்பான் புண், மச்சை மேகம் இவை விலகும்.

* * *

## நாவல்

**(வெள்ளை நாவல்)**

## Eugenia hemispherica

**(N. O. Myrtaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Similar to E. jambolana*

*Constituents* : *Similar to E. jambolana*

*Action* : *Similar to E. jambolana.*

Uses : This improve haemoglobin and white blood-cells of the blood. It reduces the internal heat and improves sexual vigour in men.

வெள்ளை நாவற் பழம் குருதியையும், வெண்ணீரையும் பெருக்கும். உள் சூட்டை அகற்றும். ஆண்மையைப் பெருக்கும்.

* * *

## நாவல்

**(சம்பு நாவல்)**

## Eugenia malaccensis

**(N. O. Myrtaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Similar to E. jambolana*

*Constituents* : *Similar to E. jambolana*

*Action* : *Leaves are Antidote. Bark is an Astringent.*

Uses : Rheumatism, thirstyness could be cured with the help of its fruit. Tender leaves is an antidote for root tubers of superblilly. It stops diarrhoea. Billious disorder could be cured with the fruit of this plant.

சம்பு நாவற் பழத்தால் வாதநோய்கள், தாகம் ஆகியவை தீரும்.

இலைக் கொழுந்து சிவனார் கிழங்கின் நஞ்சை முறிக்கும். கழிச்சலை நிறுத்தும்.

பித்த நோயினால் ஏற்படும் எல்லா கொடிய நோய்களையும் கோளாறுகளையும் நீக்கும்.

* * *

## நாழல்

## Poinciana pulcherrima

**(N. O. Caesalpiniaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, bark and flowers*

*Constituents* : *Benzoic acid, gallic acid*

*Action* : *Leaves are Purgative, Stimulant and Emmenagogue. Bark is Abortifacient and Emmenagogue. Flowers are Pectoral and Febrifuge.*

Uses : Leaf decoction is purgative. It induces appetite. Bark is used in termination of pregnancy. Flour decoction checks asthma and reduces fever.

இலைக் கஷாயத்தை உட்கொள்ள பேதியாகச் செய்யும். பசியைத்தூண்டும். பட்டை கருவைகலைக்கும். பூக்கஷாயம் சுரத்தை குறைப்பதுடன் ஆஸ்துமாவை கட்டுப்படுத்தும்.

* * *

## நித்ய கல்யாணி

**(சுடுகாட்டு மல்லி, காக்கை பூ)**

## Vinca rosea

**(N. O. Apocyanaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Flowers, roots and leaves*

*Constituents* : *This herb contains 72 alkaloids*

*Action* : *Plant is Abhortifacient, Lactifuge, Anti-haemerrhagic, Tonic and Vulnerary. Leaves are Astringent.*

Uses : This is a world famous herb which is exported to many foreign countries. This is used to treat many diseases, mainly excess urination, excess thirstyness etc. This is an ideal medicinal plant which controls the frequency

of urination and then it is very helpfull in controlling diabetes The decoction of the flower if consumed every day 4 times (25 ml) it controlls diabetes and kidney disorders. Powdered root if consumed one teaspoon every day it may help in controlling diabetes and other urinary disorders. This is also found useful in treating lukemea.

வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகும் தமிழ் மூலிகை வகைகளில் ஒன்று நித்யகல்யாணியாகும்.

இச்செடி பல நோய்களை குணமாக்கும். சிறப்பாக இது அதிமூத்திரம், களைப்பு, அதிதாகம்ஆகியவற்றைக் குணமாக்கும். சிறுநீர் வழியாக உடல் சத்துக்கள் வெளியேறுவதை தடுத்து, நீரிழிவு நோய்களை குணப்படுத்துவதுடன் மூத்திரக்கோளாறுகளை நிவர்த்திக்கும். இதன் பூக்கஷாயத்தை தினமும் நான்கு வேளை 25மிலி அளவு சப்பிட மதுமேகம் குணமாவதுடன் சிறுநீரகக் கோளாறுகள் சிறுக சிறுக குணமாகும்.

இதன் வேரை உலர்த்தி பொடித்து ஒரு தேக்கரண்டியளவு வாயிலிட்டு வெந்நீர் குடிக்க நீரிழிவு நோய்களும் பிற மூத்திரதாரை நோய்களும் குணமாகும்.

இம்மூலிகைச் செடி 72 வகை நுண்சத்துக்களை கொண்டுள்ளது. இதன் இலைகளிலிருந்து நீரிழிவு நோய்க்கும், வேர் தண்டுகளிலிருந்து இரத்தப்புற்று நோய்க்கும் மருந்துகள் தயாரிக்கப்படுகின்றன. இதன் பூக்களிலிருந்து சரும நோய்களுக்கான களிம்புகள் தயாரிக்கப்படுகின்றன.

* * *

## நிலப்பனை

**(கிழங்குபனை, நிலப்பனை)**

## Curculigo echioides

**(N. O. Amaryllidaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Tuberous roots and pulps*

*Constituents* : *Root contains calcium oxalate*

*Action* : *Root is Bitter, Aromatic, Tonic, Demulcent, Diuretic, Restorative, Alterative, Nervine Tonic,*

*Astringent, Carminative, Emollient and Aphrodisiac.*

Uses : The root tuber is smooth and bitter in taste. Powdered tuber is used in treating leucoderma, menorrhagia, venereal diseases and pain in ribs. This improves vigour and vitality. If this is employed as lehyem it can cure urinary tract disorders, leucoderma etc. If it is made in to a powder after cutting it into small pieces and boiling it in milk, it cures pelvic pain, chest congestion, piles, eczema, itching due to venereal diaeases etc. It also helps in building up the body and improves sexual activity in men. It cures asthma, jaundice diarrhoea and stomach ache. For ladies it cures leucorrhoea and gleet.

நிலப்பனை செடியின் வேர் துவாரமுடையது. இதன் வேர்க் கிழங்கு வழவழப்பாயும் சிறிது கசப்பாயுமிருக்கும். இக்கிழங்கை சூரணித்துச் சாப்பிட வெண்குட்டம், பெரும்பாடு, மேக ஒழுக்கு, விலாக்குத்து இவைகள் நீங்குவதுடன் தாதுவிருத்தியும், காம இச்சையும் உண்டாகும். மேலும் உடல் பலம் பெறும்.

இதை சிறுதுண்டுகளாக்கி பாலிலிட்டு அவித்து உலர்த்தி சூரணம் செய்து சாப்பிட இடுப்புவலி, மாரடைப்பு, மூலரோகம், சொறி சிரங்கு மேகவூரல் இவைகள் குணமாகும். மேலும் இச் சூரணத்துடன் சர்க்கரை கலந்த பாலை அருந்த உடல் பலவீனம், ஆண்மைக்குறைவு, காசம், காமாலை, கழிச்சல், வயிற்றுவலி முதலியவைகள் குணமாகும். இச்சூரணத்தை பாலில் கலந்து சர்க்கரை சேர்த்து சாப்பிட பெண்களுக்குண்டாகும் வெள்ளை நோய்களும், உதிர சிக்கலும் குணமாகும்.

* * *

## நிலப்புகையிலை

**See : Digitalis purpurea**

**பார்க்க : புகையிலை வகைகள்**

* * *

# நிலப்பூசணி

## Ipomoea digitata

### (N. O. Convolvulaceae)

*Habit* : *Twiner*

*Parts used* : *Root and tuber*

*Constituents* : *Tuberous root contains resin, sugar and starch.*

*Action* : *Roots are Bitter, Tonic, Alterative, Aphrodisiac. Demulcent, Lactagogue, Mucilaginous, Cholago-gue, Laxative, Emollient and Nervine Tonic.*

Uses: The flowers are big in size, Root tuber is simple or branched. Latex is secreted from this. The tuberous roots are dried in sun and powdered. This is then boiled in milk and added with sugar. This could be used as medicine. This removes fatigue and acts as laxative. It is an ideal preparation for tuberculosis patients which improves the health. This could be also given to ladies after child birth. It acts as galactagogue and also it eliminates urinary disorders. The powder mixed with alcohol could be given to children to improve their health. This powdered tuber boiled in ghee is given to ladies to improve the health and correct the menstrual cycle. The powder of this tuber alone is purgative, but cures bilious disorders. Electuary made out of this tuber with sugar and butter cures menorrhagia.

நிலப்பூசணிச் செடியின் பூக்கள் பெரிதாயிருக்கும். கிழங்கு தனியாகவும், கிளைகளையுமுடையது. இதனின்று பால் வடியும். இக்கிழங்கை எடுத்து வெயிலில் காயவைத்து மேல் தோலை நீக்கி தூள் செய்து பால், சர்க்கரை சேர்த்துக் கொதிக்க வைத்து மருந்தாக உபயோகப்படுத்துவர்.

இக்கிழங்கினால் தளர்ந்த தேகம் இறுகும். மலபந்தம் நீங்குவதுடன் தேகம் புஷ்டியாகும். க்ஷயநோயாளிகளுக்கு கொடுத்துவர உடம்பை இளைக்கவிடாது. பிரசவித்த பெண்களுக்கு பால் சர்க்கரையுடன் கொடுக்க பால் அதிகம் சுரக்கும். மூத்திரக் கோளாறுகளைப் போக்கி உடம்பின் சூட்டை அடியோடு நீக்கும்.

அடிவேர்த்தண்டைச் சூரணித்து சாராயத்தில் குழப்பிக் குழந்தைகளுக்கு கொடுக்க உடம்பிளைப்பு, பலவீனம், செரியாமை இவைகளைப் போக்கும்.

கிழங்கின் சூரணத்தை நெய்யோடு கலந்து வேகவைத்து பெண்களுக்குக் கொடுக்க உடம்பு தடித்து மாதருதுவை ஒழுங்கு படுத்தும். கிழங்கின் சூரணம் பேதியை உண்டாக்கிப் பித்தத்தை அகற்றும்.

இச்சூரணத்தை திராட்சைச் சாற்றில் கொடுக்க பாலைப் பெருக்கும். கிழங்கின் பொடியுடன், சர்க்கரை, வெண்ணெய் கலந்து காய்ச்சி லேகியமாக சாப்பிட பெரும்பாட்டைப் போக்கும்.

* * *

# நிலவேம்பு

## Andrographis paniculatas

### (N. O. Acanthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Leaves contain an essential oil and kalmeghin i extracted from this plant*

*Action* : *Roots and leaves are Stomachic, Tonic, Antipyretic, Alteative, Anthelmintic, Febrifuge, Cholagogue, Hepatic, Stimulant and Antiphloglistic.*

Uses : Stickes of the plant and leaves are of many medicinal uses. The decoction of this cures flatulence, dengue fever, bilious giddiness in children. If given to adults it cures chronic dysentery, fever, cold etc. If it is taken as 'Arishta' it cures dyspepsia and strengthen alimentary canal.

நிலவேம்பின் உலர்ந்த குச்சியும், இலையும் பல மருத்துவப் பயன்களையுடையது. இதன் கஷாயத்தை குழந்தைகளுக்குக் கொடுக்க வயிற்றுவலி, வயிற்றுப் பொறுமல், வாதசுரம், பித்த மயக்கம் இவைகள் குணமாகும். பெரியவர்களுக்குக் கொடுக்க நாள் பட்ட சீதபேதி, சுரதோஷம், நீர்க்கோவை ஆகியவை குணமாகும். பிற கடைச்சரக்குகளுடன் கொடுக்க சுரத்தை குணமாக்கும். இதை

அரிஷ்டமாக செய்து சாப்பிட குன்ம நோய்கள் குணமாவதுடன் உணவு செல்லும் பாதையை பலப்படுத்தும்.

* * *

## நிலவேம்பு

(நாட்டு நிலவேம்பு)

**See : Swertia chirata**

**பார்க்க: சிரட்குச்சி**

* * *

## நிலாவாரை

**See : Cassia angustifolia**

**பார்க்க: ஆவாரை வகைகள்**

* * *

## நின்றார் சுணுங்கி

Mimosa

**(N. O. Mimosaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Antidote*

Uses : It is used as an antidote for snake bites. The juice of the leaves if given internally cures menorrhagia.

நின்றார் சுணுங்கி பாம்பு விஷத்தை குறைக்கும். இதன் சாற்றை உள்ளுக்கு கொடுக்க பெரும்பாடு குணமாகும்.

* * *

## நீபா

## Samadera indica

**(N. O. Simarubaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, leaves and seeds*

*Constituents* : *Whole plant contains samaderin and a bitter substance*

*Action* : *Bark is Emollient and Antisyphilitic. Leaves are Parasiticide. Seeds are Emetic and Purgative.*

Uses : This tree helps in treating all types of skin diseases. The oil extracted from the seed is used in treating rheumatism and to eradicate the lice in the hair. Decoction of the wood improves health. The paste of the leaves if applied on the skin cures red patches of the skin. The kernel of the seeds are used externally to cure arthritis.

நீப மரத்தினால் சரும நோய்கள் யாவும் தீரும். வாத நோய்களுக்கு இதன் எண்ணெயைப் பூச வலிதீரும். தலைமுடியிலுள்ள பேன்களை அழிக்க இதன் எண்ணெய் பயன்படுகிறது. இம்மரக் கட்டையை கஷாயம் செய்து சாப்பிட உடல் பலப்படும். இதன் விதைகளை கோர்த்து கழுத்தில் அணிய ஆஸ்துமா நோயை தவிர்க்கலாம். இதன் இலையை அரைத்து பற்றுப் போட உடல் முழுவதும் சிவந்த படைகளாக பரவும் ஒருவகை அக்கியை குணப்படுத்தும். விதைப்பருப்பை அரைத்து பற்றுப் போட வாத நோய்கள் தீரும்.

* * *

## நீரடிமுத்து

## Hydnocarpus kurzii

**(N. O. Flacourtiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, fruits and bark*

*Constituents* : *Seeds embedded in the pulp of its fruits, yield an oil. Bark contains large amounts of tannin.*

*Action* : *Alterative, Stimulant, Detergent, Parasiticide, Antisyphilitic and Emollient.*

Uses ; The seed and the oil of the seed exhibits many medicinal properties. Kernel of the nut is emetic. Oil is very viscous. This is used as an external application for leprosy. The powdered outer skin of the seed mixed with vinegar is an ointment for eczema and ulcers. Fruit exhibits tranquilising action. Powdered seed cures itching due to arthritis. Powdered seeds is also used as ointment for skin ailments. The decoction made out of Neem bark, barkof Pungamia glabra, wiry indigo along with the oil of this seed mixed with sugar if taken regularly it cures skin diseases. With the kernel boiled in the milk, dried and powdered. Sugar and ghee are mixed with the powder. If this is of this seed, dried ginger, ginseng, sarasaparilla, china root are consumed regularly it cures psoriasis and many other skin diseases. The seed improves fertility in men.

இது நீரடிமரத்தின் விதையாகும். இவ்விதை எண்ணெய் பல மருத்துவப் பயன்களையுடையது. இக்கொட்டையின் உள் சதைப் பற்று குமட்டலையுண்டாக்கும். இதன் எண்ணெய் மிகவும் தடிப்பா யிருக்கும். இது குஷ்ட நோய்க்கு மேலே தடவ உதவும். விதையின் மேலோட்டை தூள் செய்து எண்ணெய் அல்லது காடியில் குழைத்து பூச கால் சிரங்கு, சொறி சிரங்கு தீரும். பழத்தைச் சாப்பிட மயக்கத்தை உண்டு பண்ணும். விதையை சூரணித்துச் சாப்பிட வாதநோய் நமைச்சல் தீரும்.

விதையை பொடித்து மெழுகு சேர்த்துச் சருமநோய்களுக்கு தடவ குணமாகும். வேப்பம் பட்டை, பூவரசம்பட்டை, சிவனார் வேம்பு இவைகளை இடித்து கஷாயமாக இறக்கி அத்துடன் விதை எண்ணெயை சேர்த்து காய்ச்சி வடித்து சர்க்கரையுடன் கலந்து தொடர்ந்து சாப்பிட சருமநோய்கள் யாவும் தீரும்.

இப்பருப்புடன் சுக்கு, அமுக்கிரா, நன்னாரிவேர், பறங்கிச் சக்கை இவைகளைப் பாலில் அவித்துக் காயவைத்துச் சூரணித்துச் சர்க்கரையும், நெய்யும் சேர்த்து லேகியமாக சாப்பிட சருமநோய்கள் யாவும் தீரும்.

மேலும் விதை மலட்டுத் தன்மையை நீக்கும்.

* * *

## நீரலரி

## Polygonum barbatum

**(N. O. Polygonaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Plant is Astringent and Carminative.*

Uses : This is an ideal plant to treat stomach ache and dysentery. The paste of the petiole is applied on the skin to cure eczema. The infusion of the seed eliminates stomach ache. The decoction of the root checks dysentery and acts as febrifuge.

நீரலரி செடி வயிற்றுவலி, கழிச்சல் முதலியவைகளைப் போக்கும். இலை தண்டை அரைத்துப் பூச புண் புரைகளை ஆற்றும். விதையின் ஊறல் குடிநீர் வயிற்றுவலியைப் போக்கும். வேர் குடிநீர் கழிச்சலைப் போக்கி குளிர்ச்சி தரும்.

* * *

## நீர் பிரம்மி

## Herpestis monniera (or) Bacopa monniera

**(N. O. Scrophulariaceae)**

*Habit* : *Creeping plant*

*Parts used* : *Whole plant, root, stalks and leaves.*

*Constituents* : *Plant contains brahmine.*

*Action* : *Leaves are externally Antiparasitic and powerfully Discutient. Internally Alterative, Bitter, Vermifuge and Anodyne. Root is Tonic, Febrifuge, Expectorant and Diuretic. Fruit is Nervine, Cephalic and Emmenagogue. Dried fruit acts as a Vermifuge. Flowers are Cooling and Astringent.*

Uses : Root, leaves and stem are diuretic and laxative. The ashes of the plant is purgative. Juice of the plant mixed with kerosine is used as an extern al applicatio

to reduce the pain in rheumatoid arthritis. The ash if taken internally it cures nervous disorder, epilepsy, psychic disorder, constipation and anuresis. Boiled tendrils are used externally on the chest to reduce cough in children. The powder mixed with equal quantity of the following powders, sweet flag, myrabalan, adathoda root, long pepper are mixed with honey will cure throat problems due to tuberculosis. The leaves roasted in butter is used to clear the throat. The leaves roasted in castor oil is used externally to reduce oedema.

நீர் பிரம்மியின் வேர் தண்டு, இலை யாவும் மூத்திரத்தை வடிக்கும் தன்மையுடையது. மலத்தை இளக்கும். சமூலத்தை சூரணித்துக் கொடுக்க பேதியாகச் செய்யும்.

இக்கொடியிலைச் சாற்றுடன் மண்தைலம் சேர்த்து கீல்வாயு விற்கு தடவ உடனே வலி நிவாரணம் தெரியும். இதன் சூரணத் துடன் சமஅளவு வசம்பு, கடுக்காய், ஆடாதொடைவேர், திப்பிலி இவற்றின் தூளும் சேர்த்து தேனில் குழைத்து கொடுக்க க்ஷயரோகத் தினால் உண்டான தொண்டைக்கம்மல் குணமாகும்.

இலையை வெண்ணெயில் பொரித்துத் தொண்டைக் கம்மலுக்குக் கொடுக்க குணமாகும்.

இலையை சிற்றாமணக்கெண்ணெய்யில் வதக்கி வீக்கங்களுக்கு வைத்துக்கட்ட வீக்கம் வடியும்.

* * *

## நீர் முள்ளி

**(காகண்டம்)**

## Hygrophila spinosa

**(N. O. Acanthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *The whole plant*

*Constituents* : *Roots contain an alkalloid named hygrosterol. Seeds yield fixed oil which has a sweet taste. Oil contains myristic, Palmitic and stearic acids*

**Action** : *Root is a Cooling, Bitter, Tonic, Diuretic, Demulcent and Refrigerant. Seeds are Diuretic and Aphrodisiac. Leaves are Demulcent and Diuretic. Ashes of the plant are Diuretic.*

Uses : This is an aquatic, thorny plant. Root is used as tonic. Decoction of the root is used to treat diarrhoea and ascites. Hot decoction if taken cures dropsy. Root mixed with vinegar checks diarrhoea. Plant in decoction is used in the treatment of anaemia, jaundice, tumours and ascites. The ashes of the plant mixed with cow's urine is used as an external application to reduce the inflammation due to abdominal dropsy. This mixture if taken internally cures cancerous growth in the urinary tract, calculous affections and this also purifies the blood. Cooked leaves are mixed with garlic and turmeric and made into a paste. This is heated and if taken internally cures anuresis, cold, ascites, bilious dropsy etc. Leaf juice mixed with equal quantity of castor oil and is heated. This cures dropsy, anaemia, calculous affections, abnormal growth in the urinary tract, rigidity of joints, piles, gleet and dyspepsia.

Powdered seeds if taken cures cold affections, wheezing and cough. This acts as an aphrodisiac and used in the rejuvenating medicines.

முள்ளி—இது ஒரு நீர் முட்செடி. இதில் மூன்று வகை உண்டு ஊதா நீர் முள்ளி, வெள்ளை நீர் முள்ளி, பேய் நீர் முள்ளி என்பன வாம். இதன் வேரை பலவிருத்திக்கும், சல பேதிக்கும் கஷாயம் வைத்துச் சாப்பிடலாம், மகோதரத்திற்கும் உபயோகப்படும். காடியில் கலந்து பேதிக்குக் கொடுக்கலாம். இதன் வெந்நீர்க் கஷாயத்தினால் விஷப்பாண்டு நீங்கும்.

இதன் இலை அல்லது சமூலத்தைக் கஷாயமாக வைத்துக் கொடுக்க சோகை, காமாலை, வயிற்றிலுள்ள கட்டி, மகோதரம், ஸ்தூல நோய் முதலியவைகள் நீங்கும்.

இதன் சாம்பலை, சிறுநீர், வெள்ளாட்டு மூத்திரம் அல்லது பசுவின் மூத்திரத்தில் கரைத்து, பாண்டு வீக்கமுள்ள இடங்களில் பூசி வர வீக்கம் குறையும், மேலும் இது இரத்தத்திலுள்ள மாசுகளை நரம்பின் வழியாக குண்டிக் காய்க்கு கொண்டு வந்து, பின் நீர்ப்பை, நீர்தாரை மூலமாய் வெளிப்படுத்தும். மேலும், நீர்த்தாரையிலுள்ள

மாமிச வளர்ச்சி, சவ்வுகள் முதலிய தடங்களைக் கரைத்து நீரடைப்பு ரோகத்தைக் குணப்படுத்தும்.

இத்துடன் இதரச் சரக்குகளைச் சேர்த்தும் கொடுப்பதுண்டு, இலையை அவித்துக் கடைந்துக் கொண்டு பூண்டு, மஞ்சள் சேர்த்து அரைத்துக் கூட்டிக் குழம்பாகக் காய்ச்சி, உட்கொள்ள நீர்கட்டு, நீரேற்றம், மகோதரம், பித்த பாண்டு, நீர் செரிப்பு போகும். மேலும் நீர்முள்ளிச் சாற்றுடன் சிற்றாமணக்கெண்ணெய்யை சமமாகச் சேர்த்து அதில் நவச்சாரம் ஒரு 10 கிராம் சேர்த்து கலக்கி பதமுறக் காய்ச்சி வேளைக்கு ஒரு கரண்டி வீதம் உட்கொள்ள பாண்டு சோகை கல்லடைப்பு, சதையடைப்பு, கை கால் பிடிப்பு, மூலம், வெள்ளை, குன்மம், முதலிய நோய்கள் போகும்.

இதன் விதையை இடித்துச் சூரணமாகக் கொள்ள நீர்க் கோவை, இரைப்பு, இருமல் இவைகள் தீரும். இரத்தம் சுத்தமாகி விந்தூறும் தாது புஷ்டிப் பெறும். இக்காரணங்களால் இதை ஆண்மை பெருக்கும் லேகியங்களில் சேர்ப்பர்.

* * *

## நீர்மேல் நெருப்பு

**See : Ammania vesicatoria**

**பார்க்க : கல்லுருவி**

* * *

## நீலி அவுரி

**See : Indigofera tinctoria**

**பார்க்க : அவுரி**

* * *

## நுணா

## Morinda tinctoria

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Small tree*

*Parts used* : *Leaves, fruits and roots.*

*Constituents* : *Root and root-bark yield a bright, red-dye 'morindin'*

*Action* : *Root is Cathartic and Astringent. Fruit and Leaves are Deobstruent, Emmenagogue, Tonic and Febrifuge.*

Uses : This is a small tree with white flowers. Fruit is used to cure inflammation and boils. This also acts as an emmenagogue. Leaf juice mixed with castor oil is applied to cure arthralgia. Oil expressed from the heated mixture of its leaf juice, castor oil, garlic juice and fenugreek seeds is used to cure indigestion and fever. Leaf juice along with equal quantity of juice of Vitex negunda, Lippia nodiflora and Daemia extensa, if taken cures indigestion. The ash of the fruit checks dysentery, vomiting and diarrhoea in cholera To cure ulcers and guinea worm infections Bruised leaves are applied and bandaged. A kind salt is made by chemical process from the leaves and it is used to wash the ulcers. To treat skin disorders the paste of the leaves is boiled with gingelly oil and is used internally and the oil is also used as an ex-ernal application. Fruit along with salt is dried and powdered. If this powder is used as tooth powder cures carious tooth and gingivitis. To cure throat disorders juice of the fruit and leaves cures uterous disorders. Root is purgative. A kind of dye is prepared from the roots.

Unripened fruit is used in the form of pickels. This gives relief from rheumatism.

Its leaves and tender neem leaves are fried and mixed with dried ginger, pepper and celery along with water is made into an infusion. This cures fever due to indigestion. This also cures stomach ache. Roasted asafoetida is added and if taken twice daily cures constipation, indigestion and gonorrhoea.

நுணா ஓர் சிறியமரம். மஞ்சட் பாவட்டை என்னும் பெயரும் இதற்கு உண்டு.

வீக்கம், கட்டியைக் கரைக்க இதன் காய் பயன்படுகிறது. மாதாந்திர விலக்கை உண்டாக்கும். இதன் இலைச்சாற்றுடன் எண்ணெய் சேர்த்துச் சூலைப் பிடிப்புக்குத் தடவலாம். இதன் இலைச் சாற்றுடன் சிற்றாமணக்கெண்ணெய், பூண்டுச் சாறு,

வெந்தயம் சேர்த்துத் தயாரிக்கப்படும் எண்ணெய் மாந்தம், கண சுரத்திற்கு சிறந்த பயன் தருகிறது. மேலும் இலைச் சாறுடன் நொச்சிலைச் சாறு, பொடுதலைச் சாறு, உத்தாமணிச் சாறு சம அளவு சேர்த்துக் கொடுக்க மாந்தம் நீங்கும். காயைக் கருக்கிச் சாம்ப லாக்கி, சீதபேதி, வாந்தி பேதிக்குக் கொடுக்கலாம். பச்சை இலைகளை சிதைத்து இரணம், சிலந்தி இவைகளுக்கு வைத்துக் கட்ட ஆறிப் புதிய தோலுண்டாகும். இதன் இலையிலிருந்து இயற்பியல் முறை யாய் எடுக்கும் உப்பு, ஊழற்புண், குழிப்புண் இவைகளைக் கழுவ உதவுகிறது.

இலைக் கற்கத்துடன் நல்லெண்ணெய் சம அளவு சேர்த்துக் காய்ச்சி பின்பு கற்கத்தை உள்ளுக்கும், எண்ணெயை வெளியிலும் போட வெண் புள்ளிகள் நீங்கும். இதன் காயுடன் உப்புச் சேர்த்து புடம் போட்டு பல்பொடி செய்து பல் துலக்கி வர பல் சொத்தை, பல்லரணை மற்றும் பல்சம்பந்தமான நோய்கள் நீங்கும். தொண்டை நோய்களுக்கு இதன் காய்சாற்றைப் பூசிவர சிறந்த பலன் கிடைக்கும்.

பழத்தையும், இலையையும் குடிநீரிட்டு கொடுக்க சூதகத்தைச் சரிப்படுத்தும். இதன் வேருக்கு கழிச்சலை உண்டாக்கும் தன்மை உண்டு.

இதிலிருந்து ஒரு விதமான சாயம் எடுக்கிறார்கள். மேலும் இதன் காய் ஊறுகாய் செய்ய பயன்படும். இதனால் சகல நோய்கள் தீருவதுடன் உடல் வலிமை பெறும். மேலும் இது சகல விதமான வாத நோய்களையும் நீக்கும்.

நுணாயிலை, வேப்பங் கொழுந்து, சுக்கு, ஓமம். எடுத்துக் கொண்டு முதலில், நுணாயிலை, வேப்பங்கொழுந்து வதக்கி, இதனுடன் சுக்கு, மிளகு, ஓமம் நைத்து தண்ணீர் விட்டு சுண்டக் காய்ச்சிக் கொடுக்க அஜீரண சுரம் குணமாகும். மேலும் வயிற்றுவலிக் கும் இது சிறந்த மருந்தாகும். நுணாயிலை, வேப்பங் கொழுந்து இவற்றை வதக்கி, இதனுடன் சீரகம், ஓமம், பெருங்காயம்(வறுத்தது) சேர்த்து தண்ணீர் விட்டு சுண்டக் காய்ச்சி, காலை, மாலை, இரு வேளைக் கொடுக்க மலச்சிக்கல், வயிற்றுஉப்புசம் முதலியவை குண மாகும். மேலும் வெள்ளை நோய்க்கு குணம் தரும்.

* * *

## நுணா
### (மஞ்சநணத்தி)

## Morinda umbellata
### (N. O. Rubiaceae)

*Habit* : *Liane*

*Parts used* : *Bark, leaves and fruits*

*Constituents* : *A glucoside*

*Action* : *Leaves and fruits are Deobstruent, Emmenagogue, Febrifuge, Stimulant and Tonic. Root is Cathartic.*

Uses : Leaves of this climber exhibits medicinal properties. Decoction made out of this leaves along with the leaves of Lippia nodiflora and Daemea extensa cures infantile diarrhoea due to indigestion. Bark infusion cures phlegmatic fever, eczema and ulcers. Dried and powdered leaves give relief from indigestion and venereal diseases. Bruise leaves if applied cures ulcers, and other skin diseascs, Juice of the leaves gives relief from pelvic pain if used as an external application. Burnt and powdered fruits mixed with salt if used as tooth powder cures tooth diseases. Leaves along with powdered cardomum checks dysentery. Yellow and red dye are made from its roots.

இதற்கு மஞ்சநாறி, நுணா, தணக்கு எனப் பல பெயருண்டு. இது ஓர் கொடி.

இவ்விலையுடன், பொடுதலையும், உத்தாமணியும் சேர்த்துக் கஷாயமிட்டுக் கொடுக்கக் குழந்தைகள் மாந்தபேதி போகும். பட்டையின் கஷாயத்தை கபசுரம், கரப்பான், புண்கிரந்தி, இவைகளுக்குக் கொடுக்கலாம். இலையைச் சூரணித்துச் சாப்பிட மாந்தம் மேகம் போகும். அன்றியும் இலையை அரைத்து, புண், சிரங்கு, ரணம் இவைகளுக்கு வைத்துக் கட்ட ஆறும். இலைச் சாற்றை இடுப்புவலிக்குப் பூச குணமாகும். இக்காய்களைக் கருக்கி உப்புச் சேர்த்துப் பல் விளக்க பல் ரோகங்கள் போகும். இலைகளுடன் சில வாசனைச் சரக்குகளையும் சேர்த்து அதிசாரப் பேதிக்குக் கொடுப்பதுண்டு. காய் சட்டினி செய்யலாம். இதன் வேரிலிருந்து மஞ்சள் சிவப்பு சாயம் எடுக்கலாம்.

* * *

## நூல்கோல்

## Brassica caulocarpa

**(N. O. Cruciferae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Stem and tuber*

*Constituents* : *Vitamins and minerals*

*Action* : *Expectorant.*

Uses : The tender root tuber is used as vegetable. If taken regularly gives relief in asthma.

இளம் தண்டுக்கிழங்கு சமையலில் பயன்படுகிறது. அடிக்கடி உணவில் சேர்க்க காசநோயை கட்டுப்படுத்தும்.

* * *

## நெட்டிலிங்கம்

**(நெடு நாறை)**

## Polyalthia longifolia

**(N. O. Anonaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Action* : *Bark is Astringent, Tonic and Febrifuge.*

Uscs : This tree resembles Asoka, so some persons call in Asoka by mistake. The infusion of the bark is useful in treating diarrhoea,and dysentery. Bark soaked in vinegar for one day and to be filtered. This filtered water is used to wash ulcers and wounds. This bark is also used to reduce palpitatotion.

ஓங்கி வளர்ந்த இம்மரத்தை சிலர் "அசோகமரம்" என்று தவறாகக் கூறுவர். இது துவர்ப்புச் சுவை யுடையது. இதன் பட்டையை குடிநீரிலிட்டுக் குடிக்க கிராணி, அதிசாரம், சீதபேதி, போன்ற நோய்கள் நீங்கும். பட்டையைக் காடி நீரிலிட்டு ஒரு நாள் ஊறவைத்து வடித்த நீரால் புண் புரையைக் கழுவ அவை குணமாகும். மேலும் இப்பட்டை குடிநீரைப் பயன்

படுத்துவதனால் இதயத்துடிப்பு மட்டுப்படும். மேலும் இதன்பட்டை சுரத்தை குறைக்கும்.

* * *

## நெய்சட்டி

### (சகதேவி, தேவகந்தம்)

## Vernonia cinerea

### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, root and seeds*

*Constituents* : *Herb contains Bamyrin, Lupeol and their acetates and Potassium chloride*

*Action* : *Leaves are Diaphoretic, Febrifuge and Alterative. Seeds are Alterative, Anthelmintic, Antidote, Emollient and Antisyphilitic.*

Uses : This is bitter in taste. This reduces the bitterness of Neem oil. This induces sweting, it is tonic, anthelmintic and it is used as an antidote for many poisons. The oil made out of this is used in bathing, which increases the eye sight and reduces the body heat. Ash of this plant is made as a decoction and consumed, it cures bilious disorders, gonorrhoea, internal heat, thirstyness, stomatitis, nausea and vomiting. This increases sexual viguor. The heated leaves are used externally to cure the guinea worm infection. The juice of the flower clears the eyes. The infusion of the root reduces the oedema of the body. Seed with jaggery acts as anthelmintic. The infusion of seed is used to treat all types of skin diseases.

இது கைப்புச் சுவையுடையது. வியர்வையைப் பெருக்குதல், உடலைத் தேற்றுதல், புழுக்கொல்லுதல், பலவகை யாகிய நஞ்சின் கொடுமையை முறித்து சாந்தப் படுத்துதல் ஆகியவை நெய்ச்சட்டி விதையின் செய்கைகளாகும்.

இதனால் செய்யப்பட்ட தைலத்தை தலையில் தேய்த்து ஸ்நானம் செய்ய கண்ணானது ஒளிபெறும். உடலுஷ்ணம் தணியும். தேஜஸ் உண்டாகும். நல்ல பசியையும், உடலழகையும் தரும்.

நெய்ச்சட்டி சமூலத்தைக் கஷாயம் இட்டுக் குடிக்க, பித்த மேகம், வெள்ளை, உட்சூடு, தாகம், பித்த கோபம், இரசகெந்தகம் ஆகியவற்றால் உண்டான வாய்ப்புண், அழற்சி, வாந்தி முதலிய வற்றை நீக்கும். மேலும் ஆண்மையைப் பெருக்கும். சுரத்தைத் கண்டிக்கும்.

இலையை வதக்கிப் போட, நரம்புச் சிலந்தி மாறும். பூவின் ரசம், கண்சிவப்பை மாற்றும்.

வேரைக் குடிநீரிட்டுக் கொடுக்க, உடலிலுள்ள வீக்கங்கள் நீங்கும். விதையைப் பொடித்து வெல்லத்தில் வைத்துக் கொடுக்க, புழுக்கள் சாகும். விதையைக் குடிநீரிட்டு உள்ளுக்குக் கொடுக்க, சகலவிதமான சர்ம நோய்களும் குணமாவதுடன் உடல் தேறும்.

* * *

## நெருஞ்சில்
### (சிறு நெருஞ்சில்)

## Tribulus terrestris

### (N. O. Zygophyllaceae)

*Habit* : *Prostrate herb*

*Parts used* : *Fruit, root and the entire plant*

*Constituents* : *Extract of the powdered fruit contains an alkaloid, a resin, fat and mineral matter. The fruit contains an alkaloid, a fixed oil, consisting unsaturated acids, an essential oil, resins and nitrates.*

*Action* : *Leaves are Stomachic. Root is Aperient and Tonic. Plant and dried spiny fruit are Cooling, Demulcent, Diuretic, Tonic and Aphrodisiac. The Diuretic properties of the plant is due to the presence of the large quantities of the nitrates.*

Uses : This is a thorny herb. The fruit, leaves and root are used as diuretic. The decoction of the seed is used to treat dropsy and gonorrhoea. The plant along with fruit is mashed well and mixed with white goat's milk and filtered. This is used to increase the sexual vigour in men. Paralysis and venereal diseases could be cured with this. The fruit does

not exhibit any taste or smell, but the seeds are bitter in taste. The fruit cures dysuria, anuresis, urinary bladder stones and other urinary tract infections. The decoction of the fruit with Ammonium Chloride could be given to cure burning sensation during urination. The fruit and root boiled along with rice gruel is filtercd and mixed with sugar. This preparation is used to cure gonorrhoea and burning sensation during urination. Mashed fruit with coriander seeds and water taken in equal quantity and heated and made a decoction. This could be given to patients of anuresis and obstruction in urinary passage, bladder stones etc. The seed along with tail pepper, flowers of iron wood, rhubarb and potassium nitrate to be mixed and powdered. This mixture could be used to treat oedema due to cardiac problems. Ash of this with, long pepper and dried ginger, cloves, cardamum, saffron, nutmeg, bonduc nut, bamboo seeds to be mixed and made into a decoction. The decoction is used to treat gonorrhoea and the burning sensation. It improvcs sexual activity If cinnamomum bark, cardamum and sugar is mixed with this and powdered added with veliron oxide, it is an ideal preparationfor jauudice.

இது ஓர் முட்செடி, சிறு நெருஞ்சில், பெரு நெருஞ்சில், நெருஞ்சில், யானை நெருஞ்சில் என மூன்று உண்டு.

இதன் காய், இலை, வேர் இவையனைத்திற்கும் நீரைப் போக்கும் குணமுண்டு. விதையை இடித்துக் கஷாயம் வைத்து, பாண்டு, வெள்ளைக்குக் கொடுக்கலாம். இக்காய் தசமூலத்தி லொன்றாகும். காயோடு கூடிய செடியை இடித்து வெள்ளாட்டின் பாலில் ஊறவைத்துப் பிழிந்து வடிக்கட்டி அத்துடன் தேன் சேர்த்துக் கொடுத்துவர ஆண்மைதன்மை பெருகும். மேலும் முடக்கு வாதம், பிரமேகம், குணப்படுத்தும். இக்காய்க்கு எந்த விதமான ருசியும், வாசனையும் கிடையாது. விதை சிறிது கசப்புத் தன்மை யுடையது.

இதன் காய் நீர்ச்சுருக்கு, நீரடைப்பு, கல்லடைப்பு, பிற மூத் திரவியாதிகள் முதலிய நோய்களையும், உஷ்ணத்தையும் தணிக்கும். இதன் காயைக் கஷாயமிட்டு அத்துடன் நவாச்சாரம் சேர்த்து மூத்திர எரிச்சலுக்குக் கொடுக்கலாம்.

இதன் காயையும், வேரையும் பச்சரிசியோடு வேகவைத்துக் கஞ்சியை வடிகட்டி சர்க்கரை சேர்த்து வெள்ளை, நீர்க்கடுப்பு

போன்ற நோய்களுக்குக் கொடுப்பது நாட்டு வழக்கம். நசுக்கிய நெருஞ்சிக்காய், கொத்தமல்லி விதை, நீர், இவைகளை நேர் பாதி யாகச் சுண்ட வைத்து வடிகட்டி, தினம் இரு வேளை கொடுத்துவர நீரடைப்பு, சதையடைப்பு, கல்லடைப்பு, நீர் எரிச்சல் போன்ற நோய்கள் நீங்கும்.

இவ்விதையுடன் வால்மிளகு, சிறுநாகப்பூ, ரேவல் சின்னி, வெடியுப்பு ஆகியனச் சேர்த்துப் பொடித்து அதைக் கொடுத்துவர இருதய நோயோடு கூடிய வீக்கங்கள் நீங்கும்.

இதன் சமூலத்துடன் திரிகடுகு, இலவங்கம், ஓமம், குங்குமப்பூ சாதிக்காய், கச்சக்காய், மூங்கிலரிசி, சேர்த்துச் செய்தக் கஷாயம் சாப்பிடுவதனால் எரிச்சலோடு கூடிய வெள்ளை நோயின் சார்பாய் உண்டான ஆண்மையின்மையை நீக்கி, ஆண் தன்மையை உண்டு பண்ணும். அனலைப் போக்கும். சிறு நெருஞ்சிலுடன் இலவங்கப் பட்டை, ஏலக்காய், சர்க்கரை, சேர்த்துத் தூளாக்கி இரும்புச் செந்தூரத்தோடு சேர்த்துக் கொடுக்க காமாலை நோய் நீங்கும்.

* * *

## நெருஞ்சில்
### (ஆனை நெருஞ்சில்)
### (யானை வணங்கி)

## Pedalium murex

### (N. O. Pedaliaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *The four angled spiny fruit contains a mucilaginous alkaloid fat, resin, gum and ash.*

*Action* : *Leaves are Antibilious. Seeds are Demulcent, Diuretic, Tonic, Muscilaginous and Aprodisiac.*

Uses : It is bigger than Tribulus terrestris. This is used to treat venereal diseases, white patches, calculous affection, tuberculosis etc. This improves health. Burning sensation of the body, thirstyness, fatigue also could be treated with this. Giddiness due to bilious disorders and leucoderma could be treated with this. This improves sexual vigour in men. It is an ideal medicine for gonorrhoea. The

leaves made into a paste and added with cow's milk if taken internally every morning, it reduces the venereal heat.

ஆனை நெருஞ்சில் மேகம், வெண்புள்ளி, கல்லடைப்பு, எலும்புருக்கி நோய் முதலியவற்றைப் போக்கி தேகவனப்பு தரும். உடம்பெரிச்சல், நீர் வேட்கை, அழல் நோய்களையும் போக்கும். மேலும் இது பித்த மயக்கம், வெண் குஷ்டத்தைக் குணப்படுத்தும். ஆண்மை தருவதில் சிறந்தது. வெள்ளை நோய்க்கும் இது சிறந்த மருந்தாகப் பயன்படுகிறது. இதன் இலையை அரைத்து எலுமிச்சம் பழமளவு எடுத்து பசும்பாலில் கலந்துக் காலையில் மட்டும் சாப்பிட்டுவர வெட்டைச் சூடு தணியும்.

ஆனை நெருஞ்சில் இலையும் அசோக இலையும் சமமாக எடுத்து அரைத்து எருமை தயிரில் 20 நாட்கள் தொடர்ந்து சாப்பிட வெள்ளை ஒழுக்கு நின்றுபோவதுடன் மாதவிலக்கு ஒழுங்குபடும்.

* * *

## நெருஞ்சில்

**(செப்பு நெருஞ்சில்)**

## Indigofera enneaphylla

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Indican, the oxadized from the luc-indico is obtained from the fermentation of the fresh plant. This yield indicotin.*

*Action* : *Juice is Alterative, also Antiscorbutic and infusion of the plant is Alterative, Diuretic, Febrifuge, Cooling and Refrigerent. Indigo is Antiseptic and Astringent.*

Uses : This is used to treat rheumatism, phlegmatic disorders, bilious disorders and fever. This reduces the body heat and cures gonorrhoea. Spermertorrhoea could be treated with this. The root is an ideal medicine for spleen disorder and urinary obstructions.

செப்பு நெருஞ்சில் முப்பிணி, வெப்பம், வெண்ணீர் போன்ற நோய்களைப் போக்கும் செந்தூர மூலிகையாகும். இது தேக உஷ்ணத்தைத் தணித்து, வெள்ளை நோயையும் குணப்படுத்தும். சுக்கில மேகம் போக்கும். மேலும் இது மேக நோய்களுக்கும் சிறந்த பயன் தருகிறது. இதன் வேரானது மண்ணீரல் நோய்களையும், கல்லடைப்பையும் நீக்கும்.

* * *

## நெல்

## Oryza sativa

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Grains*

*Constituents* : *It contains starch, proteins and vitamins*

*Action* : *Nutrient, Refrigerant and Demulcent.*

Uses : This is one of the most useful food grain. It is best suited food for the people of tropical climate. Rice gruel mixed with lemon juice is an excellant remedy in cases of fevers, small pox, measles, gonorrhoea, other venereal disorders and inflammation of all kinds. Rice water alone is used as an enema in bowel affections. Paddy is used in the form of flakes. Alcoholic liquor and vinegar are prepared from rice by fermentation.

நெல் ஓர்வகை தானியம். இதன் அரிசியே உணவாகப் பயன்படுகிறது. உஷ்ண தேசத்திய மக்களுக்கு இது மிகவும் சிறந்த உணவாகும். பேதி, சுரம், வைசூரி, வயிற்றுக் கோளாறு, வெள்ளை முதலிய மேக நோய்களுக்கு இதன் கஞ்சியை கொடுக்கலாம். இதன் மாவை மஞ்சளுடன் சேர்த்து களியாக கிண்டி கட்டிகள், அடிபட்ட வீக்கங்களுக்குக் கட்ட குணமாகும். அம்மை நோய், அக்கினி விசர்ப்பி, வேர்க்குரு முதலிய சருமநோய்களுக்கு இதன் மாவை மேல்தூவலாம். தீச்சுட்டபுண், வெந்நீர்ப் புண் இவைகளுக்கும் தூவலாம். நெல்லை பொரியாகவும், அவலாகவும் பயன்படுத்துவர். நெல்லில் பலவகைகள் உண்டு. இவ்வரிசியினின்று காடி, சாராயம் முதலியவை இறக்கப் படுகின்றது.

இது கார்அரிசி, கருங்குருவை அரிசி, ஈர்க்குச் சம்பா, புழுகு சம்பா, கோரைச்சம்பா, குறுஞ்சம்பா, மிளகுச்சம்பா, சீரகச்சம்பா,

காடை சம்பா, கைவரைச் சம்பா எனப் பலவகைப்படும். இது பச்சை அரிசியாகவும், புழுங்கலைத்தும் பயன்படுத்தப்படுகிறது.

* * *

## நெல்லி

### Emblica officinalis

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fresh and dried fruits, the nut, leaves, root, bark and flowers*

*Constituents* : *Fruits are rich in Vitamin 'C' and Pectin. Fruit is edible and an oil is extracted*

*Action* : *Fresh fruit is Refrigerant, Diuretic, Laxative. Carminative and Stomachic. Dried fruit is Sour and Astringent. Flowers are Cooling and Aperient. Bark is Astringent.*

Uses : This is a common tree. The fruit, leaves, bark and roots are of medicinal value. This increases the taste in mouth and cure tuberculosis, menorrhagia, vomiting, gonorrhoea, boils and the pains etc. The fruit is made into a paste and the paste is rubbed on the head before bath. This cools the eyes. The fruit contains vitamin 'C' in abundance which will not reduce or destory while making any preservatives. Because of this property it is used in many tonic preparations. The juice of the fruit which fermented is added with honey in a ratio of 1:8. Powdered long pepper and sugar are added with this and the mixture is made into an electuary by heating. If this is consumed every day morning and evening, it cures jaundice, dyspepsia, indigestion and cough. The leaves are used in hair tonics. Decoction made out of this leaves are useful in treating eye disorders. Tender leaves along with buttermilk is used to check dysentery. The powdered bark mixed with honey is used in treating stomatitis. Diarrhoea also could be treated with this. The root is used to treat nausea, vomiting and constipation. Juice of the fresh fruit bark is mixed with honey and it is used to treat venereal

diseases. Root decoction is used in treating dyspepsia, and cough. Powdered root with deskinned gingelly is an ideal medicine to improve memory and give strength to nerves of the brain. Gum could be taken from this tree. This is employed to make tablets out of choornum.

நெல்லிக்காய் மரம் சாதாரணமாய் எங்கும் காணக் கூடியது. இதன் காய், இலை, பட்டை, வேர், அனைத்தும் மருத்துவப் பயனுடையவை.

நெல்லிக்காய் நாவிற்குச் சுவையைக் கொடுக்கும். உட்சூடு, எலும்புறுக்கி நோய், பெரும்பாடு, வாந்தி, வெள்ளை, ஆண்குறிக் கொப்புளம் ஆகிய நோய்களை நீக்கும். நெல்லிக்காயை அரைத்து தலை முழுக கண்களுக்குக் குளிர்ச்சியைத் தரும். நெல்லிக்காயை காய வைத்து சூரணமாக்கினாலோ, வேக வைத்து லேகியம் ஆக்கினாலோ, தண்ணீரில் கரைத்துக் குடிநீர் செய்தாலோ இக்காயிலிருக்கின்ற வைட்டமின் 'C' உயிர்ச்சத்து குறையவே குறையாது என்பது இதன் சிறப்பு.

இத்தன்மையினால் பல்விதமான உடல் வனப்பு செய்யும் லேகியங்களில் இதனை உபசரக்காகச் சேர்க்கிறார்கள். நெல்லிக்காயிலிருந்து சாற்றைப் பிழிந்து அதைப் புளிக்க வைத்து அத்துடன் 1:8 என்ற விகிதத்தில் தேனைச் சேர்த்து அத்துடன் திப்பிலித் தூளையும், சர்க்கரையும் சேர்த்துக் கொதிக்க வைத்துப் பாகு போலச் செய்து தினம் காலை மாலைச் சாப்பிட்டால் காமாலை, குன்மம், அஜீரணம், இருமல் முதலியவைத் தீரும். கொடி எலுமிச்சைப் பழத்திற்கேற்ற ரசம், குணம். வீரியம் அனைத்தும் நெல்லிக்காய்க்கு உண்டு.

நெல்லி மரத்தின் இலைகளிலிருந்து எண்ணெய்த் தயாரிப்பர். இந்த எண்ணெய் கூந்தல் வளர் தைலங்களில் சேர்க்கப் படுகிறது. தவிர இலைகளைக் கொண்டு ஊறல் கஷாயம் செய்து கண்களை கழுவ கண் நோய்களை குணப்படுத்தும். இலைக் கொழுந்தை அரைத்து மோருடன் கலந்து கொடுக்க சீதபேதி குணமாகும்.

இதன் பட்டையை சூரணித்துத் தேனில் குழைத்து வாய்ப் புண்ணுக்குத் தடவலாம். அதிசாரப் பேதிக்கும் இப்பட்டைச் சூரணத்தை உள்ளுக்குக் கொடுக்கலாம்.

இதன் வேரினால் வாந்தி, அருசி, மலச்சிக்கல் இவைகள் போகும். பச்சை வேர்பட்டைச் சாற்றினோடு சிறிது தேனும் சேர்த்துச் சாப்பிட்டால் பிரமேகம் போகும். குன்மம், இருமல் முதலியவற்றைப்போக்க வேர்க்கஷாயம் சிறந்தது. வேரை உலர்த்தி,

இடித்து, சூரணித்து அத்துடன் மேல் தோல் போக்கிய எள்ளையும் சேர்த்துச் சாப்பிட மூளையின் நரம்புகளுக்கு பலமுண்டாக்கி ஞாபக சக்தியை விருத்தி செய்யும். இம்மரத்தினின்று பிசின் எடுக்கலாம். இப்பிசினை வைத்தியர்கள் சூரணங்களைக் குளிகைகளாக்கப் பயன் படுத்துவர்.

* * *

## நெல்லி

### (கருநெல்லி)

## Phyllantus reticulatus

### (N. O. Euphorbiaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves, bark and fruits*

*Constituents* : *Leaves and bark contain tannic acid and gum.*

*Action* : *Leaves and bark are Astringent, Diuretic and Alterative,*

Uses : This is a rejuvenator. This is black in colour and this blackness of the fruit is due to the chemical change in earth. Some sidha practitioners grow this plant with the help of marking nut. The marking nut is mashed well without handling it with fingers and river bed soil is added with this and it is filled and sealed in a earthern pot and burried. After six months the earthern pot is taken out and gooseberry plant is planted. This plant is said to exhibit many medicinal properties. The stem and more fruits of this plant is black in colour. This is used to treat bilious diseases. This also exhibits the medicinal properties of common gooseberry.

கருநெல்லியை காயச்சித்தி மூலிகையென்பர். அபூர்வமாக இயற்கையின் இரசாயன மாற்றங்களால் ஏற்படும் நிகழ்வுகளே இத்தகைய கருப்பு நிறத்துடன்கூடிய காய்களை தோற்றுவிக்கிறது. இதை சித்தர்கள் ஆய்ந்தெடுத்து அதன் மருத்துவ பயனை பலவாறாக பயன்படுத்திக் கொண்டதுடன் அதே இயற்கை இரசாயன மாற்றங்களை மண் கலவையில் ஏற்படுத்தி கரிய நிறங் கொண்ட இலை, காய், கனிகளைக் கொடுக்கக் கூடிய மரம், செடி, கொடிகளை உண்டாக்கினார்கள். எவ்வாறெனில் சேராங்

கொட்டையை கைப்படாமல் இடித்து அதன் எடைக்குச் சமமாக வண்டல் மண்ணைக் கலந்து, ஒரு மண் பாத்திரத்தில் இட்டு சீல் செய்து புதைத்து விடுவார்கள். ஆறு மாதங் கழித்து அதை எடுத்து தமக்கு வேண்டிய சிறிய அல்லது பெரிய மூலிகைச் செடிகளை அம்மண் தொட்டியில் நட்டுப் பயிராக்குவார்கள். இயற்கையாகயிருக்கும் நிறத்தைவிட இப்படி வளர்க்கப்பட்டால் அச்செடி கரியத்தண்டுகளுடனும், கரிய இலைக் காம்புகளுடனும் காணப்படுவதுடன் அதன் விதைகளும் கனியும், காயும் கூடக் கருப்பாகவே தென்படும். இம்முறையிலே வந்ததுதான் கருநெல்லி என்று சொல்லப்படுகின்றது.

இது பித்தாதிக்க நோய்களில் சிறப்பாக செயல்படுவது தவிர, பொதுவாக நெல்லியின் குணங்களே இதற்கும் உண்டு. ஆனால் வீரியம் அதிகம்.

* * *

## நெல்லி

**(சிறுநெல்லி)**

**See : Averrhoa acida**

**பார்க்க : அருநெல்லி**

* * *

## நேர்வாளம்

## Croton tiglium

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds and fixed oil from the seed*

*Constituents* : *Seeds contain a fatty fixed oll, tiglinic acid crotonic or quantenylic acid and croton oil. The oil extracted from croton seed is named a croton seed oil*

*Action* : *Seeds, leaves, bark and root all possess Drastic, Purgative properties. Seeds are powerful Drastic, Purgative and Vermifuge, in over doses*

*it is Acro-narcotic poison. Oil is a powerful Hydrogogue, Cathartic and externally a Vesicant producing irritation and inflammation. The activity of croton oil is Vesicant externally and Purgative internally. The drug is also a Stimulant.*

Uses : This is a small tree, the nut is similar to Castor seed. Leaves are bruised and soaked in water is purgative. The kernel of the nut is used in medicinal preparations as purgative. Plumule is present in the nut should be removed before using it in any medicinal preparations. Fresh nut is greenish white in colour. Old ones should not be used. Since they may exhibit poisonous properties. Fresh nuts are bitter in taste. This induces nausea and vomiting. It should be purified well before using it in medicines. The oil extracted from this is dirty white in colour. This is used in small quantities in purgative preparations. The seeds are administered only after purification and only in very minute doses as purgative in cases of patients having poisonous fever. The smoke of the kernel if inhaled give relief from asthma. Kernel is made into a paste with water and mixed with honey is used as an external application for boils. This should not be used by pregnant ladies. The juice of the kernels along with other ingredients are used in medicines prepared for constipation. This should not be used alone.

Oil expressed from the seed is diuretic. This cures intestinal disorders and dropsy. This is used externally to treat skin diseases, rheumatoid arthritis, nervous disorders, cold, body pain and regidity of joints. Mixed with cocoanut oil it is applied to treat rheumatoid arthritis and neck pain. Mixed with mustard oil it is used externally to cure phlegm, cough in children, rheumatism, arthritis and asthma.

நேர்வாளம் ஒரு சிறிய மரம். இதன் கொட்டை சற்றேறக்குறைய ஆமணக்கு கொட்டையைப்போல இருக்கும். கொட்டையை உடைத் தெடுத்தப் பருப்பு மருந்தாகப் பயன்படுகிறது. பருப்பின் நடுவில் இலை உண்டு. மிகவும் நஞ்சாகையால் இதனை நீக்கி மருந்து செய்ய பயன்படுத்தவேண்டும். புதிய பருப்பு, பச்சையும், வெள்ளையும் கலந்த நிறமாக இருக்கும். பழையப் பருப்பு நச்சுத்தன்மையுடையது.

ருசிக்க கசப்பும், கரகரப்பும் உள்ளதாயிருக்கும். இது வெகுட்டலையும், வாந்தியையும், பேதியையும் உண்டாக்குவதில் மிகக் கொடியது. ஆகவே வைத்தியர்கள் சுத்தி முறையை சரிவர அனுசரிக்காமல் உபயோகித்தால் அனேகக் கோளாறுகளையும், அபாயத்தையும் நேர்வாளம் உண்டுபண்ணும். ஆனால் சுத்தி செய்து மருந்தில் உபயோகித்தால் நல்ல குணமுண்டாகும். இதிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் பழுப்பு நிறமாயிருக்கும். இவ்வெண்ணெய் பேதி மருந்துகளில் மிகச் சிறிய அளவில் சேர்க்கப்படுகிறது.

நேர்வாளப் பருப்பைத் தண்ணீரில் அரைத்து தேனில் குழப்பி உடையாதக் கட்டிகளுக்கு மேலே தடவலாம். இது கர்ப்பிணிகளுக்கு உதவாது. இப்பருப்பின் சாரத்தை மற்றக் கடைச் சரக்குகளோடு சேர்த்து மலச்சிக்கல், பாண்டு முதலிய நோய்களுக்குக் கொடுப்பார்கள். இதை தனியாக எவ்வகையிலும் உபயோகிப்பது பெருந்தீங்கை விளைவிக்கும்.

* * *

## நொச்சி

## Vitex negundo

### (N. O. Verbenaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Root, fruit, flowers, leaves and bark*

*Constituents* : *Leaves contain a colourless essential oil. Fruits contain organic acid and traces of an alkaloid.*

*Action* : *Leaves are externally Antiparasitic and Discutient; internally Alterative, Aromatic, Bitter, Vermifuge and Anodyne. Root is Tonic, Febrifuge, Expectorant and Diuretic. Fruit is Nervine, Cephalic and Emmenagogue,*

Uses : This is a shrub. Branches, leaves and flowers are of medicinal use.If steam bath is taken by boiling the leaves in hot water, induces sweating and reduce the body temperature. Leaves are used as poultice to relieve head ache. The paste of the leaves could be used as an external application for liver disorders. The oil extracted from the leaves, if used can cure the swelling of the neck. The roasted leaves could

be used externally to reduce inflammation and oedema. Leaves along with the leaves of Lippia nodiflora, Morinda citrifolia are mixed and made into an infusion, this could be used in children to treat indigestion. Powdered flower mixed with rose water and sugar candy is used to check blood vomiting. Leaves along with pepper, garlic and cloves if chewed, controls wheezing. The roots are tonic, febrifuge and expectorant. The roots and leaves are made into a paste with rice water is used externally on wounds and ulcers. The leaves are used in washing the ulcers.

நொச்சி ஒரு குத்துச் செடி. கிளைக் கொம்புகள், இலைகள், பூக்கள் முதலியவை பெரும் மருத்துவப் பயனுடையன. வெந்நீரில் நொச்சி இலைத் தழைகளைப் போட்டு வேகவைத்து நீராவி பிடிக்க, வியர்வையுண்டாகி, சுரம் தணியும். தலைவலி, பீனசம் முதலியவை களுக்கு இவ்விலைத் தழைகளை தலையணையாகச் செய்து பயன் படுத்துவது வழக்கிலிருக்கிறது. இலையை அரைத்து, மண்ணீரல் வீக்கங்களுக்குப் பற்றிடலாம். இலைச்சாற்றால் எண்ணெய் செய்து தலையில் தேய்த்து முழுகிவர கழுத்து நெறிகட்டு போகும். இலையை வதக்கி ஒற்றடமிட வீக்கம், கீழ்வாயு முதலியனத் தீரும். நொச்சி, பொடுதலை, நுணா, முதலியனச் சேர்த்து குடிநீர் செய்து குழந்தைகளின் மாந்தத்திற்குக் கொடுக்க குணமாகும். பூவை உலர்த்திப் பொடித்து சிறிது பன்னீர், கற்கண்டு, அல்லது பிற துணை மருந்துகளுடன் சேர்த்துக் கொடுக்க இரத்த வாந்தியை நிறுத்தும். நொச்சி, மிளகு, பூண்டு, இலவங்கம் சேர்த்து சிறிதள வாய் மென்று தின்ன இரைப்பு நோயின் எழுச்சியடங்கும்.

இதன் வேர் பலவிருத்தியைத் தரும். சுரத்தைப் போக்கி, கோழையை அறுக்கும். வேரையும், இலையையும் அரிசி கஞ்சியி லரைத்து புண்களை ஆற்றவும் உபயோகிக்கலாம். பொதுவாக இவ்விலைச் சாற்றைக் கொண்டு புண்களைக் கழுவி மருந்திடுவது வழக்கம்.

* * *

## நொச்சி
### (கருநொச்சி)

## Gendarussa vulgaris
### (N. O. Acanthaceae)

*Habit* : *Small tree*

*Parts used* : *Leaves, bark, root and tender stalks.*

*Constituents* : *An alkaloid*

*Action* : *Bark is Emetic. Leaves are Antiperiodic, Alterative and Insecticide.*

Uses : This is used in calcination. Acute rheumatism, rheumatoid arthritis paralysis,sinusitis,migrane could be cured with this along with other ingredients. If this is used externally reduces oedema.

கருநொச்சி பற்பங்கள் செய்ய உதவும். கடும் வாத நோய்கள், சீல்வாதம், முகவாதம், நாசிரோகம், மண்டைக் குடைச்சல் முதலானவைகளுக்கு செய்யப்படும் மருந்துகளில் இது சேர்க்கப் படுகிறது. கால் வீக்கம் குறைக்க இதனை அரைத்து பற்றிடுவார்கள்.

* * *

## நொச்சி
### (நீர் நொச்சி)

## Vitex trifolia
### (N. O. Verbenaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and fruits*

*Constituents* : *Essential oil and an alkaloid*

*Action* : *Leaves are Bitter. Aromatic, Antirheumatic, Laxative, Diuretic, Anodyne and Demulcent. Fruit is Nervine, Cephalic and Emmenagogae.*

Uses : This is found grown on the river banks. Greenish colour oil is extracted from the root. This

is used as an external application to reduce inflammation. Leaves reduce the rigidity of joints, rheumatism and inflammation of the testicles. Powdered fruit if given cures intermittent fevers. Powdered ripened fruit gives relief in neuralgia, head ache and uterus disorders. Roasted leaves are applied to cure sprain and rheumatism.

நீர்நொச்சியை வாதப்பிடிப்பு, வாதவலி, விரைவீக்கம் முதலிய வற்றைக் குணப்படுத்தப் பயன்படுத்துவர். பெண்களுக்கு வெள்ளை விழுதலை இது போக்கும்.

* * *

## பசரைக் கீரை

## Portulaca meridiana

### (N. O. Portulacaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Leaves contain mucilage and potassium oxalate*

*Action* : *Leaves are Laxative, Stomachic, Diuretic, Refrigerant, Tonic, Aphrodisiac and Emollient.*

Uses : This gives relief in skin diseases. Leaves are diuretic and reduces the heat. This also exhibits the medicinal properties and uses of Bassela alba. But it is tastier than B. alba.

பசரைக் கீரை சரும நோய்க்கு உதவும். சிறுநீர் நன்கு வெளியாகும். தேகஉஷ்ணம் தீரும். பலகாரங்களில் கலந்து சாப்பிடும் கீரைகளில் இதுவும் ஒன்று. பசரைக் கீரையின் குணமும், பசளைக் கீரையின் குணமும் பொதுவாக ஒன்று எனினும் பசரைக் கீரையே சுவையில் சிறந்தது.

* * *

## பசளை

(வெள்ளை பசளை)

## Basella alba

**(N. O. Chenopodiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole herb*

*Constituents* : *Plant contains mucilage and iron*

*Action* : *Leaves are Diuretic, Demulcent and Cooling.*

Uses : Herb is used in green vegetable. This increases the urine flow and decreases the internal heat. There are different kinds in it. But they exhibit similar medicinal properties and uses.

வெள்ளை பசளை சமைத்து உண்ணப் பயன்படுகிறது. இது மூத்திரத்தை அதிகரித்து உள்சூட்டைக் குறைக்கிறது. இதில் பல வகைகள் இருந்தாலும் அனைத்தின் மருத்துவ குணங்களும், பயன் களும் ஒன்றேயாகும்.

* * *

## பசளை

(குத்து பசளை)

## Basella cordifolia

**(N. O. Chenopodiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Plant contains mucilage and iron*

*Action* : *Leaves are Diuretic, Demulcent and Cooling.*

Uses : This is considered to be superior among all greens. Tender stem and tender leaves exhibits medicinal properties. Fresh uncooked plant is considered more nutritious than the cooked ones. Vitamin 'A' and 'C' is abundant in this plant. This gives immunity and resistance to body. Therefore

if it is taken regularly keeps the body healthy. This improves haemoglobin contents of the blood and gives strength. If it is consumed regularly it cures anuresis, leucorrrhoea, tastelessness, nausea and vomiting. It is also a laxative.Abscesses and other inflammation could be treated wilh this if the leaves are used as external application. It is used as poultice to cure headache. Paste of the tender stem is used for prickly heat and burning of the heads and feet. Paste of the seeds along with leaves are used for burns and other minor skin ailments. If it is added in a food, it reduces bilious disorders. Blood pressure could be controlled with this. Heart burns also could be treated with this as it exhibits anti-acidic property. Obesity could be controlled if the juice of the leaves are taken daily. Leaf juice also can be used to eradicate pimples.

கீரை இனத்தில் மிகவும் சிறந்த கீரையாக பசளை இனத்தை கூறுவர்.

குத்துப் பசளையை சிறுபசளை, பசறை என்றும் கூறுவர். இதன் இளம்தண்டுகளும், இலைகளும் மிகச்சிறந்த கீரை உணவாகும். இதன் சமைத்த கீரையைவிடப் பச்சைக் கீரையானது விரைவாக உடலால் சீரணிக்கப்படுகிறது. இக்கீரையில் வைட்டமின் 'A'யும் 'C'யும் அதிக அளவு உள்ளது.

இக்கீரை நோய் எதிர்ப்பு சக்தி பெற்றது. இதனை அடிக்கடி உண்பதனால் நோய்கள் நம்மை அணுகாது. நல்ல இரத்தத்தை உண்டாக்கும். உடலுக்குப் பலம் தரும். மூத்திரக்கடுப்பு நீரடைப்பு, ஒழுக்குவெள்ளை, ருசியின்மை, வாந்தி ஆகியவற்றை நீக்குவதுடன் மலத்தை இளக்கும்.

இலையை நன்றாக சிதைத்து பற்றிட கொப்புளம், கழலை, வீக்கம் ஆகியவை தீரும். இதையே தலைவலிக்கு நெற்றியில் பற்றிட உடனே குணமாகும். இதன் இளம் தண்டை அரைத்து வேர்க்குரு, கைகால் எரிச்சல் முதலிய நோய்களுக்குப் போடலாம். இலையையும் விதையையும் சேர்த்தரைத்து பற்றிட தீப்புண், வெண்ணீர் வேக்காட்டுப்புண், சரும நோய்கள் ஆகியவை தீரும்.

இதை உணவில் சேர்ப்பதனால் பித்தத்தை குறைக்கும், இரத்த அழுத்த நோயை குணப்படுத்தும். அமில மிகுதியால் ஏற்படும் நெஞ்சுக்கரிப்பை போக்கும்.

இரைப்பையில் தோன்றும் கீழ்முளைப்புண், மலச்சிக்கல், தொந்தி, உள்சதை முதலிய நோய்களுக்கும் இக்கீரையின் சாறு பயன் தரும். பசலை ரசம் முகப் பருவை அகற்றும், மூட்டுக்கால் வாதத்தைப் போக்கும். முகப்பருக்களை குறைக்கும். நரம்பு வலியை நீக்கவல்லது.

* * *

## பசளை

(கொடிப்பசளை)

## Basella rubra

**(N. O. Chenopodiaceae)**

*Habit* : *Twiner*

*Parts used* : *Tender leaves and stem*

*Action* : *Similar to Basella alba.*

Uses : Tender leaves and stem could be taken raw. It exhibits all the medicinal properties of B. cordifolia. This plant reduces thirstyness and removes constipation in pregnant ladies. If this leaves are soaked in water, the water becomes viscous. This could be used as an application on the head and forehead which induces sleep. Heated leaves could be used as an external application for oedema. Pyogenous ulcers could be treated with this paste of the leaves. If this is consumed with green grams it reduces biliousness, gonorrhoea skin diseases, dysentery etc. The juice of the stem is given to small children for better growth. Sugar candy with juice of the leaves removes phlegm and cold. This plant is very nutritious.

இதற்கு கொடிப்பசறை, கொடியலை போன்ற பெயர்களும் உண்டு. இதன் இளந்தண்டுகளையும், கீரைகளையும் பச்சையாக உண்ணலாம். இக்கீரையில் உடலுக்கு தேவையான எல்லா சத்துக் களும் உள்ளது.

நோய்தடுப்பு சக்தி உள்ள இக்கீரையில் மூத்திரதடுப்பு, நீர் அடைப்பு, வெள்ளை மற்றும் ருசியின்மை, வாந்தி ஆகிய நோய்கள் நீங்கும்.

இக்கீரை தாகத்தையும், சூட்டையும் தணிக்கும். கர்ப்பமுற்ற பெண்களுக்கு மலச்சிக்கல் வராமல் தடுக்கும். இக்கீரையை நீரிட்டு அலச ஒருவிதமான குழகுழப்பான பசை உண்டாகும். இதை நெற்றியில் தடவ தலைவலி தீருவதுடன் உறக்கம் வரும்.

இலையை வதக்கி வீக்கம், கட்டி போன்றவைகளுக்கு வைத்துக் கட்டலாம். சீழ்ப்பிடித்த புண்களை ஆற்றவும் சீழை வெளியேற்றவும் இதை அரைத்துப் பற்று போட வேண்டும்.

இதனை பாசிப்பருப்புடன் உண்ண அதிகப்பித்தம், நீர்த் தாரை சம்பந்தப்பட்ட வெட்டை நோய்கள், மேகம், தோல் நோய்கள், சீதபேதி ஆகியவை குணமாகும். சிறு குழந்தைகளுக்கு இதன் தண்டின் சாற்றைக் கொடுக்க அவர்களின் சீரண வளர்ச்சிக்குப் பேருதவியாக இருக்கும். இலைச்சாற்றுடன் கற்கண்டு சேர்த்துக் கொடுக்க குழந்தைகளுக்கு உண்டாகும் சளி, நீர்க்கோவை போன்ற நோய்கள் தீரும்.

இக்கீரை தாதுவை கெட்டிப்படுத்தி ஆண் பெண் உறவில் நிறைவை உண்டாக்கும்.

## பசளை

### (சிலோன் பசளை)

## Basella alba

### (N. O. Chenopodiaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Leaves are rich in iron and vitamins*

*Action* : *Leaves are Diuretic, Demulcent and Cooling.*

Uses : Rheumatism, bilious disorders, phlegmatic disorders could be cured with this. This is very good for eyes. This along with pulses if included in our regular food, cures dysuria, anuresis, burning mincturition etc. It is laxative. This also cure the ulcers found in anus. This cures the heart burn.

சிலோன் பசலை பசலை வகைகளில் ஒன்று. சிறந்த கீரையாகக் கருதப்படும் இது திரி தோஷங்களை நீக்கி கண்ணுக்கு அதிக நன்மைகளைச் செய்யக்கூடியது. இக்கீரையுடன் பருப்பு சேர்த்து கடைந்து அன்னத்துடன் உண்ண உடலின் வெப்பம் தணிந்து உடல்

பலம் பெறுவதுடன் நீர்ச்சுருக்கு, நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு இவைகளை நீக்கும். மலத்தை இளக்கி மலச்சிக்கலை தவிர்க்கும். மேலும் ஆசன வாயில் ஏற்படும் புண், கடுப்பு, எரிச்சல் போன்றவற்றைத் தடுக்க வல்லது.

வயிற்றில் அமிலம் மிகுதியால் ஏற்படும் நெஞ்சுக்கரிப்பு முதலியவற்றை நீக்க இப்பசலைக் கீரையின் ரசத்தைப் பருக வேண்டும்.

* * *

## பச்சிலை

**(பசும்பிடி, பச்சோலி, மட்டிலை)**

## Pogostemon lugeanus

**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *An aromatic oil is extracted from the leaves*

*Action* : *Stimulant, Expectorant, Refrigerant and Aromatic.*

Uses : The leaves are aromatic. Because of its aromatic nature it is used in hair oils. Zoedary, yellow zoedary, Indian valerian, seeds of Emblica vibes, Poopy seeds, Baluchi seeds, White zoedary and nut grass these are powered along with this leaves and mixed with oil. This mixture is used on the hair to eradicate lice and dandruffs. Plant could be used alone also to bath which will give relief in eczema, itching and other skin ailments.

''பச்சிலைக்குக் கந்தம் பரிமளிக்கும் அவ்விலையோ வெச்சைக் கிரந்திதனை மெய்ப்புழுவைச் சொச்சமற ஓட்டும்.''

இது ஒரு மணமுள்ள இலை. இதனை வாசனைக்காக முடி வளர்ப்பு தைலங்களில் சேர்ப்பார்கள். பச்சிலை, பூலாங் கிழங்கு, கஸ்தூரி மஞ்சள், சடாமாஞ்சில், வாய்விடங்கம், கசகசா, கார்போக அரிசி, சந்தனம், கிச்சிலிக்கிழங்கு, கோரைக் கிழங்கு,

இவைகளைப் பொடித்து ஒன்றாய் கலந்து, எண்ணெயில் குழைத்து தலை முழுகி வர தலையிலுள்ள, ஈறு பேன் முதலியவை போகும். பொடியைத் தனியாகத் தேய்த்துக் குளித்துவர சொறி, நமைச்சல், கற்றாழை நாற்றம் போகும்.

* * *

## பட்டாணி

## Pisum sativum

### (N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

*Constituents* : *An oil is extracted from the seeds. This contains an alkalloid 'Trigonelline'*

*Action* : *Seeds are Sweet, Farinaceous and Edible. Pulse is Nutritious, Refrigerant and Appetizer. Its soup is Digestive, Refrigerant and Astringent.*

Uses : This contains proteins in abudance along with Vitamin 'B'. The seeds give strength to heart and lungs. But if it is consumed in excess it may produce indigestion and intestinal gas problems. This could be used raw as well as roasted. It improves fertility in men

பட்டாணி அதிக புரதச்சத்தும், வைட்டமின் "B" சத்தும் உடைய ஒரு பருப்பு. இதன் விதைக் கடலையைப் போல இருக்கும். இது நுரையீரலுக்கும் இருதயத்திற்கும் பலத்தைக் கொடுக்கும். அதிகமாக உண்ணில் செரியாமை, குடல்வலி ஆகியவற்றை ஏற்படுத்துவதுடன் வாயு கோளாறுகளை ஏற்படுத்தும். இதை பச்சையாகவும் வறுத்தும் உபயோகிப்பதுண்டு. சத்துள்ள உணவான இது கர்ப்பத்தைத் தாமதப்படுத்தி குடும்பத்திட்டத்திற்குதவும். ஆண் மலடை நீக்கும்.

* * *

# பண்ணிமோந்தான் கிழங்கு
**(சிங்காரக்கொட்டை)**

## Trapa bispinosa
**(N. O. Onagraceae)**

*Habit* : *Aquatic herb*

*Parts used* : *Fruit*

*Constituents* : *Fruit contains manganeses and starch*

*Action* : *Fruit is Nutritive, Sweet, Tonic and Cooling.*

Uses : The fruits are spiny and the arrangements of them on the fruit depends on the place it grows. Fruit when it is fresh the pericarp is thin and soft, but when it is ripened it is hard. The kernel of the fruit is sweet. Gonorrhoea and thirstyness could be cured with this. The tender stem is used as an external application on the cancerous ulcers. The juice of the tender stem could be used as eye drops for eye disorders. The ripened fruit is used as flour by smashing it and this flour could be used to treat diarrhoea. This flour with milk is consumed every day it gives strength. Along with 25 gms of this kernel, 15 gms of black cum in 35 gms of sugar to be mixed and the mixture is divided into 7 parts. Each part is consumed every day for 7 days to cure menorrhagia.

குளங்களில் முளைக்கும் ஒருவகைப் பூண்டு. இதன் காய்கள் முட்களுடனிருக்கும். இடத்திற்கு தகுந்தாற்போல இந்த முட்களின் எண்ணிக்கை மாறுபடும். பருப்பின் மேலோடு பச்சையாக இருக்கும் போது மெல்லியதாகவும் முதிர்ந்த போது கடினமாகவும் இருக்கும். பருப்பு மிக இனிப்புள்ளது. வெட்டை, நீர்வேட்கை முதலியவற்றை நீக்கி உடலுக்கு வன்மையையும், ஆண்மையும் தரும். இதன் இளம் தண்டை புற்றுக்களின் மீது வைத்துக் கட்ட அவை குணப்படும்.

இளம் தண்டின் சாறெடுத்து கண் நோய்களுக்கு கண்ணில் விடலாம். முற்றினப் பருப்பை வறுத்து, இடித்து, மாவாக்கி உணவாக அருந்துவார்கள். இம்மாவினால் கழிச்சல், உடலெரிச்சல் ஆகியவை நீங்கும். இம்மாவோடு பால் சேர்த்துச் சாப்பிட, உடல் வன்மையைப் பெருக்கும். இப்பருப்பு 25 கிராமும், கருஞ்சீரகம் 15 கிராமும், சர்க்கரை 35 கிராமும் சேர்த்துக்

கலந்து அரைத்து ஏழு பாகமாக்கி, நாளொன்றுக்கு ஒரு பாகம் வீதம் ஏழு நாட்கள் கொடுக்க பெரும்பாடு நீங்கும்.

* * *

## பப்புர புளி

**See : Adansonia digitata**

**பார்க்க : ஆனை புளியமரம்**

* * *

## பப்பரமுள்ளி

**See : Solanum indicum**

**பார்க்க : கரிமுள்ளி**

* * *

## பப்பாளி

Carica papaya

**(N. O. Caricaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit, milky juice, leaves and seeds*

*Constituents* : *The milky juice contains papain. This is similar to pepsin. Dry fruit contains soda, pottash and phosporic acid. Leaves contain carpine and carposide.*

*Action* : *Pepain is cabable of Digesting fresh blood fibrane in 4 to 5 hours at the temperature of 50° C. Juice of the green fruit is Emmenagogue and Rubefacient. Ripe fruit is Digestive and Alterative. Green fruit is Laxative and Diuretic.*

Uses : The tree is without branches and fruit secretes a milky juice. Leaves soaked in hotwater could be used as an external application for nervous debility and neuritis. The leaves also could be used by heating it in fire. The mashed

leaves could be used externally for inflammations and boils. The leaves could be used externally to cure ulcers. The leaves roasted in neem oil is used as an external application for all types of pain.

Obesity also could be reduced if this fruit is consumed daily along with green gram. Urinary obstruction could be removed if this fruit is consumed regularly for 40 days. This improves eye sight. Tooth ache, worm infection, nervous debility are also cured with this. Tender leaves can cure chronic ulcers, boils and inflammation of the heals.

The fruit is an excellant vermicide. This improves digestive power and acts as laxative. Honey along with the fruit cures nervous debility, neuritis and improves mental alertness. Liver which is affected due to jauudice and malaria could be rejuvinated with this fruit. If this fruit is consumed along with Eugenia jambolana every day morning and evening it cures diabetes. If this fruit is consumed in small quantity regulary, cures leucoderma. If this fruit with honey is consumed by lactating mothers, it improves milk secretion. The latex secreted from the fruit along with borax and water to be made a mixture. This mixture could be used externally to the warts and prickly heat. To treat eczema a mixture is prepared from this latex by adding alum with it. The fruit is edible and laxative. If it is consumed it cures stomach ache. The fruit is used in cooking also. The fruit is a galactagogue. Papain is taken from this fruit. Carpain is extracted from the leaves. Papain induces the protein digestion, therefore the fruit is used in cooking meat. The fruit exhibits abortive property.

பப்பாளி இலையை வெந்நீரில் போட்டெடுத்து நரம்புத் தளர்ச்சி, நரம்புவலி முதலியவைகளுக்கு ஒற்றிடமிட குணமாகும். அல்லது நெருப்பில் வாட்டிவைத்தும் கட்டலாம். இலையை நசுக்கி வீக்கம், கட்டி, முதலியவைகளுக்குக் கட்ட குணப்படும்.

இக்காயிலிருந்து வடியும் பாலுடன் வெண்காரமும், நீரும் சேர்த்துக் குழப்பி மைக்குரு (Warts), வியர்க்குரு போன்ற தோலில் எழும்பும் குருவிற்குத் தடவ அவை விழுந்துவிடும்.

இப்பாலுடன் சிறிது படிகாரம் சேர்த்துக் கரப்பானுக்குப் போட அவை குணமாகும்.

பழத்தை தினமும் புசித்து வந்தால் மலச்சிக்கல் தீருவதுடன் வயிற்றுவலியும் போகும். காயை தோல் நீக்கி சமையல் செய்து சாப்பிடுவது சிலர் வழக்கம். இது முலைப்பாலைப்பெருக்கும். பப்பாளி பாலிலிருந்து ''பெய்பெயின்'' எடுக்கப் படுகிறது. இதன் இலைகளி லிருந்து ''கார்பபெயின்'' என்னும் சத்தும் பிரிக்கப் படுகிறது. இச்சத்து ஒரு புரதச் செரிப்பியாகும். ஆகையினால் மாமிசம் சமைக்கும் போது சீக்கிரம் வேக வைப்பதற்கு பப்பாளிக்காய் அல்லது பூவை சமையலில் சேர்ப்பர். இதன் காயைச் சாப்பிட்டால் கர்ப்பம் கலையும்.

பப்பாளிப் பழம் ஒரு சிறந்த கிருமிநாசினி. பப்பாளிப்பழம் செரிமானத்திறனை அதிகப்படுத்தி மலத்தை இளக்கும். பப்பாளிப் பழத்தில் தேன் கலந்து சாப்பிட நரம்புத்தளர்ச்சி, நரம்புவலி, ஞாபக சக்திக் குறைவு முதலியவை நீங்கும். மலேரியா, காமாலை போன்ற நோய்களால் பாதிக்கப்பட்டு கல்லீரல் வீங்கிப் போகின்ற வர்கள் பப்பாளிப்பழம் சாப்பிட குணமாகும்.

நீரிழிவு நோய் குணமாக பப்பாளியை நாவல் பழத்துடன் காலையும் மாலையும் தொடர்ந்து சாப்பிட குணமாகும். தினமும் சிறிதளவு பப்பாளிப்பழத்தை சாப்பிட்டுவர ஆரம்பகால வெண் குஷ்டத்தைப் போக்க முடியும்.

பப்பாளிப்பாலை சிரங்கு, சிறுகட்டிகள், தேள்கடி இவைகளுக்கு தடவ குணம் தரும். பப்பாளி பாலுடன் தேன் கலந்து பிள்ளை பெற்ற பெண்கள் சாப்பிட தடையின்றி பால் சுரக்கும். பப்பாளி இலையை அரைத்துப் புண்கள் மீது போட விரைவில் ஆறும்.

பப்பாளி இலைக் கொழுந்து ஆறாத ரணங்கள், கட்டிகள், புண் புரைகளை ஆற்றுவதுடன் குதிகால் வீக்கத்தை மறையச் செய்யும். பப்பாளி இலையை வேப்பெண்ணெய்யில் வதக்கி ஒற்றடம் கொடுக்க உடல் வலி தீரும்.

உடல் பருமனை குறைக்க தினம் பப்பாளிக்காயை சிறுபய றுடன் சமைத்து சாப்பிட வேண்டும்.

சிறுநீர் கல்லடைப்பைக் கரைக்க தொடர்ந்து 4 தினங்கள் பப்பாளிப் பழத்தை சாப்பிட்டு வந்தால் பின்பு நீரடைப்பே வராது. இதனால் கண்பார்வை பலமடைவதுடன், மாலைக்கண் நோய் குண மாகும். மேலும் பப்பாளியினால் பல் நோய்கள், மலக்குடல் பூச்சிகள், நரம்புத் தளர்ச்சி, மண்டைக் கரப்பான் முதலியவை நீங்கும். உடல் பலம் பெறும்.

* * *

## பம்பந்தரா

**See : Glinus oppositifolius**

பார்க்க : துரா

* * *

## பயறு

**(பச்சைப் பயறு)**

## Phaseolus mungo

**(N. O. Leguminosae)**

| | | |
|---|---|---|
| ***Habit*** | : | *Herb* |
| ***Parts used*** | : | *Seeds and tender parts* |
| ***Constituents*** | : | *Seeds contain albuminoids and starch* |
| ***Action*** | : | *Seeds are Nutritious. In large quantities it is an* ***Aperient.*** |

Uses : This is easily digested. If taken as a gruel it cools eyes and will brighten eye sight, but if it is consumed in large quantity it produces intestinal gas.

பச்சைப்பயறு தானிய வகையைச் சேர்ந்தது. புன்செய் நிலங்களில் விளையும் இதில் அனேக வகையுண்டு. அவையாவன: சிறுபயறு, நரிபயறு, காராமணி பயறு, சடைப்பயறு, மின்னிப்பயறு, மொச்சைப்பயறு, பயற்றங்காய் பயறு. இவை தவிர சிலவகை காட்டுப்பயறு வகைகளும் உள்ளன. இவற்றுள் பச்சைப்பயறு சிறந்த உணவு. எளிதில் ஜீரணமாகும். இதைக் கஞ்சி வைத்துச் சாப்பிட்டால் கண்ணுக்குத் தெளிவைத் தரும். அதிகம் சாப்பிட்டால் வாயுவையுண்டாக்கும்.

* * *

## பயறு

(நரிப்பயறு, பனிப்பயறு)

## Phaseolus trilobus

(N. O. Leguminosae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds and tender parts*

*Constituents* : *Rich in proteins*

*Action* : *Leaves are Sedative, Cooling, Antibilious and Tonic. Seeds are Nutritious.*

Uses : This cures phlegmatic diseases, gonorrhoea, eczema etc, but this enhances intestinal gas and bilious disorders. The leaves could be cooked. Parts of the whole plant mixed in milk cures gonorrhoea. Boiled fruit added with sugar candy and milk cures phlegmatic disorders. Seeds are edible.

நரிப்பயறு ' கபம், கோழை, வெள்ளை நோய், கரப்பான் நீக்கும். வாயுவையும், பித்தத்தையும் அதிகரிக்கும். இதன் இலையை சமைத்துத் தின்பது நாட்டுவழக்கம். செடியை அரைத்து பாலில் கலக்கிக் குடிக்க வெட்டை நீங்கும்.

காயை வேகவைத்துக் கற்கண்டுச் சேர்த்து பாலில் கலக்கிக் குடிக்கக் கபத்தைப் போக்கும். பருப்பை சமைத்துண்ணலாம்.

* * *

## பயறு

(நன்னி பயறு, துலுக்கப்பயறு)

## Phaseolus aconitifolius

(N. O. Leguminosae)

*Habit* : *Herb*

*Parts used* : *Root and seeds*

*Constituents* : *Albuminoids and carbohydrates*

*Action* : *Root is Narcotic. Seeds are Nutritious.*

Uses : This exhibits all properties of P. trilobus.
நரிப்பயறுவின் குணங்களே இதற்கும் பொருந்தும்.

* * *

## பயறு
(காட்டுப் பயறு)

## Phaseolus adenanthus
**(N. O. Leguminosae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds and Leaves*

Uses : Decoction is used in bowel complaints.

நன்னிப்பயறுவின் குணங்களே இதற்கும் பொருந்தும்.

* * *

## பயற்றங்காய்

**Sae : Vigna catiang**

பார்க்க : காராமணி

* * *

## பரங்கிக்காய்
(மஞ்சள் பூசனி)

**See : Cucurbita pepo**

* * *

# பரங்கிப்பட்டை
### (பரங்கி சக்கை)

## Smilax chinensis
### (N. O. Liliaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Root*

*Constituents* : *Root contains fat, saponin, gum and starch*

*Action* : *Root is Depurative, Diaphoretic, Stimulant, Alterative, Antisyphilitic, Sudorific, Demulcent, Tonic and Aphrodisiac.*

Uses : Powdered bark in infusion cures thirstyness, ulcers, carbuncle, diabetes, poisonous bites, fistula, paralysis, vomiting etc. The powder of the bark if consumed it cures eczema, ulcers, syphilis, indigestion, diarrhoea, flatulance etc. Along with this bark, 8½ gms. of following things are taken celeary, Indian aptees, nutmug, mace, cloves, dried ginger, pepper, goose berry, baleric myrobalan, myrobalan. These things are powdered and mixed with milk. This mixture is then roasted in ghee for 15 minutes. If this mixture is consumed daily twice for 40 days, it cures herpes, ulcers, scrofula, rheumatism, gonorrhoea and other skin disorders.

பரங்கிப் பட்டையை பொடி செய்து குடிநீரிட்டுக் குடித்து வர நீர் வேட்கை, புண், பிளவை, நீரிழிவு, கடிவிடம், சிரங்கு, மூல முளை, முடக்குவாதம், வாந்தி ஆகியவை நீங்கும். ஆண்மை உண்டாகும்.

பரங்கிப் பட்டையைச் சூரணம் செய்துச் சாப்பிட புண், கரப்பான், சூலை, வெட்டை, மந்தம், அதிக கழிச்சல், கிராணி, உப்புசம்,வயிற்றிரைச்சல் தீரும்.பரங்கிப்பட்டை,ஓமம்,அதிவிடயம்,குரோசானி, ஓமம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, சுக்கு, மிளகு, திரிபலை இலை வகைக்கு 8½ கிராம் பொடி செய்து, பால் தளர விட்டுப் பிசைந்து, நெய்விட்டுக் கிளறி, அடுப்பில் வைத்து 15 நிமிடம் வெந்த பின், மெழுகுப் பதத்தில் கிண்டி, 40 நாள் சென்ற பின் தினம் இருவேளை, 40 நாள் உட்கொள்ள கிரந்தி,புண், சூலை, கண்டமாலை, வளிநோய், வெள்ளை கொருக்கு, சரும நோய்களும் நீங்கும்.

* * *

# பருத்தி

## Gossypium herbaceum

### (N. O. Malvaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, terminal buds, flowers and seeds*

*Constituents* : *Querdetin, choline and salicylic acid etc*

*Action* : *Seeds are Demulcent, Laxative, Aphrodisiac and Expectorant. Root and bark are Galactagogue and Emmenagogue.*

Uses : There are three types in this. They are herb, or shrub or tree. The cotton is used in manufacturing dropses. Other parts of this plant exhibits medicinal properties. Leaves and buds (10gms) are made into a paste with 80ml. of cow's milk if consumed cures oedema and ulcers. 25 gms of ripened leaf juice mixed with cow's milk is an ideal prepara-tion for dysentery and piles. The paste of the leaves are used externally for boils. Leaves are made into a paste with mustard is used for scorpion sting to reduce the pain. The sharbat made out the flower checks dysentery. The paste of the flower is used on burns. Thorn apple (Datura alba) poison is checked with the help of this powder and tender fruit. Powdered seeds are easily digested and nutritious. The seed oil relieves the phlegm and acts as laxative. It improves health. Kernel of the seed cures cough and relieves chest con-jestion. The decoction of the root is diuretic, so it cures anuresis and obstruction in urinary path. The gum of the plant is diuretic. For chicken pox patients this could be used internally and externally also.

பருத்தி ஓர் பஞ்சுச் செடி. இதில் 2 இனங்களுண்டு. ஒன்று செடியாகப் படரும், மற்றொன்று சிறிது உயரமாக வளரும், இன்னொன்று மரமாக உயர்ந்து வளரும். இதுதான் இலவமரம் என்று பெயர் பெறும். இதில், செம்பருத்தி, கொங்கிலவு, இலவு என சில இனங்களும் உண்டு.

இதன் பஞ்சு துணி, உடைகள் செய்வதற்குப் பயன்பட்டாலும் மற்ற பாகங்கள் வைத்தியத்திற்கு மிக உபயோகமாகும்.

''பருத்தியிலை மொக்கிரண்டைப் பாலிலரைத் துண்ண
வருத்துகின்ற மேகமெல்லாம் மாறும்—பருத்த
விரத்த பித்தத் தோடு விரணவீக் கம்போம்
அரத்தவிதழ் மாதே! யறை''

இலை அல்லது மொக்கை ஒரு பலம் எடுத்து அரைத்து 30 மில்லி பசும்பாலில் கரைத்துக் குடித்தால் வெள்ளை நோயும், இரத்த அழல் நோயும், புண், வீக்கம் முதலியனவும் போகும். 25 கிராம் பருத்தியிலைச் சாற்றைப் பசும்பாலில் கலந்து சீதக் கழிச்சல், மூலம் இவைகளுக்குக் கொடுக்கலாம்.

இலையை அரைத்துக் கட்டிகளுக்கு வைத்துக் கட்ட சீக்கிரம் பழுக்கும். கடுகுடன் அரைத்து தேள்கடி வாயில் பற்றிட வலி குறைந்து போகும். பூவை மணப்பாகு செய்துக் கொடுக்க கழிச்சல்கள் போகும். பூவையரைத்து தீக் கொப்புளம், சுடுநீர்க் கொப்புளம் இவைகளுக்குப் பற்றிட எரிச்சல்கள் அடங்கும். ஊமத்தை நஞ்சைக் குடித்தவர்களுக்கு இதன் பூவையும், பிஞ்சையும், குடிநீரிட்டுக் கொடுத்தால் நஞ்சு முறியும்.

பருத்திக் கொட்டையிலிருந்து அரைத்து எடுக்கும் மாவு மிக்கச் சத்துள்ளதாகவும், எளிதில் ஜீரணிக்கக்கூடியதாகவும், உடம்பிற்கு புஷ்டியைக் கொடுக்கக்கூடியதாகவும் இருப்பது பருத்தியின் சிறப்பு அம்சமாகும்.

இதன் எண்ணெய் கபத்தைக் கண்டித்து மலத்தை இளக்கும். அன்றியும் தாது விருத்தி, இந்திரியக்கட்டு இவைகளுக்குச் சிறந்தது. விதைப்பருப்பு சூட்டிருமல், மார்ச்சளி இவைகளை நீக்கும்.

இதன் வேர்க்கஷாயம் நீரைப் போக்கும் குணம் வாய்ந்ததால் நம் நாட்டு வைத்தியர்கள் நீரடைப்பு, கல்லடைப்புகளுக்கும் கொடுப்பார்கள்.

பருத்திச் செடியின் பிசின் நீரைப் பிரிக்கும். அம்மை வைசூரிக்கு இதை உள்ளுக்குக் கொடுப்பதுண்டு. மேலுக்கும் தடவலாம்.

* * *

## பருத்தி
### (செம்பருத்தி)

**See : Gossypium arboreum**

* * *

## பருத்தி

**(வேலி பருத்தி)**

**See : Daemia extensa**

**பார்க்க : உத்தாமணி**

* * *

## பருத்தி

**(நீர்ப்பருத்தி, அட்டுப்பருத்தி)**

### Hibiscus tiliaceus

**(N. O. Malvaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Root and the whole herb*

*Action* : *Root is Anti-rheumatic and Febrifuge.*

Uses : Root is used as febrifuge. Juice of the leaves are used as ear drops to cure ear ache.

நீர்ப்பருத்தி பட்டையும், இலையும் ஆறாத ரணம் மற்றும் புண்களையும் ஆற்றும். இலைச் சாற்றைக் காது வலிக்குப் பயன் படுத்துவர். மற்ற பருத்தியின் குணங்கள் இதற்கும் பொருந்தும்.

* * *

## பலா

### Artocarpus integrifolia

**(N. O. Urticaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit, seeds leaves and root*

*Constituents* : *Fruit contains carbohydrates and albuminoids. Wood contains morin and cyanomac lurin. Seeds contain starch.*

*Action* : *Ripe fruit is Demulcent, Nutritive and Laxative. Unripe fruit is Astringent. Seeds, latex and root are Astringent.*

Uses : The leaves, fruits, seeds and roots are of medicinal value. Latex is used in treating night blindness. Vinegar mixed with this latex is used in reducing oedema. Paste of the tender leaves are used externaly for eczema. Enlargement of the liver and dyspepsia could be treated with the leaves of this tree. Tender fruit if consumed it cures thirstyness and fatigue. It increases semen secretion. The fruit decreases the apetite and increases the intestinal gas formation. Wheezing, cough and chest conjestion are produced by this fruit, but it increases the sexual vitality in men. Seeds of the fruit induces indigestion and constipation. The infusion of the root is anti-dysenteric. Paste of the root is used externally on ulcers and eczema. Juice of the root with pulp of the fruit is made into a paste and this paste could be used externally to cure summer boils and insect bites.

பலா ஒரு மரமாகும். இதில் ஆசினிப்பலா, கடலைப்பலா, வருக்கை பலா என சில வகைகளுண்டு. இதன் இலை, காய், பழம், விதை, பால், வேர் அனைத்தும் மருத்துவக் குணமுடையன. இதன் காய்கள் அண்ட வடிவாயும், முள்ளு முள்ளாயும் இருக்கும்.

இதன் இலையிலிருந்து பால் வடியும். இப்பாலுடன் வசம்பை பொடி செய்து சாப்பிட மாலைக் கண் நோய் நீங்கும். பாலும், காடியும் சேர்த்து வீக்கத்திற்குப் பூசுவதுண்டு. இலைக் கொழுந்தை அரைத்துச் சிரங்குகளுக்குப் பூசலாம்.

பலா இலையை உண்டால் பெருவயிறும், குன்ம நோயும் நீங்கும். கொழுந்திலையைச் சரும வியாதிக்கு வைத்துக் கட்டலாம்.

இதன் பிஞ்சையுண்டால் நீர்வேட்கையும் அழலையும் நீங்கும். சுக்கிலம் விருத்தியாகும்.

இதன் காய் பசித் தீயைக் கெடுத்து, வாயுவைப் பெருக்கும். கோழைக்கட்டு, இரைப்பு, இருமல் இவற்றை வருவிக்கும். ஆண்மையைத் தரும்.

பலாக்கொட்டையை உண்டால் மலச்சிக்கல், அஜீரணம் வரும்.

இதன் வேரைக் குடிநீரிட்டுக் கழிச்சலுக்குக் கொடுக்கலாம். வேரை அரைத்துச் சொறி சிரங்குகளுக்குப் பூச அவை போகும். வேர்ச்சாறும், காயின் சதையும், சர்க்கரையும் சேர்த்து பிளாஸ்திரி மாதிரி செய்து உடம்பில் படரும் அக்கிக்கும், வண்டுக்கடிக்கும் போடலாம்.

பலாப்பழம் கிடைக்கும் காலத்தில் சுளையை நெய் அல்லது தேனில் தொட்டு உண்டு பால் அருந்த உடல் வலுவடைவதுடன் மூளையும் பலப்படும். இதையே நாட்டுச் சர்க்கரையுடன் சாப்பிட சீரணம் எளிதில் ஆகும். களைப்பு நீங்கும். மேலும் உடல்வறட்சியும் இருமலும் தணியும்.

பலா இலையில் நாற்பது நாட்கள் உணவு உண்ண பெருவயிறு குன்மம் குணமாகும். இலையை அரைத்து புற்றுநோய்களுக்கு கட்டிவர அவை குணமாகும். பலாப்பிஞ்சை சிறிதளவு உண்ண தாகமும் சிறுநீர் போவதும் அடங்கும்.

* * *

## பலா
### (சீமைப்பலா, இலகுசம்)

## Artocarpus incisa
### (N. O. Urticaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves and fruit*

*Action* : *Similar to A. integrifolia.*

Uses : Tender leaves and tender fruits are used in treating architis (inflammation of the testicles).

இலகுசத்தின் இலைக் கொழுந்தும், பிஞ்சுக் காய்களும் விரைவாதத்தில் மருந்தாகப் பயன்படுகின்றன. மற்றபடி பலாவின் குணங்களே இதற்கு உண்டு.

* * *

## பலா
### (பேய்ப்பலா)

## Artocarpus hirsuta
### (N. O. Urticaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves and fruits.*

Uses : Tender leaves and fruits are used in medicinal preparations. Fruits are edible. Leaves are also used in bubos.

பேய்ப்பலாவின் இலைக் கொழுந்தும், பிஞ்சுக் காய்களும் விரைவாதத்திற்குப் பயன்படுவதுடன், பழங்கள் உண்ணத்தக்கவை.

* * *

## பலா
### (குட்டிப் பலா)

## Streblus asper
### (N. O. Urticaceae)

*Habit* : *Small tree*

*Parts used* : *Leaves, seeds, roots and bark*

*Constituents* : *Bitter substance. An oil is extracted from the seed*

*Action* : *Milky juice is Antiseptic, Astringent and Refrigerent.*

Uses : The leaves and latex of this small tree is of medicinal value. The resin of the leaves are removed, roasted in ghee and added with palmsugar and made a paste. This paste if consumed 2 gms thrice daily it checks dysentery. The cracks of the hands and heels would be cured with the latex of this tree.The bark of the tree is used to convert the poisonous medecine into ointment. These are only used as an external application. The curios made out of ivery could be polished well with the help of this leaves. In the system of unani the leaves are used to cure leucoderma.

குட்டிப்பலா ஒரு சிறிய மரம். இதன் இலை மிக வறட்சியுள்ளது. இதன் இலையும், பாலும் மருத்துவப் பயனுள்ளவை. இலையின் நரம்புகளைப் போக்கி பசுவின் நெய்யிலிட்டு, வறுத்து, பனங்கற்கண்டுக் கூட்டி அரைத்து, இரண்டு கிராம் வீதம், மூன்று வேளை சாப்பிட்டால் சீதகழிச்சல், இரத்தக் கழிச்சல் தீரும். கை கால்களில் காணும் வெடிப்பு மாற இம்மரத்தின் பாலை பாவிக்கலாம்.

இம்மரத்துப் பட்டையிலிருந்து தயாரிக்கப்படும் குழித்தைலத்தால் விஷமுள்ள மருந்துச் சரக்குகளை மெழுகாக்கலாம். இதை வெளிப்பூச்சாக மட்டும் உபயோகிக்க வேண்டும்.

இதன் இலையைக் கொண்டு யானைத் தந்தத்தால் செய்யப்படும் பொருள்களைத் தேய்த்து மெருகிடலாம். யூனானி வைத்தியர்கள் இதன் இலையை வெண் குஷ்டத்திற்கு மருந்தாகக் கொடுப்பார்கள்.

* * *

## பலாசு

(பலாசம், புரசம், முருக்கன்)

## Butea frondosa

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, flowers, bark and leaves*

*Constituents* : *Gum and bark contain kenotanic and galic acids. Seeds contain fat and albuminoids. Leaves contain a glucocide.*

*Action* : *Leaves are Astringent, Vulnerary, Aphrodisiac, Depuretive and Diuretic. Flowers are Diuretic, Depurative and Antirheumatic. Seeds are Laxative and Anthelmintic. Gum is Astringent and Nervine Tonic.*

Uses : This is used to treat rheumatism, phlegmatic dysentery, bilious disorder etc. Stomach ache, intestinal worm, dysentery, body pain also could be treated with this. This is an appetizer. Gum of the tree gives strength to joints and nerves. This increases thc semen secretion. Dissolved gum in water could be used as an application to treat throat infections. The seeds expel intestinal worms. It cures body ache, herpes, dyspepsia, flatulance, eczema etc. Infusion of the leaves cures stomach ache, dysentery etc. Paste of the leaves used externally on boils. It could be also used in cancers. The boiled flowers are used externally to

cure boils. For the inflammation of the testicles, the leaves are used externally after making it into a paste. Infusion of the flower added with potassium nitrate is a good diuretic. This also helps in regulating menstrual cycle. Powdered kernel mixed with honey if consumed thrice daily for three days expels intestinal worms, but at the fourth day castor oil should be taken internally to induce loose motion. Powdered seed mixed with lemon juice is used externally for ring worm. The extract of the bark and extract of the ginger is mixed together. This mixture is used as an antidote for snake bites. Infusion of the bark reduces heavyness of the head, chronic cold and cough. Piece of the bark added with sugar candy is used in treating thirstyness.

> புரசுவா தம்பித்தம் பொங்கு கபங் குன்மம்
> கிருமி யுடனே கிராணி—பெரு வலி நோய்
> ஓட்டுமதி தீபனத்தை உண்டாக்கு மப்பொழுதே
> தீட்டியவேற் கண்ணாய்! தெளி.

பலாசு மரம் முக்குற்றங்களையும், வயிற்று நோய், வயிற்றுப் புழு, கழிச்சல், உடல் குடைச்சல் ஆகியவைகளை நீக்கும். பசித் தீயை உண்டாக்கும்.

இம்மரத்தின் பிசின் கீல்கள், நரம்புகள் ஆகியவைகளுக்குப் பலத்தைக் கொடுக்கும். சுக்கில விருத்தியுண்டாக்கும். பிசினை நீரில் கரைத்துப் பூச தொண்டைப்புண் மாறும்.

இம்மரத்தின் விதையானது வயிற்றுப்புழு, உடல் வலி, படர் தாமரை, வயிற்றுவலி (குன்மம்), வயிற்றிரைச்சல், கரப்பான், இவற்றை நீக்கும்.

இலையை குடிநீரிட்டுக் குடிக்க அல்லது பொடி செய்து சாப்பிட வயிற்று நோய், கழிச்சல் முதலியவை நீங்கும். இலையை அரைத்துப் பூச கட்டிகள் அமுங்கும். புற்று நோய்களுக்கு குணம் தரும். குத்தல், பேதி ஆகியவை நீங்கும். மற்றும் நாடாப்புழு, படை முதலியவை ஒழியும்.

இப்பூவை நீர்விட்டு வேகவைத்து கட்டிகள் மீது வைத்துக் கட்ட, அவை அமுங்கும். விரை வீக்கத்திற்கு இப்பூவை நசுக்கிக் கொதிக்க வைத்துப் பற்றிடலாம். பூவை வேகவைத்துக் குடிநீரை வடித்து, சிறிது வெடியுப்புச் சேர்த்துக் கொடுக்க, சிறுநீர் பெருகும். மேலும் மாதவிடாய் ஒழுங்குபடும்.

விதையை நீரில் ஊறவைத்து மேல் தோலை எடுத்துவிட்டு உட்பருப்பை உலர்த்திப் பொடித்து, தேனில் கலந்து, தினம் மூன்று

வேளையாக மூன்று நாளைக்குச் சாப்பிட்டுப் பின், நான்காம் நாள் காலையில் விளக்கெண்ணெய் சாப்பிட, கழிச்சலோடு குடலிலுள்ள புழுக்கள் விழும். விதையைப் பொடித்து பழச்சாற்றில் கலந்து, படை முதலிய தோல் நோய்களுக்குப் பூசலாம்.

இம்மரத்தின் பட்டைச் சாற்றையும், இஞ்சிச் சாற்றையும் கலந்து சாப்பிட, பாம்புக்கடி நஞ்சு நீங்கும். பட்டையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, தலைப்பாரம், நீர்க்கோவை, இருமல் முதலியன போகும். பட்டையைச் சிறு துண்டுகளாக நறுக்கிக் கற்கண்டுச் சேர்த்து, வாயிலிட்டு மெல்ல, நீர்வேட்கை நீங்கும்.

* * *

## பவள மல்லி
### (பாரிஜாதம்)

## Nyctanthes arbortristis
### (N. O. Oleaceae)

*Habit* : *Shrub or small tree*

*Parts used* : *Leaves, flowers and bark*

*Constituents* : *Flowers contain an essential oil. Leaves contain an alkaloid nyctanthine*

*Action* : *Leaves are Anthelmintic, Laxative, Cholagogue, Diaphoretic and Diuretic. Bark is Antibilious, Antirheumatic, Expectorant, Febrifuge and Acrid.*

Uses : Pedicle of the flower of this tree resembles coral. So this flower is called as coral. This is aromatic which flowers in the night and drops down in the morning. Tender leaves mixed with juice of the ginger is used in treating periodic fever. To treat body pain the leaves are soaked in hot water and it is consumed twice a day. To expell intestinal worms in children salt and honey is added with the extract of this leaves and given. The bark is used along with betel nut which helps to expectorate the phlegm. The powder of the seeds are used externally to cure the eczema of the head.

பாரிஜாதம் தழைத்து வளரும் ஒரு சிறிய மரம். இதன் பூவின் காம்புகள் பவளத்தின் நிறத்தை ஒத்திருப்பதால், இது

பவளமல்லிகை எனப் பெயர் பெற்றது. இப்பூ நறுமணமுடையது. மாலையில் பூத்து, காலையில் உதிரும் தன்மையுடையது.

இதன் இலைக் கொழுந்தை, இஞ்சிச் சாற்றுடன் அரைத்து முறை சுரத்திற்குக் கொடுக்கலாம். இலையை வெந்நீரிலிட்டு நன்றாக ஊறவைத்து தினம் இருவேளைக் கொடுத்துவர முதுகு வலி போகும். இலைச் சாற்றுடன் சிறிது உப்பிட்டு, சிறிது தேனும் கலந்து குழந்தைகட்குக் கொடுக்க மலத்துடன் புழுக்களும் வெளியாகும்.

இதன் பட்டையை வெற்றிலைப் பாக்கோடு சேர்த்து மெல்ல, மார்பில் உள்ள கபத்தை இளக்கும்.

இதன் விதையை சூரணித்து, தலையில் உண்டாகும் சொறி சிரங்குகளுக்குப் போடலாம்.

இப்பூவை இடித்து, வரும் சாற்றைக் கொதிக்கவைத்து, தேங்காய் ஓட்டில் ஊற்றி, வெய்யிலில் இறுகக் காயவைப்பர். இறுகிய பின் தேவைப்படும்போது தண்ணீர் விட்டுக் கரைத்துக் குழந்தைகளுக்குச் சாந்தாகப் பயன்படுத்தும் பழக்கம் இருந்தது.

* * *

## பவளக் குறிஞ்சி
### (திண்டியம், சினப்பு)

## Lagerstroemia indica
### (N. O. Lythraceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and root*

*Action* : *Leaves are Stimulant, Febrifuge, Purgative and Hydrogogue. Root is Astringent. Seeds are Narcotic.*

Uses : The leaves of this small plant is purgative.

திண்டியம், சினப்பு எனப்படும் இது தோட்டத்தில் வளரும் சிறு செடி. இதன் இலையும், வேரும், நீருடன் கூடிய பேதியை உண்டாக்கும். பொதுவாக இதனுடைய மருத்துவப் பயன் குறைவு.

* * *

## பற்பாடகம்

## Mollugo cerviana

### (N. O. Ficoidaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Plant contains resin, gum and alkaline nitrates*

*Action* : *Plant is Stomachic, Aperient, Antiseptic, Diaphoretic, Laxative, Febrifuge and Emmenagogue.*

Uses : This is a common drug. It is used in treating fever. Mixed with oil it is used in treating skin ailments. The decoction of the tender leaves and flower induces sweating and brings down the body temperature. Root exhibits tonic property. Root is also used externally to treat rheumatism.

பற்பாடகம், இது ஒரு கடைச்சரக்கு. பச்சைப் பூண்டாகவும் கிடைக்கும். இதில் அநேக விதைகளிருப்பதால் இப்பெயர் வந்தது.

இது சுரத்திற்கு விசேஷமாகப் பயன்படும். இதை எண்ணெய் யோடு குழப்பி சிரங்கு போன்ற தோலைப் பற்றிய நோய்களுக்குப் பூசுமருந்தாக உபயோகப்படுத்துவதுண்டு.

இலைக் கொழுந்துகளையும், பூக்களையும் கஷாயமிட்டுக் கொடுக்க வியர்வையுண்டாகி சுரம் குறையும்.

இப்பூண்டின் காய்ந்த வேர் உடலுக்கு பலத்தைக் கொடுக்கும்.

* * *

## பனை மரம்

## Borassus flabellifer

### (N. O. Palmae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, root, flowering stalk, and fruit*

*Constituents* : *Fat and albuminoids*

*Action* : *Root is Cooling and Restorative. Pulp from the unriped fruit is Diuretic, Demulcent and Nutritive. Terminal bads are Nutritive and Diuretic. Toddy is Stimulant and Antiphlogestic. Tender kernal is Demulcent, Nutrient and Diuretic.*

Uses : Leaves, flowers and roots are used in medicines. The fruit in the tender fruit is an excellent external application for prickly heat. It is also a good appetizer. The flowers cures dyspepsia, thirstyness, toothache, chronic fever etc. The fruit if taken as food it cures eczema, wheeping eczema, constipotion, bilious disorders etc. The toddy of this tree is highly nutritious and acts as aprodisiac, In large doses affects the liver. Fresh unfermented juice cures eye disorders. If taken regularly for 40 days this gives relief from venereal diseases. Jaggery, sugar and sugar candy are prepared from this fresh juice. The ash of the flower is applied externally to cure ulcers. Root tubers are nutritious. They are made into small pieces and powdered if used it reduces obesity.

பனைமரம், இது ஓங்கி வளரும் மரம். இலைகள் (ஓலைகள்), மட்டை, பூ, வேர் இவைகள் மருந்துகளுக்குப் பயன்படுகின்றன.

பனை நுங்கின் நீரானது வியர்க்குருவை நீக்கும். பசியைத் தரும். பனம்பூ வாத குன்மம், நீர் அருகல், பல்நோய், பழையசுரம் இவைகளைப் போக்கும். பனம்பழத்தை உணவாக உண்டால் கரப்பான், அழுகிய சிரங்கு, மலக்கட்டு, பித்த வாயுவால் வரும் நோயினங்கள் ஆகியவை உண்டாகும்.

பனங்கள்ளால் உடல் வன்மையும் ஆண்மையும் பெருகும். நீர் வேட்கையும் தீரும். இதில் பாஷாண மருந்து வகைகளைத் தூய்மைபடுத்துவர். அதிகமாக உட்கொண்டால் ஈரலுக்குக் கெடுதலை உண்டாக்கும்.

பனை மரத்தில் இருந்து கிடைக்கும் ஆணங்காயை சுட்டு நீரில் கலக்கி தெளிந்த நீரைக் காய்ச்சினால் உப்பு உரையும். இதனை மூன்று முறைக் காய்ச்சி எடுத்த உப்பை சிறு அளவில் கொடுக்க சிறுநீரைப் பெருக்கும்.

பனை மட்டைச்சாறு நேத்திர நோயை அகற்றும். ஓலையினால் பலவிதக் கைவினைப் பொருட்கள் செய்யப்படுகிறது.

பூவை பதப்படுத்தி அதன் முனையை சீவி, அதன் வழியாய் வடியும் நீரைக் குடுவைகளில் தங்கும்படி செய்வார்கள். இதற்குக் கள் என்று பெயர். அக்குடுவையில் கொஞ்சம் சுண்ணாம்பை தடவினால் புளிக்காத கள் அல்லது பதநீர் கிடைக்கும். இதை 40 நாள் இடைவிடாது சாப்பிட்டால் மேகநோய் தீரும் என நாட்டு வைத்தியர் கூறுவர். பதநீரிலிருந்து வெல்லம், கற்கண்டு, சர்க்கரை செய்யப்படுகின்றன. பூவைச் சுட்டச்சாம்பல் புண்களைப் போக்கும்.

இதன் கிழங்கு மிக்க வன்மையைத் தரும். கிழங்கை வேகவைத்து, தோல், உள்முனை முதலியன நீக்கி, துண்டு துண்டாக வெட்டி, நன்றாக காயவைத்து, உலர்த்தி எடுத்து, இடித்து, மாவாக்கி பலகாரங்களைச் செய்து சாப்பிடலாம். இவ்வாறு சாப்பிட்டால் உடல் வன்மையும், உடல் பருமனையும் கொடுக்கும்.

* * *

## பனை

**(ஆலம் பனை, கிச்சலிப்பனை)**

## Arenga pinnata

**(N. O. Palmae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, root, flowering stalk and fruit*

*Action* : *Stomachic and Expectorant.*

Uses : This cures cough, phlegm and intestinal ulcers.

ஆலம்பனை, கிச்சலிப்பனை எனப்படும் இம்மரம் இருமல், கபம், கோழை நீக்கும். வயிற்றுப்புண் குணமாக்கும்.

* * *

## பனை

**(கூந்தல் பனை)**

**See : Caryota urens**

* * *

## பனை

**(தாளிப்பனை)**

**See : Carypha umbraculifera**

* * *

## பன்னீர் மரம்

## Lavandula stoechas

(N. O. Labiatae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Flowers*

*Constituents* : *An essential oil is distilled from the flowers*

*Action* : *Antibilious, Hepatic, Sedative, Tonic, Stomachic and Refrigerent.*

Uses : This is a thorny shrub. This flowers in winter and the flowers are white in colour and fragrant. This flowers at night and drops in the morning. Rose water is derived from this flowers. These flowers cures nausea, vomiting, thirsty-ness and spermatorrhoea. The leaves are used to cure abscesses in children as an external application. The bark and root to care main ingredients if the infusions madeto treat liver and spleen disorders.

பன்னீர்மரம், இது முட்கள் நிறைந்த ஒருவகை சிறு குத்துச் செடி. பனிக்காலத்தில் பூக்கும். பூக்கள் வெண்மை நிறத்துடன் மிக்க வாசனையாய் இருக்கும். மாலையில் பூத்து விடிவதற்குள் கொட்டிவிடும். இப் பூவிலிருந்து ரோஜாப்பூவைப் போல பன்னீரை வாலையிலிருந்து இறக்கலாம். இப்பூ வாந்தி, நாவறட்சி, சுக்கிலஷீணம் இவைகளை நீக்கும். இலைகளை குழந்தைகளுக்குக் காணும் கால்கடுவனுக்கு வைத்துக் கட்டலாம். காமாலை, ஈரல் நோய்கள், மண்ணீரல் நோய்கள் முதலியவற்றுக்கு செய்யப்படும் குடிநீர்களில் இச்செடியின் வேர், பட்டை, முதலியவை உபசரக்காகச் சேர்க்கப்படுகிறது.

* * *

## பாகல்

## Momordica charantia

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climbing herb*

*Parts used* : *Fruits, seeds and leaves*

*Constituents* : *Mimordicine. Fruit contains albuminoids and carbohydrates*

*Action* : *Fruit is Tonic, Stomachic, Stimulant, Emetic, Antibilious, Laxative and Alterative. Fruit-pulp, leaf juice and seeds are Anthelmintic. Leavet act as Galactogue, Anthelmintic, Abortificiens and Lactagogue.*

Uses : This is a twiner. It cures liver and spleen disorders. Leaves terminates pregnancy. This could be used to cure burning sensation of the feet.

பாகல், இது கொடி வகையைச் சேர்ந்தது. இது பொதுவாக திரிதோஷத்தை நீக்கும். கல்லீரல், மண்ணீரல் பற்றிய நோய்கள், காமாலை முதலிய நோய்கள் குணப்படும்.

இலை கர்ப்பம் கலைக்கும். பாத எரிச்சல் ஒழிக்கும். பாதரச விஷத்தை முறிக்கும்.

* * *

## பாகல்

(மிதிபாகல், காரவல்லி)

## Momordica muricata

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climbing herb*

*Parts used* : *Leaves and fruits*

*Action* : *Similar to M. charantia.*

Uses : This exhibits all the medicinal properties of M.charantia. Leaf exhibit with hot water expels intestinal

worms. Fruits if consumed regularly cures piles, liver and spleen disorders. Pepper along with this leaves if chewed checks bleeding.

பாகலின் பொதுவான குணம் மிதிப்பாகலுக்கும் உண்டு. என்றாலும் இலைச் சாற்றை வெந்நீரோடு கலந்துக் கொடுக்க வயிற்றுக் கிருமிகள் சாகும். இதன் காயை உண்ண மூலம், காமாலை, கல்லீரல், மண்ணீரல், தோஷம் போகும். பழுக்காத மிதி பாகல் இலையுடன் மிளகுக் கூட்டி மென்று விழுங்க இரத்தம் கசிவது நின்று, கருப்பு முதலான நோய்கள் குணமாகும்.

* * *

## பாகல்

(நிலப்பாகல்)

## Momordica humilis

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climbing herb*

*Parts used* : *Seeds*

*Action* : *Similar to M. charantia.*

Uses : This exhibits the same property of M.charanita.

மிதிபாகலின் குணங்களே இதற்கும் பொருந்தும்.

* * *

## பாகல்

(பழு பாகல்)

## Momordica cochinchinensis

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climbing herb*

*Parts used* : *Fruits and leaves*

*Action* : *Stomachic and Stimulant.*

Uses : This induces biliousness and eczema. This should not be consumed by patients who are under treatment

as it reduces the medicinal action of other drugs. Seed oil is used to ulcers and eczema.

காட்டுப் பாகலின் குணங்களே இதற்கும் பொருந்தும் என்றாலும், வாதப்பிடிப்பு, ரணம், எலும்பு முறிவு முதலானவற்றில் இது சிறப்பாக செயல்படுகின்றது.

* * *

## பாகல்
### (காட்டுப் பாகல்)

## Momordica dioica
### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Creeper*

*Parts used* : *Fruit and tuberous roots*

*Constituents* : *An alkaloid. Ash contains the trace of manganese.*

*Action* : *Stimulant, Astringent, Antirheumatic and Vulverary. Juice of the root is Antiseptic.*

Uses ; This cures joint pains, ulcers and set broken bones.

காட்டுப்பாகல், இது பித்தத்தையும், கரப்பானையும் உண்டாக்கும். இரசம், பாஷாண மருந்துகளை முறித்து, தேகத்திற்கு கெடுதியை உண்டாக்கும். இதன் விதையிலிருந்து தைலம் இறக்கி ரண மருந்தாக உபயோகிப்பார்கள்.

* * *

## பாக்கு
### (கமுகு)

## Areca catechu
### (N. O. Palmae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds or kernel and the extract; Root and tender leaves; catechu.*

*Constituents* : *Watery extract yields betal-nut, catechu. Kernel (seeds) contain catechu, tannin, gallic acid, matter, arecaine, arecaidine, guvacoline, guvacine and chlorine occur in traces only.*

*Action* : *Dried nui is Stimulant, Astringent. The seeds has an Aromatic, Astringent and somowhat Acrid taste. Astringent, Anthelmintic, Emmenago -gue, Vermifuge, Nervine Tonic and Aphrodisiac.*

Uses : The fruit of this called betal nut. There are two varieties in this namely superior and inferior. Xatechu is prepared from this. Dried betal-nut is a nervine tonic. This removes constspation and improves digestion. This chewed fruit could be used as tooth powder. If this consumed in large quantity it produce anaemia. The astringent of this checks dysentery. This is used along with betal nuts which strengthens the teeth. Fresh fruits eliminate the phlegm formed in the throats. Dried and powdered fruit with sugar checks diarrhoea and cures urinary problem. If it is made a paste with lemon juice it acts as anthelmintic. Infusion of this fruit is used to cure dental infection and diseases if used as mouth wash. Gingivitis and stomatitis could be cured with this. Tender leaves boiled with oil could be used externally for rheumatic complaints. Tender fruit cures intertinal worm infection, gonorrhaea, diarrhoea, urinary tract infections etc.

கமுகு மரத்தின் காயை, வெட்டைப்பாக்கு என்பர். இதில் இரண்டு வகை உயர்வு, தாழ்வு என உண்டு. இதை வெட்டிப் பார்க்கத் தெரியும், நடுப்பாகம் குறுகியிருந்தால் உயர்வு என்றும், பருத்திருந்தால் தாழ்வு என்றும் கொள்ளப்படும். இதினின்று கத்தைக் காம்பும், காசுக் கட்டியும் தயாரிக்கப்படும். ஒன்று தாம்பூலத்திற்கும், மற்றொன்று மருந்திற்கும் உபயோகப்படும். இந்தப் பாக்கிலிருந்து களிப்பாக்கு, வெட்டுப்பாக்கு, சாயப்பாக்கு, சுருள்பாக்கு, அலகு பாக்கு, சீவல் பாக்கு, தூள் பாக்கு முதலியவை தயாரிக்கப்படுகிறது.

உலர்ந்த பாக்கு நரம்பிற்கு சுறுசுறுப்புண்டாக்கும் மாதவிடாய் போக்கும் குணமுண்டு. காசுக்கட்டி வாய் கொப்பளிக்க உதவும். இது மலப் பந்தத்தையும், அஜீரணத்தைப் போக்கும். இதைக் கருக்கி பல் தூளாகவும் உபயோகிக்கலாம். வெறும் பாக்கை அதிகமாக

உண்டால் சோகையுண்டாகும். இதன் துவர்ப்புச்சத்து பலவீனத்தால் உண்டாகும், பேதியைக் கட்டும். வெற்றிலையோடு சேர்த்து தாம்பூலமாக உபயோகிக்க உடம்புக்கு ஒரு தெம்பும் சுறுசுறுப்பும் உண்டாகும், வாய் நாற்றம் உண்டாகும். பல் உறுதிப்படும்.

பச்சைப் பாக்குத் தொண்டையில் கட்டும் கோழையைப் போக்கும். பாக்கை உலர்த்திப் பொடித்து, சிறிதளவு எடுத்துச் சர்க்கரை சேர்த்துச் சாப்பிட, செரியாக் கழிச்சல், சிறுநீர் நோய்கள் முதலியன தீரும். மேற்படி தூளையே சிறிதளவு எடுத்து சிறிது பழச்சாறு விட்டு அரைத்து, உள்ளுக்குக் கொடுக்க, புழுக்கள் வெளியாகும். பாக்கை முறைப்படி குடிநீரிட்டு வாய் கொப்பளித்து வர, பல்லீறிலுண்டாகும் நோய்கள் தீரும். இதையே பீச்சாங் குழலால் பெண்களின் கருவாய்க்குள் பீச்சிவர வெள்ளை முதலிய நோய்கள் தீரும்.

வேரை குடிநீரிட்டு வாய் கொப்புளித்து வர, உதட்டுப் புண்களும், ஈறு புண்களும் தீரும்.

இதன் இளங்குருத்தை எண்ணெயிலிட்டு வதக்கி, வாதவலிக்கு வைத்துக் கட்டலாம். இளம்பிஞ்சுப் பாக்கு, வயிற்று நோய்களுக்கு ஏற்றது.

இதனால் செரியாக் கழிச்சல், சிறுநீரைப் பற்றிய நோய்கள், வயிற்றுப்புழு நோய், ஈறுநோய், மேக வெள்ளை முதலியன தீரும்.

* * *

## பாக்கு
### (வெட்டைப் பாக்கு)

## Hypericum perforatum
### (N. O. Hypericaceae)

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Herb* |
| *Parts used* | : | *Flowering tops, flowers, nuts and leaves* |
| *Constituents* | : | *The oil in which the shoots or flowering tops have been steeped in sold and oleum hyperial. Flowers contain a red resin (hypericum red) volatile essential oil and a red colouring matter.* |
| *Action* | : | *Leaves are used as a Vermifuge. The herb is Astringent, Aromatic, Anthelmintic, Diuretic, Emmenagogue, Purgative.* |

Uses : The leaves are astringent. It exhibits the properties of anthelmintic. Red colour gum called oleum hyberial is obtained from the powder. The leaves checks diarrhoea. It cure piles and uteru disorders.

வெட்டைப்பாக்கின் இலை அதிக துவர்ப்புடையது. வயிற்றுப் பூச்சிகளை ஒழிக்கும் இப்பூவிலிருந்து சிகப்பு பிசினை வடித்தெடுப்பார்கள். இதற்கு ''ஒலியம் ஹைபீரியல்'' என்று பெயர். இதன் தழை பேதியை நிறுத்துவதற்கும், மூலத்திற்கும், சூதகக் கோளாறுகளுக்கும் சிறந்தது.

* * *

## பாக்கு
### (கலை பாக்கு)

## Pithecellobium gracile
### (N. O. Mymosoceae)

*Habit* : *Tree*
*Parts used* : *Nuts or seeds*

Uses : The seed is a good medicine for diabetes. Decoction of the leaves are used externally by leprosy patients. The decoction helps in the growth of hair.

கலைப்பாக்கு நீரிழிவு நோய்க்கு குணமளிக்கும். இதன் இலைக் கஷாயத்தை மேலுக்குப் பூசினால் குஷ்ட நோய் குணமாகும், தவிர இதன் கஷாயம் தலை முடியை வளர்ப்பதில் முக்கிய பங்கு வகிக்கிறது.

* * *

## பாதரி
### (பாதிரி)

## Stereospermum suaveolens
### (N. O. Bignoniaceae)

*Habit* : *Tree*
*Parts used* : *Flowers, bark and leaves*
*Constituents* : *Flowers contain saccharine and mucilagilous, matters and wax*

*Action* : *Infusion of the bark is Refrigerant, Diuretic, Febrifuge, Tonic, Cooling and Aphrodisiac.*

Uses : The flower of this tree is yellow coloured and very fragrant. Leaves, flowers and the bark are of medicinal use. Decoction of root and flowers is used to reduce the fever. It is a body coolant. It cures diabetes, venereal diseases, burning sensation of eyes and ears, chronic ulcers, piles and dyspepsia. Lemon juice mixed with leaf juice is used on the head during bathing which reduces the body heat. Decoction of the leaf is the good medicine for uterus disorders. The juice of the powder with honey is used to stop hiccups. It also gives strength. Bark is used along with other common drugs like carpet wood, plumbago, dried ginger and pepper. It is used as decoction to cure hiccups. thirstyness ear block, giddiness etc. Bark soaked in water in a ratio of 1:10 for an hour. If 15ml. of this water is consumed twice daily it cures stomach ache, cough and anaemia. Infusion of the root gives relief in stomach ache.

இது பாதிரிமரம் அல்லது பாடலிமரம் என்றும் அழைக்கப்படு கிறது. பெரிய மரமான இதன் பூ மஞ்சள் நிறம், மிக்க வாசனை யுள்ளவை. ஆகவே இதன் பூ கோவில் பூசைக்கு உபயோகப்படும். இதன் இலை, பூ, பட்டை, வேர் அனைத்தும் மருத்துவ பயனு டையவை.

இதன் வேரையும், பூவையும் கஷாயம் வைத்து சுரத்திற்குக் கொடுக்கலாம். உடம்பிற்குக் குளிர்ச்சி தரும். அன்றியும் மதுமூத்திரம் சுரப்பான், மேகவியாதி, கண், காது, கைகால் இவைகளைப் பற்றிய எரிச்சல், பெருவிரணம், மூலம், அக்கினி மந்தம் இவைகள் போக்கும்.

இலைச்சாற்றுடன், எலுமிச்சம் பழச்சாறும் கலந்து, தலையில் தேய்த்து ஊறவைத்தப் பின் தலை முழுகிவர, தீக்குற்றத்தைப் போக்கி வெறிநோயை நீக்கும். பைத்தியம், மன நோய் குணப்படும்.

பூவைக் குடிநீரிட்டு அல்லது அரைத்துச் சாப்பிட, மேகம் தணியும், சுரம் நீங்கும். பூவின் சாற்றைத் தேன் கலந்து உட்கொள்ள விக்கல் நீங்கும். தாது விருத்தியுண்டாகும்.

பட்டையை மற்ற சரக்குகளாகிய பற்பாடகம், பேய்ப்புடல், சித்திரமூலம், சுக்கு, மிளகு, இவைகளோடுக் கூட்டி, கஷாயமிட்டுக் கொடுக்க விக்கல், தாகம், காதடைப்பு, மயக்கம் முதலியவைகள் குணமாகும். பட்டை ஒரு பங்கு, நீர் பத்துப் பங்கு சேர்த்து ஒரு

மணி நேரம் ஊற வைத்து, 15 முதல் 30 மி.லி.வீதம் காலை, மாலை உட்கொள்ள, வயிற்றுவலி, இருமல், சோபை முதலியன நீங்கும். வேரை குடிநீரிட்டு அல்லது பொடித்து உட்கொண்டாலும் மேற்கூறிய நோய்கள் குணமாகும். இது ரசத்தை பற்பமாக்கும்.

* * *

## பாதாம்

### (அடப்பவிதை, இனிப்பு வாதுமை)

## Amygdalus communis

### (N. O. Rosaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds or kernel of the nuts*

*Constituents* : *Rich in proteins and fat. An essential oil is extracted. This oil contains Arginine, quercitin, cyanidin and caffeic acid.*

*Action* : *Kernel is Nutritious, Diuretic and Aphrodisiac.*

Uses : This is an imported tree. The kernel of the seed is used in medicines which are meant to improve health. This kernel with catechu and sugar is made in to a paste. If this paste is used twice daily it reduces the body heat and increases sexual vigour in men. Fig along with this kernel is used to cure venereal diseases if used as an external application. Kernel roasted with little sprinkling of salt water is used to cure cough. Gum of this tree is consumed 5 gms per day it cures urinary burning sensation.

பாதாம் வெளிநாட்டிலிருந்து வருவிக்கப்பட்ட ஒரு மரமாகும். இம்மரத்திலிருந்து கிடைக்கும் பருப்பு உடலுக்கு வன்மையூட்டும் மருந்துகளில் உபசரக்காகப் பயன்படுகிறது.

கருவேலம் பிசினுடன், சர்க்கரை, அடப்பவிதை முதலான வற்றைச் சேர்த்து மைபோல் அரைத்து காலை, மாலை உட்கொள்ள உடல் வெப்பத்தை நீக்கி ஆண்மையைத் தரும். அடப்பவிதை பருப்பும், அத்தி பழமும் சேர்த்து அரைத்து உண்டால் மேகநோய் தீரும். உப்பு நீர் தெளித்து, இனிப்பு வாதுமை பருப்பை இலகுவாய் வறுத்து, 5, 6, மென்று தின்ன இருமல் தணியும், தொண்டைக் கம்மல் தீரும். மணப்பாகு, இளகல் செய்தும் சாப்பிடலாம். இதன்

நெய்யை மாதுளைப் பழத்திற்குள் செலுத்தி செம்மண் சீலை செய்து கும்பி சாம்பலில் வைத்து, பழரசத்தைப் பிழிந்து உண்டால் பெரிய இருமல் நோயும் தணியும்.

அடப்பவிதை பிசினை தினமும் 5 கிராம் உண்டு வந்தால் நீர் எரிச்சல் தீரும், ஆண்மை பெருகும்.

* * *

## பாதாம்

### (பிசின் பாதாம்)

## Astralagus gummifera

### (N. O. Leguminosae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds and gum*

*Constituents* : *A gum like tragacanth*

*Action* : *Antidote, Nutrient, Refrigerant, Stimulant and Aphrodisiac.*

Uses : This gum is imported from Pakistan. This is white or yellowish colour. It is very tasty and aromatic. This is used in the medicine which do not dissolve in water. This is mainly used in treating dysentery in children. This, if chewed slowly reduces irritating cough, makes semen viscous, and acts as an antidote. This is mainly used in health tonics.

பாரசீகத்திலிருந்து கிடைக்கும் ஒருவகை மரத்தின் பிசின். இதை பாதம் பிசின் என்று அழைப்பர். வெண்மை அல்லது மஞ்சள் நிறமாய் இருக்கும். அகலமாயும், தகடுகளாகவும், மணமும், சுவையு மாய் இருக்கும். பாதம் பிசின் எளிதில் கொடியாகாது. இதனை நீரில் கரையாத மருந்துகளுடன் சேர்த்து குழந்தைகளுக்குக் கொடுக்கலாம். இதன் விளைவாக இருமலும், கழிச்சலும் நிற்கும். இப்பிசினை கொஞ்சம் வாயில் போட்டு அடக்கி, ரசத்தை விழுங்கிக் கொண்டு இருக்க இருமல் தணியும், சுக்கிலம் கெட்டிப்படும். விஷத்தை முறிக்கும். பெரும்பாலும் இது தாதுவிருத்தி லேகியங்களில் சேர்க்கப் படுகிறது.

* * *

## பாம்புகளா
(அமுல்பொரி)

See : Rauwolfia serpentina
பார்க்க : சர்பகந்தி

* * *

## பார்லி

## Hordeum vulgare
**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Grain*

*Constituents* : *Fixed oil, the glutin and albumin*

*Action* : *Seeds are Nutritive and Demulcent. Decoction of seeds is Bitter, Tonic, and Astringent.*

Uses : This seeds improve health and acts as diuretic. Gruel of this relieves thirstyness and improves digestion. It is given to patients during canvalacing. This gives strength and energy. The grain boiled in water and the filtered water is used in treating sore throat, burning sensation and thirstyness during fever. Children who are not breast fed, this is given as gruel in recommended quantity.

பார்லி உடலைத் தேற்றும். சிறுநீரை பெருக்கும், நீர் வேட்கை அடக்கும், செரிப்பை உண்டுபண்ணும், நோயுற்ற காலங்களில் பத்திய உணவாக இதைக் கொள்வர். புத்துணர்ச்சி தரும் பானமான இது சிறந்த உடல் உரமாக்கியாகும். பார்லி அரிசியைத் தண்ணீரில் கொதிக்க வைத்து, வற்ற வைத்து, வடிகட்டி, தொண்டைப் புண், எரிச்சல், சுர நோயில் காணும் நீர் வேட்கை இவைகளுக்குக் கொடுக்கலாம். இத்துடன் சிறிது தேனையும், பழ ரசமும் சேர்த்தால் நாவிற்குச் சுவையாக இருக்கும். பால் சேர்த்தால் பழச்சாறு சேர்க்கக் கூடாது. தாய்ப் பாலற்றக் குழந்தைகளுக்கு பார்லி அரிசிக் கஞ்சியும், பாலும், சமனெடை சேர்த்துக் கொடுக்கலாம். அளவுக்கு மிஞ்சிக் கொடுத்தாலாகாது.

* * *

## பாலைக் கீரை

## Holostemma rheedii

### (N. O. Asclepiadaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and roots*

*Action* : *Roots are considered Cooling and Alterative. Leaves are Refrigerant, Stimulant, Diuretic, Tonic, and Cooling.*

Uses : This cures diabetes and eye disorders. Leaves contains iron. This gives relief from weekness after fever. The ashes of the leaves are used as an ingredient in electuaries as an aphrodisiac.

இது நீரிழிவு நோய், கண் பற்றிய நோய்களுக்கு குணம் தரும். இக்கீரையில் இரும்பு சத்துள்ளது. கடுமையான காய்ச்சலுக்குப் பின் ஏற்படும் உடற்சோர்வை இக்கீரை நீக்கும். தாது புஷ்டி லேகியங்களில் இக்கீரையின் சமூலத்தைச் சேர்ப்பார்கள்.

* * *

## பாலைக்கொடி

## Leptadenia reticulata

### (N. O. Asclepiadaceae)

*Habit* : *Twiner*

*Parts used* : *Leaves*

*Action* : *Stimulant, Restorative, Laxative and Tonic.*

Uses : This is used as vegetables and also used in treating ear and nasal disorders. Leaves are used in skin diseases.

இது காது, மூக்கு, பற்றிய நோய்களில் பயன்படும் கொடியினமாகும். இதன் இலை சரும நோய்களை நீக்கும்.

* * *

## பாலை
### (ஊசிப்பாலை)

## Oxystelma esculentum
### (N. O. Asclepiadaceae)

*Habit* : *Twiner*

*Parts used* : *Leaves and roots*

*Action* : *Depurative, Antiseptic, Galactagogue, Tonic and Cooling.*

Uses : Fruits are yellow in colour and sweet in taste The leaves are used as green vegetable. Infusion of the leaves give relief in gonorrhoea and burning sensation during parturition. This acts as refrigerant and tonic. This cures eczema, gonorrhoea and diabetes. The root is used in treating jaundice. Infusion of the root reduces the irritation in the testicles and reduce the intestinal heat.

ஊசிப்பாலை உயரமாக வளரும் ஒரு கொடியினம். இதன் பழம், சிற்றீச்சன் பழத்தைப் போல மஞ்சள் நிறத்துடன் மிக்க இனிப்பாகவும் பால் நிறைந்தும் இருக்கும். சாப்பிட்டால் உதட்டில் ஒட்டிக் கொள்ளும். இதன் கீரையை சமைத்துண்டாலும், குடிநீர் செய்து உட்கொண்டாலும், வெள்ளை, நீர் எரிச்சல் நீங்கும். கண் குளிர்ச்சியும், தேக புஷ்டியும் உண்டாகும். மேலும் கரப்பான், பிரமேகம், நீரிழிவு நோய்கள் குணமாகும். இதன் வேரானது காமாலை நீக்கும். ஆண்குறியில் உண்டான எரிச்சலும், வெப்பமும் தீரும். தேகமும் வலிமை பெறும்.

* * *

## பாலை
### (ஏழிலைப் பாலை)

See : Alstonia scholaris

* * *

## பாலை
(கொடிப்பாலை, பேய்ப்பாலை)

**See : Tylophora asthmatica**

பார்க்க : நஞ்சறுப்பான்

* * *

## பாலை
(ஆற்றுப்பாலை)

## Salix tetrasperma
**(N. O. Salicaceae)**

*Habit* : *Small tree*

*Parts used* : *Root*

*Constituents* : *Salicin*

*Action* : *Bark is Febrifuge, Cardiac, Stimulant, Restorative.*

Uses : This is used in the treatment of chest pain.

இப்பாலை இருதய நோய்க்கு மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## பாலை
(பழமுன்னிப் பாலை)

## Alstonia venenatus
**(N. O. Apocynaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Ripe fruit*

*Action* : *Tonic, Antiperiodic and Anthelmintic.*

Uses : Fruits gives relief in epilepsy and syphilitis.

இதன் பழங்கள் காக்கைவலிப்பை நீக்கி, கிரந்தியைப்போக்கும்.

* * *

## பாலை
### (வெட்பாலை இனிப்பு)

## Wrightia tinctoria
### (N. O. Apocynaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, leaves and bark*

*Constituents* : *Seeds yield a fixed oil*

*Action* : *Astringent, Stomachic, Tonic, Febrifuge and Nutrient.*

Uses: This occurs all over India. There are two varieties one is bitter and the another is sweet. The bark and seeds exhibits medicinal properties. Seeds give relief in intestinal disorders and flatulence. This also cures bloody stools and dysentery. This is found effective in rheumatism, phlegmatic disorders and bilious disorders.

Leaves if chewed gives relief in tooth ache. Leaves or bark in infusion is used in the above said diseases.

வெட்பாலை இந்தியாவில் எங்கும் கிடைக்கக் கூடியது. இதில் கசப்பு, இனிப்பு என இருவகையுண்டு. கசப்பு வெட்பாலைக்குக் ''குடசப் பாலை'' என்றும், இனிப்பு வெட்பாலைக்கு ''வெட் பாலை'' என்றும் பெயர். இதன் விதை, பட்டை, மருத்துவ குணமுடையன.

'' வெட்பாலை நன்னரிசி விறுபித்த வாதமொடு
கொட்பார் கரப்பான் குடல்வாத — முப்பு சத்தைக்
காணாம லேநாளுங் கண்டிக்குங் காசினியிற்
பூணார் முலையாய் புகல் .''

இதன் விதையால் கடுவனும், குடலைப் பற்றிய நோய்களும், வயிற்றுப் பொருமல் ஆகியவைகளும் போகும். அன்றியும் குருதிக் கழிச்சல், சீதக்கழிச்சல் இவைகளுக்கு இதன் விதையை உட்கொள்ள லாம்.

இம்மரமானது சூட்டையும், இனிப்பையும் பெற்றிருந்தும், வலியையும், முப்பிணியையும் நீக்கும். மேலும் திரிதோஷம், வாதவலி நீங்கும்.

இலையை வாயிலிட்டு மெல்ல, பல்வலி நீங்கும். இலையை அல்லது பட்டையை முறைப்படி குடிநீரிட்டுக் கொடுத்தாலும் மேற் கண்ட அனைத்து நோய்களும் குணமாகும்.

* * *

## பாலை

(கசப்பு வெட்பாலை குளப்பாலை, குடசப்பாலை)

## Holarrhena antidysenterica

(N. O. Apocynaceae)

*Habit* : *Small tree*

*Parts used* : *Bark, seeds and leaves*

*Constituents* : *Bark and seeds contain a non-oxygenetial alkaloid wrightine or conessine or kurchisine and holarrhenine is a white crystalline substance it is bitter in taste. An alkaloid named concessine from the commercial name of the bark conessi bark.*

*Action* : *Bark is Bitter, Stomachic, Astringent, powerful Antidysenteric, Febrifuge, Pungent, and Acrid. Seeds are very Bitter, Astringent, Febrifuge, Antiperiodic, Antidysenteric, Anthelmintic and Carminative. Seeds are Carminative, Astringent, Lithontriptic, Tonic and Aphrodisiac.*

Uses : This is found grown in forests. There are two varieties black and white. A bitter substance is present in this tree. This cures rheumatism, diarrhoea, diabetes, gonorrhoea, eczema, ulcers and fevers. Flowers of this tree cures leucoderma. Black powder if taken internally regulates the menstrual cycle and eczema. Infusion of the bark if consumed thrice a day checks diarrhoea. Juice of the bark mixed with ginger juice and sugar if taken cures stomach ache and venereal diseases. Bark infusion is used as gargle to cure stomatitis and tooth ache. Juice of the bark is boiled along with oil and used as an external application to cure eczema

and other skin diseases. Smashed bark if applied and bandaged on painful areas gives relief from pain. Bark of this tree along with pulp of bale fruit and bark of pomagranut is dried and powdered. This mixture if consumed along with honey or sugar cures diarrhoea and asthma. Seeds are also used in treating diarrhoea and rheumatism.

குடசப்பாலை காடுகளில் வளரும் ஒரு மரம். இதில் கறுப்பு, வெள்ளை என இரு வகை யுண்டு.

இதனால் வளிநோய், கழிச்சல், நீரிழிவு, வெள்ளை, கரப்பான், சிரங்கு இவைகள் போகும். அன்றியும் சுரம் நீங்கும்.

இப்பூவானது வெண் குஷ்டத்தை நீக்கும். பட்டையை உட்கொள்ள மாதவிடாய் சீராகும். கரும் கரப்பான் ஒழியும். பட்டையைக் குடிநீரிட்டு தினம் மூன்று வேளை கொடுத்து வர கழிச்சல் யாவும் போகும். பட்டையை பிழிந்து சாறெடுத்து, இஞ்சிச் சாறு சேர்த்து அத்துடன் சிறிது சர்க்கரை சேர்த்துச் சாப்பிட, வயிற்றுநோய், மேகநோய் இவைகளைக் கண்டிக்கும். பட்டையை குடிநீரிட்டு வாய் கொப்பளிக்க, பல்வலி தீரும். பட்டைச்சாற்றை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, கரப்பான், சொறி, சிரங்கு முதலிய நோய்களுக்குத் தடவ, குணம் தரும். பட்டையை சிதைத்து வலியுள்ள இடங்களில் வைத்துக் கட்ட நன்மை பயக்கும். பட்டை, வில்வப்பழச் சதை, மாதுளம் பட்டை, இம்மூன்றையும் உலர்த்திப் பொடி செய்து, 1கி முதல் 2கி வீதம், தேன் அல்லது சர்க்கரைக் கலந்துக் கொடுக்க, கழிச்சல்கள் நீங்கும். ஆஸ்துமாவும் குணமாகும். விதையானது, சீதபேதியையும், வாதவலியையும் நீக்கும்.

* * *

## பாலை

**(நிலப்பாலை, ஒடுவன்பாலை)**

## Cleistanthus collinus

**(N. O. Apocynaceae)**

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Tree* |
| *Parts used* | : | *Leaves, roots and fruits* |
| *Constituents* | : | *Leaves and bark contains saponin and tannin.* |
| *Action* | : | *Highly poisonous. Leaves, roots, fruits are Violent gastro-intestinal Irritants. Leaves are Abortifacient.* |

Uses : Milky juice and leaves of this tree exhibits medicinal properties This cures abscess and bubos. Latex is used as an external application on boils which heals it very fast. Heated leaves are also used externally on ulcers. This is very poisonous. It should not be taken internally.

நிலப் பாலை தென்னிந்தியாவில் சாதாரணமாக பயிரா கின்ற கொடி வகைகளில் ஒன்று. இதன் கொடி வளர வளரத் துவளத் தொடங்கும். பூவானது மணியைப் போலவும், நீல நிறமாகவும் இருக்கும். இலையைக் கிள்ளினாலும், கொடியை உடைத் தாலும் பால் வெளிப்படும். பால் வடியுந் தன்மை இருப்பதனால், இக்கொடியை இரப்பர் கொடி எனச் சொல்லுவர். இதன் இலை, பால் மருத்துவ குணமுடையன.

இது கட்டிகளையும், அரையாப்புக் கட்டிகளையும் கரைக்கும். இதன் பாலைக் கட்டியின்மீது தடவிவர, கட்டி நாளுக்கு நாள் கரைந்து மறையும். பழுத்திருந்தால் உடையும். இதன் இலையை அரைத்துப் புற்கை செய்து கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாம். இம்மூலிகை கெந்தகத்தை நீற்றும். இது கடுமையான விஷத்தன்மைக் கொண்டது.

* * *

## பாலை

### (காந்தலைப் பாலை)

## Ervatamia dichotama

### (N. O. Apocynaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Seeds, leaves, root-bark and milky juice.*

*Action* : *Seeds are Purgative, Narcotic, Poisonous. Leaves and bark are Purgative and Cathartic.*

Uses : Root and bark are ideal medicine for snake bite and scorpian sting.

காந்தலைப்பாலை வேரும், பட்டையும் பாம்புக்கடி, தேள் கடிக்கு சிறந்த மருந்தாகும். இது பூச்சிக்கடிக்கும் மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## பாலை
(சொணை வெட்பாலை)

## Wrightia tomentosa
(N. O. Apocynaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Action* : *Alterative, Anthelmintic, Appetizer, Carminative, Diuretic and Emmenagogue.*

Uses : This cures phlegmatic disorders and rheumatism. The fruit is used to treat eczema, herpes etc. This is an appetizer. The decoction of the root is used to regularise the menstrual cycle. Infusion of the bark is given in menstrual and renal complaints.

சொணை வெட்பாலை வாதநோய், பித்த ரோகம், திரி தோஷம் நீக்கும். இதன் பழமானது, கருங்கரப்பான், கிரந்தி குணப் படும். பசியைத் தூண்டும். இதன் வேர்க் கஷாயம் மாத விடாய் நோய்க்குக் கொடுக்கக் குணம் தெரியும்.

* * *

## பால்வள்ளி
(உடற்கொடி, கரு நன்னாரி)

## Ichnocarpus frutescens
(N. O. Apocynaceae)

*Habit* : *Climbing plant*

*Parts used* : *Roots*

*Constituents* : *It contains an acid allied to cinchotannic acid, a red colouring matter, resin, a small quantity of coumarin and a caoutchouc like substance*

*Action* : *Root is Alterative, Tonic, Diuretic and Diaphoretic.*

Uses : Stalk and leaves are used like country sarasaparilla. Decoction of this is used in treating skin eruptions and fever. Uses are similar to Hemidesmus indica.

நன்னாரிக்குள்ள குணமே இதற்கும் பொருந்தும்.

* * *

## பாவட்டை

## Pavetta indica

### (N. O. Rubiaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves, roots and fruits.*

*Constituents* : *It contains a green resin, starch, an organic acid and a bitter glucoside resembling salicin.*

*Action* : *Aperient, Diuretic, Laxative, Febrifuge, Expectorant and Antirheumatic.*

Uses : This is commonly available shrub. Leaves, roots and fruits are of medicinal properties. Leaves are used in treating jaundice, phlegmatic disorders, rheumatism, thirstyness etc. It is an appetizer. Infusion of the leaves are used in above said diseases. Roasted leaves are used externally to cure piles. Fruit is used as vegetable. Dengue fever, dysentery, anuresis, diarrhoea are treated with this. It acts as diuretic.

The root of this plant along with root of caster oil plant root of witlow plant, pepper are added and mashed. Infusion made out of this mixture is used in treating fever due to indigestion. Powdered root mixed with dried ginger and sugar is used in treating inflammation of the liver. Powdered root and dried ginger powder are mixed in the water which is used to clean rice. This is given to cure ascites.

பாவட்டை எங்கும் கிடைக்கும். இது குத்துச் செடி வகுப்பை சேர்ந்தது. இது மூன்று வகைப்படும். அவை, சிவப்புபாவட்டை, மஞ்சட் பாவட்டை, முள் பாவட்டை என்பனவாம்.

இதன் இலை, வேர், காய் முதலியன மருத்துவ குணமுடையன.

இதன் இலை காமாலை, திரிதோஷம், சிலேத்தும வாதம், கபதோஷம், வாதநோய், தாக சுரம், ஆகியவைகளை நீக்கும். பசியை உண்டாக்கும். மேற்கூறிய நோய்களுக்கு இலையை குடிநீரிட்டுக்குடிக்கலாம். இலையை வதக்கி வைத்துக் கட்ட, கீழ்வாயிலுண்டாகும் எரிச்சல் தணியும்.

காயை வற்றலிட்டும், கறியாகவும் சமைத்துண்டால், வாத சுரம், சீதக் கடுப்பு, அருசி, கழிச்சல் ஆகியவைகள் நீங்கும். ஆயாசம் ஏற்படும். சிறுநீர் தடையில்லாமல் போகும்.

பாவட்டை வேர், சிற்றாமணக்கு வேர், உத்தாமணி வேர், மிளகு முதலியவற்றை எடுத்து, இடித்துக் குடிநீர் செய்து குடித்து வர, அஜீரண சுரம் மீண்டும் வராது ஒழியும். வேர்ப் பொடி சுக்குடன் சிறிதுச் சர்க்கரை கலந்து சிறு குழந்தைகளுக்குப் புகட்ட, ஈரல் வீக்கம் நீங்கும். வேர்ப்பொடி, சுக்குத் தூள் இவ்விரண்டையும் சேர்த்து, கழு நீரில் கலக்கிப் பெருவயிற்றுக்குக் கொடுக்க, நீரை வற்றச் செய்யும்.

* * *

## பாற்சோரிக் கீரை

## Ruellia secundra

### (N. O. Acanthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and tender stems*

*Constituents* : *Rich in vitamins and minerals*

*Action* : *Astringent, Refrigerant, Laxative, Tonic, Antisyphilitic, Insecticide and Alexipharmic.*

Uses : The leaves could be used in cooling and it cures colic dysentery, diarrhoea and bleeding piles. If it is consumed regularly it cures leprosy and other skin disorders.

பாற் சோரிக்கீரை — இது கீரை வகுப்பைச் சேர்ந்தது.

"வயிற்றுக் கடுப்பு மலஞ்சீதம் பேதி
நியத்தரத்தப் போக்கிவைநி றுத்துங் — குயத்தையொரு
பாற்சரியக் காட்டும் பருவ வணங்கரசே!
பாற்சொரிக் கீரையது பார்."

இலையைச் சமைத்துச் சாப்பிட்டுவர, வயிற்றுக் கடுப்பு, கழிச்சல், சீதக் கழிச்சல், குருதிக்கழிச்சல், ரத்த மூலம் நீங்கும். சர்ம நோய் (குஷ்டம்) நீங்கி குணம் தரும். இது கொடிய விஷத்தை நீக்கும் கீரையைச் சமையல் செய்து சாப்பிடுவது நல்லது.

* * *

## பாஷாண பேதி

### Coleus aromaticus

**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Essential oil carvacrol*

*Action* : *Antispasmodic, Antilithic, Cathartic, Stimulant, Stomachic, and Diuretic.*

Uses : The leaf juice if taken internally it cures menorrhagia, anurisis, burning sensation during urination. If this root is added along with rice gruel, it acts as tonic for pregnant ladies.

பாஷாண பேதி, இதன் இலைச் சாற்றைக் குடித்து வர பெரும் பாடு, கல்லடைப்பு, நீரடைப்பு, நீர் எரிச்சல் போகும். கஞ்சி வகைகள் ஒன்றில் இதன் வேரைச் சேர்த்துக் காய்ச்சிக் குடித்து வர சூல் கொண்ட பெண்களுக்கு வலுவைத் தரும்.

* * *

## பிசின் பட்டை

**See : Tetranthera roxburghi**

**பார்க்க : மயிலாலக்கடி**

* * *

## பிண்ணாக்குக் கீரை

## Melochia corchorifolia

**(N. O. Sterculiaceae**

*Habit* : *Sub shrub*

*Parts used* : *Stem and leaves*

*Action* : *Laxative, Diuretic, Vermifuge, Stimulant and Cooling.*

Uses : It is cultivated in India and Ceylon. If this plant is boiled and consumed it acts as laxative and diuretic. It cures gonorrhoea, diabetes but it agrevates rheumatism and eczema.

பிண்ணாக்குக்கீரை இந்தியா, இலங்கை முதலிய இடங்களில் பயிர் செய்யப்படுகிறது.

இதன் கீரையை வேக வைத்து உட்கொள்ள, மலமும், நீரும் நன்றாய் கழியும். வெள்ளை நோய் நீங்கும், பிரமேகம் தணியும். வாதக் குற்றம் பெருகும், கரப்பான் உண்டாகும்.

* * *

## பிரண்டை

**(வச்சிரவல்லி)**

## Vitis quadrangularis

**(N. O. Vitaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Leaves and young shoots*

*Constituents* : *Stem contains calcium oxalate, carotene and ascorbic acid*

*Action* : *Leaves and shoots are Powerful Alteratives, Emmenagogue, Stomachic and Antirheumatic.*

Uses : This is found in tropical areas. Bleeding piles could be cured with this. Indigestion, dyspepsia, diarrhoea, fistula are treated with this and it is an appetizer. If this is

consumed either as food or medicine it cures urinary tract disorders. Eczema, poisonous bites could be treated with this. vitis quadrangularis, Wild jujube, Luffa amara (fruit), Batea froadosa (seed) and celery. If all this are mixed and made infusion, it relieves intestinal gas, piles, obesity, menstrual problem etc. This expells intestinal worms. Asthma, dyspepsia also could be treated with this. This gives strength to bones.

வச்சிரவல்லி வெப்ப பாகங்களில் ஏராளமாய் கிடைக்கின்ற கொடியினம். இதில் ஓலைப் பிரண்டை, உருட்டைப் பிரண்டை, முப்பிரண்டை, சதுரப்பிரண்டை, களிப்பிரண்டை, தீம்பிரண்டை, புளிப்பிரண்டை எனச் சில பிரிவுகளுண்டு. இதில் முப்பிரண்டை கிடைப்பதரிது.

இதனால் எருவாய் தினவு நீங்கும். மேலும் மந்தம், குன்மம், வளிக் கழிச்சல், குருதிக் கழிச்சல், முளைமூலம், கால் ஒய்ச்சலாகியவைகள் நீங்கும். பசி உண்டாகும்.

வச்சிரவல்லி வடகத்தை உணவு முறையாலேனும், மருத்துவ வகையாலேனும் உட்கொள்ள, மூத்திர நோய்களும், செரியாமையும் போகும்.

களிப்பிரண்டையால் தீக்குற்றம் பெருகும். கரப்பான், காணாக்கடி, சிலந்தி இவைகளின் நஞ்சு நீங்கும். ஆண்மை உண்டாகும்.

பிரண்டை, பேரிலந்தை, பேய்ப்பீர்க்கு, முருக்கன் விதை, ஓமம் இவைகளைக் குடிநீரிட்டுக் குடிக்க, வாய்வு நீங்கும், ரத்தமூலம், வயிற்றுக் கோளாறு, ஊளைச் சதை, மாதவிடாய் குறைபாடு நீங்கும். வயிற்றுப் புழுக்கள் வெளிப்படும். ஆஸ்தமா, குன்மம் குணம் தரும். எலும்பு முறிவு, எலும்பு பற்றிய நோய்கள் குணமாகும். பசியைத் தூண்டும்.

* * *

## பிரண்டை

**(புளிப் பிரண்டை)**

## Vitis setosa

**(N. O. Vitaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Leaves and tender shoots*

*Action* : *It is exceedingly Acrid, Alterative, Stimulant, Refrigerant, Tonic and Cooling.*

Uses : This is sweet in taste. Indigetion, dysenstery wheezing, hiccups, and phlegm could be treated with this. Anaemia, chest pain, stomach ache and cough are also cured with this. Tender stem roasted in ghee and if consumed regularly, tastlessness, flatulance could be cured and it improves digestion. If this is consumed regularly for 8 days it cures piles. Powdered tender stem mixed with dried ginger, powdered pepper if consumed in little quantity every day it improves digestion. If this is added in milk with sugar candy, it improves health and purifies blood. This is used in making calcinations.

புளிப்பிரண்டையால், செரியாமந்தம், சீதக் கழிச்சல், இரைப்பு, கொட்டாவி, விக்கல். ஐயப்பெருக்கு இவை போகும். புளிப் பிரண்டையால் உடல் வெளுப்பு, மார்புநோய், வயிற்று வலி, இருமல் இவைகள் விலகும்.

இதன் இளந்தண்டை நெய்விட்டு வதக்கி, அரைத்துத் துவையல் செய்து சாப்பிட்டால், சுவையின்மை, வயிற்றுப் பொருமல் முதலியன போகும். தீபனம் உண்டாகும்.

பிரண்டையை நெய்விட்டு வறுத்து, அரைத்துக் கொட்டைப் பாக்கு அளவு, 8 நாள், காலை, மாலை, சாப்பிட எருவாயின் தினவும், குருதிப் போக்கும் ஒழியும்.

இளந்தண்டை இலையுடன் உலர்த்திப் பொடித்து, சுக்குத் தூள், மிளகுத்தூள் சிறிது சேர்த்துச் சாப்பிட, வயிற்றுநோய், செரியாமை நீங்கும். இதையே, பாலுடன், கற்கண்டு சேர்த்து அருந்த உடலைத் தேற்றி வன்மையைக் கொடுக்கும். இரத்தம் சுத்தியாக்கும், இரத்தம் விருத்தியாகும். மேலும் பஸ்பம் செய்ய உதவும்.

* * *

## பிரப்பங்கிழங்கு

### Calamus rotung or Calamus draco

**(N. O. Palmae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Dragon-gum*

*Action* : *Stomachic, Astringent, Diuretic, Expectorant, Vermifuge, Antiperiodic and Antirheumatic.*

Uses : This is a tuber. The fruit is used to treat phlegmatic disorders. The root is used in treating diseases of the teeth. The infusion made out of its tuber is used in treating arthritis. Tender leaves gives relief in diseases of the blood in biliousness. Root is used in treatment of chronic fevers and are antidote to snake poisons.

பிரப்பங்கிழங்கு, இது பிரம்புக் கொடியின் கிழங்கு. இதன் பழமானது கோழை, கபம் அகற்றும். இதன் வேரால் பல் சம்பந்த மான நோய்கள் குணப்படும்.

இதன் கிழங்கைக் குடிநீர் செய்தேனும், பொடி செய்தேனும் தக்க அளவில் கொடுத்துவர, மேற்கண்ட நோய்கள் தீரும். மேலும் வாதவலியை நீக்கும்.

* * *

## பிரம்மதண்டி

See : Argemone mexicana

பார்க்க : குடியோட்டிப் பூண்டு

* * *

## பிரம்ம பத்திரம்

See : Nicotiana tabacum

பார்க்க : புகையிலை

* * *

## பிரம்மிய வழுக்கை

See : Herpestis monniera

பார்க்க : நீர்ப்பிரம்மி

* * *

## பிராய்

(குட்டி பலா)

**See : Strebulus asper**

**பார்க்க : பலா வகைகள்**

* * *

## பிஸ்தா

## Pistacia vera

**(N. O. Anacardiaceae)**

*Habit* : *Small tree*

*Parts used* : *Nuts*

*Action* : *Sedative, Tonic, Stimulant, Refrigerant and Nutrient.*

Uses : The kernel of its nut is good for health. This acts as galactagogue. This is used in electuaries made to improve health.

பிஸ்தா, இப்பருப்பை உண்பதால் தாது புஷ்டியாகும். பால் அதிகமாகச் சுரக்கும். உடல் வலிமை பெறும். லேகியம் செய்வதற்கு இப்பருப்பானது பயன்படுகின்றது.

* * *

## பீட்ரூட்

## Beta vulgaris

**(N. O. Chenopodiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root, tubers and leaves*

*Constituents* : *Root tubers contain betin*

*Action* : *Emmenagogue, Resolvent, Laxative and Diuretic.*

Uses : This is a nutritious food. Sugar is made out of this root tuber. The juice could be used to made sharbat. This sharbat is abandant in minerals, so it is very good for health.

பீட்ருட், இது ஒரு சத்துள்ள உணவு. மேலைநாட்டில் இதில் இருந்து சர்க்கரைத் தயாரிக்கப்படுகிறது. இதன் சாற்றை பிழிந்து சிறு தீயில் காய்ச்சி மணப்பாகு தயாரிக்கலாம். இம் மணப்பாகு கனிமசத்து நிறைந்ததாகும். உடலிற்கு மிகவும் நன்மை செய்யும்.

இதன் இரசத்தை அருந்த இறுகிய இரத்தக்குழாய், மூத்திரக்குழாய் தொந்தரவு, மஞ்சள் காமாலை, நரம்புக்கோளாறு, கால்கட்டைவிரல் வாதம், மலச்சிக்கல், இரத்தசோகை முதலியவை களுக்கு நலம் தரும்.

* * *

## பீதரோகிணி

## Thalictrum foliolosum

### (N. O. Ranunculaceae)

*Habit* : *Tall perennial rigid herb*

*Parts used* : *Root*

*Constituents* : *It contains an alkaloid 'Berberine'*

*Action* : *Tonic, Aperient, Febrifuge, Alterative Refrigerant, Demulcent, Diuretic, Depurative and Hydrocyphallus.*

Uses : This is a herb. This is very fiberous and the surface of the fruit is feathery. The leaves are yellowish on the upperside and blackish at the bottom. The roots are used in treating eye disorders. Infusion made out of its root is used in periodic fever and indigestion. If this is applied with honey it cures vitilago and boils. If used as snuff it cures sinusitis. The infusion and decoction cures, jaundice. If eyes are washed with this water in which the root is soaked it cures eye disorders. Powdered root if consumed thrice daily with water, it cures periodic fever. If it is roasted with oil and used on the head, it cures eye disorders. If this powder is taken direct internally it cures dysuria.

பீதரோகினி, இது ஒரு வகைப் பூண்டு. இது காகத்தின் இறகு போன்று கனமாயும், நாறுள்ளதாயுமிருக்கும். இதற்கு வெளிப் புறத்தில் மஞ்சள் நிறமும், உட்புறத்தில் கருநீல நிறமும் உண்டு.

இதன் இலையின் வெளிப்புறம் மஞ்சள் நிறமாக இருப்பதால் இது பீதரோகினி எனப் பெயர் பெற்றது.

இதன் வேரினால் கருவிழி நீலகாசம், இமையைப் பற்றிய நீர்ப்பில்லம், கண்ணருகல் நோய், அக்கி நோய் இவை தீரும். அன்றியும் இதை முறைக் காய்ச்சலுக்கும், செரியாமைக்கும் கொடுக்கலாம். இதை தேனில் உரைத்துப் பூச, தேமல் முதலிய படைகள் போகும். கட்டிகள் கரையும். தோல் மென்மையுற்று ஒளி பெறும். இதை மூக்கிலிட, நீரேற்றம் முதலிய தலையைப் பற்றிய நோய்கள் விலகும். கண்ணிலிட கண் புகைச்சல் மாறும். குடி நீரிட்டுக் கொடுக்க வயிற்றுநோய், காமாலை நீங்கும். ஊறல் நீரைக் கொண்டு கண்ணைக் கழுவ, கண் நோய்கள் நீங்கும்.

பொடி செய்த வேரை நாளுக்கு மூன்று வேளை நீரில் கலந்துக் கொடுக்க முறைசுரம் நீங்கும். எண்ணெயிலிட்டுக் காய்ச்சித் தலைக்கிட்டு, மூழ்கிவர, கண்நோய் அணுகாது. கண் துலங்கும். மூத்திர கிரிச்சரம் குணப்படுத்தும். கடால் ரோகங்களையும் குணப் படுத்தும்.

* * *

## பீநாறி மரம்

### Sterculia foetida

**(N. O. Sterculiaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, leaves and kernel of the seed*

*Constituents* : *Kernel contains fixed oil and starch. Oil is thick, bland non-drying, depositing crystaline solid, fats and fatty acids*

*Action* : *Bark and leaves are Aperient, Diaphoretic and Diuretic. Seeds are oily. Decoction of capsules is Mucilaginous and Astringent.*

Uses : This tree found in the forest and hilly area. The leaves, seeds, flowers and bark are used in medicines cure eczema, itching etc. Oil extracted from the seed if taken

internally and externally it cures skin disorders and rheumatism. Bark is used to treat dysentery and diseases of the blood. The infusion made out of bark and leaves induces sweating and bring down the body temperature.

பீநாறி மரம் மலை அல்லது காடடர்ந்த நாடுகளில் வளரும். இதன் இலை, விதை, பூ, பட்டை முதலியன மருத்துவ தன்மையுடையன.

இதன் விதையினால் சொறி, சிரங்கு, சுரம் முதலியவை போகும். இதன் விதையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயானது உட்புகட்டியும், வெளியில் பூசியும் வரின், சொறி, சிரங்குகள் தீரும். மற்றும் கிரந்தி, வாதநோய்கள் குணப்படும். உடலைப் போஷிக்கும்.

இம்மரத்தின் பட்டையினால் கழிச்சல் நோய்களும், வயிற்றை பற்றிய நோய்களும், குருதி நோய்களும் போகும்.

இதன் இலை, பட்டை முதலியவற்றை முறைப்படி குடிநீர் செய்து கொடுக்க அது வியர்வையை உண்டாக்கி சுரத்தைத் தணிக்கும். சிறுநீரைப் பெருக்கும்.

* * *

## பீநாறி
### (சங்கை பீநாறி)

## Paederia foetida
### (N. O. Rubiaceae)

*Habit* : *Twining plant*

*Parts used* : *Leaves*

*Constituents* : *It contains an essential volatile oil and two alkaloides viz, Alpha paederine and beta paederine*

*Action* : *Leaves are Astringent, Diuretic, Antirheumatic and Antilithic.*

Uses : This, if taken internally cures rheumatism, stomach ache and other gastric troubles. This gives relief from calculous affections of the urinary system, but the root of this plant discolorises the teeth.

சங்கை பீநாறியை உட்கொள்வதால் வாத நோய்கள், வயிற்று வலி, வாயுவினால் வரும் வயிற்றுக் கோளாறுகள் குணப்படும். கல்லடைப்பு, சதையடைப்பு நீங்கும்.

இதன் வேரானது, பல்லினைக் கருக்கச் செய்யும்.

* * *

## பீநாறி

(எருமைப் பீநாறி)

**See : Ailanthus malabarica**

பார்க்க : பெருமருந்து

* * *

## பீர்க்கு

## Luffa acutangula

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Fruit, fruit-juice, seeds, root and leaves*

*Constituents* : *Dried fruit deprived of seeds contain a principle allied to colocynthin and a gelatinoids bitter principle named luffin. Seeds contain a bland fixed oil. Albuminoids, Soulble carbohydrates and woody fibre*

*Action* : *Fruit is Demulcent, Diuretic, Bitter, Tonic and Nutritive. Fruit-juice is Bitter. Seeds are Emetic, Expectorant and Purgative. The Emetic property is believed to reside in the kernel. Seeds and leaves are also Bitter. oil is Emetic, Purgative, Emollient, Antisyphilitic and Vulnerary.*

Uses : The fruit of this plant induces cold. If this fruit is not well cooked, it produces several diseases connected to phlegmatic, rheumatic and bilious. But if it is included in our diet well cooked, it is a dietic food. The paste of the

leaves are used externally for eczema and other minor skin ailments. Juice of the leaves could be used as eye drops for children. Leaf juice slightly heated could be used to cure diabetes if taken regularly (1 teaspoon). Seed oil is used externally for leprosy and other skin ailments. Infusion of the root is used to treat anaemia.

பீர்க்கு ஒரு கொடியினம். ஏராளமாய் வளரும். இதில் நுரைப் பீர்க்கு, பேய்பீர்க்கு என இருவகையுண்டு. பேய்பீர்க்கு உணவுக்கு ஏற்றதன்று. கசப்புடையது. வாந்தியை உண்டாக்கும். நுரைப் பீர்க்கைச் சிலர் உண்பர்.

காயினால் நீரேற்றமுண்டாகும். தீக்குற்றம் ஒன்றாக இருந்தது மூன்றாக உயரும். பித்தம் தரும், கபத்தை விருத்திச் செய்யும்.

''பீர்க்கின் காய்கறி பேதமிலா துண்ப
பார்க்கு அது யாவருக்கும் மிகுந்த பத்தியக் கறியாம்''

பீர்க்கங்காயை உணவு முறையாக பாகப்படுத்தி உட்கொள்ளில் அது யாவருக்கும் மிகுந்த பத்திய உணவாகும்.

இலையை அரைத்து அழுகிய புண்களுக்கு வைத்துக் கட்ட, அவை போகும். சரும நோய்க்குப் பற்றிடலாம். இலையைச் சாறு பிழிந்து கண்ணில் விட சிறு குழந்தைகட்குண்டாகும் கண்ணோய் நீங்கும். இலைச் சாற்றை வெதுப்பி ஒரு தேக்கரண்டி வீதம் நீரிழிவு நோய்க்குக் கொடுக்கலாம்.

விதையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயானது, குஷ்ட ரோகம், சர்மநோய்களுக்குப் பூச குணம் தரும். இந்த எண்ணெய் இலிங்கத்தை மெழுகாக்கும்.

வேரைக் குடிநீரிட்டுச் சோகைக்குக் கொடுக்க, இது நீங்கும் கால் வீக்கம் குறையும்.

* * *

## பீர்க்கு
### (மெழுகு பீர்க்கு)

## Luffa cylindrica
### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Saponin*

*Action* : *Lithontriptic, Expectorant and Stomachic. Seeds are Emetic and Cathartic.*

Uses : This is used in treating anuresis, disorders of the spleen, liver, phlegmatic cough, stomach ache and biliousness.

மெழுகுப் பீர்க்கினால் நீரடைப்பு, கல்லீரல், மண்ணீரல் நோய்கள், கப இருமல், பித்தாதிக் கத்தினால் உண்டாகும் வயிற்று நோய்கள் குணப்படும்.

* * *

## பீர்க்கு
### (பேய்ப் பீர்க்கு)

## Luffa amara
### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Fruit and seeds*

*Constituents* : *Seed oil*

*Action* : *Plant is Bitter, Tonic and Diuretic. Fruit is violently Cathartic, Emetic, Expectorant and Purgative.*

Uses : This cures asthma and skin diseases. The dried fruit is used to treat jaundice and arthritis. The powdered seed if consumed, it cures ulcers. Seed oil is aphrodisiac.

பேய்ப்பீர்க்கு ஆஸ்துமா, சரும நோய்கள் முதலியவற்றை குணமாக்க பயன்படுகிறது.

இதன் காய்ந்த காய், காமாலை, வாதம் நீக்கும். பேய்ப் பீர்க்கின் விதையைச் சூரணஞ் செய்துச் சாப்பிட துஷ்ட இரணம் ஆறும். பேய்ப்பீர்க்குத் தைலம் தாதுவைக் கட்டும் ஓர்வகைத்தைலம். இதன் எண்ணெயினால் இலிங்கம் மெழுகாகும்.

* * *

## பீளை

**(சிறு பீளை, கற்பேதி)**

## Aerva lanata

**(N. O. Amaranthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant, root and ash*

*Action* : *Anthelmintic, Diuretic, Lithontriptic, Emmenagogue and Alexipharmic.*

Uses : This is a small herb. Flowers are white in colour. This cures dropsy, anuresis and bladder stones. Leaf juice if taken regularly it cures menorrhagia, calculous affections, anuresis, burning sensation etc. If the root is included in the rice gruel it acts as tonic for pregnant ladies. Bark of its root with palmsugar is made into a paste and if the paste is consumed regularly it cures bladder stones, anurisis, menorrhagia etc. The ash of the root mixed with Indigofera ennaephylla, root of Grataeva religiousa and root of Pavonia odorata are added with water and made into a paste by boiling it. This is used in treating urinary stone problems. It also acts as diuretic. The root of this plant also acts as an antidote for snake poison.

கற்பேதி பூண்டு இனத்தைச் சேர்ந்தது. உழவிற்குப் பின் பயிரிடாத நிலங்களிலும், வெளிகளிலும் 1 முதல் 2 அடி உயரம் வளரும். இலைகளுக்கு நடுவில் வெண் நிறப் பூ உண்டு.

இது பாண்டு, முப்பிணி, குடற்சூலை, குருதிச்சூடு ஆகியவைகளைப் போக்கும்.

இதன் இலைச்சாற்றை உட்கொண்டு வர பெரும்பாடு, கல்லடைப்பு, நீரடைப்பு, நீர் எரிச்சல் போகும். கஞ்சி வகைகள் ஒன்றில், இதன் வேரைச் சேர்த்துக் காய்ச்சிக் குடித்து வர, சூல் கொண்ட பெண்களுக்கு வலுவைத் தரும்.

சிறு பீளை வேர்ப்பட்டை, பனைவெல்லம் எடுத்துக் கூட்டி, மைபோல அரைத்து, பசும்பாலிற் கலந்து, காலை, மாலை, உட்கொண்டு வர, கல்லடைப்பு, நீரடைப்பு, பெரும்பாடு முதலியன நீங்கும்.

சிறு பீளை சமூலம், சிறு நெருஞ்சி, மாவிலங்கை வேர், பேரா முட்டி வேர் இவைகளை எடுத்து, போதிய நீர் விட்டு, எட்டில் ஒன்றாய்க் குறுக்கிப் பருக, கல்லடைப்பு நீங்கும். நீரை வெளி யேற்றும். இதன்வேரை உட்கொள்ள பாம்புக்கடி விஷம் இறங்கும்.

* * *

## பீளை

### (பெரும் பீளை)

## Aerva tomentosa

### (N. O. Amaranthaceae)

*Habit : Herb*

*Parts used : Whole plant*

Uses : This plant is used to treat small pox, throat pain, nasal conjuction. This is also acts against rabbis. Piles also could be cured with this.

அம்மை நோய், தொண்டை வலி ஆகியவற்றை பெரும்பீளை போக்கும். மேலும் இது வெறிநாய் கடிக்கும் மூல நோய்க்கும் மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## பீன்ஸ்
### (சீமை பீன்ஸ்)

## Phaseolus vulgaris
### (N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Pods*

*Constituents* : *Fresh vegetable contains albuminoids and vitamins.*

Uses : This is vegetable, used for cooking. This is very proteinasious..

சீமை பீன்ஸ் சமையலுக்கு ஆகும் ஒருவித கிச்சடி பயிர். புரதச்சத்து அதிகமுடையது.

* * *

## பீன்ஸ்
### (நாட்டு பீன்ஸ்)

## Vicia faba
### (N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Tender pods*

*Constituents* : *Fresh pods contain proteins and minerals*

*Action* : *Nutritive.*

Uses : This is vegetable, used for cooking.

நாட்டு பீன்ஸ் சமையலுக்கு ஆகும் ஒருவித காய்கறிப் பயிர்.

* * *

# புகையிலை
## (பிரம்ம பத்திரம்)

## Nicotiana tabacum
### (N. O. Solanaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Dried leaves and a dark brown acrid empi rheumatic oil obtained by distillation from the stalks and the herb*

*Constituents* : *The active principle of tobacco is responsible for its narcotic properties. It contains nicotine, nicotinamine the isomeride of nicotine and colourless alkaline oil, nicoteine, and nicotelline.*

*Action* : *Juice of the leaves is Sedative, Antispasmodic and Powerful insecticide. Dried leaves are Powerful Sedative, Nauseating, Emetic and some time Purgative.*

Uses : The leaf of this plant is called tobacco. This is used for smoking. Dried leaves are aromatic. The alkaloid taken from this is called Nicotine which is poison. This is used to treat ascites, liver disorders and anuresis. The leaves exhibit medicinal property. This produces dryness of the mouth, giddiness, spermatorrhoea and impotency. It reduces the action of other drugs, but it could be used to treat diseases if used in recommended doses. This is used to treat wheezing, by inhaling the steam of it. This could be used externally on boils to reduce the pain and burning sensation. If this is used along with dried Datura flower and smoked it induces sleep. To treat hernia and anuresis, it could be used as an infusion. If it is uesd as cigar it acts as laxative, but it also acts as sedative. It produces dryness in the mouth and reduces the appitite. This is used as suppositterus in small children to treat constipation. Tooth ache could be cured if small piece of tobacco is kept nearby the teeth. It reduces the saliva secrĕtion rclievs pain. The decoction of this isused externally for eczema and ulcers. The ash of this plant with butter is

used as an external application for ulcers. The smoke of this is vermicide. The oil of this plant also contain Nicotine. The soaked tobacco water acts as anti-dote for snake bite. This is mixed with other aromatic substances and used for hukka smoking. Lime water added with this infusion and kerosine is added with this mixture in the ratio of 1:3. This solution could be used aspesticides. Many other pesticides are also prepared from this.

பிரம்மபத்திரம், இது மிக்கக் காரமுடையது. இதன் இலைக்கு புகையிலை எனப் பெயர். இது புகைப்பிடிப்பதற்கு பயன்படுவதால் இப்பெயர் பெற்றது. இதன் பச்சிலைக்கு, உலர்ந்தப் பின்னுள்ள மணம் இராது. இதினின்று எடுக்கும் உப்பு மிகுந்த கெடுதி செய்யும். இதற்கு ''நிக்கோடைன்'' என்று பெயர். இந்த உப்பை நீர்க்கட்டு, பெருவயிறு, ஈரல் நோய் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம். இந்த இலை மருத்துவகு குணமுடையது.

இசிவு நோய்களுக்கு, இதனை உள்ளுக்குக் கொடுக்காமல், ஆவி பிடித்தல் மூலம் குணப்படுத்தலாம். புகையிலையை கட்டிகள், வீக்கங்கள் இவைகளால் உண்டாகும் எரிச்சலும், வலியும் குறை வதற்கு அவற்றின் மீது போடலாம். உலர்ந்த ஊமத்தைப் பூவுடன் சேர்த்து, சுருட்டு பிடிக்க, இரைப்பு, இருமல் இவைகளால் உண்டாகும் தூக்கமின்மைப் போய் நன்மையுண்டாகும். இறுகிக் கொண்ட குடலிறக்கம், நீரடைப்பு இவைகளுக்கு புகையிலையைக் குடிநீரிட்டு வழங்கலாம். சுருட்டுப் பிடித்தால், சிலருக்கு வயிறு கழியும். ஆனால், இது மயக்கத்தையும், ஆயாசத்தையும் தரும். வறட்சியை உண்டாக்கும். பசித்தீயைக் கெடுக்கும். சிறு குழந்தை கட்குக் காணும் மலக்கட்டுக்கு புகையிலைக் காம்பை எருவாயில் வைக்கும் பழக்கம் உண்டு. ஒரு துண்டுப் புகையிலையை வாயில் அடக்கிக் கொண்டால், உமிழ் நீர் வடிந்து பல் வலி தணியும். கரப்பான், சொறி, சிரங்குக்கு இதன் குடிநீரை மேலுக்கு வழங்குவதுண்டு.

புகையிலையைச் சுட்ட சாம்பலை, வெண்ணையுடன் கலந்து, புண்களின் மீது பூசப் புண்கள் உலரும். இதன் புகை, நுண்புழுக் களைக் கொல்லும். இதை நீராக வடித்தால் அந்நீரின் மீது எண்ணெய் படியும். இதில் ''நிக்கோடைன்'' என்ற நஞ்சுண்டு. புகையிலையை, நீரில் நன்றாய்க் கசக்கிப் பிழிந்து வடிக்கட்டியதைக் கொடுக்க, பாம்புக்கடி நஞ்சு நீங்குமென்பர். இதர மணம் தரும் பொருள்களுடன் சேர்த்து உக்கா பிடிக்கவும் பயன்படுத்துகிறார்கள். புகையிலைக் கழிவுகளுடன், சமபாகம் தெளிந்தச் சுண்ணாம்பு நீரைக் கலந்து, வரும் எடையில் 1:3 என்ற விகிதத்தில் மண்ணெண்

ணையைக் கலந்து, ஊறலிட்டு, பிழிந்து வரும் நீரை, பூச்சிக் கொல்லி மருந்தாகப் பயன்படுத்தலாம். பயிர் வகைகளில் ஏற்படும் பூச்சிப் புழுக்களை திறம்பட அழிக்கும் புறவிளைவு இல்லாத பூச்சிக் கொல்லி மருந்தாகும். புகையிலைக் கழிவுகளுடன் மேலும் பெட்ரோலியம் கரைப்பான்களைக் கலந்து நிக்கோடின் சல்பைட் என்னும் பயிர்களுக்குத் தீங்கு இழைக்காத பூச்சிக் கொல்லி மருந்துகளைத் தயாரிக்கலாம்.

* * *

## புகையிலை
**(காட்டுப் புகையிலை)**

## Lobelia nicotianaefolia
**(N. O. Lobeliaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and roots*

*Constituents* : *Lobeline, lobenine, lobilinine*

*Action* : *Stimulant, Sedative, Antispasmodic, Sialogue and root is Poly fructosan.*

Uses : This has got the same property of tobacco. Asthma, phlegmatic cough and billiousness could be treated with this. The root is used to treat scorpain sting.

காட்டுப் புகையிலைக்கு பொதுவாக புகையிலையின் குணமே உண்டு என்றாலும் ஆஸ்துமா, கப இருமல், சுவாசத்தடை முதலியவைகளுக்கு மருந்தாகும்.

இதனுடைய வேர் தேள்கடிக்குப் பயன்படுத்தப் படுகிறது.

* * *

## புகையிலை
**(காளான் புகையிலை, புகையிலை மல்லி)**

## Crobanche indicum

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

Uses : This is mainly used in veterinary medications. Diphtherea, diarrhoea, oedema and abscesses could be treated with this.

புகையிலை மல்லி கால்நடை மருத்துவத்தில் சிறந்தது. தொண்டையடைப்பான், பேதி, வீக்கம், கட்டி முதலியவற்றில் பயன்படும் மூலிகையாகும்.

* * *

## புகையிலை

**(நிலப் புகையிலை)**

## Digitalis purpurea

**(N. O. Scrophulariceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Digitaline, digotoxin, digoxin*

*Action* : *Cardiac, Stimulant, Alterative, Aperient and Demulcent.*

Uses : Medicines to treat cardiac disorders are prepared from this.

தரைப்புகையிலையில் டிஜிடாலின், டிகோடாக்ஸின் முதலான சத்துக்கள் இருக்கின்றன. இதில் இருந்து, இருதய நோய், இரத்தக் கொதிப்பு நோய் முதலானவற்றுக்கு மருந்துகள் தயாரிக்கப் படுகிறது.

* * *

## புங்கம்

**(புங்கு, புங்கன், பூந்திகரஞ்சகம்)**

## Pongamia glabra

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, stem, leaves, fruit and oil from the seeds*

*Constituents* : *Seeds yield an oil known as pongamia oil, or honge oil. Seeds also contain traces of an essential oil. Bark contains a bitter alkaloid.*

Action : *Seeds, leaves, root and oil are Antiparasitic. Bark is Astringent. Powdered seeds are Febrifuge and Tonic and have Expectorant properties. Leaves are also Cholagogue, Astringent, Alterative, Stimulant and Parasiticide. Oil is Antiseptic and Stimulant.*

Uses : This is commonly available. Leaves, roots, seeds and flowers are of medicinal properties. The powder is used in treating diabetes. Oil of this plant is used as eye drops to improve the eye sight. This could be also used in arthritis and neuritis. This is given along with other drugs to treat cancer. The oil of this is a main ingredient in treating diseases like eczema, itching and ulcers. The bark of the root is removed and the juice is extracted from this and cocoanut milk is added with this and boiled. A cloth is dipped in this mixture could be used externally for carbuncles, chronic ulcers and venereal ulcers. The flower of the plant along with powder of tamarind, sweet flag, garlic, cumin, seeds of Holarrhena antidysenteria, sarasapparilla are mixed in equal quantity and it is mixed in 700 ml cow's milk and 1400 ml cocoanut oil and boiled. If this mixture if given regularly it cures eczema of different kinds.

புங்கம் சாதாரணமாய் எங்கும் பயிராகக்கூடிய மரம். இதில் காட்டுப்புங்கன் என ஒரு வகையும் உண்டு. இரண்டிற்கும் ஒரே குணமுண்டு. இதன் இலை, வேர், விதை, பூ, எண்ணெய் அனைத்தும் மருத்துவ பயனுடையவை.

இதன் பூ நீரிழிவுக்கு உதவும். எண்ணெய் கண் ஒளி தரும். வாதவலி, நரம்பு பற்றிய வலி முதலானவற்றில் குணம் தரும். புற்றுநோய்க்கு இதர மூலிகையுடன் சேரும். கரப்பானும், சொறி, சிரங்கும் இந்த எண்ணெயைக் கலந்து செய்கின்ற மருந்தால் ஒழியும்.

புங்கம் வேரை மேல்தோல் நீக்கி மெல்லியதாகச் சீவி, பால் பிழிந்து அதற்கு நேர் எடை தேங்காய் பால் சேர்த்து, காய்ச்சி வைத்துக்கொண்டு, ஒரு மெல்லியத் துணியில் நனைத்து, பிளவை, ஆறாத புண்கள், மேகபுண்கள், ஆகியவற்றிற்குப் போட்டுவர அவை சீக்கிரத்தில் ஆறி போகும்.

**புங்கம்** பூ, புளியம்பூ, வசம்பு, **உள்ளி** (பூண்டு), ஜீரகம், வெட்பாலை அரிசி, நன்னாரி இலைகளை சமபாகமாக எடுத்துக்

கொண்டு பசுவின் பால் 1லி. தேங்காய் எண்ணை 1 லி. சேர்த்துக் காய்ச்சிக் கொடுக்க கரப்பான் பதினெட்டும் தீரும்.

புங்கு இலை, புளியம் இலை, நொச்சியிலை, வேப்பிலை, மாவிலை, உத்தாமணியிலை, பொடுதலை, கருவேம்புயிலை, நாரத்தையிலை, சங்கஞ்செடியிலை, அவுரியிலை, பொன்னாவரை இலை, இவைகளை சமஅளவு எடுத்து நிழலில் உலர்த்தி, தண்ணீர் $1\frac{1}{2}$ லி. அளவுச் சேர்த்து, பிறகு கடுகுரோகிணி, இந்துப்பு, இவை களை சிறுப்பொட்டலங்களாகக் கட்டிப்போட்டு, தீயெரித்து, குடிநீராக வற்றவைத்து மாந்த கணங்களுக்குக் கொடுக்கலாம்.

* * *

# புங்கம்

**(மணிப்புங்கம், பூவந்தி, பொண்ணாங்கொட்டை)**

## Sapindus emarginatus

**(N. O. Sapindaceae)**

*Habit* : *Large tree*

*Parts used* : *Leaves fruits and roots*

*Constituents* : *Fruit contain saponin. Cotyledons contain fat.*

*Action* : *Seeds are Acrid, Poison and Narcotic, Tonic, Expectorant, Emetic, Purgative, Nauseant, Anthelmintic and Alexipharmic.*

Uses : The fleshy seed of this plant is soaked in water, it produces lather. This is used in cleaning ornaments and it could also be used as shampoo. This leaves cures diarrhoea, stomach problems, head ache, uterus disorders etc. The infusion of the leaves could be used to treat head ache, rheumatism etc. The infusion could be used externally also. The root of the plant cures rigidity of joints and snake bites etc.

புங்கம் சதைப்பற்றுள்ளக் கொட்டை. நீரில் கரைந்தால் நுரை வரும். இது ஆபரணங்களை சுத்தம் செய்வதற்குப் பயன்படுகிறது.

இது காக்கைவலிப்பு, தலைவலி, வயிற்றுவலி, சூதக நோய் முதலியவை நீக்கும்.

இவை வாதவீக்கத்தை குணமாக்கும். கண் ஒளி பெற இதிலிருந்து மருந்து தயாரிக்கலாம். கர்ப்பத்தடைக்கு பூவந்திக் கொட்டையிலிருந்து மெழுகுத் தயாரிக்கலாம்.

இதன் வேர் கீல்வாதம், பூச்சிக்கடிகள் முதலியவற்றைத் தீர்க்கும்.

இதன் காயை சோப்புக்குப் பதிலாக எண்ணெய் பிசுக்கை அகற்றப் பயன்படுத்துவார்கள்.

* * *

## புச்சா

## Sapindus tirfoliatus

### (N. O. Sapindaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit and leaves*

*Constituents* : *Fruits contain saponin*

*Action* : *Tonic, Expectorant, Emetic and Purgative. Seeds are Narcotic and Acrid poison.*

Uses : Pulp of the fruit in small quantity if given expels the intestinal worms. Pulp of the fruit is made into a paste with ginger and applied externally to insect bites, scorpion sting, centipede bites and scrofulous swellings. Leaves are used in baths for painful joints. Roots are used in treating gout, rheumatism and paralysis.

புச்சா மரத்தின் பழச்சதையை சிறிய அளவில் உள்ளுக்குக் கொடுக்க வயிற்றுப் புழுக்களை வெளியாக்கும். இதை காடியுடன் அரைத்து பூச்சிக்கடி, பூரான்கடி, தேள்கடி முதலியவற்றிற்குத் தேய்க்க வலி குறைவதுடன் விஷம் இறங்கும். இதை கண்டமாலைக்கும் பற்றிடுவர். இலையை குளிக்கும் நீரிலிட்டு பின்பு குளிக்க மூட்டுவலி குறையும். வாதம், மூட்டுவலி, பாரிசவாயு ஆகியவற்றிற்கு வேர் மருந்தாகப் பயன்படுகிறது.

* * *

## புடலங்காய்
### (சோத்தினி)

## Trichosanthes anguina
### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Fruit*

*Constituents* : *The fresh vegetable contains moisture and the completely dried material contains albuminoids, corbohydrates and ash.*

*Action* : *Ripe fruits are Purgative. Tender fruits are Refrigerant, Laxative, Stimulant and Aphrodisiac.*

Uses : This is a climber. Fruits are long and green in colour. This is called snake guard. This is used commonly as vegetable.

புடலங்காய் கொடி வகையைச் சேர்ந்தது. காய்கள் நீண்டு பச்சையாகத் தொங்கும். இது அன்றாட சமையலில் பயன்படுவதால் ஏராளமாக பயிரிட்டு வருகிறார்கள். இவ்வினத்தில் கொத்துப் புடல், நாய்ப்புடல், பன்றிப்புடல், பேய்ப்புடல் என பலவகை உண்டு. இவைகளுள் கொத்துப்புடல், நாய்ப்புடல் இவ்விரண்டும் குத்துச்செடியாக வளரும். பன்றிப்புடல் கொடியாக இருந்த போதிலும், புடலின்காயைப் போலன்றி, நீளம் குறுகியதாக இருக்கும். பேய்ப்புடல் மிகவும் கசப்புடையது. அதனால் இதனை உண்பதில்லை.

* * *

## புடலை
### (பேய்ப்புடலை)

## Trichosanthes dioica
### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Fruits*

*Constituents* : *Tender fruits are rich in vitamin and minerals.*

*Action* : *Fruit is Febrifuge, Laxative, slightly Bitter and blood Purifier. Juice of the leaves and fruit is a Cholagogue and Aperient. Root is a Drastic Purgative. Leaves are Tonic and Febrifuge.*

Uses : It is very bitter in taste and not used in cooking. This is used in treating giddiness, jaundice, biliousness etc. Small pox is also treated with this.

பேய்ப்புடலையால் அதிமயக்கம், காமாலை, அதிபித்தம் முதலியன நீங்கும். அம்மை நோயின் வேகத்தைத் தணிக்கும். கசப்புச் சுவையுடையதால் இதனை யாரும் உண்பதில்லை.

* * *

## புடலை

### (காட்டுப் பேய்ப்புடலை)

## Trichosanthes cucumerina

### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Seeds leaves and roots*

*Action* : *Root is Purgative and Tonic. Infusion of tender shoots, and capsules are Aperient.*

Uses : Leaves, seeds and root are used to treat phlegmatic disorders and jaundice. The leaf juice if applied on the heal, it prevents falling of the hair. It is used as infusion to treat fever.

காட்டு பேய்ப்புடலையின் இலை, விதை, வேர் முதலானவை கபம் நீக்கியாகவும், காமாலை மருந்தாகவும் பயன் படும். இதன் இலைச் சாற்றை தேய்த்தால் தலைமயிர் உதிர்வது நின்றுபோகும். சுரங்களுக்கும் கொடுக்கலாம். குடிநீர்களில் பெரும்பாலும் இது கூட்டப்படும்.

* * *

# புண்ணாகப் பூண்டு

## Rungia parviflora

**(N. O. Acanthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and root*

*Action* : *Leaves are Diuretic, Vermifuge, Cooling and Aperient.*

Uses : Leaves and roots are febrifuge.

புண்ணாகப்பூண்டின் இலையும், வேரும் உடலுக்குக் குளிர்ச்சி ஏற்படுத்திக் காய்ச்சல் தணிக்கும் மருந்தாக செயல்படும்.

* * *

# புதினா

(ஈயெச்சக் கீரை, புதியன் மூலி)

## Mentha sativa

**(N. O. Labiatac)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Leaves and flowering tops contain a volatile essenial oil.*

*Action* : *Astringent, Refrigerant, Stomachic, Stimulant, Diuretic, Carm and Anti-spasmodic.*

Uses : The leaves and the stem of this plant exhibits many medicinal properties. Infusion of the plant is given to patients of fever (30to50 ml). This is also used in treating hiccups and jaundice. Infusion of this plant along with lemon grass is used on treating head ache, vomiting etc. This contain iron and vitamin 'B'. The fruit is used in cooking. Oil is extracted from this plant which is similar to peppermint oil. It is used in treating head ache. If taken internally along with water it acts as an appetizer.

புதியன் மூலியை உலர்த்திக் குடிநீரிட்டு 30 மில்லி முதல் 60 மில்லி வரை சுரம் நோய்களுக்குக் கொடுக்கலாம். மேலும் இதனால் காமாலை, விக்கல் முதலிய நோய்களும் போகும். இதனையும் கற்பூரப் புல்லையும் ஒரே எடையாக எடுத்து குடிநீரிட்டுக் கொடுக்க தலைவலி, வாந்தி முதலியவை நீங்கும். இதில் விட்டமின் 'B' சத்தும், அயச்சத்தும் குறைவின்றி இருப்பதால் இதை உணவோடு சேர்த்துண்பது அவசியம். இப்பூண்டிலிருந்து ஒருவகை எண்ணெய் எடுக்கிறார்கள். இது மேனாட்டார் வழங்கும் 'பெப்பர் மிண்ட்' எண்ணெயை ஒத்தது. ஆனால் காரம் சிறிது குறைந்திருக்கும். இதை தலைவலிக்குத் தடவலாம். உள்ளுக்குச் சிறிது நீரில் கலந்துக் கொடுக்க, இது வயிற்று வலியை நீக்கி, பசியை உண்டு பண்ணும்.

* * *

## புதினா

**(மிட்டாய் புதினா, பெப்பர்மிண்ட் புதினா)**

## Mentha piperita

**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and the whole herb*

*Constituents* : *Leaves contain a volatile oil which is known as peppermint oil*

*Action* : *Leaves are Antiseptic, Deodarant, Stimulant and Carminative. Plant is Stimulant, Stomachic, Carminative and Antiseptic.*

Uses ; This is cultivaicd in foreign countries. The oil extracted from this plant is aromatic and used in confectionaries.

மிட்டாய், பெப்பர்மிண்ட், இது மேனாட்டில் வளரும் புதினா வகை. இதிலிருந்து வடிக்கப்படும் எண்ணெயில் காரச்சுவை அதிகமாக இருக்கும்.

* * *

# புத்ரசோகி
## (புத்ர சீவி விதை)

## Putranjiva roxburghii

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, stones of the fruit and seeds*

*Constituents* : *Seeds yield an oil. Seed oil contains glyceride, of certain acids together with sitosterol*

*Action* : *Refrigerant, Emollient, Anti-rheumatic, Laxative, Tonic and Cooling.*

Uses : This is a herb, which is an antidote for aconite. The seeds are used in treating arthritis and gonorrhoea. The leaves are used in treating tonsils and piles. The powdered seed mixed with sugar increase vitality if taken internally. It increases the semen secretion.

புத்ரசீவி விதைக்கு வாத நோய், வயிற்றுப்புசம், வெள்ளை நோய் முதலியவை நீக்கும் குணமுண்டு. இதன் இலை தொண்டை வீக்கத்தையும், மூல நோயையும் குணமாக்கும். இதன் விதையைப் பொடி செய்துச் சர்க்கரையுடன் கலந்து காலை, மாலை உண்டு வந்தால் ஆண்மை பெருகும். கர்ப்பத்தை உண்டாக்கக் கூடிய சுக்கிலத்தை உண்டு பண்ணும்.

* * *

# புரசம்

**See : Butea frondosa**

**பார்க்க : பலாசு**

* * *

## புரசு

(வெள்ளை புரசு)

## Mundulea sericea

**(N. O. Leguminosae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds and bark*

*Constituents* : *Bark and root contain a very toxic glycoside*

Uses : This is rich in iron. This is used in treatment of rheumatism, paralysis and body pain. Seeds are used as an anthelmintic and gives relief from stomach ache.

வெள்ளை புரசு, இதில் அயச்சத்துள்ளது. வாதம் வாதவலி, தேகக் குடைச்சல் முதலானவற்றிற்கு மருந்தாகப் பயன்படுகிறது. விதை வயிற்றுப் பூச்சி, வயிற்றுவலி முதலானவற்றை நீக்கும்.

* * *

## புல்லுருவி

## Dendrophthoe pentandra

**(N. O. Loranthaceae)**

*Habit* : *Sub shrub*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Twigs contain quercitrin and a wax*

*Action* : *Stimulant, Refrigerant, Diuretic and Antidote.*

Uses : This contains copper and iron. This is a climber which grows on the tree and exhibits the medicinal property of that tree. This is used as an antidote for the poison of nux-vomica. This is used in the treatment of psychic disorder. This gives relief in asthma.

புல்லுருவி தாமிரச் சத்துள்ளது. இது மரங்களின் மீது பற்றி வளரும் ஒருவிதக் கொடி. எம்மரத்தைப் பற்றி வளருகிறதோ அம்மரத்தின் குணமே இதற்கும் இருக்கும். தவிர அம்மரத்தின் பெயருடனே இதுவும் அழைக்கப்படும். எட்டிக் கொட்டையின் நஞ்சுக்கு மாற்று மருந்தாகிறது. ஹிஸ்டீரியா போன்ற மனவியாதி

களில் இது மருந்தாகப் பயன்படுகிறது. சிறிதளவு ஆஸ்துமா நோயிலும் மருந்தாக பயன்படுத்தப்படுகிறது.

* * *

## புல்

(அருகம்புல்)

**See : Cynodon dactylon**

* * *

## புல்

(ஊசிப்புல்)

## Heteropogon contortus

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root and the whole plant*

*Constituents* : *An essential oil is extracted*

*Action* : *Plant is Anti-rheumatic. Root is Stimulant and Diuretic.*

Uses : An oil is extracted from this grass. Juice of this herb is used in treating rheumatism.

ஊசிப்புல்லிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். இதன் விதையும் புல்லின் ரசமும் வாத நோய்க்கு குணம் தரும்.

* * *

## புல்

(ஊதுப்புல்)

## Echinochloa crus-galli

**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole herb*

*Action* : *Antilithic, Haemostatic, Resolvent, Sedative and Demulcent.*

Uses: This reduces inflammation of the liver and spleen. Bruised leaves if applied and bandaged on the wounds and cuts, checks bleeding.

ஊதுப்புல், கல்லீரல், மண்ணீரல் முதலியவற்றின் வீக்கத்தை போக்கும். ரத்தம் வடிவதைத் தடுக்கும்.

* * *

## புல்
### (ஒட்டுப்புல்)

## Justicia procumbens
### (N. O. Acanthaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant and leaves*

*Constituents* : *It contains a bitter alkaloid*

*Action* : *Herb is Alterative, Laxative, Diuretic, Expectorant, Demulcent and Depurative.*

Uses : Leaf juice of this herb cures eye diseases.

ஒட்டுப்புல்லின் இலைச்சாறு கண் பற்றிய ரோகங்களைக் குணப்படுத்தும். மற்றபடி, ஊசிப்புல்லின் குணங்களே இதற்கும் பொருந்தும்.

* * *

## புல்
### (கினிப்புல்)

## Panicum maximum
### (N. O. Gramineae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constitueuts* : *Vitamin A&B. Tocopherol, Sodium, Megnesium Calcium, Phosphorus and Potassium*

*Action* : *Herb is a best horse forder but it may cause fatal colic if given in too, large quantity or when wet.*

This grass contains vitamin 'A' and 'B'. Juice of this Plant is rich in minerals like Sodium, Megnesium, Calcium, Phosphorus and Potassium. If this is taken in recommended quantity it will reduce the mineral difficiency.

கினிப்புல்லில் விட்டமின் 'A' சத்தும் 'B' சத்தும் உள்ளது. இதன் சாற்றில் சோடியம், மெக்னீஷியம், கால்சியம் பாஸ்பரஸ், பொட்டாஷியம் போன்றக் கனிமச் சத்துககள் இருப்பதால் இது உடலில் ஏற்படும் கனிமத்தாதுக் குறைவை ஈடுக்கட்டும்.

* * *

## புல்

### (பூம்புல்)

## Ageratum conyzoides

### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and root*

*Constituents* : *Leaves and flowers yield an essential oil which contains* $C_{12} H_{16} O_2$

*Action* : *Antilithic, Carminative, Aromatic and Stimulant,*

Uses : An oil is extracted from the root. This is used as an external application to cure body pain. If taken internally cures piles, dysentery and stomach ache. Leaves are used to cure ulcers.

பூம்புல்லின் வேரிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயை மேல் பூச்சாக பூச உடல் வலி தீரும். உள்ளுக்கு கொடுக்க மூலம், சீத பேதி, வயிற்றுவலி குணப்படும். இதனுடைய இலை இரணம், புண் முதலியவை ஆற்றும்.

* * *

## புல்

### (நொங்கணம் புல்)

## Oldenlandia heynei

### (N. O. Rubiaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and the whole plant*

*Action* : *Leaves are Febrifuge, Expectorant, Anti-rheumatic and Alexipharmic. Plant is an Antidote for snake bites.*

Uses : This is an antidote to snake poisons. This is also used in the treatment of asthma, fever and rheumatism.

நொங்கணம் புல் பாம்புக்கடிக்கு மிகவும் சிறந்தது. ஆஸ்துமா, சுரம், வாத நோய்க்கு குணம் தரும்.

* * *

## புல்

### (மூங்கில் புல்)

## Oplismenus compositus

### (N. O. Gramineae)

*Habit* : *Creeping herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Cordial, Demulcent and Tonic.*

Uses : This improves blood contents and the infusion of this herb is used as tonic for pregnant ladies.

மூங்கில்புல், இது சிறந்த இரத்தப் பெருக்கியாகும். கர்ப்பக் காலத்தில் இதன் குடிநீர் நல்ல வலுவூட்டியாகச் செயல்படும்.

* * *

## புலிக்கண்

## Uvaria narum

**(N. O. Annonaceae)**

*Habit* : *Large woody climber*

*Parts used* : *Roots and leaves*

*Constituents* : *Essential oil*

*Action* : *Leaves are Anti-rheumatic. Root is Anti-bilious and Febrifuge.*

Uses : Bruised leaves applied to relieve pain in rheumatism. Root is used in erysipelas, biliousness and fevers.

புலிக்கண் கொடியின் வேரிலிருந்து ஒருவித வாசனைத் தைலம் இறக்குவர். இலையை சிதைத்து வாதநோய்க்கு வைத்துக் கட்ட வலியைப் போக்கும். வேர் அக்கியையும், சுரத்தையும் குணப் படுத்தும்.

* * *

## புளிச்சங்காய்

## Averrhoa bilimbi

**(N. O. Oxalidaceae)**

*Habit* : *Small tree*

*Parts used* : *Fruit*

*Constituents* : *Gum obtained from the bark contains pure resin of balsamic odour*

*Action* : *Bark is Tonic, Carminative and Febrifuge. Gum is Stimulant. Fruit is Astringent, Stomachic, Refrigerant, Antiscorbutic and Cooling.*

Uses : Fruit of this small tree is rich in vitamin 'A' and exhibits medicinal properties. This gives relief in thirstyness, internal heat and bleeding piles. It is used in the stead of tamarind in making curries. This is also used in the form of pickles. Fruit juice removes the stains in the clothes. Juice of the ripened fruit mixed with water and sugar is made

into a sharbat. If taken one teaspoon daily, this gives relief in fever accompained by thirstyness.

புளிச்சங்காய், இதில் விட்டமின் 'A' சத்துள்ளது. இது ஒரு சிறிய மரம். இதன் காய் மருத்துவ தன்மையுடையது. இது நீர்வேட்கை, வெப்பம் இவைகளை அடக்கும். இரத்த மூலம் போகும். இதன் காயை புளிக்குப் பதில் கறி வகைகளில் சேர்ப்பர். இதை ஊறுகாயாகச் செய்து சாப்பிடுவதுண்டு. துணிகளில் பற்றிய கறைகளை இது போக்கும். பழுத்த பழத்தின் இரசம், நீர், சர்க்கரை இவை மூன்றையும் எடுத்து, சிறு தீயிட்டு எரித்து மணப்பாகு செய்து, அதில் ஒரு கரண்டி வீதம் கொடுத்து வர சுரதாகம் நீங்கி, சுரமும் தணியும்.

* * *

## புளியமரம்

### Tamarindus indica

**(N. O. Caesalpiniaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Pulp of the fruit, seeds, leaves, flowers and bark*

*Constituents* : *Pulp contains tartanic acid, citric acid, malic and acetic acids, tartarate of potassium, invent sugar, gum and pectin. Seed contain a fixed oil and insoluble matter. Seeds contain albuminoids, fat, carbohydrates, fibre and ash containing phosphorus and nitrogen.*

*Action* : *Unripe fruit is highly acid. Pulp of ripe fruit which is sweet or acrid is Cooling, Refrigerant, Carminative, Digestive, Laxative, a valuable Antiscorbutic and Antibilious. Leaves are Refrigerant. Red outer covering seed is a mild Astringent. Bark is Astringent and Tonic. Flower is Stimulant. Fruit is Laxative. Shell of the fruit is Carminative and Antibilious.*

Uses : Leaves, flowers, fruits, rind of the fruit and bark of this tree exhibit medicinal property. Tender leaves

are cooked along with green grams and if taken acts as an appetizer and reduces the body temperature. Roasted leaves are applied to reduce the inflammations. Tender fruits induces appetite. If taken along with food, this reduces biliousness, fatigue and thirstyness. Ripened fruit is used in cooking. If taken in large quantities regularly decreases the mental powers and increases obesity. Seeds are used in the treatment of venereal diseases, diarrhoea, ulcers, burning urination and gonorrhoea. This is dried in the sun and powdered. This flour is used in preparing bread. This is also used to cure diseases as an external application. Epicarp of the seed is powdered and if used as tooth powder it strengthens the tooth.

Ash of bark of this tree mixed with the ashes of the pepper, leaves of Pungamia glabra, Daemea extensa and Achyranthus aspera. This mixture along with 4 grams of celery with water is made into an infusion if given to children reduces thirstyness.

Bruised leaves along with water are boiled and made into a paste. This is applied to reduce the pain in rheumatoid arthritis and other inflammations. Hot iron rod is introduced in the leaf juice and if that juice is given internally checks dysentery. Decoction of the flowers is used externally to cure redness of the eye. The rind of the ripened fruit is burnt and the ash with tamarind and fruit of Cassia fistula is made into a paste. This paste is applied externally to cure liver disorders.

To treat Scorpion sting tamarind is mixed with salt. This if applied when the scorpion has stung. Kernel of the seed is roasted and powdered. This powder is mixed with boiled cow's milk and given to strengthen the body. This also improves the secretion of the semen.

புளியமரத்தின் இலை, பூ, பழம், ஓடு, பட்டை அனைத்தும் மருத்துவ பயனுடையவை. பூவினால் அழற்சி, சுவையின்மை, வாந்தி இவைகள் போகும். கொட்டையுதிராத புளியம் பிஞ்சு, சோர்வையும், அழற்சி பெருக்கையும் போக்கும்.

புளியம் பழத்தை அதிகமாக உட்கொண்டால் அறிவு அழியும். உடல் ஊதும். சுக்கிலம் கூடும். நரை திரை எழும். துவர்ப்புத்

தோலோடுள்ளக் கொட்டையினால் மேக வெண்ணீர், மேகம், கழிச்சல், புண்கள், நீர்க்கடுப்பு,வெள்ளை இவை நீங்கும். சிலர் இதை வெய்யிலில் காயவைத்து வறுத்து பிறகு மாவாக்கி, ரொட்டி முதலிய தின்பண்டங்கள் செய்வார்கள். இதை மாவாக்கி களியாய் கிண்டி கட்டிகளுக்கு வைத்துக் கட்டலாம். இடித்து வேக வைத்துக் கஞ்சியாக்கி, பட்டு நூலுக்குப் பசையிடலாம். கொட்டை யின் மேல் தோலைக் காயவைத்து, இடித்துத் தூளாக்கி பல் துலக்கி வர, பல் இறுகும்.

புளியம்பட்டை, மிளகு, புங்கயிலை, வேலிப் பருத்தியிலை, நாயுருவியிலை இவைகளின் சாம்பலுடன் ஓமம் 4 கிராம் சேர்த்து, நீர் விட்டுக் காய்ச்சி, சிறு குழந்தைகட்கு கொடுத்து வர தாகம் அடங்கும்.

இலையை நசுக்கி நீர்விட்டுக் கொதிக்க வைத்து கீல்வாயு வீக்கங்களின் மீது பற்றிட வலி தணியும். இலைச்சாற்றில் பழுக்கக் காய்ந்த இரும்புக் கம்பியை தோய்த்து அச்சாற்றில் 1 முதல் 2 சங்கு வீதம் எடுத்து சீத கழிச்சலுக்குக் கொடுக்க அது நிற்கும்.

பூவை நசுக்கி, சிறிது நீர் விட்டுக் கொதிக்க வைத்து, கண்ணைச் சுற்றிப் பூசி வர கண்சிவப்பு மாறும். பழத்தின் மேல் ஓட்டைச் சுட்டுச் சாம்பலாக்கி சரக்கொன்றை, புளி முதலிய இதர சரக்குகளோடு சேர்த்தரைத்து ஈரல் நோய்களுக்குப் பற்றிடலாம்.

* * *

## புளியாரை

**See : Oxalis corniculata**

**பார்க்க : கீரை வகைகள்**

* * *

## புளியாரை

**(பெரும்புளியாரை)**

## Oxalis martiuma

**(N. O. Geraniaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and tender shoots*

*Action* : *Leaves are Cooling, Refrigerant and Stomachic.*

Uses : The leaves of this herb is used as food and also exhibits medicinal properties. This cures cancerous growth of the lips, bleeding piles and anaemia. This increases appetite, cures head ache and pimples.

உதட்டுப் புற்று, இரத்த மூலம், சோகை குணப்படுத்தும். பசி தீரும். தலைவலி நீக்கும், முகப்பரு ஒழிக்கும். மற்றபடி புளியாரையின் குணங்களே இதற்கும் பொருந்தும்.

* * *

## புள்ளடி

## Desmodium gangeticum

### (N. O. Leguminosae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant, root and bark*

*Constituents* : *Root contains yellow resin, oil and an alkaloid.*

*Action* : *Bitter, Tonic, Febrifuge, Digestive, Anti-catarrhal, Alterative, Stomachic, Demulcent and Anti-dote.*

Uses : Infusion of this herb gives relief in fevers and brain disorders. This herb is used in the treatment of asthma, snake bite, scorpion sting and dysentery. There are two varieties in this. The smaller variety is found growing only in the tropical areas. Paste of the leaves if taken along with cow's milk gives relief from indigestion and diarrhoea and acts as galactogogue.

Infusion of the root acts as an appetizer and diuretic. This cures rheumatism, epilepsy and nervous disordres. Root juice is applied to heal abscesses and ulcers.

புள்ளடி, இதன் பூண்டு மருத்துவ குணமுடையது. இதைக் குடிநீரிட்டுக் கொடுக்க, சுரம் நீங்கும். டைபாய்ட் சுரம், மூளை நோய் குணமாகும். ஆஸ்துமா, பாம்புக்கடி, தேள்கடி முதலிய

நோய்கள் குணமாகும். ரத்த சீதபேதி தீரும். தசமூலங்களில் ஒன்றான இது குடிநீரில் சேரும் சரக்குகளில் ஒன்று. இதில் இரண்டு வகைகள் உள்ளன. அதில் ஒன்று சிறுபுள்ளடி. சிறுபுள்ளடி வெப்ப நாடுகளில் பயிராகும். இலையை அரைத்துப் பசுவின் பாலில் கலக்கி உட்கொள்ள மாந்தம், கணம், கழிச்சல் இவைகளை அடக்கும். வலியும் குணமாகும். வேரை குடிநீரிட்டுக் கொடுக்க பசியைத் தூண்டி உணவைச் செரிப்பிக்கும். நீர்க்கட்டை உடைக்கும். வாதம் குணப்படும். காக்கை வலிப்பு, நரம்பு பற்றிய நோய்களும் குணமாகும். மாந்தம் ஒழியும் சீதபேதியை நீக்கும். அழல் பிணியைத் தணிக்கும். உடலுக்கு வன்மை ஊட்டும். இதைச் சிதைத்துச் சாறு பிழிந்து எளிதில் ஆறாத கட்டி, புண்களுக்குப் பூசலாம்.

ரசத்தை முறிக்கும். மேலும் தாய்ப்பாலை அதிகமாகச் சுரக்கச் செய்யும்.

* * *

## புன்னை

### Calophyllum inophyllum

**(V. O. Guttiferae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, seeds, leaves, bitter oil from the seeds and resin or gum*

*Constituents* : *A resin of panslay odour and oil. Resin resembles myrrh and irritant. An essential oil named 'Domba oil' is extracted.*

*Action* : *Bark is Astringent. Seed is Anthelmintic and Gaustric. Gum is Emetic and Purgative. Oil is Nervine, Sedative, Antirheumatic, Emollient and Vulnerary.*

Uses : This tree is found near the sea-coast. There are two types, which exhibits the same medicinal properties. Kernel of the seed yields a dark yellow oil which is called "Domba oil."

The leaves, flowers, seeds, bark and resin of this tree are used medicinally. Venereal diseases,. eczema, boils and bruises could be cured by this flowers. But this induce

giddiness. The flowers are also used in treating epilepsy, paralysis and to reduce body temperature.

Seeds are used in treating otitis, excess of internal gas due to extreme chillness and flatnlency in the womb due to amenorrhoea. Ghee made with its seed oil is used as analgesic application and the water is used to wash the eyes to cure inflammation of the eyes and skin disorders. Powdered flowers along with honey if taken regularly gives relief in rheumatism, bilious disorders and phlegmatic disorders. Seeds ground in water is heated and if used as an external application cures rheumatoid arthritis. Seed oil exhibits curative property of urinary infections. Therefore it is used in treating gonorrhoea and other venereal diseases. Infusion of the bark is treating gonorrhoea and other venereal diseases. Infusion of the bark is used internal haemorrhoids. Chronic ulcers could be washed with this infusion which enhances the healing processes. The gum secreted by this tree is kept in water, which secretes a kind of oil which floats the water, this oil could be used to treat eye infections. This also could be used to treat ulcers of the skin. If this is taken internally it checks diorrhoea and vomiting.

புன்னை கடற்கரையடுத்த நிலங்களில் பயிராகும். இதில் சுரபுன்னை, அல்லது சிறுபுன்னை என்றொரு சிறு இனமும் உண்டு. இவ்விரண்டின் குணமும் ஒன்றே. இதன் எண்ணெயை ஆங்கிலத்தில் ''டாம்பா ஆயில்'' (Domba oil) எனச் சொல்லுவார்கள்.

இதன் இலை, பூ, விதை, பட்டை, பிசின் முதலானவை மருத்துவ குணமுடையன.

இப்பூவினால் நீங்காமேகம், முப்பிணி, கரப்பான், சொறி, சிரங்கு முதலியவை நீங்கும். ஆனால் மயக்கம் உண்டாகும். அழல் பெருகும். காக்கை வலிப்பு, சன்னி, பாரிசவாயு முதலான நோய்கள் குணமாகும். புன்னைக் கொட்டையினால் செவிப்புண், சந்நி, சூதக வாயு, உடம்பில் நீரேறியதால் வந்த சீதள வாயு இவை நீங்கும்.

இதன் நெய்யானது முப்பிணி, பெருவளி நோய்கள், முன்னிசிவு, பின்னிசிவு, ஐவகைவலி, புண், புழுக்கள் ஆகியவை நீக்கும்.

இலை அல்லது பூவைத் தண்ணீரில் ஊறப் போட்டு, அந்நீரைக் கொண்டு கண்களைக் கழுவி வர, கண்வீக்கம், சொறி,

சிரங்கு முதலியன தீரும். பூவை உலர்த்திப் பொடித்து, தேனுடன் கூட்டி முப்பிணிக்குக் கொடுக்கலாம்.

விதையை நீர்விட்டு அரைத்துச் சூடாக்கி, கீல்வாயுகளுக்குப் பற்றிட நோய் நீங்கும். விதையினின்று எடுக்கப் படுகிற எண்ணெய்க்கு நீர்தாரைப் புண்களைப் போக்கும் குணம் இருப்பதால், இதை வெள்ளை, வெட்டை முதலிய நோய்களுக்குக் கொடுத்து வரலாம்.

பட்டையைக் குடிநீரிட்டு உள்ளுறுப்புகளிலிருந்து வரும் குருதிப் பெருக்குகளுக்குக் கொடுக்க, நன்மை பயக்கும். எளிதில் ஆறாமல் குருதி பெருகிக் கொண்டிருக்கும் புண்களை, இக்குடிநீர் விட்டுக் கழுவி வர அவை ஆறும்.

இம்மரத்திலிருந்து வடியும் பிசினை தண்ணீரில் போட்டு வைக்க, அதிலிருந்து எண்ணெய் மிதந்து நிற்கும். இவ்வெண்ணெயைக் கண்ணில்விடக் கண்ணோய் நீங்கும். இதைப்புண்களுக்குப் போடும் மருந்துகளுடன் சேர்ப்பதுண்டு. இப்பிசினை, உள்ளுக்குக் கொடுக்க, கழிச்சலும் வாந்தியும் உண்டாகும்.

* * *

# புன்னை
## (புன்னகம்)

## Calophyllum orgifolium
### (N. O. Guttiferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Bark, seeds and leaves, bitter oil from the seeds and resin or gum.*

*Constituents* : *A resin of parsiey odour and oil. Resin resembles myrrh and is soluable in alcohol. Kernel of the seeds yields a dark yellow oil*

*Action* : *Similar to C. inophyllum.*

Uses : This exhibits the same property of C.inophyllum It is mainly used in treating leprosy.

புன்னகம், இதற்கு புன்னையின் குணமே பொருந்தும். மேலும் குஷ்டத்தைக் குணப்படுத்தும்.

* * *

## புன்னை

(காட்டு புன்னை)

## Calophyllum elatum

**(N. O. Guttiferae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, seeds and leaves*

*Constituents* : *Seed kernel yield 73% of oil*

*Action* : *Antirheumatic and Antisyphilitic.*

Uses : Oil is extracted from its seed. The oil is used in treating rheumatism, paralysis, leprosy etc. This is used as an external application.

காட்டுப்புன்னையிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். இந்த எண்ணெயானது வாதவலி, சகல வாதம் மற்றும் குஷ்டம் தீர்க்கும்.

* * *

## பூசணி

(கல்யாணப் பூசணி, வெள்ளைப் பூசணி)

## Cucurbita pepo

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Leaves and fruits*

*Constituents* : *Vitamin 'B', antimercurial, sterols, dienes and cholestral.*

*Action* : *Diuretic, Styptic, Alterative, Nutrient, Antiperiodic and Aphrodisiac.*

Uses : This is a creeper. The fruit is big in size and the outer skin is green in colour with ash coloured hairs. Inner pulp is white in colour and fleshy. This is used commonly as vegetable. If this is consumed regularly it cures nervous debility, intestinal ulcers etc. Epilepsy, giddiness, bilious

disorders and urinary disorders are also could be treated with this. A type of lehyam is prepared from this.

கல்யாணப் பூசணி தரையில் படரும் ஒரு கொடி வகை. காயின் மேல்தோல் பச்சையாயும், சாம்பல் பூத்தும் இருக்கும். இதன் உட்பாகம் வெள்ளை நிறமான சதைப் பற்றுள்ளதா யிருக்கும். இது காய்கறி பயிராகப் பயிரிடப்படுகிறது. இதனால் நரம்புத்தளர்ச்சி, நரம்பு பற்றிய நோய்கள், வயிற்றுப்புண், வயிற்று ரணம் குணப்படும். மயக்க நோய், காக்கைவலிப்பு, பித்தநோய் சிறுநீர் கோளாறு நீங்கும். இதனைக் கொண்டு சித்தவைத்தியர்கள் வெள்ளை பூசணி லேகியம் செய்வார்கள்.

* * *

## பூசணி

**(சாம்பல் பூசணி, கோடைப் பூசணி, குழிபரங்கி)**

## Benincasa hispida

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Leaves, fruits and seeds.*

*Constituents* : *Fixed oil, starch, an alkaline cucurbitine, an acrid resin, proteids, myoxin, vitellin and sugar.*

*Action* : *Cholagague, Sedative, Refrigerant and Antipyretic. Seeds are Restorative and Sedative.*

Uses : This is also used as vegetable in cooking. The pulp of this fruit without seeds is used as an external application for ulcers. This enhances the healing processes and eliminates the foul odour. Lehyam is also prepared from this. This is used in treating blood vomiting and phlegmatic disorders. If cumin is added with the dried pulp with sugar candy and made a paste, this will cure the fatigue in summer due to excess heat.

சாம்பல் பூசணி, சமையலுக்கு பயன்படும் காய் வகையைச் சேர்ந்தது. உட்சதையை விதை நீக்கி வேகவைத்துப் பிசைந்து புண்களின் மீது வைத்துக்கட்ட துர்நாற்றம் நீங்கி, சதை வளர்ச்சி

உண்டாகும். உட்சதையை விதை நீக்கி வெய்யிலில் நன்றாகக் காய வைத்து, இடித்து பிற மருந்துகளுடன் சேர்த்துக் கொடுக்க, இரத்த வாந்தி, கோழை, இவற்றை நீக்கும். சதையை உலர்த்தி சீரகம் சேர்த்து இடித்து, சிறிது கற்கண்டுடன் உண்ண, வேனிற்கால வெப்பத்தாலுண்டாகும் அழற்சி தணியும்.

* * *

## பூசணி

### (மஞ்சள் பூசணி)

## Cucurbita maxima

### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Creeper*

*Parts used* : *Seeds, pulp and fruit-stalk*

*Constituents* : *Similar to those of cucurbitaseous plants, saponin, fixed oil, resin, proteins, sugar and starch. The fresh vegetable contains moisture and completely dried material contains ether extract, albuminoids, soluble carbohydrates, woody fibre and ash. Oil is also extracted from the seeds*

*Action* : *Seeds are Anthelmintic, Diuretic, Restorative, Stimulant and Tonic. Oil from the seeds is a nervine Tonic. Leaves are Vulnerary. Root is Antidote, Diuretic, Refrigerant and Antipyretic.*

Uses : Oil is extracted from the seed and the oil is used externally for skin ailments. Petiole of the fruit is used as an antidote for poisonons bites. The fruit relieves venereal diseases and excess body heat.

மஞ்சள் பூசணியின் விதையிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். இந்த எண்ணெயை புண், புரைகளுக்கு, மேற்பூச்சாக உபயோகிக்கலாம். இதன் காம்பு விஷக்கடிக்கு மருந்தாகும். இக்காய் பிரமேகம், திரேக உஷ்ணம் தணிப்பதில் முதன்மையானது.

* * *

## பூசணி
### (பரங்கிப் பூசணி)

## Cucurbita moschata
### (N. O. Cucurbitaceae)

*Habit* : *Creeper*

*Parts used* : *Fruits*

*Action* : *Bilious, Purgative and Aperient.*

Uses : The fruit of this plant is yellowish inside. It is large in size with a wavy outer skin. It works as an antidote to all medicines.

பரங்கிப் பூசணி ஒரு கொடி வகையைச் சேர்ந்தது. இதன் உட்பாகம் மஞ்சள் நிறமான சதைப் பற்றுள்ளதாய் இருக்கும். காயின் மேல், கீழ்ப்புறம் குழிந்திருக்கும். பக்கங்களில் ஓடுகிற வரிகள் ஆழ்ந்திருக்கும். மருந்துண்ணுங்காலத்தில் இதை சாப்பிட்டால், மருந்தை முறிக்கும். ஆதலால் இது அபத்திய உணவாகும்.

பேதியையும், வயிற்றில் புழுவையும் தோற்றுவிக்கும்

* * *

## பூர்ஜ பத்திரம்

## Betula utilis
### (N. O. Cupuliferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Bark and oil*

*Constituents* : *An essential oil 'Betulin'*

*Action* : *Bark is Antiseptic, Carminative, Diuretic and Cooling.*

Uses : Betulin oil is extracted from this plant. Bark infusion is used as pesticide. It is given to the patients of hysterea to reduce the gravity of bouts.

பூர்ஜபத்திரத்திலிருந்து "பெட்யூலின்" (Betulin) என்ற எண்ணெய் வடிக்கப்படுகிறது. இதன் பட்டையிலிருந்து வடிக்கப்

படும் குடிநீர் கிருமி நாசினியாக செயல்படும். ஹிஸ்டீரியா நோயில் இது வாயு நீக்கியாகப் பயன்படுகிறது.

## பூமி சர்க்கரைக் கிழங்கு

### Maerua arenaria

**(N. O. Capparidaceae)**

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Large woody climber* |
| *Parts used* | : | *Whole plant* |
| *Constituents* | : | *Plant contains sugar* |
| *Action* | : | *Refrigerant, Stimulant, Tonic, Nutritive, Aphrodisiac and Alterative.* |

Uses : This is rich in iron and copper. This is used to treated venereal diseases, piles and fever. It is used as an ingredient in the medicines prescribed for strength and sexual vitality.

பூமிசர்க்கரைக் கிழங்கில் இரும்பு, தாமிரச் சத்துள்ளது. பிரமேகம், மூலநோய், சுரம் நீக்கும். ஆண்மை தரும் லேகியங்களில் உபசரக்காகச் சேர்க்கப்படுகின்றது.

* * *

## பூலா
**(நீர்ப்பூலா)**

### Phyllanthus multiflorus

**(N. O. Euphorbiaceae)**

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Herb* |
| *Parts used* | : | *Root and leaves* |
| *Action* | : | *Leaves and juice are employed as Diuretic and Cooling. Root and the root bark are Alterative, Diuretic, Stomachic, Refrigerant and Restorative.* |

Uses : Leaves and roots are of medicinal use. This cure indigestion and other intestinal disorders. The leaves are diuretic and febrifuge.

நீர்ப்பூலாவின் இலையும் வேரும் மருத்துவப் பயனுடை யது. இது மாந்தம், வயிற்றுக் கோளாறு, வயிற்றிரைச்சல் குணமாக்கும். மற்றும் திரேக வனப்பு தரும். இதன் இலை மூத்திரம் பெருக்கும். உடல் சூட்டைத் தணிக்கும்.

* * *

## பூலா
(கருப்பு பூலா)

## Phyllanthus reticulata
**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and the whole plant*

*Action* : *Antidysenteric, Depurative and Vermifuge.*

Uses: This is used mainly in the medicines prepared for sexual vitality. The stalks are used to clean the teeth. The leaves are used to check desentery and diarrhoea. This helps in the growth of hair. This is used in calcination of pearl.

கருப்பு பூலா ஆண்மையைப் பெருக்கும். இதன் குச்சி பல் துலக்க உதவும். மேலும் பல் நோய் தீர்க்கும். இதன் இலையானது சீதபேதி, மற்றும் ரத்தபேதியை நிறுத்தும். தலைமுடி நன்கு வளரும். இது முத்து பஸ்பம் செய்யவும் உதவும்.

* * *

## பூவரசு
(பூவரசன்)

## Thespesia populnee
**(N. O. Malvaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, flowers, root bark and fruit*

*Constituents* : *Seeds contains phosphoric acid and an oil*

Acticn : *Leaves, flower and unripe fruits are Anthelmintic, Emmenagogue, Depurative and Antiscorbutic. Root is Tonic, Antisyphilitic and Antirheumatic.*

Uses : Leaves, flowers, roots, bark and fruit are of medicinal use. Older of the tree more in the medicinal property. If a tree is more than 100 years old it exhibits the maximum medicinal property. Chronic leprosy could be cured with root fo the 100 years old tree. Ripened leaves, flowers, seeds, bark all are useful in treating pyogenesis. ulcers, ascites, oedema, eczema, itch and gonorrhoea. The paste of the leaves slighly heated is used externally on the oedema. The paste of the flower also could be used to treat eczema. Infusion of the flower buds cures menorrhagia. Yellowish secretion of the fruit is used in treating skin ailments. If it is applied on the joints it cures the inflammation of the joints. Barks are cut into small pieces and boiled. Then the water is filtered and if it is consumed three times it acts as laxative. Fruits also acts as laxative. Poisonous bites, ascites, oedema also could be treated. Bark oil is used in treating gonorrhoea and other skin ailments. Fruit oil if taken internally it cures dyspepsia, ascites etc. The inner pulp of the ripened bark is well crushed and the juice if taken regularly it cures the white patchs of the lips due to leucoderma. This is also used as an ingredient in contraseptive drugs.

பூவரசு மரத்தின் இலை, பூ, காய், விதை, பட்டை, வேர் முதலானவை மருத்துவ குணமுடையன.

நூற்றாண்டு சென்ற பூவரசம் வேர் நாட்பட்ட பெருநோயை நீக்கும். பழுப்பிலை, பூ, விதை, காய், பட்டை முதலியவை புழுத்த புண், காணாக்கடி, குத்தல், விடபாகம், பெருவயிறு, வீக்கம், கரப்பான், சிரங்கு, வெள்ளை இவைகளைப் போக்கும்.

இதன் இலையை அரைத்து வெதுப்பி, வீக்கங்களின் மீது வைத்துக் கட்ட வீக்கம் வடியும். பூவை அரைத்துச் சிரங்குகளின் மீது பூசிவர, அவை போகும். பூவின் மொக்கு பெரும்பாடுக்கு உடனே குணம் தரும்.

காயிலிருந்து உண்டாகும் ஒருவித மஞ்சள் நிறமுள்ள பாலைத் தோலிலுண்டாகும் நோய்களுக்குத் தடவலாம். மூட்டு வீக்கங்களுக்குப் பூச, வீக்கம் கரையும்.

சிறு துண்டுகளாக வெட்டியப் பட்டையை, தண்ணீர் விட்டுக் காய்ச்சி, மூன்றில் ஒன்றாய் வற்றிய பின் வடிகட்டியேனும் அல்லது 340 கிராம் காய்களை சிறு துண்டுகளாய் நறுக்கி, நீர் விட்டுக் காய்ச்சி, மூன்றில் ஒன்றாய் வற்ற வைத்து வடிகட்டி, தினம், 3முதல் 4 முறை கொடுத்துவரக் கழியச் செய்யும். காணாக்கடி நஞ்சு, பெருவயிறு, வீக்கம் முதலியன நீங்கும். பூவரசம் பட்டை எண்ணெயினால் வெள்ளை நோயும், பிற தோலைப் பற்றிய நோயும் போகும்.

காயின் எண்ணெயை உள்ளுக்குச் சாப்பிட, குன்மநோய், பெருவயிறு முதலியன தீரும். முதிர்ந்தப் பட்டையின் சதையைச் சிதைத்துப் பிழிந்த சாற்றை வாயிலிட்டுக் கொப்பளித்துக் கொண்டே விழுங்கிவிடவேண்டும். இவ்வாறு பல நாட்கள் உட்கொள்ளின் உதட்டில் (வெண் குட்டத்தினால்) வரும் வெண்புள்ளி போகும்.

இது கர்ப்பத்தடைக்கு செய்ய உதவும் மருந்துகளில் உபசரக்காகச் சேர்க்கப்படுகிறது.

* * *

## பூவரசு
### (மலைப் பூவரசு)

## Rhododendron arboreum
### (N. O. Ericaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Tender leaves*

*Constituents* : *Ericolin*

*Action* : *Emollient, Antisyphilitic, Antiscorbutic, Vermifuge and Poisonous.*

Uses : Paste of the leaves is applied on head to treat head ache. This is also used to treat skin diseases.

மலைப்பூவரசு தோல் வியாதிகளில் பயனாகிறது.

* * *

# பூனைக்காலி
## (பூனைப்புடுக்கன்)

## Mucuna pruriens
### (N. O. Papilionaceae)

*Habit* : *Climbing shrub*

*Parts used* : *Seeds, root and legumes.*

*Constituents* : *Seeds are found to contain a free fatty acid and its glyceride probably olic an acid-resin and albumin. Seeds yield an oil.*

*Action* : *Seeds are Astringent, Anthelmintic, Nervine Tonic, Restorative, Antidysenteric and Aphrodisiac. Root also is a nervine Tonic, Diuretic, Stimulant, Emmenagogue and Sedative. Leaves are Vermifuge. Hairs covering the seed pods are Vermifuge, locally Stimulant and mild Vesicant.*

Uses : It is found in tropical places. But it is cultivated in many places. Innerside of the fruit is used as cooling. There are two varieties of the plant namely white and black, seeds, root, leaves and fruit are of medicinal use. Leaves acts as an anthelmintic. The hairs preserved on the outer side of the fruit if consumed with honey it expells all the intestinal worms. Infusion of the fruit without seeds, with flowers of woofordia floribunda and it is burried under the soil for 40 days. If it is consumed after 40 days in a recommended quantity, anaemia could be cured. It cures inflammation of the joints too. Powdered seeds mixed in milk and used to treat gonorrhoea, and it acts as an aphrodisiac.

Seeds are boiled in cow's milk are dried and powdered. It is then roasted is ghee and sugar is added in double the quantity and made into a small balls which is soaked in honey. If this is consumed twice daily it cures gonorrhoea, paralysis, gleet and menorrhagia. It gives strength to body. Along with this seeds of puncture vine, asparagas root, root of red kopok, root of gooseberry and moon creeper sugar.

are added. Then add with equal quantity of sugar candy and ghee. If this mixture is taken regularly it improves health and sexual vitality. The infusion of the root with honey cures fever. The root could be used externally for oedema. It is also used externally in filariasis. Root decoction is given to cholera patients.

பூனைப் புடுக்கன் வெப்ப நாடுகளில் பயிராகும் ஒரு வகைக் கொடி. சில இடங்களில் இதன் விதையின் பொருட்டு இதைப் பயிரிட்டு வளர்க்கிறார்கள். காயின் உட்பாகத்தைச் சமைத்துண்பது உண்டு. இதில் கருமை, வெண்மை என இரு வகையுண்டு. இதன் விதை, வேர், சுணை, இலை முதலானவை மருத்துவப் பயனுடையவை.

இலையானது வயிற்றில் உள்ள புழுவை அழிக்கும்.

காயின்மீது மூடியிருக்கும் சுணையை பனைவெல்லத்திலாகிலும், தேனிலாகிலும் கலந்துக் கொடுக்க, வயிற்றுப்புழு வெளிப்படும். காயை, விதை நீக்கி நன்றாய் உலர்த்தி, இடித்துக் குடிநீரிட்டு, வடிகட்டி, அதில் சிறிது காட்டத்திப் பூவைச் சேர்த்து நாற்பது நாள் புதைத்து வைத்துப் பின்பு எடுத்துத் தக்க அளவில் கொடுத்துவர, சோபை நோயை நீக்கும். கை, கால் வீக்கமும் போகும்.

விதையை நன்றாய் உலர்த்திப் பொடித்து, இதைப் பாலில் கொடுத்துவர வெள்ளை, வெட்டை நீங்கும். ஆண்மை உண்டாகும்.

ஆவின் பாலில், இவ்விதையைப் போட்டு, பால் வற்றும் வரையில் காய்ச்சி, விதையை எடுத்து உலர்த்திப் பொடித்து பின் நெய்விட்டு இளவறுப்பாய் வறுத்து, சீனிப்பாகு இரு பங்கு சேர்த்து, இலேகிய பதமாய்க் கிளறி எடுத்து, சுண்டை அளவு உருட்டித் தேனில் ஊறவைத்துக் கொள்ளவும். இதில் ஒரு உருண்டை தினம் இருவேளை கொடுத்துவர, வெள்ளை, வெட்டை, பெரும்பாடு, பாரிசவாதம் நீங்கும். உடலை வளர்க்கும்.

இவ்விதை, சிறு நெருஞ்சில் விதை, தண்ணீர்விட்டான் கிழங்கு, முள்ளிலவு, நெல்லி இவைகளின் வேர்ப்பொடி, சீந்தில் சர்க்கரை சேர்த்து, அதற்குச் சரியாகக் கற்கண்டு கலந்து, அதை நெய்யிற் கலந்து, தினம் இருவேளை சாப்பிட்டுவர, ஆண்மை பெருகும். தாது புஷ்டி தரும்.

இதன் வேரைக் குடிநீரிட்டுத் தேன் கலந்துகொடுக்க, ஊழிநோய், சுர நோயிற்காணும் முப்பிணி நீங்கும். இதன் வேரை

அரைத்து வீக்கங்களின் மீது பற்றிடலாம். ஆனைக்கால் வீக்கத்துக்கும் இதை இதர மருந்துகளுடன் சேர்த்துப் பற்றிடலாம். வேர்க்கஷாயம் காலராவுக்குக் கொடுக்க குணப்படும்.

* * *

## பூனைக்காலி
### (சிறு பூனைக்காலி)

## Passiflora superba
### (N. O. Passifloraceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Seeds and oil*

*Action* : *Emetic, Expectorant, Emmenagogue, Anti-bilious. Oil is Emollient, Antisyphilitic and Vulnerary.*

Uses : This is used in the treatment of asthma and hysteria. Oil extracted from the root is used in treating skin diseases and ulcers.

ஹிஸ்டீரியா, ஆஸ்துமா முதலிய நோய்களுக்கு சிறுபூனைக்காலி குணம் தரும். இதன் வேரிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயானது, சரும நோய்களுக்கும், புண்களுக்கும் தடவ பயன்படுகிறது.

* * *

## பெரக்குடிக்காய்

## Allophylus serratus
### (N. O. Sapindaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Root*

*Action* : *Astringent.*

Uses : Infusion or paste of the root checks diarrhoea.

வேர்க்குடிநீர் பேதியை நிறுத்தும்.

* * *

# பெருங்காயம்

## Ferula asafoetida

### (N. O. Umbeliferae)

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Herb* |
| *Parts used* | : | *Aromatic gum - resin (asafoetida) obtained by incision from the root* |
| *Constituents* | : | *Organic sulphur compound volatile oil, containing essential oil of garlic, allyl pensulphide and two turpenes, ferulic acid gum, and ash, also malic, acetic, farmic and valerianic acids* |
| *Action* | : | *Stimulant, Carminative, Antispasmodic, Expectorant, slightly Laxative, also Anthelmiutic, Diuretic, Aphrodisiac and Emmenagogue, and it is a also Nervine and Pulmonary Stimulant.* |

Uses : It is a condensed milk or latex of small herb. This is used as a flavouring agent and as an ingredient in the medicines. This gum is aromatic. This disolves in alcohol. If ground in water resmembles milk.

The white variety of asafoetida exhibits medicinal properties. This increases the temparature of the blood and nerves. If taken regularly along with food induces sore throat and bulging of the stomach, burning urination and bulching. But this cures tooth aches, poisonous bites, indigestion, rheumatism, flatuency, amenorrhoea, dyspepsia, ascites worm infections of the blood and body pain. It is better to use the roasted asafoetida. Fresh resin is emetic and sedative. It is made into a paste in water and applied on the chest to relieve irritating cough in children. Mixed with water is given to children to expel the intestinal worms. Mixed with opium if applied on the paining teeth relieves tooth ache. Mixed with yellow yolk of the egg it is given to treat irritating cough and body pain. Asafoetida mixed with myrrhh and pepper relieves amenorrhoea. Oil boiled with this if used as an ear drops cures otalgia. To treat flatulency and indigestion

this is given along with celery oil. Paste of this is applied externally in the treatment of scorpion sting and ringworm infection. In electuaries prepared to treat stomach disorders, it is used as an ingredient.

பெருங்காயம் தன்னிச்சையாயும், அளவிறந்தும் பயிராகும் ஒருவகைச் சிறு செடியின் பால் அல்லது பிசின். அநேக நூற்றாண்டுகளாய் அனைவரும் தாங்கள் உண்ணும் உணவிற்குரிய பொருள்களிலும், நோய் தீர்க்கும் மருந்துகளிலும் இதைப் பயன்படுத்தி வருகின்றனர். இது மஞ்சள் நிறமுடையது. மிகுந்த வாசனை உள்ளது. சற்றேறக்குறைய வெள்ளைப் பூண்டினது வாசனை வீசும். கரகரப்பும், கசகசப்பும் உடையது. சாராயத்தில் கரையும். நீர் விட்டரைத்தால் பால் நிறமாயிருக்கும். சாராயங்களுடன் கூடின் பொடிபடும். இதில் வெண்ணிறமுடையதை, வெள்ளைப் பெருங்காயம் என அழைப்பர். இதன் பிசின் மருத்துவ குணமுடையது.

இது முக்கியமாய் கிரந்தத்தை சூடாக்கி, நரம்புகளை வெப்பப் படுத்தும். இதைத் தொடர்ச்சியாய் சாப்பிட்டுவரின் தொண்டைப் புண், வயிற்று உப்பல், கழிச்சல், நீர் எரிச்சல், புளியேப்பம் இவைகளை உண்டு பண்ணும். இதனால் பல பல்லடி நோய்கள், பாம்பு நஞ்சுகள், தேள் நஞ்சு, மந்தம், ஏப்பம், வாதம், சூதகவாயு, குன்மம், பெருவயிறு, குருதியிலுள்ள நுண்புழு, உடல் கடுப்பு, முதலியவை போகும். இதைப் பொரித்து வழங்குதல் நலம். பச்சையாய் வழங்கில் வாந்தி யுண்டாகும். மேலும் தலை சுற்றும்.

இதை நீர் விட்டு உரைத்து மார்பின் மீது பற்றிட குழந்தைகளுக்குண்டாகும் கக்குவான் குணப்படும். குழந்தைகள் வயிற்றிலுண்டாகும் பூச்சிகளை வெளிப்படுத்த இதை நீரிலிட்டு அரைத்துக் கலக்கிக் கொடுப்பர். அபினும், காய்மும் சேர்த்துச் சொத்தைப் பல்லில் வைக்க, வலி நீங்கும்.

கோழிமுட்டையின் மஞ்சட் கருவுடன் காயத்தைக் கூட்டிக் கொடுக்க, வறட்டிருமல், பக்கவலி நீங்கும். வாலேந்திர போளம், மிளகு இவைகளுடன் சேர்த்துக் கொடுக்க, சூதகக் கட்டு நீங்கும். எண்ணெயிலிட்டுக் காய்ச்சிக் காதுக்கிட, காதுவலி நீங்கும். இதை நீரில் கரைத்து, ஒரு சங்களவு எடுத்துச் சிறிது ஓமத்துநீர் சேர்த்துக் கொடுக்க, குழந்தைகளுக்குண்டாகும் மாந்தம், வயிற்றுப் பொருமல் போகும். காயத்தை நீர் விட்டரைத்து, தேள்கடி, படைகள், முதலியவற்றிற்குப் பூசலாம். மேலும் வாய்வு உபத்திரவம் தீர லேகியம் செய்யலாம்.

* * *

## பெருங்குளிரி

## Elaeagnus kologa

**(N. O. Elaeagnaceae)**

*Habit* : *Stragglers*

*Parts used* : *Flowers*

*Action* : *Flowers are Astringent, Cardiac and Stimulant.*

Uses : Flowers check diarrhoea, dysentery and menorrhagia. Infusion of the flowers improves blood.

பெருங்குளிரி கொடியின் பூக்கள் மருத்துவப் பயனுடையது. பூக்களினால் செய்யப்பட்ட குடிநீர் பேதி, சீதபேதி, பெரும்பாடு ஆகியவற்றை நிறுத்தும். மேலும் இரத்தத்தை விருத்தி செய்யும்.

* * *

## பெரு மருந்து

**(பெருமரம், பெருப்பை, பெருபீநாறி)**

## Ailanthus excelsa

**(N. O. Simarubaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark and leaves*

*Constituents* : *Ailantic acid*

*Action* : *Bark is Astringent, Febrifuge, Expectorant, Nervine Tonic, Carminative and Aromatic.*

Uses : Bark leaves and latex of this tree exhibits medicinal properties. Infusion of bark and the leaves are excellent remedy to treat debility after child birth. This also cures dysentery. This gives relief in asthma. Infusion of the bark cures nervous debility. This also cures dyspepsia due to constipation.

பெருமரம், பெருப்பை, பெருபீநாறி எனப்படும் இம்மரத்தின் இலையும் பட்டையும் மருத்துவ குணமுடையன. இதனை

உட்கொள்வதால், சீதபேதி, அதிசாரம் நீங்கும். ஆஸ்துமாவுக்கு குணமளிக்கும். இதனால் திரேக வலிமையுண்டாகும். மேலும் நரம்புத்தளர்ச்சி தீரும்.

* * *

## பெருமருந்துப் பால்

(மட்டிப்பால்)

## Ailanthus malabarica

**(N. O. Simarubaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, fruit and gum*

*Constituents* : *Gum is obtained from the bark. It contains pure resin of balsamic odour*

*Action* : *Bark is Tonic, Carminative and Febrifuge. Gum is Stimulant.*

Uses : Gum, bark and fruit of this tree exhibit medicinal property. Bark is bitter in taste and gives relief in dyspepsia. Juice of the bark alone with curd if given twice daily cures dysentery and bronchitis. The gum is aromatic and used in the preparation of incense sticks.

இம்மரத்தின் பால் (மட்டிப்பால்), பட்டை, காய் இவை மருத்துவப் பயனுடையது. பெருமருந்தின் குணங்களும், இதன் குணங்களும் ஒன்றானாலும், இது சீதபேதியைக் குணப்படுத்தும். மேலும் இதனால் ஆஸ்துமா குணமாகும். இது ஒரு வாசனை திரவியம். இது ஊதுவத்தி தயாரிக்கப் பயன்படுகிறது.

* * *

## பெரும் காமுகன்கொடி

## Cosmostigma racemosum

**(N. O. Asclepiadaceae)**

*Habit* : *Woody climber*

*Parts used* : *Root, root-bark and leaves*

*Constituents* : *Root contains crystalline fatty acids and a glucosidal acid resin*

*Action* : *Root bark is cholagogue and flowers are edible.*

Uses : Leaves made into a paste are used as an external application to cure ulcerous sores. Root-bark relieves dyspepsia due to torbidity of the liver.

பெரும் காமுகன் கொடி இலையை அரைத்துப் பற்றிட இரணங்கள் ஆறும். வேர்ப்பட்டை குன்மத்தை குணப்படுத்தும்.

* * *

## பேதானம்

**(சீமை மாதுளை)**

## Cydonia oblonga

**(N. O. Rosaceae)**

*Habit* : *Shrub or small tree*

*Parts used* : *Leaves, buds, bark, fruits and seeds*

*Constituents* : *Glucoside amygdalin. Fresh seeds contain oil of yellow colour and of a joint odour of almond oil. Muscilage contained in the epithelial covering consists a compound of gum and muscilage.*

*Action* : *Fruits are considered Cephalic, Cardiac, Demulcent, Astringent, Restorative, Tonic, Laxative, Diuretic, Mucilaginous and Antipyretic.*

Uses : This small tree is cultivated in many parts of India. There are three kinds. Sweet, sour and sub-acrid. Seeds are mainly administered in gonorrhoea and dysentery. This reduces the body temperature and gives relief from burning urination. A type of mucilage is made from the seed water is used in hair dressings and in the cosmetics.

சீமை மாதுளை நீர்தாரை எரிச்சலை நீக்கும். மேலும் வெள்ளை நோயை நீக்கி, திரேக உஷ்ணத்தைத் தணிக்கும். மற்றும் இது அழகுச் சாதனங்கள் தயாரிப்பதில், உபசரக்காகப் பயன்படுகிறது.

* * *

## பேய்மிரட்டி
(நரிமிரட்டி)

See : Crotalaria verucosum
பார்க்க : கிலுகிலுப்பை

* * *

## இரட்டைப் பேய்மிரட்டி
(எருமை பீநாறி)

### Anisomeles malabarica

**(N. O. Labiatae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Herb, leaves and an essential oil*

*Constituents* : *Volatile essential oil*

*Action* : *Anti-rheumatic, Alexipharmic, Febrifuge, Antidote and Antiperiodic.*

Uses : Decoction of the leaves gives relief in cholera, chronic fever and cough. This decoction checks diarrhoea due to dentition. In treating rheumatoid arthritis, it is used externally. If the hot steam of this decoction is inhaled acts as diaphoretic and cures chronic fever. This is an antidote for snake bites and scorpion sting.

இரட்டைப் பேய்மிரட்டியின் இலை, சமூலம் மருத்துவ குணமுடையது. இதன் இலையைக் கஷாயமிட்டுக் கொடுக்க, வாந்திபேதி, சீதசுரம், கோரசுரம், முறைக்காய்ச்சல், இருமல் குணப்படும். இக்கஷாயத்தை, குழந்தைகளுக்குப் பல் முளைக்கும் போதுண்டாகும் பேதியில் உள்ளுக்குக் கொடுக்கவும், கீல்வாதங்களில் மேலுக்கு ஒற்றடமிடவும் உபயோகிக்கலாம். இக்கஷாயத்தின் ஆவியை முகர்வதாலும், இதனை உள்ளுக்குக் கொடுப்பதாலும் உடம்பில் வியர்வை உண்டாகி விடாச்சுரம் நீங்கும்.

பாம்புக்கடி, தேள்கடி விஷத்திற்கும் உபயோகிக்கலாம்.

* * *

## பேரரத்தை

**See : Alpinia galanga**

**பார்க்க : அரத்தை**

See : Alpinia galanga
பார்க்க : அரத்தை

* * *

## பேராமுட்டி

(செங்தொட்டி)

### Pavonia odorata

**(N. O. Malvaceae)**

*Habit* : *Sub shrub*

*Parts used* : *Root, leaves and young shoots*

*Constituents* : *An essential oil.*

*Action* : *Root is Cooling, Demulcent, Carminative, Diaphoretic, Diuretic, Refrigerant, Anti-dysenteric, Styptic, Antipyretic, Astringent, Stomachic, Aromatic and Anti-rheumatic.*

Uses : Herb and root possesses musk like odour. Infusion of the root gives relief in fever, thirstyness, burning urination, cough and indigestion. This acts as diaphoretic and febrifuge. Decoction of the herb cures dysentery, bloody stools and haemarrhages. This also cures rheumatic pain and pelvic pain. Decoction of the herb if taken regularly improves eye sight. Leaves and young shoots are used as an emollient.

செந்தொட்டியில் கஸ்தூரியின் மணம் சிறிதளவு பொருந்தி யிருக்கும். இதன் வேரைக் குடிநீரிட்டு சுரம், நீர்வேட்கை, சிறுநீர், எரிச்சல், இருமல், மாந்தகணம் இவைகளுக்குக் கொடுக்கலாம். இது வியர்வையைப்பெருக்கி, சுரத்தைத் தணிக்கும். மேலும் வாதவலி, இடுப்புவலி, இடுப்பு பிடிப்பு குணப்படும். மற்றும் சீதபேதி, ரத்தபேதி, ரத்தபோக்கு, முதலிய நோய்களைக் குணப்படுத்தும். கண்ணொளி பெற்று, பார்வை சீராகும்.

* * *

# பேரிக்காய்

## Pyrus communis

**(N. O. Rosaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits*

*Constituents* : *Rich in vitamins and minerals*

*Action* : *Astringent, Sedative, Febrifuge, Alteraltive, Mild Astringent, Demulcent, Refrigerant and Restorative.*

Uses : Fruit of this tree is edible and it is cultivated in many parts of Northern India. Fruit is nutritious and rich in vitamin 'A'.

பேரிக்காய் ஒரு வகை தித்திப்புக்காய். மருத்துவப் பயன் இதற்கு எதுவும் கிடையாது.

* * *

# பொடுதலை

(பொடுதிலை)

## Lippia nodiflora

**(N. O. Verbenaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and fruit*

*Action* : *Demulcent, Febrifuge, Resolvent, Astringent, Expectorant, Deobstruent, Diuretic, Cooling and Antirheumatic.*

Uses : Fruit of this herb resembles long pepper. Leaves and young shoots are bitter and astringent. Infusion made out of its roasted leaves if given cures dysentery, indigestion, cough and gonorrhoea. Roasted leaves are ground along with celery are boiled and filtered. 5ml. of this if given to children checks diarrhoea. Leaves along with cumin are ground and if taken internally gives relief from gonorrhoea.

Paste of the leaves if consumed regularly cures internal piles. This paste is applied and bandaged on abscesses, boils, ulcers, summer boils, inflammation due to lymph and oedema.

Fruit added with rice and water is boiled. Then the half boiled rice is dried and slightly powdered. The gruel made out of this if given to children relieves indigestion. juice of the leaves, fruits are mixed with pepper and oil are dried in the sun till the water evaporates. This oil if rubbed, on the head before having a bath, it removes dandruff.

This oil is used externally to relieve pain in joints, nflammations and rheumatism. This oil is also acts as an hair tonic.

பொடுதலை ஆறு, குளம், குட்டை, இவைகளின் கரைகளில் தானாகப் பயிராகும் ஓர் பூண்டு. இதன் காய் திப்பிலியை ஒத்திருக்கும். இதன் இலை, காய் மருத்துவ தன்மையுடையன.

இதன் இலையை வதக்கி, நீர்விட்டுக் கொதிக்க வைத்து இறுத்துக் கொடுக்க சீதக்கழிச்சல், மாந்தம், இருமல், சூலை, வெள்ளை நீங்கும். இதை வதக்கி வறுத்த ஓமத்துடன் சேர்த்தரைத்து, நீர்விட்டுக் கொதிக்க வைத்து வடிகட்டி, சங்களவு புகட்ட குழந்தைகளின் கழிச்சல் நிற்கும். இதன் இலையுடன் சீரகம் சேர்த்துரைத்துக் கொடுக்க வெள்ளை, வெட்டை நீங்கும். இதன் இலையை துவையல் செய்து உண்டுவர, உள்மூலம் தணியும். இலையை அரைத்து கட்டி, கொப்புளம் மீது பற்றிட, அவைகள் பழுத்து உடையும். மேலும் புண், அக்கிப்புண், நெறிக்கட்டி, வீக்கம் இவைகள் மீதும் பூசலாம்.

பழைய அரிசியுடன், இதன் காயையும் சேர்த்து உலையிலிட்டு, முதற்கொதி வந்தவுடன் வெந்த அரிசியை உலர்த்தி நொய்யாக்கி, அதைப் பொங்கி, மாந்தமுள்ளக் குழந்தைகளுக்குக் கொடுக்கலாம்.

இதன் இலை, காய் முதலியவற்றின் சாறு எடுத்து அதனுடன் மிளகு எண்ணெய் கூட்டி வெயிலில் வைத்துச் சாறு சுண்டி எண்ணெய் மாத்திரம் தங்கியபின், அதைத் தலையில் தேய்த்துத் தலை மூழ்கிவர, தலையிற் காணும் பொடுகு நீங்கும். இதனாலேயே இதற்குப் பொடுதலை என்கிற பெயருமுண்டாயிற்று.

இத்தைலம் மூட்டுவலி, வீக்கம் போக்கும். வாதநோய்க்கு உதவும். இத்தைலத்தினால் தலைமுடி நன்கு வளரும். கபரோகம் தீரும். காயசித்தி மூலிகைகளில் இது ஒன்றாகும்.

* * *

## பொன்னாம் காணி

**See : Alternanthera sessilis**

**பார்க்க ; கீரை வகைகள்**

* * *

## பொன் முசுட்டை

**(வட்ட திருப்பி)**

**See : Sida acuta**

**பார்க்க : மலைதாங்கி**

* * *

## போதைப்புல்

Themeda dymbaria

**(N. O. Gramineae)**

*Habit* : *Tall perennial grass*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Hydrocyanic acid*

*Action* : *Nartotic.*

Uses : It is used in many medicinal preparations.

போதைப்புல்லின் சமூலம் பல மருந்துகளில் பயன்படுத்தப் படுகிறது.

* * *

# போளம்

(வாலேந்திர போளம்)

## Balsamodendron myrrha

**(N. O. Burseraceae)**

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Tree* |
| *Parts used* | : | *Gum from the bark of the tree* |
| *Constituents* | : | *A volatile essential oil called myrrhol, an oxygenated ethereal essential oil and resin myrrh* |
| *Action* | : | *Stimulant, Expectorant, Emmenagogue and Externally Astringent.* |

Uses : It is the gum collected from the incision of the bark. This could be easily powdered. This is insoluble in water and dissolves in alcohol. This is dissolved in rose water and used as medicine. This if taken internally cures, rigidity of joints, pruritis, eczema, dyspepsia, amenorrhoea, dropsy, a peculiar kind of dropsy found in young girls about the age of puberty, wheezing, indigestion, chronic ulcers and uterus disorders. To treat stomatitis it is used as an gargle.

Myrrh alone if given cures uterous problems. This is mixed with small aloe and annabethi. and if given cures arthritis and amenorrhoea. This is used as an ingredient in tooth powders. This strengthens the tooth and prevents bad breath, abnormal growth of gums and sore throat.

வாலேந்திரபோளம் என்பது மரத்திலிருந்து கீறி எடுத்து சேகரிக் கப்படும் பிசின். இது கட்டிகளாயும், சிவப்பும், கறுப்பும் கலந்த நிறமாயும், காரமாயுமிருக்கும். எளிதில் தூளாகும். நீரில் இறுகும். சாராயத்தில் கரையும்.

இதனால் கீல்பிடிப்பு, இளைப்பு நோய், நமைச்சல், கரப்பான், குன்மம் இவைகள் போவதுடன் சூதகக்கட்டு, சூதகப்பாண்டு, பாண்டு, இரைப்பு, மந்தம், ஆறாப்புண், வாய்ப்புண், கருப்பை நோய்கள் ஆகியவைகளும் நீங்கும்.

இதைப் பொடித்துச் சிறிதளவுக் கொடுக்க, சூதகக்கட்டு, சூதகப்பாண்டு முதலிய கருப்பையைப் பற்றிய நோய்களும்,

இரைப்பு, மந்தம், பாண்டு ஆகியவைகளும் குணப்படும். இதை கரிய போளத்துடனும், அன்னபேதியுடனும் சேர்த்துக் கொடுக்க வாதநோய், சூதகக்கட்டு முதலிய நோய்கள் போகும். மேலும் பற்பொடிகளிற் சேர்த்துப் பல் விளக்க, வாய்நாற்றம், ஈறுவளர்ச்சி, தொண்டைப்புண் முதலியவைக் குணமாகும்.

* * *

## மகாலிங்கம்

## Schrebera swietenioides

**(N. O. Oleaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, root and fruits*

*Constituents* : *Wood contains acetic acid, formic acid and pyroligneous liquor*

*Action* : *Leaves are Stomachic and Cooling.*

Uses : Leaves are consumed during times of scarcity. It is used in the treatment of urinary discharges and enlargement of spleen. Bark is ground in water is applied to cure boils and burns. Roots are used in treating leprosy. The smashed root is applied for killing of the worms. Fruits are used to treat hydrocele.

மகாலிங்கம் மரத்தின் இலையை உண்ண தாகம் தணியும். இது நீர்த் தாரை சம்பந்தமான நோய்களையும் மண்ணீரல் வீக்கத்தையும் குணப்படுத்தும். பட்டையை அரைத்து தடவ கொப்புளங்களும் தீப்புண்களும் ஆறும். வேரை பெருநோய்க்கு மருந்தாகப் பயன் படுத்துவர். வேரை சிதைத்து புண்களின் மீது வைத்துக் கட்ட புழுக்களை கொன்று புண்ணை ஆற்றும். பழம் விரை வீக்கத்திற் குதவும்.

* * *

# மகிழம் மரம்

(மகுளம் பூ, மகிழம் பூ, வகுளம் பூ)

## Mimusops elengi

**(N. O. Sapotaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, flowers, fruit and oil of the seeds*

*Canstituents* : *Bark contain tannin, catchouc and wax. Flowers contain a volatile oil. Seeds contain fatty oil. Pulp of the fruit contain large sugar and saponin.*

*Action* : *Flowers, fruit and bark are Astringent, bark is also Tonic, Acrid and Febrifuge.*

Uses : This is a common tree. Flowers are fragrant and used in hair dressing of ladies. An aromatic oil is extracted from this flowers.

Flowers raise the body temperature and sexual vigour. If inhaled the smell of the flower removes tastlessness and fatigue. Infusion of the flower is used as tonic. Juice of the flowers is used in the calcination of silver. Powder of the flower if used as snuff cures head ache due to sinusitis. Bark is astringent, febrifuge and tonic. To treat tooth ache due to stiffening of the gums infusion of the bark is used as gargle. Paste of the tender leaves are used in the calcination of silver. Bark mixed with Emblica officinale, Thespesia populnea Nymphaea flower and bark of Ficus benjamina and gingelly oil are boiled. This oil is used as an external application to cure eczema and ulcers. Tender fruits if chewed regularly strengthens the teeth. Ripened fruit is edible. This cures head ache. Seeds improves the health and acts as an aphrodisiac. Seeds are used in the preparation of eye drops. This acts as febrifuge and laxative to give relief from disorders in the system. Seeds are used in antidote medicines. Seed oil is used as an analgesic application in arthralgia. If it is ground in breast milk and applied on the eye. cures eye diseases. Powder of the seeds mixed with ghee if taken regularly improves semen secretion. Burnt and powdered seeds are used as tooth powder.

மகுளம் பூ, மகிழம் பூ, வகுளம் பூ எனப்படும் இது எங்கும் பயிராகும். இதன் பூவிற்கு நல்ல மணமிருப்பதால், இதை பெண்கள், கூந்தலில் விரும்பிச் சூடிக்கொள்வார்கள். இதன் பூ, பட்டை, விதை அனைத்தும் மருத்துவ குணமுடையது. மணமிக்க இப்பூவிலிருந்து எண்ணெய் எடுக்கலாம்.

இதன் பூ உடல் வெப்பத்தையும், புணர்ச்சியிலிச்சையையும் உண்டாக்கும். இதை முகரச் சுவையின்மை நீங்கும். மகிழம்பூ மணம் இளைப்பை நீக்கி, அழல் குற்றத்தைத் தணிக்கும். பூவைக் குடிநீரிட்டுக் கொடுக்க, உடல் வன்மை பெறும். பூவின் இரசத்தைக் கொண்டு, வெள்ளியை அரைத்துப் புடமிட, வெள்ளி பற்பமாகும். மணம் ஊட்டவும் இதன் பூ பயன்படுகிறது. பூவை உலர்த்திப் பொடிசெய்து முகர, மூக்கில் நீர் பாய்ந்து தலை வலியைப் போக்கும்.

இதன் பட்டை துவர்ப்புள்ளதால் இதை உடல் வெப்பமகற்றவும், உடலுரமாக்கவும் வழங்கலாம். பல் ஈறு கட்டி, பல் வலித்து வாயினின்று நீர் பாய்வதை நிறுத்த, பட்டையை ஊறல் அல்லது குடிநீர் செய்து வாய் கொப்பளித்து வரலாம். இதன் குடிநீர், சுரத்தைப் போக்குவதுடன் வன்மையையும் தரும். திரேகம் பொன்னிறமாகும். இதன் இலைக்கொழுந்தை அரைத்து, கிடைக்கும் சாற்றை வெள்ளியை பற்பமாக்கப் பயன்படுத்துவார்கள். இதன் பட்டையுடன் நெல்லிப்பட்டை, பூவரசு பட்டை, அல்லிப்பூ, அரசன் பட்டை முதலானவற்றை நல்லெண்ணெய்க் கொண்டுக் காய்ச்சி அந்த எண்ணெயை கரப்பான் நோய்க்கு பயன்படுத்தலாம். முற்றாதக் காயை தொடர்ந்து மென்று தின்று வந்தால் பல்லிறுகும். இதன் பழத்தை உண்பதுமுண்டு. இதனால் தலைவலி நீங்கும்.

இதன் விதையினால் உடலழகு, வன்மை, ஆண்மை பெருகும். இது கண்ணிற்கு இடும் மருந்துகளில் கூடும். உடல் வெப்பத்தைப் போக்கி, கழியச் செய்து குற்றங்களைத் தன்னிலைப்படுத்தும். பலவகைப்பட்ட கொடிய நஞ்சு முறிவுக்காகக் கொடுக்கும் மருந்துகளில் சேர்ப்பதுண்டு. விதையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயை மூட்டு வாதத்திற்குத் தடவ அது குணமாகும். முலைப்பால் விட்டரைத்துக் கண்களில் தீட்ட கண்ணோய் நீங்கும். விதையைப் பொடித்து நெய் கூட்டிக் கொடுக்க, ஆண்மை பெருகும். விதைக் குடிநீர் சுரத்தைத் தணிக்கும். விதையைச் சுட்டுப் பல் துலக்க பல்நோய் போகும்.

* * *

## மகிலிக் கீரை

## Celosia argentea

**(N. O. Amaranthaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds*

Uses : The seeds are considered effacacious in diarrhoea. They are useful in blood discases and mouth sores, for clearing the vision and for the diseases of eye.

மகிலிக் கீரையின் விதை பேதியை நிறுத்தும். மேலும் இது இரத்த சம்பந்தமான வியாதிகளை குணப்படுத்தும். வாய்ப் புண்களை குணப்படுத்துவதுடன் கண் பார்வையை விருத்தி செய்து நேத்ர ரோகங்களை குணப்படுத்தும்.

* * *

## மக்கா சோளம்

**See : Zea mays**

**பார்க்க : சோளம் வகைகள்**

* * *

## மங்குஸ்தான்

## Garcinia mangostana

**(N. O. Guttiferae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Rind and pulp of the fruit, leaves and bark*

*Constituents* : *Rind contains resin and tannin*

*Action* : *Rind, bark and young leaves are Astringent and Laxative*

Uses : This plant is used in the treatment of chronic diarrhoea, dysentery and gonorrhoea. Seeds are used to check dysentery, epicarp of rind of the fruit is also used to check

diarrhoea. Sharbat made out of its fruit and sugar if taken regularly, chronic diarrhoea could be cured. If the powdered cumin, coriander seeds if added to this sharbat improves the body. Fruit along with tail pepper, bark of Acacia arabica Borax powder is powdered and if taken along with milk cures chronic gonorrhoea and gleet. Bark decoction is used externally in gonorrhoea. To treat chronic infantile diarrhoea, fruit is mixed with poppy seeds, sugar, bark of pomegranete and corolla of lavender are dried and powdered is used to treat chronic diarrhoea in children. To check chronic dysentery in children fruit is mixed with the powder of coriander seeds, myrobalans and fennel seeds. This mixture also cures inflammation of the liver and diarrhoea due to excess of heat. The kernel of the fruit is consumed by all without knowing its medicinal properties. But it is proved that the whole plant exhibits medicinal properties. Many researchers being conducted to identify the medicinal property.

மங்குஸ்தான், இது ஒரு வகை சிறுமரம். இதன் இலை, பட்டை, பழம் அனைத்தும் மருத்துவத் தன்மையுடையது.

இதனால் நாட்பட்ட கழிச்சல், சீதக்கழிச்சல், வெள்ளை போகும். இப்பழத்தின் விதைகள் சீதபேதியைக் கட்டுப்படுத்த உதவும். மேலும் இது ஓடும் பேதியை நிறுத்தும்.

பழத்தை வேகவைத்துப் பிழிந்தெடுத்துச் சாற்றை, நெருப்பில் வற்றவைத்துச் சர்க்கரை கலந்து, பாகு செய்து சாப்பிட்டு வர நாட்பட்ட கழிச்சல் நீங்கும். இத்துடன் சிறிது சீரகம், மல்லி இவைகளின் தூள் சேர்த்துக்கொள்ளின், மிகுந்த நன்மை தரும். பழத்தை, வால்மிளகு, வெங்காரம், வேலம்பட்டை, இவற்றுடன் சேர்த்து எடுத்து, பொடித்துப் பாலில் கலந்துச் சாப்பிட்டுவர, நாட்பட்ட வெள்ளை, வெட்டை தீரும். இதன் பட்டைக் குடிநீரை பீச்சிவர, வெள்ளை நீங்கும். பழத்துடன் கசகசா, சர்க்கரை, மாதுளம்பட்டை, பன்னீர்ப் பூவிதழ் இவைகளின் பொடியைக் கலந்து, உட்கொள்ள குழந்தைகளின் நாட்பட்ட கழிச்சல் நீங்கும்.

பழச்சதை, மல்லி, கடுக்காய், சோம்பு இவைகளின் பொடியைக் கலந்து, சர்க்கரை சேர்த்துக் கொடுத்துவர, குழந்தை களுக்குண்டாகும் நாட்பட்ட சீதக்கழிச்சல் நீங்கும். மகோதரம், உஷ்ணபேதி, போன்றவைகளும் குணப்படும், என்றாலும் இதன்

சதைப்பகுதி ருசியுள்ளது என்பதால் மட்டுமே பலர் புசிக்கின்றனர். இதன் மருத்துவப் பயன் கருதி இதனை பயன்படுத்தினால், பல மருந்துகளில் இதனைப் பயன்படுத்தலாம் என்று பல மருந்து செய் நிலையங்களில் சொல்லியிருக்கிறார்கள்.

* * *

## மஞ்சள்

## Curcuma longa

### (N. O. Scitaminaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Tubers or rhizomes.*

*Constituents* : *An essential oil, resin and alkaloid, curcumine turmeric oil and caproic acid.*

*Action* : *Aromatic, Stimulant, Tonic, and Carminative. Juice is Anthelmintic.*

Uses: This is found growing in tropical areas. The vhizome is called turmeric. This is aromatic. There are two rarieties available. The first variety is called kappu manjal and the second one is kari manjal. Major part of the rhlzome of kappu manjal is utilized by preserving it in gingelly oil. But the branches of kari manjal is utilized by boiling it in water. Oleo resin and oils are extractcd from this. It plays an important party in beauty aids. People use turmeric paste in the face as hair remover, but it does not help in any way. They think that it removes facial hair, but it is not the truth, it only decolorises the facial hair. A calalyst called Turmoral is distilled from this. Many other chemicals are distilled from the turmeric oil. This has flavour and the antiseptic property. So it is widely used in many skin preparations. By using the paste of turmeric regularly on the body it prevents the bad odour of the body, it also gives relief in head ache, gonorrhoea, oedema, insect bites etc. Powdered turmeric is antiseptic. It could be used as an external application for boils, when mixed with the cooked rice. If it is used as smoke it gives relief in cold. Paste of turmeric and neem leaf is used

externally on the eruptions of small pox, which enhances the healing process. Mixture of turmeric with adathoda leaves and cow's milk is used externally for eczema, itching, ring worm infection etc. The juice of fresh turmeric could be used externally to get relief from insect bites, leech bite, fresh wound, ulcers etc. If turmeric powder is taken internally it gives relief in stomach ache, flatulance, fever etc. Infusion of the turmeric is used to treat jaundice. To get relief from eye infections a cloth is soaked in the turmeric water and it could be used externally on the eyes. This is generally used in our day to day food for its flavour.

மஞ்சள், இது வெப்பமான பாகங்களில் பயிராகும் செடி. இதன் கிழங்கிற்கு மஞ்சள் என்று பெயர். இதற்கு ஒருவித மணம் உண்டு. மஞ்சள் இருவகைப்படும். அவை கப்பு மஞ்சள் கறி மஞ்சள் என்பனவாம். கப்புமஞ்சளானது கிழங்கின் பெரும் பாகங்களை எடுத்துலர்த்தி, நல்லெண்ணெயிற் பக்குவஞ் செய்யப் படுவது ஆகும். கறிமஞ்சள்—கிழங்கின் பக்கங்களிற் கிளைக்கும் விரற்போலுள்ளவைகளை வேறுபடுத்தி, சாணப்பாலில் வேக வைத்துப் பக்குவப்படுத்துவது.

இதிலிருந்து ஒலியோ ரெசின்கள், எண்ணெய் முதலானவைத் தயாரிக்கலாம். அழகு சாதன பொருட்களில் இதன் பங்கு கணிசமாக உள்ளது. மஞ்சள் பூசிக் குளிப்பதால் பலன் ஒன்றும் இல்லை மாறாக இதிலிருக்கும் மெழுகுப்பொருள் முகத்தில் இருக்கும் வியர்வைத் துவாரங்களை அடைத்து விடுவதுடன், சிறிய முடிகளை பழுப்பு நிறமாக்கும். இதனையே முகத்தில் முடி வளருவதை இது குறைக்கும் என தவறாக கணக்கிட்டு, பாமர மக்கள் பயன்படுத்துவது வழக்கிலிருக்கிறது. தவிர ''டர்மோரால்'' போன்ற வினையூக்கிகள் மட்டும் இல்லாமல் பத்துக்கும் மேற்பட்ட பல வேதியப் பொருட்களும் மஞ்சள் எண்ணெயில் இருந்து பகுத்தெடுக்கப்படுகின்றன. இதன் மணமும், நுண் சத்துக்களும், நோய் எதிர்ப்புச் சக்தியை தோலுக்குத் தருவதால் பலவிதமான சரும நோய்களுக்கான களிம்புகளில் மஞ்சளை பல்வேறு விதங்களில் பயன்படுத்துகிறார்கள்.

மஞ்சளை இழைத்து உடலில் பூசிக்குளிக்க புலால் நாற்றத்தை நீக்கும். இதனால் தலைவலி, நீரேற்றம், வெள்ளை, மூக்கு நீர் பாய்தல், வீக்கம், வண்டுகடி, பெரும்புண் இவைகள் போகும்.

மஞ்சளை நீர் விட்டரைத்து, முகத்தில் பூச, முகத்திலுண்டாகின்ற நோயும், அதிவியர்வையும் நீங்கும். மஞ்சளைப் பொடித்து புண்கள் மீது தூவ, அவைகள் ஆறும். சாதத்துடன் மஞ்சளைச் சேர்த்தரைத்துக் கட்டிகளின்மீது வைத்துக்கட்ட, அவைகள் எளிதில் பழுத்துடையும். மஞ்சளைச் சுட்டு அதன் புகையை முகர நீரேற்றம் நீங்கும். வேப்பிலையுடன், மஞ்சளைச் சேர்த்தரைத்து, அம்மைக் கொப்புளத்தின் மீது பூச, அவைகள் பழுத்துடைந்து, எளிதில் ஆறிப் போகும். மஞ்சளுடன் ஆடாதோடாயிலை சேர்த்து, பசுவின் நீர் விட்டரைத்துப் பூச, சொறி, சிரங்கு, நமைப்புடைகள் ஒழியும். பச்சை மஞ்சள் இரசத்தைப் பூச, அட்டைக்கடி, நஞ்சு, புதிய காயப்புண், புண் வீக்கம் இவை போகும். மஞ்சள் பொடியை சிறிதளவு உட்புகட்ட, வயிற்றுப் பொறுமல், வயிற்றுவலி, மாறல்சுரம் நீங்குவதுடன், குடலும் வன்மைப்படும். மஞ்சள் நீரையருந்த காமாலை போகும். மஞ்சள் நீரில் ஒரு சிறிய வெண்சீலைத் துண்டை நனைத்து, நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு, கண்நோய் உள்ளவர்கள், இச்சீலையைக் கொண்டு கண்களை அப்போதைக்கப்போது துடைத்து வர கண் சிவப்பு, கண்ணருகல், கண்வலி, கண்ணில் நீர்க்கோர்த்தல் போன்றவை தணியும்.

இதன் மணத்திற்காகவும், நிறத்திற்காகவும், நாம் உண்ணும் உணவில் இதனைச் சேர்ப்பதுண்டு.

* * *

## மஞ்சள்

**(மரமஞ்சள்)**

## Berberis aristata

**(N. O. Berberidaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruit and root*

*Constituents* : *It contains berberine in fair quantities. The root bark is rich in bitter principles.*

*Action* : *Stem is diaphoretic and Laxative. Root has a Bitter, Sharp and Hot taste. Root is Anti-periodic, Diaphoretic and Antipyretic*

Uses : The stalks of this plant soaked in water is treated with other chemicals to get Berberine alkaloid. This is

used in many medicines. The powder of the stick which is poured in the water is boiled and made into a paste. Butter is mixed with this paste and this mixture is used externally to cure pimples. This is exported from India. Dye prepared from this is used in textiles. This is also used as an ingredient in the medicines prepared for piles, difficulty in breathing, fatigue and giddiness.

மரமஞ்சள் குச்சிகளை தண்ணீரில் ஊறவைத்து, சில இரசாயனங்களைச் சேர்த்து ''பெர்பரின்'' (Berberine) அல்கலாய்டு தயாரிக்கிறார்கள். இது பல மருந்துகளில் பயன்படுகிறது. மரமஞ்சள் குச்சியை அரைத்து அதன் தூளைத் தண்ணீரில் ஊறவைத்து வரும் தண்ணீரைக் கொதிக்க வைத்து பாகு பதத்தில் இறக்கி அதனுடன் சுத்தமான வெண்ணெயைக் கலந்து, முகப்பருவுக்கான களிம்பைத் தயாரிக்கலாம்.

இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் மூலிகைகளுள் இதுவும் ஒன்று என்பதிலிருந்து இதன் பொருளாதாரச் சிறப்பைத் தெரிந்து கொள்ளலாம். இதிலிருந்து தயாரிக்கப்படும் மஞ்சள் சாயம், ஆடைத் தயாரிப்பு ஆலைகளுக்குப் பயனாகிறது. தவிர மூல நோய் மருந்துகளிலும், உட்சுவாசம், ஆயாசம், மயக்கம் நீக்கும் மருந்துகளிலும் மரமஞ்சள் உபசரக்காகச் சேர்க்கப்படுகிறது.

* * *

## மஞ்சள்

(மரமஞ்சள்)

## Coscinium fenestratum

**(N. O Menispermaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Stem*

*Constituents* : *Stem contains berberine and saponin in small quantities*

*Action* : *Root is Bitter, Stomachic, Tonic, and is a very good substitute for calumba.*

Uses : This exhibits the same property of Berberis aristata, but it contains more of berberine. This is used in the medicines prepared for intestinal ulcers and indigestion.

இந்த மரமஞ்சளுக்கும் முன் கூறிய மரமஞ்சள் போன்ற குணம் இருந்தாலும் இதில் பெர்பரின் சத்து அதிகம் உள்ள தால் குடற்புண், அஜீரணம் முதலியவற்றில் மருந்தாகப் பயன் படுத்தப்படுகின்றது.

* * *

## மஞ்சணத்தி

(மஞ்சள் நுணா)

**See : Morinda citrifolia**

**பார்க்க : நுணா**

* * *

## மஞ்சிட்டி

(பாண்டி, மஞ்சூகம்)

### Rubia cordifolia

(N. O. Rubiaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Roots*

*Constituents* : *Roots contain resin, gum and salts of lime. Colouring matter consists of purpurin, manjistin and garancin alizarin and xanthine.*

*Action* : *Plant is considered to be Emmenagogue, Astringent and Diuretic.*

Uses : This is a climber. The infusion of the root is used in promoting lochial discharge. It increases the haemoglobin contents of the blood. It cures phlegmatic and arthritic disorders. The paste of the root with honey is used to treat pimples.

This also could be used in mild skin ailments. The mixture of liquorice and this root are ground in vinegar and this paste is used externally as an analgesic application for fractures. The root is an antidote for snake venom and scorpion sting. Root along with sandal wood is powdered and roasted

in ghee. This could be used externally for burns. This is used as a colouring agent in oils. Red colour dye is prepared from this.

பாண்டி, இது ஒரு கொடி வகை. இவ்வேரைக் குடிநீர் செய்துக் கொடுக்க, சூதக அழுக்கை நீக்கும். குருதி நீர் முதலியவைகட்குச் செந்நிறத்தை ஊட்டும். கப, வாத சுரம் நீக்கும். வேரை தேன்விட்டரைத்து, முகப்பரு முதலியவைகளுக்குப் பூச அது போகும். இதை அரைத்து வீக்கம், புண், புடை இவைகளுக்கும் பூசலாம். அதிமதுரத்துடன் இதைச் சேர்த்துக் காடி விட்டரைத்து, எலும்பு முறிவினாலுண்டான நோய்க்கும், வீக்கத்துக்கும் போடலாம். இதன் வேர் பாம்புக்கடி, தேள்கடி விஷத்தை முறித்துக் குணப்படுத்தும். மஞ்சிட்டி, சந்தனம், மருட்கிழங்கு சேர்த்தரைத்து அல்லது பொடித்து, நெய்யிலிட்டுக் காய்ச்சித் தீச்சுட்ட புண்மீது தடவலாம். இதை நிறத்திற்காகத் தைலங்களில் சேர்ப்பதுண்டு. இதிலிருந்து சாயம் (சிவப்பு) தயாரிக்கலாம்.

* * *

## மசூரி பருப்பு

**See : Lathyrus sativus**

**பார்க்க : கேசரிப்பருப்பு**

* * *

## மணலிக் கீரை

**(மணல் கீரை)**

## Gisekia pharnaceoides

**(N. O. Ficoidaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Anthelmintic, Diuretic, Expectorant, Aperient, Cardiac, Sedative and Anti-herpetic.*

Uses : The leaves of this herb is used as green vegetables. Leaves if taken regularly along with food cures, rheumatism, bronchitis, phlegmatic disorders, worm infections

and psychic disorders. To treat worm infections the ash of the plant is ground in water and it is taken along with water in empty stomach. This should be taken for three days. Then it is continued after 4 days. Infusion of this leaves give relief from chest pain, catarrh of the nose, ring worm infection and rheumatism. This also cures kidney disorders.

மணலி கீரையால் வாதகோபம், மார்புளிச் சளி, சிலேஷ்ம ரோகம், கிருமிரோகம், பயித்தியதோஷம் ஆகியவைகள் நீங்கும். இதன் சமூலத்தை நீர்விட்டு அரைத்து, சிறிதளவு எடுத்து, நீரில் கலக்கி அதிகாலையில் வெறும் வயிற்றில் மூன்று நாள் வரை கொடுத்து, இடையில் நான்கு நாள் விட்டு, மறுபடியும் மேற் படியாக ஒருமுறை கொடுக்க, இது குடலில் தங்கியிருக்கும் தட்டைப் புழுக்களைப் வெளிப்படுத்தும்.

இக்கீரையை குடிநீரிட்டுக் கொடுக்க, இருதயக் கோளாறு, பீநிசம், படர்தாமரை, வாதம் ஆகியவற்றிற்கு குணமளிக்கும். சிறுநீர் சம்பந்தப்பட்ட நோய்களையும் குணப்படுத்தும்.

* * *

## மணத் தக்காளி

**(மணித்தக்காளி, மஞ்சரா)**

## Solanum nigrum

**(N. O. Solanaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and fruit*

*Constituents* : *Black berries contain solanine and solanidine an alkaloid.*

*Action* : *Herb is Alterative, Sedative, Diaphoretic Diuretic, Hydragogue and Expectorant. It is Locally an Anodyne. Fruits are Tonic, Alterative and Diuretic.*

Uses : There are two types in this herb. One possesses red coloured berry and the another one possesses black coloured berry. But they exhibit similar medicinal properties. The leaves if taken strengthens the inner organs. This acts as refrigerant, when the body has excess of heat. In patients

having phlegmatic disorders it increases the temperature. The leaves are used as green vegetable. The fruits are used in fresh or with preservative, which is made by soaking the fruit in curd and drying it in sun.

Leaves if taken cures stomatitis, burns and intestinal ulcers. This also cures inflammation of liver and spleen. Dried fruits cure arthritis. The cooked leaves if taken cures bronchitis, cough and tuberculosis. Leaves fruits, root, dried fruits and infusion of the leaves in any form if taken regularly it gives strength to body.

Fresh fruit is laxative. Dried fruit is diuretic and checks vomiting. This gives relief from asthma and tastlessness. This increases the semen secretion and improves eye sight. Dried fruits if taken regularly at night gives relief from phlegmatic disorders.

Leaf juice is diuretic and it is given to treat dropsy, ascites, stomatitis and internal heat. Dried fruit is roasted in ghee and if taken internally checks vomiting and acts an laxative and expectorant. Infusion of the dried fruit gives relief from cold affections and dysuria. Oil made out of this fruit cures wheezing and cough.

மணித்தக்காளி, மஞ்சரா எனப்படும் இதில் சிவப்பு, கறுப்பு என இரண்டு இனங்களுண்டு. இவ்விரண்டுக்கும் பெரிதும் வேற்றுமை ஏதும் இல்லை.

இக்கீரையை உண்பதால் நாப்புண், வேக்காடு, வயிற்றுப்புண் ஆறும். மண்ணீரல் வீக்கம் தீரும். இதன் வற்றல் வாததோஷத்தை நீக்கும்.

''மணத்தக் காளியுண்ண மார்பினிற் பையுளின்
கணத்தினிற் புறப்படு கயமுத லறுமே.''

மணத்தக்காளியைக் கறியாயேனும், வேறு விதங்களாயேனும் உண்டுவரின் மார்பில் கோழை சேர்தல், இருமல், இளைப்பு (ஷயம்) முதலியன விலகும். மணத்தக்காளியின் காய், கனி, இலை, வேர் இவற்றை ஊறுகாய், வற்றல், குடிநீர் முதலியவைகளாக உட்கொள்ள நீண்ட வாழ்நாளும், நோயற்ற உடலுடனும் இருக்கச் செய்யும்.

இதன் காய் இளகக் கழியச் செய்யும். வற்றல் நீர்க்கழிச்சலை உண்டாக்கும். வாந்தியைப் போக்கும். நோயாளிகளுக்கு ஏற்றது. மேலும் ஆஸ்துமா நோய் இதனால் குணமாகும். விந்தானது அதிகரிக்கும். கண் ஒளிபெறும்.

இலைச்சாற்றை தினம் மூன்று வேளைக் கொடுக்க, நீரைப்பெருக்கி, நீர்ப்பாண்டு, பெருவயிறு, வாய்ப்புண், உட்சூடு இவற்றை அகற்றும். காயை உலர்த்தி நெய்யில் வறுத்தோ அல்லது குடிநீரிட்டோ கொடுக்க வாந்தியைப் போக்கிக் கழியச் செய்யும். கோழையை அகற்றும். வற்றலை கொதிக்கும் வெந்நீரில் சேர்த்து, ஒருமணி நேரம் மூடிவைத்திருந்து வடிகட்டி, நீர்க்கோவை, நீர்ச் சுருக்கு முதலியவைகளுக்குக் கொடுக்கலாம். இதனால் செய்யப்படும் தைலம், இரைப்பு, இருமல் நோய்களைப் போக்கும்.

* * *

## மதன காமேஸ்வரப் பூ

### (மதன காமியப்பூ)

## Cycas circinalis

### (N. O. Cycadaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Male bracts, nuts and stem*

*Constituents* : *Bracts or scales contain in a dried state, much albuminous and mucilaginous matter soluble in water but no alkaloid.*

*Action* : *Male bracts are used as Narcotic. They have a property that intocxicates insects that rest upon them also Stimulant and Aphrodisiac.*

Uses : This is a tree. Flowers are bisexual. Only the male flowers exhibit medicinal properties. Seed and stem also used medicinally.

Powdered flowers are used in the medicinal preparations as aphrodisiac. This increases the number of sperms in the semen. This powder if taken along with milk induces good sleep. This is used as an ingredient in electuaries. Seeds are used in the powdered form.

மதனகாமியப்பூ, இது ஒருவகை மரத்தின் பூ. இப்பூவானது ஆண், பெண் என இருவகைப்படும். இவற்றுள் ஆண் வகைப் பூவே முதன்மையானது. இதன் பூ, விதை, தண்டு அனைத்தும் மருத்துவ குணமுடையது.

இதன் பூவை உலர்த்திப் பொடித்து வேறு மருந்துகளுடன் சேர்த்து காலை, மாலைகளில் உண்டுவர உடல் வன்மை பெற்று ஆண்மை உண்டாகும். மேலும் நீற்றுப் போன இந்திரியம் கட்டும். இதன் பொடியைப் பாலிலிட்டுக் காய்ச்சி, இரவில் படுக்கைக்குப் போகுமுன் சாப்பிட, நல்ல தூக்கம் உண்டாகும். இது லேகியங்கள் செய்யவும் உதவும். இதன் விதையானது சூரணஞ் செய்ய உதவும். இதன் விதையை உலர்த்தி, இடித்து மாவாக்கி அனைவரும் உண்பர்.

* * *

## மந்தாரை

**(சிகப்பு மந்தாரை)**

## Bauhinia purpurea

**(N. O. Leguminosae)**

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Tree* |
| *Parts used* | : | *Flower buds, flowers, bark and root* |
| *Constituents* | : | *Tree yields gum. Bark contains tannin. Seeds contain oil.* |
| *Action* | : | *Bark is Astringent, root is Carminative and flowers are Laxative.* |

Uses : There are many types in this plant, depending on the size and colour of the flowers.

This is used in oils to cool the eyes. Infusion of the flower bud is an excellent remedy to check cough, bleeding in haemarrhages and menorrhagia. Bark of this tree along with bark of gum arabic tree and pomagranate flower is made into a decoction. This is used as gargle to treat excess secretion of saliva and sore throat. Bark mixed with the powder of dried ginger is ground in rice water is used as an external application to cure scrofulous affections. Infusion of the bark checks diarrhoea. If it is used to wash the chronic ulcers heals them. Equal quantity of root, stem bark and

flowers of this plant are taken and ground in rice water is used externally to hasten the ripening of the abscesses. Powder of the root if taken regularly reduces obesity.

மந்தாரையில் பல இனங்கள் உண்டு. வெள்ளை மந்தாரை, மஞ்சள் மந்தாரை, காட்டு மந்தாரை, சிவப்பு மந்தாரை, கிளியிறகு மந்தாரை, இலை மந்தாரை, படர் மந்தாரை, கொடி மந்தாரை, அந்தி மந்தாரை, மலை மந்தாரை, கள்ளி மந்தாரை, ஆகியவைகள் குறிப்பிடத்தக்கவை.

கண்ணுக்குக் குளிர்ச்சியை உண்டாக்கக் கூடிய சில எண்ணெய் களில் இது சேரும். பூ மொக்கைக் குடிநீரிட்டுக் குடித்துவர இருமல், இரத்தப்பெருக்கு அடங்கும். பெரும்பாடு நீங்கும். இதன் பட்டை யுடன் வேலன் பட்டை, மாதுளம் பூ இவைகளைச் சேர்த்து, குடிநீரிட்டு வாய்க் கொப்பளித்து வர வாய் நீர் ஊறல், தொண்டைப்புண் இவை நீங்கும். பட்டையை சுக்குத்தூள் சேர்த்து, கழுநீர் விட்டரைத்து கண்டமாலைக்குப் பூசலாம். பட்டைக் குடிநீர் கழிச்சலை நிறுத்தும். அழுகிய புண்களில் விட்டுக் கழுவ அவை உலரும்.

வேர், பட்டை, பூ, இம்மூன்றையும் சமனெடைச் சேர்த்து கழுநீர் விட்டரைத்து, கட்டிகளின் மீது பூசிவர, கட்டிகள் பழுத்து உடையும். உடல் பருமனை இதன் வேர் சூரணம் குறைக்கும்.

* * *

## மந்தாரை
### (வெள்ளை மந்தாரை)

## Bauhinia tracemasa
### (N. O. Leguminosae)

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Small tree* |
| *Parts used* | : | *Flower buds, flowers, bark and root* |
| *Constitueuts* | : | *Tannin* |
| *Action* | : | *Plant is Antidysenteric and Anthelmintic. Fruit is Diuretic. Seeds are Tonic and Aphrodisiac.* |

Uses : This cures inflammation of the spleen. This is used as refrigerant. Paste of the leaves are applied to heal cuts and wounds. Fruit is diuretic.

வெள்ளை மந்தாரையால் மண்ணீரல் வீக்கம் குணப்படும். உடற்சூடு தணியும். கண் குளிர்ச்சி பெறும். காயங்கள் ஆற இலையை அரைத்துப் பூசலாம். இதன் காய் சிறுநீர் பெருக்கியாகும்.

* * *

## மயிலாலக்கடி

**(மைதாலக்கிடி, பிசின்பட்டை)**

## Tetranthera roxburgii or Litsea sebifera

**(N. O. Lauraceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Constituents* : *Bark contains laurotetanine*

*Action* : *Bark is Demulcent, Mild Astringent, Anti-pyretic, Emollient, Anodyne and Aphrodisiac.*

Uses : Bark of this tree is used in many medicines. Fresh or dried barks ground in milk or hot water is applied to reduce inflammations. Paste of the bark is used as an external application to cure poisonous bites. Bark is aphrodisiac.

பிசின்பட்டையை பச்சையாகவோ, அல்லது உலர்ந்ததாகவோ எடுத்து பால் அல்லது வெந்நீர் விட்டரைத்து கலக்கி, வலியுடன் கூடிய வீக்கங்களுக்கு சிறிது சிறிதாக விடலாம். இதையே துணியில் துவைத்துக் காயங்களுக்கு வைத்துக் கட்ட, சீக்கிரத்தில் ஆறும். பட்டையை அரைத்து நஞ்சுக் கடிகளுக்கு மேலுக்குப் பற்றிட நஞ்சு நீங்கிப் போகும். ஆண்மையை பெருக்கவும் பயன்படும்.

* * *

## மயில் கொன்றை

**See : Delonix regia**

**பார்க்க : கொன்றை வகைகள்**

* * *

## மயூர்சிகை
(மயூர் சிக்கா)

## Adiantum emarginatum
**(N. O. Polypodiaceae)**

*Habit* : *Ferns*

*Parts used* : *Whole plant*

*Action* : *Diuretic, Cardiac Stimulant, Emollient, Anti-syphilitic, Alterative, Resolvent, Expectorant and Emmenagogue.*

Uses : This herb is used in the treatment of chest pain, diabetes and skin diseases. This is one of the herb which increases the body resistance.

மயூர்சிக்கா ஓர்வகைப் பூண்டு. இது இருதய நோய், நீரிழிவு, சருமநோய் ஆகியவற்றிற்கு உதவும். உடலில் நோய் எதிர்ப்புச் சக்தியை வளர்க்கும் மூலிகைகளுள் இதுவும் ஒன்று.

* * *

## மரக்காரை
(மருக்களாங் காரை)

## Randia dumetorum
**(N. O. Rubiaceae)**

*Habit* : *Small thorny tree*

*Parts used* : *Rind, fruit and bark*

*Action* : *Rind and fruit are Emetic, Diaphoretic and Antispasmodic.*

Uses : This is a small tree. The bark, fruit and root exhibit medicinal properties. Fruits if taken internally cures asthma, phlegm, fever, flatulence, giddiness and ascites. This also improves mental power. Root is emetic and expels the phlegm. This cures dysentery, blood pressure, biliousness, eczema, intestinal gas formation and indigestion. Fruit is considered to be an abortifacient and the pregnant ladies hould not consume it. Fruits are soaked in water and mashed.

Then this is filtered and if given to children induces vomiting. Along with hot water it increases vomiting and expels the phlegm. Fruits without seeds are dried and powdered. This is again ground in water and filtered. This if taken along with honey and sugar it acts as emetic, to treat bronchitis. It is given in small doses to treat dysentery.

Infusion of the bark or root of this plant is also emetic. Infusion of this if taken in small doses it checks diarrhoea due to indigestion and dysentery. Paste of the bark or root is used as an external application to reduce inflammation. This also cures arthritis.

Fruit along with dried ginger, white winged myrobalan, bark of white babul, mudar root, senna and cane palm are taken in same quantity and made into a decoction. This decoction is used as gargle to strengthen the gums and teeth. The unripened fruits are used in the places of soaps.

மருக்களாங்காரை ஒரு வகை சிறு மரம். இதன் பழம், பட்டை, வேர், காய் முதலியன மருத்துவத் தன்மையுடையன.

இதன் பழத்தையுண்டால் ஆஸ்துமா, கபம், சுரம், வயிற்றுப் பொருமல், மயக்கம், பெருவயிறு முதலியன குணமாகும். மேலும் புத்தித் தெளிவாகும்.

இதன் வேர் வாந்தியை உண்டு பண்ணி கோழையை அகற்றும் முப்பிணியைப் போக்கும். மேலும் சீதக்கடுப்பு, குருதியழல் நோய், பித்தம், கரப்பான், வாயு, மாந்தகணம் இவைகளை நீக்கும். இதன் பழம் சூலை அழிக்கும் செயலுடையதால் கர்ப்பிணிகளுக்கு இதை கொடுக்கக்கூடாது. பழங்களை உடைத்து நீரில் ஊறவைத்து பிசைந்து வடிகட்டிக் கொடுத்தாலும் வாந்தியாகும். வெந்நீருடன் குடிக்க மிகுதியாக வாந்தியாகும். கோழையைப் போக்கும். இதன் பழத்தை உடைத்து உள்ளிருக்கும் விதைகளை நீக்கி பழச்சதையை மாத்திரம் உலர்த்தி பின்பு பொடி செய்து, மீண்டும் உலர்த்தி, அரைத்து, மெல்லிதான துணியில் வடித்து, உலர்த்திக் காற்று புகாமல் ஒரு புட்டியில் அடைத்து வைத்துக் கொண்டு, தேன் அல்லது சர்க்கரையுடன் கூட்டிக் கொடுக்க நன்றாக வாந்தியாகும். இதனை குறைந்த அளவு எடுத்து சீதபேதிக்குக் கொடுக்கலாம்.

பட்டை அல்லது வேரை குடிநீரிட்டுக் கொடுக்க வாந்தியாகும். இதை சிறிதளவு கொடுக்க செரியாக் கழிச்சல், சீதக்கழிச்சல் இவை

களைக் குணப்படுத்தும். பட்டை அல்லது வேரை அரைத்து, மேற் பூச்சாக வீக்கங்களுக்குப் பூசலாம். வாதம் குணப்படும்.

மருக்காரை, சுக்கு, மருதந்தோல், வெள் வேலம்பட்டை, எருக்கு வேர், ஆவாரை, பிரப்பன் கிழங்கு ஆகிய ஏழையும் ஒரே அளவில் எடுத்திடித்து நீர் விட்டு, நான்கில் ஒன்றாக வற்ற வைத்துக் குடிநீர் செய்து வாய் கொப்புளித்து வர, அனைத்து வயதினரது பற் களும் உறுதிப் பெறும்.

இதன் காய் சோப்புக்குப் பதிலாக உபயோகப்படும்.

* * *

## மரவாலை

## Vanda roxburghii

### (N. O. Orchidaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Fruit, leaves and gum*

*Constituents* : *An alkaloid*

*Action* : *Leaves and Fruits are Stimulant, Cathartic and Diaphoretic. Gum is Emmenagogue. Berries are Purgative.*

Uses : The fruit and leaves are used medicinally. Gum found in this plant contains hedicsin. This is used in the electuaries which are used as aphrodisiac.

மரவாலை இலையும் காயும் மருத்துவ பண்பு வாய்ந்தவை. இதன் கோந்து "ஹெடிக்ஸின்" சத்து உள்ளது. தாது புஷ்டி லேகியங்களில் சேர்க்கப்படுகிறது.

* * *

## மரி மாங்காய்

(மரியங்காய்)

## Spondias mangifera

### (N. O. Anacardiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit, leaves, pulp and bark*

*Constituents :* *The inner part near the rind is rather acid, but that being removed the part nearest the stone is sweet and eatable*

*Action :* *Pulp of the fruit is Acid and Astringent.*

Uses : Fruit is used medicinally. This gives relief from bitterness of the mouth and anorexia.

This reduces biliousness and checks dysentery. Paste of the fruit or pickles are used to treat the above said disorders. The tender leaves are also used along with food in the form of a paste.

இதற்கு மரியங்காய் அல்லது புளிமாங்காய் மரம் எனப் பெயர். இதன் காய் மருத்துவ குணமுடையது. இதனால் வாய்க் கசப்பும், சுவையின்மையும் நீங்கும். சுர நோயினருக்கு உவப்பைத் தரும். மேலும் பித்தப்பைக் கோளாறு நீக்கும். சீதபேதி தணியும். இதன் காயைத் துவையல் செய்து அல்லது ஊறுகாய் செய்து சாப்பிடு வதனால் மேற்கண்ட நோய்களுக்கு குணம் காணலாம். இதன் இலைக் கொழுந்தையும் துவையல் செய்து சாப்பிடலாம்.

* * *

## மருள்
### (ஜாங்குப் பட்டை)

## Sansevieria roxburghiana

### (N. O. Haemodoraceae)

*Habit :* *Tree*

*Parts used :* *Root, tender shoots and leaves*

*Constituents :* *An alkaloid 'Sanservierine'*

*Action :* *Purgative, Sweet, Pungent, Tonic, Expectorant, Febrifuge and Cardiac.*

Uses : This is found where water content of the soil is high. Leaves and tubers exhibit medicinal properties. This cures bronchitis, ascites and different kinds of dropsies. This increases appetite. The leaves are roasted over fire and squeezed. The juices of this is used as ear drops to treat otitis. Fibres are taken from this leaves. Infusion of the tuber gives relief in thirstyness, chest pain, ulcers, fever and

tumours found due to lymphatic disorders. This also cures phlegmatic disorders, leprosy and neuralgia. Ghee made out of its tuber if taken internally cures chronic cough. Juice of the tuber if given to children relieves bronchitis.

மருள் நீருள்ள எல்லா இடங்களிலும் பயிராகின்றது. இதன் மடல், கிழங்கு மருத்துவ குணமுடையது. இதனால் கோழைக் கட்டு, பெருவயிறு, பலவித சோபை, மூலம் இவைப் போகும். பசி யுண்டாகும்.

"தொண்டைக்கட் டையந் தொலையும் மகோதரமும்
பண்டைப்பல் வீக்கம் பறக்குங்காண்—கெண்டைவிழி
மானே! மருள் கிழங்கால் மாறுமூ லங்களெலாற்
தானே பசியெழும்புந் தான்."

இதன் மடலை அனலில் காட்டி, வதக்கிப் பிழிய, காதுவலி நீங்கும்.

இதனின்று நாரெடுப்பதுண்டு. கிழங்கைக் குடிநீரிட்டுக் கொடுக்க நீர்வேட்கை, மார்புநோய், சிரங்கு, சுரம், நோய்,நெறிக்கட்டு முதலியன குணமாகும். கபரோகம் குணமாகும். குஷ்டம் குணப்படும். நரம்பு வீக்கம் தணிக்கும். கிழங்கை நெய்யாகச் செய்து, நாட்பட்ட இருமலுக்குக் கொடுக்க குணமாகும்.

இதன் சாற்றைச் சிறு குழந்தைகளுக்குண்டாகும் கோழைக் கட்டை நீக்கக் கொடுப்பதுண்டு.

* * *

## மருள் ஊமத்தை

**See : Xanthium strumarium**

**பார்க்க : ஊமத்தை வகைகள்**

* * *

## மருக்கொழுந்து

**See : Aristolochia labiosa**

**பார்க்க : தமனகந்தம்**

* * *

## மருக்கொழுந்து
(மலை மருக்கொழுந்து)

## Achillea santolina
**(N. O. Compositae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and flower heads*

*Constitnents* : *An essential oil, HCN glucoside achillein*

*Action* : *Stimulant, Tonic and Carminative.*

Uses : This is used to treat stomach ache in children. This is a very good remedy for poisonous insects bites.

மலைமருக்கொழுந்து குழந்தைகளுக்குண்டாகும் வயிற்று வலியைக் குணப்படுத்தும். மேலும் பூச்சிக் கடிகளுக்கு ஒரு சிறந்த மருந்து.

* * *

## மருவு

## Origanum majorana
**(N. O. Labiatae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *The fruit contains a volatile essential oil oleum marjoranae*

*Action* : *Plant is Carminative, Stimulant, Diaphoretic, Emmenagogue and Tonic.*

Uses : The oil extracted from this fragrant plant is used to treat paralysis, rigidity of joints, tooth ache, asthma and psychic disorders. This cures amenorrhoea and regulates the menstrual cycle.

இதன் எண்ணெய் பாரிச வாயு, நரம்பு பிடிப்பு, பல்வலி, ஆஸ்துமா, மனநோய் முதலான நோய்களுக்கு குணம் தரும். மேலும் சூதகத் தடையைச் சீராக்கவும் மருவு பயன்படுகிறது.

* * *

# மருதம்

## (வெள்ளை மருதம்)

## Terminalia arjuna

## (N. O. Combretaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, leaves, fruit, seed and flower*

*Constituents* : *Arjuna arishtam is prepared from this. Argunine, this contains argunine, and Arjunetin.*

*Action* : *Bark is Cardiac Stimulant, Tonic and Diuretic. Fruit and Seed are Astringent, Rubefacient, Tonic and Blood Purifier. Flower is Galactagogu. and Vulnerary.*

Uses : Bark in infusion reduces chest pain and frequency of heart beat. This reduces the blood sugar level and hypertension. Menorrhagia, fatigue and leprosy could be treated with this bark. Fruit along with seed is used in bandaging of fracture of the bones. The paste of the seed is also used to heal the chronic ulcers. The flowers and root of this tree are used as an ingredient in the system of Ayurveda.

வெள்ளை மருதம் பட்டை குடிநீர் இருதய நோய், இருதய படபடப்பு முதலியவற்றை குணப்படுத்தும். நீரிழிவு, இரத்தக் கொதிப்பு தணிக்கும். பெரும்பாடு, ஆயாசம், குஷ்டம் ஆகியவை யும் நீக்கும்.

எலும்பு முறிவுக்கு இதன் பழத்தை விதையுடன் அரைத்துக் கட்டலாம். பழங்கால வைத்தியர்கள் இதை அழுகல் இரணத்திற்கும் வைத்து கட்டுவார்கள். இதன் பூவும், வேரும் ஆயுர்வேத மருந்து களில் பிரதானமாக இடம் பெறுகிறது.

* * *

## மருதம்
### (கருமருதம்)

## Terminalia tomentosa
### (N. O. Combretaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Gum bark and ash*

*Constituents* : *Bark contains tannin*

*Action* : *Astringent, Antiseptic, Bactericidal, Demulcent and Detergent.*

Uses : This exhibits the similar properties of the white variety. This is employed widely in bandaging the fractured bones.

வெள்ளை மருதத்தின் குணங்களே கரு மருதத்திற்கும் பொருந்தும். எலும்பு முறிவு மருத்துவத்தில் இது பெரிதும் பயன்படுகிறது.

* * *

## மருதம் பட்டை

## Myrica nagi
### (N. O. Myricaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, flowers, seeds, arillus and fruits*

*Constituents* : *Bark contains tannin, saccharine matter and salts. The ground bark yields 'Muricetin'*

*Action* : *Bark is Aromatic, Astringent, Stimulant, Resolvent, Carminative and Tonic.*

Uses : This is used in treating asthma, phlegm, cough and diarrhoea. This gives strength to lungs and liver. Juice of the bark is used in the calcination processes in siddha system.

ஆஸ்துமா, கப இருமல், பேதியை நிறுத்த மருதம்பட்டை பயன்படுகிறது. சுவாசப்பை, ஈரல் பகுதிகளுக்கு வலிமை தரும்

இப்பட்டைச் சாற்றை பஸ்பங்கள் செய்யவும், செந்தூரங்கள் தயாரிக்கவும் சித்த மருத்துவர்கள் பயன்படுத்துவார்கள்.

* * *

## மரு தோன்றி

**See : Lawsonia alba**

**பார்க்க : அழவணம்**

* * *

## மல்லிகை

## Jasminum grandiflorum

**(N. O. Oleaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and flowers*

*Constituents* : *Leaves contain salicylic acid, resin and an alkaloid named jasminine. Flowers contain an essential oil*

*Action* : *Leaves are Astringent, Flowers are Anthelmintic Antipyretic, Deobstinent, Diuretic, Emmenagogu, Cooling and Vulnerary.*

Uses : There are many varieties in this,depending on the size,shape, colour and odour of the flowers. Flowers are aromatic Leaves, flower and root exhibit medicinal property. This cures phlegmatic, rheumatic and bilious disorders. It is also used in treating head ache, body heat, cataract etc. If the leaves are chewed it cures stomatitis. Leucoderma also could be treated with the leaves of wild jasmine. Leaf juice of the oil extracted from the leaves are used to cure Verruca. Leaf juice are also used to cure corms. Leaves roasted in ghee is used externally for throat pain. Perfumes are made from the flower of this plant. Aromatic oil extracted from the flowers is acts as febrifuge. This also could be used for minor skin ailments head ache and burning sensation of eyes.

Paste of the flower or leaves are used externally for the burns of the skin due to friction, especially in between thighs. Paste of the flowers reduces the oedema. Flower could be used externally as lactifuge. Powdered root along with sweet flag if used externally with lemon juice, it cures minor skin ailments. This also gives relief in fever, head ache and heavyness of the head.

மல்லிகையில் பல வகையுண்டு. அவை சாதிமல்லி, ஊசி மல்லி, குடமல்லி போன்றனவாம். இவைகள் பண்பில் பெரும் பாலும் ஒன்றுபட்டே இருக்கும். காட்டுமல்லி இலையால் வெண் குட்டம் தீரும்.

இது மிகுந்த நறுமணத்தைத் தரக்கூடியச் செடி. எங்கும் கிடைக்கக் கூடியது. வெப்ப நாடுகளில் வளரும். இதன் இலை, பூ, வேர் மருத்துவத் தன்மையுடையது.

இதனால் முக்குற்றம், தலை நோய், உடல் வெப்பம், கண் படலம் இவை நீங்கும். மனக் கலக்கத்தைப் போக்கும். அன்றியும் இதன் நறுமணத்தால் கலவி இன்பம் பெருகும். மனதைக் கவரச் செய்யும்.

இதன் இலையை வாயிலிட்டு மெல்ல வாய்ப்புண் முதலியன மாறும்.

இலைச்சாறு அல்லது இலையிலிருந்து எடுக்கும் எண்ணெய் காது நோயை மாற்றும், சீழை நிறுத்தும். இலைச்சாறு காலா ணியைப் போக்கும். இலையை நெய்யில் வறுத்து ஒற்றடமிட தொண்டை நோய் முதலியன நீங்கும்.

''போகமிக உண்டாகும் பொங்குகபங் கட்பிரமை
ஆகவனல் சூனியமும் அண்டுமோ? — பாகனையாய்!
மன்னு திருவசியம் வாய்க்குஞ்சூ டென்றெவரும்
பன்னுமல்லி கைப்பூவாற் பார்.''

பூக்களிலிருந்து அத்தர் செய்யலாம். இதிலிருந்து மிகவும் மணமுள்ள எண்ணெய் செய்து, தலையில் தேய்த்து முழுகிவர, உடலுக்குக் குளிர்ச்சியைத் தரும். தலைவலி, தோலைப் பற்றிய நோய்கள், கண்ணெரிச்சல் முதலியன தீரும். இப்பூவை அல்லது இலையை அரைத்துத் தொடையிடுக்கு, குறி முதலிய இடங்களில் பற்றிடுவதால், கலவி இன்பம் பெருகும். பூவை அரைத்துப் பூச, வீக்கங் குறையும். இதை தொடையிடுக்கில் பூச உடல் பருமன் அதிகம் உள்ளவர்களுக்கு கால்கள் உராய்வதினால் ஏற்படும் புண் ஆறும். பூவை வைத்து மார்பில் கட்ட, பால் சுரப்பு நிற்கும்.

இதன் வேர்த்தூளையும், வசம்புத் தூளையும், எலுமிச்சம் பழச்சாறு விட்டு மத்தித்துத் தேய்க்க தோலைப் பற்றிய நோய்கள் தீரும். தேகச்சூடு தணிக்கும். தலைவலி, தலைபாரம் நீங்கும்.

* * *

## மல்லிகை

**(ஊசிமல்லி, முல்லைப் பூ)**

## Jasminum pubescens

**(N. O. Oleaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and flowers*

*Constituents* : *An aromatic oil is extracted from the flowers*

*Action* : *Plant is Emetic. Flowers are Lactifuge.*

Uses : This is used as a main ingredient in treating mental disorders, jaundice and venereal diseases. This increases semen secretion.

மனோவியாதி, காமாலை, பிரமேகம் ஆகியவகைகளை முல்லைப்பூ குணப்படுத்தும். மேலும் சுக்கில விருத்தியாக்கும். இதிலிருந்து வாசனை எண்ணெய் எடுக்கப்படுகிறது.

* * *

## மலை தாங்கி

**(வெற்பேந்தி, வட்டதிருப்பி, பங்கம் பாளை)**

## Sida or S.acuta

**(N. O. Malvaceae)**

*Habit* : *Herb* .

*Parts used* : *Root and leaves*

*Action* : *Roots are Bitter, Tonic, Stomachic, Diaphoretic and Antipyretic. Leaves are Expectorant, Alterative and Nutrient.*

Uses : This is a twiner found in hills. Leaves and roots are of medicinal use. This could be used in treating

80 types of arthritis, head ache, fever and otitis. This increases the body strength and acts as aphrodisiac. The root acts as antidote and febrifuge. Tuberculosis, diarrhoea and ulcers also could be treated with this. This is helpful in reducing obesity. Leaf roasted in oil could be used externally on abscess which will enhance its ripening and healing. Infusion of the root induces sweating. It is used for convalasing patients. It cures indigestion. Juice of the fresh root is used to expel the intestinal worms. Decoction of the root is used to treat gonorrhoea, flatulence in joints and acts as diuretic.

வெற்பேந்தி ஒரு கொடி. மலைகளில் வளருகின்றது. இதன் வேருக்கு ''வட்டத்திருப்பி'' என்பது பெயர். இதன் இலை, வேர் மருத்துவ குணமுடையது.

மலைதாங்கியால் எண்பது விதமான வாதரோகம், சுரம், காது வலி, தலை நோய் முதலியவைகள் நீங்கும். வெற்பேந்தி என்னும் பொன் முசுட்டையால், உடல் வன்மையடையும், ஆண்மையும் தந்து உடலைக் கல்லைப் போல் அழியாதபடி நிலைக்கச் செய்யும். விந்தானது கட்டுப்படும்.

இதன் வேரால் நஞ்சு, எலும்புருக்கி, கொடிய சுரம், கழிச்சல், சிரங்கு, இவை தீரும். ஊளைச் சதையை நீக்கும். காதுவலி தலைவலி, பித்த சுரம், பேதியை குணமாக்கும். மயக்கம், உட்சூடு தணியும்.

இலையை எண்ணெய் விட்டு வதக்கிக் கட்டிகள் மீது வைத்துக் கட்ட, அவை எளிதில் பழுத்து உடையும். வேரை, வெந்நீர் ஊறலிட்டுக் கொடுக்க, அது வியர்வையை உண்டாக்கும். நோயால் மெலிந்த உடலைத் தேற்றும். செரியாமையைப் போக்கும்.

வயிற்றுப் புழுவை வெளிப்படுத்த, பச்சை வேரைப் பிழிந்த இரசத்தை உள்ளுக்குக் கொடுக்கலாம்.

இதன் வேரை குடிநீரிட்டு, கீல்வாயு நோயிலும், வெள்ளை நோய்களுக்கும் கொடுக்கக் குணமாகும். இது நீரைப் பெருக்கி, உள்ளழலையை ஆற்றும்.

* * *

## மனோரஞ்சிதம்

(மதனமஸ்து)

## Artabotrys suaveolens

**(N. O. Annonaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves, seeds and flowers*

*Constituents* : *An alkaloid artabotrine*

*Action* : *Anti-dandruff*

Uses : An aromatic oil is extracted from this. Paste of the seed mixed with oil is used on the hair to eradicate dandruff. This is also used in cholera.

மதனமஸ்து எனப்படும் வாசனை எண்ணெய் எடுக்கலாம். இதன் இலைகளை அரைத்து வீக்கங்களுக்கு பற்றிட வீக்கம் வாடி வதங்கும். இதன் காயை அரைத்து எண்ணெய்க் காய்ச்சித் தடவ பொடுகு நீங்கும்.

* * *

## மன்னா

**See : Tamarix gallica**

பார்க்க : சிறுசவுக்கு

* * *

## மாசிக்காய்

## Quercus infectoria

**(N. O. Cupuliferae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Galls and bark*

*Constituents* : *Galls contain tannic acid and gallic acid*

*Action* : *Bark and galls are Astringent, Styptic, Antiperiodic, Tonic, Antipyretic and Antisyphilitic.*

Uses : Oak galls result from the puncture and deposit of an egg or eggs of an insect Cynips Gallae tinctoria on the buds and leaves of various species of oak and on a species of sumach. The pores made by the insect of this tree secrets a type of latex and this is condensed. This condensed latex is called Oak galls or Magic nuts. Galls occur in three colours. Black, blue and white. Galls which are lights in colour are inferior in quality. If this condensed latex is used along with the insects which made the holes on the tree it is considered to be more superior. This acts as febrifuge. Gonorrhoea could be treated with this. This acts as tonic. Powdered fruit added with water and boiled for ten minutes. This is then filtered. If this filtered water is given in small quantity it improves indigestion and checks diarrhoea chronic cough and it removes black spots of the skin, gleet etc. Head ache and heavyness of the head also could be treated. Infusion of the fruit is used as gargle it relieves stomatitis and ulcers could be washed with this. Powdered fruit with Guggul and pig's fat is made into an ointment .If the ointment is mixed with opium it could used externally for piles and fistula. If this powder is used as snuff it checks nasal bleeding. If taken internally it checks haematuria and menorrhagia. Blood vomiting also could be treated with this. It is an antidote for the following substances. Copper sulphate, lime water, opium, Aconite Pottassium nitrate

மாசிக்காய் என்பது மரத்தின் கிளைகளிலிருந்து ஒருவித பூச்சிகள் துளையிட, அதிலிருந்து வடிகிற பால் உருண்டு, திரண்டு கட்டுவதேயாகும். இது கருமை, நீலம், வெண்மை என மூன்று வேறுபாடுகளையுடையது. இதற்குள் அகப்படும் பூச்சிகள் வெளிப்படாததற்கு முன்னே எடுப்பது சிறந்ததாகும். அதிலுள்ள பூச்சிகள் வெளிப்பட்ட பின் கிடைப்பது அவ்வளவு நன்றன்று.

இது நீங்காத உட்சூடு, குழந்தைகளின் கணைச்சூடு, பலவகை மேகம் இவற்றைப் போக்கும். உடற்கு வன்மை தரும்

''அக்கரங்கள் போக்கிவிடும் மாறாத வெப்பகற்றும்
மெய்குறுதி மாசிக்காய் மென்மேலும்—தக்கதொரு
பால்ர்கண நோய் போக்கும் பன்மேக முந்தொலைக்கும்
வேலனைய கண்ணாய்! விளம்பு.''

மாசிக்காய்த் தூளை நீர் சேர்த்து, பத்து நிமிடம் வரைக் காய்ச்சி வடிகட்டி, அதில் சிறிதளவு கொடுக்க மந்தம், பெருங்கழிச்சல், நாட்பட்ட கக்கிருமல், கறும்புள்ளி, வெட்டை முதலியன குணமாகும். சீதபேதி, பேதி, அஜீரணம் குணமாகும். தலைவலி, தலைபாரம் குணப்படும். பித்தாதிக்கம், உட்சூடு, கரப்பான் நீக்கும்.

இக்குடி நீரையே அக்கரங்களுக்கு வாய் கொப்புளிக்கவும், புண்களைக் கழுவவும், வெள்ளை நோய்க்கு நீர்த்தாரையிலே பீச்சவும், கழிச்சலுக்குப் பீச்சிடவும் பயன்படுத்தலாம்.

மாசிக்காய்த்தூள், பொடித்த சாம்பிராணி, பன்றி நெய் சேர்த்துக் களிம்பு செய்து, அக்களிம்பில் அபினி சேர்த்து மூலக்கட்டு முளைக்குப் பூச நன்மை தரும்.

இதைத்தூள் செய்து மூக்கில் குருதிவடிதலுக்கு மூக்குப் பொடியாகவும், இருமி குருதிக் கக்கல், குருதியோடிழியும் சிறுநீர், பெரும்பாடு, குருதி வாந்தி இவைகட்கு உள் மருந்தாகவும் பயன் படுத்தி வர மேற்படி நோய்கள் நீங்கும். ஈறு, மூக்கு, இவ்விடங்களி லிருந்து வடியும் குருதியையும் நிறுத்தும்.

மயில்துத்தம், மர உப்பு, பூ நீர் உப்பு, சுண்ணாம்புத் தண்ணீர், அபினி, நாவி, வெடியுப்பு இவைகளின் நஞ்சுக்கு இது ஒரு முறிப்பாகும்.

* * *

## மாசி பத்திரி
### (மாசிப்பச்சை)

## Artemisa absinthium
### (N. O. Compositae)

*Habit* : *Herb*

*Parts used* : *Dried herb, leaves and flowering tops*

*Constituents* : *Plant contains volatile essential oil, absinthin, tannin, resin, succinic acid malates and nitrates of potassium*

*Action* : *Oil is Narcotic poison. The herb is Febrifuge, Stomachic, Deobstruent, Diaphoretic, Anthelmintic, Antiseptic and slightly Narcotic.*

Uses : This is found in forests and river banks. It is aromatic and febrifuge. It is used to cure mental disorder. It gives lustre to skin. Leaf extract with ginger juice and sugar if consumed cures uterous disorders, amenorrhoea, stomach ache, dyspepsia etc. Heated leaves are used externally on inflamed parts. It is used in treating rheumatism.

The leaf powder if used externally, ulcers could be cured. Leaf juice with cow's urine if taken indigestion could be cured and it acts as appetizer. Leaf juice if taken internally, it expells the intestinal worms. During fever, this could be used on the head to reduce the temperature and prevent hysteria. This is used in calcination of gold. Leaves soaked in hot vinegar could be used in inflamed parts of the body. This also could be used externally for chronic head ache and flatulence in joints.

மாசிப்பச்சை காடுகளிலும், ஆற்றங்கரையோரங்களிலும் பயிராகும் ஒரு வகைப் பூண்டு. இதற்கு ஒருவித மணமுண்டு. இது சீமைஇனம், நாட்டுஇனம் என இருவகைப்படும். இருவகைக்கும் பண்பு ஒன்றே. ஆனால் இங்கு கூறுவது நாட்டு இனம்.

இது வெப்பத்தைத் தணிக்கும். மனநோய் குணமாக்கும். நல்ல தேஜஸ் தரும்.

"புளிப்பும் துவர்ப்பும் பொருந்தியிருந் தாலுந்
தளிர்ந்த காலைக் கனலைச்சாடும்— நெளித்த
வலிதனைவிட் டோட்டுமட மாதே! நீ கேளாய்
வலிமாசிப் பத்திரிதான் வாழ்த்து"

இதனிலைச்சாறு, இஞ்சிச்சாறு, சர்க்கரை இவைகளைக் கலந்து தக்க அளவில் சாப்பிட, சூதகவலி, சூதகத்தடை, வயிற்று வலி, குன்மம் நீங்கும். இலையை வதக்கி ஒற்றிடமிட வீக்கமும், வலியும் நீங்கும். மேலும் வாதநோய், வாத வலி நீங்கும். இலைப் பொடியை தூவப் புண்கள் ஆறும். இலைச்சாறு ஓர் உச்சிக்கரண்டி அளவில், கோரோசனைக் கலந்துக் கொடுக்க மாந்தம் நீங்கும். பசியும், முகத்தில் ஒளியும் உண்டாகும். இலைச் சாற்றை உள்ளுக்குக் கொடுக்க, பூச்சிகள் விழும். இதன் சாற்றை உச்சியில் தேய்க்க, சுரநோய்களில் முப்பிணி பிறவாமல் தடுக்கும். தங்கத்தைச் செந்தூரிக்க இஃது ஒரு சிறந்த பொருளாகும்.

இதனைச் சூடான காடியில் ஊற வைத்து அடிப்பட்ட சிதைவு, வீக்கங்களுக்கும் வைத்துக் கட்டலாம். தீராத தலைவலி, கீல்வாயு முதலியவைகளுக்கும் ஒற்றடமிடலாம்.

* * *

## மாதுளை
(தாடிமக்கனி)

## Punica granatum
**(N. O. Myrtaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Flowers, rind of the fruit, fresh fruit-juice, dried bark of the stem and root*

*Constituents* : *Bark and rind of the fruit contains tannin. Root bark contains punico-tannic acid*

*Action* : *Granatum gransins are Astringent, Anthelmintic and Taenifuge. Flowers bark of the tree and rind of the fruit are Astringent and Stomachic. Fruit juice is Cooling and Refrigerant.*

Uses : This is a small tree. The flowers are febrifuge and it cures piles. It increases the heamoglobin contents of the blood. If this fruit is consumed everyday it acts as aphrodisiac. This fruit checks vomiting due to fever. The diseases which prevents the formation of pregnancy could be cured. It stops hiccups, indigestion, heart burn and fever. To treat the above diseases, the fruits which are ripened naturally should be used. Powdered flower buds checks cough with gum arabic powder. If gum arabic powder and opium is added with this and consumed in a small quantity it checks dysentery, neuritis, bleeding piles etc. Flower juice with juice of Bermuda grass if given it stops nasal bleeding. Infusion of this flower with Bermuda grass added with Borax is used as mouth gargle to stop throat pain. Tender fruits are used as infusion to check dysentery and diarrhoea. Fruit juice of flower with sugar candy is made a sharbat and it is consumed to get relief from fever, fatigue and thirstyness. Powder of the rind of the fruit is used to treat tuberculosis. Root bark with cloves if boiled and consumed it expels tape worms. Moreover cough in children, eye disorders and fever and spleen disorder of adults also could be cured.

தாடிமக்கனி சிறு மரவகுப்பைச் சேர்ந்தது. இதில் மாதுளை, புளிப்பு மாதுளை, பூமாதுளை என்று மூன்று வகைகள்

உண்டு. இதன் பூ, பிஞ்சு, பழம், விதை, பட்டை வேர் முதலியன மருத்துவ குணமுடையன.

இதன் பூவினால், வெப்பம், இரத்த மூலம் இவை போகும். இது குருதியைப் பெருக்கும். வன்மையைத் தரும்.

''மலக்கழிச்சல் சீதத்தால் வந்த கழிச்சல்
சலக்கழிச்சல் சோரியாற் சாரும்— பலக்கழிச்சல்
மாளும் புளிப்பான மாதுளம் பிஞ்சையுண்ண
ஆளும்கண் மாதே! அறி''

இதன் பிஞ்சினால் அனைத்துக் கழிச்சல் வகைகள் யாவும் குணப்படும்.

மாதுளம் பழத்தைத் தினமும் புசித்துவரின், ஆண்மைப் பெருக்கு உண்டாகும். விந்தானது வலிமையாகி, வீரிய விருத்தியாகும். இப்பழத்தினால் முப்பிணி, சுரத்தில் காண்கின்ற வாந்தி, நீர்வேட்கை இவைகள் போகும். கருவுண்டாகாமல் செய்கின்ற சூலக நோயைப் போக்கும். அன்றியும் வாய்நீர் ஊறல், விக்கல், மந்தம், வெப்பத்தால் உண்டான காய்ச்சல், நெஞ்செரிவு, காதடைப்பு, மயக்கம் இவை போகும். மேலும் உடல் குளிர்ச்சியடையும். மேற்கூறிய பண்புகளைப் பெறத் தானாகப் பழுத்து வெடித்த மாதுளையின் முத்துக்களை எடுத்துத் துணியிலிட்டு பிசைந்து சாறெடுத்து வேண்டியளவு கற்கண்டு கூட்டி உடனே குடித்தல் வேண்டும்.

பூ மொக்கை உலர்த்திப் பொடித்துக் கொடுக்க இருமல் நிற்கும். பூவை உலர்த்திச் சூரணித்து அதில், வேலம்பிசின் தூள், அபின் சேர்த்து, வேளைக்கு சிறிதளவுக் கொடுத்துவர, சீதக்கழிச்சல் குருதி கழிச்சல், குருதி நீர், இரத்த மூலம் இவை நீங்கும். பூவின் சாறும் அறுகம்புல்லின் சாறும் எடுத்து, சேர்த்துக் கொடுக்க மூக்கிலிருந்து குருதி வடிவது நீங்கும். மேற்கூறிய பூவையும் அருகம் புல்லையும் குடிநீரிட்டுப் பொரித்த வெங்காரம் சிறிது கூட்டி வாய் கொப்புளித்துவரத் தொண்டை நோய் நீங்கும்.

பிஞ்சைக் குடிநீரிட்டு சீதபேதிக்கும், அதிசாரத்திற்கும் கொடுக்கலாம்.

இதன் பழச்சாற்றில் கற்கண்டு சேர்த்து மணப்பாகு செய்து அருந்த, சுரம், அழலை, தாகம் இவை நீங்கும்.

பழத்தோலை உலர்த்திப் பொடித்து, இளைப்பு நோயினர்க்குக் கொடுக்கக் குணமாகும்.

வேர்ப்பட்டையுடன் சிறிது இலவங்கம் சேர்த்து நீர் விட்டுக் காய்ச்சிக் கொடுக்க தட்டைப்புழு விழும். மேலும் குழந்தைகளுக்கு

உண்டாகும் இருமல் நோய், கண்நோய் பெரியவர்களுக்குண்டாகும் நாட்பட்ட சுரம், முறைசுரம், மண்ணீரல், குருதியழல் முதலான நோய்கள் குணப்படும்.

* * *

## மாமரம்

## Mangifera indica

### (N. O. Anacardiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit, kernel, leaves, bark, gum and flowers*

*Constituents* : *Ripe fruit contains gallic and citric acid. Bark contains tannin. The kernel inside the stone contains gallic acid, tannin and starch*

*Action* : *Fruit is Laxative, Diuretic, Diaphoretic, Astringent and Refrigerant. Ripe fruit is Laxative and Diuretic. Unripe fruit is Acid, Astringent, Stomachic and Antiscorbutic. Bark is Astringent and Tonic. Gum is Astringent. Kernel is Anthelmintic and Astringent.*

Uses : This is found in tropical places. The fruit is very sweet and it is known as 'King of sweets'. Leaves, flower, fruits, tender fruits, kernel of the seed, stem bark, root bark and gum are used in medicinal preparations. Tender fruits eliminates tastelessness and indigestion. Powedered tender leaves reduces the frequency of urination. The infusion of leaves stops throat irritation. Bark of the tree with asparagus root and root tubers of ground palm are powdered and made into an infusion. Oil is added with this infusion and boiled. If this is used on the head during bath it reduces venereal diseases and acts as antidote for poisonous bites. The gum of the tree is used to treat menorrhagia, bloody stools and gonorrhoea. If mango fruit is consumed in large quantity it produces heat burns and abscesses. The fruit generally acts as tonic. Kernel of the seed stops dysentery, bloody stools, stomach ache, internal heat, menorrhagia,

intestinal worms etc. Root bark also stops the above said diseases. The smoke of the leaves if inhaled it cleans the throat and stops hiccups. The ash of the leaves with butter is used externally on burns and boils. The smoke of the powdered flower repels the mosquitoes. Infusion of the flower is used for chronic dysentery and diarrhoea. Kernel of the fruit with opium is used for chronic dysentery. Kernel with poppy seeds, dried ginger, celery are made into a paste with lemon juice. A paste of this mixed with ghee is given for acute diarrhoea. Juice of the leaves of bark is used externally on the crack of the heals. Gum is also equally effective. The bark gum with lemon juice is used for vitiligo and ring worm infection.

மா மிகுதியாய் வெப்ப நாடுகளில் பயிராகும் பெரு மர வகைகளுள் ஒன்று. இதில் பழங்களைக் கொண்டு பலவகையுண்டு, இதன் இலை, பூ, பிஞ்சு, காய், பழம், வித்து, மரப்பட்டை, வேர்ப்பட்டை, பிசின் முதலியன மருத்துவ குணமுடையன.

''தாது நட்டம் வாதந் தனிக்கிரந்தி யாம்பசிபோங்
காதுமுட்டப் பக்குவிடுங் காயமதில்— ஓதுகின்ற
பாங்காறாப் புண்வளரும் பற்கூசுங் சொற்குளறும்
மாங்காயுண் பாரை மறு''

மாம்பழத்தை உண்பதால் நமைச்சலும், மார்பு எரிச்சலும், கரப்பான், புண் பெருகும். மாம்பழத்தால் ஆண்மை பெருகும். வெண்ணீர் ஊறும். மாங்காய், மாம்பழம் இவைகளை முறைப்படி புசித்தால் மனத்தளர்ச்சி, வன்மைக் குறைவு முதலியன ஒழியும்.

மாங்கொட்டைக்குள்ளிருக்கும் பருப்பினால், சீதக் கழிச்சல், குருதிக் கழிச்சல், சூடு, பெரும்பாடு, வயிற்றுப்புழு ஆகியவை போகும். இதன் வேர்ப்பட்டையாலும் சீதக்கழிச்சல், வயிற்றுக் கடுப்பு, வாந்தி முதலியவைகள் போகும்.

மாம்பிசினால், பெரும்பாடு நோயும், குருதிக் கழிச்சலும், வெள்ளையும் நீங்கும்.

மாம்பட்டை, தண்ணீர் விட்டான் கிழங்கு, நிலப்பனைக் கிழங்கு, இவற்றையிடித்துப் போட்டுக் குடிநீரிட்டுக் காய்ச்சி, அதற்கு நேர் எண்ணெய் கூட்டி எரித்து, பதத்தில் இறக்கி முழுகி வர, மேகம், வெள்ளை, காணாக்கடி ஆகியவைகள் போகும்.

இலைக் கொழுந்தை உலர்த்திப் பொடித்து மூவிரலளவு, நீரிழிவிற்குக் கொடுக்கலாம்.

இலையைத் தேன் விட்டு வதக்கிக் குடிநீரிட்டுத் தொண்டைக் கட்டு, குரற்கம்மல் முதலியவற்றிற்கும் கொடுக்கப் போகும்.

இலையைத் தணலிலிட,அதிலிருந்து வரும் புகை, தொண்டை கம்மலை நீக்குவதோடு, விக்கலையும் நிறுத்தும். இலையைச் சுட்டுச் சாம்பலாக்கி வெண்ணெயில் குழைத்து, தீப்புண், வேக்காடு முதலியவைகளுக்கும் போடலாம்.

பூவை உலர்த்திப் பொடியை புகையிட கொசுக்கள் போகும். பூவை உலர்த்திக் குடிநீரிட்டு, கழிச்சல், நாட்பட்ட சீதக்கழிச்சல் முதலியவைகளுக்குக் கொடுத்து வரப்போகும்.

நாட்பட்ட சீதக்கழிச்சலுக்கு மாம்பருப்புடன் அபின் கூட்டிக் கொடுத்தால், மிகுந்த நன்மை செய்யும். மாங்கொட்டைப் பருப்பு, கசகசா, சுக்கு, ஓமம் இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றாலரைத்து அதில் ஒரு சிட்டிகையை நெய்யில் குழப்பிக் கொடுக்க, பெருங் கழிச்சல் தீரும்.

மாவிலை அல்லது பட்டையிலிருந்து வரும் பாலை கால் வெடிப்புக்குத் தடவலாம். மாம்பிசினையும் தடவலாம். பட்டைப் பிசினை, எலுமிச்சம் பழச்சாற்றோடு கலந்து, தேமல், படை முதலியவைகளுக்கும் போடலாம்.

* * *

## மாவலிக் கிழங்கு

**(மாகாளிக் கிழங்கு, பெருநன்னாரி)**

## Decalepsis hamitonii

**(N. O. Asclepiadaceae)**

*Habit* : *Twiner*

*Parts used* : *Root*

*Constituents* : *Inosetol, Amorphous acid, ketonic sterol and an aldehyde.*

*Action* : *Refrigerant, Stomachic, Diuretic, Diaphoretic, Appetizer, Antipyretic and Restorative.*

Uses : The tuber of this exhibits medicinal properties. The medicinal property of this is equal to the sarasaparilla. This purifies the blood and acts as an appetizer. It also acts as febrifuge. Gonorrhoea could be cured with this.

மாவலிக்கிழங்கு, நன்னாரி வகுப்பைச் சேர்ந்த காட்டினம். இதன் கிழங்கு மருத்துவத் தன்மையுடையது.

பொதுவாக நன்னாரியின் குணமே இதற்கும் பொருந்தும் என்றாலும் இது இரத்தத்தைச் சுத்தியாக்கும். பசியைத் தூண்டும். திரேகச் சூட்டைத் தணித்து, வாததோஷத்தை நீக்கும். திரேக வனப்புத் தரும். வெள்ளை நோயை குணப்படுத்தும்.

* * *

## மாவிலங்கு

### (வரணி)

## Crataeva religiosa

### (N. O. Capparidaceae)

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Tree* |
| *Parts used* | : | *Bark, leaves and root bark* |
| *Constituents* | : | *Bark contains saponin* |
| *Action* | : | *Leaves are Stomachic and Tonic. Root and the bark are Laxative and Lithontriptic. Root is also Alterative. Root and the bark increase Appetite and Biliary secretion. Fresh leaves are externally Rubefacient, Internally Febrifuge and Tonic.* |

Uses : Leaves, bark and roots of this tree are of medicinal use. Fever, poisonous bites and chronic rheumatism are treated with this. Bark of this tree is mainly used to treat bilious disorders, rheumatism and phlegmatic disorders. Infusion of the leaves are used to treat fever. Paste of the leaves are used externally on oedema. If taken internally it cures piles. This is a tonic for heart and other vital organse Coconut milk mixed with its leaf juice if taken internally it gives strength to knee and other joints. Fresh leaves made into a paste with vinegar and it is used externally on boils. Powdered leaves if smoked it relieves the disorders of nose. Leaf paste if applied on the soul of the feet it reduces burning sensation. Bark powder mixed with oil if given to children, it

relieves stomach ache and indigestion. Infusion of the bark if taken regularly it relieves calculous affections. Bark with hog weed is made into an infusion and if this infusion is taken regularly cures chronic ulcers and inflammation of the testicles. The powder of the bark is also used to cure nasal disorders.

மாவிலங்கின் இதன் இலை மூன்று பிரிவுகளை உடையது. இதன் இலை, பட்டை, வேர் மருத்துவ குணமுடையது.

இதனால் சுரமும், காணாக்கடி, பாம்புக்கடி, நஞ்சுகளும், தீராத வளி நோய்களும் போகும்.

''மாவிலிங்கப் பட்டையினால் வாதமொடு சந்நிகளும்
பாவுகின்ற கல்லடைப்பும் மாறுமே''

இதன் பட்டையினால் முப்பிணி, கல்லடைப்பு நோய்கள் போகும்.

இலையைக் குடிநீரிட்டுக் குடிக்க,சுரம், செரியாமை, போகும். இலையை அரைத்துப் பற்றிட, வீக்கங் கரையும். ரத்த மூலம் குண மாகும், இருதயத்திற்கு வலிமை தரும். கர்ப்பப்பை வலுவடையும். இலைச்சாறும் தேங்காய்ப்பாலும் சேர்த்து, இதைக் கொடுத்துவர கைகால் முடக்கம் நீங்கும். பச்சை இலையை, காடி, பழரசம் அல்லது வெந்நீரிலரைத்துப் பற்றிட, கொப்புளங்களெழும்பும். இலையை உலர்த்திப் பொடி செய்து புகைத்து, அப்புகையை முகர மூக்கிலுண்டாகும் நோய்கள் நீங்கும். இலையை அரைத்து உள்ளங் காலில் பற்றிட, வீக்கம், எரிச்சல் நீங்கும்.

பட்டையை, எண்ணெய் கலந்துக் கொடுக்க, குழந்தைகளுக் குண்டாகும் வலியும், மாந்தமும் குணமாகும். பட்டைக் குடிநீர் கல்லடைப்பு நோயை போக்கும். இதன் பட்டையை வட்டமாய் வெட்டி, அரையாப்புக் கட்டிமீது வைத்து, அதன்மீது ஓர் ஈயத் தட்டை வைத்துக் கட்ட, கட்டிகள் கரையும். பட்டை, மூக்கிரட்டை எடுத்து நீர்விட்டு முறைப்படிக் குடிநீரிட்டு, இதை உட்கொண்டு வர புரையோடிய நாட்பட்ட புண்கள், விரை வீக்கங்கள் நீங்கும். இதன் சூரணம் நாசி நோய்களை நீக்கும்.

* * *

## மான் செவிக்கள்ளி

**See : Coelasia klernii**

**பார்க்க : கள்ளி வகைகள்**

* * *

# மிளகரணை

(காட்டு மிளகு)

## Toddalia aculeata

**(N. O. Rutaceae)**

*Habit* : *Stragglers*

*Parts used* : *Root, bark, leaves and fruit*

*Constituents* : *Root-bark contains a resin, essential oil and berberine*

*Action* : *Fresh root-bark and the whole plant are Pungent and Aromatic. Root-bark is an Aromatic, Tonic, Stimulant, Antiperiodic, Bitter, Stomachic and Antiperiodic. Root is Pungent and sub Aromatic, Stomachic and Tonic.*

Uses *:* This is a armed straggler. Leaves, bark and roots exhibits medicinal properties. Tris is used to treat intestinal gas problems, cough and wheezing. If the leaves are eaten raw it relieves stomach ache. Phlegm and indigestion also could be treated with this. This is an ideal medicine to treat asthma. The bark infusion is used to treat periodic fever. 1t induces sweating. Infusion of root bark and hellebore is used to treat wheezing and cough. The root oil is used externally to all joints to get relief from pain.

காட்டுமிளகு ஒரு வகைக் கொடி. இதன் இலை, பட்டை, வேர் முதலானவை மருத்துவத்தன்மையுடையன.

இது செரியாத வாயு, அகட்டுவாயு, அழல்சூலை, இருமல், இரைப்பு, வயிற்றுப்பிசம் ஆகியவைகளை நீக்கும். இலையைப் பச்சையாக மென்று தின்ன, வயிற்று நோய் போகும். வாயு நீக்கும். கபம், அஜீரணம் போகும். ஆஸ்துமாவுக்குச் சிறந்தது. இதன் பட்டையைக் குடிநீரிட்டுக் கொடுக்க, முறைசுரம் நீங்கும். வியர்வை உண்டாகும். வேர்ப்பட்டையையும், கடுகு ரோகணியையும் குடிநீரிட்டுக் கொடுக்க இரைப்பு நோய் போகும். இதன் வேரிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயைக் காய்ச்சி வாத வீக்கங்களுக்குப் பூசக் குணமாகும். இதனால் கல்நார் நீராகும்.

* * *

# மிளகாய்

## Capsicum annuum

### (N. O. Solanaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Fruit*

*Constituents* : *Capsium and solanine.*

*Action* : *A powerful local irritant, heart and general Stimulant, Stomachic and Tonic.*

Uses : This is a small plant. If the fruit is taken regularly it produce bloody stools, piles and fistula. Therefore it is not advisable to consume it regularly. If it is taken in recommended quantity it cures indigestion, tastelessness, stomach ache, colic etc. Infusion of this gives relief in chest pain, stomach ache, indigestion, diarrhoea and vomiting. Paste of this with a cloth is used to inflammation If it is applied externally on throat it cures the throat ulcers and boils. It is mixed with garlic and made into paste and applied externally to cure the back pain. powdered chilly sugar and gum arabic is mixed and made into a small balls and chewed to get relief for the irritation of the throat. Asafoetida and camphor is mixed with this and made into a paste with lemon juice and made into tablets. If this tablets are consumed regularly it cures all chronic diseases. Cinnamoumm bark and sugar are added with this plant and made into an infusion. This infusion checks alcoholism. Oleo resins are prepared from this. This exported to foreign countries. Many medicinal active fraction are prepared from this.

இது ஒரு சிறு பூண்டின் காயாகும். இதன் பழத்தை மிகுதியாகக் கொள்ளின் குருதிப் போக்கும், மூல முளையும், மூலக் கடுப்பும் உண்டாகும். அளவோடு கொள்ளின் மாந்தம், சுவையின்மை, வயிற்றுநோய், வயிற்றை இழுத்துப் பிடித்தல், வயிற்றுப் பிசம் நீங்கும். மேலும் ஆண்மை பெருகுமென்பர்.

மிளகாயைக் குடிநீர் செய்து 2 அல்லது 3 வேளைக் கொடுக்க மார்பு நோய், செரியாமை, கழிச்சல், சுரத்தில் காண்கிற வாந்தி ஆகியவைகள் நீங்கும். உஷ்ணம் தரும். வாத கோபம் நீங்கும்.

இதையரைத்துத் துணியில் தடவி தோலின் மேல் போட்டு வைக்க, கொப்புளித்து வீக்கம் கரையும். தொண்டைக்கு வெளியிற் பூச, தொண்டைக்குள் எழும்பும் கட்டிகள் உடையும். முதுகு, பிடரி முதலிய இடங்களிலுண்டாகும் நாட்பட்டவலி, வீக்கங்களுக்கு இதைப் பூண்டு, மிளகோடு சேர்த்தரைத்து எண்ணெயில் குழைத்துப் பூச, நோய் நீங்கும். இதன் பொடியுடன், சர்க்கரை, வேலம்பிசின் தூள் சேர்த்து உருண்டைச் செய்து வாயிலிட்டுச் சுவைக்க, தொண்டைக் கம்மல் நீங்கும். இத்துடன் பெருங்காயம், கர்ப்பூரம் சேர்த்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து, சிறு சுண்டை அளவு மாத்திரை செய்து ஊழி நோய்க்குக் கொடுக்கலாம். இதன் செடியுடன் இலவங்கப்பட்டை, சர்க்கரை சேர்த்து குடிநீரிட்டுக் கொடுக்க, குடிவெறியின் பற்று நீங்கும். மிளகாயிலிருந்து ஒலியோ ரெசின்கள் தயாரிக்கப்பட்டு சமீப காலமாக வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. இதிலிருந்து பலவிதமான மருந்து மூலக்கூறுகளை தயாரிக்கிறார்கள்.

* * *

## மிளகாய்

**(சீமை மிளகாய், ஊசி மிளகாய்)**

## Capsicum fastigiatum

**(N. O. Solanaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Fruit*

*Action* : *Seeds are Pungent and Stimulant.*

Uses : This cures indigestion and diarrhoea due to indigestion. Rheumatoid arthritis and uterous disorders also could be treated with this. Fish oil mixed with this powder and added with saithoon oil is made into a mixture is used externally to cure flatulency in joints. This increases the febrile temperature. So this should not be used continously. Piles and urinary tract disorders could be treated with this.

சீமை மிளகாய், ஊசி மிளகாய் எனப்படும் இதனால் செரியாமை, செரியாக் கழிச்சல், மார்பு நோய், முதலியவை நீங்கும். கீல்வாதம், சூதகவலி முதலியவைகளும் குணமாகும்.

இதன் பொடி, மீன் கொழுப்பு, சைத்தூன் எண்ணெய், சேர்த்துக் கலக்கிக் குளிரவைத்து மேலுக்குப் பூச, கீல்வாயு போன்ற நோய்கள் விலகும்.

இது உஷ்ண வீரியமுள்ளது. இதனால் மூத்திரரோகம், மூலம், சூதக வாயு வரும்.

* * *

# மிளகு

## Piper nigrum

### (N. O. Piperaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Dried unripe fruit*

*Constituents* : *A volatile alkaloid piperine and piperidine*

*Action* : *Black pepper is Acrid, Pungent, Hot, Carminative and Antiperiodic. Externally it is Rubefacient, Stimulant and Resolvent. On the mucous membrane of the urethra it acts like cubebs. Piperine is mild Antipyretic and Antiperiodic.*

Uses : This twinner is cultivated in hilly areas. This twines on trees. The fruit of this twinner is called pepper. The fresh fruits are used to treat septic piles and arthritis. Ripened berry is used to treat dropsy, fever, bronchitis diarrhoea, dyspepsia, intestinal gas formation, tastelessness, piles, diabetes, cough, paraphlegic nodular rheumatism, otitis, etc. Dried berries are used to treat dyspepsia, fever and other disorders. The leaves of this twinner with the leaves of Clerodendron phlomoides and Vitex negundo are made into a decoction. This decoction curhs inflammation of the joints if applied externally.The powder of the plant with cinkona bark if taken internally it cures periodic fever. Powder of the fruit along with water is (pepper)boiled for half anhour and filtered. If it is consumed twice or thrice a day it relieves sore throat and intestinal disorders. Oil of this fruit is usedto cure chronic arthritis and heavyness of the head. Pepper

with asafoetida and opium is made into a paste and then to tablets.If this tablets are consumed every one hour, cholera and vomiting could be cured. Powder of this along with cake seeds, poppy seeds, celery and honey are made into a paste. If this is consumed every day piles could be cured. This is an important ingredient in tooth powder. Pepper powder with powdered root of mudar and palm sugar are made into a paste and then tablets. If this is taken twice every day, it cures venereal diseases. Pepper powder, garlic and salt are mixed and made a paste is applied on the wound mark it will help for the growth of the hair on that particular area.

மிளகு மலைநாடுகளில் பயிராகும் ஒருவகைக் கொடி. இது மரங்களைச் சுற்றி ஏறி அடர்த்தியாய் வளரும். இதன் பழத்துக்கு மிளகு என்பது பெயர். இதன் பழத்தின் பழுத்த தோல் உதிர்ந்தால் அதை வெள்ளை மிளகு எனக் கூறுவர், ஆயினும், வெள்ளை மிளகு இக்கொடியைச் சேர்ந்ததன்று.

பச்சை மிளகு சீழ்மூலத்தையும், வாதநோயையும் நீக்கும். மிளகுப் பழத்தினால் குளிர்சுரம், பாண்டு, கோழை, கழிச்சல், குன்மம், வாயு, சுவையின்மை, வெறி, மூலம், சந்நியாசம், பிரமேகம், இருமல், பக்கவாதம், குஷ்டரோகம், சோணிதவாதம், காசநோய், காதுவலி, இரத்த குன்மம், செரியாமை, காமாலை இவை போகும்.

காய்ந்த மிளகு குளிர்சுரம், குன்மம், வாயு நீக்கும். அஜீரணம், பேதி, கிராணி, வயிற்றுப்பிசம் குணப்படும்.

இதன் இலை, தழுதாழையிலை, நொச்சியிலை இவைகளைச் சேர்த்துக் கொதிக்க வைத்த நீரை, கீல்வீக்கம், வலி, அடிப்பட்ட வீக்கம் முதலியவைகளின் மீது விட்டு ஒற்றடமிட அவை நீங்கும். இதன் தூளை கொய்னாவுடன் சேர்த்து வழங்க முறைசுரம் நீங்கும். மிளகுத்தூள், நீர் விட்டு அரைமணி நேரம் காய்ச்சி வடிகட்டி, அதில் தினம் 2, 3 தரம் கொடுத்து வர, தொண்டைக் கம்மல், தொண்டைப்புண் இவைகள் நீங்கும். வயிற்றைச் சேர்ந்த நோய்களும் நீங்கும்.

மிளகுத் தைலத்தினால், நாட்பட்ட வளிநோய்கள், தலை கனம் செவிடு போகும். தெளிவு உண்டாகும். மேலும் இத்தைலத்தைக் கொண்டு தலைமுழுகி வர, சோபை, பாண்டு, இருமல், நீர்க்கோவை, தலைவலி, பல வகைத்தினவு, சுரம் முதலிய நோய்கள் போகும்.

மிளகு, பெருங்காயம், அபினி எடுத்து நன்றாக அரைத்து 12 மாத்திரைகள் செய்து, அதில் ஒரு மணிக்கொரு முறை ஒரு மாத்திரை கொடுத்துவர, வாந்திபேதி நீங்கும்

மிளகுத்தூள், கேக்கு விதைத்தூள், கசகசா, தேன், ஓமம், இவற்றைச் சேர்த்தரைத்தும் ஒரு கழற்சி அளவு தினம் இருவேளை, மூல அடித்தள்ளலுக்கும் கொடுத்து வரலாம். பற்பொடி செய்வதற்குரிய பொருள்களில் இது ஒரு முக்கிய சரக்காகக் கருதப் படுகின்றது.

மிளகுத்தூள், எருக்கம் வேர், பனைவெல்லம் தகுந்த அளவு சேர்த்தரைத்து, தினையளவு மாத்திரை செய்து, ஒரு மா திரை தினம் இரு வேளைச் சாப்பிட்டு வர, கொருக்கு நோய் குணமாகும்.

மிளகுத்தூள், வெங்காயம், உப்பு இவைகளைச் சேர்த் தரைத்துத் தலையில் காணும் புழுவெட்டுக்குப் பூச, மயிர் முளைக்கும்.

* * *

## மிளகு
### (வால் மிளகு)

## Cubeba officinalis

### (N. O. Piperaceae)

*Habit* : *Climbing woody bush*

*Parts used* : *Dried immature full-grown fruits called the cubebs*

*Constituents* : *Fruits contains cubebic acid*

*Action* : *Fruit is Stimulant, Carminative, Diuretic and Expectorant.*

Uses : Unripened fruit of this plant is used for the medicinal purpose. Petiole of the fruit is heated together with the main fruit which is with a small tail. That is why it is called 'tailpepper'. Dyspepsia, thirstyness and gonorrhoea could be treated with this and it acts as an appetizer. Powdered fruits along with cinnamomum bark is made into an infusion and if the infusion is taken thrice daily, cough and phlegm could be cured. Alum along with this powder if taken

daily, chronic gonorrhoea and gleet could be treated. This powder is mixed with milk and if consumed it clears the throat.This fruit is made into a paste with rose water and it is used as an external application for head ache. Pepper along with liquorice root, galanal (lesser), long pepper, myrabalan are made powder and boiled in water. It is taken 4 times a day to get relief from cough. Along with pepper oil, white gruel powder are added and made in to apaste and then tablets. If this is taken two tablets thrice daily it cures anuresis. burning sensation, gonorrhoea etc. It is used to treat asthma.

இது ஒரு வகை அடர்த்தியான மரமேறும் கொடி. நன்றாய் முதிராத காய்கள் உலரவைத்து எடுத்துக் கொள்ளப் படுகிறது. இக்காய்களின் காம்புகள் சேர்ந்து ஒட்டி வால் போலிருப்பதால், இது வால்மிளகு எனப்பெயர் பெற்றது. தோல் சுருங்கிக் கறுத்து, உள்ளே வெளுத்து எண்ணெய்ப்பசை உள்ள தாயும், காரமும் விறுவிறுப்பும் பொருந்தி நறுமணம் பெற்றதாயு மிருக்கும்.

இதனால், தீ, குன்மம், நீர்வேட்கை, வெள்ளை முதலியன வும் போகும். பசி உண்டாகும்.

வாள்மிளகுத் தூள், கருவாப்பட்டைக் குடிநீர், இரண்டை யும் கலந்து தினம் 3 வேளை கொடுத்துவர, இருமல், சளி நீங்கும்.

வால்மிளகுத் தூளை, படிகாரத்துடன் சேர்த்துத் தினம் மூன்று வேளைக் கொடுத்துவர, நாட்பட்ட வெட்டை, வெள்ளை முதலியன தீரும்.

வால்மிளகுப் பொடியைப் பாலில் கலந்துக் குடிக்க, தொண்டைக் கம்மல் நீங்கிக் குரல் தெளியும். வால் மிளகைப் பன்னீரில் அரைத்துத் தலைவலிக்குப் போடலாம்.

வால்மிளகு, அதிமதுரம், திப்பிலி, சிற்றரத்தை, கடுக்காய் இவைகளின் தூள் கலந்து, நீர்விட்டுக் காய்ச்சி, தினம் நாலு வேளைக் கொடுத்துவர, இருமல் நீங்கும்.

வால்மிளகு எண்ணெய், வெள்ளை குங்கிலியம், பறங்கிச் சக்கைத் தூள், கூட்டி இவற்றை நீர்முள்ளிச் சாறு விட்டு அரைத்துச் சுண்டைக்காய் அளவு உருட்டி, வேளைக்கு இரண்டு, மூன்று மாத்திரை காலை, மாலை கொடுக்க, நீர்க்கடுப்பு, நீரடைப்பு, வெள்ளை முதலிய நோய்கள் போகும். திரிதோஷத்தை நீக்கி,

ஆஸ்துமாவைத் தடுக்கும். குண்டிக்காய் வலி தீரும். கபம், வாயு, வாய் நாற்றத்தை நீக்கும். வாயைத் தெளிவுப்படுத்தும்.

* * *

## மிளகு

### (வெள்ளை மிளகு)

## Pimenta officinalis

### (N. O. Myrtaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Berries*

*Constituents* : *It contains eugenol*

*Action* : *Stimulant, Carminative, Anodyne, Diuretic, Sedative and Aromatic.*

Uses : This is found in the forest. This is a tree with two seeds in a fruit. Fruit is red in colour and the seeds are white in colour. This cures chronic diarrhoea and venereal diseases. This acts as an appetizer. This cures rheumatism. This increases body heat and cures arthritis. This checks asthma and dysentery. This also exhibits the same medicinal properties as pepper.

வெள்ளை மிளகு, இது காடுகளில் வளரும் ஒரு வகை மரத்தினின்று கிடைக்கும் பழத்தின் கொட்டையேயாகும். ஒவ்வொரு பழத்திலும் இரண்டு கொட்டைகள் உண்டு. பழம் சிவந்த நிறமாயும், விதைகள் வெண்மை நிறமாயும் இருக்கும். இதனால் நாட்பட்டக் கழிச்சல், சுரம், மேகம் ஆகியவை போகும். பசி உண்டாகும். இது கபவாதத்தையும், சிலேத்தும வாதத்தையும் நீக்கும். உஷ்ண வீரியமுள்ள வாதவலிக்கு குணம் தரும். ஆஸ்துமாவை தடுக்கும். சீதபேதிக்கு உதவும்.

மேலும் இதனை மிளகைப் போலவே வழங்கலாம்.

* * *

## மின்னார் கொடி

## Calycopteris floribunda

**(N. O. Combretaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Leaves, root and fruit*

*Constituents* : *Tannin*

*Action* : *Stimulant, Anthelmintic, Astringent and Laxative. Leaves are Bitter and Astringent. Fruit is Carminative.*

Uses : Root is an antidote for snake venom. This cures jaundice. Leaves check dysentery. Paste of the leaves is applied to heal ulcers and bruises.

மின்னார் கொடியின் வேர் பாம்புக் கடியையும், காமாலையையும் குணப்படுத்தும். இலையானது சீதபேதியை குணமாக்கும். மேலும் இது ரணம், புண் ஆற உதவும்.

* * *

## முக்குளிக் கீரை

**(கோழி முனையான்)**

## Portulaca pilosa

**(N. O. Portulacaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and the whole plant*

*Canstituents* : *Fresh leaves contain oxalate of potash*

*Action* : *Plant is Expectorant, Diuretic, Carminative, Diaphoretic, Anti bilious, and Aphrodisiac.*

Uses : Leaves of this herb acts as abhrodisiac and purgative. This reduces the body temperature.

முக்குளிக்கீரை ஒரு வகை செடி. இக்கீரையை சமைத்துண்பவருக்கு புணர்ச்சியிலிச்சை, மிகுகழிசசல் ஆகியவைகளை

உண்டாக்கும். வெப்பத்தை நீக்கும். கபதோஷத்தையும் நீக்கும். திரேகத்திற்கு குளுமை தரும்.

* * *

## முசுக்கட்டை
### (கம்பளி முசுக்கட்டை)

## Morus nigra
### (N. O. Moraceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Bark, fruit and leaves*

*Constituents* : *Bark contains pectin, citrates, and malates fruits contain acid, carotene, vitamin B, folic acid, folinic acid, vitamin D, calcium and other minerals.*

*Action* : *Leaves are Expectorant, Refrigerant, Hydrogogue, and Tonic. Fruit is Nutritive.*

Uses : Whole plant possesses medicinal properties. It is a tree found wild and cultivated all over India. Decoction made out of the charred leaves of this plant and mustard is a good remedy for infantile diarrhoea. This along with cardomum and cloves is used to check dysentery. Leaves are used as an external application for wounds and ulcers which helps as healing agent. Juice contains malic and citric acids, glucose, pectin and gum. Fruits and leaves in decoction are administered as deobstruent and emmenagogue. Root is used as cathartic. The sole use of mulberries in modern medicine is for the preparation of a syrup employedto flavour or colour any other medicine. A parasitic fungus growing on the old stems of this tree is used in the preparation of medicines. Fruit is used to cure stomatitis and sore throat.

கம்பளிச்செடி குளிர்ச்சியுள்ள நாடுகளில் மிகுதியாகவும் மற்ற இடங்களில் சிலவும் வளருகின்றது. பட்டுப்புழு இதன் இலையைத் தின்று வளருகின்றது.

இது சுரத்தைத் தணிக்கும். நீர் வேட்கையைப் போக்கும். தொண்டை வறட்சியை நீக்கும். இருமலைத் தடுக்கும். பெருங் கழிச்சலையுண்டாக்கும். இதன் பழத்தை மணப்பாகு செய்து சுரரோகிகளுக்குப் புளிப்பானமாகக் கொடுக்கலாம். மருந்துகளுக்கு இதன் பழச்சாற்றைச் சாயமேற்ற பயன்படுத்தலாம். இம்மரத்தின் இலையையும், வேப்பிலையையும், ஒன்றிரண்டு சிறு வெண்காரத் தையும் சேர்த்து அரைத்துப் படுக்கைப் புண்களுக்குப் போட அவை உலரும். இதைத் தீம்நீ பானமாகச் செய்து, இருமல் முதலிய தொண்டை நோய்களைப் போக்கப் பயன்படுத்தலாம்.

* * *

## முசுமுசுக்கை
### (மாமூலி)

## Mukia scabrella

### (N. O. Cucurbitsceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Leaves and root*

*Action* : *Expectorant and Astringent.*

Uses : Juice of the leaves mixed along with cows urine if consumed, cures cough, wheezing, bronchitis, catarrt of the nose etc. This also helps to expectorate phlegm, chesh pain, dyspepsia, difficulty in breathing, intestinal gas formation and biliousness.

Boiled rice is soaked in water and then ground along with this leaves and salt. This mixture is used to make food like "Dosa". If this is taken along with ghee gives relief from bronchitis and cough. Powdered root infusion checks vomiting and chest pain. Oil extracted from the plant prevents greying of hair.

முசுமுசுக்கை எங்கும் பயிராகும் ஒரு வகை கொடி. இதன் இலை இரசத்தில், சிறிது கோரோசனை சேர்த்துக் கொடுக்க இருமல், கோழை, இரைப்பு, நெஞ்சிற் புகைக்கம்மல், மூக்கில் நீர்ப் பாய்தல் நீங்கும். மனோவலிமைத் தரும். நாற்றம் வீசும். கோழை,

மார்புவலி, குன்மம் நீக்கும். சுவாச தோஷம், வாய்வு, பித்தா திக்கம் முதலியவை போகும்.

ஊறவைத்த புழுங்கலரிசியுடன், இவ்விலையையும் சேர்த்து அரைத்து, சிறிது உப்புக் கூட்டி அடைச்சுட்டுக் கொடுத்து வர, கோழைக்கட்டு, இருமல், ஈளை நீங்கும்.

வேரை உலர்த்திப் பொடியாக்கி அல்லது குடிநீரிட்டுக் கொடுக்க, வாந்தி, மார்பு நோய் முதலியன நீங்கும்.

இதிலிருந்து வடிக்கப்படும் தைலம் இளம்நரை, தலை வழுக்கையைப் போக்கும். இது வளரும் குழந்தைக்குச் சிறந்த மூலிகையாகும்.

* * *

## முடக்கற்றான்

## Cardiospermum halicacabum

### (N. O. Sapindaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Roots, leaves, seeds and the herb*

*Constituents* : *Seeds or fruits yield an essential oil and saponin*

*Action* : *Root and the leaves are Diuretic, Laxative, Stomachic, Alterative and Emetic. It is externally Rubefacient.*

Uses : Leaves of this creeper cures joint pains, herpes, eczema and rheumatism. This is laxative. This clso cures arthritis, joint pains inflammation, rigidity of the muscles, rigidity of the joints, nervous debility and skin diseases. Roasted leaves are squeezed and the juice if used as ear drops check otorrhoea. Roasted leaves are used to treat inflammation of the testicles also.

Infusion made out of its root and leaves gives relief in piles and chronic cough. Powdered leaves along with the powders of plumbago root and kariabolam if given for three days cures amenorrhoea. If roasted leaves are applied and

bandaged on the lower abdomen increases lochial discharges of the uterus. Boiled oil with leaves is used as an analgesic application. Leaf juice is used in the treatment of otorrhoea and otitis. Infusion made out of the plant is laxative.

முடக்கற்றானால் கீல், சினைப்பு, கிரந்தி, கரப்பான். காலடியைப் பற்றிய வலி ஆகியவை போகும். மலம் போகச் செய்யும், கொடூரமான வாதநோய், மூட்டுவலி, வீக்கம், வாதப்பிடிப்பு, கீல் பிடிப்பு குணப்படும். நரம்புத்தளர்ச்சி, சரும நோய் நீங்கும். காதில் சீழ்வடிதல் குணமாகும். அண்ட வாதம் ஒழியும்.

இலை, வேர் முதலியவைகளைக் குடிநீரிட்டு மூலம், நாட்பட்ட இருமல் முதலியவைகளுக்குக் கொடுக்கலாம். இலைப் பொடியுடன், சித்திரமூல வேர்ப்பட்டைப் பொடி, கரியபோளம் இவை சேர்த்து மூன்று நாள் கொடுக்க, சூதகக்கட்டு நீங்கும். இலைகளை வதக்கி அடிவயிற்றில் கட்டச் சூதகத்தை மிகுதிப்படுத்தி சூலக அழுக்குகளை வெளிப்படுத்தும். இலையை எண்ணெயிலிட்டுக் காய்ச்சி, அவ்வெண்ணெயை வலிகளுக்குப் பூசலாம். இலைச் சாற்றை காதில்விட காதுவலி, சீழ் வடிதல் நீங்கும். வேர்க்குடிநீரை மூல நோய்க்குக் கொடுக்கலாம். கொடியின் குடிநீருடன் ஆமணக் கெண்ணெய் கூட்டிக் கொடுக்க கழியும். இதை உணவாகக் கொள்ள ருசி தரும்.

* * *

## முட்டைக் கோசு

## Brassica oleraceae

### (N. O. Cruciferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *It contains carbokydrates, albuminoids and sulphur*

*Action* : *Expectorant and Nutritive.*

Uses : This is used as vegetable. This is used in making curries. This contains sulphur and many vitamins. Juice of this leaf vegetable cures intestinal ulcers.

முட்டைக் கோசு சமைப்பதற்குரிய கறிகாய் வகைகளுள் ஒன்றாகும். உணவிற்குச் சேர்க்கச் சிறப்பு தரும். இதன் சாற்றை தினமும் அருந்தி வந்தால் வயிற்றுப்புண் நீங்கும்.

* * *

## முட்டைக்கோசுப் பூ

### (காலி பிளவர்)

## Brassica botrytis

### (N. O. Cruciferae)

*Habit* : *Herb*

*Parts used* : *Flower*

*Constituents* : *It contains carbohydrates, albuminoids and sulphur*

*Action* : *Nutritive.*

Uses : This is used as vegetable. The flower of this herb is used for cooking.

காலிபிளவர் சமைத்துச் சாப்பிட உதவும்.

* * *

## முந்திரி

## Anacardium occidentale

### (N. O. Anacardiaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Nut false fruit and bark*

*Constituents* : *Two peculiar principle i. e. anacardic acid and a yellow oleaginous liquid cardel.*

*Action* : *Fruit is Diuretic and Stimulant. Kernel is Tonic and Aphrodisiac Bark is Astringent.*

Uses : This tree is founded in the tropical coasted areas. The nut which is found outside the flesy fruit possesses high nutritive value. Kernel of the nut is used in medicines.

This improves semensecretion. Kernel of the fruit if taken in large quantity increases bilious heat and indigestion. The false fruit is edible. This is refrigerant but increases eczema andherpes attacks.

By fermenting the juice of the fruit a kind of toddy is prepared. This alchocol if taken in recommended quantity acts as diuretic. Kernel of the nut reduces appetite. Oil is expressed from the shell of the nut is vesicant and rubefacient. This is used in treating skin diseases and cracks of the heel. This oil is also used as insectiside. This is used in the medicines of warts and ringworm infections.

A kind of oil is extracted from the kernel of the nut. This if taken internally acts as an antidote. This heals the intestinal ulcers. Infusion of the root bark controls diabetes.

முந்திரி ஒரு சிறு மரவகுப்பைச் சேர்ந்தது. வெப்ப நாடுகளில் ஏராளமாய் வளருகின்றது. இது கடற்கரையை அடுத்த மணற்பாங்கான நிலங்களில் பயிராகும்.

முந்திரிப் பருப்பும், வாதுமைப் பருப்பும், விந்துவைப் பெருக்குவதல்லாமல், ஐம்புலன்கட்கும் நன்மை பயக்கும். இதன் பருப்பைத் தின்றால் பித்தச் சூட்டையும், மந்தத்தையும் உண்டாக்கும்.

பழத்தைப் பலர் தின்பர். இதில் ஒரு வகைக் காறலும், இனிப்பும் கலந்த நீர் மிகுந்திருக்கும். தேக உஷ்ணம் தணிக்கும். ஆனால் கரப்பான், கிரந்தி வரும்.

இதன் ரசத்தை வடித்துச் சாராயம் காய்ச்சுவதுண்டு. இச்சாராயத்தைத் தக்க அளவாய் உட்கொள்ளின், சிறுநீரை பெருக்கும்.

இதன் கொட்டைப் பருப்பு மிகவும் சுவையானது. ஆனால் பசி மந்தப்படும். ஆகையால், பசித்தீயைத் தூண்டக் கூடிய இதரச் சரக்குகளுடன் இதைச் சேர்த்து உண்பது நலம். கொட்டையின் மேல் ஓட்டிலிருந்து எடுக்கும் எண்ணெய் மிகவும் காரமுடையது. இது மேலுக்குத் தடவ மட்டும் வழங்கப்படுகிறது. இந்த எண்ணெய் சரும நோய்களுக்கும் கால் ஆணிகளுக்கும், கால் வெடிப்புக்கும் தடவ உதவும்.

இத்தைலத்தின் வாடைபட்டால், கறையான் முதலிய பூச்சிகள் சாகும். இது தோலைச் சிவக்கச் செய்து எரிச்சலைத் தருவதுடன், கொப்புளத்தையும் உண்டாக்கும். பலவகை மருக்கள், பாலுண்ணி போன்ற குருக்கள், படைகள் முதலியன இந்த எண்ணெயால் நீங்கும்.

இதன் பருப்பினின்றும் ஒரு வகை எண்ணெய், எடுக்கின்றனர். இந்த எண்ணெயை உள்ளுக்குக் கொடுக்க இது நஞ்சைப் போக்கும். அன்றியும் இது குடற்புண்களை ஆற்றும். வேர்ப்பட்டையைக் குடிநீர் செய்து, நீரிழிவு நோய்க்குக் கொடுக்கலாம்.

* * *

## முருகல்
### (முர்கல்)

## Garcinia purpurea
### (N. O. Guttiferae)

*Habit* : *Tree*

*Parts used* : *Concrete oil, seeds, fruit, bark and young leaves*

*Constituents* : *The seeds contain fat. Seeds yield a pale yellow-concrete oil known as kokum oil or kokum butter. Fruit cortains cellulose, an extractive and an insoluable residue*

*Action* : *Fruit is Cholagogue, Cooling, Demulcent, Emollient and Antiscorbutic. Bark is Astringent, so also are young leaves, oil is Emollient and Soothing.*

Uses : Seeds yield an oil known as kokum oil. This is used in making ointments. This checks mucous diarrhoea and dysentery. This cures ulcers, fissures of the lips, hands and chapped skin. This also reduces inflammation. Tender leaves are used in treating dysentery. Juice of the fruit checks dysentery, accompanied with fever.

முர்கல், இது ஆயிண்ட்மெண்ட் செய்ய உதவும். இது பேதி, சீதபேதியை கட்டுப்படுத்தும். தோல் வியாதிகள் உதடுகளில் வரும் வெடிப்பு,ஆகியவைகளைக் குணப்படுத்தும், வீக்கத்தைக் குறைக்கும்.

இலைக் கொழுந்து சீதபேதியையும், இலைக் கசாயம் சுரத்துடன் கூடிய சீதபேதியையும் குணப்படுத்தும்.

* * *

## முருக்கன்

**See : Butea frondosa**

**பார்க்க : பலாசு**

* * *

## முருக்கன்
**(கொடி முருக்கன்)**

## Butea superba
**(N. O. Papilionaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Root, flowers and gum*

*Constituents* : *Flowers yield a yellow dye*

*Action* : *Antidote to poisonous bites.*

Uses : Root is an antidote for poisonous bites. This cures vomiting, stomach ache and stomatitis.

கொடி முருக்கன் வாந்தி, வயிற்றுவலி, வாய்வேக்காடு முதலியவற்றைக் குணமாக்கும்.

* * *

## முருங்கை
## Moringa oleifera
**(N. O. Moringaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, root, fruit, flowers, leaves, seeds and gum*

*Constituents* : *Bark contain a white crystalline alkaloid, resins an organic acid, mucilage and ash. Root yields an*

*essential oil which is very pungent and offensive in odour. The husked seeds yield a clean almost colourless oil, named as 'Moringa oil'. The gum is insoluble in water.*

*Action :* *Fresh root is Acrid and Vesicant, Internally Stimulant, Diuretic and Antilithic. Gum is bland and Mucilaginous. Seeds are Acrid and Stimulant. Bark is Emmenagogue and Abortifacient. Flowers are Stimulant, Tonic and Diuretic. The plant is Cardiac, Circulatory Tonic and Antiseptic.*

Uses : Leaves of this tree gives relief in indigestion, internal heat, head ache, hysteria, giddiness and eye disorders. Flowers cures anorexia, eye disorders and diabetes. The flowers and tender fruits if taken along with food cures ricket fever, fever, anorexia and spermetorrhoea.

Seeds, pericarp of the fruit if consumed regularly acts as aphrodisiac and tonic. Leaves and barks increase the flow of urine and improves the semen secretion. Root-bark is an excellent antidote for poisons. This also cures rheumatism. Gum is used in the medicines to treat excess urine flow, gleet and rheumatism. This is used externally in treating leprosy. If the fruit and leaves are taken along with food, it strengthens the body and improves the resistance of the body. Root is applied externally as poultice to reduce inflammntory swellings. Oil of the seed mixed with ground nut oil is an excellent application to relieve pain of gout and acute rheumatism. Gum is mixed with sesamum oil is used as an ear drops to cure otalgia. Gum is mixed in milk and used as poultice to check headache. Infusion of the roots gives relief in liver and spleen disorders. Juice of the root along with milk is used as diuretic, anthelmintic and digestive. Decoction of it checks hiccups, asthma, gout, lumbago, rheumatism, liver and spleen disorders. Young leaves are used as food. They check intestinal worm infections.

முருங்கை காடுகளில் தானாகவே வளருகின்றது. இதில் காட்டு முருங்கை, கொடி முருங்கை, தவசு முருங்கை எனப் பல வகைகளுண்டு.

இதன் இலையினால் மிக்க மந்தம், உட்சூடு, தலைநோய், வெறிநோய், மூர்ச்சை, கண்ணோய் ஆகியவை நீங்கும்.

இதன் பூவினால் சுவையின்மை நீங்கும். கண் குளிர்ச்சியும் உண்டாகும்; நீரிழிவு தணியும்.

இதன் பூப்பிஞ்சைச் சமைத்து தோலுடன் சாப்பிட்டால் எலும்புச்சுரம், எலும்பை உருக்குகின்ற வெப்பம், சுவையின்மை, வெண்ணீரின்மை (தாது நட்டம்) இவைகள் நீங்கும்.

இதனுடைய விதை ஈர்க்கு, நீர்த்துப் போன வெண்ணீரை பிசின் போலாக்கும். உடல் வலுக்கும். இதன் இலையும் ஈர்க்கும் நீரைப் பெருக்கும். வயிறு கொட்டும். மேலும் ஆண்மையைத் தரும்.

இதன் வேர்ப்பட்டை விஷத்தை முறிக்கும் தன்மையுடையது. வாதத்தை நீக்கும்.

முருங்கைப் பிசின், மிகுதியாகப் போகும் சிறுநீரையும், மோரைப் போல ஒழுகுகின்ற வெண்ணீரையும், வளிநோய்களையும் நீக்கும். வெண்ணீரை இறுக்கி அழகை உண்டாக்கும். குஷ்டத்தை நீக்கும்.

முருங்கைக்காய், முருங்கை இலை இவற்றை உணவாகவும், முருங்கை வேரை மருந்தாகவும் முறையுடன் உட்கொள்ள, அவை உடலிற்கு வன்மை தந்து எல்லா நோய்களையும் போக்கும்.

* * *

# முருங்கை
## (காட்டு முருங்கை)

## Moringa concanensis

### (N. O. Moringaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, root, fruit, flowers, leaves, seeds and gum*

*Constituents* : *Similar to Moringa oleifera*

*Action* ; *Similar to Moringa oleifera.*

Uses : Root is bitter and used as an antidote. Flowers improve eye sight. Leaves mixed with garlic, turmeric, salt and butter are made into a paste and applied over the dog bites. This is also given internally for 6 days. Leaf juice mixed with the potassium nitrate if consumed increases the

urine flow. Bruised leaves mixed with the powdered pepper is used on head to treat head ache. Flowers are used as an ingredient in electuaries to improve health and semen secretion. The tender fruits if used in curries and consumed along with pericarp reduces the body temperature and acts as an aphrodisiac. Seed oil is used as an analgesic application. Seeds mixed with mustard, jute seeds and barley are ground in curd. This paste is applied on scorfulous affections. Kernel of the seeds are used as an ingredient in electuaries to increase the viscosity of the semen. Juice of the bark mixed with juice of the Acalypha indica are boiled along with oil. This oil is used as an external application to cure eczema, ulcers and bruices. Gum is mixed in oil and dropped in ear to cure otitis. This can be used to treat inflammation due to lymphatic disorders. Leaves, gum and tender fruits gives relief in phlegmatic disorders. Juice of the bark is used in calcinations of metals.

காட்டு முருங்கை கைப்புள்ளது. காட்டு முருங்கை வேர் பெரும் நஞ்சை நீக்கும். பூ கண்ணுக்குக் குளிர்ச்சித் தரும். இலை, காய், பிசின், பிஞ்சு இவை ஐய நோய்களை நீக்கும்.

இதன் இலையோடு, இரண்டு திரிப்பூண்டு, சிறு துண்டு மஞ்சள், உப்பு, மிளகு இவைகளைச் சேர்த்தரைத்து, நாய்க்கடி நஞ்சை முறிக்க, உள்ளுக்குக் கொடுத்து, அதனையே புண்ணின் மீதும் பற்றிட, புண் ஆறி, நஞ்சு நீங்கும்.

இலைச் சாற்றுடன் சிறிது வெடியுப்புச் சேர்த்துக் கொடுக்க, சிறுநீர் பெருகும். இலையும், மிளகும் சேர்த்து, நசுக்கிச் சாறெடுத்து தலைவலிக்கு நெற்றியில் தடவலாம்.

பூவை இலேகியங்களில் சேர்த்து, உடல் வன்மைக்காகவும், ஆண்மைக்காகவும் வழங்கலாம். பூவிலிருந்து பிஞ்சுத் தோன்றிய பின்பு எடுத்து, சமையல் பண்ணித் தோலுடன் சாப்பிட்டு வர, மிகுந்த வெப்பத்தைத் தணித்து ஆண்மையை உண்டு பண்ணும். இதன் விதையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் வலியை நீக்கும்.

இதன் விதை, கடுகு, சணல் விதை, பார்லி ஆகியவற்றை எடுத்துத் தயிர் விட்டு அரைத்து, கண்டமாலையின் மீது பூசிவர, நற்பயனைத் தரும். விதை இலேகியங்களில் துணைச் சரக்காகச் சேர்க்கப்படுகின்றது. மிகவும் நீர்த்துப் போன வெண்ணீரைக் கெட்டிப் படுத்தும். பட்டைச்சாறு, குப்பை மேனிச் சாறு, இவ்

விரண்டையும் சேர்த்து, எண்ணெய் விட்டுக் காய்ச்சி, கரப்பான், சொறி, சிரங்குகளின் மீது தடவ அவை நீங்கும்.

பிசினை எண்ணெயில் கரைத்துக் காதில் விடக் காதுப் புண் ஆறும். இதை நெறிக்கட்டிகளுக்கும் பூசலாம். இதன் இலை, பிசின், பிஞ்சு சிலேத்தும நோய்களை நீக்கும்.

இதன் பட்டைச் சாறு சில உலோகங்களைப் பற்பமாக்கும்.

* * *

## முருங்கை

(தவசு முருங்கை)

**See : Adathoda tranqubarensis**

* * *

## முலாம் பழம்

## Cucumis melo

**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Fruit*

*Constituents* : *Rich in vitamins, minerals and carbohydrates.*

*Action* : *Pulp of the fruit is Nutritive, Demulcent, Diuretic and Cooling.*

Uses : Fruit of this climber is green or greenish white in colour. Unripe fruit relieves indigestion. Ripened fruit is very tasty and reduces thirstyness. Juice of the fruit mixed with sugar forms a nutritive, demulcent, diuretic and cooling drink. This reduces burning urination in gonorrhoea. This also cures dyspepsia. Root is emetic. Kernel of the seed is used as an ingredient in electuaries. Juice of the fruit is a good application to treat acute eczema and freckles.

முலாம் பழம், இது ஒரு வகைக் கொடியின் பழம். இலைகள் பெரிதாகவும், காய்கள் பெரிதாகவும், பச்சை அல்லது வெண் மஞ்சள் நிறமாகவும், வெடித்து மிருக்கும். இது வெள்ளரி இனத்தைச் சேர்த்தது.

இதனால் வீரிய விருத்தியாகும். வயிற்று உப்புசம் நீங்கும். பழம் மிகவும் சுவையானது, நீர் வேட்கையைப் போக்கும். இதன் சாற்றோடு சர்க்கரை கலந்து உட்கொள்ள, வெள்ளையில் காணும் நீர் எரிச்சலைத் தணிக்கும். விதையை உடைத்துப் பருப்பை உலர்த்தி உடல் வன்மைக்கான மருந்துகளுடன் சேர்த்து வழங்கலாம். இது புழுக்களைக் கொல்லும்.

* * *

## முலைப்பால் விதை

**See : Cassia absus**

**பார்க்க : கருங்காணம்**

* * *

## முளைக் கீரை

**See : Amaranthus paniculatus**

**பார்க்க : கீரை வகைகள்**

* * *

## முள் இலவம்

**(சான்மலி, பூரணி)**

**See : Bombax malabaricum**

**பார்க்க : இலவம் வகைகள்**

* * *

## முள்ளி

**(செம்முள்ளி, வஜ்ஜிரதந்தி)**

**See : Barleria prionitis**

**பார்க்க : கீரை வகைகள்**

* * *

# முள்ளி

(கறிமுள்ளி)

See : Solanum Indicum

பார்க்க : பப்ரமுள்ளி

* * *

# முள்ளங்கி

## Raphanus sativus

**(N. O. Cruciferae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root, tuber, seeds and leaves*

*Constituents* : *Fresh vegetable contatins albuminoids, carboyhdrates, woody fibre, sulphur and phosphoric acid.*

*Action* : *Seeds and Leaves are Diuretic, Laxative and Lithontripic. Seeds are also Emmenagogue. Juice of the root is Antiscorbutic.*

Uses : There are three varieties in this depending on the tuberous root. But they have similar properties. The leaves, tuberous root and seeds of this herb exhibit medicinal property. Infusion of the leaves cures stomach ache and dyspepsia. Root is used as an important vegetable. Seeds check spermatorrhoea. Root if consumed regularly cure rheumatism, eczema, burning sensation in stomach, enlargement of the intestine, cough, head ache, cold affections, tooth ache, dyspepsia, wheezing, piles and otorrhoea. Paste of the tender leaves if taken twice daily cures anuresis due to gonorrhoea. Juice of the root is diuretic. It is taken both raw and boiled. This relieves anorexia and increases digestive power. Juice of the fruit is used in calcinating the mercury and copper.

முள்ளங்கி எல்லா இடங்களிலும் பயிரிடப்படுகின்றது. இதில் வெள்ளை, சிவப்பு, மஞ்சள் என மூன்று வகையுண்டு, ஆனால்

பண்பு ஒன்றேயாகும். இதன் இலை, கிழங்கு, விதை, மருத்துவத் தன்மை வாய்ந்தன.

இதன் இலையினால், தீக்குற்றம் பெருகும். வயிற்றுப்புழு, மார்பெரிச்சல் இவைகள் உண்டாகும். வயிற்று நோய், குன்மம் அடங்கும். இதன் விதையானது விந்து நட்டத்தைப் போக்கும். இதன் கிழங்கினால் வளிநோய், கரப்பான், வயிற்றெரிச்சல், குத்தல், குடல் பருமன், இருமல், தலைவலி, நீரேற்றம், பல்நோய், பல் சிலந்தி, குன்மம், இரைப்பு, மூலக்கடுப்பு, மூலம், காதில் சீழ் வடிதல் ஆகிய நோய்களைக் குணப்படுத்தும்.

முள்ளங்கி நட்டு இரண்டு, மூன்று, இலைகள் வந்த உடன், அவ்விலைகளை எடுத்து சோற்றுப்புச் சேர்த்து, காலை, மாலை இரு வேளையும் சாப்பிட்டு வர, வெள்ளையினால் உண்டாகும் நீரடைப்பு நீங்கும்.

கிழங்கை நசுக்கிச் சாறு பிழிந்து உட்கொள்ள, சிறுநீரை நன்றாய்ப் போக்கும்.

கிழங்கைச் சிலர் பச்சையாகத் தின்பதும் உண்டு. சுவையின்மையை நீக்கிப் பசியை உண்டு பண்ணும். உணவைச் செரிப்பிக்கும்.

கெந்தி, தாமிரம் பஸ்பங்கள் செய்ய உதவும்.

* * *

## முள்ளங்கி

**(மஞ்சள் முள்ளங்கி, கச்சாரக் கிழங்கு)**

## Daucus carota

**(N. O. Umbelliferae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root, fruit and seeds*

*Constituents* : *Fresh vegetable contains albuminoids, carbohydrates and woody fibre.*

*Action* : *It is beneficial to kidneys and dropsy. It is an Antiseptic. Seeds are Aphrodisiac Nervine Tonic, Aromatic, Stimulant and Carmi native.*

Uses : Juice of the root gives strength to kidneys and other urinary organs. This gives relief in calculous affections of urinary tract.

கச்சாரக் கிழங்கு சிறுநீரக உறுப்புகளுக்கு வலிமையுண்டாக்கும். கல்லடைப்பை நீக்கும்.

* * *

## முள்ளங்கி

(சுவற்று முள்ளங்கி, காட்டு முள்ளங்கி)

**See : Blumea balsamifera**

பார்க்க : நாரக்கரந்தை

* * *

## முன்னை

## Premna integrifolia

(N. O. Verbenaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Constituents* : *Resin, a bitter alkaloid and tannin.*

*Action* : *It is Cordial, Stomachic, Carminative, Alterative and Tonic. Roots and leaves are therapeutically active.*

Uses : This is a small tree. This cures chronic fever and body pain, Leaves are used in treating tastlessness, inflammation,phlegm and eczema.This also cures rheumatism, giddiness, stomach ache. gastric disorders and spleen disorders. This regulates the heart beat. Infusion of the leaves is used to cure the above said diseascs. Infusion of the root cures belching and gonorrhoea.

முன்னை சிறு மர வகுப்பைச் சேர்ந்தது. இதில் எருமை முன்னை, காட்டு முன்னை, பேய் முன்னை, பசு முன்னை என பல வகைகள் உண்டு. பசு முன்னையே பெரும்பாலும் மருந்தாகக் கொள்ளப்படினும் இதற்கும் மற்ற வகைகளுக்கும் செய்கையும்

குணமும் ஏறக்குறைய ஒன்று பட்டேயிருக்கும். இது தசமூலங்களில் ஒன்றாகும்.

இது விடா சுரம், தேகவலி, நீக்கும் மேலும் இதனால் சகலவித வாதநோய்களும் குணப்படும்.

இலையினால் சுவையின்மை, வீக்கம், கபம், கரப்பான் இவை உண்டாகும். வலிக் குற்றமும், அழல் மந்தமும், மயக்கமும் போகும். வயிற்று வலி, வாய்வு உபத்திரவம் தணியும். மண்ணீரல் நோய்களை ஒழிக்கும். இருதய துடிப்பை சமனப் படுத்தும். இலையைக் குடி நீரிட்டுக் குடிக்க மேற்கண்ட நோய்கள் குணமாகும்.

வேரையும் குடிநீரிட்டுக் கொடுக்கலாம். இதனால் வளி ஏப்பம், வெள்ளை நீங்கும்.

* * *

## மூக்குறட்டை
### (சிறிய மூக்குறட்டை)

## Boerhaavia diffusa

### (N. O. Nyctaginaceae)

*Habit* : *Creeper*

*Parts used* : *Herb and root*

*Constituents* : *The air-dried plant was found to contain unusually large quantities of potassium nitrate.*

*Action* : *Bitter, Stomachic, Laxative. Diuretic, Expectorant, Diaphoretic and Emetic. Root is Purgative, Anthelmintic and Febrifuge.*

Uses : The flowers of this creeper are white in colour. Leaves are edible and used as green vegetable. The ash of the plant if taken regularly for forty days cures all kinds of nasal problems.

Leaves if consumed along with food cures constipation, jaundice, cold and rheumatism. Infusion of the root if consumed cures rheumatoid arthritis, wheezing, jaundice, anuresis, ascites, anaemia, chest conjestion, inflammation of the spleen and disorders of the testicles.

Root roasted in castor oil is boiled and if taken in recommended quantity acts as laxative. This cures pruritis and rheumatism. Powder of the root and infusion of the root are emetic and purgative. But this cures eye disorders.

சிறிய மூக்குறட்டை பாழ் வெளிகளிலும், நன்செய் புன் செய் நிலங்களிலும், புற்கள் அடர்ந்துள்ள இடங்களிலும், படரும் செடி, பூண்டு இனத்தைச் சேர்ந்தது. இதில் இரண்டு பிரிவுண்டு. ஒன்றின் இலை சிறிதாகவும், மற்றொன்றின் இலை பெரிதாகவும் இருக்கும். இதற்கு மூக்கரைச்சாரணை என்று பெயர். இதன் பூக்கள் வெள்ளை நிறங்கொண்டவை.

மூக்கிரட்டை இலையை உணவு முறையாகவேனும், மருத்துவ முறையாக வேனும் புசித்துவர, உடலிலுள்ள வளி நோய்கள் ஒன்றும் தலை காட்டாது. மூக்கிரட்டைக் கீரையின் சமூலத்தைப் பாகஞ் செய்து ஒரு மண்டலம் புசித்து வர மூக்கில் வரக்கூடிய வளி நோயின் கெடுதிகளெல்லாம் விலகும்.

இதன் இலையை கறி செய்து சாப்பிடுவதால் மலச்சிக்கல் நீங்கும், உடல் காந்தி பெறும். காமாலை, பீநிசம், வாத நோய் நீக்கும். இதன் வேர்க்குடி நீரை, கீல் வாதத்திற்கும், இரைப்பு நோய்க்கும் கொடுக்கலாம். இது காமாலை, நீர்க்கட்டு, பெருவயிறு, சோபை இவைகளுக்கும் பயன்படும். இருதயக்கோளாறு, மண்ணீரல் வீக்கம், குண்டிக்காய் சீராக்கும். சோகை ஒழிக்கும். வீக்கம் நீர் சுரப்பது குணப்படும்.

சிற்றாமணக்கெண்ணெயில் இதன் வேரைச் சிதைத்துப் போட்டுக் காய்ச்சி, வடிகட்டி தக்க அளவில் கொடுக்க, கழிச்சல் உண்டாகும். இதனால் நமைச்சல், வளி நோய் தணியும். இதன் வேர்ப்பொடி அல்லது வேர்க்குடி நீரையாவது கொடுக்க வாந்தியை உண்டாக்கும். கழியவும் செய்யும். இதன் வேரினால் கண் பற்றிய நோய்களும் குணமாகும்.

* * *

## மூக்குறட்டை
(பெரிய மூக்குறட்டை)

## Boerhaavia repens
(N. O. Nyctaginaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Root*

*Constituents* : *Similar to B. diffusa*

*Action* : *Similar to B. diffusa.*

Uses : Flowers of this plant are violet in colour. This is an ideal plant to treat rheumatism. This exhibits the same property of small variety.

பெரிய மூக்குறட்டையின் பூக்கள் ஊதா நிறங்கொண்டவை. இது வாத ரோகங்களுக்குச் சிறந்தது என்றாலும், இதன் குணங்களும், சிறிய மூக்குறட்டையின் குணங்களும் ஒன்றாகும்.

* * *

## மூங்கில்

## Bambusa arundinacea

### (N. O. Gramineae)

*Habit* : *Shrub*

*Parts used* : *The interior stalks or stems (bamboo hollows) of female plant containing silicous concretions (deposit) called tabashir (bamboo mannal) in the interior of the stem of (B. areundinacea) young shoots, leaves, articulation seeds and roots*

*Constituents* : *Tabashir cotains silica or silicum as hydrate of silicic acid, peroxide of iron, potash, lime, aluminia, vegetable matter, cholin, betoin, nuclease, urease, proteolytic enzyme, diastatic and emulsifying enzyme, cyanogenetic glucoside.*

*Action* : *Leaves are Emmenagogue and Anthelmintic. Tabashir (bamboo mannal) is Stimulant, Astringent, Febrifuge, Tonic, Cooling Antispasmodic and Aphrodisiac.*

Uses : This is mostly found in forests. It is also cultivated in some places. This flowers once in thirty years. The grains of this plant is edible. Tribes residing in forests and hilly areas use these grains and tender leaves.

Leaves cures flatulance and stomach ache. This promotes lochial discharge. This also cures menstrual disorders and rheumatism.

Grains are used in treating chronic fever and eye disorders. This controls biliousness and sugar in uriue.

Dried leaves are used in making mats. Tender plants are smashed and juice of it is applied externally to treat chronic ulcers. Infusion of the tender leaves cures amenorrhoea, gonorrhoea, fever and leprosy. In children it is used as anthelmintic.

மூங்கில் காடுகளில் தாவாக வளருகின்றது. மூங்கிலில் பல வகைகளுண்டு. மூங்கில் பாஷாணம், மூங்கிலுப்பு முதலியவை இதனின்றும் உண்டாகிறது. ஒன்பது மணிகளுள் ஒன்றான முத்து பிறக்கும் இடத்தில் இதுவும் ஒன்றாகும். முப்பது வருடங்களுக்கொரு முறை பூத்துக் காய்க்குமென்று கண்டறியப்பட்டு இருக்கின்றது. இதன் அரிசியையும் உணவாக உட்கொள்ளலாம். காடு, மலைகளில் வாழும் மக்கள், மூங்கில் குருத்தையும் அரிசியையும் உணவாகவும், மூங்கிலைச் சீவி, கத்தி, வில் முதலியவைகளாகவும் கையாளுகின்றனர்.

இதன் லையினால் குடற் சூலையும், வயிற்று நோவும் உடலின் குருதித் துடிப்பும், பிள்ளை பெற்றபின் சூலகத்தில் அழுக்குப் போகும். மேலும் இதனால் மாதவிடாய் கோளாறுகள் வாத நோய்கள் ஆகியவைகள் குணமாகும்.

பாயசம் முதலானவை செய்வதற்கான மூங்கிலரிசி, குருதியழல் நோய், இடைவிடா சுரம், கண் நோய் இவைகளை நீக்கும். மேலும் பித்த ரோகம், சிறுநீரில் உள்ள சர்க்கரை குறைக்கும்.

மூங்கிலின் இள்முளைகளை நசுக்கிப் பிழிந்துச் சாறெடுத்து, அழுகல் புண்களுக்குப் பூசி, பின்னர் அதைச் சிதைத்து வைத்துக் கட்ட அப்புண்களிலுள்ள பூச்சிகள் வெளியேறிவிடும். புண்ணும் ஆறும். இளங்குருத்துக்களை, நீர்விட்டுக் குடிநீரிட்டுக் கொடுக்க சூதகக்கட்டு, வெள்ளை இவை நீங்கும். மேலும், சுரம், குட்டம், குழந்தைகளின் வயிற்றிலுள்ள சிறு பூச்சிகள் ஆகியவை போகும்.

எலும்பு முறிவுக்குச் சிறு மூங்கிலைப் பத்தைகளாக வைத்துக் கட்டலாம். இளங்குருத்திலைகளை, மிளகு, உப்பு சேர்த்துக் கன்று காலிகளுக்குக் கொடுக்க, அவைகட்கு நேரும் கழிச்சல் நீங்கும்.

வேரை அரைத்துச் சொறி, சிரங்கு, படை முதலியவைகளுக்குப் போடலாம். உலர்த்திக் குடிநீரிட்டுக் குடிக்க சுரவெப்பந் தணியும்.

மூங்கில் உப்பு இம்மரக் கணுக்களில் தங்கி நிற்கும். இதில் திப்பிலி வலம், இலவங்கம், சர்க்கரை, பொடித்துக் கலந்து, உட்கொள்ள, ஐயநோய், இருமல், இரைப்பு முதலியவைகள் குணமாகும். மாதவிடாய் ஒழுங்காகும். வாய்வு கோளாறுகள், சுரம் முதலியவைகளுக்கு குணம் தரும். மேலும் நாடி துடிப்பை சீராக்கும்.

* * *

## மெருகன் கிழங்கு

**(முசலி, மெருகு, கந்தபுட்பம்)**

## Hamelomena aromatica

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Herb* |
| *Parts used* | : | *Root, tuber and leaves* |
| *Action* | : | *Febrifuge, Antirheumatic, Deobstruent, Expectorant, and Cooling.* |

Uses : It occurs only in the areas where water is available. Root tuber of this herb exhibits medicinal properties. This cures venereal diseases, stomach ache and ricket fever. This is also used as refrigerant.

5 ml. of oil made out of the tuber if given twice daily improves skin. If taken in the morning in recommanded quantity cures rheumatoid arthritis, osteo arthritis and paraplegia. Oil is used externally to cure ulcers and oedema. If consumed before bed regularly for twenty days cures piles, flatulency, dyspepsia and ascites. This also cures stomach ache, piles, phlegmatic disorders and diabetes.

முசலி, மெருகு, கந்தபுட்பம்: இது நீர்ப்பாங்கான இடங்களில் செழித்து வளருகின்றது. தோட்டங்களிலும் பயிரிடப்பட்டு வருகின்றது. இதன் இலை, சேம்பினுடையதை விட மிகப் பெரிதாய் நீண்டு பருமனுள்ள தண்டுகளோடுங் கூடி இருக்கும். கிழங்கு, அடி தண்டிலிருந்தே பூமிக்குள்ளிறங்கி பல பக்க வேர்களுடன் உலக்கைப் போன்றிருக்கும்.

இதனால் மேகநோய், வயிற்று நோய், மூலம், ஈளை நோய், எலும்புருக்கிச் சுரம், ஐயப் பெருக்கு ஆகியவைகள் நீங்கும். உடல் குளிர்ச்சியடையும்.

இதனால் செய்யப்படும் தைலத்தை காலை, மாலை இரு வேளையும் சாப்பிட்டு, மேலுக்குத் துவாலையிட்டு மெதுவுறப் பிடித்து வர ஐயசுரம் விலகிப் போகும். (மெருகுத் தைலம்) இதை உடல் வன்மை அறிந்து தினம் காலையில் மாத்திரம் கொடுத்து வர கீல்களை அசையவொட்டாமல் செய்கிற கீல்வாயு, முடக்கு வாயு, நரித்தலை வாயு முதலிய நோய்களும், தளிர்போலக் கிளர்ந்து வருகின்ற புண்களும், வன்மையுள்ள வாயுவின் வீக்கமும் குணமாகும். மெருகுள்ளித் தைலத்தை படுக்கைக்குப் போகு முன் 50 நாள் வரையில் குடித்து வர மூலம், மூலவாயு, குன்மம், உட்கவிச்சு, பெருவயிறு போன்ற நோய்களும் நீங்கும். மேலும் வயிற்று வலி, மூலம், கபநோய், பிரமேகம் முதலிய நோய்களும் தணியும்.

* * *

## மைசாட்சி

### (குக்கல்)

### Balsamodendron mukul)

### (N. O. Burseraceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Gum*

*Constituents* : *Volatile oil, gum-resin and bitter principle.*

*Action* : *Gum is Demulcent, Aperent, Alterative, Carminative, Anti-spasmodic and Emmenagogue.*

Uses : Guggul gum is used in rheumatism, nervous disorders, scrofulous affections, urinary disorders and skin diseases. Mixed with lime juice or coconut oil it is applied as analgesic application in rheumatism. It is used in decoction as gargle in curries of the teeth, weak and spongy gums, pyorrhoea alueclaris, chronic tonsillitis and pharynyitis and ulcerated throat.

As an intestinal disinfectant, it cures chronic catarrh of the bowels chronic colitis, tubercular ulceration of the bowels and diarshoea.

It is also used in treating leprosy, anaemia, neurasthenia debility and allied conditions. This relieves nervous pain.

குக்கலின் மரப்பிசின் மருந்துத் தன்மையுடையது. இது வாத நோய், நரம்புக் கோளாறுகள், மூத்திரப்பை கோளாறுகள், கண்டமாலை, தோல் நோய்கள் ஆசியவற்றை குணப்படுத்தும். இதை எலுமிச்சம்பழச் சாற்றிலோ தேங்காய் எண்ணெயிலோ இழைத்து தடவ வாத வலியைப் போக்கும். இதன் கஷாயத்தைக் கொண்டு வாய் கொப்பளிக்க, பல் சொத்தை, ஈறு வீக்கம், பல் கோளாறுகள், தொண்டையில் சதை வளர்ச்சி ஆகியவை தீருவதுடன் தொண்டைப் புண்கள் ஆறும்.

மேலும் இது வயிற்றுக் கோளாறுகளையும் புண்களையும் வயிற்று வலியையும் குணப்படுத்தும். இதை உட்கொள்ள தொழு நோய்காரர்களின் உடல் பலம் பெறும். மேலும் சோகை, மன வியாதிகள், நரம்பு வியாதிகள் தீரும். நரம்பு வலி குணமாகும்.

* * *

## மொச்சை
### (காட்டு மொச்சை)

## Dolichos lablab
### (N. O. Papilionaceae)

*Habit* : *Climber*

*Parts used* : *Seeds*

*Constituents* : *Seeds are rich in proteins and minerals*

*Action* : *Seeds are Aphrodisiac and stop nasal bleeding. Roots are Poisonous.*

Uses : The fresh and dried seeds of this herb is edible. This increases phlegmatic, rheumatic and bilious disorders. If taken in large quantity induces diarrhoea. Seeds are ground in water if applied on warts cures them.

மொச்சை, இது கடைகளில் கிடைக்கும். இதில் நாட்டு மொச்சை, பாம்பு மொச்சை என இரண்டு வகை உண்டு.

மொச்சைக் காயினால் திரிதோஷம், வாதம், ஷீண மலம் இவைகள் விருத்தியாகும். மிகுதியான சூடும் தணியும். மொச்சைக்

கொட்டையினால் திரிதோஷங்களும், இரைச்சலும் தருகின்ற ஆவிருத வாயுவையும் உண்டாக்கும். இதை வேகவைத்துப் பெரும்பாலும் பதார்த்த வகைகளுடன் சமைத்துண்ணலாம்.

மொச்சையை உரைத்துப் பாலுண்ணி முதலியவற்றின் மீது பூசிவர அவைகள் மறையும்.

* * *

## மோடி

**See : Piper longum**

**பார்க்க : திப்பிலி**

* * *

## மோதகவல்லி

**See : Sterculia urens**

**பார்க்க : கொழுக்கட்டை மரம்**

* * *

## யானைச் சுவடி

**See : Eleprantopus scaber**

**பார்க்க : அணாஷ்வடி**

* * *

## ரங்கூன் மல்லிகை

## Quisqualis indica

**(N. O. Combretaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Flowers*

*Constituents* : *Quisqualiris duralin, colic acid and palmitic, acid.*

*Action* : *Stimulant, Carminative, Diaphoretic, Purgative and Anti-rheumatic.*

Uses : Seeds of this creeper is used as an anthelmintic in cases of round worm infection. Seeds are crushed and mixed with honey if given to children expels the round worms. Roasted ripe seeds checks diarrhoea and fever. Leaves are used as an ingredient in decoctions prepared to treat flatulent abdominal distension.

ரங்கூன் மல்லிகை ஒரு படர்செடியாகும். இதன் விதை சிறந்த புழுக்கொல்லியாகும். நான்கு அல்லது ஐந்து விதையை பொடித்து தேனில் குழைத்து சிறிதளவு குழந்தைகளுக்குக் கொடுக்க வயிற்றிலுள்ள உருண்டைப் புழுக்களை வெளிப்படுத்தும். முற்றிய விதைகளை வறுத்துக் கொடுக்க பேதி, சுரம் குணமாகும். இலையை பிற கடைச் சரக்குகளுடன் சேர்த்து கஷாயமிட்டுக் கொடுக்க வயிற்றுப் பிசம் குணப்படும்.

* * *

## ரத்தபோளம்

**See : Aloe littoralis**

**பார்க்க : இரத்த போளம்**

* * *

## ரத்ன புருஸ்

**See : Viola odorata**

**பார்க்க : ஓரிதழ் தாமரை**

* * *

## ரணபேரி

### Leonotis nepetaefolia

**(N. O. Labiatae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves*

*Action* : *Leaves, flowers and heads are Stimulant Diuretic, Antirheumatic, Cooling and Emollient.*

Uses : Fruit of this plant cures arthritis. To treat skin diseases, oil extracted from the leaves is used externally.

ரணபேரி, இது வாத நோய், வலி முதலிய நோய்களை நீக்கும். சரும நோய்களுக்கு, இதன் இலையிலிருந்து இறக்கப் படும் தைலத்தை மேற்பூச்சாகத் தடவ குணமளிக்கும்.

மாவைக் களி கிளறிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்டினால் கட்டி சீக்கிரம் பழுக்கும்.

* * *

## ருத்ராஷம்

### Elaeocarpus ganitrus

**(N. O. (Elaeocarpaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit*

*Action* : *Refrigerant, Restorative, Nervine and Sedative.*

Uses : This cures hiccups, rheumatism, phlegmatic disorders and bilious disorders. This is also used in the medicines to treat epilepsy, wheezing and head ache.

ருத்ராஷம், இதனால் விக்கல், திரிதோஷம் நீங்கி, திரேகச் சுகம் வரும். காக்கை வலிப்பு, இழுப்பு, தலைவலி முதலிய நோய்கள் குணப்படும்.

* * *

## ரோஜாப் பூ

### Rosa damascena

**(N. O. Rosaceae)**

*Habit* : *Herb or shrub*

*Parts used* : *Flower and flower buds*

*Constituents :* *Volatile essential oil, malic, tertaric and tanic acids*

*Action :* *Flowers are mildly Astringent, Aperient, Carminative, Refrigerant, Cardiac and Tonic.*

Uses : This is a thorny herb or shrub with beautiful flowers. There are many kinds depending on the colour, size, shape and the number of petals. Wild rose is odourless.

In large doses flowers are purgative. This cures fever, thirstyness, nausea, stomatitis, gonorrhoea and colic. Rose water cures tuberculosis, rheumatism and phlegmatic fever. Dried corolla of the flower is soaked in water for twelve hours. This water along with sugar is made into a concentrate. Little amount of rose essence is added to this. This is used as sharbat to treat stomach ache, gonorrhoea and internal heat. Petals are soaked in water and made into an infusion along with salt and used as purgative and astringent drugs. If it is consumed cures nausea, fever, thirstyness etc.

Rose water along with fish fat, badam oil and an oil extracted from rose petioles are mixed and used as an external application to treat skin disorders. This also cures fever, constipation and burning sensation of the anus.

Atther is extracted from the flower.

ரோஜாப்பூ, குலாப்பூ, சிற்றாமரை எனப்படும் இது முட்கள் நிறைந்த ஒரு வகைக் குத்துச் செடி. வெள்ளை, இளஞ்சிவப்பு, நற்சிவப்பு, மஞ்சள், பச்சை, கலப்பு நிறம் போன்ற பூக்களை பூக்கும் செடிகளை நாம் பல இடங்களில் பார்த்திருக்கின் றோம். இவ்வகை ரோஜா செடி காடுகளிலும் வளருகிறது. காட்டு ரோஜா செடியின் பூ பார்வைக்கு மிக அழகாய், சிவந்த நிறத்துடன் காணப்பட்டபோதிலும், நறுமணமுடையதன்று.

இதனால் சுரம், தாகம், ஓக்காளம், கீழ்வாய் எரிச்சல், வெள்ளை, வயிற்றிசிவு போகும். கழிச்சலையுண்டாக்கும்.

பன்னீர் குளிர்ச்சியைத் தரும். இளைப்பைப் போக்கும். வளி ஐயக்குற்றங்களைத் தன்னிலையடையச் செய்யும். மனக் கலக்கத்தைப் போக்கும்.

உலர்ந்த பூவிதழ்களை, வெந்நீரிலிட்டு, 12 மணி நேரம் ஊற வைத்து வடிகட்டி, அதில் சர்க்கரைச் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில்

இறக்கி வடிகட்டிக் கொண்டு பன்னீர் சேர்த்துக் கொள்ளவும். இதை நீரில் கலந்து கொடுக்க வயிற்றுவலி, வெள்ளை, உடல் வெப்பு இவை நீங்கும்.

சிவப்பு பூவிதழ்களை வெந்நீர் சேர்த்து அரை மணி நேரம் ஊற வைத்து வடிகட்டிக் கொள்ளவும். இதனுடன் உப்பு, பேதி மருந்துகளையும், கசப்பு மருந்துகளையும் சேர்த்துக் கொடுக்க வெகுட்டலிராது, சுரம், நீர்வேட்கை, ஓக்காளம் இவை நீங்கும்.

பன்னீர், மீன் கொழுப்பு, வாதுமை எண்ணெய் 10 துளி இவைகளை நன்றாகக் கலந்து வைத்துக் கொண்டு புண்களை ஆற்ற மேலுக்கு வழங்கலாம். சுரம், மலபந்தம் நீங்கும். ஆசன எரிச்சல் தணியும்.

பூக்களிலிருந்து ஒரு வகை நறுமணம் பொருந்திய எண்ணெய் எடுப்பதுண்டு. இதற்கு அத்தர் எனப் பெயர்.

* * *

## லச்சைக் கொட்டைக் கீரை
### (லஞ்சமுண்ட கீரை, நச்சுக் கொட்டை)

## Pisonia alba

### (N. O. Nyctaginaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and bark*

*Constituents* : *Vitamin 'A'*

*Action* : *Stimulant, Diuretic, Laxative, Antirheumatic and Emollient.*

Uses : The leaves are used as green vegetable. This is used in treating gastric troubles and filariasis. Juice of the leaves is used in sublimation processes.

லச்சைக் கொட்டை கீரை வாய்வுத் தொல்லையை நீக்கும். வாத நோயை குணப்படுத்தும். யானைக்கால் நோய்க்கு இது மிகவும் உபயோகமானது. இதன் இலைச் சாற்றில், பதங்கம் தயாரித்து உபயோகிக்கலாம்.

* * *

## வங்கார வெள்ளை
### (வள்ளைக் கீரை)

## Sesuvium portulacastrum
### (N. O. Aizoaceae)

***Habit*** : *Herb*

***Parts used*** : *Stem and leaves*

***Constituents*** : *Edible portion contains fibre, protein carbohydrate, calcium, phosphorus, iron, sodium, potassium and vitamins*

***Action*** : *It is Diuretic, Laxative, Carminative, Cooling, Antirheumatic, Anti-lithic and Galactagogue.*

Uses : This herb will grow only in rainy seasons. Infusion of this greens if taken cures rheumatism and abdominal distension. This also cures piles and urinary tract disorders. This cleans the intestine and gives strength to it. Boiled leaves are galactagogue.

வள்ளைக் கீரை மழைக் காலத்தில் பயிராகும். இது எங்கும் கிடைக்கக் கூடியதாகையாலும், மழைக் காலத்தில் பெருத்துச் செழித்து வளரும் தன்மையுடையதாதலாலும் வேலை இன்றி வருந்தும் மக்கட்கு இது இன்றியமையாத உணவாகிறது. ஆதலால்,

‘ தாயுந் தகப்பனுந் தள்ளிவிட்ட காலத்திலே வாவென்
றழைத்த வங்கார வச்சி. ’

—என்று ஒரு பழமொழி வழங்கி வருகின்றது.

இக் கீரையைக் குடிநீரிட்டு அல்லது சமைத்துச் சாப்பிட, வளி நோய், வயிற்றுப்பிசம் இவை நீங்கும். கருத்துச் சிக்கிய மூலம், சிறுநீர் சரியாக இறங்கும். குடல் தூய்மையாகும். இதையுண்ணத் தாய்ப்பால் அதிகரிக்கும்.

* * *

# வசம்பு

## (பிள்ளை வளர்த்தி)

## Acorus calamus

**(N. O. Araceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Dried rhizome*

*Constituents* : *A volatile essential oil, acorin, a bitter principle acoretin (choline), calamine (useful in dysentery), strach, muscilage, a little of tannin, The dried rhizome yields a neutral yellow. aromatic essential oil having an agreeable odour.*

*Action* : *Root and rhizome are Stimulant, Emetic, Nauseant, Stomachic, Aromatic, Expectorant, Carminative, Antispasmodic, Nervine sedative, Tonic, Stomachic, or Carminative, and also Anti-periodic. The volatile oil is Aromatic and Antiseptic.*

Uses : This is aromatic. The dried ones are commonly available in the shops. An aromatic oil is extracted from this. It acts as an antidote for poisonous bites, more over ulcers, dyspepsia, biliousness, bad breath, phlegmatic disorders, cough, liver disorders, filariasis and tape worm could be cured. The powder of this with honey if taken regularly corrects stammering. Indigestion, diarrhoea flatulence, intestinal gas, eczema, periodic fever also could be treated with this. Infusion of this with liquid given to children it cures cough, fever and stomach ache. If this powder is consumed it corrects breathlessness, but if it is consumed in large quantity it produces vomiting and nausea. If it is chewed it increases salivary secretion and cures cough. It is used with catechu as a paste to cure joint pains. Ash of the root with cocoanut oil if applied it cures flatulence. Asafoetida, atees, long pepper, pepper, dried ginger and myrobalan, are added with the powder. If this mixture is

consumed it cures indigestion, rheumatism, diarrhoea due to indigestion and flatulence.

இது ஒருவிதப் பூண்டு. இதன் தண்டு ஏறக்குறைய பெருவிரற் கனமிருக்கும். இது சாம்பல் படிந்த நிறமிருக்கும். இதன் வேருக்கு வசம்பு, பிள்ளை வளர்த்தி என்பது பெயர். இதற்கு ஒருவித மணமுண்டு. இதை உலர்த்திக் கடைகளில் விற்பார்கள். ஊடுருவிப் பாயக்கூடிய வெப்பமும், மணமும் உள்ள ஒருவித எண்ணெய்சத்து (Glucocido acorin) இதிலுண்டு.

வசம்பினால், எல்லா நஞ்சுகள், புண் வகைகள், குன்மம், இரத்த பித்தம் , வாய்நாற்றம், சூலை, இருமல், ஈரல் நோய்கள், யானைக்கால், நாடாப்புழு ஆகியவைகள் போகும்.

வசம்புத் தூளைத் தேனில் குழைத்து, விடியற்காலைதோறும் உட்கொண்டுவரின், நாக்குப் பிறழ்சி (திக்குவாய்) நீங்கும். அன்றியும் இது செரியாமை, கழிச்சல், வயிற்றுப் பொருமல், வன்மையின்மை, வாயு, சொறி சிரங்கு, சுரங்கள், முறை காய்ச்சல் ஆகியவைகளையும் போக்கும்.

வசம்புடன் அதிமதுரம் கூட்டிக் காய்ச்சிய குடிநீர், பெரும் பாலும் குழந்தைகளுக்குண்டாகிற இருமல், ஈளை, சுரம், வயிற்று வலி இவைகளைப் போக்கும்.

வசம்புப் பொடியை கொஞ்சம் உட்கொள்ள, அகட்டு வாயை அகற்றுவதுடன், நரம்புத் தளர்ச்சியையும் விலக்கும். அதிகமாக உண்டால் வாய்க்குமட்டலையும், வாந்தியையுமுண்டாக்கும்.

வசம்புத் துண்டை வாயிலிட்டுச் சுவைக்க, வாய்நீர் பெருகும். வாயில் ஒருவித அனலெழும்பும். ஆனால், தொண்டைக்கம்மல், இருமல் இவற்றைப் போக்கும். விஷக் காற்றால் நோய்கள் பரவுங் காலத்தில் இதை வாயிலிட்டு மெல்லுவது வழக்கம்.

நாட்பட்ட கீல்வாத நோய்களுக்குக் காசிக் கட்டியுடன் வசம்பைச் சேர்த்து நீர் விட்டரைத்துப் பற்றிடலாம்.

வசம்பைச் சுட்டுக் கரியாக்கி, தேங்காய் நெய் அல்லது முத் ஒதண்ணெயுடன் கலந்து அடிவயிற்றில் பூச வயிற்றுப் பொருமல் நீங்கும்.

வசம்பு, காயம், அதிவிடயம், திப்பிலி, மிளகு, சுக்கு, கடுக்காய்த் தோல் இவைகளைப் பொடி செய்து உள்ளுக்குக் கொடுக்க செரியாமை, வளிநோய்கள், மாந்தக் கழிச்சல், வயிற்றுப் பொருமல் முதலியன நீங்கும்.

* * *

## வசநாபி

**See : Aconitum ferox**

**பார்க்க : நாபி வகைகள்**

* * *

## வட்ட திருப்பி
**(அப்பட்டா)**

**See : Sida acuta**

**பார்க்க : மலைத்தாங்கி**

* * *

## வரகு
**(கோத்திரவம்)**

## Paspalum scrobiculatum
**(N. O. Gramineae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Grains*

*Constituents* : *Grains contain 57% of proteins.*

*Action* : *Seeds are Refrigerant, Cholagogue and Nutritive.*

Uses : This is a grass. The seeds are black and round in shape. The boiled seeds if consumed it produces many other diseases, but it is an ideal food for diabetic patients. This is intended in the system of sidha in many ways, but only recommended doses to be consumed.

கோத்திரவம் பயிர் வகைகளுள் ஒன்று. இதன் அரிசி உருண்டு, ஒருவித கருநிற உமியால் மூடப்பட்டிருக்கும். இதைச் சிலர் சமைத்து உண்பதுண்டு.

வரகரிசி, நோயை மிகுதிப்படுத்தும். வரகுச் சாதத்தினால் மூச்செறிகின்ற இரைப்பு, இதைச் சேர்ந்த பல நோய்கள், உடல் வறட்சி, சொறி, சிரங்கு, அழல் இவை உண்டாகும். நீரிழிவு நோயாளிகளுக்கு இது சத்து மிகுந்த உணவாகும்.

ஆற்றுத்தும்மட்டி, இலைக்கள்ளி, கொம்புக் கள்ளி போன்ற பொருள்களிலிருந்து சாறெடுப்பதற்கு, இவ்வைக்கோலைக் கொளுத்தியத் தீயில் மேற்கண்டப் பொருள்களை வாட்டிச் சாறு எடுப்பது வழக்கம்.

இதன் வைக்கோல் சித்த மருத்துவத்தில் உபயோகப்படுகின்றது. இதற்குத் தர்பைப்புல் போன்று ஈர்ப்பு சக்தியுண்டு.

* * *

## வல்லாரை

**(யோசனவல்லி, சரஸ்வதி மூலிகை)**

## Hydrocotyle asiatica

**(N.O. Umbelliferae)**

*Habit* : *Herb*

*Parts used* : *The whole plant, leaves, fruits, roots, twigs. seeds etc. Roots are the most active part of the plant.*

*Constituents* : *An oleaginous white crystalline substance 'Vellarin' is the active principle of the leavese, resin, and some fatty aromatic body, gum, sugar, tannin, albuminous matter, salts mostly alkaline sulphates. Vellarin has the odour and bitter taste of the fresh plant*

*Action* · *Alterative, Tonic, Diuretic, and local Stimulant, Especialy of the cutaneous system and a bitter substitute. It also has an Emmenagogue action.*

Uses : This herb is found on the banks of river or lakes. If it is consumed in recommended quantity it cures many diseases, but if it is consumed in large quantity it produces giddiness. It cures stomatitis, diarrhoea, stomach ache etc. This also cures the cough due to tuberculosis. Filariasis, and inflammation of the testicles venereal ulcers, wounds abcesses, boils and inflammation also could be cured. Ammenorrhoea could be treated with this. The leaves along with basil leaves and pepper if consumed regularly it cures all types of fevers. Skin diseases of the children and nerve,

debility could be cured. Venereal diseases of the adults, could be treated with this by mixing cow's milk and liquorice along with the leaf juice of the plant. Paste of the leaves with black cumin and ghee is applied externally to cure boils. Infusion of the leaves with fenugreek is given to children to cure intestinal disorders. If leaf powder is taken regularly it cures skin ailments. Leaf powder mixed with cow's milk if consumed daily, it improves the memory power. If sweet flag, myrobalan, adathoda, long pepper and honey is added with the plant and made into an infusion, it cures cough due to tuberculosis and strengthens the nerves. Filariasis and inflammation of the testicles could be reduced with this. If this is added along with daily vegetable, it helps the growth of the hair.

யோசனவல்லி, இப்பூண்டு பல நீர் நிலைகளுக்கருகாமையிலும், தோட்டங்களிலும் பயிராகும். இது சிறந்த பூண்டு வகைகளுள் ஒன்று. இதை அளவுடன் வழங்க, பெரும் பயனை அளிக்கும். அளவிற்கு மிஞ்சினால், தலைச் சுற்றல், தலைவலி இவைகளை உண்டாக்கும்.

இது வாய்ப்புண், கழிச்சல், குருதிக் கழிச்சலால் பிறக்கும் வயிற்றுக் கடுப்பு ஆகியவை நீக்கும். மேலும் இளைப்பு நோயிலுண்டாகும் தொண்டைக் கம்மல், வெறி, யானைக் கால், விரை வீக்கம், கட்டி, மேகப்புண், காயம், புடை, கண்ட மாலை, மார்பாணி, சூதகக் கட்டு முதலிய நோய்கள் போக்கும்.

எல்லாச் சுரங்களுக்கும் இதன் இலை, துளசியிலை, மிளகு இவைகளை ஓர் அளவாக எடுத்துரைத்து, சிறிதளவு, காலை, மாலை இரு வேளை கொடுத்து வர, அவைகள் தணியும்.

குழந்தைகளுக்குண்டாகும் படைகள், குருதிக்கேடு, நரம்பு நோய்கள் முதலியவைகளுக்கும், முதிர்ந்த வயதுடையோர்களுக்குண்டாகும் மேகம், வயிற்று நோய், சுரம் முதலியவைகளுக்கும், இலைச்சாறும் பசுவின் பாலும், அதிமதுரத்தூளும் சேர்த்துக் கலந்துக் கொடுத்து வர, மிகுந்த பலன் தரும்.

குருதிக் கொதிப்பாலுண்டாகும் கொப்புளங்களைப் போக்க, இலைச் சுரத்துடன் கருஞ்சீரகம், நெய் சேர்த்துரைத்துப் பூசி வரலாம்.

இலையுடன் வெந்தயமும் சேர்த்துக் குடிநீரிட்டு 1 அல்லது 2 சங்கு குழந்தைகளுக்குப் புகட்ட, சுரம், வயிற்றுக் கோளாறுகள் போகும்.

நெறிகட்டி, மேகம் முதலிய நோய்களுக்கும், அவைகளினா லுண்டாகும் புண்களுக்கும் இலைப் பொடி சிறிதளவு, தினம் மும்முறைக் கொடுத்தும், பொடியில் சிறிதெடுத்துப் புண்கள் மீது தூவியும், அல்லது பச்சை இலையை அரைத்துக் கட்டியும் வர, புண்கள் எளிதில் ஆறும். பொடியில் சிறிதளவு எடுத்து பசும் பாலில் கலந்துக் கொடுத்து வர, ஞாபக சக்தி உண்டாகும். மூளையும் பலப்படும். மனநோய் குணமாகும்.

இப்பூண்டு, வசம்பு, கடுக்காய், ஆடாதோடா, திப்பிலி, தேன் இவைகளை ஓரெடை எடுத்து முறைப்படி குடிநீர் செய்து, தினம் இரு வேளைக் கொடுத்து வர, இளைப்பு நோயினாலுண் டாகும் தொண்டைக் கம்மல் நீங்கும். நரம்புகள் வலிமை பெருகும். யானைக் கால், விரை வாத வீக்கம் குறையும். இதனால் தலைமுடி நன்கு வளரும்.

* * *

## வள்ளிக்கிழங்கு
### (சிறுவள்ளிக் கிழங்கு)

## Dioscorea aculeata
### (N. O. Dioscoreaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and tuber*

*Constituents* : *Albuminoids and carbohydrates*

*Action* : *Leaves are Vermifuge. Tuber is Refrigerant, Nutritive, Anthelmintic, Scorbutic and Pyretic.*

Uses : If this root tuber is consumed in large quantity produces indigestion, eczema, fistula etc. This acts as an anthelmintic. Infusion of the leaves expels the intestinal worms. The extract of the plant is mixed wit h many other herbs and it is used as a paste externally for leprosy.

சிறு வள்ளிக்கிழங்கினால், மந்தம், கரப்பான், ஐயப் பெருக்கு, முளை மூலம் ஆகியவை உண்டாகும். பசித்தீக்கெடும். இது வயிற்றுப் புழுக்களைக் கொல்லும். இதன் இலையைக் குடி நீரிட்டுக் கொடுக்க, வயிற்றுப் புழுக்கள் விழும். இதன் சாற்றை வேறு துணை மருந்துகளுடன் சேர்த்துக் காய்ச்சி, பெரு நோய்

புண்களுக்குத் தடவலாம். ஆனால் கிழங்கைச் சமைத்துண்ண மந்த முண்டாகும்.

* * *

## வள்ளி

### (செவ்வள்ளி)

## Dioscorea purpurea

### (N. O. Dioscoreaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Tubers*

*Constituents* : *Rich in carbohydrates*

*Action* : *Similar to D. aculeata.*

Uses : This helps to treat leprosy, herpes, piles, boils etc. If it is used as an infusion and used to wash the ulcers, it cures leprosy. This is employed in the medicines as a major ingredient which is used to treat piles and eczema.

சிறுவள்ளிக் கொடியின் குணங்களே செவ்வள்ளிக் கொடிக்கும் பொருந்தும். இருந்தாலும் இதற்கு பெரு நோய் (குறை நோய்), கருவன், குடலண்டம், மூலம், நகம் குதிக்கால்களைப் பற்றியக் கொப்புளம் தீரும். இதைக் குடிநீரிட்டு உட்கொண்டும் பெரு நோய் களைக் கழுவியும்வர, நோய்கள் தணியும். மேலும் இது கரப்பான், மூலம் இவைகட்குச் செய்யப்படும், பொடி, இலேகியம் முதலிய மருந்துகளிலும், முடிவளர்த் தைலங்களிலும் சேரும்.

* * *

## வள்ளி

### (சர்க்கரை வள்ளி)

## Ipomoea batatas

### (N. O. Convolvulaceae)

*Habit* : *Creeper*

*Parts used* : *Adventitious root tubers*

*Constituents* : *Sweet potatoes contain a good ideal of starch and (sugar saccharine). Albuminoids, soluble carbohydrates, woody fibre and ash*

*Action* : *As it is very fiberous it is apt to fermanen easily and prooke flatulance, but it is Aperient.*

Uses : This tuber is sweet in taste. There are two varieties in this. If it is consumed in large quantity, it reduces the effect of other medicines. It cures piles, fistula and flatulence. Leaves or tender plants are used externally on the sight of the scorpion sting to reduce the pain.

சர்க்கரைவள்ளி எங்கும் பயிராகின்ற கொடி. இதன் கிழங்கு மிகவும் தித்திப்பானது. இதில் வெண்மை, சிவப்பு என இருவகையுண்டு.

இது மருந்தின் வன்மையைக் குறைக்கும். மூல முளையையும், குடலிரைச்சலையும், வயிற்றுக் கடுப்பையும் விளைவிக்கும்.

இலையை அல்லது கொழுந்தையரைத்துப் பூசினால், தேள் கடியினாலுண்டாகும் வலியைக் குறைக்கும். கிழங்கை வேகவைத்துச் சாப்பிடலாம், ஆனால் இது மந்தபதார்த்தமாகும். இதன் வேரும் தேள் கடி விஷத்தை இறக்கும்.

* * *

## வள்ளி

(மரவல்லி, ஆல்வள்ளி)

## Manihot utilissima

**(N. O. Euphorbiaceae)**

*Habit* : *Sub shrub*

*Parts used* : *Root tuber*

*Constitueuts* : *Tuber contains cyanogenetic glucose*

*Action* : *Juice of the fresh tuber is Poisonous. Cooked tuber is Nutritive and rich in Carbohydrates.*

Uses : This plant accumulates starch in its roots. Well boiled tuber are very nutritious. It is found in tropical places. Sugar and rava is made from this. Sago is made out

of this. Boiled tuber added with jaggery or sugar along with cocoanut if consumed, it reduces the body temperature and strengthen the body. If consumed in very large quantity regularly it produces rheumatism, eczema etc.

மரவள்ளிக் கிழங்குச் செடிகள் மாவுச்சத்தை வேர்களில் சேர்த்து வைக்கின்றன. நன்கு வெந்த கிழங்கே உண்ண உகந்தது. வெப்ப பிரதேசங்களில் இது அதிகமாக பயிராகின்றது. இதிலிருந்து சர்க்கரையும், ரவையும் தயாரிக்கப்படுகின்றது. இதிலிருந்து பிரித்தெடுக்கப்படும் மாவிலிருந்து சவ்வரிசி செய்யப்படுகிறது. மரவள்ளிக்கிழங்கை வேகவைத்து வெல்லம் அல்லது சர்க்கரை சேர்த்து தேங்காய் போட்டு சாப்பிட உடலை உரமாக்கும். உடல் உஷ்ணம் தணிக்கும். மிக அதிக அளவில் தொடர்ந்து உட்கொள்ள வாதம், புண்-ரணம் வரும். இக்கிழங்கின் மாவிலிருந்து உயர்வகை ஸ்டார்ச் தயாரிக்கப்படுகிறது. அப்படி தயாரிக்கும்போது கிடைக்கும் கழிவுகள் கால்நடைத் தீவனமாகப் பயனாகிறது.

* * *

## வள்ளி

**(உடற்கொடி, ஊதளைக் கொடி)**

**See : Ichnocarpus frutescens**

**பார்க்க : பால்வள்ளி**

* * *

## வள்ளி

**(காய்வள்ளி, வெற்றிலை வள்ளி)**

### Dioscorea bulbifera

**(N. O. Dioscoreaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and tuber*

*Constituents* : *Plant contains a poisonous glucoside*

*Action* : *Astringent, Febrifuge and Cooling.*

Uses : This tuber gives strength. This is yellowish in colour and similar to potato. Dropsy could be cured with this,

but it increases the intestinal gas. Powder of this tuber is used externally on the ulcers. This powder is made into a paste with cumin and added with milk and sugar. If this mixture is consumed regularly it cures syphilis, piles and dysentery. This mixture if given along with butter, it stops diarrhoea.

வெற்றிலை வள்ளிக்கிழங்கினால் உடல் உரமாகும். இது மஞ்சள் நிறமுடையது. உருளைக்கிழங்கைப் போன்றிருக்கும். இக்கிழங்கினால் பாண்டு ரோகம் குணமாகும். ஆனால் வாயுக் கோளாறுகளை சற்று அதிகப்படுத்தும். இதை காயவைத்து பொடித்து புண்களுக்குப் போட அவை குணமாகும். இப்பொடியுடன் பால், சர்க்கரை, சீரகம் சேர்த்துக் கொடுக்க கிரந்தி, மூலம், சீதபேதி ஆகியவற்றை குணப்படுத்தும். கஞ்சியை வெண்ணெயுடன் கொடுக்க பேதி நிற்கும்.

* * *

## வள்ளி
(முசிலம் வள்ளி)

## Dioscorea esculenta
**(N. O. Dioscoreaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Tuber*

Uses : Paste of this tuber is used externally on ulcers.

முசிலம்வள்ளிக் கிழங்கை அரைத்து சாப்பிட வீக்கம் வடியும்.

* * *

## வள்ளி
(கலகை வள்ளி)

## Mucuna gigantea
**(N. O. Papilionaceae)**

*Habit* : *Climber*

*Parts used* : *Bark*

*Action* : *Bark is Anti-rheumatic.*

Uses : Bark of this plant cures rheumatism. The paste of this bark with dried ginger is used as an external application for joint pain. The shell of the fruit is poisonous.

கலைகைவள்ளியின் பட்டை வாத நோய்களைப் போக்கும். இதை அரைத்து, சுக்குத்தூளுடன் சேர்த்து வாதவலியுள்ள இடங்களில் நன்கு தேய்க்க வலி மறையும். காயின் ஓடு விஷத்தன்மை உடையது.

* * *

## வள்ளி

**(வேனில வள்ளி, கவளக்கொடி)**

## Dioscorea oppositifolia

**(N. O. Dioscoreaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Root*

*Action* : *Antidote to snake bite and scorpion sting.*

Uses : The root is used to reduce the inflammation and oedema caused by snake bite and scorpion sting.

வேனில வள்ளி, இதன் வேர் பாம்புக்கடி, தேள்கடியினால் உண்டான வீக்கத்தைக் குறைக்கும்.

* * *

## வனமுகலி

## Spilanthes oleracea

**(N. O. Compositae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Flower heads*

*Constituents* : *Spilemthol*

*Action* : *Flower heads are Stimulant, Sialagogue, Vermifuge, Emollient and Deobstruent.*

Uses : Flower of this plant is of medicinal use. If this flower is chewed raw it relieves tooth ache. It cures headache and itching of the tongue due to paralysis. Stammering also could be cured if it is consumed regularly. It cures gingivitis.

வனமுகலிச்செடியின் பூக்கள் மருத்துவ பயனுடையது. பூக்களை மென்று தின்ன பல்வலி குறையும். மேலும் தலைவலி, பாரிச வாயுவினால் நாக்கு இழுத்துக் கொள்ளுதல் முதலியவை குணமாகும். திக்குவாயுடைய குழந்தைகளை தினமும் இதனை மெல்ல வைக்க குணமாகும் என கூறப்படுகிறது. மேலும் இதனால் ஈறு வீக்கம் குணப்படும்.

* * *

## வன்னி மரம்
## Prosopis spicigera
### (N. O. Mimosaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, bark and fruit*

*Constituents* : *Pulp of the pod contains carobin, carotone and carobic acid*

*Action* : *Demulcent, Stimulant, Emmenagogue, Anti-rheumatic and Emollient.*

Uses : The leaves of this plant is similar to tamarind leaves. Leaves and bark is widely used in tannery. Leaf juice cures flatulance in uterus, rheumatism, phlegmatic disorders and bilious disorders. Bark decoction acts as tonic. Juice of the bark is used to calcinate salt. This salt is useful in curing indigestion, diarrhoea etc. If bark ash is used on skin it gives lusture to the skin. Leaves, fruit and bark is made into a powder and mixed with honey. This mixture is an antidote for snake bites.

வன்னிமரத்தின் இலை புளியம் இலைப் போன்று மிகவும் சிறியது. இம்மரத்தின் காய், இலை, பட்டை ஆகியவை மிகவும் மருத்துவப்பயனுடையன. இலையும், பட்டையும் தோல் பதனிடுவதில் பயன்படுத்தப்படுகிறது. இலைச்சாறு

சூதகவாயு கோளாறுகள், வாதம், சன்னி, திரிதோஷம் ஆகிய வற்றில் குணம் தரும். பட்டை கஷாயம் உடலுக்கு வலிமை தரும். இதன் சாற்றினால் உப்பு பஸ்பமாகும். இவ்வுப்பு அசீரணம், அசீரண பேதி, மந்தம் இவற்றை குணப்படுத்தும் கட்டை சாம்பலை உப யோகிக்க சரும மினுமினுப்பு தருவதுடன் ரோமங்களை அழிக்கும். வன்னிமரத்தின் இலை, காய், பட்டை ஆகியவற்றை உலர்த்தி பொடித்து தேனில் குழைத்துக் கொடுக்க பாம்புக்கடி விஷம் முறியும்.

* * *

## வாகை

## Ablizzia lebbeck

### (N. O. Mimosaceae)

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Tree* |
| *Parts used* | : | *Leaves, flowers, root, bark and gum* |
| *Constituents* | : | *Saponin* |
| *Action* | : | *Restorative, Astringent, Tonic, Antidote, Vulnerary, Antiscorbutic, Alexipharmic, Anti-rheumatic and Syphylitic.* |

Uses : Leaves, flowers, root, bark, gum are used in medicinal preparations. This is commonly used to treat snake bite, ulcer, pruritis due to rheumatism. It cures fever, thirsty-ness and stomatitis. The flower is also an antidote for snake venom. It cures rheumatism, oedema also. If stem of the bottle-guard, Hygrophila spinosa and Cyperus rotundus are mixed with the bark of this tree and made into an infusion, it cures oedema if consumed 100 ml every day. Gingelly oil. tamarind and mustard to be avoided during this medication, The gum of this tree cures gonorrhoea, ulcers, abcesses if used externally. Paste of the leaves are used externally on the eyes tocure the eye diseases. Paste of the flower is used externally on abscesses, oedema and allergy. Powdered bark if taken internally it cures bleeding piles, diarrhoea, gonorrhoea, fever and thirstyness. Powdered root bark is used as tooth powder. Seed powder is used to reduce the inflammed lymphatic glands. Soaked seeds in water is used to treat eye diseases. Inner bark

of the plant is used to treat cough. If gum is consumed 2 gms per day it cures blindness, tooth ache, piles, rheumatism, syphilis etc.

வாகை மரத்தின் இலை, பூ, பட்டை, வேர்ப்பட்டை, விதை, பிசின் ஆகிய அனைத்தும் மருத்துவப்பயனுடையவை. இவை அனைத்தும் பொதுவாக பாம்புக்கடி விஷம், அழல் புண்கள், வாதச் சொறி, சுரம், நீர்வேட்கை, வாய்புண் ஆகியவற்றிற்கான மருந்துகளில் பயன்படுத்தப்படுகிறது. வாகைப் பூவினால் பாம்பு விஷம் இறங்கும். வாத நோய், வீக்கம் குணப்படும். இம்மரப்பட்டையுடன் சுரைத் தண்டு, நீர்முள்ளித் தண்டு, கோரைத் தண்டு இவற்றை சம அளவு எடுத்து குடிநீர் செய்து தினம் காலையும் மாலையும் 100 மிலி அளவு சாப்பிட உடல் வீக்கம் வாடும். இம் மருந்து சாப்பிடும் வரை நல்லெண்ணெய், புளி, கடுகு சேர்க்கக் கூடாது. வாகைப்பிசின், வெள்ளை, மேகக்கட்டி ஆகியவற்றிற்கு மேற் பூச்சு மருந்தாகப் பயன்படுத்தப்படுகிறது. இலையை அரைத்து கண்ணோய்களுக்கு கண்களின் மீது தடவி வர குணமாகும். பூவை அரைத்து கட்டிகள், வீக்கம், தடிப்பு இவற்றிற்கு பற்றுப் போட குணமாகும். பட்டைபொடி குருதி மூலம், பெருங்கழிச்சல், வெள்ளை, சுரம், நீர் வேட்கை போக்கும். வேர்ப்பட்டை பொடியினால் பல் துலக்க பல்லீறுப்புண் நீங்கும். விதைப் பொடியை உட்கொள்ள நெறிகட்டிகள் அமுங்கும். விதையை நீரில் உரைத்து கண்ணிலிட கண்ணோய்களை குணப்படுத்தும். வாகை மரத்தின் உள்பட்டையை உபயோகிக்க இருமல் குணமாகும். பிசினை தினமும் 2 கிராம் அளவில் உட்கொள்ள கண்மங்கல், பல்வலி, மூலம், வாதம் கிரந்தி இவற்றை நீக்கும். மேலும் அழகு தரும்.

* * *

## வாகை
### (கரு வாகை)

## Albizzia odaratissimus
### (N. O. Mimosaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, flowers, root, bark and gum*

*Constituents* : *Saponin*

*Action* : *Similar to A. lebbeck.*

Uses : Wood and root bark is an ideal medicine for chronic rheumatism. Ulcers body temperature and tuberculosis also could be cured.

கருவாகை மரத்தின் கட்டையும், வேர்ப்பட்டையும் மருத்துவ பயனுடையது. இதனால் கடுமையான வாதரோகங்கள் குணப்படும். மேலும் இது புண், வெப்பம், வளிக்குற்றப்பெருக்கு, சிறுபுழுக்கள், எலும்புருக்கி நோய் ஆகியவற்றை குணப்படுத்தக் கூடியது.

* * *

## வாகை

### (பெரும் வாகை)

## Croxylon indicum

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, tender fruit, leaves and root*

*Constituents* : *Croxylin*

*Action* : *Astringent, Diaphoretic, Antiseptic, Tonic and Anti-rheumatic.*

Uses : It is used to treat acute rheumatism. Bark infusion stops diarrhoea. Tender fruit cures flatulancy and it acts as an appetizer. Root is used to cure dropsy. The leaves gives lustre to skin.

பெரும்வாகை கடுமையான வாத நோய்களை குணப்படுத்த வல்லது. பெருவாகை மரத்தின் வேர்ப்பட்டை, பட்டை, பிஞ்சு, இலை ஆகியவை மருத்துவப் பயனுடையவை. வேர்ப்பட்டை கஷாயத்தை உட்கொள்ள பேதி நிற்கும். பட்டைக் குடிநீர் வாத கோபத்தை தணிக்கும். இதன் பிஞ்சு வயிற்றுப் பொருமலை குணப்படுத்துவதுடன் பசியையுண்டாக்கும். வேர் பாண்டுவைப் போக்கும். இதன் இலை சருமத்தை மென்மையாக்கும்.

* * *

## வாசனைப் புல்

**See : Andropocitratusgon**

பார்க்க : எலுமிச்சம் புல்

* * *

## வாதநாராயணன்

### Delonix elata
**(N. O. Leguminosae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves*

*Action* : *Febrifuge, Antiperiodic, Antirheumatic and Stimulant.*

Uses : This is found in tropical places. Leaves roasted in castor oil is used externally to cure abscesses. Decoction of the leaves with castor oil if consumed in empty stomach it helps to clean the intestine along with diarrhoea. It cures rheumatism. The hot decoction is used externally to reduce the pain and inflammation of the joints. To cure paralysis this process to be continued for several days.

வாதநாராயணன் வெப்ப நாடுகளில் அதிகம் வளரும். இம்மரத்தின் இலை பல மருத்துவப் பயன்களையுடையது. இதன் இலையை சிற்றாமணக்கு எண்ணெயில் வதக்கி வீக்கங்கள், கட்டிகள் மீது கட்ட குணமாகும். இலைக்கஷாயத்துடன், சிற்றாமணக்கு எண்ணெய் சேர்த்து காலையில் வெறும்வயிற்றில் அருந்த பேதியுடன் உடம்பின் துர்நீர் வெளியேறும். வாதகுற்றங்கள் தன்னிலைப்படும். வாதப்பிடிப்பு வாய்வுப்பிடிப்பு உள்ள இடங்களில் இதன் கஷாயத்தை விட்டுக் கழுவ குணமாகும். பாரிசவாயு குணமாக இதையே பல நாட்களுக்கு தொடர்ந்து பயன்படுத்த வேண்டும்.

* * *

## வாதமடக்கி

**See : Clerodendron phlomoides**

**பார்க்க : தழுதாழை**

* * *

## வாதாம் கொட்டை

**See : Amygdalus communis**

**பார்க்க : பாதாம்**

* * *

# வாயு விளங்கம்

**(வாய்விளங்கம், வீழலரிசி)**

## Embelia ribes

**(N. O. Myrsinaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Berries, fruit, leaves and root-bark*

*Constituents* : *Embelic acid, a volatile and fixed oil, odouring matter, tannin, a resinoid body and an alkaloid called christembine. Crystalline compounds of emblic acid with soda, potash and ammonia are obtained.*

*Action* : *Fruits or berries (seeds) are Carminative, Anthelmintic, Stimulant, and Alterative. Pulp is Purgative, Anthelmintic, Astringent, Carminative, Antipyretic, Stomachic, Stimulant, and Anti-rheumatic. Fresh juice is Cooling, Diuretic and Laxative.*

Uses : Fruit is very aromatic and sweet which exhibits many medicinal properties. Dropsy, dyspepsia, obesity, gas problem, snake venom could be treated with this. The powder of the seed is used to expel the intestinal worms. Powder of the seed if given to children in a dose of 2 to 4 gm it cures flatulence and stomach ache. This cures rheumatism. If seed powder mixed with butter is used on the head it cures head ache. The paste of the seed is used externally to reduce the poison of scorpion sting and inflammation. This is used in all vermicidal medicines.

வாயுவிளங்கம் கொடியின் பழம் நறுமணமுடையது. சுவையுடையது, இது பல மருத்துவப் பயன்களையுடையது. இதனால் பாண்டு, குன்மம், மிகுபரும நோய், வாயு, பாம்பு நஞ்சு, தலை, மூக்கு, வயிறு நோய்கள் முதலியவற்றை குணமாக்கும். விதையை பொடித்து உட்கொள்ள வயிற்றுப் புழுக்களும், எருவாய்ப் புழுக்களும் செத்து மலத்துடன் வெளியேறும். விதை பொடியை 2-4கிராம் அளவில் எடுத்து சிறுவர்களுக்குக் கொடுக்க, வயிற்றுப் பொருமல், செரியாமையால் காணும் வயிற்றுவலி நீங்கும். வாயு விளங்கம் வாதக்குற்றங்களை தன்னிலைப் படுத்துவதுடன் இரசம், வங்கம்

இவற்றைக் கட்டும். விதைப்பொடியை வெண்ணெயிற் குழைத்துத் தடவ தலைவலி நீங்கும். விதையை நீரில் அரைத்துப் பற்றிட தேள் கடி நஞ்சும், புடையும் நீங்கும். இது புழுக்களைப் போக்கும் எல்லா மருந்துகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

* * *

## வாலுளுவை
### (அதிபரிச்சம்)

## Celastrus paniculatus
### (N. O. Celastraceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Seeds, leaves and oil*

*Constituents* : *Seeds contain an oil, a bitter resionus principle, tannin, ash, alkaloid, glucoside and colouring matter.*

*Action* : *Oil is Rubefacient, Seeds and Oil are Stimulant, Intellect and sharpen memory.*

Uses : Leaves and seeds are of medicinal use. This stops stomachache.Bloodystools and cough could be treated with this. It reduces the pain in paralysis. Seeds are used to treat beribery. It is also used to treat leprosy, chronic ulcers and cancers. The ghee made out of seeds improves memory. Bloody stools and constipation also could be cured with this. It clears the voice. Seed powder if consumed twice daily in a dose of 2 gms it stops stomach ache and bloody stool. Menorrhagia and cough also could be treated. If this powder is taken along with milk it acts as tonic.

வாலுளுவைக் கொடியின் இலை, விதை, நெய் மருத்துவப் பயனுடையது. இதனால் வயிற்றுக் கடுப்பு, கடுப்புடன் கூடிய குருதிக் கழிச்சல், இருமல், அனல் தீரும். மேலும் இது பாரிச வாயு, கீல் வாயுவில் உண்டாகும் வலி ஆகியவை குணப்படுத்தும். இதன் விதையினால் பெர்பெரி நோய் குணப்படுவதுடன் பாரிச வாயு, குஷ்டம், புற்று நோய், நாட்பட்ட ரணம் ஆகியவை குணப்படும். விதை நெய் ஞாபக சக்தியை வளர்க்கும். ரத்த பேதி, மலக் கட்டு ஆகியவற்றை தீர்க்கும். குரல் வலிமை தரும்.

விதைப் பொடியை தினமும் 3 முறை 2 கிராம் அளவில் கொடுக்க இருமல், கடுப்புடன் கூடிய குருதிக் கழிச்சல், வயிற்றுக் கடுப்பு, பெரும்பாடு தீரும்.

இப்பொடியை பாலில் கலந்து கொடுக்க உடலுக்கு பலமுண் டாகும்.

* * *

## வாலேந்திர போளம்

**See : Balsamodendron myrrha**

**பார்க்க : போளம்**

* * *

## வாழை

**(கதலி)**

## Musa sapientum

**(N. O. Musaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruits, leaves and stems*

*Constituents* : *Plants contain dry matter. Growing part of the plant contain much tannic and gallic acids. Sound ripe fruit contains sugar. Besides sugar it contains starchy albuminoids, fats and ash containing phosphoric anhydride, lime, alkalies, iron and chlorine.*

*Action* : *Ripe plant is Emollient, Demulcent and Nutrient. Unripe one is Cooling and Astringent and in the dried state it is Antiscorbutic. Fully ripe fruit is Laxative. Flowers are Astringent. Root is Antibilious and Anthelmintic and Alterative. Juice of the plant is Styptic.*

Uses : All parts of this plants are useful in medicinal preparations. There are many varieties. The inner stem, inflorescence, fruit, ripened or unripened are used in

cooking. It exhibits medicinal preperties. Flower if cooked and taken regularly cures fistula, gonorreoea, fever, dysentery, piles, cough, burning sensations etc. Juice of the flower with palmsugar if taken internally it cures gonorrhoea, stomach ache, menorrhagia etc. 100 ml juice of flower and one teaspoon honey and cow's ghee is mixed together. If this mixture is consumed for 40 days it cures asthma. If the flower is used for cooking it reduces diabetes. Terminal buds if consumed regularly it cures piles. Tender fruit if consumed regularly it cures bleeding piles, intestinal ulcers, dyspepsia, frequent urination etc. Raw fruit cooked with pulses generates pure blood and gives strength. If one fruit is consumed after the night food every day it prevents skin diseases, night blindness, iufections diseases etc. If red variety of this fruit is consumed every day it cures tooth problem. If red variety of the fruit along with honey is taken every day it cures infertility. The juice of stem if taken regularly (10 ml) every day morning and evening it dissolves the kidney stones and prevents further formation. The juice of the stem along with Leucas aspera juice is used as an antidote for snake bites. Juice of the rhizome acts as diuretic and cures urinary disoders. Juice of the rhizome is used to purify potassium nitrate. Mashed stem is used externally for inflammations.

தென்னை, பனை மரம் போன்று வாழை மரத்தின் எல்லா பாகங்களும் பயனுடையவை. வாழையில் மலைவாழை, பூவன்வாழை, மொந்தன் வாழை, நாட்டு வாழை, சர்க்கரை வாழை, ரஸ்த்தாளி, பச்சை வாழை, செவ்வாழை, நவரை வாழை, அடுக்கு வாழை என பலவகை உண்டு. வாழை மரத்தின் நடுத் தண்டு, வாழைப் பூ, வாழைக்காய், வாழைப்பழம் ஆகியவை சமையலில் பயன்படுத்தப் படுகிறது.

வாழைப் பூவை தொடர்ந்து சமைத்துண்ண குருதி முளை, வெள்ளை, உடல் கொதிப்பு, சீதக் கழிச்சல், எருவாய்க் கடுப்பு, இருமல், கை கால் எரிச்சல் நீங்கும். இப்பூச்சாற்றுடன் பனங்கற்கண்டு சேர்த்து உட்கொள்ள குருதி வெள்ளை, வெள்ளை, வயிற்றுக்கடுப்பு பெரும்பாடு நீங்கும். 100 மிலி அளவு வாழைப் பூச்சாற்றுடன் ஒரு தேக்கரண்டி தேனும், பசுவின் நெய்யும் சேர்த்து தினம் காலையும் மாலையும் 40 நாட்கள் கொடுக்க காச நோய் குணமாகும். வாழைப்

பூவை தினமும் சமையலில் சேர்க்க அதி மூத்திரம், நீரில் சர்க்கரை முதலியவை கட்டுப்படும்.

வாழை மரத்தின் இளங்குருத்தை பொடியாக நறுக்கி கூட்டு செய்து சாப்பிட மூல நோயினால் உண்டாகும் ஆசனக்கடுப்பு தீரும்.

வாழைப் பிஞ்சை மோர் வற்றல் செய்து சாப்பிட இரத்த மூலம், வயிற்றுப் புண், குன்மம், சிறுநீரிழிதல் ஆகியவை போகும்.

முற்றின வாழைக்காயை பருப்பு சேர்த்து சமைத்து உட்கொள்ள சுத்த இரத்தம் உற்பத்தியாவதுடன் உடல் பலம் பெறும்.

இரவு ஆகாரத்திற்குப் பின் தினம் ஒரு வாழைப் பழம் சாப்பிட சரும நோய்கள் யாவும் தீரும். மாலைக்கண் நோய், ஆண்மை குறைவு, தொற்று நோய்கள் இவற்றை தவிர்க்கும். செவ்வாழைப் பழத்தை தினம் உட்கொள்ள பல் கோளாறுகள் நீங்கும். தினசரி இரவு உணவருந்திய பின் செவ்வாழைப் பழத்துடன் தேன் சேர்த்துச் சாப்பிட ஆண் பெண் மலட்டுத் தன்மையைப் போக்கி கர்ப்பம் தரிக்கச் செய்யும்.

வாழைத் தண்டுச் சாற்றை காலையும், மாலையும் 100 மிலி அளவு தொடர்ந்து உட்கொள்ள கல்கரைவதுடன் பின்பு நீரடைப்பே வராது. நீரடைப்பை வரும்முன் தவிர்க்க வாழைத்தண்டை அடிக்கடி உணவில் சேர்ப்பது நலம்.

வாழை மரப்பட்டையிலிருந்து நார் எடுத்து பூக்கட்டுவர். பாம்புவிஷம் முறிய இதன் சாற்றுடன் தும்பையிலைச்சாறு சேர்த்து அருந்த உடன் விஷத்தினால் ஏற்பட்ட மயக்கம் தெளிவதுடன் விஷம் இறங்கிவிடும்.

இம்மரத்தின் தண்டுக்கிழங்கின் ரசம் மூத்திரத்தைப் பெருக்கும். நீர்தாரை சம்பந்தப்பட்ட நோய்களை குணப்படுத்தும். இக்கிழங்குச் சாற்றினால் வெடியுப்பை சுத்தம் செய்வர். இதன் சக்கையை வீக்கத்திற்கு வைத்துக்கட்ட வீக்கம் குறையும்.

* * *

## வாரை

**(கல் வாழை)**

**See : Canna indica**

* * *

## வாழை
(கானான் வாழை)

See : Cammelina bengalensis

* * *

## வாழை
(விசிறி வாழை)

### Ravenula madagascarensis
(N. O. Musaceae)

*Habit* : *Tree*

Uses : This is mainly used as an ornamental plant in the garden.

விசிறி வாழை பெரும்பாலும் அழகுக்காகவே தோட்டங்களில் வளர்க்கப்படுகின்றது.

* * *

## விடதாரி
(விடதாரை, விடத்தேர், மயிலாண்டம்)

### Mimosa cinerea
(N. O. Mimosaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Gum and the whole plant*

*Action* : *Astringent, Stimulant, Tonic, Demulcent, Anti-scorbutic, Styptic and Antidysenteric.*

Uses : Ash of this plant and gum is commonly used in many medicinal preparations. Fistula, diarrhoea accompanied by stomach ache and bloody stool could be cured with this. Gum of this plant if consumed (2 gm-4 gm) twice daily it cures gonorrhoea, gleet and eczema. Tender leaf juice is used as eye drops to cure eye diseases. Bark powder if consumed it cures piles and bloody stools.

விடதாரிச் செடியின் சமூலம், பிசின் பல மருந்துகளில் பயன் படுகிறது. இதனால் முளைமூலம், வயிற்று வலியுடன் கூடிய பெருங் கழிச்சல், குருதிக்கழிச்சல் தீரும். இதன் பிசினை 2முதல் 4கிராம் வரை தினம் இருவேளை உட்கொள்ள வெள்ளை, வெட்டை, கரப்பான் போகும். இலைக் கொழுந்து சாற்றை கண்களில் பிழிய கண்நோய் தணியும். பட்டைத் தூளை உள்ளுக்குக் கொடுக்க மூலமும், குருதிக்கழிச்சலும் தீரும். பட்டை காயச்சித்தி மருந்துகளில் சேரும்.

* * *

## விளாரி

**(விராலி, நாய் கடம்பு)**

## Dodonaea viscosa

**(N. O. Sapindaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Constituents* : *Leaves contain acid-resins, gum, albumen, tannin ash and alkaloid saponin. In two resins one is insoluble in ether, both are soluble in chloroform alcohol, liquid ammonia and in fixed alkalies.*

*Action* : *Alterative, Laxative, Febrifuge, Sudorific and Tonic.*

Uses : Leaves and bark of this herb exhibits medicinal properties. Leaves roasted in castor oil are applied and bandaged to cure inflammation and abcesses. Juice of the leaves binds mercury. This could also be used in the calcination of copper sulphate. The inner barks can be used instead of cinchona bark.

விராலிச்செடியின் இலை, பட்டை ஆகியவை மருத்துவப் பயனுடையன. இதன் இலையை சிற்றாமணக்கு நெய்விட்டு வதக்கி வீக்கங்களுக்கும் கட்டிகளுக்கும் வைத்துக் கட்டிவர குணமாகும். இலைச்சாறு பாதரசத்தை கட்டும். மயில்துத்தத்தை சுண்ணம் செய்யும். இதன் உள்பட்டையை சின்கோனாவுக்கு பதிலாக பயன் படுத்துவர்.

* * *

## விலாமிச்சு வேர்

### (மஞ்சள் வெட்டிவேர்)

## Andropogon muricatus

### (N. O. Gramineae)

*Habit* : *Creeping herb*

*Parts used* : *Fibrous wing roots from the rhizome*

*Constituents* : *A volatile essential oil, resin, colouring matter, a free acid, a salt of lime, oxide of iron and woody matters.*

*Action* : *Tonic, Refrigerant, Stomachic, Stimulant, Antispasmodic, Diaphoretic, Diuretic and Emmenagogue.*

Uses : Root of this herb is aromatic. Infusion of the roots cures diabetese, burning of the eyes, thirstyness, hysteria, giddiness, anaemia, head ache and fever. Roots are made into a paste and if rubbed on the skin, cures burning sensation of the body. Oil made by this root if rubbed on the head before having a bath cures giddiness, burning of the eyes and fever.

This is made into a paste and applied regularly to cure breast cancer. Decoction of the root cures rheumatism and biliousness. This also cures jaundice and leprosy.

விலாமிச்சுவேர், இப்பூண்டின் வேருக்கு நறுமணமுண்டு. இதன் குடிநீரை அருந்த நீரிழிவு, கண்ணெரிவு, குருதியழல் நோய், நீர்வேட்கை, வெறி, மயக்கம், சோபை, தலையழல் தீச்சுரம் திரும். இதை அரைத்து உடலில் தேய்க்க உடலெரிச்சல் தீரும். இதன் தைலத்தைத் தேய்த்து தலைமுழுகினால் மேற்கண்ட நோய்கள் தீரும். வெளிப்பூச்சு மருந்தாக இதை அரைத்துப் பயன்படுத்த மார்பு சிலந்தி குணப்படும். இதன் கஷாயத்தினால், வாத-பித்தம் தணியும். காமாலையும், குஷ்டமும் தீரும். இதையே வெட்டிவேர் என்பர்.

* * *

# வில்வம்

**(கூவிளம், சிவத்துருமம், மாலூரம்)**

## Aegle marmelos

**(N. O. Rutaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit (both ripe and unripe), root bark, leaves, rind of the ripe fruits and flowers*

*Constituents* : *The pulp contains mucilage, pectin, sugar tannin, volatile oil and ash. The wood-ash contains potassium and sodium compounds, phosphates of lime and iron, calcium carbonate, magnesium carbonate, silica etc. Leaves yield an oil*

*Action* : *Ripe fruit is Sweet, Aromatic, Cooling, Alterative and Nutritive. Unripe fruit is Astringent, Digestive, Stomachic and little Constipative. Pulp is Stimulant, Antipyretic and Antiscorbutic. Fresh juice is Bitter and Pungent.*

Uses : Leaves, flowers, tender fruit, fruit and root of this tree exhibit medicinal properties. Tender leaves are roasted and applied to cure eye diseases and redness of the eyes. This also cures all kinds of venereal diseases. Flowers give relief in indigestion.

Tender fruits are made into a paste and two grams of it is mixed in buffalo's curd and consumed to cure colic, dyspepsia and dysentery. Fruit is made into a paste in milk and applied on the head before having a bath. This gives relief in internal heat and burning of the eyes. This also refreshes the eyes.

Fruit mixed with ginger and fennel seeds are bruished and made into a decoction to cure piles.

An oil is made from the pulp of the ripened fruit. This is refrigerant. Juice of the fruit checks menorrhagia, diarrhoea and dysentery. Sharbat made out of this fruit reduces body heat and checks diarrhoea.

Infuion of the root along with honey checks vomiting. Infusion of the leaves give relief in colic and flatulency due to venereal diseases. Juice of the leaves mixed with pepper cures anaemia and jaundice. Juice of the leaves along with honey gives relief from cattarrh of the nose and fever.

Roasted leaves are used in the preparation of infusion. 100 ml of this if consumed twice daily for 21 days cures all kinds ot bilious disorders.

வில்வமரத்தின் இலை, பூ, பிஞ்சு, காய், வேர் அனைத்தும் பல மருத்துவப் பண்புடையது. வில்வத்தளிரை வதக்கி சூட்டுடன் கண் இமைகளில் ஒற்றடம் வைக்க கண்வலி, கண்சிவப்பு, அரித்தல் குணமாகும் மேலும் இதனால் எல்லா மேகநோய்களும் குணமாகும். இதன் பூ மந்தத்தை குணப்படுத்தும்.

இதன் பிஞ்சை அரைத்து 6 கிராம் அளவில் எடுத்து எருமை தயிரில் கலந்து கொடுக்க வயிற்றுக்கடுப்பு, குன்மம், சீதக்கழிச்சல் நிற்கும். காயை பசுவின் பால் விட்டரைத்து தலைக்குத் தேய்த்து நீராட மண்டைச் சூடு, கண்ணெரிச்சல் நீங்குவதுடன் கண்கள் குளிர்ச்சி அடையும். காயுடன், இஞ்சி, சோம்பு சேர்த்து நசுக்கி குடிநீரிட்டு வழங்க மூலநோய் நாளடைவில் குணப்படும்.

வில்வப்பழத்திலிருந்து தைலம் காய்ச்சுவர். அது உடலுக்கு குளிர்ச்சி தரும். பழச்சத்தைக் கொடுக்க குருதிப்போக்கு, கழிச்சல், சீதக்கழிச்சல் தீரும். பழச்சத்தைக் கொண்டு செய்யப்பட்ட சர்பத் உடல் சூட்டை தணிப்பதுடன் கழிச்சலை நிறுத்தும்.

வில்வவேர்க் குடிநீருடன் தேன் சேர்த்து அருந்த கொடிய முப்பிணியும் வாந்தியும் தீரும். இலைக் குடிநீர் வயிற்றுக்கடுப்பு, மேகவாயு இவற்றைப் போக்கும். இலைச் சாற்றுடன் மிளகுத்தூள் சேர்த்துக் கொடுக்க சோபை காமாலை தீரும். இலைச்சாற்றுடன் தேன் சேர்த்துக் கொடுக்க மூக்குநீர் பாய்தலும், சுரமும் போகும்.

இலையை வதக்கி அதைப்போட்டு குடிநீர் செய்து 21 நாட்கள் தொடர்ந்து காலையும் மாலையும் 100 மிலி அளவு வழங்க எல்லாவிதமான பித்தரோகங்களும் குணமாகும்.

* * *

# விழுதி

## (மனதுக் குறுந்து)

## Cleome fruticosa

### (N. O. Capparidaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves and root*

*Action* : *Anthelmintic, Emmenagogue, Antiphilogistic, Deobstruent, Purgative, Vermifuge, Anti-rheumatic and Antiscorbutic.*

Uses : Leaves of this plant is edible. This if taken regularly along with food cures eczema, gonorrhoea, abscesses, anorexia and constipation. This also acts as an anthelmintic.

Infusion of the leaves mixed with castor oil and ghee expels the intestinal worms. Leaf juice if consumed expels worms of the rectium.

Leaves are used as an ingredient in oils which are used externally to treat rigidity of joints, inflammation of the joints, arthritis and herpes.

Infusion of the root gives strength to uterus.

விழுதிச் செடியின் இலையும் காயும் மருந்தாகப் பயன் படுகிறது. இதன் இலையை சமைத்து உணவுடன் உண்ண கரப்பான், வெள்ளைநோய், கட்டிகள், பசியின்மை, வயிற்றுப்புழு, மலக்கட்டு இவை தீரும்.

இலைக் குடிநீருடன் ஆமணக்கு நெய் சேர்த்து அருந்த கழிச்சலுடன், வயிற்றுப்புழுக்கள் வெளியேறும். இலைச்சாற்றை அருந்த வாதநீர், பித்தநீர் வெளியாகும். மலக்கிருமிகளையும் வெளியாக்கும்.

கீல்பிடிப்பு, கீல்வீக்கம், வாதம், படர்தாமரை, கரப்பான் இவைகளுக்கான வெளிப்பூச்சுத் தைலங்களில் இதன் இலை பயன்படுத்தப்படுகிறது. காயை வற்றல் செய்து உண்பர்.

வேர்க்குடிநீர் பெண்களின் கருப்பைக்கு பலத்தை அளிக்கும்.

* * *

## விளாமரம்

(கடிப்பாகை, கபித்தம், விளவு, வெள்ளில்)

## Feronia elephantum

(N. O. Rutaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Fruit, gum, leaves, bark and pulp*

*Constituents* : *Pulp contains a large quantity of citric acid, mucilage and ash containing potash, lime and iron. Leaves yield an essential oil.*

*Action* : *Fruit is Aromatic, Acid, Antiscorbutic Astringent and Refrigerant. Gum is Demulcent. Leaves are Aromatic, Carminative and Astringent.*

Uses : Tender leaves of this plant is ground and mixed in cow's milk. If this is consumed twice daily for three days cures anorexia and acts as an appetizer. Infusion of the leaves if consumed regularly for twenty one days cures all kinds of bilious disorders. Paste of unripened fruit along with food also cures bilious disorders. Paste of the tender fruit mixed with cow's milk if taken twice daily for twenty one days cures wheezing and asthma.

Fruit is boiled and the pulp of the fruit is ground. This is mixed with curd and if cousumed for three days checkst dysentery.

Pulp of the fruit cures stomatitis.

Ripened fruit gives relief from excess salivary gland secretion, sore throat and gum boils. This is an appetizer too. Shell of the fruit is made into a powder and if consumed along with honey reduces vigour in men.

Gum of this tree along with cow's butter is consumed for twenty one days to get relief from cough, chest conjestion, bilious fever, leucorrhoea, urinary tract disorders and uterous disorders.

Ripened fruit pulp if taken strengthens nerves, bones, heart and alimentary canal organs. This also regulates heart beat and cures liver and spleen disorders.

விளாமரம், இதில் பெருவிளா, குட்டிவிளா, சித்திவிளா என மூவகையுண்டு. ஜீரண சக்திக் குறைவினால் பசியில்லாதவர் களுக்கு விளாயிலைக் கொழுந்தையரைத்து பசும்பாலில் கலக்கி தினம் இருவேளையாக மூன்று நாள் கொடுக்க பசியுண்டாகும். விளாயிலைக் குடிநீரை 21 நாட்கள் தொடர்ந்து சாப்பிட்டு வர பித்த சம்பந்தமான எல்லா கோளாறுகளும் நீங்கும். முற்றிய விளாங்காயை துவையல் செய்து சாப்பிட்டாலும் பித்த சம்பந்தமான கோளாறுகள் நீங்கும். இளம்காயை அரைத்து சிறிதளவு பசும்பாலில் கரைத்து காலையும் மாலையும் தொடர்ந்து 21 நாட்கள் அருந்த இரைப்புநோய் குணமாகும்.

முற்றின விளாங்காயை வேகவைத்து சதையை அரைத்து எருமைத் தயிரில் போட்டுக் கலக்கி காலை வேளையில் மட்டும் தொடர்ந்து மூன்று நாள் அருந்த சீதபேதி குணமாகும். முற்றிய விளாங்காயை புளியுடன் சேர்த்து பச்சடி செய்து சாப்பிட வாய்ப்புண் மாறும்.

நன்கு பழுத்த பழத்தை சாப்பிட வாய்நீர் ஊறல், தொண்டைப்புண், பல்லீறுப்புண் போகும். பசியுண்டாகும். ஓட்டை இடித்து தேன் சேர்த்துக் கொடுக்க ஆண்கள் போக இச்சையை மறப்பார்கள்.

இம்மரத்தின் பிசினை, தினமும் பசுவெண்ணெயில் 21 நாட்கள் தொடர்ந்து கொடுக்க இருமல், நெஞ்செரிவு, பித்த காய்ச்சல், வெள்ளை ஒழுக்கு, சிறுநீர் தாரை எரிச்சல், பெரும்பாடு, உஷ்ணபேதி, பெண்களின் கர்ப்பாசயக் கோளாறுகள் ஆகியவைப் போகும்.

விளாம்பழத்தினை அடிக்கடி சாப்பிட நரம்புகள், எலும்புகள், இதயம், ஜீரணசக்தி உறுப்புக்கள் பலப்படும். மேலும் இருதயத் துடிப்பை சரிப்படுத்தும்.

மேலும் விளாம்பழத்தினால் கல்லீரல், மண்ணீரல் கோளாறுகள் குணப்படும்.

* * *

## விஷ்ணுக்கிரந்தி

**(அபராசி, பராசிதம், விட்டுணுக்கிராந்தி)**

## Evolvulus alsinoides

**(N. O. Convolvulaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *A yellow neutral fat, an alkaloid, an organic acid and saline substances*

*Action* : *Tonic, Alterative, Febrifuge, Anthelmintic and Antiphlogistic.*

Uses : Infusion of leaves gives relief in fever, internal heat, bronchitis, cough and rheumatism. Powdered plant along with hot water improves fertility. Mixed with garlic and cumin along with milk cures fever and nervous debility. Infusion made out of this plant and basil leaves gives relief in indigestion and diarrhoea accompanied with fever.

Leaves along with garlic and cumin are made into a paste. This is given to cure nervous debility.

விஷ்ணுக்கிரந்திச் செடியினால், சுரம், உட்சூடு, கோழை, இருமல், வாதநோய்கள் தீரும். இந்நோய்கள் தீர இலை, பூண்டைக் குடிநீரிட்டுக் கொடுக்க வேண்டும்.

இச்செடியை நிழலில் உலர்த்தி பொடித்து இளவெந்நீருடன் சேர்த்து குடித்துவரின் ஆண், பெண் மலட்டுத்தன்மை நீங்கும். இப்பூண்டுடன் சீரகம் சேர்த்தரைத்துப் பாலில் கலக்கிக் குடிக்க சுரம், நரம்புத் தளர்ச்சி நீங்கும். இச்செடியுட துளசி சேர்த்துக் குடிநீரிட்டு உண்டுவர செரியாமை, கழிச்சலோடு கூடிய சுரம் ஆகியவை நீங்கும்.

கைப்பிடியளவு விஷ்ணுக்கிரந்தி இலையுடன் மூன்று வெள்ளைப்பூண்டு பற்கள், அரைத் தேக்கரண்டியளவு சீரகம் சேர்த்து மைபோல அரைத்து நரம்புத் தளர்ச்சிக்கு கொடுக்க ஆண்குறி நரம்புகள் பலப்பட்டு ஆண்தன்மை உண்டாகும்.

* * *

# வெங்காயம்

(ஈருள்ளி, சுக்கிரந்தம், நிச்சியம், பலாண்டு)

## Allium cepa

(N. O. Liliaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Bulb and seed*

*Constituents* : *Bulb contains an acrid volatile oil which contains sulphur, essential oil and organic sulphides. Outer skins of the bulb contains a yellow colouring matter called quercetin. Fresh red onion contain albuminoids, soluble carbohydrates, woody fibre and ash etc. Onion also contain some amount of sugar.*

*Action* : *Oil contain in the bulb is Stimulant, Diuretic and Expectorant. Bulb is Emmenagogue, externally it is Stimulant and Rebefacient. Juice of the onion is Aphrodisiac, Stimulant and Expectorant. Eaten raw it is also Diuretic and Emmenagogue.*

Uses : Leaves,pulp,flower and seeds exhibits medicinal property and are used in cooking. Flowers cooked along with green gram if consumed cures stomach ache and intestinal disorders. Juice of the flower if dropped in the eyes cures blindness. Dried flowers reduces biliousness.

Thirstyness, piles, internal heat could be cured with its leaves. 4 gms of powdered seed along with sugar if consumed daily cures dyspepsia and acts as an aphrodisiac.

Pulp is edible. This could be taken as raw or boiled. This cures amenorrhoea. This acts as diuretic. Along with pepper it cures fever. Raw onion if taken daily improves blood. Juice of the onion if consumed for four times daily strengthens the lungs. This also cures cough, vomiting, blood vomiting and chronic cold affection.

Juice of the bulb along with mustard oil is boiled and could be used externally on joints to relieve pain. To recover from fainting, 2 to 3 drops of onion juice could be dropped in the nose.

Onion mixed with salt cures stomach ache. Infusion made out of onion and salt gives relief in urinary tract disorders. Juice is rubbed on scorpion sting and insect bites relieves pain. Mixed with vinegar if consumed cures sore-throat.

If onion is consumed daily along with food cures piles, diarrhoea, head ache, sneezing and inflammation of the joints.

வெங்காயச் செடியின் இலை, தாள், பூ, கிழங்கு, விதை அனைத்தும் மருத்துவப் பயனுடையன. இதன் பூவை பருப்புடன் சேர்த்து சமையல் செய்து சாப்பிட வயிற்றுவலி, மாதவிடாய் கோளாறுகள் சரியாகும். வெங்காயப்பூவை கசக்கி சாற்றை கண்களில் விட கண்பார்வை மங்கல் தெளிவடையும். இதை உலர்த்தி பொடித்து உள்ளுக்கு சாப்பிட இரத்தபித்தம் குறையும்.

இதன் இலையினால் தாகம், மூலச்சூடு, உடல்வெப்பு தணியும். விதைப்பொடியை சர்க்கரையுடன் வேளைக்கு 4 கிராம் வீதம் தினம் 3 முறை சாப்பிட குன்மநோய் தணிவதுடன் ஆண்மை உண்டாகும்.

வெங்காயம் எனப்படும் கிழங்கினால் பல நோய்கள் நீங்கும். இதை பச்சையாக தின்ன பெண்களின் சூதகத் தடையை நீக்கி குருதி சிக்கலை அறுக்கும், நீரைப் பெருக்கும். வெங்காயத்துடன் மிளகு சேர்த்து உண்ண குளிர்ச்சுரம் தணியும். தினமும் பச்சையாக இதை சாப்பிட்டு வர இரத்தம் விருத்தியாகும்.

புகைக்கும் காரணத்தால் நுரையீரல் பாதிக்கப்படுகிறது. இதற்கு வெங்காயச் சாற்றை வேளைக்கு அரை அவுன்ஸ் வீதம் ஒரு நாளைக்கு நான்கு வேளை கொடுத்துவந்தால் நல்ல குணம் தெரியும். மற்றும் இருமல், கப வாந்தி, இரத்த வாந்தி, நாட்பட்ட சளி நீக்கும். வெங்காயச் சாற்றுடன் கடுகெண்ணெய் கலந்து மூட்டு வலிக்கு தடவ குணமாகும். மயங்கி விழுந்து விட்டவர்களின் மயக்கத்தை தெளிவிக்க இரண்டு அல்லது மூன்று துளிச் சாற்றை மூக்கில் விட வேண்டும்.

வெங்காயத்தை உப்புடன் கூட்டியுண்ண வயிற்றுவலி, குருதி யழல் நோய் நீங்கும். குடிநீர் செய்து குடிக்க நீர்தாரை சம்பந்தப்

பட்ட கோளாறுகள் நீங்கும். வெங்காயச் சாற்றை பூச்சிக்கடிகள், தேள் கொட்டல் இவற்றிற்கு தேய்க்க வலி நீங்கும். இதை காடியுடன் கலந்து உட்கொள்ள தொண்டைப் புண் குணப்படும். மேலும் வெங்காயத்தை தொடர்ந்து உணவில் சேர்க்க மூலம், உடல் உஷ்ணம், உஷ்ணபேதி, தலைவலி, கண் மங்கல், விடா தும்மல், முழங்கால் வீக்கம் குணம் ஆவதுடன் திரும்பவும் வராமல் தடுக்கும்,

* * *

## வெங்காயம்
(நீர் வெங்காயம்)

**See : Urginea indica**

**பார்க்க : காட்டு வெங்காயம்**

* * *

## வெட்சி

**See : Ixora coccinea**

**பார்க்க : சேதாரம்**

* * *

## வெட்டிவேர்

**See : Coleus vetiveroides**

**பார்க்க : குருவேர்**

* * *

## வெட்டுக்காயப் பூண்டு

Tridax procumbens

**(N. O. Compcsitae)**

*Habit* : *Prontrate herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Vulnerary, Alexipharmic, Anodyne and Deobstruent.*

Uses : This heals wounds and ulcers. This is small plant commonly seen every where.

வெட்டுக்காயப் பூண்டு வெட்டுக் காயங்களையும், ரணங்களையும் ஆற்றுவதில் சிறந்தது. இது எங்கும் காணப்படும்.

* * *

## வெண்டை

**(வெண்டுக்காய்)**

## Hibiscus esculentus

**(N. O. Malvaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Fruit*

*Constituents* : *The fruit contains albuminoids, soluble carbohydrates, woody fibre and ash. Fresh capsules abound in a copious bland viscid mucilage which consists of pectin and starch. Dried fruits yield nitrogen and also salts of potash, lime and magnesium.*

*Action* : *Emollient, Demulcent, Diuretic, Cooling and Aphrodisiac.*

Uses : Leaves, fruits and seeds are of medicinal use and it is used in our day to day cooking. This is used to treat diarrhoea. Infusion of the tender fruit with sugar is used to treat gonorrhoea, cough and burning sensation. The stem of the infusion cures sore throat and irritation of the throat. Paste of the tender leaf is used externally on eczema and boils. Powdered root mixed in milk increases the fertility.

வெண்டை கொடியில் இலை, காய், விதை அனைத்தும் மருத்துவப் பயனுடையன. வெண்டைக்காயால் நாட்பட்ட கழிச்சல், பெருங்கழிச்சல், குருதிக் கழிச்சல் போகும். வெண்டைப் பிஞ்சு குடிநீருடன் சர்க்கரை சேர்த்து அருந்த வெள்ளை, இருமல், நீர்க்கடுப்பு,

கழிச்சல் தீரும். இதன் ஆவியைப் பிடித்துவர இருமல், தொண்டைப் புண், தொண்டை எரிச்சல், தொண்டைக் கம்மல் தீரும்.

இலைக் கொழுந்தை நன்றாக நசுக்கி வைத்துக் கட்ட புண்கள், கட்டிகள் தணியும்.

இதன் வேரை சூரணம் செய்து பாலுடன் சாப்பிட ஆண்மை தரும்.

* * *

## வெண்டை
### (காட்டு வெண்டை)

## Hibiscus ficulneus
### (N. O. Malvaceae)

*Habit* : *Sub-shrub*

*Parts used* : *Fruit*

*Constituents* : *Rich in vitamin C*

*Action* : *Fruit is Nutritive.*

Uses : The fruit of this plant contain Vitamin 'C' in abundance.

காட்டு வெண்டைக்காயில் வைட்டமின் 'C' சத்து அதிகம் உள்ளது. உடலுக்கு குளிர்ச்சி தரும்.

* * *

## வெண்டை
### (கஸ்தூரி வெண்டை)

**See : Hibiscus abelmoschus**

* * *

# வெந்தயம்

(மெந்தியம், மேதி வெந்தை)

## Trigonella foenum-graeceum

(N. O. Papilionaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Seeds, pods and leaves*

*Constituents* : *Seeds contain alkaloids such as methylamine, dimethylamine and trigonelline, cholin, neurin and betain. This also contains phosphates, lecithin and neucleo albumin.*

*Action* : *Seeds are Mucilaginous, Demulcent and Diuretic. Also Tonic, Carminative, Emmenagogue, Astringent, Emollient and Aphrodisiac. Leaves are Cooling and mild Aperient.*

Uses : Fever due to phlegm, dysentery, burning sensation of the body, gonorrhoea, thirstyness, tuberculosis, cough could be treated with this. The 'dosai' made out of this if taken regularly it gives strength. If it is taken along yam, it fattens the body. A type of bread made out of this is very popular in Egypt. This shows that the importance of this was very popular during ancient years. Infusion if consumed it cures flatulance, fever, internal heat, gonorrhoea and dysentery. Fenugreek (35 gms.) added with 700 gms rice, if boiled with salt and consumed it increases blood. If this is mixed with gruel of sago it acts as galactogogue. If the fenugreek is applied on the head it improves the growth of the hair. Liver disorder could be treated with this. It checks dysentery and indigestion. Leaves are also of medicinal use. Please refer 'Greens' for further information about the medicinal properties of this leaves.

வெந்தயம் கணக்காய்ச்சல், சீதக் கழிச்சல், வெள்ளை, உடல் எரிச்சல், நீர்வேட்கை, இளைப்பு நோய், இவைகளை விலக்கும்.

வெந்தயத் தோசையை அடிக்கடி சாப்பிட உடல் வன்மை பெறும். உடல் வலி தீரும். கருணைக் கிழங்கோடு சேர்த்துச்

சாப்பிட்டு வர உடல் பருக்கும். வெந்தயத்தைக்கொண்டு ''மெல்பா ரொட்டிகள்'' என்கிற பெயரில் ஒரு வகை உணவை தயாரிக்கிறார்கள். இது எகிப்து நாட்டில் பிரசித்தமான உணவாகும். இப்பழமையான உணவு எகிப்து மன்னர்கள் காலத்திலிருந்து வெந்தயத்தின் சத்தையும் தன்மையையும் உணர்ந்து புழங்கிவந்ததாக குறிப்புகளில் இருக்கின்றன.

இதை வறுத்து பொடி செய்து, ஊறல் நீர்ச் செய்து உட்கொள்ள வயிற்று வலி, வயிற்றுப் பொருமல், சுரம், உட்சூடு, வெள்ளை, சீதக்கழிச்சல் தீரும்.

700 கிராம் அரிசியுடன் 35 கிராம் வெந்தயம் சேர்த்து உப்பிட்டு பொங்கி சாப்பிட குருதி பெருகும்.

அரிசி அல்லது ஜவ்வரிசிக் கஞ்சியுடன் இதை சேர்த்து காய்ச்சி கொடுக்க பால் சுரக்கும். இதை ஊற வைத்து தலையில் தேய்த்து ஒரு மணி நேரம் கழித்து தலை முழுக தலை மயிர் நன்கு வளரும். இதை மாவாக்கி களி செய்து பூச புண்கள் ஆறும்.

வெந்தயம் கல்லீரல் நோய்களை நீக்கும். மேலும் இதனால் சீதபேதி, வயிற்று உப்புசம், மந்தம், வாய்வு தணியும். சுக்கிலம் விருத்தியாகும்.

இதன் இலையும் மருத்துவப் பயனுடையது. இதன் இளம் கீரையின் பயனை அறிய கீரை வகைகளில் வெந்தயக் கீரையைப் பார்க்கவும்.

* * *

## வெம்பாடம்

(சுருள்பட்டை)

**See : Ventilago madraspatana**

**பார்க்க : செங்கத்தாரிப் பட்டை**

* * *

## வெலிச்சிப் பிசின்

**See : Ailanthus malabarica**

**பார்க்க : பெருமருந்துப்பால்**

* * *

## வெல்லரகு
(வெல்லரிவு)

## Enicostemma cittorali
**(N. O. Gentianaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Constituents* : *Bitter principle. This also contains chiratin and ophelic acid*

*Action* : *Flowering plants are Stomachic, Bitter, Tonic, Laxative, Carminative, Antirheumatic and Blood purifier.*

Uses : This has the similar medicinal property as Swertia chirata. Therefore this is used in place of Swertia chirata. This purifies the blood, cures intestinal ulcers, hernia, rheumatic problem etc.

வெல்லரகு சிரட்டைக்கு பதிலாக பயன்படுத்தப்படுகிறது. இதனால் இரத்தம் சுத்தம் ஆகும். குடல் புண், குடலண்டம், வாத ரோகம் குணமாக்கும்.

* * *

## வெள்ளரிக்காய்
(உருவாரம், கற்கடி, மிருந்து)

## Cucumis sativus
**(N. O. Cucurbitaceae)**

*Habit* : *Creeper*

*Parts used* : *Fruit, seeds and leaves*

*Constituents* : *Seeds contain fixed oil, starch, resin and sugar. Fruit is rich in minerals.*

*Action* : *Fruit is Nutrient, Demulcent, Refrigerant, Diuretic, Antiscorbutic, Stomachic and Antidote.*

*Ripened fruit is Hydrogogue and Expectorant. Seeds are Cooling and Diuretic.*

Uses : Leaves, fruit, seeds are of medicinal use. Tender cucumber cures dysuria, eczema and other urinary tract ailments. This is an appetizer. Tender fruits cures rheumatic, phlegmatic and bilious disorders. Leaves roasted with cumin are powdered and a pinch of it cures sore throat and acts as diuretic. Because of its diuretic property it is used to treat dropsy, oedema, urinary tract infection etc. Paste of the seed is taken and mixed with 5 parts of water and dissolved. This mixture cures anuresis, calculous affections, urethral blockage, gonorrhoea and burning sensation during urination etc.

வெள்ளரிக்காய் கொடியின் இலை, காய், விதை மருத்துவப் பயனுடையது. வெள்ளரிப் பிஞ்சினால் நீர்த்துவார தினவு, நீர்ச் சுருக்கு, கரப்பான் குணமாகும். இதைச் சாப்பிட்ட பிறகு நல்ல பசி உண்டாகும். இதன் பிஞ்சு முத்தோஷம் நீக்கும். காய் வாதத்தை போக்கும்.

இலையை உலர்த்தி சீரகத்துடன் வறுத்து பொடித்து ஒரு சிட்டிகை உட்கொள்ள தொண்டையிலுள்ள நோய்கள் போகும். மேலும் சிறுநீரைப் பெருக்கும்.

வெள்ளரிக்காய் சிறுநீரைப் பெருக்கும் தன்மையுடையதால் பாண்டு, உடல் வீக்கம், நீர்தாரை நோய் முதலிய நோய்களை உடையவர்களுக்கு கொடுக்க நன்மை தரும்.

விதையை அரைத்து அத்துடன் ஐந்து பங்கு நீர் சேர்த்து கரைத்து வடிகட்டி சர்க்கரை சேர்த்துக் கொடுக்க கடுக்கின்ற நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, வெள்ளை, நீர் எரிச்சல் இவைகள் போகும். மேலும் விதை ஆண்மை பெருக்கும்.

* * *

## வெள்ளருகு

## Adenama hisspifolia

*Habit : Herb*

*Parts used : Leaves and the whole plant*

*Action* : *Plant is Stomachic, Alterative, Laxative, Nervine, Tonic and Antirheumatic. Leaves are Vulnerary and Demulcent.*

Uses : Dyspepsia, rheumatism, intestinal gas, rigidity of the joints, nervous disorder, pruritis could be effectively treated with this. To treat above said diseases infusion of this plant is given. Paste of this plant is used externally for eczema and other minor skin ailments. Pepper and garlic is mixed with the paste and added in the milk. This mixture could be used to treat gleet. The ash of the plant mixed in milk is used to treat jaundice. If this is mixed with cumin, it cures diabetes.

வெள்ளருகு செடியினால் குன்ம நோய், வாத நோய், குடல் வாயு, கீல் பிடிப்பு, நரம்புக் கோளாறுகள், தினவு, சிறு சிரங்கு ஆகியவை போகும். இந்நோய்கள் தீர இச்செடியின் குடிநீரை அருந்த வேண்டும்.

இதனை அரைத்து நமைச்சல், சிரங்கு முதலியவைகளுக்கு மேற்பூச்சாக பூசலாம். இத்துடன் சிறிது மிளகும், ஒரு திரி பூண்டும் சேர்த்தரைத்து பாலில் கலக்கி சீழ் ஒழுகுகின்ற வெள்ளைக்கு வழங்கலாம். இதன் வேரும் புண் புரைகளை ஆற்றும்.

இதன் சமூலத்தை பாலில் கலந்து சாப்பிட காமாலை நோய் குணமாகும். இதையே சீரகத்துடன் சாப்பிட நீரிழிவு நோய் குணமாகும்.

* * *

## வெள்ளி இலை

**(வள்ளை மடந்தை, வள்ளை மாதண்டை)**

## Mussaenda frondosa

**(N. O. Rubiaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Root, leaves and flower*

*Constituents* : *Saponin and a glucoside*

*Action* : *It is Alterative, Diuretic and Demulcent.*

Uses ; The root is bitter in taste. Leaves are used as an external application to cure herpes and ulcers. The juice

of the flower is used to expectorate phlegm, more over it cures eye diseases etc.

இதன் வேர் கசப்புச் சுவையுடையது. படர் வெள்ளி இலையை தாமரை, புண், ஆறாத ரணம் ஆகியவற்றிற்கு வெளிப் பூச்சு மருந்தாகப் பயன்படுத்துவர்.

இதன் பூவின் சாறு கபம், இருமல் நீக்குவதுடன் கண் நோய் களை குணப்படுத்தும்.

* * *

## வெள்ளி லோத்திரம்

**(காசசங்கை, காயவிலை, தில்லகம், வெள்ளலத்திப் பட்டை)**

### Symplocos racemosa

**(N. O. Sympolaceae)**

*Habit* : *Small tree*

*Parts used* : *Bark*

*Constituents* : *Bark contains loturine, lotuedine and colloturnine*

*Action* : *Bark is Refrigerant, mild Astringent, Uterine-Tonic, Antidote and Emmenagogue.*

Uses : Wood and bark of this tree is used in medicinal preparations. This is used in treating poisonous bites, ascites, irritation of the throat etc. Moreover diarrhoea, dysentery, anaemia, eye diseases, fever, ulcers, liver disorders, menorrhagia and amenorrhoea could be treated. Infusion of the bark is used for the above said diseases. Bark along with liquoarice, burnt alum, flowe r o f Ervatamia coronaria are mixed and made into a paste. This paste is used externally on the eyes to cure eye diseases. Chiped wood is made into a decoction and it is used to cure gingivitis and it strengthens the teeth.

வெள்ளி லோத்ர மரத்தின் பட்டையும், கட்டையும் பல மருந்துகளில் சேர்க்கப்படுகிறது. இதனால் நஞ்சு, எலும்புருக்கி, பெருவயிறு, குரற்கம்மல் தீருவதுடன் பேதி, சீதபேதி, சோபை, கண்நோய், சுரம், புண்கள் ஈரலைப் பற்றிய பிணிகள், பெரும்பாடு,

சூதகத்தடை முதலியவைகளும் இதனால் நீங்கும். இதன் பட்டை குடிநீர் மேற்கண்ட நோய்களைப் போக்கும்.

இதன் பட்டை, அதிமதுரம், பொரித்த படிகாரம், நந்தியாவட்டைப் பூ இவைகளை அரைத்து கண்களைச் சுற்றிப் பற்றிட கண் நோய் விலகும்.

இதன் கட்டையை சிறிது சிறிதாக சீவிப்போட்டு கஷாயம் செய்து வாய் கொப்பளிக்க பல்லீறு பலப்படும். பல்லீற்றுப் புண்கள் குணமாகும்.

* * *

## வெள்ளைப் பூண்டு

(உள்ளி, வெள்ளுள்ளி, வெள்வெங்காயம்)

### Allium sativum

(N. O. Liliaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Bulb*

*Constituents* : *It contains vitamin A, B, C. and protein. Oil is extracted from the garlic. It contains allin and allinase. Allyl propyl disulphide is prepared from the bulb.*

*Action* ; *Carminative, Stomachic, Alterative, Stimulant, Expectorant, Anthelmintic, Diuretic and Tonic. Garlic tones up breast and uterus muscles.*

Uses : The bulb of this plant exhibits many medicinal properties. It is used in many "electuaries" and medicines. The juice of this bulb is used as ear drops for clear hearing. Juice if applied in the throat it cures cough and expels the intestinal worms. This has more strong smell than onion, Small boils, chronic cough, wheezing, intestinal worms, rheumatism, head ache, cold, stomatitis, dysentery and piles could be treated with this. If this is consumed regularly it cures dysentery rhematism, gas trouble, hearing problem, dyspepsia and cardiac diseases. It reduces the cholestrol. If pepper, Eclipta alba are added with this, it is a good medicine to reduce abdominal distention. Garlic boiled in cocoanut oil is

a good external application for arthritis. This also could be used as ear drops, to reduce the pain. Salted garlic paste is used externally for sprain. Boiled garlic added with ghee and sugar, checks dysentery. Oil of the garlic is used to treat whooping cough, intestinal ulcers, filiariasis, asthma etc. This cures high blood pressure. Rigidity of the joints could be cured with this.

வெள்ளைப் பூண்டுச் செடியின் கிழங்கு பல மருத்துவப் பயன்களையுடையது. இது பல லேகியங்களிலும் மருந்துகளிலும் சேர்க்கப்படுகிறது. இதன் சாற்றைக் காதிலிட காது சரியாகக் கேட்கும். உள்நாக்கில் தடவ மலக்கிருமிகள் இருமல் முதலியவை நீங்கும். வெங்காயத்தை விட இது அதிக காரம் உடையது.

வெள்ளைப் பூண்டினால் சிறுகட்டிகள், செவிடு, நாட்பட்ட இருமல், இரைப்பு, வயிற்றுப்புழு முப்பிணி, வாதநோய்கள், நீரேற்றத் தலைவலி, வாய்நோய், சீதக் கழிச்சல், போன்ற நோய்கள் குணமாகும்.

பூண்டை அடிக்கடி உணவில் சேர்க்க வாய்பூட்டு நோய், சன்னி-வாதரோகம், சீதபேதி, கபம், வாய்வுத்தொல்லை, காது மந்தம், குன்மம், இருதயநோய், இரத்தத்தில் அதிக கொழுப்புச் சத்து, எலும்பு முறிவு இவற்றை குணப்படுத்தி அறவே ஒழிக்கும்.

வெள்ளைப் பூண்டுடன் மிளகு, கையாந்தகரையிலை சேர்த்தரைத்து சாப்பிட வயிற்றுப்புசம் நீங்கும்,

பூண்டை தேங்காயெண்ணெயிலிட்டுக் காய்ச்சி அவ்வெண் ணெயை தேய்க்க வாத வலி, வாத நோய் தீரும். இதையே காதிலிட காதிரைச்சல், காது குத்தல் நீங்கும்.

பூண்டை உப்பிட்டு நசுக்கி எடுத்த சாற்றை சுளுக்குகளுக்குப் பூச குணப்படும்.

இதை வேக வைத்து நெய், சர்க்கரை கூட்டிப் பிசைந்து உண்ண சீதக்கழிச்சல் குணமாகும்.

பூண்டு எண்ணெய் கக்குவான், குடற் புண், மலேரியா, யானைக்கால், ஆஸ்துமா ஆகியவற்றில் உபயோகப்படுகிறது. இது இரத்த அழுத்த நோயை குணப்படுத்தும். கீல்பிடிப்புக்கு பூச்சு மருந்தாகவும் பயன்படுகிறது.

* * *

## வெற்றிலை

(தாம்பூலம், மெல்லிலை, மெல்லடகு)

## Piper betle

**(N. O. Piperidaceae)**

*Habit* : *Twining herb.*

*Parts used* : *Leaves*

*Constituents* : *It contains chaivical, oxalic acid, nico tanic and vitamin B.*

*Action* : *Leaves are Stimulant, Lactogogue Antiseptic, Aphrodisiac and Carminative.*

Uses : This is found in tropical areas. This along with betalnut and lime is called 'Beeda'. This exhibits medicinal properties. juice of the leaves cures poisonous bites, cold, heaviness of the head, indigestion, stomach ache and abdominal distension. This is used after removing the peteole of the leaf. Five leaves boiled in 100 ml. of cocoanut oil is used externally for eczema and other skin diseases. Juice of the leaves with camphor is applied on the forehead to stop head ache. Two leaves with nine pepper if chewed it acts as an antidote for scorpion sting. Equal amount of the juice of the leaves and basil leaves added with honey is an ideal preparation to relieve abdominal distention of the children. Roasted betel leaves are applied on the breasts of the lactating mother to increase the milk secretion. Juice of the ripened leaves (20 gms.) with 3 pepper, equal amount of dried ginger and honey is a good mixture to cure wheezing, difficulty in breathing etc. Betel leaves with benzoin if chewed it cures obstruction in the throat. Leaves are used externally for burns. Ginger juice with this leaf juice is used to treat disorders of the lungs. The root of this plant if chewed it clears the throat. Infusion made out of its leaves and pepper is used to cure indigestion in children.

வெற்றிலை வெப்பப்பகுதிகளில் வளரும் ஒரு வகை கொடியாகும். வெற்றிலையை பாக்கு, சுண்ணாம்பு சேர்த்து வாயில் போட்டு மெல்லுவது பலருக்கு பழக்கம் உள்ளது. இது மருந்தாகவும் பயன்படுகிறது. பல் வியாதிகளை குணப்படுத்தும் சக்தியுடையது.

வெற்றிலை இரசத்தினால் காணாக்கடி, நஞ்சு, நீரேற்றம், தலை பாரம், முப்பிணி, மாந்தம், வயிற்று வலி, வயிற்றுப்புசம் குணமாகும்.

வெற்றிலையை பயன்படுத்தும் பொழுது காம்பை நீக்கியே பயன்படுத்த வேண்டும்.

100 மிலி அளவு தேங்காயெண்ணெயில் ஐந்து வெற்றிலையை போட்டு காய்ச்சி வைத்துக் கொண்டு தினம் காலையும் மாலையும் பற்று படை, சொறி சிரங்கு இவற்றிற்கு தடவ குணமாகும். வெற்றிலைச் சாற்றுடன் கற்பூரம் சேர்த்து குழப்பி தடவ தலைவலி நீங்கும்.

இரண்டு வெற்றிலையை எடுத்து அதில் ஒன்பது மிளகை மடித்து வாயில் போட்டு நன்றாக மென்று விழுங்க தேள்கடி விஷம் முறியும். வெற்றிலையும், துளசியிலையும் சம அளவு எடுத்து சாறெடுத்து அச்சாற்றில் ஒரு தேக்கரண்டி அளவு எடுத்துக் கொள்ள வேண்டும் இத்துடன் அரை தேக்கரண்டி அளவு தேன் கலந்து குழந்தைகளுக்குக் கொடுக்க வயிற்று உப்புசம் அடங்கும். வெற்றிலையை தணலில் வாட்டி மார்பின் மீது வைத்துக் கட்ட பால் சுரக்கும்.

முற்றின வெற்றிலைச்சாறு இரண்டு அவுன்ஸுடன் மூன்று மிளகு, அதே அளவு சுக்கு. தேன் சேர்த்து கொடுக்க இரைப்பு, மூச்சு திணறல் குணமாகும்.

தொண்டையடைப்பு குணமாக வெற்றிலையுடன் சாம்பிராணிப் பதங்கம் சேர்த்து மென்று சாப்பிட வேண்டும். தீச்சுட்ட புண்களுக்கு வெற்றிலையை வைத்துக் கட்ட குணமாகும். வெற்றிலைச் சாற்றுடன் இஞ்சிச் சாறு சேர்த்து அருந்த நுரையீரல் சம்பந்தமான நோய்கள் குணமாகும்.

இதன் வேரை சுவைக்க பாடகர்களின் தொண்டை ஒலி பெரும். வெற்றிலையும் மிளகும் சேர்த்து குடிநீரிட்டுக் கொடுக்க குழந்தைகளின் செரியாமை நீங்கும். வெற்றிலைச் சாற்றால் பாதரசம் சுத்தமாகும்.

* * *

## வெற்றிலை
### (காட்டு வெற்றிலை)

## Ehretia microphylla
### (N. O. Boraginaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves*

*Action* : *Antisyphilitic, Emollient and Antiscorbutic.*

Uses : This exhibits the medicinal properties of betel leaves. This also cures leprosy, syphilitis and other skin disorders.

காட்டு வெற்றிலை பொதுவாக வெற்றிலையின் குணம் பெற்றிருந்தாலும் கிரந்தி, குஷ்டம், சரும நோய்களைக் குணப்படுத்தும்.

* * *

## வெற்றிலை
### (வெற்றிலைப் பட்டை)

## Callicarpa canala
### (N. O. Verbenaceae)

*Habit* : *Shrub*

*Parts used* : *Root and root bark.*

*Action* : *Expectorant, Stomachic, Antisyphilitic and Vulnerary.*

Uses Root, root bark and leaves are of medicinal use. Root decoction reduces the body temperature and also it cures liver diseases. If it is used to gargle the mouth it cures stomatitis. It cures cough. For skin diseases it is used as an external application.

வெற்றிலைபட்டையின் வேர், பட்டை, இலை அனைத்தும் மருத்துவப் பயனுடையன. வேர்க் கஷாயம் சுரத்தை குறைப்பதுடன் கல்லீரல் கற்களை கரைக்கும். இதனால் வாய்க்

கொப்பளிக்க வாய்ப்புண், ரணம் குணமாகும். சுவாச இருமல் தீர்க்கும். இதனால் சருமநோய்களைக் கழுவ குணமாகும்.

* * *

## வேங்கை

**(அசமை, கனி, திமிசு, பிரசாரம்,)**

### Pterocarpus marsupium

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Leaves, bark and gum.*

*Constituents* : *Gum kino.*

*Action* : *Leaves are Detergent and Deobstinent. Bark is Astringent, Diuretic and Antiscorbutic. Gum is Laxative, Astringent, Anti- diabetic and Haemostatic.*

Uses : Leaves, bark and gum of this tree is used in medicinal preparations. Boiled leaf paste is applied externally to cure boils and abscesses.Powdered bark is usedas an infusion to cure dysentery and diarrhoea. Gum exhibits the same medicinal property of catcheu. Irritating cough, indigestion and ulcers could be cured with this. This is laxative and improves the eye sight. Powdered gum mixed with cinnamon bark and opium is added and powdered. This powder stops the bleeding of the wounds. Roasted gum with ghee if taken internally it cures gonorrhoea. Peteoles and leaves of this tree is a cattle feed.

வேங்கை மரத்தின் இலை, மரப்பட்டை, பிசின் ஆகியவை மருத்துவப் பயனுடையன. இவற்றால் உடலிலுண்டாகும் பல பிணிகள் தீரும்.

இலையை அரைத்து கொதிக்க வைத்து கட்டிகள், புண்கள், தோலைப்பற்றிய நோய் ஆகியவற்றிற்கு தேய்க்க குணப்படும்.

இதன் பட்டையை சூரணம் செய்தோ குடிநீரிட்டோ வழங்க செரியாக் கழிச்சல், சீதக் கழிச்சல் நிற்கும்.

இம்மரப்பிசினுக்கு காசுக் கட்டிக்குள்ள குணம் உண்டு. இதனால் பொடி இருமல், வெள்ளை, மாந்தம், புண் குணமாகும். கழிச்சலுண்டாக்கும். கண்களுக்கு ஒளிதரும்.

இப்பிசின் பொடியுடன் இலவங்கப்பட்டை பொடி, அபினிப் சேர்த்துபோட வெட்டுக்காயங்களிலிருந்து வழியும் இரத்தம் நிற்கும்.

பிசினை நெய்விட்டு வதக்கி பொடித்து 2 கிராம் எடை வீதம் கொடுக்க வெள்ளை, இருமல் தீரும்.

இம்மரத்தின் இலைகளும் காம்புகளும் கால்நடை உணவாகப் பயன்படுகிறது.

* * *

## வேம்பு

**(வேப்பமரம், அரிட்டம், துத்தை, நிம்பம், வாதாரி)**

## Melia azadirachta

**(N. O. Meliaceae)**

| | | |
|---|---|---|
| *Habit* | : | *Tree* |
| *Parts used* | : | *Leaves, flowers, fruit, seed, oil and bark* |
| *Action* | : | *Root bark and young fruit are Astringent, Tonic and Antiperiodic. Bark is Bitter, Tonic, Astringent, Antiperiodic and also Vermifuge. Fruit is Purgative, Emollient and Anthelmintic. Leaves are Discutient and leaf juice is Anthelmin tic.Oil from nuts and leaves is a local Stimulant, Insecticide and Antiseptic. Flowers are Stimulant, Tonic and Stomachic. Gum from the bark is a Stimulant and Demulcent tonic. Toddy is Refrigerant, Nutrient and Alterative tonic. The drug also possesses Antispirocuaetal and Emmenagogue properties.* |

Uses : This is considered most superior among all trees. This has the maximum medicinal properties. It can even cure the chronic leprosy. All parts of this tree is used in medicinal preparations. It is said that people living near this tree will not get any skin diseases. The ideal medicine for small pox is the leaf bed of neem. The paste of the leaves and

turmeric is used externally on the eruption of the small pox. The stick of the tree is used to clean the teeth which prevents many tooth diseases. The paste of the leaves and turmeric is used externally to cure mums, which is a virus infection. To cure the itching soul of the foot the paste of the leaves are applied externally. Cracking of the heels could be cured by applying the paste of the leaves externally. This could be used for abscesses and boils also. It is applied for burns. Three leaves with nine pepper and 2 gm of camphor is mixed and the mixture is used externally to cure head ache. To reduce the oedema the paste along with some other medicinal leaves are used. Soap made out of flowers cures all types of chronic diseases. The paste of the flowers if consumed regularly it stops burning of the eyes, head ache, watery eyes, biliousness, giddiness, nausea, vomiting, tastelessness in the mouth, heart burn etc. The dried and powdered fruit is used to cure all types of fever. The sharbat of the fruit if consumed regularly it reduces the bilious temperature and purifies the blood. This also cures eczema, pruritis, cracks of the heals etc. Bark of this trees strengthens the body and gives strength to blood vessels and nerves. 10 gm bark with 10 gm of Eugenia jambolana, 5 gm pepper, 5 gm of powdered catcheu are mixed together with 400 ml.of water. If this is consumedin recommended doses, it stops chronic diarrhoea. 5 gm of bark powder with cow's milk is consumed regularly for 7 days to relieve constipation. 10 gms of gum of bark with 10 gms of poppy seeds mixed with 10 gms of powder of pomegranate. This powder ($\frac{1}{2}$ teaspoon) mixed in cow's milk (100 ml) if consumed thrice a day for three days it cures haemeturea. To get relief from rheumatic pain, the neem oil is used as an external application, but heated rice barn is applied externally on this application.

வேப்பமரம் மர இனங்களில் மிகச்சிறந்த மரமாகும். இது குணப்படுத்த இயலாது என்று கைவிடப்பட்ட நோய்களையும் குஷ்டநோயையும் கூட குணப்படுத்தக் கூடியது. சிலர் இம்மரத்தை தெய்வமாக கருதுகின்றனர். இதன் எல்லா பாகங்களும் மருத்துவப் பயனுடையதாகும்.

வேப்பமரத்தை அடுத்துள்ள வீடுகளில் வசிப்பவர்களுக்கு எந்தவகையான தொற்றுநோயும் வராது. பயங்கர வியாதிகளில்

அம்மை தோஷம் ஒன்று. இதற்கு சிறந்தமருந்து வேப்பிலையை விரித்து அதன்மேல் நோயாளியை படுக்க வைத்திருந்தாலே போதும். சில சமயம் அம்மைநோய் புண்ணாகி புழுவைத்து விடுவதும் உண்டு. இந்த நிலையில் கூட வேப்ப இலையையும், மஞ்சளையும் அரைத்துப் போட்டு ஆற்றிவிடுவார்கள்.

வேப்பங்குச்சிகளைக் கொண்டு பல் துலக்கி வந்தால் ஆயுள் வரை பற்களை இழக்காமல் பல் சம்பந்தமான நோய்களுக்கு ஆளாகாமல் சுகமே வாழலாம்.

பெண்களையே அதிக அளவில் பாதிக்கக்கூடிய புட்டாளம்மை எனப்படும் பொன்னுக்கு வீங்கிக்கு சமஅளவு வேப்பங் கொழுந்தை யும் மஞ்சளையும் சேர்த்தரைத்து தடவ ஏழுநாளில் வலி குறையும். வீக்கமும் குறைந்துவிடும்.

சேத்துப்புண் குணமாக கால் சந்துகளை நன்கு சுத்தம் செய்துவிட்டு அரைத்த வேப்பிலையைத் தடவ குணமாகிவிடும். மேலும் பித்த வெடிப்புக்கு இலையையும், சம அளவு மஞ்சளை யும் அரைத்துப் பற்றிட ஐந்தே நாட்களில் குணமாகும். இதையே கட்டி, சிலந்தி முதலியவற்றிற்கு பற்றிட பழுத்து உடைந்து குணமாகும். மேலும் தீப்புண்களுக்குத் தடவ வெகுசீக்கிரம் புண் ஆறிவிடும்.

மூன்று வேப்பிலையுடன் ஒன்பது மிளகையும், 2 கிராம் கற்பூரத்தையும் சேர்த்து அரைத்து தலைவலியுள்ள இடத்தில் பற்றிட பூரண குணமாகும். வீக்கம் குணமாக இத்துடன் இன்னும் சில இலைகளை சேர்த்து அரைத்துப் பற்றுப்போட வேண்டும்.

வேப்பம் பூ ரசத்தை நாற்பது நாட்கள் தொடர்ந்து சாப்பிட நாள்பட்ட நோய்கள் தீரும். வேப்பம் பூ துவையலை நாற்பது நாட்கள் தொடர்ந்து சாப்பிட கண்ணில் நீர் வடிதல், கண் குத்தல், கண்ணில் எரிச்சல், கண் பார்வைக் குறைவு, தலைவலி, பித்த மயக்கம், குமட்டல், பித்த கிறுகிறுப்பு, வாய்கசப்பு, நெஞ்செறிவு வாந்தி இவைகள் பூரணமாகக் குணமாகும்.

வேப்பங்காயை பறித்து சுத்தம் செய்து காயவைத்து பொடித்து, வைத்துக் கொள்ளவேண்டும். இது எல்லாவகை காய்ச்சலையும் மூன்றே நாட்களில் குணமாக்கும்.

வேப்பம்பழ சர்பத்தை தொடர்ந்து சாப்பிட பித்தத்தைத் தணிப்பதுடன் இரத்தத்தை சுத்தம் செய்யும். இதைத் தொடர்ந்து சாப்பிட சரும நோய்களான சொரி, சிரங்கு, நமைச்சல், வெடிப்பு போன்ற எல்லாம் மறைந்துவிடும்.

வேப்பம்பட்டை உடலைக் கெட்டிப்படுத்தி இரத்த நாளத்தைப் பலப்படுத்தி நரம்புகளுக்கு முறுக்கு ஏற்றும் தன்மை உடையது. தொடர்ந்து போகும் வயிற்றுப் போக்கை நிறுத்த 10 கிராம் வேப்பம்பட்டையும் 10 கிராம் நாவல்பட்டையும் பொடித்துக் கொள்ளவேண்டும். பின்பு இத்துடன் 5 கிராம் மிளகு தூளும் 5 கிராம் காசுக்கட்டியும் சேர்த்து 2 டம்ளர் நீர்ஊற்றி பாதியாக சுண்டியவுடன் அருந்த குணமாகும்.

மலச்சிக்கல் நீங்க 5 கிராம் வேப்பம்பட்டைத்தூளை 200 மிலி பசும்பாலில் கலந்து காலையில் மட்டும் ஏழு நாட்கள் தொடர்ந்து சாப்பிட நீங்கும். பிறகு இயற்கையாக தினசரி மலங்கழியும்.

10 கிராம் வேப்ப மரப்பிசினுடன் 10 கிராம் கசகசாவும் 10 கிராம் காயவைத்து பொடிக்கப்பட்ட மாதுளம் பூவையும் சேர்த்து இடித்து வைத்துக் கொள்ளவேண்டும். ஒரு நாளைக்கு மூன்று வேளையாக 100 மிலி பசும்பாலில் அரைத் தேக்கரண்டி அளவு இத்தூளைப் போட்டு கலக்கி தொடர்ந்து மூன்று நாள் கொடுக்க சிறுநீரில் இரத்தம் வருவது நிற்கும்.

ஜன்னி குணமாக வேப்பெண்ணெயை இளஞ்சூடுடன் உடல் முழுவதும் தடவி அரிசி தவிட்டால் ஒத்தடம் கொடுக்கலாம். இதேபோல வாத நோய்காரர்களுக்கும் ஒத்தடம் கொடுக்க வாத நோய், வலி தணியும்.

* * *

## வேம்பு

### (மலை வேம்பு)

## Melia dubia

### (N. O. Meliaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Root-bark, fruit or berry, seeds, flowers, leaves, oil and gum*

*Constituents* : *It contains bitter, resinous substance, Tannin occurs in the outer portion of the bark*

*Action* : *Leaves are Emmenagogue, Bitter, Cathartic, Anthelmintic, Diuretic, Antirheumatic and Antilithic. Flowers are Emmenagogue and*

*Resolvent. Bark is Cathartic, Emetic and Anthelmintic. Gum is Anti-herpetic.*

Uses : The leaves of this tree is dark green incolour, and the fruit is round in shape. This is used to eradicate the intestinal worms. This also cures dismenorrhoea. Though the leaves and fruit are said to be poison, if it is consumed in recommended quantity it exhibits medicinal properties. Powdered root bark acts as an anthelmintic. The powder (6 gms) if consumed corrects the irregular menstrual cycle and relieves dismenorrhoea. Leaf juice also acts as an anthelmintic. Heated and bruished flower if applied on the ulcers it cures very fast. If it is applied on the head it eradicates dandruff and lice. If gum is consumed in recommended quantity it cures eczema, venereal, abscesses, diarrhoea due to indigestion, inflammation of the sp leen etc.

மலை வேம்பின் இலை வேப்பிலை போலல்லாமல் கரும்பச்சை நிறமுடையது. இதன் காய் கனத்தும் உருண்டையாயுமிருக்கும். இம்மரத்தின் இலை, பூ, வேர்ப்பட்டை, கோந்து முதலியவை மருத்துவப் பயனுடையவை.

இவற்றால் வயிற்றுப் புழு சாகும். மாதவிடாயின் பொழுது ஏற்படும் வயிற்றுவலி தீரும்.

"மலட்டு புழுவும் வயிற்றின் வலியும்
அலட்டுவாய்வும் போம் அடங்கி—கொலட்டும்
உலவேஞ் சினைதேவற்கண் ஓதிமமே கேளாய்;
மலை வேம்பின் பேரை வழுத்து.

சிலர் இதன் இலையும், காயும் நச்சுத் தன்மை உடையது என்பர். ஆனால் இதை அளவாக வழங்க பல நோய்களை குணப்படுத்தும். வேர்ப்பட்டையை பொடித்து உள்ளுக்குக் கொடுக்க வயிற்றுப் புழுக்கள் சாகும். சிலருக்கு மாதவிடாய் வெளிப்படாமலிருப்பதனால் கடுமையான வயிற்றுவலி ஏற்படும். மாதவிடாயை வெளிப்படுத்தி ஒழுங்குபடுத்த இத்தூளை 6 கிராம் அளவில் கொடுக்கவேண்டும். இலைச்சாறும் வயிற்றுப் புழுக்களைக் கொன்று வெளிப்படுத்தும்.

பூவை சிதைத்து சூடு செய்து தடவ தலைவலி தீரும். மேலும் இதை புண்களின் மீது தடவ அவை குணப்படும். இதை தலையில் தேய்த்துக் குளிக்க தலைபேன், ஈறு கழிவதுடன் மண்டைச் சொறியும் நீங்கும்.

பிசினை தக்க அளவில் உட்கொள்ளக் கருங்கரப்பான், மேகக் கட்டி, செரியாக் கழிச்சல், மண்ணீரல் வீக்கம் முதலியவை குண மாகும்.

## வேம்பு

**(சிவன் மூலிகை)**

**See : Indigofera aspalathoids**

**பார்க்க : சிவனார் வேம்பு**

* * *

## வேர்க்கடலை

**(நிலக்கடலை, மணிலாக்கொட்டை)**

### Arachis hypogaea

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Nut and the kernel of the seed*

*Constituents* : *An edible oil. Vanilline is prepared from the shell of the fruit.*

*Action* : *Seed is Nutrient, Laxative, Emollient, Tonic and Cholagogue.*

Uses : This is a small plant and it is cultivated widely for the use of its fruits and seeds. Fruits are found burried under the soil that is why it is called as groundnut. It contains proteins, fat and it improves the health. It strengthen the urinary bladder, but it increases the bile secretion. Boiled seeds if consumed with jaggery it improves the health and sexual vitality. It is been exported to foreign countries. The oil extracted from this is used in cooking. Powdered kernel with milk improves the health and vitality. Oil of this seed with milk cures urinary bladder problems and acts as diuretic.

வேர்க்கடலை ஒரு சிறு செடி. இதன் காய்க்குள்ளிருக்கும் பருப் பிற்காகவும், பருப்பிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்க்காகவும் எல்லாஇடங்களிலும் வளர்க்கப்படுகிறது. இதன் காய்கள் மண் ணிற்கடியில் வேரில் காணப்படும். இதனால் இது இப்பெயர் பெற்றது.

புரதச்சத்தும், கொழுப்புச் சத்தும் உள்ள இக்கடலை உடலை வளர்க்கும். சிறுநீர்ப் பையின் அழற்சியை மாற்றும். ஆனால் பித்தத்தை மிகச் செய்யும்.

கடலையை வேக வைத்தாவது, வறுத்தாவது வெல்லத்துடன் சாப்பிட உடலை வளர்ப்பதுடன் ஆண்மையைப் பெருக்கும். வெல் லத்துடன் சாப்பிடுவதனால் விரைவில் செரிப்பு உண்டாகும்.

வேர்க்கடலை பெரும் அளவில் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி யாகின்றது. இதன் எண்ணெய் சமையல் எண்ணெயாகப் பயன் படுகிறது.

கடலையை தோல் நீக்கி, பொடியாக்கி பாலில் சாப்பிட ஆண்மை உண்டாகும். கடலை எண்ணெய்யுடன் பால் சேர்த்து அருந்த சிறுநீர்ப்பை கோளாறுகளைப் போக்குவதுடன் கழியச் செய்யும்.

* * *

## வேலம்

### (கருவேலம்)

**See : Acacia arabica**

* * *

## வேலம்

### (வெண் வேலம்)

## Acacia ferruginea

### (N. O. Mimosaceae)

*Habit* : *Tree*

*Parts used* : *Bark*

*Action* : *Bark is Febrifuge, Expectorant, Antirheumatic and Astringent.*

Uses : It is similar to Acacia arabica. Bark is white in colour, that is why it is called 'Venvelam'. Leaves, bark, root, gum and seeds are of medicinal use. This is generally used to treat giddiness and dengue fever. The parts are used as in Acacia arabica. Bark if consumed with curd, it acts as an antidote for poisons. This cures all the teeth diseases and

gives strength to teeth. Chewe d bark is used as tooth powder Infusion of t he root cures indigestion, chronic arthritis etc. The gum mixed with white of the egg is used externally for burns. Powder alone is used to cure eczema. The gum powdered and roasted with ghee it improves health.

வெள்வேலம் கருவேல மரத்தினைப் போன்றிருக்கும். இதன் பட்டை வெண்ணிறமுடையதால் ''வெள்வேலம்'' எனப்படுகிறது. மரத்தின் இலை, பட்டை, வேர், பிசின், விதை யாவும் மருத்துவப் பயனுடையன. பொதுவாக இவற்றால் மயக்கம், வாதசுரம் முதலியவை தீரும்.

கருவேலின் உறுப்புகளைப் பயன்படுத்துவதைப் போன்றே இதையும் பயன்படுத்தலாம். இதை தயிரிலரைத்துக் குடிக்க உட்கொண்ட விஷத்தை முறிக்கும். இது பற்களிலுண்டாகும் பலவகை பட்ட நோய்களைப் போக்கி, அவைகளை உறுதிப்படுத்தும். பட்டை கரியைக் கொண்டு பல் தேய்க்கப் பற்கள் உறுதி பெறும். வேர்க்குடிநீரினால் குருதிக் கடுப்பு, மந்தம், பெரு வாத நோய், கரப்பான் தீரும். இதன் பிசினுடன் முட்டை வெண்கரு கூட்டி இழைத்துத் தடவ தீப்புண் ஆறும். வெறும் பொடியை தூவ புண்கள் ஆறும். நெய் விட்டு வறுத்துப் பொடி செய்து கொடுக்க உடல் உரமாவதுடன் ஆண்மை பெருகும்.

* * *

## வேலம்

**(கஸ்தூரி வேலம், பீக்கருவேல்)**

## Acacia farnesiana

**(N. O. Mimosaceae)**

*Habit* : *Tree*

*Parts used* : *Bark, gum and oil*

*Constituents* : *Volatile oil is extracted from this*

*Action* : *Bark is Demulcent, Alterative, Antipyretic, Haemostatic, Styptic andDeobstruent and Gum is Tonic.*

Uses : This is an aromatic tree with yellow flower. Leaves, bark, gum and flowers are of medicinal use. This is used to treat gonorrhoea, gleet, gingivitis etc. Tender leaves

with water cures gonorrhoea. An aromatic oil is extracted from the flower, this reduces febrile temperature. Infusion of the bark is used to gargle the mouth to cure stomatitis. The gum is used in many electuaries. The oil gives strength and vitality. It is used in electuaries prescribed for sp ermetorrhoea.

பீக்கருவேல் மரம் நறுமணமுள்ள மஞ்சள் நிறப் பூக்களை யுடையது. இம்மரத்தின் இலை, பூ, பட்டை, பிசின் ஆகியவை மருத்துவப் பயனுடையன. இவற்றால் வெள்ளை, வெட்டை, ஈற்றுப் புண் முதலியன தீரும் இலைக் கொழுந்தையரைத்து நீரில் கரைத்து உட்கொள்ள வெள்ளை நோய் குணமாகும்.

பூவிலிருந்து நறுமணமுள்ள எண்ணெய் எடுக்கப்படுகிறது. இது உடல் வெப்பத்தை ஆற்றும். பட்டை குடிநீரினால் வாய் கொப்பளிக்க வாய்ப்புண் ஆறும். பிசின் பல லேகியங்களில் பயன் படுத்தப்படுகின்றது. இதன் எண்ணெய் ஆண்மை தரும் லேகியங் களில் விந்து நட்டத்தை நிறுத்தும் மருந்தாக சேர்க்கப்படுகின்றது.

* * *

## வேலிக்காத்தான்
### (சீமைக் கருவேல்)

## Prosopis jubiflora
### (N. O. Mimosaceae)

*Habit* : *Small tree*

*Parts used* : *Leaves and seeds*

*Constitueuts* : *Gum and resin*

*Action* : *Thorn in Septic. Leaves and Seeds are Emollient.*

Uses : The thorn of this small tree is poisonous. The leaves are used to clean ceramic plates and utensils. Bark of this plant is used to treat scorpion sting and rheumatism.

வேலிகாத்தான் எனப்படும் சிறுமரத்தின் முள் விஷத்தன்மை யுடையது. இதன் இலைகளை பீங்கான் பாத்திரங்களை சுத்தம் செய்ய பயன்படுத்துவர். இதன் பட்டையை வாதநோய், தேள்கடி, ஆகியவற்றில் பயன்படுத்துவர்.

* * *

## வேலிப் பருத்தி

**See : Daemia extensa**

**பார்க்க : உத்தாமணி**

* * *

## வேளை

**(முட்காய் வேளை)**

## Galega spinosa

**(N. O. Papilionaceae)**

*Habit* : *Shrub*

*Parts used* : *Leaves and root*

*Action* : *Leaves are Nutritive and Expectorant.*

Uses : The leaves are used to cook like greens. It cures chest pain and asthma. The root is used to cure inflammation of the lymphatic gland. Seeds are used to treat eye diseases.

முட்காய்வேளையின் இலை கீரையாக பயன்படுத்தப் படுகிறது. இதை சமைத்துண்ண மார்பு நோய், ஆஸ்துமா குணமாகும். இதன் வேரினால் நெரிக்கட்டுதல், வீக்கம், நாவரட்சி நீங்கும். விதை கண்படலம், கண்மங்கல், பல்நோய் ஆகியவற்றில் பயன்படும்.

* * *

## வேளை

**(நல்வேளை, நாய் வேளை)**

## Cleome viscosa

**(N. O. Capparidaceae)**

*Habit* : *Herb*

*Parts used* : *Leaves, flowers, seeds and root.*

*Constituents* : *Seeds are Carminative, Anthelmintic and Antiseptic like mustard. Juice of the leaves is*

*Sudorific. Bark is irritant and acrid. Externally it is Rubefacient and Vesicant.*

Uses : Leaves, flower, seeds and roots exhibit medicinal properties. Leaves smell like asafoetida. Leaf juice is used to cure head ache. The paste of the leaves with vinegar is used externally to cure head ache. Leaf juice is used as ear drops to cure ear disorders. Juice of the flowers along with breast milk is given to children to cure indigestion and bronchitis. Seeds are called "dog mustard". This is used to treat indigestion and flatulency in joints

The oil extracted from this is used to treat eczema and ulcers. This cures all types of rheumatic problems. Flatulency in ulcers could be cured with this. This also cures anorexia.

நல்வேளைச் செடியின் இலை, பூ, விதை வேர் ஆகியவை மருத்துவப் பயனுடையன. இலை பெருங்காயத்தை போன்று மணம் வீசும். இலைச் சாற்றைப் பூச தலைவலி, சன்னி தீரும். இலைகளை காடி அல்லது எலுமிச்சைச்சாறு அல்லது வெந்நீரிட்டு அரைத்து வைத்துக் கட்ட தலைவலி தீரும். இலைச்சாற்றை காதில் பிழிய காது நோய்கள் அகலும்.

சிரநோய் வலிகுடைச்சல் தீராச் சயித்தியம்
உரநோயி வைக ளொழியும் - உரமேவும்
வில்வேளைக் காயும் விழியாய் பசிகொடுக்கும்
நல்வேளை தன்னை நவில்.

நல்லவே ளைப்பூண்டை நாடுங்கால் வாதமும்போம்
சொல்லுமையத்துடனே சோபையறும்—மெல்லமெல்லத்
தக்க வன லும்பித்துந் தானெழும்புஞ் சாந்தமின்றி
அக்கர நோய் மிஞ்சு மறி.

பூக்களை வதக்கிச் சாறு பிழிந்து, குழந்தைகளின் வயது, நோயின் வன்மை இவைகளை அறிந்து முலைப் பாலுடன் புகட்ட கண மாந்தம், மார்புச்சளி, மாந்தசுரம் நீங்கும்.

இதன் விதை நாய்க்கடுகு எனப்படும். இது அஜீரணம், கீல் வாயு ஆகியவற்றை குணப்படுத்தும். இதிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் சொறி, சிரங்கு, புண் இவைகளுக்குத் தடவ குணம் தரும். மேலும் இது வாத குன்மத்தையும், வாத சம்பந்தமான நோய்களையும் போக்குவதில் சிறந்தது. மேலும் பெண்களின்

சூதக வாயுவையும், உதிரச் சிக்கலையும், பசியின்மையையும் குணப்படுத்தும்.

* * *

## வேளை

### (தைவேளை)

## Cleome felina

### (N. O Capparidaceae)

*Habit* : *Herb*

*Parts used* : *Whole plant*

*Action* : *Astringent*

Uses : The flower of this plant is bluish white and it exhibits the medicinal property similar to Cleome viscosa.

தைவேளைச் செடியின் பூ வெண்மையும் நீலமும் கலந்து இருக்கும். இது நல்வேளையைப் போன்றே குணமுடையது.

★ ★ ★